# புழங்குபொருள் மரபு

## சங்க இலக்கியம் - கல்வெட்டு - களஆய்வு

முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**அ. கார்வண்ணன்**

மேற்பார்வையாளர்
முனைவர் **கோ. பழனி**
உதவிப் பேராசிரியர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005





தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
பரிதிமாற்கலைஞர் வளாகம்
சென்னை - 600 005

மே - 2012

முனைவர் **கோ. பழனி**
உதவிப் பேராசிரியர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"புழங்குபொருள் மரபு : சங்க இலக்கியம் – கல்வெட்டு – களஆய்வு" என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் ஆய்வாளர் அ. கார்வண்ணன் அவர்களால் எழுதி அளிக்கப்பெற்றது என்றும் இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(கோ. பழனி)
மேற்பார்வையாளர்

இடம் : சென்னை
நாள் : 16/5/12

**அ. கார்வண்ணன்**
ஆய்வாளர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005.

## ஆய்வாளர் உறுதிமொழி

**"புழங்குபொருள் மரபு : சங்க இலக்கியம் – கல்வெட்டு – களஆய்வு"** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு முனைவர் கோ. பழனி அவர்களின் மேற்பார்வையின்கீழ் என் முயற்சியில் உருவானது என்றும் இதற்குமுன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் இதன்வழி உறுதியளிக்கின்றேன்.

(அ. கார்வண்ணன்)
ஆய்வாளர்

இடம் : சென்னை
நாள் : 16.05.2012

# நன்றியுரை

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறையில் முதுகலை பயிலவும் முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்தவும் வாய்ப்பளித்ததோடு பல நிலைகளில் என்னை ஆற்றுப்படுத்திய தமிழ் இலக்கியத்துறையின் தலைவர் பேராசிரியர் முனைவர் வீ. அரசு அவர்களுக்கும் அதே வகையில் என்னை நெறிப்படுத்திய உதவிப்பேராசிரியர் முனைவர் கோ.பழனி அவர்களுக்கும் முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முதுகலை பயிலும்போது ஆசிரியராக இருந்து பாடம் பயிற்றுவித்த தமிழிலக்கியத்துறை உதவிப்பேராசிரியர்களான முனைவர் ய. மணிகண்டன், முனைவர் ஆ. ஏகாம்பரம், முனைவர் சி. நல்லத்தம்பி ஆகியோருக்கும் இளங்கலை பயிலும்போது என்னை வழிநடத்திய உதவிப்பேராசிரியர் முனைவர் மு. முத்துவேலு அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வாய்வேடு உருவாகிய காலத்தில் எனக்கு உறுதுணையாயிருந்த நண்பர்கள் ஸ்ரீ.பிரேம்குமார், கு. கலைவாணன், அ. சதீஷ், ஜ. சிவகுமார், த. தனஞ்செயன், ப. திருஞானசம்பந்தம், சே. சீனிவாசன், அ. செந்தில் நாராயணன், தே. சிவகணேஷ், மு. தேவராஜ், இரா. வெங்கடேசன், வெ. பிரகாஷ், கு. கமலக்கிருஷ்ணன், ராம்குமார், ர. குமார், தேவேந்திரன், அருள், செந்தில், க. சசி, மு. காமாட்சி, சித்திஜீனத்நிஷா, கோ. கீதா ஆகியோருக்கும் எனக்கு அவ்வப்போது அறிவுரை வழங்கிய முனைவர் ப. சரவணன் அவர்களுக்கும் எனது அன்பு கலந்த நன்றி.

ஆய்வுக்காலங்களில் அலுவல் தொடர்பான பணிகளை அகமகிழ்வோடு செய்துதவிய திரு. ம. சுந்தர், திரு. சங்கரன், திரு. இராமச்சந்திரன் ஆகியோருக்கு என் நன்றி உரியது. கள ஆய்வில் முழு ஒத்துழைப்பு நல்கிய தகவலாளிகள் அனைவருக்கும் என் நன்றி என்றும் உரித்தானது.

இவ்வாய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கிய சென்னைப் பல்கலைக்கழக நூலகம், ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம், தமிழகத் தொல்லியல்துறை நூலகம், தேசிய நாட்டுப்புறவியல் ஆய்வுமைய நூலகம், நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுமைய நூலகம், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன நூலகம், மதுரைக் காமராசர் பல்கலைக்கழக நூலகம், தமிழ்ப்பல்கலைக்கழக நூலகம் ஆகியவற்றின் பொறுப்பாளர்களுக்கு நன்றி.

இவ்வாய்வேட்டை சிறந்த முறையில் வடிவமைத்துக் கொடுத்த இரா. மோகனலட்சுமி அவர்களுக்கும் நன்றி.

# குறுக்கவிளக்கம்

| | | |
|---|---|---|
| அக. | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| ஆ.உ. | - | ஆராய்ச்சி உரை |
| ஈ.மா.கல். | - | ஈரோடு மாவட்டக் கல்வெட்டுகள் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| எ.கா. | - | எடுத்துக்காட்டு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| கன்.மா.கல். | - | கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள் |
| கா.மா.கல். | - | காஞ்சிபுரம் மாவட்டக் கல்வெட்டுகள் |
| குறு. | - | குறுந்தொகை |
| கோ.மா.கல். | - | கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள் |
| சூடா. | - | சூடாமணி நிகண்டு |
| செ.மா.கல். | - | சென்னை மாவட்டக் கல்வெட்டுகள் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| தஞ்.வ.கல். | - | தஞ்சாவூர் வட்டக் கல்வெட்டுகள் |
| திருநெல்.மா.கல். | - | திருநெல்வேலி மாவட்டக் கல்வெட்டுகள் |
| திருவீழி.கல். | - | திருவீழிமிழலைக் கல்வெட்டுகள் |
| திவா. | - | திவாகர நிகண்டு |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| தொ.எ. | - | தொடர் எண் |

| | | |
|---|---|---|
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நன்.கல். | - | நன்னிலம் கல்வெட்டுகள் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பா. | - | பாடல் |
| பா.வ.கல். | - | பாபநாசம் வட்டக் கல்வெட்டுகள் |
| பி.இ. | - | பின் இணைப்பு |
| புற. | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மேற்படி | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| Ibid. | - | Ibidem |
| SII. | - | South Indian Inscriptions |
| Vol. | - | Volume |

# உள்ளுறை

உலகிலுள்ள எல்லா இன மக்களும் தங்களுக்கெனத் தனித்த சில வாழ்வியல் கூறுகளைக் கொண்டவர்கள். ஒவ்வொரு இனக்குழுவினரும் மொழி, நிலம், தட்பவெட்ப நிலை, நம்பிக்கை, சடங்கு, புழங்குபொருள் முதலான அடையாளங்களுடனும் தொன்மரபுகளுடனும் வாழ்ந்து வருகின்றனர். இவ்வகையான அடையாளங்களே அவ்வினத்தின் பண்பாட்டு மரபை அறிவதற்குத் துணைபுரிகின்றன. அந்தவகையில் புழங்குபொருள்கள் ஓர் இனத்தின் முதன்மையான பண்பாட்டுக் கூறுகளுள் ஒன்றாகத் திகழ்கின்றன.

மனிதஇனம் குழுவாக வசிக்க நேர்ந்தபோது தமக்கான முதன்மை வாழ்வாதாரங்களைத் தாமாகவே உருவாக்கிக் கொண்டுள்ளது. பின்னர் ஓர் இடத்தில் நிலையாக வாழ்ந்தபோது அவர்களின் தேவைக்கு ஏற்பக் கருவிகள் உள்ளிட்ட புழங்குபொருள்களை அவர்களுள் சிலரே உருவாக்கியிருக்கின்றனர். இத்திறன், மரபுசார்ந்து கையளிக்கப்பட்டு அதையே முதன்மைத் தொழிலாகக் கொண்ட அதுசார்ந்த குடிகள் உருவாகக் காரணமாகியுள்ளது. நமக்குக் கிடைக்கின்ற பழந்தமிழ் இலக்கியத் தரவுகள் இதை உறுதிசெய்கின்றன. இதற்குப் பின்னான காலகட்டங்களில் இவ்வகைத் தொழில்கள் குடித்தொழில்களாக உருமாற்றப்பட்டிருக்கின்றன. அவர்களின் உற்பத்திக்கு ஏற்றவாறு வரி வசூலித்த ஆட்சியாளர்கள் பற்றிய பதிவுகளைத் தொல்தரவுகளான கல்வெட்டு, செப்பேடு குறிப்புகளின் வழி அறியமுடிகின்றன. இம்மரபுத் தொடர்ச்சியினை அறிய இலக்கியங்களும் தொல்தரவுகளும் ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன. பெரிதளவில் வாழ்வியல் மாற்றங்களை ஏற்படுத்தாத இந்நிலை ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்டது.

தமிழ்ச்சூழலில் வரலாற்றுத் திருப்புமுனையாக அமைந்த ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னான காலகட்டத்தில் பல சமூக மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று நவீன பொருள் உற்பத்தி. புதுமையான இவ்வறிவியலின் வரவு மரபார்ந்த பொருள் உற்பத்தியில் தேக்கநிலையை ஏற்படுத்தியது. அந்தவகையில் புழங்குபொருள் உற்பத்தியில் ஏற்பட்ட மாற்றங்களும் தேக்கநிலையும் கவனத்தில் கொள்ள வேண்டியனவாய் உள்ளன. மரபான அடையாளத்தை அறியும் பொருட்டு இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்களாகிய புழங்குபொருள்களின் நிலைப்பாடுகளைச் சங்க இலக்கியம், கல்வெட்டுத் தரவுகள், களஆய்வு ஆகியவற்றின்வழி இவ்வாய்வு முன்வைக்கின்றது. தொண்டை மண்டலப் பகுதி இவ்வாய்விற்கான களமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

## ஆய்வுப் பொருள்

**புழங்குபொருள் மரபு : சங்க இலக்கியம் - கல்வெட்டு - களஆய்வு** என்பது இவ்வாய்வுப் பொருள். இதில் இலக்கியங்கள் மற்றும் தொல்தரவுகளின்வழி புழங்குபொருள்களுக்கான மரபுத் தொடர்ச்சியினைச் சுட்டுவதுடன் தொண்டை மண்டலப் பகுதியில் உற்பத்தி செய்யப்படும் புழங்குபொருள்களின் சமகாலத் தேவை மற்றும் பயன்பாடு குறித்தும் ஆராயப்படுகின்றது. அத்துடன் புழங்குபொருள் மரபோடு இணைந்துள்ள சமூகங்களின் பின்புலங்களிலும் இவ்வாய்வு கவனம் கொள்கின்றது.

## ஆய்வு முன்முயற்சிகள்

தமிழ் ஆய்வுலகில் புழங்குபொருள் மரபு மற்றும் பண்பாடு குறித்த ஆய்வு இதுவரை முழுமையாக நிகழ்த்தப்பட்டிருக்கவில்லை. ஆனால் இவ்வித ஆய்வு நிகழ்த்துவதற்கான அடிப்படைத் தூண்டுதலை ஏற்படுத்தக்கூடிய கட்டுரைகள் சில வெளிவந்திருக்கின்றன. அவற்றை இருவேறுபட்ட புலத்தில் செயல்பட்ட ஆய்வாளர்கள் தந்திருக்கின்றனர். அவை, 1. நாட்டார் வழக்காற்றியல் துறையைச் சார்ந்த ஆய்வாளர் தே. லூர்து அவர்கள் எழுதிய 'நாட்டார் வழக்காற்றியல் - சில அடிப்படைகள்' என்ற நூலில் உள்ள 'நாட்டார் வாழ்வும் புழங்குபொருள் பண்பாடும்' என்ற ஆய்வுப் பகுதி (2008), 2. மானிடவியல் துறையைச் சார்ந்த ஆய்வாளர் பக்தவத்சலபாரதி எழுதிய 'தமிழர் மானிடவியல்' என்ற நூலில் உள்ள 'புழங்குபொருள் பண்பாடு : புரோவரின் திராவிடக் கலைமனம்' (2008) என்ற ஆய்வுப்பகுதி. மேலும், இப்பொருண்மையில் மதுரை காமராசர் பல்கலைக்கழக நாட்டுப்புறவியல் ஆய்வு மையம் வெளியிட்டுள்ள 'தமிழக நாட்டுப்புறக் கைவினைக் கலைகள்' என்ற கட்டுரைத் தொகுப்புநூலும் பாரதியார் பல்கலைக்கழக வெளியீடாக 'கொங்கு நாட்டுப்புற வாழ்வியலும் புழங்குபொருள் பண்பாடும்' (2011) என்ற கட்டுரைத் தொகுப்பு நூலும் வெளிவந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

இதனைத் தொடர்ந்து மண்ணாலான புழங்குபொருள்கள் என்ற வகையில் நோக்கும்போது S. GURUMURTHY அவர்களின் Ceramic Tradition in South India (1981) என்ற நூலும் STEPHEN ENGLIS அவர்களின் A Village Art of South India (1980) என்ற நூலும் குறிப்பிடும்படியாக அமைந்திருக்கின்றன. ஆய்வாளர் ச. முத்துவேல் அவர்களின் 'திண்டுக்கல் மாவட்ட மண்பாண்டக் கலை - ஓர் ஆய்வு' (2008) என்ற ஆய்வேடும் இவ்ஆய்விற்கான முன்முயற்சிகளாக உள்ளன.

'புழங்குபொருள்கள்' குறித்த ஆய்வுகள் மேலை நாடுகளில் வெகுசிரத்தையுடன் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இதனை HENDRY GLASSIE அவர்களின் Material Culture (1999), SCHLERETH, J. THOMAS அவர்களின் Material Culture (1985), RICHARD M. DORSOM அவர்களின் Folklore and Folklife (1983) போன்ற நூல்களைக் கொண்டு அறிந்து கொள்ள முடிகின்றது.

## ஆய்வு எல்லை

இவ்வாய்வுப் பொருளின் மரபு அறியும் பொருட்டு பழம்பெரும் தரவுகளை ஆராய வேண்டிய தேவை இருக்கிறது. அதன் அடிப்படையில் சங்க இலக்கியத் தரவுகளும் தொல்லியல்துறையினரால் வெளியிடப்பட்டுள்ள கல்வெட்டுக் குறிப்புகளும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. மேலும் இதற்கான ஆய்வுக்களமாகத் தொண்டை மண்டலப் பகுதி எடுத்துக்கொள்ளப்படுகின்றது. பிற்காலச் சோழர்களால் ஒருங்கிணைக்கப்பட்ட 22 கோட்டங்களை மையமாகக் கொண்ட தொண்டை மண்டல எல்லை வரையறையே இவ்வாய்வின் எல்லையாக வகுத்துக் கொள்ளப்படுகிறது. தற்போதைய எல்லை வரையறையின்கீழ் அவை, திருவள்ளூர், காஞ்சிபுரம், சென்னை, வேலூர், திருவண்ணாமலை, விழுப்புரம் ஆகிய மாவட்டங்கள் என்பதாகக் கணிக்கப்பட்டு அப்பகுதிகளில் ஆய்வாளர் மேற்கொண்ட கள ஆய்வின்வழிச் சேகரிக்கப்பட்ட மண்சார்ந்த புழங்குபொருள்களின் தரவுகளை வகைபடுத்தி ஆய்வு செய்யப்படுகின்றது.

## ஆய்வு நோக்கம்

மனிதச் சமூகத்தின் அறிவுக்களஞ்சியமாக இலக்கியங்கள் திகழ்கின்றன. இத்தகைய இலக்கிய அறிவு என்பது தனிமனிதனின் ஒருமுக வெளிப்பாடாகவே இருக்கிறது. இச்சூழலில் தேவையறிந்து உருவாக்கப்பட்ட புழங்குபொருள் அறிவு என்பதை இலக்கியத்திற்கு ஈடான மற்றொரு வகையாகக் கொள்ளலாம். அந்த வகையில் பொருளின் தன்மை, செய்முறையில் நேர்த்தி என்று சூழல்சார்ந்த மனிதகுல அறிவுச் செழுமையின் வெளிப்பாடாகவே புழங்குபொருள்கள் அமைகின்றன. இவை மனித எண்ணத்தின் / தேவையின் / திறனின் உறைவிடமாகவும் வாழ்வியலின் ஒரு பகுதியாகவும் இருக்கின்றன.

பண்பாட்டின் அடிப்படைக் கூறுகளுள் ஒன்றான புழங்குபொருள்கள் இலக்கியத் தரவுகளிலும் தொல்லியல் தரவுகளிலும் அதற்கான இயல்புநிலையில் பதிவாகி இருக்கின்றன. இதனை அடிப்படையாகக் கொண்டு வெகுமக்களின் பண்பாடு சார்ந்த பதிவுகளின்வழி தொடர்ச்சியான புழங்குபொருள் மரபையும் அம்மரபினூடான பண்பாட்டு அடையாளங்களையும் வெளிக்கொணர்தல் அவசியமாகிறது. இதனை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது இது பரந்துபட்டதொரு மிகப்பெரிய ஆய்வுக்களம். ஆகையால், ஆய்வேட்டின் சுருக்கம் கருதி இவற்றுள் ஒருகூறான மண்சார்ந்த புழங்குபொருள்கள் மட்டும் இங்கு ஆய்வுப்பொருளாக எடுத்துக்கொள்ளப்படுகின்றது. அந்த வகையில் தற்காலச் சூழலில் தொண்டை மண்டலப் பகுதி பயன்பாட்டுத்தளத்தில் மண்சார்ந்த புழங்குபொருள்களின் நிலை என்ன என்பதைக் கண்டறியும் பொருட்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு இலக்கியம் மற்றும் தொல்லியல் தரவுகளைத் தொகுத்து, புழங்குபொருள் மரபுத் தொடர்ச்சியினைக் காண விழைவதால் தொகுத்து வகைப்படுத்தும் ஆய்வாகவும் வரலாற்றியல் ஆய்வாகவும் அமைகிறது. தொண்டை மண்டலப் பகுதி புழங்குபொருள்கள், அதை உற்பத்தி செய்யும் குடிகள் குறித்துப் பேசுவதால் விளக்கமுறை மற்றும் சமூகவியல் ஆய்வாகவும் அமைகிறது.

## ஆய்வுமூலங்கள்

சங்க இலக்கியத் தரவுகள் மற்றும் இந்தியத் தொல்லியல்துறையால் வெளியிடப்பட்ட தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள், தமிழகத் தொல்லியல்துறை வெளியிட்டக் கல்வெட்டுத் தொகுதிகள் முதலானவைகளும் தொண்டை மண்டலப் பகுதி களஆய்வின்வழி சேகரிக்கப்பட்ட தரவுகளும் இவ்வாய்விற்கான முதன்மைத் தரவுகளாகக் கொள்ளப்படுகின்றன. மேற்கண்ட துறைகளில் வெளிவந்துள்ள ஆய்வேடுகளும், கட்டுரைகளும் துணைமைத் தரவுகளாகக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வேட்டின் அமைப்பு

'புழங்குபொருள் மரபு' (சங்க இலக்கியம் - கல்வெட்டு - கள ஆய்வு) என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு முன்னுரை, மதிப்பீடு நீங்கலாகப் பின்வருமாறு இருபெரும் பிரிவுகளுள் நான்கு இயல்களைக்கொண்டு அமைகின்றது.

**பகுதி - அ  அறிமுகம்**

1. சங்க இலக்கியத்தில் புழங்குபொருள் மரபு
2. தமிழ்க் கல்வெட்டுகளில் புழங்குபொருள் மரபு

**பகுதி - ஆ  தொண்டை மண்டலப் புழங்குபொருள்கள்**

3. புழங்குபொருள் உற்பத்தி
4. புழங்குபொருள்களும் சமூக உறவுகளும்

## முன்னுரை

ஆய்வுப்பொருள் - தமிழ்ச்சூழலில் புழங்குபொருள் மரபு குறித்த ஆய்வின் இன்றியமையாமை - ஆய்வு முன்முயற்சிகள் - ஆய்வு நோக்கம் - ஆய்வு மூலங்கள் - ஆய்வு எல்லை - ஆய்வு அணுகுமுறை - ஆய்வேட்டின் அமைப்பு - இயல்பாகுபாடுகள் - இயல்களின் சுருக்கங்கள் ஆகியன முன்னுரையில் எடுத்துரைக்கப்பெறுகின்றன.

## பகுதி - அ அறிமுகம்

### *இயல் 1 சங்க இலக்கியத்தில் புழங்குபொருள் மரபு*

சங்க இலக்கியச் செய்யுட்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவ்வியலுக்கான தரவுகளாகக் கொள்ளப்படுகின்றன. இவ்விலக்கியங்கள் தொகுக்கப்பட்ட காலத்தின் அடிப்படையில் வரிசைப்படுத்தப்படுகின்றன. மொழிக்கூறுகளும் இலக்கியக்கூறுகளும் கலந்து காணப்படும் இவ்விலக்கியத் தரவுகளில் புலப்படும் புழங்குபொருள்களுக்கான நிலம், மூலப்பொருள், உற்பத்தி, பயன்பாடு ஆகியன வகைப்படுத்தப்படுகின்றன. மேலும், காலந்தோறும் இப்பொருள்களுக்கும் இப்பொருள் உற்பத்தியாளர்களுக்குமான சமூக மதிப்பீட்டினை ஆராயும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

மேலும், சங்க இலக்கியங்களில் ஒவ்வொரு திணைக்குமான சூழல்சார்ந்த பொருள்சார் மரபும் பரிமாற்ற முறையிலான பொருள்சார் மரபும் மற்ற திணைநில மக்களுடன் எவ்விதமான உறவினை ஏற்படுத்தின என்பது குறித்தும் ஆராய்கிறது.

### *இயல் 2 தமிழ்க் கல்வெட்டுகளில் புழங்குபொருள் மரபு*

கல்வெட்டுகள் வரலாற்று ஆவணங்களாகத் திகழ்கின்றன. இவற்றில் பதிவாகிய செய்திகள் நீண்டகாலம் நிலைத்து நிற்பதோடு நம்பத்தகுந்த சான்றாதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன. ஆகவே அவற்றிற்கான தேவை அறிந்து இந்தியத் தொல்லியல் துறையினரால் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் 'தென்னிந்தியக் கல்வெட்டுகள்' (South Indian Inscriptions) என்ற தலைப்பில் இருபத்தாறு தொகுதிகளாகவும் தமிழகத் தொல்லியல் ஆய்வுத்துறையினரால் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் அந்தந்த மாவட்டத்தின் பெயரில் தொகுத்தும் வெளியிடப்பட்டுள்ளன. அவ்வாறு வெளிவந்த அத்தொகுதிகளில் காணப்படும் புழங்குபொருள் மற்றும் அவற்றை உற்பத்தி செய்த குடிகளைப் பற்றிய பதிவுகள் ஆகியவற்றை இவ்வியல் ஆராய்கிறது. மேலும், மண்சார்ந்த புழங்குபொருள்கள் மற்றும் அவற்றை உருவாக்கும் உற்பத்தியாளர்கள் குறித்த சொற்களை வழக்காற்றுச் சொற்கள், குறியீட்டுச் சொற்கள், கலைச்சொற்கள் என்ற வகைகளில் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றில் ஒரே புழங்குபொருளுக்கான வெவ்வேறு சொற்கள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன. மேலும் புழங்குபொருள் உற்பத்தி தொழில் மீதான வரிவகைகளையும் அவை எக்காலத்தில், எம்முறையில், யாரால் வசூலிக்கப்பட்டன என்பதையும் இத்தொழில் செய்வோருக்கான மேரை (குடிஊழிய ஊதியம்), வாழ்க்கைச் செலவிற்காக விடப்பட்ட நிலமானியம் முதலானவற்றையும் இவ்வியல் ஆராய்கிறது.

## பகுதி - ஆ தொண்டை மண்டல புழங்குபொருள்கள்

தமிழகத்தின் வடகிழக்குப் பகுதியில் அமைந்த பெருநிலப்பரப்பே தொண்டை மண்டலம். இதைத் தொண்ட மண்டலம் என்பாரும் உளர். பிற்காலச்

சோழர்களால் ஒருங்கிணைக்கப்பட்ட 22 கோட்டங்கள் தொண்டை மண்டலப் பகுதியாக வரலாற்று ஆய்வாளர்களால் சுட்டப்படுகின்றது. இதைத் தற்போது உள்ள திருவள்ளூர், சென்னை, காஞ்சிபுரம், வேலூர், திருவண்ணாமலை, விழுப்புரம் ஆகிய மாவட்டங்களடங்கிய பகுதியாகக் கொள்ளலாம். இவற்றை ஆய்வுக்களமாகக் கொண்டு இப்பகுதிகளில் உள்ள மண்சார்ந்த புழங்குபொருள்கள் மற்றும் அதை உற்பத்தி செய்பவர்கள் குறித்துப் பின்வரும் இயல்கள் ஆராய்கின்றன.

### இயல் 3 புழங்குபொருள் உற்பத்தி

தொண்டை மண்டலப் பகுதியில் மண்சார்ந்த புழங்குபொருள்கள் எவ்வாறு உற்பத்தி செய்யப்படுகின்றன? அவ்வாறு உற்பத்தி செய்யப்படுகின்ற மண்சார்ந்த புழங்குபொருள்கள் எத்தகையன? இவ்வுற்பத்திக்கான மூலப்பொருள்கள் எவை? இவ்வகையான புழங்குபொருள்கள் உற்பத்தியில் ஈடுபட்டோர், ஈடுபடுவோர் யாவர்? இவர்களுடைய வாழ்வியல் முறைமைகள், சமூக மதிப்பீடுகள் எத்தகையன என்பன குறித்து ஆராயப்படுகின்றது. இதனைத் தொடர்ந்து மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியிலான புதுவித அணுகுமுறைகள், உற்பத்திக் கருவிகளின் முன்னேற்ற நிலை மற்றும் உற்பத்தியாளர்களின் தற்காலத் தேவைசார்ந்த அறிவு, அதன்வழி வடிவமைக்கப்படுகின்ற புழங்குபொருள்கள் முதலானவற்றை ஆராயும் விதமாகவும் அவற்றிலிருந்து மரபார்ந்த கூறுகளை அடையாளங்காட்டும் விதமாகவும் இவ்வியல் அமைகிறது.

மனித வாழ்வியலுக்கான பொருள்தேவையில் மிக முக்கியப் பங்கு வகிப்பது மண்சார்ந்த புழங்குபொருள்கள். பொருள்தேவையை வாழிடங்களே தீர்மானிக்கின்றன என்பதால் அவற்றின் தேவையும் உற்பத்தியும் நிலத்திற்கு நிலம் வேறுபடுகின்றன. அந்த வகையில் தொண்டை மண்டலப் பகுதி மக்களின் மண்சார்ந்த புழங்குபொருள்களின் தேவைகுறித்து ஆராயப்படுகின்றது. அத்துடன் பயன்பாட்டு நோக்கில் அவை பொருளாதார அடிப்படையிலும் சாதிய அடிப்படையிலும் பிரித்து வகைப்படுத்தப்படுகின்றன. மேலும், இவ்வகையான புழங்குபொருள் உற்பத்திக்கான மூலப்பொருள் எங்கு கிடைக்கின்றன? எவ்வாறு பதப்படுத்தப்படுகின்றன? என்பதைப் பதிவு செய்வதுடன் தொண்டை மண்டலப் பகுதிகளுக்குள்ளேயான மண்சார் புழங்குபொருள் உற்பத்திமுறையில் உள்ள தொழில்முறை வேறுபாடுகளை ஆராய்வதாகவும் இவ்வியல் அமைகிறது.

### இயல் 4 புழங்குபொருள்களும் சமூக உறவுகளும்

இயற்கை விளைபொருள்களால் உருவாக்கப்படும் புழங்குபொருள்கள் மனித வாழ்வியலோடு எவ்விதம் ஒன்றியிருக்கின்றன என்பதைத் தெளிவுறுத்துவதாக இவ்வியல் அமைகிறது. அதிலும் குறிப்பாக, சமூக அசைவியக்கத்தில் மண்சார்ந்த புழங்குபொருள்களின் பங்களிப்பு குறித்து இவ்வியல் விளக்குகிறது. அன்றாட வாழ்க்கைக்கான வாழ்வாதாரமாக விளங்கும் இவற்றின் நிலையற்ற தன்மை, தேவையை அதிகரிக்கிறது. இவ்வகையான தேவைகளையும் இத்தேவைகளை

நிறைவு செய்யும் மண்சார் உற்பத்தியாளர்களான குயவர்களின் சமூக நிலைப்பாட்டினையும் இவ்வியல் விரிவாக ஆராய்கிறது. இதைத் தொடர்ந்து மனித குலத்தின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான வாழ்வியற் சடங்குகளில் மண்சார்ந்த புழங்குபொருள்களின் பங்கு குறித்தும் ஆராய்கிறது. இப்பின்புலத்தில் சடங்குகளும் சடங்குவாரியான பொருள்களும் பிரித்து வகைப்படுத்தப்படுகின்றன. அவ்வாறு வகைப்படுத்தப்பட்ட ஒவ்வொரு பொருளுக்குமான தனிச் சிறப்புகளையும் அதற்கான வேலைப்பாடுகளையும் அவ்வேலைப்பாடுகளின் வழி வெளிப்படும் வாழ்வியல் விழுமியங்களையும் இவ்வியல் விளக்குகிறது. மேலும், மண்சார்ந்த புழங்குபொருள்களில் செய்யப்படும் வேலைப்பாடுகளும் அவைசார்ந்த விழுமியங்களும் சாதிவாரியான வேறுபாடுகளைக் கொண்டிருப்பதையும் இவ்வியல் சுட்டுகிறது. இத்துடன் கிராம, நகர, மாநகரங்களில் மண்சார்ந்த புழங்குபொருள்களுக்கும் அவற்றை உற்பத்தி செய்யும் குயவர்களுக்குமான சமூக மதிப்பீட்டினை நுட்பமாக ஆராயும் விதமாகவும் இவ்வியல் அமைகிறது.

## மதிப்பீடு

தமிழாய்வுப் பரப்பில் ஆய்வுக்கு முன்னெடுக்கப்படாமல் இருந்த வளமையான புழங்குபொருள் மரபினை இலக்கியம் மற்றும் தொல்லியல் தரவுகளின் வழியாகக் கட்டமைத்து மதிப்பீடாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அத்துடன் தொண்டை மண்டலம் பகுதிசார்ந்த புழங்குபொருள்கள் மற்றும் அவற்றை உற்பத்தி செய்பவர்களுக்கான சமகாலச் சமூக நிலைப்பாடுகள் அதற்கான தரவுகளின் அடிப்படையில் ஆராயப்பட்டு மதிப்பீடாகக் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், மேலாய்வுக் களங்கள் சுட்டப்பட்டுள்ளன.

## பின்னிணைப்புகள்

ஆய்விற்காகத் திரட்டப்பட்ட தரவுகள் பின்வருமாறு பின்னிணைப்புகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அவை,

1. சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ள மண்சார்ந்த புழங்குபொருள் தரவுகள்.
2. இந்தியத் தொல்லியல்துறை வெளியிட்ட தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் மற்றும் தமிழகத் தொல்லியல்துறை வெளியிட்ட கல்வெட்டுத் தொகுதிகள் ஆகியவற்றில் உள்ள கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து சேகரிக்கப்பட்ட மண்சார்ந்த புழங்குபொருள் பதிவுகள்.
3. தொண்டை மண்டலம் - வரைபடங்கள்.
4. தொண்டை மண்டலம் சார்ந்த தகவலாளர்களின் நேர்காணல்கள்.
5. மண்சார்ந்த புழங்குபொருள்களின் நிழற்படங்கள்.

மனிதகுல நாகரிகம் தோன்றியதற்கான வரலாற்றுக்கும் மொழியின் தொன்மை குறித்த வரலாற்றுக்கும் சில அடிப்படைத் தரவுகள் சான்றுகளாக அமைந்திருக்கின்றன. அவற்றுள் மண்பாண்ட ஓடுகளும் ஒன்றாகும். ஒரு மொழிக்கான அறிவு மக்களிடத்தில் தோன்றி வளமை அடைவதற்கு முன்பிருந்தே தங்களுக்கான தேவையை நிவர்த்தி செய்து கொள்வதற்கான அறிவு அவர்களிடம் தோன்றி வளம் பெற்றுவிட்டது என்பதற்கு இம்மண்பாண்ட ஓடுகளே சான்றாகும். மொழியைக் குறியீடாகப் பொறித்து வைப்பதற்கான களிமண் பலகைகளும் பழங்காலத்தில் செய்யப்பட்டிருக்கின்றன. இதைப் பின்வரும் கருத்து வலுசேர்க்கிறது.

"மனிதன் உலோக கண்டுபிடிப்பிற்கு முன்பு மண்பாண்டங்களை அதிகமாகப் பயன்படுத்தியிருக்கின்றான். உலகநாடுகள் பல, மண்பாண்டங்களைத் தங்கள் அன்றாடத் தேவைகளுக்கும் அரசாங்க, நிர்வாக உதவிகளுக்கும் பயன்படுத்தின. ரோமாபுரி போன்ற நகரங்களில் அரசாங்க நிகழ்வுகள் கூட மண்ஓடுகளில் குறியீடுகளாக எழுதப்பட்டன. மனிதருக்கு மண் எங்கும் கிடைத்ததாலும், பிறரைச் சார்ந்திருக்க வேண்டிய நிலை தேவையற்றதாக இருந்ததாலும் மண்ணால் செய்யப்பட்ட பாண்டங்களைத் தீயில் சுட்டுப் பயன்படுத்தியிருக்கின்றனர். தொல் அகழ்வாய்வில் தென்னிந்தியாவில் நமக்கு அதிகமாகக் கிடைப்பது மண்பாண்ட ஓடுகள் ஆகும். சேலம் மாவட்டத்தில் கிடைத்த ஒரு மண்தொட்டி, கி.பி.5ஆம் நூற்றாண்டில் நெசவாளர்கள் துணிகளுக்குச் சாயம் போடுவதற்கு மண்தொட்டிகளைப் பயன்படுத்தியதை உறுதி செய்கிறது. சங்ககால கோயில்களில் எல்லாம் சுதை சிற்பங்கள் அதிகமாக இருந்திருக்கின்றன. இப்படி புராதனச் சின்னங்கள் பெரும்பாலானவை மண்ணால் செய்யப்பட்டவையாக இருந்திருக்கின்றன. மேலும் கருப்புப் பானை ஓடுகள், சிவப்புப்பானை ஓடுகள், கருப்பும் சிவப்பும் கலந்த பானை ஓடுகள் என்று பல வகைப்பட்ட பானைகள் புழக்கத்தில் இருந்திருக்கின்றன" *(தி. மனோன்மணி; 2010: 137).*

மொழிக்கலையை வளர்க்க, மண்பாண்டக்கலை பெரிதும் பயன்பட்டிருக்கிறது. மேலும் மொழியின் அறிவைக்கொண்டு பொருள்சாராக் கலைகள் உருவாவதற்கு முன்பே மண்பாண்ட உற்பத்தி செய்யும் கைவினைக் கலை உருவாகியிருக்கின்றது. அதுவும் சிறப்பான நிலையில் அலங்கார வேலைப்பாடுகளுடன் கூடிய மற்றும் கருப்பு, சிவப்பு வண்ணத்திலான அழகியல் நோக்குடனும் வழவழப்பான பயன்பாட்டுத் தன்மையுடனும் கூடிய மண்பாண்ட வகைகள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. அவ்வாறு வளர்ந்த நிலையை அடைந்த இப்பொருளறிவு இன்னதென்று பிறருக்கு எடுத்துரைக்கப்படாமல் இருந்ததால்

அவை பெருமையடையாமல் போயிருக்கலாம். இவ்விதமான பொருளறிவுப் புலமை உடலுழைப்போடு தொடர்புடைய மூளையுழைப்பு என்பதால் இதன்பாற்பட்டவர்கள் யாரொருவரிடமும் இரந்திருக்கவில்லை. ஆனால் மூளையுழைப்போடு மட்டும் தொடர்புடைய எழுத்தறிவு சார்ந்த புலமையானது தொடக்ககால நிலையில் யாசகத்தோடு தொடர்புடையதாக இருந்திருக்கிறது. உடலுழைப்பினைச் செய்யும் யாரொருவரும் தன்னளவில் தன்னம்பிக்கை உடையவராக இருப்பது என்பது மனித இயல்பு. இதை நடைமுறை சமூகத்திலும் கண்டறியலாம். ஆனால் மூளையுழைப்பினை மட்டுமே மூலாதாரமாகக் கொண்டவர்கள் அதைப் பிறர் ஏற்க வேண்டும், மதிக்க வேண்டும் என்பதில் முனைப்புடன் இருப்பர்; அவ்வாறதைப் பிறர் மதிக்கும்படி செய்ய வேண்டும் என்பது அவர்களுக்கான நெருக்கடி. ஏனெனில் இதற்கான தேவை மனித வாழ்வியலின் அடிப்படைத் தேவைக்கும் அப்பாற்பட்டது. ஆகையால் வெவ்வேறுபட்ட மனநிலையுடையவர்களை ஒருநிலையில் மனநிறைவு செய்ய வேண்டிய அவசியம் இவ்வித புலமையாளர்களுக்கு இருக்கிறது. ஆனால் மனிதனின் அன்றாட இயங்கியலுக்கு அடிப்படையான பொருள்கள் அவனில் பாதியாக உள்ளன. அவை இல்லையேல் அவன் செயலிழந்துவிடுவான்; ஆதலால் அவை எப்போதும் அவனோடே சேர்ந்து புழங்கியது. எனவே புழங்குபொருள் எனப்பட்டது.

## புழங்குபொருள் - சொற்பொருள் விளக்கம்

புழங்குபொருள் என்பது வினைத்தொகை. இச்சொற்றொடர் முக்காலத்தையும் உணர்த்தி நிற்கிறது. அதாவது புழங்கிய பொருள், புழங்குகின்ற பொருள், புழங்கும் பொருள்.

'புழங்குபொருள்' என்ற சொற்றொடரைப் பிரித்தால் புழங்கு + பொருள் = புழங்குபொருள் என்பதாகிறது. இது 'புழங்கு' என்ற வினைச்சொல்லும் 'பொருள்' என்ற பெயர்ச்சொல்லும் கலந்த கலவை. இதில் 'புழங்கு' என்ற வினைச்சொல்லுடன் தொழில்பெயர் விகுதி 'அம்' சேரும்போது,

புழங்கு + அம் = புழக்கம் என்பதாகிறது.

'புழக்கம்' என்ற சொல், தற்போது வாய்மொழி வழக்காற்றில் 'பொழக்கம்' என்பதாக 'மருவி' இருக்கிறது. ஆனால் எழுத்து மொழி வழக்கில் 'புழக்கம்' என்ற சொல் அப்படியே பயன்படுத்தப்படுகின்றது. இதை,

*தேனீர் என்ற சொல் தற்போது புழக்கத்தில் இருக்கின்றது*

*பத்து ரூபாய் நாணயம் தற்போது புழக்கத்தில் இருக்கின்றது*

என்பன போன்ற பயன்பாட்டு மொழி வாக்கியங்களிலிருந்து அறியலாம். இதில் 'புழக்கம்' என்ற சொல் பயன்பாடு / பரிவர்த்தனை என்ற பொருளில் குறிக்கப்பட்டிருக்கின்றது. இதனடிப்படையில் புழக்கம் - புழங்கு - புழங்குதல் - புழங்குபொருள் என்ற சொற்சேர்க்கையை இதன்பாற்பட்டதாகக் கொள்ளலாம். இதற்கான அகராதி விளக்கம் பின்வருமாறு,

'புழக்கம்' என்ற சொல்லிற்கான சொற்பிறப்பு விளக்கத்தைச் செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகரமுதலி,

*பன் - [பய்] - பயில் - பயிற்று*

*பழ - பழகு -பழக்கம்*

*பழகு - பழங்கு - பழங்குதல் = ஒரு பொருளைப் பல நாள் பயன்படுத்துதல், பழமையாக்குதல், பயன்படுத்துதல்.*

*பழங்கு, புழங்கு, புழக்கம் = ஒரு பொருளைப் பலகாற் பயன்படுத்துதல், நடமாட்டம், பணப்புழக்கம், மக்கட் புழக்கம் என்பன வழக்கு.*

*ஆக, 'புழக்கம்' = காசு, சொல் முதலியவை வழக்கில் இருக்கும் நிலை.*

*புழங்குதல் = கையாளுதல்*

என்பதாகப் பொருள் கொள்கிறது ***(2005:386)***. இதில் 'புழக்கம்' என்பதன் வேர்ச்சொல்லாக 'பழக்கம்' என்ற வினைச்சொல் அமைந்திருத்தல் கவனிக்கத்தக்கது. அதன்படி 'பழக்கம், புழக்கம்' என்ற சொற்களுக்குத் தமிழ்ப்பேரகராதி பின்வருமாறு பொருள் தருகிறது.

*பழக்கம் - பயிற்சி, வழக்கம், அறிமுகம், ஒழுக்கம், சமர்த்து, அமைதி, குணம்*

*புழக்கம் - பழக்கம், அறிமுகம், தோற்றம், இடைவிட்டத்தன்மை **(1981:2792)**.*

இவ்விரு சொற்களுக்கான பொருள் கொள்ளலில் கழகத் தமிழ் அகராதி,

*பழக்கம் - அறிமுகம், பயிற்சி, வழக்கம்*

*புழக்கம் - பழக்கம், அறிமுகம்*

*புழங்குதல் - கையாளுதல், வழங்குதல்*

என்பதாகப் பதிவு செய்துள்ளது ***(1979:690)***.

'புழங்குதல்' என்ற சொல்லிற்கு கையாளுதல், வழங்குதல் ***(2002:182)*** என்பதாகக் கிராமியத் தமிழகராதி பொருள் தருகிறது.

இதற்கு Winslow's Comprehensive Tamil - English Dictionary,

*புழக்கம் - Familiarity, acquaintance, with a person thing of art, practice, use.*

*புழங்கு - To be used, occupied, frequented, as a room or thing (2004:799).*

எனப் பொருள் தருகிறது. மேலும் இச்சொற்களுக்கு Traquebar Tamil - English Dictionary-யும் மேற்கூறிய இதே பொருளையே வழிமொழிகிறது ***(2006:533)***.

ஆக, இவ்வாறான விளக்கங்களின் அடிப்படையில் மேற்கூறியபடி புழக்கம் - புழங்கு - புழங்குதல் - புழங்குபொருள் என்பதற்குப் 'பயன்பாட்டுப் பொருள்' என்பதாகப் பொருள் கொள்ள முடிகின்றது.

## மரபு - சொற்பொருள் விளக்கம்

ஏற்றுக்கொள்ளும்படியான எதுவொன்றையும் அப்படியே பின்பற்றுதல் மரபு. இதையே நன்னூலார்,

*எப்பொருள் எச்சொல்லின் எவ்வாறு உயர்ந்தோர்*
*செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே* *(நன்.சொல்.நூ.388)*

என்று குறிப்பிடுகின்றார். அதாவது அறிவுடையோர் எந்தப் பொருளை எந்தச் சொல்லால் எந்த முறைப்படி வழங்கினரோ, அதே முறைப்படி அந்தப் பொருளை அந்தச் சொற்களால் வழங்குதல் மரபாகும் என்பர். இது எழுத்துமொழி மரபிற்கான வரையறை. இது அப்படியே பயன்பாட்டினை அடிப்படையாகக் கொண்ட பொருள்களுக்கும் பொருந்தும். ஏனெனில் எழுத்தறிவும் பொருளறிவும் என்று தோன்றியது என்ற எல்லை அறியப்படாதது. ஆகையால் மரபெனப்படுவது இவ்விரண்டிற்கும் பொருந்தும்.

மரபு என்பதற்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி முறைமை, சான்றோரின் செயல், வழக்குமுறை, பழமை, வமிசம், பாரம்பரியம், இயல்பு, இலக்கணம், நல்லொழுக்கம், பெருமை, மேம்பாடு, நியாயம், வழிபாடு, பருவம் எனப் பொருள் உரைக்கின்றது. கழகத் தமிழ்அகராதியும் இதனையே வழிமொழிகிறது. இதில், வழக்குமுறை, பழமை, பாரம்பரியம், மேம்பாடு, வழிபாடு முதலானவற்றைப் புழங்குபொருள் மரபிற்கு ஏற்ற பொருள்களாகக் கொள்ளலாம்.

'மரபு' என்ற சொல்லிற்கு தமிழிலக்கியக் கலைக்களஞ்சியமான அபிதான சிந்தாமணி தாய் மரபு, தந்தை மரபு எனப் பொருள் கொள்கிறது. 'மரபு' என்ற சொல் குறித்து எஸ். வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகையில்,

> ஓர் இனத்தார் ஒரு பொருள் பற்றி வழக்கமாய் அனுசரித்து வரும் நியதியே மரபு **(1962:76)**

என்கிறார். இதனையே,

> மரபு என்பது அடிமரமும் வேரும் போன்றது. பூவும் கனியுமாய் எவ்வளவு பூத்துக் குலுங்கினாலும் முன்னயவற்றை விடுத்து அவை வேறாக அமைவதில்லை **(1975:39)**

என்பார் தமிழண்ணல். இது குறித்து கைலாசபதி குறிப்பிடுகையில்,

> மரபு என்பது முன்னிருந்தோரால் உண்மையானது, நன்மையானது என்று கொள்ளப்பட்ட எண்ணக் கோவையாகும். எல்லா மரபுகளும் ஒவ்வொரு காலத்திலிருந்தும் வழங்கி வருவனவே. அவ்வக்காலச் சமுதாயத்தின் பௌதிக நிலைமையிலிருந்தே அவை பிறந்தன **(1970:46)**

என்பார். மேலும், இதனை

*ஏதேனும் ஒருமுறை உருவாகி பின், வழக்கத்தில் நிலைத்து விடுகிறது. அவ்வாறு வழங்கி வழங்கி நிலைபெற்றுவிடுகின்ற ஒன்றைத்தான் மரபு எனக் குறிக்கிறோம் (1979:20)*

என்கிறார் மு. வரதராசனார்.

ஆக, மேற்குறிப்பிட்ட வரையறைகளை அடிப்படையாகக் கொண்டு 'மரபு' என்பதைப் பின்வருமாறு புரிந்து கொள்ளலாம். அதாவது, பண்டைக்காலத்தில் தோன்றிய மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத பயன்பாட்டு அறிவுச் செய்கை தலைமுறைதோறும் கடத்தப்பட்டு, தற்காலத்தும் அது நீடித்துப் பயன்படுமாயின், காலத்தைக் கடந்து வந்த அந்த நெடிய சரடினை 'மரபு' எனக் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும்.

## கைவினைக் கலைப்பொருள்

கைவினை என்னும் சொல் கை, வினை என்ற இருசொல்லின் இணைவு. கை + வினை = கைவினை. இவற்றினைத் தனித்தனியே பொருள் கொண்டால் கை என்பது உடல் உறுப்பினையும் வினை என்பது செயலினையும் குறிப்பதை அறியமுடியும். இதனடிப்படையில் 'கைவினை' என்பதற்குக் 'கையால் செய்யப்படும் தொழில்' என்று பொருள் கொள்ள இயலும். ஆனால் இச்சொல்லை ஒரு புலத்திற்கான கலைச்சொல்லாகக் கொள்ளும்போது அதற்கான பொருளை ஆழங்கால்பட்டதாகக் கொள்ளவேண்டிய தேவை இருக்கிறது. அதனடிப்படையில் நாட்டார் கலைகளுள் ஒன்றான 'கைவினை'யை 'நேர்த்தியுடன் கையால் செய்யப்படும் செயல்' எனப் பொருள் கொள்ளலாம். அவ்வாறு கொள்ளும்போது அதற்குக் 'கைவினைக் கலை' என்ற பெயர் இயல்பாகவே அமைந்துவிடுகின்றது.

கைவினைப் பொருள், கைவினைக் கலைப்பொருள், கலைப்பொருள் என்ற அடையாளப்படுத்தலில் பலவிதமான உள்ளர்த்தப்பாடுகள் இருப்பினும், இவற்றில் ஏதேனும் ஒன்றினுள் ஒட்டுமொத்த புழங்குபொருள்களையும் அடக்கிவிட இயலாது. ஏனெனில் ஒரு பொருள் பயன்பாட்டின் அடிப்படையில் இம்மூன்று நிலைகளிலும் செயல்படுவதற்கான சாத்தியப்பாடுகள் மிகுதியாகவே இருக்கின்றன. இவற்றிற்குள்ளான இவ்வித வேறுபாட்டுத் தன்மைகள் குறித்து தே. லூர்து குறிப்பிடுகையில்,

*ஒரு படைப்பில் மகிழ்ச்சியூட்டும் செயல்பாடு முனைப்பாகவும் முகமையாகவும் இருந்தால் கலைப்படைப்பென்று சொல்லப்படும். நடைமுறைப் பயன்பாட்டிற்கு முதன்மையளிப்பதாக இருந்தால் கைவினைப் பொருள் என்கிறோம். ஆனால் நடைமுறைப் பயன்பாட்டிற்கும் உரியதாக, கலைப்பண்புக் கூறுகளும் முனைப்பாகக் காணப்பட்டால் அவற்றைக் கைவினைக் கலைப்படைப்புகள் எனலாம் (2008:299)*

எனக் குறிப்பிடுகின்றார்.

## புழங்குபொருள் - கைவினைக் கலைப்பொருள்

'புழங்குபொருள்' என்பதைக் 'கைவினைக் கலைப்பொருள்' எனக் குறிக்கும் வழக்கமும் இருந்து வருகிறது. இதில் 'புழங்குபொருள்' என்பது பயன்பாட்டு அடிப்படையில் குறிக்கப்படுவது. கைவினைக் கலைப்பொருள் என்பது உற்பத்தி அடிப்படையில் குறிக்கப்படுவது என்பதாக வகைபிரித்து அறியலாம். இது குறித்து ஹென்றி கிளாஸி குறிப்பிடுவதை பக்தவத்சலபாரதி பின்வருமாறு எடுத்துக்காட்டுகின்றார்.

> புழங்குபொருள் பண்பாட்டில் குறிப்பிட்ட சில வகையான பொருள்கள் அன்றாட வாழ்க்கையாக உள்ளவற்றை Craft என்று வகைப்படுத்திக் கொண்டனர். மற்றொரு பிரிவானது அரசியல் சார்ந்த, மகிழ்ச்சி தருகின்ற, அலங்காரத் தன்மை கொண்டதாக இனங்கண்டு அதனை Art என்று வகைப்படுத்திக் கொண்டனர் ***(2005:316)***

ஆக, வாழ்வியற் தேவையை மையமாக வைத்துப் பொருள்கள் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன.

## புழங்குபொருள் - வரையறை

இயற்கை எப்போதும் சுழற்சிக்கு உட்பட்டது என்பதால் மனிதர்களுக்கான தேவையனைத்தும் எல்லாக் காலங்களிலும் எல்லாச் சூழலிலும் கிடைத்திருக்கவில்லை. எனவே இயற்கையிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளவும், வளர்த்துக்கொள்ளவும் நிலையாக ஓரிடத்தில் இருந்தபடியே தன் தேவைகளை நிவர்த்திச் செய்துகொள்ளவும் தனது விருப்பத்திற்கேற்ற சூழலை உருவாக்கும் நோக்குடனான பொருள்களை அவர்களாகவே தங்களது உணர்வுந்துதலுக்கு ஏற்ப உருவாக்கிக் கொண்டிருக்கின்றனர். அப்பொருளானது அவர்களைச் சூழ்ந்த இயற்கையின் மறுவுருவமாகவே அமைந்திருக்கிறது. அதாவது இயற்கையின் வனப்பிலிருந்தே அப்பொருள்களுக்கான வடிவத்தைப் பெற்றிருக்கின்றனர். அவ்வாறு பயன்பாட்டு நோக்கோடு மனிதர்களால் படைக்கப்பட்டு, பயன்படுத்தப்படும் பொருள்களே 'புழங்குபொருள்கள்' ஆகும்.

மொழி என்பது மக்களுடைய உள்ளக்கிடக்கையின் ஒலி வடிவம். அதேபோல் புழங்குபொருள் என்பது தேவையுணர்ந்த அவர்களுடைய உள்ளக்கிடக்கையின் பொருள் வடிவம்.

கால மாற்றத்தாலும், தேவையின் அதிகரிப்பாலும் புதுப்புது பண்பட்ட பயன்பாட்டு உத்திகளை உள்வாங்கிய படிமலர்ச்சிதனையும், தற்காலம் வரையிலான அதற்கான நீட்சியையும் இதில் கொள்ளலாம். இக்கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக, தே. லூர்து கூறுகையில்,

> மானுடச் சமூகங்கள் எல்லாம் தாம் வாழும் சுற்றுச் சூழலுக்கும் காலத்திற்கும் ஏற்ப வாழ்ந்தாக வேண்டும். இந்தப் படிமுறையில் சமூகங்கள், தத்தம் சொந்த நோக்கிற்கேற்ப இயற்கை உலகை வடிவமைக்கப் பல்வேறு

தந்திரோபாயங்களையும் அணுகுமுறைகளையும் வளர்த்தெடுத்தன. இயற்கை வளங்களைப் பண்பாட்டுப் படைப்புகளாகவும், கலை பண்பாட்டுப் படைப்புகளாகவும் மாற்றிக் கொள்வதே 'புழங்குபொருள் பண்பாடு' என்கிறோம் *(2008:297)*

என்கிறார்.

'புழங்குபொருள் மரபு' என்பதற்கு நிகரான ஆங்கிலப் பதமாக 'Material Culture' எனும் பதம் கொள்ளப்படுகிறது. இதனடிப்படையில் 'Material Culture' எனும் பதத்திலிருந்து 'புழங்குபொருள்' என்ற தமிழ்ப் பதத்திற்கான பொருளை வருவித்துக் கொள்ளும் வழக்கம் நடைமுறையில் இருக்கிறது. அந்த வகையில் இதனைப் 'பருப்பொருள் பண்பாடு' என்பார் ஆ. தனஞ்செயன் *(2010:94)*. "பண்பாட்டின் கண்ணாடி புழங்கு பொருள்கள்" எனச் சுருக்கமாக வரையறை தருகிறார் பக்தவத்சலபாரதி *(2008:322)*. மேலும், புழங்குபொருள் வரையறை குறித்து மேனாட்டு அறிஞர் ஹென்றி கிளாசி (Henry Glassie) குறிப்பிடுகையில்,

புழங்குபொருள் என்பது உலகின் ஒரு அங்கம். மனித உடற்செயல்பாடுகளின் இயல்பான பதிவு. படைப்பாளியின் எண்ணத்தையும் செயல்பாட்டினையும் தொடர்ச்சியாக வெளிப்படுத்தும் முறைமை, உள்ளக் கருத்துக்களின் ஒன்றிணைவு. உள்ளத்தின் உணர்வுகள் கருத்து நிலையில்தான் பதிவு செய்ய வேண்டும் என்பதில்லை. அவற்றை செய்முறை விளக்கமாகவும் பதிவாக்கலாம். புழங்குபொருள்களின் உண்மைநிலை என்பது வெறும் வார்த்தைகளை மட்டுமே சார்ந்தது இல்லை (1999:44)

என்றும்,

புழங்குபொருள் பண்பாடு என்பது உலகளாவிய மனிதர்களின் செயல்பாடுகளில் உள்ள உள்ளார்ந்த, மதிநுட்பம் நிறைந்த கூறுகளுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது. இப்பண்பாடானது பொருள்களை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தொடங்கப்பட்டாலும் அவை பொருள்களோடு மட்டுமே முடிவுறும் பொருளறிவாக இருக்கவில்லை. மாறாக இவை மனித உணர்வுகளையும், செயல்பாடுகளையும் அறிந்துகொள்ள உதவும் ஒரு கருவியாக பயன்படுத்தப்பட்டிருக்கின்றது (Ibid: 41)

என்றும்,

புழங்குபொருள் ஆய்வு என்பது பொதுவானதொரு கல்விசார் வரையறையில், இது கலையை அறிந்துகொள்ள உதவும் முறைப்படுத்தப்பட்ட ஒன்றிணைந்த விரிவானதொரு வடிவமாகக் கொள்ளப்படுகின்றது. இது வரலாற்று முறையிலும் மனித இனப்பண்பாட்டு முறையிலும் கலையை மனிதச் செயல்பாடாகப் புரிந்துகொள்ள உதவுகிறது. மானுடவியல் பண்பாட்டு வரலாற்றையும் பொதுவானதொரு வரலாறாக ஆக்குவதோடு அதனை அனைவருக்கும் உரியதாகவும் ஆக்குகின்றது. மேலும் இது தொல்பொருளியல், புவியியல், வரலாறு, இனப்பண்பாட்டுத் துறைகளின் வழி வெளிவந்த சான்றுகளை

ஒன்றிணைத்து அவற்றை உலகளாவிய பொருள்கலைக்கான கூறுகளாக பறைசாற்றுகிறது (Ibid:67)

என்றும் குறிப்பிடுகின்றார். மேலும் மேனாட்டு ஆய்வாளர்கள் பலரின் கருத்துகள் பின்வருமாறு,

புழங்குபொருள் பண்பாடு என்பது பொருள் உற்பத்தி செயல்பாட்டையும் அதன் தேவையையும் உணர்த்துவதோடு அப்பொருளின் கோட்பாட்டை விளக்கி அதன் இயல்புத்தன்மையை உணர்வுப் பூர்வமாக எடுத்தியம்புகிறது. (போர்டு)

புழங்குபொருள் பண்பாடு என்பது மனிதச் செயல்பாடுகளின் வெளிப்பாடு என்பது மட்டுமல்ல. மாறாக அது ஒரு பொருளினுடைய உற்பத்தியை மனித செயல்பாடுகள் வழி உணர்த்துவதாகும். (கார்னிலியல் ஒஸ்குட்)

புழங்குபொருள் பண்பாடு : பண்பாட்டின் ஒட்டுமொத்த வெளிப்பாடு கலைப்பொருள்கள். இப்பரந்த பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் மனிதனால் அவனுடைய தேவைக்காகவும் தொடர்புக்காகவும் உருவாக்கப்பட்டிருக்கிறது. அதன்வழி மனிதன் தனக்கான மகிழ்ச்சியையும் கற்பனையையும் வெளிப்படுத்துவதற்காகவும், சமூக உறவை மேம்படுத்திக் கொள்வதற்காகவுமே கலைப்பொருள்களை உருவாக்கியிருக்கிறான் (மெல்வில்லே ஹெர்ஸ்கோவிட்ஸ்)

அடிப்படையில் ஒரு பொருள் மனிதனால் உருவாக்கப்படுகிறது அல்லது அவற்றின் இயற்கையான வடிவத்திலிருந்து சிறிது உருமாற்றப்படுகிறது. அவ்வாறு உருவாக்கப்பட்ட அப்பொருளானது அவனுடைய நனவு அல்லது நனவிலி மனநிலையில் நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ அவனது நம்பிக்கையைப் பிரதிபலிக்கின்றது. மேலும் அப்பொருளை உற்பத்தி செய்தவர், நுகர்பவர், பயன்படுத்துபவர் என அனைவருடைய நம்பிக்கையையும் பிரதிபலிப்பதோடு அவர்கள் சார்ந்திருக்கும் ஒட்டுமொத்த சமூகத்தின் நம்பிக்கையையும் பிரதிபலிப்பதாக விளங்குகிறது. (ஜுல்ஸ் ப்ரௌன்)

புழங்குபொருள் பண்பாடு என்பது மனிதனுடைய வெளிப்புறச் சூழலிலிருந்து பிரிக்கப்பட்டு அவனுடைய தேவைக்காக அவன் சார்ந்திருக்கும் பண்பாட்டோடு திட்டமிட்டு வடிவமைக்கப்பட்டதாகும் (ஜேம்ஸ் டீட்ஸ்)

என்பதாகத் தாமஸ். ஜெ, ஸ்கிளர்த் (Thomas J.Schlereth) தொகுத்துக் காட்டுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது (1985:3-4).

## புழங்குபொருள் மரபு

புழங்குபொருள் மரபு என்பதனை மனித எண்ணத்தின், செய்கையின் விழுமியத்தைப் பெறும் நிலையும், தனிமனிதரால் தோற்றுவிக்கப்பட்ட பழக்கம், சமூக வழக்கமாகி அங்கீகாரம் பெற்று பல தலைமுறைகளாக அதுசார்ந்த படிமலர்ச்சிகளைப் பெற்றுவரும் நிலையும் ஒருங்கிணைந்த ஒன்றாகக் குறிப்பிடலாம்.

உலகில் உள்ள எல்லா இனக்குழு மக்களும் தங்களுக்கெனத் தனித்த அடையாள மரபினைக் கொண்டிருக்கின்றனர். அவ்வாறான அடையாள மரபினை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை

1. பொருள்சார் மரபு

2. பொருள்சாரா மரபு

என்பனவாகும். இதில் பொருள்சார் மரபெனப்படுவது இயற்கையைத் தன்வயப்படுத்தி அதனைத் தனக்கான அன்றாடப் பயன்பாட்டுப் பொருளாக மாற்றிக்கொள்ளும் மனிதனின் அறிவுத்தொடர்ச்சி. அதேபோல் பொருள்சாரா மரபெனப்படுவது, மனிதனின் வாழ்வியல் சார்ந்த மொழியையும் செயலையும் மையமிட்ட அறிவுத் தொடர்ச்சியாகும். இதை மிகவும் நுண்ணிதாகச் சொல்ல வேண்டுமானால் பொருள்சார் மரபெனப்படுவது உருவை மையமிட்டது. பொருள்சாரா மரபெனப்படுவது செயலை மையமிட்டது எனலாம். இருவேறுபட்டத் தன்மையில் குறிக்கப்படுகின்ற இவ்விரு மரபுகளும் சமூக இயங்குதளத்தில் ஒன்றையொன்று சார்ந்து இருப்பவையாகும். இவையே மனித இயங்கியலுக்கான அடிப்படை.

அதாவது, பொருள் உற்பத்தி என்பது பொருள்சார் அறிவு எனக் கொண்டால் அப்பொருளைப் பயன்படுத்தும்முறை என்பது பொருள்சாரா அறிவு ஆகும். எல்லாவிதமான பொருள் உற்பத்திக்கும் தேவையான அறிவு, சிந்தனை முறை, அழகுணர்வு முதலானவையனைத்தும் பொருள்சாரா மரபிற்குரிய கூறுகளாகும். இவையனைத்தையும் ஒருபொருளின் தன்மையில் வெளிக்கொணரும்போது அவை பொருள்சார் கூறுகளாக மாற்றமடைகின்றன. இதனை நடைமுறை வாழ்வியலோடு பொருத்திப்பார்க்கும் வகையில் பின்வரும் கருத்து அமைந்திருக்கிறது. அதாவது,

> மக்கள் அவர்களின் தேவைகளுக்காகச் செய்துகொள்ளும் அனைத்து வகையான பொருள்களும் பொருள்சார் பண்பாட்டில் அடங்கும். இயந்திரங்கள், கருவிகள், மரச்சாமான்கள், வீட்டுப் பொருள்கள், உடைகள், அணிகலன்கள், கட்டடங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், சாலைகள், வேளாண் நிலங்கள், எழுதுகோல், அழகுபொருள்கள், போர்க்கருவிகள் போன்ற எண்ணற்றன பொருள்சார் பண்பாட்டைச் சேர்ந்தவை. ஒரு பண்பாட்டைச் சேர்ந்த பொருள்கள் அதற்கென்ற பொருண்மையையும் பயன்பாட்டையும் நிலையாகக் கொண்டு அப்பண்பாட்டில் நிலைபெற்றிருக்கும். மக்களின் தேவைக்காகப் பொருள்கள் ஏற்படுத்தப்பட்டதால் அத்தேவைகள் பண்பாட்டில் இருக்கும் வரை அப்பொருள்களும் அப்பண்பாட்டில் இருக்கும். பண்பாட்டு மாற்றம் ஏற்பட்டு குறிப்பிட்டச் சில தேவைகள் அற்றுப்போகுமானால் அவற்றிற்குரிய

பொருள்களும் மறைந்து போகும். ஆகவே ஒரு பண்பாட்டைச் சேர்ந்த அனைத்துப் பொருள்களையும் கொண்டு அம்மக்களின் பண்பாட்டைப் பெருமளவு அறியமுடியும். அதனாலேயே பண்பாட்டுப் பகுப்பாய்வில் பொருள்சார் பண்பாட்டை அறிய வேண்டியது அவசியமாகிறது (பக்தவத்சலபாரதி; *1990:165*).

இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது பொருள்சார் மரபு என்பது மனித வாழ்வியலின் மையமாயிருப்பது புலனாகிறது. ஆகையால் இதனோடு இணைந்தே பொருள்சாரா மரபு உருவாகியிருக்கவேண்டும்.

## மொழி

மனிதனின் அறிவுப் பாரம்பரியத்தில் முதல் தொலைத்தொடர்புச் சாதனமாக விளங்கியது ஒலியும் ஒளியுமாகும். இதில் பரிமாற்றத்திற்கான ஒலியின் அடுத்தகட்ட வளர்ச்சியே மொழி. ஒரு சமுதாயத்தின் பண்பாட்டுக் கூறுகளில் மொழி என்பது மிகவும் வலிமையான ஒன்றாகச் செயல்படுகிறது. வெறும் தகவல் தொடர்புச் சாதனம் என்பதைக் கடந்து குறிப்பிட்ட இனம், அதன் சமூக ஒழுங்கமைப்பு, சிந்தனைமுறை, அறிதல்சார் பார்வை, உலகக் கண்ணோட்டம் உள்ளிட்ட அனைத்துத் தளங்களிலும் மொழி தவிர்க்க முடியாத அளவில் ஆதிக்கம் செலுத்துகிறது.

> மொழி, இலக்கியம், கலை போன்றவை நேரடியாகவோ மறைமுகமாகவோ சமுதாயத்தின் கூட்டுப் படைப்புகளாகும். சமுதாயம் என்று வரும்போது, அது பல நிறுவனங்களால் கட்டப்பட்டது. சமூக நிறுவனங்கள் ஒன்றோடு ஒன்று தொடர்புடையன. இச்சமூக நிறுவனங்களின் பரஸ்பரத் தொடர்புகளால் சமுதாயம் இயங்குகின்றது. இச்சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் மக்களின் கூட்டுப்படைப்புகளாக வெளிப்படும் மொழி, கலை, இலக்கியங்களும் தாமே வளர்த்துக்கொள்ளும் தனித்திறன்கள் கொண்டு தனிமனிதர்களை உருவாக்கும் அழகியல் கலைகளும் எழுத்திலக்கியங்களும் சமுதாயத்தை நேரடியாகவோ மறைமுகமாகவோ பிரதிபலிக்கின்றன. காலத்திற்குத் தக்கவாறு தேவையானவற்றைச் சமுதாயத்திற்கு உணர்த்தவும் செய்கின்றன (ஆ. தனஞ்செயன்; *2010:87*).

அந்த வகையில் மொழி என்பது பண்பாட்டினை நிர்ணயிக்கும் மிக முக்கியக் கூறுகளுள் ஒன்று. பண்பாட்டு ஆழங்கருதி கூர்ந்து நோக்குகையில் அதை வாய்மொழி, வரிவடிவமொழி என இரண்டாகப் பிரிக்கலாம். இதில் வரிவடிவ மொழி என்பது எழுத்து, எழுத்தின் குவியலான சொல்லின் தொகுப்பாயிருக்கிறது. எழுத்து என்பது ஒலி உணர்விற்கான கீறல் வடிவத்தின் வளர்ச்சியாகும். இதைத் தொடர்ந்து உருவான சொல்லிற்கான உருவாக்க/வளர்ச்சிநிலை என்பது உருக்களையும் செயல்களையும் மையமிட்டதாயிருக்கின்றது. இதனைப் பெயர்ச்சொல், வினைச்சொல் என முறையே உருவையும் செயலையும் குறிப்பதாகக் கூறும் தொல்காப்பியர்,

*சொல்லெனப் படுப பெயரே வினையென்*
*றாயிரண் டென்ப அறிந்திசி னோரே*
*(தொல்.சொல்.நூ.158)*

என்று பொதுப்படச் சொல்லிச் செல்கிறார். இதில் பெயர்ச்சொல்லுக்கான பகுப்பில் அச்சொல்லுருவாக்கத்திற்கான காரணங்களைத் தெளிவாகக் குறிப்பிடவில்லை. இதையே பின்னாளில் மொழிவிரிவு கருதியும் எளிமை கருதியும் இலக்கணம் செய்திட்ட நன்னூலார்,

*இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின* *(நன்.எழுத்து. 62)*

எனப் பெயர்ச்சொல்லைப் பகுத்துக் கூறுகின்றார். இவற்றில் இடுகுறிப் பெயர்க்கு உரைவகுத்த உரையாசிரியர்கள் 'காரணம் பற்றாது வழங்கி வரும் பெயர்கள்' என்றும் 'ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளாலும் அறிவுடையோராலும் இட்ட குறியாகியப் பெயர் இடுகுறிப்பெயர்' என்றும் உரைப்பர். ஆக இயல்பினை உணர்த்தும் சொல்லினை வேராகக் கொண்டு அவ்வியல்புடைய பொருளைக் குறித்தல் இடுகுறிப்பெயர் என்பதாகிறது. சான்றாகச் செ - செம்மை, செம்பு - உலோகம், செம்பு - குவளை என்று குறிக்கப்பெறுகின்றது.

எனவே இடுகுறிப்பெயர் என்பது முன்னமே வடிவ முழுமைபெற்ற ஒரு பொருளை இட்டுக் கூறுவது என்பதாகிறது. அந்த வகையில் இதனை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்போது மனிதனிடையே மொழிக்கூறாகிய சொல் உருவாவதற்கு முன்பே பொருளைப்பற்றிய அறிவென்பது செழுமையாக இருந்திருக்கிறது என்பது உறுதியாகின்றது. ஆக, "மொழியானது மனிதனின் உற்பத்தி செயலோடு நேரடியாகத் தொடர்புடையது. அது உற்பத்தி செயல்பாட்டோடு மட்டுமின்றி, மனிதனின் வேலை முறைகளின் எல்லாப் பகுதிகளிலும் அதாவது உற்பத்தியிலிருந்து அடிப்படை அமைப்பு வரையிலும், அடிப்படை அமைப்பிலிருந்து மேல் அமைப்பு வரையிலுமாக அது தொடர்பு கொண்டுள்ளது. இதன் காரணமாகவே மொழியானது அடிப்படை அமைப்பின் மாறுதலுக்காகக் காத்திராமல் உற்பத்தியில் ஏற்பட்ட மாற்றங்களை உடனடியாகப் பிரதிபலிப்பதாகிறது" (கி. பார்த்திபராஜா; 2010:51).

எனவே, மொழியறிவைக் காட்டிலும் பொருளறிவு என்பது தொடக்ககாலந் தொட்டே மனித வாழ்வியலின் அணுக்கமான ஒன்றாக இருந்திருக்கின்றது. என்றாலும், தொடக்ககாலச் சூழலில் பயன்பாட்டுப் பொருள்களை ஆவணப்படுத்தி வைக்கும் நிலை இருந்திருக்கவில்லை. அதன் தன்மை ஆவணப்படுத்தி வைப்பதற்கானது அல்ல, மாறாகப் பயன்பாட்டிற்கானது என்றளவில் கொள்ளப்பட்டிருக்கிறது. கால ஓட்டத்தில் இடையிடையே சில வேற்றுக் கலாச்சாரப் பண்பினை உள்வாங்கி உருமாற்றம் கொள்வதும் அல்லது மரபான இப்பொருளுக்கான இடத்தினை இயந்திர உற்பத்தியில் உருவான பொருள்கள் இட்டு நிரப்புவதும் இப்பொருள்சார் மரபில் தொடர்ச்சியாக நிகழ்ந்திருக்கின்றது. ஆனால் மொழிசார்ந்த இலக்கியம் என்பது அறிவுப்

பெட்டகமாகக் கருதப்பட்டிருப்பதால் அது ஆவணப்படுத்தப்பட்டிருக்கின்றது. அதுவும் தனிநபர் சொத்தாக மாறுமளவிற்கான மதிப்புடையதாகவும் இருந்திருக்கின்றது. அவ்வாறான இலக்கியங்கள் காலந்தோறும் சமூகச்சூழலையும் உள்வாங்கி வந்திருக்கின்றன. ஆகவே ஆவணப்படுத்தப்படாத அறிவார்த்தமெனக் கொள்ளப்படாத பொருள்சார் மரபினை இலக்கியங்களின் வழி அறிதல் என்பது அம்மரபு குறித்த தற்கால நீட்சியினை அறிய வழிவகை செய்யும்.

## இலக்கியம்

*இலக்கியம் என்பது மக்களுடைய விழுமியக் கருத்துகளைச் செவ்விய சொற்களால் விளக்குங் கருவியாம் (2007:77)*

என்பார் கா.சுப்பிரமணிய பிள்ளை. ஆகவே, ஆய்வாளர்கள் அவற்றைப் பலபுலங்கள் சார்ந்த ஆய்வுக்கான எழுத்தாவணமாகக் கொள்வர். இவ்வெழுத்தாவணமாவது தொல்லியல், வரலாறு, மானிடவியல் உள்ளிட்ட புலங்களுக்கான அனைத்துத் தரவுகளையும் உள்ளடக்கிய மனித வாழ்வியலின் பிரதிபலிப்பு. இதில் ஒவ்வொரு புலத்திற்கான கூறுகளையும் தனித்தனியே பிரித்தெடுத்து, ஆய்விற்குட்படுத்தும் வகையில் அனைத்து புலம்சார்ந்த கூறுகளையும் இலக்கியங்கள் தன்னகத்தே கொண்டிருக்கின்றன. இவ்வாறான இலக்கியத்தை மரபுக்கான / வரலாற்றிற்கான தரவாகக் கொள்ளும்போது அவற்றைக் காலச்சூழலோடு பொருத்தி ஆய்தல் அவசியமாகிறது. காலம் எனப்படுவது சூழலைக்கொண்டு நிறுவப்பெறுவது. சூழல் என்பது அக்கால மக்களின் நம்பிக்கை, சடங்கு, தொழில் முதலான வாழ்வியலை மையமிட்டது. ஆக இலக்கியத்தைத் தரவாகக் கொண்டு அக்காலச் சூழலை அறிதல் என்பது மரபு அறிவதற்கான அடிப்படை. இதுவரைக்குமான தமிழிலக்கியச் சூழலில் மக்களின் அக, புற வாழ்க்கை சார்ந்த மரபு அறிவதற்கான ஆய்வுகள் மிகுதியாகச் செய்யப்பட்டிருப்பினும் இவையனைத்தும் பொருள்சாராத (Non - Material) கருத்து நிலைத் தேடலிலேயே பயணப்பட்டிருக்கின்றன. இதை ஒருவிதத்தில் இலக்கியம் குறித்த ஒருமுகப் பார்வை என்று கூறமுடியும்.

பொருள் என்றால் உரு. உருவும் ஒருவித அறிவுணர்வால் உருவாக்கப்பட்டது என்றாலும் அவ்வித அறிவுணர்வு என்பது பரவலாகப் பகிர்ந்து கொள்ளப்படாததாகவும் பெரிய அளவில் முன்னெடுக்கப்படாததாகவும் இருந்திருக்கின்றது. ஆகையால் இலக்கியங்களில் பொருள் குறித்த பதிவேற்றம் என்பது நேரடிப் புலப்பாட்டுத் தன்மையைக் கொண்டிருக்கவில்லை. எனவே அவற்றைப் பொருள்சாரா இலக்கியம், சடங்கு உள்ளிட்ட பண்பாட்டுப் பதிவுகளிலிருந்து பெற வேண்டியிருக்கின்றது. தவிர்த்து இது குறித்த சான்றாதாரங்களைத் தேடி நிகழ்த்தப்படும் தொல் அகழ்வாய்வில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு இவ்வாறான மரபுத் தொடர்ச்சியினை அறிவதற்கான சாத்தியப்பாடுகள் மிகவும் குறைவாகவே இருக்கின்றன. ஏனெனில் தொல் அகழ்வாய்வில் பொருள் மட்டுமே அதாவது 'உரு' மட்டுமே பெறப்பட்டிருக்கின்றது. அவற்றில் அவை, எவ்வித தேவைசார்ந்து உற்பத்தி

செய்யப்பட்டது மற்றும் பயன்படுத்தப்பட்டது என்பதற்கான செய்திகள் ஏதுமில்லை என்பதால் அத்துறையினரால் பெறப்படும் தரவுகளை மட்டும் வைத்து ஆய்வு செய்யும்போது அதற்கான பதில் யூகங்களாகவே இருக்கின்றன. ஆகையால் சமூகத்தில் அப்பொருள்களுக்கான நிலைப்பாடு என்னவாயிருந்தது என்பது குறித்து அறிய இயலவில்லை. எனவே உயிரற்ற பொருளுக்குள் ஒளிந்திருக்கும் உயிர்ப்பான உணர்வு குறித்த பதிவுகளைக் கொண்டிருக்கும் இலக்கியத்தையும் அகழ்வாய்வின் மூலம் கிடைத்த தொல்பொருள்களையும் ஒருங்கே ஒப்பிட்டு ஆராய்ந்தால் அவ்வக்காலச் சமூகச்சூழலில் அப்பொருளுக்கான நிலைப்பாடு குறித்து அறியப்பெறலாம். அந்த வகையில் நமக்கான பொருள்சார் தொல்மரபினை அறிவதற்குப் பழம்பெரும் இலக்கியங்களான சங்க இலக்கியங்கள் பெரிதும் உதவுகின்றன.

## சங்க இலக்கியம்

சங்க இலக்கியம் எனப்படுவது எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும். இவற்றில் குறைந்த அடிகளையுடைய பாடல்களைக் கொண்டு தொகுக்கப்பட்ட நூல்கள் எட்டின் தொகுப்பை எட்டுத்தொகை என்றும், நெடும்பாடலினாலான பத்து நூல்களின் தொகுப்பினைப் பத்துப்பாட்டு என்றும் வகைப்படுத்தியுள்ளனர்.

சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் வாழ்வியல் ஒழுக்கங்கள் சார்ந்து இரண்டாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. அவை,

1. அகப்பாடல்கள்
2. புறப்பாடல்கள்

இதில் அக ஒழுக்கம் எனப்படும் களவு, கற்பினை மையமிட்ட பாடல்கள் அகப்பாடல்கள் என்றும்; புற ஒழுக்கம் எனப்படும் கல்வி, அறம், அரசியல், கொடை, வீரம் பற்றிய பாடல்கள் புறப்பாடல்கள் என்றும் குறிக்கப்பெறுகின்றன. இது குறித்து ஆய்வாளர் கனகசபாபதி கூறுகையில்,

> காதலிலிருவர் கருத்தொருமித்து வாழும் அகவாழ்வை அகமென்றும், அதற்கு அரண் செய்து மிளிரும் கல்வி, பொருள், அறம், அரசியல், வீரம் ஆகியவற்றைப் புறமென்றும் பண்டைத் தமிழ்ச்சான்றோர் பகுத்தனர். நுண்மையான இப்பாகுபாட்டின் அடிப்படையிலேயே பாடல்கள் தனித்தனியே இயற்றப்பட்டாலும் வாழ்வில் அகமும் புறமும் ஒன்றோடு ஒன்று நெருங்கிப் பிணைந்திருப்பதைப் போல இலக்கியத்திலும் பிணைப்பு ஏற்படலாயிற்று (2004:10).

இவ்விருதன்மை கொண்ட பாடல்கள் சங்க இலக்கியத் தொகைகளான எட்டுத்தொகையிலும் பத்துப்பாட்டிலும் கலந்து காணப்படுகின்றன. எட்டுத்தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்து நூல்களும் அக ஒழுக்கம் பற்றியன. இவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற முப்பொருள்களால்

ஆனவை. இம்முப்பொருளும் அக்காலச் சமூகச் சூழலைப் புரிந்துகொள்ள வகைசெய்கின்றன. இத்தொகுப்பில் புறப்பாடலாகக் குறிக்கப்படுவன பதிற்றுப்பத்து, புறநானூறு என்ற இரண்டு தொகை நூல்கள். இதில் பதிற்றுப்பத்து 10 சேர அரசர்களைப் பற்றிப் பேசும் நெடும்பாடலாக இருக்கிறது. இந்நூல் பத்து புலவர்களால் திட்டமிட்டுப் பாடப்பட்டவை. ஆனால் புறநானூறு பல புலவர்களால் பாடப்பட்ட குறைந்த அடியெல்லையுடைய பாடல்களின் தொகுப்பு. மேலும், இது பல புலவர்களால் பாடப்பட்டது என்பதால் இதில் ஒருமித்த சார்புத்தன்மை குறைந்து பலரின் அனுபவத் தன்மையிலான அக்காலச் சமூகச் சூழல் பதிவாகியிருக்கின்றன. அவ்வாறான பதிவுகளே சங்ககாலச் சமூகச் சூழலைப் புரிந்துகொள்ள நமக்குக் கிடைக்கும் வரலாற்றுத் தரவுகளாகும். ஆகையால், புறநானூற்றுப் பாடல்கள் சமூக வரலாற்றுத் தரவுகளைக் கொண்டதொரு களஞ்சியமாகக் கொள்ளப்படுகின்றன.

பத்துப்பாட்டுள் உள்ள முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை முதலானவை அகப்பாடல்கள். புறப்பாடல்களான ஆறு நெடும்பாடல்களில் ஐந்து ஆற்றுப்படை நூல்கள். ‘இவனை இவர் பாடியது’ என்ற அடியை ஈற்றாகக் கொண்ட இவை இரந்துபட்டவர்கள் கொடை கொடுப்போரை ஏற்றிப்பாடும் நோக்கோடு பாடப்பட்டிருப்பதால் இவையனைத்திலும் பாடப்படுவோனின் வீரம், கொடை, நாட்டுவளம் உள்ளிட்ட அவனுக்கு ஏற்புடைய செய்திகளே மிகுதியாக இடம்பெற்றுள்ளன. ஆறாவதான மதுரைக்காஞ்சியும் இவ்வகையிலேயே பாடப்பட்டிருக்கின்றது.

ஆக, அகப்பாடல்கள் எனப்படுவன நிலம், நிலம் சார்ந்த மக்களின் வாழ்முறைகளை அடிப்படையாகக் கொண்டன எனவும், புறப்பாடல்கள் எனப்படுவன மக்களின் வாழ்க்கைத் தரத்தினை அடிப்படையாகக் கொண்டன எனவும் கொள்ளலாம். இவற்றில் நிலம், தட்பவெப்பம் மற்றும் அதுசார்ந்த விளைபொருள்கள் முதன்மைபடுத்தப்பட்டிருக்கவில்லை. இருப்பினும் உரிப்பொருளை மையமாகக் கொண்டு அகத்திணைக்குப் புறனாகப் புறத்திணைகள் கூறப்பட்டிருக்கின்றன.

*அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்*
*புறத்திணை இலக்கணந் திறப்படக் கிளப்பின்*
*வெட்சி தானே குறிஞ்சியது புறனே* *(தொல்.பொருள்.புற.நூ.56)*

*வஞ்சி தானே முல்லையது புறனே* *(மேற்படி; 61)*

*உழிஞை தானே மருதத்துப் புறனே* *(மேற்படி; 64)*

*தும்பை தானே நெய்தலது புறனே* *(மேற்படி; 69)*

*வாகை தானே பாலையது புறனே* *(மேற்படி; 73)*

இவ்வரையறையின்படி புறத்திணைப் பாடல்களை மிகுதியாகக் கொண்ட பத்துப்பாட்டுள் அகத்திணை ஒழுக்கங்கள் பொருத்திப் பார்க்கப்படுகின்றன. இதை,

பத்துப்பாட்டுள் ஐந்தாவது (முல்லைப்பாட்டு) முல்லைநிலம்; ஆறாவது (மதுரைக்காஞ்சி) மருத நிலம்; ஏழு (நெடுநல்வாடை) பாலை ஒழுக்கம்; எட்டும் பத்தும் (குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம்) குறிஞ்சி நிலம்; ஒன்பது (பட்டினப்பாலை) நெய்தல் நிலமும் பாலை ஒழுக்கமும். எனவே பத்துப்பாட்டுள் ஐந்திணையும் அமைந்துள என்பார் ந. சஞ்சீவி (1973:xiii).

இதனை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்போது உரிப்பொருள் தவிர்த்த அகத்திணைக் கூறுகளிலிருந்து புறத்திணைக் கூறுகள் வேறுபட்டு இருப்பதை அறிய முடிகிறது.

## அகப்பாடல்களில் புழங்குபொருள்கள்

சங்க இலக்கிய அகப்பாடல்களை இரண்டு வகையாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை,

1. எட்டுத்தொகை தொகுப்பினுள் அமைந்த அகப்பாட்டுத் தொகுப்பு நூல்கள்

2. பத்துப்பாட்டுத் தொகுப்பினுள் அமைந்த அகப்பாட்டு நூல்கள்

என்பனவாகும். இதில் எட்டுத்தொகையில் அமைந்திருக்கும் அகநூல்கள் அனைத்திலும் உள்ள பாடல்கள் குறைந்த அடி எல்லைகளைக் கொண்டதாக இருக்கின்றன. அப்பாடல்களின் அமைப்பு என்பது எந்த ஒரு விரிவான விவரணைகளையும் உள்ளடக்கியதாக இருப்பதற்கான வடிவத்தினைப் பெற்றிருக்கவில்லை. மேலும் எந்த ஒரு சமூகச் சூழலுக்கான பின்னணியைக் குறிப்பிட்டுச் சொல்வதற்கும் ஏதுவானதாக இல்லை. இவ்வித அமைப்புடைய பாடல்கள் பாடுவதற்கான நோக்கமும் பாடுபொருளும் ஒரு குறுகிய வட்டத்திற்குள் அமைந்திருப்பதனால் இதனுள் மக்களின் வாழ்முறை குறித்த புறச் செயல்பாட்டுப் பதிவுகள் மிகவும் குறைந்த அளவினதாகவே இருக்கின்றது. மாறாக இதில் மனித அகஉணர்வு வெளிப்பாடாகிய உரிப்பொருள்கள் மிகவும் கவனத்தில் கொண்டு பாடப்பட்டிருக்கின்றன. ஆனால் அதற்குப் பின்னணியாக விளங்குகின்ற நிலம், கருப்பொருள்கள் குறித்த பதிவுகள் விரிவானதாக இல்லை. ஆதலால் பண், யாழ், தொழில், தொழில் செய்வதற்கான அடிப்படைக் கருவிகள், புழங்குபொருள்கள் முதலான கருப்பொருள்களின் உருவாக்கம் அதை உருவாக்குபவர்கள், அதற்கான பயன்பாடு என்பது குறித்த விரிவான, வெளிப்படையான பதிவுகள் குறைவாகவே இருக்கின்றன. இவையனைத்தும் உரிப்பொருள் விளக்கத்திற்கு வேண்டி உள்ளுறையாகக் கூறப்பட்டிருப்பதால் இதனைக் கொண்டுகூட்டியே இது குறித்த அக்காலச் சமூகச் சூழலை அறிந்துகொள்ள வேண்டியிருக்கின்றது. இதற்குச் சான்றாக எட்டுத்தொகை அகப்பாடல்கள் அமைந்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக ஒரு குறுந்தொகை பாடல் (29). அப்பாடலில், சுடப்படாத மட்கலம் தண்ணீர் பட்டவுடன் உருகி வழிதலைப் போல இரவுக்குறி மறுக்கப்பட்டதால் வராமல் போன தலைவனை நினைத்தவுடன் தலைவி மனம் உருகி வாடுகின்றாள் என்பதைக் குறிக்கும் விதமாக,

*நல்லுரை இகந்து புல்லுரை தாஅய்ப்*
*பெயல் நீர்க்கேற்ற பசுங்கலம் போல*
*உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி*
*அரிதவா உற்றனை நெஞ்சே* *(குறுந். 29:1-4)*

என்ற பாடல் அடிகள் அமைந்திருக்கின்றன. இப்பாடல் கூடலில் ஈடுபட்ட தலைவியின் பக்குவப்படாத உள்ளம், ஆற்றாமையால் அதை நினைத்தவுடன் நெகிழ்ந்து தன்னிலைத் தவறுகின்றது என்ற மனித உணர்வு வெளிப்பாட்டைச் சுட்டுப் பக்குவப்படுத்தப்படாத கலத்தினில் நீரை நிரப்பினால் அது தன்னிலை இழக்கும் என்ற பொருள்தன்மையுடன் ஒப்பிட்டுக் கூறுகின்றது. இங்கு நெகிழ்ச்சியான மனஉணர்வு முன்னிலைப்படுத்தப்படுகின்றது. ஆனால் பொருளின் தன்மை குறித்த பதிவேதும் இல்லை. இதன் மூலம் சமூகம் இவ்வித மனஉணர்வுக்குப் பெருமதிப்புத்தரும் நிலைப்பாட்டினைக் கொண்டிருந்திருக்கிறது என்பதையும் அதைப் பதிவு செய்தலே 'அறிவு' என்றெண்ணும் நிலை இருந்திருப்பதையும் உணரமுடிகின்றது. இதில் மனித ஒழுக்க உணர்வினை அறிதல் என்பதை அறிவாக முதன்மைப்படுத்தியிருக்கும் அளவிற்குப் பொருளறிவு குறிக்கப்பட்டிருக்கவில்லை. உள்ளம், பொருள் இரண்டின் பக்குவப்பாடு குறித்த அறிவென்பது சமகாலத்தில் இருந்திருப்பினும் பொருள் சார்ந்த அறிவு பெருமதிப்புப் பெறாததாகவே இருந்திருக்கின்றது என்பதை இப்பாடலின்வழி அறிய முடிகின்றது. இதைப்போலவே வலுவான களவில் ஈடுபட்டிருந்த தலைவன் வரைவு செய்தல் வேண்டித் திடீரெனப் பொருளுக்காகப் பிரிந்து சென்றமையால் ஆற்றாளாகிய தலைவியின் மன உணர்வென்பது மண்ணாற் செய்து சுடப்பட்ட திடமான தயிர்த்தாழியில் மத்தாற் கலக்கிய காலத்து வெண்ணெய் வெப்பத்தாற் கைகூடாது சிதறியது போன்ற தன்மையை ஒத்தது (நற். 84) என்ற நற்றிணைப் பாடலாலும் அறியமுடிகின்றது. உடன்போக்கில் ஈடுபட்ட தலைவி வளமையான வாழ்முறையை உடைய வீட்டிற்கு உரியவள் என்ற கருத்தைப் புலப்படுத்த வேண்டி அவளின் வீடு பாடுபொருளாக்கப்பட்டிருக்கின்றது. அவ்வீட்டில் பயன்படுத்தப்படுகின்ற தாழியும் வளமையின் அடையாளமாகக் குறிக்கப்படுகின்றது. இதை,

*ஓங்கு நிலைத்தாழி மல்க சார்த்திக்*
*குடையடை நீரின் மடையினள் எடுத்த*
*பந்தர் வயலைப் பந்தெறிந் தாடி*
*இளமைத் தகைமைய வளமனைக் கிழத்தி* *(அகம். 275: 1-4)*

என்ற பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் 'ஆலம்பழத்தை'ப் பாட விழையும் ஓதலாந்தையார் அதற்கு உவமையாக மண்ணாற் செய்து சுட்டு திடப்படுத்தப்பட்ட செவ்விய நிறத்தினையுடைய மண்கலத்தினைக் குறிப்பிடுகின்றார் (ஐங். 303). ஆனால் அவ்வித அழகுடைய மட்கல உற்பத்தியறிவு குறித்துப் பதிவு செய்யப்பட்டிருக்கவில்லை. இவையனைத்தும் பொருள்சார் மரபு குறித்த எட்டுத்தொகை அகப்பாடல்களின் நிலைப்பாடு.

பத்துபாட்டுத் தொகுப்பிலுள்ள அகப்பாட்டு நூல்கள் அனைத்தும் நெடும்பாடலாக அமைந்தவை. அவை ஒவ்வொன்றும் தனித்த ஒரு புலவரால் பாடப்பட்டது (குறிஞ்சிப்பாட்டு - கபிலர், முல்லைப்பாட்டு - நப்பூதனார், பட்டிப்பாலை - கடியலூரர் உருத்திரங்கண்ணனார்). ஆதலால் அவையனைத்தும் ஒழுக்கத்திற்கான சமூகச் சூழலை அப்படியே படம்பிடித்துக் காட்டுவதுபோல் அமைந்திருக்கின்றன. இதில் முதலாவதாக முல்லைப்பாட்டு. இப்பாடல் 'இருத்தல்' ஒழுக்கத்தைச் சிறப்பித்துப் பாடுவதாய் அமைந்திருக்கின்றது. இருத்தல் என்பது ஆற்றாமை. இவ்வொழுக்கத்திற்குரியவள் தலைவி; ஆதலால் தலைவி இருக்கும் இடம் குறித்த வருணனை இப்பாடலில் மிகுதியான இடத்தைப் பெறுகின்றது. இருப்பிடம், அதுசார்ந்த சூழல், அச்சூழலிலான மனித செயல்பாடுகள் உள்ளிட்ட செய்திகள் மிகுதியாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இதைப் போலவே பட்டினப்பாலைப் பாடலும் பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறும் பாலைத் திணையாதலால் இப்பெயர் பெற்றது. இதில் சோறுடைத்த சோழநாடும், நெய்தல் நில மக்களின் இருப்பிடம், பயன்பாட்டுப் பொருள்கள், சடங்கு முதலான வாழ்க்கை முறைகளும் சிறப்புறச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. 'நாட்டின் வளமை குறித்துப் பாடும்போது அந்நாட்டு மக்களின் வீட்டின் முன்பு தானியங்கள் நிறைந்த நெடிய குதிர்கள் இருந்தன. அவ்வாறு எருமைக்கன்று படுத்துறங்கும் அளவிற்கு நிழலினைத் தரக்கூடிய நெடிதென உயர்ந்த, பருத்தக் குதிர்களைக் கொண்ட குடியினர் வாழும் பகுதி' (*பட். 14-16*) என்றுரைப்பதன் வாயிலாக மண்ணாலான மிகப்பெரிய குதிர்கள் புழக்கத்திலிருந்தன என்பதை அறியமுடிகின்றது. மேலும் பொருள்வயிற் பிரிதல் என்னும் அக ஒழுக்கத்தை முதன்மைப்படுத்திப் பாடிய இப்பாடல் பிரிய நேரிடும் நிலத்திற்கான சூழலையும் ஒருங்கே சித்திரிக்கும் விதமாக அமைந்திருக்கின்றது.

இவ்வித அழகியலை முதலாகக் கொண்ட அக இலக்கிய உணர்வுசார்ந்த அறிவு என்பது ஒருவித துய்ப்பு மனநிலைக்கானது. ஆனால் பயன்பாட்டுப் பொருள்சார்ந்த அறிவென்பது உடலுழைப்பை எளிமையாக்கி அவ்வித மனநிலைக்கு வேண்டிய ஓய்வினைத் தருவதற்கான அடிப்படை. ஆக, இலக்கியம் என்பது ஒருவித துய்ப்பிற்காகப் படைக்கப்பட்டது என்பதால் அதில் பயன்பாட்டுப் பொருள்கள், அதன் பயன்பாடு, அதை உற்பத்தி செய்தவர்கள், அவர்களுக்கான சமூக நிலைப்பாடு, அவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களினால் ஏற்பட்ட சீரான வாழ்க்கைமுறை முதலானவைகள் குறித்த பதிவுகள் உள்ளுறையாகவே காணக்கிடக்கின்றன.

## புறப்பாடல்களில் புழங்குபொருள்கள்

புறப்பாடல்களில் முதன்மையாகச் சுட்டப்பெறுவது புறநானூறு. இத்தொகை நூலில் "புறம் என்ற சொல் போர் என்ற பொருளில் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. போரும், போரினால் ஏற்படும் விளைவுகளும், போர் செய்தலின் புகழும், போரில் பின்னிற்றலின் இகழ்ச்சியும், போரிட்டு வெற்றிபெற்ற மன்னரின் கொடையும் புகழும் ஆகிய விடயங்கள் இந்நூலில் போற்றப்பட்டுள்ளன" (*அம்மன்கிளி முருகதாஸ்; 2006:31*).

ஆக, மேம்போக்கான பார்வையில் புறநானூற்றின் பாடுபொருளாக இருப்பது வீரமும் கொடையும். இதுவே தமிழர்களின் தொல்மரபிற்குரியது எனக் கருதப்படுவதைப் "புறநானூற்றுத் தமிழன்" என்ற சொற்றொடர் உணர்த்துகிறது. இது தவிர்த்து,

> புறம் என்பதை குடிவாழ்க்கை என்றும் அந்த குடிநிலை வாழ்க்கையில் உள்ள ஊடாட்டங்கள் என்றும் மாத்திரமல்லாமல் பிற குடிகளுடன் அல்லது பிற குடிமக்களுடன் கொள்கின்ற தொடர்புகள் என்ற வரிசையில் பொருள் கொள்ளலாம் (கார்த்திகேசு சிவத்தம்பி; *2009:69*).

அந்த வகையில் புறப்பாடல் என்ற பகுப்பில் எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்து, புறநானூறு என்ற இரண்டு நூல்களும் பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை) என்ற ஐந்து ஆற்றுப்படை நூல்களும், மதுரைக்காஞ்சியோடு புற ஒழுக்கம் பற்றி ஆறு நூல்கள் உள்ளன. இதில் பதிற்றுப்பத்து பத்து சேர அரசர்களின் கொடை, வீரம், நாட்டுவளம் குறித்த செய்தியினைக் கொண்டிருக்கின்றது. நாட்டுவளம் குறித்த சித்திரிப்பில் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த செய்திகள் இடம்பெற்றிருக்கின்றன (பதிற். *42: 10-12, 43: 33-36, 44: 22-26*).

எட்டுத்தொகையில் இருக்கும் மற்றொரு புறப்பாடல் புறநானூறு. இது பல புலவர்களால் பல்வேறுபட்ட சூழலில் பாடப்பட்டது என்பதால் அதிகப்படியான சமூக வரலாற்றுத் தரவுகளைத் தன்னகத்தே கொண்டிருக்கின்றன. வேடன் - வேந்தன் என்ற ஏறுவரிசையில் அமைந்திருந்த அன்றைய தமிழ்ச் சமூக அமைப்பினை இதன்வழி அறியமுடிகின்றது (புறம். *181*). மேலும் சமூக அமைப்பில் தொழிலடிப்படையில் அமைந்திருக்கும் குடிகள் குறித்த செய்திகளையும் (புறம். *335*) அவர்கள் சமூகத்திற்கு ஊழியம் செய்தது குறித்த செய்திகளையும் (புறம். *228*) கொண்டிருக்கின்றன. அதிலும் குறிப்பாகச் சமூக அசைவியக்கத்திற்கான பயன்பாட்டுப் பொருள்களைச் செய்தளித்த குடிகள் குறித்த பதிவுகளின் வழி மண்சார்ந்த புழங்குபொருள்களை உற்பத்தி செய்தளித்த 'குயவர் குடியினரை' வேட்கோவர்கள் என்று அழைக்கும் மரபு இருந்திருப்பதை இதன்வழி அறியமுடிகின்றது (புறம். *256*).

மேலும், இனக்குழுச் சமூக அமைப்பிலிருக்கும் மண்சார்ந்த பயன்பாட்டுப் பொருள்களான வட்டில், குழிசி (புறம். *168-9, 237-12, 257-4, 371-3*), சாடி (புறம். *258, 297, 319*), மண்டை (புறம். *103, 386*) முதலானவையும், வளர்ந்த அரசுருவாக்கத்தினை மையமிட்ட சமூகத்தில் தனிச்சிறப்புடன் பயன்படுத்தப்பட்ட ஈமத்தாழி (புறம். *228, 238, 256*), தசும்பு (புறம். *33, 224, 299, 377*) முதலான புழங்குபொருள்களையும் அதன் பயன்பாட்டினையும் பற்றிய தரவுகளைக் கொண்டதாகப் புறநானூற்றுப் பாடல்கள் திகழ்கின்றன.

பத்துப்பாட்டினுள் உள்ள புறநூல்களில் ஆற்றுப்படை நூல்கள் அனைத்தும் குறிப்பிட்ட ஒரு மன்னனின் கொடைநலம் குறித்தும் அவனின் நாட்டுவளம் குறித்தும் பாடப்பட்டவையாகும். இவற்றைப் பாடிய புலவர்கள் அனைவரும் இரந்துபட்டவர்களாதலால் அவர்களின் வறுமையான குடும்பச் சூழலையும் இப்பாடல்களில் பதிவு செய்திருக்கின்றனர். வீடு, குடும்பம், தேவை, அதற்கான நிவர்த்தி என்ற நிலையினைப் பாடும்போது அவர்களுக்கான பயன்பாட்டுப் பொருள்களைப் பற்றிய பதிவென்பது வெகு இயல்பாகவே பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இது தவிர்த்து மக்கள், அவர்களுக்கான தேவை, அதை நிவர்த்திக்கும் குடிகள், அவர்களின் பொருள்சார் உற்பத்தி, அதன் பயன்பாடு என்ற இயல்பான சமூகச் சூழல் குறித்த பதிவினை விஞ்சியதாக மன்னனின் கொடைத்தன்மை குறித்த புகழ்மொழி பேசப்பட்டிருக்கின்றது. அவனின் நாட்டுவளம் குறித்துப் பாடப்பட்டிருத்தலில் வளமையின் குறியீடாகக் குதிர் *(பெரும். 185)*, கூடு *(பெரும். 245)*, சுட்ட செங்கல்லாலான வீடு *(பெரும். 405)* முதலான மண்சார்ந்த பயன்பாட்டுப் பொருள்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மற்றுமொரு புறப்பாட்டாகிய மதுரைக்காஞ்சியில் வளமையான மதுரை மாநகரின் வருணனை குறித்தும், நிலையாமை குறித்தும் பாடப்பட்டிருக்கின்றது. அதில் வளமையின் குறியீடாக மாளிகையில் உள்ள குதிர்கள் குறிப்பிடப்படுகின்றன *(மதுரை. 167)*. ஆக, மிகுதியான மண்சார்ந்த புழங்குபொருள்கள் குறித்த பதிவும் அதை உற்பத்தி செய்த குடிகள் குறித்தப் பதிவும் எல்லா புறப்பாடல்களையும்விட எட்டுத்தொகைப் புறப்பாடலான புறநானூற்றிலேயே மிகுதியாக உள்ளன.

இவற்றினைத் தொடர்ந்து அகம், புறம் என்ற பாகுபாட்டினுள் அவற்றிற்கானச் சூழலை மையமிட்டு திணை, துறை முதலானவை வகுக்கப்பட்டுள்ளன.

## திணை

'திணை' என்ற சொல்லாட்சியை தமிழில் உள்ள பழம்பெரும் இலக்கண நூலான தொல்காப்பியத்திலிருந்து அறியமுடிகின்றது. திணை என்ற சொல் நிலம், அந்நில மக்களின் ஒழுக்கம் என்ற இருவகைப்பட்ட பொருள்களைத் தருகின்றது. இவ்விரண்டில் 'ஒழுக்கமே' முதன்மையானதாகவும் முக்கியமானதாகவும் கருதப்படுகின்றது. இதை,

> திணை என்பது அடிப்படையில் நிலம், நிலத்துள் வாழும் மக்கள் குழுமம், அவர்களது ஒழுக்கம் என்ற கருத்தினையே தரும். திணையென்பது பொதுப்படையாக ஒழுகலாற்றைக் குறிக்கின்ற ஒரு சொல்லாக இருக்கின்றது *(2009:45)*

என்ற கார்த்திகேசு சிவத்தம்பி அவர்களின் கூற்றோடு ஒப்புநோக்கத்தக்கதாய் இருக்கின்றது.

ஆனால் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்றினால் கட்டப்பட்டது திணை என்பர் இலக்கண நூலார். இதில் முதற்பொருள்

எனப்படுவது நிலம். கருப்பொருள் எனப்படுவது நிலத்தின் விளைபொருள். அதாவது முதற்பொருளிலிருந்து விளையும் பொருள். உரிப்பொருள் எனப்படுவது ஒழுக்கம். அதாவது முதற்பொருள், கருப்பொருள் என்ற இவ்விரண்டிலிருந்து விளைவது உரிப்பொருள். எனவேதான் சங்க இலக்கியத் திணைப்பகுப்பில் முதற்பொருளையும் கருப்பொருளையும் அசைவியக்கம் கொள்ளச் செய்யும் உரிப்பொருள் உயிர்ப்பொருளாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆக இவை அனைத்திற்கும் அடிப்படையாயிருப்பது நிலம். எனவேதான்,

> ஒவ்வொரு நிலப்பகுதியும் ஒரு குறிப்பிட்ட ஒழுக்கமுறையுடன் தொடர்புபடுத்தப்படுகின்றது. இந்தக் கருத்தினைக் கூறும் குறியீடாகத் திணை என்ற சொல் செயல்படுகின்றது. தொல்காப்பியர் இச்சொல் குறித்த வரையறை எதுவும் செய்யவில்லை. மிக முந்தைய உரையாசிரியரான இளம்பூரணர் இந்தச் சொல்லுக்குப் பொதுக்கருத்து அல்லது உள்ளடக்கம் என்று விளக்கம் கூற முற்படுகின்றார். மற்றொரு உரையாசிரியரான நச்சினார்க்கினியர் திணை என்னும் சொல்லை ஒழுக்கம் அல்லது நடத்தை என்று வகைப்படுத்திக் கூறுகின்றார் (2010:4)

என்பார் கார்த்திகேசு சிவத்தம்பி. இவ்வாறான திணையைத் தொல்காப்பியர்,

> *கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
> *முற்படக் கிளந்த எழுதிணை என்ப* (தொல்.பொருள்.அக.நூ.1)

என ஏழாகப் பகுப்பார். இதில் கைக்கிளை, பெருந்திணை ஆகிய இவ்விரண்டும் பொருந்தாத்திணை எனக்கொண்டு ஒழுக்கநெறியினைச் சீர்படுத்தித் திணையை ஐந்தெனக் கொள்வர். இதையே நடுவண் ஐந்திணை (தொல். பொருள். நூ.2) என்பர். இந்த ஐந்திணைக்கான பெயர்ச்சொல் நிலம் சார்ந்ததாகவும் நிலத்தின் விளைபொருளான 'பூ' உள்ளிட்ட கருப்பொருள்கள் சார்ந்ததாகவும் குறிக்கப்பெறுகின்றது. அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். இவை அக ஒழுக்க முறையாலான உரிப்பொருளைக் கொண்டு பிரிக்கப்பட்டாலும் அதற்கான முதற்பொருளாகிய நிலமும், நிலம்சார் விளைபொருளான கருப்பொருளுமே இவற்றிற்கான அடிப்படை. அதாவது, கரு - கருப்பம்; முதற்பொருளின் கருப்பத்திலிருந்து தோன்றும் பொருள்கள் கருப்பொருள்கள். கருப்பொருள்கள் என்பவை உணர்வுகளை உண்டாக்குவதற்கான பொருள்கள்/கூறுகள் என்பதாகக் கொள்ளமுடியும். தவிர்த்து கருப்பொருள்கள் பெரும்பாலும் மனித உணர்வுகளால் உருவாக்கப்பட்டவை என்பது இங்கு உற்றுநோக்கத்தக்கது.

> இலக்கியம் படைத்தலுக்கும் திணைப் பகுப்பிற்கும் முதல், கருவைக் காட்டிலும் உணர்வுக் குழுமமாயிருக்கும் உரிப்பொருளே முதன்மையானது. இதுவன்றி எதுவொன்றும் படைக்க இடலாது (2009:கருத்துரை)

என்று ஆய்வாளர் கார்த்திகேசு சிவத்தம்பி எழுதிய 'சங்கஇலக்கியம் கவிதையும் கருத்தும்' என்ற நூலின் கருத்துரையில் ஆய்வாளர் ம. இராசேந்திரன்

குறிப்பிடுகின்றார். எனவே, உரிப்பொருளுக்கான சிறப்பெனப்படுவது உணர்வுக் குழுமமாயிருத்தல் எனக் கொள்ளலாம். இக்கருத்தினைக் கொண்டு நோக்கும்போது, முதற்பொருளை மூலப்பொருளாகக் கொண்டு மனித உணர்வால் விளைவிக்கப்படும் கருப்பொருள்கள் சிலவும் இவ்வகைத்தானதெனக் கொள்ளலாம். கருப்பொருள்களில் பெரும்பாலானவை இயற்கையின் நேரடி விளைபொருள்கள் என்றாலும் தொழில், குடி, பறை, பண், புழங்குபொருள் உள்ளிட்ட சில வகைமைகள் மனிதனின் உடலுணர்வு சார்ந்த ஊடாட்டத்தால் உருவாக்கப்பட்டனவாகவே இருக்கின்றன. இவ்வாறான கருப்பொருளை உருவாக்கும் உணர்வும் அறிவும் பெருமதிப்புப் பெறாதவைகளாக இருந்திருப்பதால் அவை திணைப் பகுப்பில் முதன்மைப்படுத்தப் பெற்றிருக்கவில்லை. ஆனால் முதன்மைப்படுத்த வேண்டிய தேவை இருக்கின்றது.

சங்க இலக்கியப் பாடல்களைக் கற்பனை கலந்த பொழுதுபோக்கிற்கான ஒன்றாக அல்லது மகிழ்வில் திளைத்த மேல்மட்ட வர்க்கத்தினருக்கானதாகக் கருதுவதானால், உரிப்பொருள் உருவாக்கமும் அதன்வழியான திணைப்பகுப்பும் பொருத்தப்பாடு உடையதெனலாம். மண், மரபுசார்ந்த சமூக ஆய்வில் ஈடுபடும்போது கருப்பொருள்களையும் கணக்கில் கொள்ளவேண்டிய அவசியம் இருக்கின்றது. அவ்வாறு கருப்பொருளையும் முதன்மைத் தரவாகக் கொண்டு சங்க இலக்கியப் பாடல்களைத் திணைப்பகுப்புச் செய்து ஆராய்ந்தால் அவ்வக்கால மக்களின் வாழ்க்கைமுறையை எளிதில் இனங்காண இயலும்.

### *முதற்பொருள்*

மனித வாழ்வியலுக்கு முதன்மையானதாகக் கருதப்படுவதை முதற்பொருள் என வகைப்படுத்துவர் இலக்கண நூலார். இதை,

*முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்*
*இயல்பென மொழிப வியல்புணர்ந் தோரே (தொல்.பொருள்.அக.நூ.14)*

என்பார் தொல்காப்பியர். அதாவது, எந்த ஒரு செயலையும் செய்வதற்கு நிலமும் பொழுதும் இன்றியமையாதது. ஆகையால் இவை முதற்பொருளாகக் கொள்ளப்பட்டன. அதிலும் நிலம் என்பது மனிதப் பயன்பாட்டில் எல்லாவிதமான விளைபொருளுக்கும் முதன்மை மூலமாய்த் திகழ்வது. மனிதன் நிலம், நிலத்தின் விளைபொருள் கொண்டே தனது வாழ்வாதாரத்தை நிவர்த்திச் செய்து கொண்டிருக்கிறான். இது நிலத்தைத் தனக்கானதாகவும் நிலத்திற்கேற்றவாறு தானும் மாறி மாறி வயப்படும் ஓர் உன்னத நிலை. அவ்வாறு மனிதன் நிலத்தினைத் தன்வயப்படுத்த செய்த முயற்சியின் பலனாக இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்கள் உள்ளிட்ட அனைத்து விதமான கருப்பொருள்களும் உருவாகியிருக்கக்கூடும். இவை அனைத்தும் மனித அறிவால் உருவாக்கப்பட்ட நிலத்தின் பிரதிமாதிரிகள். எனவேதான் நிலம் திணைக்கோட்பாட்டின் முதற்பொருளாகக் கொள்ளப்படுகின்றது. இதுவே திணைக்கோட்பாட்டின் அடிப்படை.

### *நிலத்திரிபு*

தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள ஐவகை நிலங்கள் குறித்த செய்திகள் நாம் அறிந்ததே. அதன் தொடர்ச்சியாக, ஒரு திணைநிலம் இயற்கை சீற்றத்தால் தன்னியல்பு இழக்கும் நிலையை 'நிலத்திரிபு' என்பர். அவ்வாறு ஒரு திணை நிலம் தனக்கான தன்னியல்பினை இழக்கும்போது, அந்நிலத்திற்கான சூழல், விளைபொருள் முதலானவைகள் மாற்றமுறுகின்றன. இலக்கண நூலாரின் பகுப்புப்படி முதற்பொருளும் கருப்பொருளும் மாற்றமுறுகின்றன. ஆகையால் அவ்விடத்தில் தனித்த ஒரு உரிப்பொருள் உருவாகின்றது. இதில் முதற்பொருளான நிலமும் பொழுதும் இயற்கை என்பதால் சீற்றத்தால் மாற்றமுறும் தன்மை உடையதாயிருக்கிறது. ஆனால் கருப்பொருள் முழுவதும் நேரடி இயற்கைப் பொருள்கள் அல்ல. அது அந்நில மக்களையும் அவர்களின் செயல்பாடுகளையும் உள்ளடக்கியது. ஆதலால் மக்கள், தொழில், பறை, பண் முதலானவை தவிர்த்து பிற கருப்பொருள்களாகக் கருதப்படும் நிலத்தின் நேரடி விளைபொருள்களே திரிபிற்கு உள்ளாகின்றன. இவ்வாறான சில கருப்பொருள்கள் மாற்றமுறாத பட்சத்தில் திரிபடைந்த நிலப்பகுதி தனக்கான இயல்புத் தன்மையிலிருந்து முற்றிலும் மாறுபடுவதில்லை. சிற்சில நிலக் கூறுகள் மட்டுமே மாற்றமடைந்து மற்றொரு திணை நிலத்திற்கான உரிப்பொருளைப் பெறுகிறது. அந்நிலத்திற்கான ஒட்டுமொத்தமான கருப்பொருளும் மாற்றமுறாதன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. எனவே கருப்பொருளை ஒரு நிலத்திற்கான நிலையான தன்மையாகக் கொள்ளலாம். அவ்வாறு மாற்றமடையாத புழங்குபொருள் மூலம் அந்நிலத்திற்குரிய மிகச் சரியான அடையாளத்தை மீட்டெடுக்க இயலும்.

### *உரிப்பொருள்*

உரிப்பொருள் என்பது முதற்பொருள், கருப்பொருள் என்ற இரண்டிலிருந்து விளையும் மனித உணர்வின் தொகுப்பு. ஆதலால் உரிப்பொருளை இனங்காண்பதற்கு முதற்பொருளான நிலமும் அதிலிருந்து விளையும் விளைபொருளான கருப்பொருளும் பின்னணியாய் செயல்படுகின்றன. சங்ககாலப் புலவர்கள் "இந்த உரிப்பொருளை நேரடியாகச் சொல்லமுடியாதவிடத்து கருப்பொருளின்மேல் ஏற்றிச்சொல்லுதலும் கருப்பொருளின் பின்புலத்தில் உரிப்பொருளைச் சிறப்பித்துப் பாடுதலும் வழக்கமாக இருந்தது. உரிப்பொருளை நேரடியாக சொல்லமுடியாத இடத்து கருப்பொருளின் மேல் ஏற்றிச் சொல்லும் மரபு உள்ளுறை, இறைச்சி என்ற வகைக்குள் அடக்கப்பட்டது" *(அம்மன்கிளி முருகதாஸ்; **2006:61**).*

இம்முறையில் பாடப்படும் பாடல்கள் ஐந்து திணைநிலங்களின் அடிப்படையில்,

*புணர்தல் பிரிதல் இருத்த லிரங்கல்*
*ஊடல் இவற்றி னிமித்த மென்றிவை*
*தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே (தொல்.பொருள்.அக.நூ.14)*

என்று தொல்காப்பியர் பகுத்துக் கூறுவர்.

***கருப்பொருள்***

*தெய்வ முணாவே மாமரம் புட்பறை*
*செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ*
*அவ்வகை பிறவும் கருவென மொழிப* *(தொல்.பொருள்.அக.நூ.18)*

எனக் கருப்பொருள்களைத் தொல்காப்பியர் வரையறுத்துக் கூறுவர். இவ்வகையான கருப்பொருள்களை இரண்டு வகையாகப் பகுத்துப் பார்க்க இயலும். அவை,

1. இயற்கை விளைபொருள்கள் (பறவை, விலங்கு, மரம், நீர் முதலானவை).
2. நிலத்துடன் மனிதன் கொண்ட ஊடாட்டத்தால் உருவாக்கப்பட்ட பொருள்கள் (உணவு, தொழில், யாழ், பறை முதலானவை).

இதில் முதலாவதாகக் கூறப்பட்ட கருப்பொருள்கள் அனைத்தும் அந்நிலத்தின் இயல்பான தன்மையில் உருவானவை. முல்லை நிலத்திற்கான விலங்கு - முயல்; மரம் - கொன்றை, குருத்தம்; பறவை - கானக்கோழி; பூ - முல்லை; நீர் - ஆறு; குறிஞ்சி நிலத்திற்கான விலங்கு - புலி, யானை, கரடி; மரம் - அகில், தேக்கு, வேங்கை; பறவை - கிளி, மயில்; பூ - காந்தள், கானக்குவளை; நீர் - அருவி, சுனை; மருத நிலத்திற்கான விலங்கு - எருமை, நீர்நாய்; மரம் - காஞ்சி, மருதம்; பறவை - நீர்க்கோழி; பூ - தாமரை; நீர் - ஆறு, கிணறு; நெய்தல் நிலத்திற்கான விலங்கு - உமண், பகடு; மரம் - புன்னை; பறவை - அன்னம், அன்றில்; பூ - நெய்தல்; நீர் - மணற்கிணறு, உவர்குழி என்பனவாகும். இவையனைத்தும் அவையிருக்கும் அந்தந்த நிலத்திற்கான தனித்தன்மையாக விளங்குகின்றன. ஆயினும் 'எழுதிணை நிகழ்ச்சியவாகிய நால்வகை நிலத்துப் பயின்ற பூவும், புள்ளும் தத்தமக்கு உரியவாகக் கூறிய நிலத்தோடும் காலத்தோடும் நடவாமற் பிற நிலத்தோடும் காலத்தோடும் நடப்பினும் அவை வந்த நிலத்திற்குக் கருப்பொருளாகக் கொள்ளப்படும்' (தொல்.பொருள்.அக.நூ.19) என்பார் தொல்காப்பியர்.

அவ்வாறு பூவும் புள்ளும் எந்த நில உரிப்பொருளில் பாடப்படுகின்றதோ அந்த நிலத்திற்குரியதாகவே கருதப்படும். இதில் பறவை வசிப்பதற்கான தகவமைப்பினைப் பிற நிலங்களும் கொண்டிருக்கின்றன என்பது புலப்படுகின்றது. எனவே இவ்வாறான கருப்பொருள்களை எக்காலத்தும் தனியொரு நிலத்திற்கான தனித்தன்மையைச் சுட்டும் உறுதிப் பொருளாகக் கொள்வதில் சிக்கல் ஏற்படுகின்றது.

ஆனால் இரண்டாவதாகக் கூறப்பட்ட உணவு, தொழில், யாழ், பறை, பண் முதலான கருப்பொருள்கள் நிலத்தோடு மனிதன் கொண்ட உறவினால் உருவானவையாகும். முல்லை நிலத்திற்கான தொழில் நிரை மேய்த்தல். இந்நில மக்கள் இத்தொழிலைச் செய்ததால் ஆயர், வேட்டுவர் எனப்பட்டனர். குறிஞ்சி நிலத்திற்கான தொழில் தேன் அழித்தலும் கிழங்கு அகழ்தலும். இந்நில மக்கள் இத்தொழிலைச் செய்ததால் குறவர் எனப்பட்டனர். அதேபோல் மருத

நிலத்திற்கான தொழில் உழவு செய்தல். இந்நில மக்கள் இத்தொழிலைச் செய்ததால் உழவர் எனப்பட்டனர். நெய்தல் நிலத்திற்கான தொழில் மீன் பிடித்தல், உப்பு விற்றல். இத்தொழிலைச் செய்த இம்மக்கள் நுளையர் எனப்பட்டனர்.

இயற்கை மாற்றத்தால் நிலம் மாற்றமடைந்தாலும் அந்நிலத் தன்மைகளோடு பழக்கப்பட்டுப்போன மக்கள் வெகுவாக மாற்றமடைவதில்லை. சிலபோது உழல்வுக்கு ஆட்பட்டாலும்கூட வேறொரு திணைக்கான தகவமைப்பிலிருந்து அவர்கள் முற்றிலும் மாறாத நிலையைச் சங்கப் பாடல்களின் வழி அறிய முடிகின்றது. சான்றாக மக்கள், மக்களுக்கான தொழில் என்ற இரண்டையும் கொள்ளலாம். ஒரு நிலத்தில் வாழும் மக்கள் அந்நிலவளத்தை மையமிட்டு வாழ முற்படுகின்றனர். அப்போது தங்களுக்கான தேவைகளை அந்நில மூலப்பொருள்களைக் கொண்டு நிவர்த்திச் செய்துகொள்ள முனைகின்றனர். அதுவே அவர்களின் தொழிலாக உருப்பெறுகின்றது. இவ்வாறு ஒருவிதமான பழக்கத்திற்கு உட்பட்ட மக்கள் வேறுநிலத்திற்கான வாழ்வியற் கூறுகளை எளிதில் உள்வாங்கி மாறிவிடுவதில்லை. நிலம் மாறி வசிக்குங் காலத்திலும் தங்களுக்கான தேவையை நிவர்த்திச் செய்துகொள்ளும் பொருட்டு தாங்கள் பழகிய நிலத்திற்குச் சென்று தொடர்பு வைத்துக்கொள்வது இயல்பு. ஆக மனிதரால் உருவாக்கப்படும் தேவை சார்ந்த நிவர்த்திப் பொருள்களும் அதற்கான தொழிலும் நிலத்தோடு நெருங்கிய தொடர்புடையதாக இருக்கின்றது. ஆதலால் அவை வெகுவாக எவ்வித மாற்றத்தையும் உள்வாங்குவதில்லை. ஆனால் முதலாவதாகப் பகுத்துக் கூறப்பட்ட கருப்பொருள்கள் அவ்வாறான மாறுதலை எளிதில் உள்வாங்கிக் கொள்கின்றன. ஆகவே இதனை அடிப்படையாகக் கொண்டு ஒட்டுமொத்த கருப்பொருள்களையும் இத்தன்மையிலானதாகக் கருதி, சங்கப் பாடல்களுக்கான திணை வகுக்கப்பட்டுள்ளது. எனவே கருப்பொருள்களைத் திணைக்கான அடையாளக் கூறாகக் கொள்வதில், உறுதி கொள்ளாமல் உரிப்பொருளை மட்டும் முன்னிறுத்திப் பார்க்கும் இத்தன்மையைச் சங்கஇலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது. சான்றாக,

*இலங்குமலை புதைவு வெண்மழை கவைஇக்*
*கலஞ்சுடு புகையிற் றோன்றும் நாட . . . . .* (அகம். 308)

என்று தலைவி கூற்றாக வரும் இவ்வகப்பாடலில் திணை ஒழுக்கத்தில் நின்ற தலைவி இரவுக்குறி வருவானைப் பகற்குறி வரும்படி கூறும்பொருட்டுத் தலைவனைப் பற்றியும் அவன் நிலம்பற்றியும் பாடல் முழுவதும் பேசுவதாக அமைந்துள்ளது. இப்பாடலின் உரிப்பொ ருள் மட்டும் குறிஞ்சிக்குரியதே தவிர மற்ற முதல், கருப்பொருள்கள் அனைத்தும் மருத நிலத்தைச் சார்ந்தன. இருப்பினும் இப்பாடலின் உரிப்பொருளை முதன்மையாக வைத்துப் பகுக்கப்பட்டதில் இது குறிஞ்சித் திணையானது.

அதேபோல் பட்டினப்பாலையில்,

*முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்*
*வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய*
*வாரேன் வாழிய நெஞ்சே* (பட்.219)

என்ற அடிகள் பிரிதலை உணர்த்தும் பாலைத்திணையின் உரிப்பொருளைக் குறிப்பிடுகின்றன. இது தவிர்த்து, பட்டினப்பாலை முழுவதும் நெய்தல் நிலத்தைப் பாடியிருப்பினும் முற்குறித்த உரிப்பொருளை முதன்மைப்படுத்தி இந்நூலை பாலைத்திணை சார்ந்ததாகப் பகுத்திருப்பர். எனவே அகவாழ்க்கை முறையைக் கொண்டு திணைப்பகுப்பு செய்திருத்தலைப் போலவே புறவாழ்க்கை முறையை மையமிட்ட மனிதச் செயல்பாடுகளால் உருப்பெற்ற கருப்பொருள்களின்வழி திணைப்பாகுபாட்டை எளிதில் அடையாளங்காணுதல் இயலும். அதிலும் தேவை சார்ந்த வாழ்வியல் கூறுகளுள் ஒன்றான புழங்குபொருள்களை முதன்மைப்படுத்தல் சரியானதாயிருக்கும்.

## குடி

'குடி' என்ற சொல் நிலையாக வசிக்கத் தொடங்கிய மனித குழுமத்தைக் குறித்து நிற்கிறது. இதைப் பிங்கலநிகண்டு,

*ஊர்ப் பொதுப்பெயரும் புருவமும் அன்றிக்*
*குலமும் கோத்திரமும் குடிஎன் றாகும்* (நூ. 3383)

எனப் பதிவுசெய்கிறது. இதில் ஊர்ப் பொதுப்பெயர் என்பது வசிப்பிடம் சார்ந்த மக்கள் பெயராகும். ஆனால் குலமும் கோத்திரமும் வருணாசிரமத்தால் வந்தது. வருணாசிரமம் என்பது செய்தொழிலைக் கொண்டு குலம், கோத்திரம் எனப் பகுக்கும் வேதமுறை. ஆகத் தனியொரு தொழிலைச் செய்ய பணிக்கப்பட்ட எந்த ஒரு குழுவும் 'குடி' என்று குறிக்கப்பட்டிருக்கின்றது. எனவே செய்தொழிலை மையமிட்டே 'குடிகள்' தோற்றம் பெற்றிருக்க வேண்டும். இதற்கு,

*துடியன் பாணன் பறையன் கடம்பன்என்று*
*இந்நான் கல்லது குடியு மில்லை* (புறம். 335:7-8)

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன.

வாகைத்திணைக்குரியதாய் அமைந்திருக்கும் இப்புறப்பாடலின் வழி முல்லை நிலத்துச் சிற்றூரொன்றில் வாழும் மக்களுடைய வாழ்க்கைக் கூறுகளையும் அவர்களிடையே நிலவும் குடிவகைகளையும் குறிப்பிட்டுச் செல்கின்றார் மாங்குடிக்ிழார். குடிவகையில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் எனப் பொதுவகையில் சில குடிகள் இருப்பினும் இது தவிர்த்து ஒவ்வொரு திணை நிலத்திற்குள்ளும் அத்திணைநிலம் சார்ந்த சமூகம் இயக்கம் பெறுவதற்கும் அடிப்படையாய் பல குடிகள் இருந்திருக்கின்றன என்பதை இப்பாடல்வழி அறியமுடிகின்றது. மேலும், "மாங்குடிக்கிழார் தமது காலத்தின் வரம்பிற்குள் கட்டுப்பட்டவராகையால், தொன்மையாக வாழ்ந்துவந்த இதரநில மக்கள், உணவு, வாழ்க்கைப் பற்றிச் சொல்லமுடியவில்லை. மலைப்பகுதி குறவர்கள், கடற்பகுதிப்

பரதவர்கள், பாலைப்பகுதி எயினர்கள், வேடர்கள் ஆகியோர் தொடர்ந்து தங்களது தொல்குடி வாழ்க்கையைப் பேணி வந்தார்கள். தங்களது உணவைச் சேகரித்தோ, உற்பத்தி செய்தோ புராதனமான நாகரிகக் கலாச்சாரத்தில் இயங்கி வந்தார்கள். இவர்கள் மட்டுமின்றி குயவர், உமணர், கொல்லர், தச்சர், உழவர், மறவர், வேலன், அறிவர், அகவன் மகளிர், பாகர், கூத்தர், கோடியர், பொருநர், இடையர், கூளியர், மழவர், பார்ப்பனர், பகடு புறந்தருநர், வணிகர், ஆறலைக் கள்வர், வேளாளர், அந்தணர், பரத்தையர், கணியன், வேளாளப் பார்ப்பனர், ஊர்க்காவலர், புலையன், புலைத்தி, இழிசினர், இழிபிறப்பாளர், புலவர் என்று பல்வேறு தொழில்களைச் செய்து வாழ்ந்த குடிகள் பல சங்க காலத்தில் இயங்கின" (ராஜ் கௌதமன்; **2006:159**) என்பதை இதுபோன்ற பிற சங்க இலக்கியப் பாடல்களின்வழி அறியமுடிகின்றது.

சங்க இலக்கிய அகப்பாடல்கள் இனக்குழு, குலம், குடி உள்ளிட்ட மக்கள் பிரிவுகளைக் குறிப்பிடுகின்றன. பெருத்த உபரியைச் செல்வமாகக் கொண்டு வளர்ந்த அரசு உருவாக்கத்தினைப் பற்றிப் பாடப்பட்ட சங்க இலக்கியப் புறப்பாடல்கள் ஒருவித தொழில்சார்ந்த மக்கட் பிரிவுகளைக் குறிப்பிடுவனவாய் அமைந்திருக்கின்றன. இதனைத் தமிழ்ச்சமூக வரலாற்றின் அடுத்தடுத்த காலக்கட்டமாக கருத இயலும் என்பர் ஆய்வாளர்கள். இந்தப் படிமலர்ச்சியே மேல் - கீழ் என்ற ஏற்றத்தாழ்வினை ஏற்படுத்தியிருக்கக்கூடும். அதனாலேயே சமூக இயங்குதளத்தின் அடிப்படையாக விளங்கிய குயவர், கொல்லர், தச்சர், நெசவர் உள்ளிட்ட தொழில்நுட்பக் கலைஞர்கள் பெருமதிப்பு பெறாமல் போக, நில உற்பத்தியின்வழி பெருத்த உபரியைக் கட்டியாளும் உழவர், குறவர், பரதவர், எயினர் முதலானோர் திணைநிலத் தலைமக்களாகப் படைக்கப்பட்டிருக்கின்றனர். ஆக, சமூக இயக்கத்திற்கான அடித்தள வேலைகளைச் செய்த குழுக்கள் அத்தொழிலைப் பெரும்பொருள் பெற்றுச் செய்திருக்கவில்லை. மாறாக 'ஊழியமாகவே' செய்திருக்கின்றனர் அல்லது செய்யப் பணிக்கப்பட்டிருக்கின்றனர். இதை,

*கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே*
*அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய*
*சிறுவெண் பல்லி போலத் தன்னொடு*
*சுரம்பல வந்த வெமக்கு மருளி*
*வியன்பல ரகன்பொழி லீமத் தாழி*
*அகலி தாக வனைமோ*
*நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே* (புறம். 256)

என்ற பாடலின் வழி அறியமுடிகிறது. இவ்வகைப்பட்ட ஊழியக் குடிகளுள் குயவர் குறிப்பிடத்தக்கவர்.

### குயவர்

வாழ்வியற்தேவை குறித்த சிந்தனையைச் செயல்படுத்த தேவையான மூலப்பொருள்களுள் ஒன்று மண். இது இயற்கையான சூழலில் எளிமையாய்

கிடைப்பது. எண்ணம்போல் பொருள்களை உருவாக்குவதற்கு ஏதுவான தன்மை கொண்டது. ஆதலால், மனிதனுக்கான தேவையை நிவர்த்திக்கும் முக்கிய மூலப்பொருள்களுள் மண் முதன்மையானதாகவும் மண்ணிலிருந்து உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்கள் மிகவும் தொன்மையானதாகவும் இருக்கின்றன. கைதேர்ந்த சிலரே இவ்வகையான பொருளுற்பத்தியில் ஈடுபட்டிருக்கின்றனர். இத்திறன் மரபு சார்ந்து வழங்கி, முதன்மைத் தொழிலாகப் பின்பற்றப்பட்டு, அதுசார்ந்த குடிகள் உருவாகக் காரணமாகியுள்ளது. இவ்வாறு உருவான குடிகளுள் ஒன்றாகக் குயவர் குடியைக் குறிக்கலாம்.

மனித குலத்தின் வாழ்வியற் தேவைக்கான புழங்குபொருள்களை மண்ணால் உற்பத்தி செய்து தரும் தொழிலைச் செய்தவர்கள் குயவர்கள். மண்ணுக்கு உயிரூட்டி வரலாற்றில் தடம் பதித்தவர்கள் எனவும் இவர்களைக் குறிக்கலாம். இவர்களுக்குக் கும்பகாரர், குலாலர், வேட்கோவர், மட்பகைஞர் என்ற இன்னபிற பெயர்களும் வழங்கப்படுகின்றன (திவா. *2:38*). இதில் 'வேட்கோவர்' என்பது சங்க இலக்கியப் பாடல்களில் குயவர்களைக் குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ளது.

குயவர்கள் அன்றாட வாழ்வியற் தேவையை நிவர்த்திக்கும் பொருட்டான இன்றியமையாத புழங்குபொருள்கள் உற்பத்தி செய்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்திருக்கின்றனர். மேலும் மிக முக்கியத் தருணங்களில் நடக்கும் வாழ்வியற் சடங்குகளுக்குத் தேவையான 'சடங்கு'ப் பொருள்களையும் உற்பத்தி செய்து தந்திருக்கின்றனர். இவற்றுள் ஈமத்தாழி குறிப்பிடத்தக்கது. இதன்படி, இறப்புச் சடங்கில் இறந்த உடலை உள்ளிட்டுப் புதைக்கும் ஈமத்தாழியை வனைந்து அளித்திருக்கின்றனர் (புறம். *228*). மண்சார்ந்த பொருளுற்பத்தி செய்தலைத் தவிர்த்து இன்னும் பிற சமூக ஊழியங்களையும் செய்ய குயவர்கள் பணிக்கப்பட்டிருக்கின்றனர் என்பதையும் சங்க இலக்கியப் பாடல்களின்வழி அறிய முடிகின்றது.

ஊர்ப்பொதுச்செய்தி அறிவிப்பாளராகக் குயவர்கள் இருந்திருக்கின்றனர். இதனை "நொச்சிமாலை சூடி அகன்ற நெடுந்தெருவில் நடக்கப்போகும் விழாவினை ஊரார்க்கு அறிவுறுத்திச் செல்லும் குயவரே, நீ வயலும் பொய்கையும் உடைய ஊரனிடத்துச் செல்வாயாயின் அங்குள்ள மகளிரைக் கூவி அழைத்துப் பாணன் செய்த துன்பங்கள் பலவாகி வளர்வன. ஆதலால், இவனது பொய்யான கொடுஞ்சொல்லிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள் என்று அவ்விடத்து உள்ளோருக்கு உரைப்பாயாக என்று வாயிலாக வந்த பாணனுக்குக் கேட்கும்படி தோழி குயவரிடம் கூறுவதாக" அமைந்த நற்றிணைப் (200) பாடலின்வழி அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் திருவிழாக் காலங்களில் செய்யப்படும் பலி சடங்குகளில் ஊர்மன்றத்தில் காக்கைகளுக்கும் அணங்குகளுக்கும் பலியிடும் வேலையைச் செய்பவர்களாகவும் குயவர்கள் இருந்திருக்கின்றனர் என்பதை,

*மணிக்குறள் நொச்சித் தெரியல் சூடி*
*பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்*
*இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து*
*விழவுதலைக் கொண்ட பழவிறல் மூதூர்* *(நற். 293:1-4)*

என்ற பாடல் அடிகள் சான்றுபகர்கின்றன. இதுபோன்ற சமூக அசைவியக்கத்திலிருந்து பிரித்துப்பார்க்க இயலாத பல அடிப்படைத் தேவையை நிவர்த்திச்செய்து தருபவர்களாகக் குயவர்கள் இருந்திருக்கின்றனர் என்பதை மேற்குறிப்பிட்டது போன்ற சங்க இலக்கியத் தரவுகளின்வழி அறியமுடிகின்றது.

இதனைத் தொடர்ந்து இவர்களின் சமூகப்பங்களிப்புக் குறித்து ஆராயவேண்டிய தேவை இருக்கின்றது. மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகக் கொண்ட இவர்கள் வெகுமக்களுக்குத் தேவையானவற்றை உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். மனித வாழ்வியலோடு இரண்டறக் கலந்த இவை சங்க இலக்கியப் பாடல்களில் பரவலாகப் பதிவாகியுள்ளன.

## தாழி

மண்ணால் வனையப்படும் பாண்டங்களில் மிகப் பெரியது தாழி. இதற்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி 'வாயகன்ற பெரிய பானை' என்று பொருள் கூறுகின்றது (1981:2643). திவாகர நிகண்டில், ''சாடி, அகளம், பதலை, தாழியே'' (7:264) என்று விளக்கம் தரப்பட்டிருக்கின்றது. இதில் பதலை என்பதற்குப் 'பரந்த வாயையுடைய பறை' என்றும் விளக்கம் தரப்பட்டிருக்கின்றது.

பெரிய கொள்கலன் என்ற அளவில் பயன்படுத்தப்பட்டிருக்கும் தாழி நீர் நிறைத்து வைக்கும் கலனாகவும் (அகம். 275), பூச்செடி வளர்க்கும் கலனாகவும் (அகம். 29), இறந்தோரின் உடலை உள்ளிட்டுப் புதைக்கும் கலனாகவும் (நற். 271) ஆளப்பெற்றுள்ளன. இதில் ஈமச் சடங்கிற்கெனச் சிறப்பாக வனையப்படும் தாழியை 'ஈமத்தாழி' என்று குறிப்பிடும் வழக்கம் இருந்திருப்பதைப் புறநானூற்றுப் பாடல்களின்வழி (புறம். 228, 238) அறியமுடிகின்றது. மேலும் இறந்தோரை உள்ளிட்டுப் புதைப்பதற்கே தாழி மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டிருப்பதால் 'தாழி' என்ற சொல் ஈமத்தாழியைக் குறிப்பதாயிற்று. ஈமத்தாழியை 'முதுமக்கட்தாழி' என்று உரைக்கும் வழக்கமும் இருந்திருக்கின்றது. இவ்வீமத்தாழியை மண்பாண்டம் வனையும் குயவர்களே வனைந்து தந்திருக்கின்றனர். முற்காலத்தில் இது குயவர்களின் சிறப்பான வனைவாகக் கருதப்பட்டிருக்கின்றது. இவர்களைச் சங்க இலக்கியப் பாடல்கள் 'வேட்கோவர்' என்று குறிப்பிடுகின்றன. இவர்கள் மண்பாண்டம் உற்பத்தி செய்துதருதலை ஊழியமாகச் செய்திருக்கின்றனர்.

கரிய இருள் அனைத்தும் ஓரிடத்தில் திரண்டு நின்றாற்போன்ற மிகப் பெரிய புகைமூட்டம் எழும் அளவிற்குச் 'சூளை'யிட்டு அடுகலம் சுட்டு ஊராருக்குத் தந்துதவும் தொழிலைக் கொண்டவர்களாக வேட்கோவர் இருந்திருக்கின்றனர்.

இவர்கள் ஈமத்தாழியை இறந்தவர்களின் உடலுக்கு ஏற்றவாறு உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். இது இறந்தவர்களை இட்டுப் புதைக்கப் பயன்படுத்தப்பட்ட இரண்டு வகையான பெட்டக முறையில் ஒன்று. மற்றொன்று கற்றளி முறை. இதில் 'கற்றளி' எனப்படுவது நாற்புறமும் கல்லால் தடுப்பு செய்து உள்ளே இறந்த உடலை வைத்துப் புதைக்கும் முறை. அதேபோல் தாழி என்பது இறந்த மனித உடலுக்கு ஏற்ற அளவில் பெட்டகம் போன்ற அமைப்பில் மண்ணால் செய்து சூளையிட்டுத் திடப்படுத்தி அதனுள் இறந்த உடலை அடக்கம் செய்து புதைக்கும் முறைக்கானது. இதில் 'ஈமத்தாழி' பயன்பாடு என்பது வளர்ந்த அரசுருவாக்கத்தை மையமிட்ட 'மருதநிலப் பகுதி'யிலேயே மிகுதியாக இருந்திருக்கின்றது. ஆதலால் அப்பகுதி 'நனந்தலை மூதூர்' (புறம். 256:7) என்று வழங்கப்பட்டிருக்கின்றது. அவ்வாறு நெடுங்காலத்திற்கு முன்னே அனைத்து வசதிகளையும் உள்ளடக்கிய சமூக அமைப்பினை உடைய ஊரில் இறந்துபட்ட சோழன் குளமுற்றத்துச் துஞ்சிய கிள்ளிவளவனுக்குத் 'தாழி' வனையும்படி குயவன் ஒருவனை ஐயனூர் முடவனார் வேண்டுகிறார் (புறம். 228). இவ்வேண்டலின்வழித் தாழிக்குள்ளிட்டுப் புதைக்கும் இன்னபிறவற்றையும் அறியமுடிகின்றது. அவை இறந்தவருக்குத் தேவைப்படும் எனக்கருதி வைக்கப்படும் பிடித்தமான உணவு வகைகள், ஆடை அணிகலன்கள் முதலானவைகளாகும். இவற்றைத் தொல்பொருள் அகழ்வாய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. மேலும் வடக்கிருந்து உயிர்துறத்தலைப் போன்று இறந்தவரின் உற்ற உறவினர்கள் கூடவே இறந்துபடுவதாகவும் அதற்காக வேண்டி அவர்களுக்கும் சேர்த்துத் தாழி வனையும்படிக் கேட்பதனையும் அறியமுடிகின்றது. இதேபோல் தலைவனை இழந்த பெண் ஒருத்தி 'யானும் என் தலைவனோடே இறக்க இருக்கின்றேன். ஆதலால் எனக்கும் அவனோடே இடம் அமையத்தக்க அகலமுடையதாகப் பெரியதொரு தாழி செய்ய வேண்டும்' எனப் பாடுவதாக,

*கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே*

*. . . . . . . . . . . . . . . . .*

*நனைந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே* *(புறம். 256)*

என்ற பாடல் அமைந்திருக்கின்றது.

## குதிர்

உணவுத் தானியங்கள் சேகரித்து வைக்க உதவும் ஒருவகை மண்கலம் குதிர் (பெரும். 186; மதுரை. 169; நற். 321:5). இதனை நெற்கூடு, நெடுங்கூடு (நற். 26:4; புறம். 148:4, 287:9), மஞ்ஞிகை (பட். 163) என்று பிறவகையாகவும் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன. குதிர் என்பது சங்ககாலச் சமூக வளமையின் குறியீடு. இனக்குழுச் சமூகத் தலைமக்களான வேடர் தொடங்கி வளர்ந்த அரசுருவாக்கத்தினை மையமாகக் கொண்ட மருதநிலத் தலைவனான அரசன் வரையிலான இந்த அதிகார இடைவெளி 'உணவு உற்பத்தியிலான உபரி'யை மையமிட்டு உருவானதாகும். உபரி உணவுப் பொருளே ஒரு நாட்டின் செல்வம்.

ஆகையால் அதனை விளைவிப்பதும் சேகரித்து வைப்பதும் ஒவ்வொரு தனி மனிதனின் தனித் தகுதியாகக் கருதும் காலச்சூழலாகச் சங்ககாலச் சூழலைப் புரிந்துகொள்ளலாம். அக்காலத்து வாழ்ந்த மக்களும் அதையே செய்திருக்கின்றனர். இதை,

*சிறுநணி யிறந்த பின்றைச் செறிபிணிச்*
*சிறாஅர் வள்பினென் றெடாரி தழீஇப்*
*பாண ராரு மளவை யான்றன்*
*யாணர் நன்மனைக் கூட்டுமுத னின்றனென்*
*இமைத்தோர் விழித்த மாத்திரை* *(புறம். 376)*

என்ற இப்பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. இப்பாடல் வறுமையுற்று வாடிய நன்னாகனார், ஓய்மாநாட்டு நல்லியக்கோடனைச் சிறப்பித்துப் பாடும்படியாக அமைந்திருக்கின்றது. வறுமையில் வாடும் புலவர்கள் வளமையான நாட்டினரிடம் சென்று இரத்தல் இயல்பு. அவ்வாறு செழிப்பான பகுதிக்குச் செல்லும் புலவர்கள் அந்நில வருணனையைப் பாட மறப்பதில்லை. செழிப்பு என்பது மகிழ்ச்சிக்குரியது. வறுமை என்பது வருத்தத்திற்குரியது. வறுமையிலிருந்த புலவர்கள் வளமையினைக் கண்டதும் மகிழ்ச்சிப் பீறிட்டு அதுகுறித்துப் பாடுவதில் இன்பம் கொள்கின்றார்கள். இத்தன்மையிலான புலவர்களின் இயல்பான மனோநிலையிலிருந்து நல்லியக்கோடனின் நாட்டு வளமையைச் சுட்ட அந்நாட்டு மக்களின் வீட்டு வாயிலில் நிற்கும் நெற்குதிரை ஆதாரமாகக் காட்டிப் பாடுகின்றார் நன்னாகனார்.

அதேபோல், நெற்குதிர் என்பது மருதநிலத்தின் அடையாளம். மருதநில வளம் குறித்துப் பாடுகையில் வீட்டு வாயிலிலிருந்த நெடிய குதிரின் நிழலில் எருமைக்கன்று கிடந்து உறங்கியதைப் பாடுகின்றார் கடியலூர் உருத்திரங்கண்ணனார் (பட். 14-16). மேலும் நிழல்தரும் அளவிற்கு உயர்ந்து நிற்கும் பெரிய அளவிலான மலையை ஒத்த, அடுக்கிய நிலையமைந்த நெற்கூடு (நற். 26) என்பதிலிருந்து அடுக்கடுக்காக ஒன்றின்மேல் ஒன்று வைத்து உயரமாகக் கட்டப்பட்ட சுடுமண்ணாலான நெல் நிரப்பிவைக்கும் தானியக் கலன்கள் அக்காலப் புழக்கத்தில் இருந்திருப்பது தெரியவருகின்றது. இதை "விண்டு புரையும் புணர்நிலை நெடுங்கூடு" என்ற அடியிலிருந்து அறிய முடிகின்றது. இவ்வகைக் குதிர்களின் அடுக்குகளுக்கு எண்ணிட்டு அதன்படி அடுக்கு மாறாமல் பொருத்தி வைப்பதை "புல்லி வெள்ளரை" (நற். 26) என்கிறார் சாத்தந்தையார். இதுபோன்று எல்லாவிதமான பயன்பாட்டுப் பொருள்களையும் மண்ணால் செய்தளிக்கும் தொடக்கநிலை தொழில்நுட்பத்தினை அறிந்தவர்களாகக் குயவர்கள் இருந்திருக்கின்றனர். தவிர்த்துப் பெரும்பாலான வாழ்வியற் தேவையை நிவர்த்திச் செய்வதற்கு மண்சார்ந்த முன்மாதிரிகளே முதன்முதலில் கையில் எடுக்கப்பட்டிருக்கின்றன. பின்னாளில் அவ்விடத்தை மரம், உலோகம் முதலான மூலப்பொருள்களினால் உருவாக்கப்பட்ட இத்தன்மையினை ஒத்த பயன்பாட்டுப் பொருள்கள் இடம் பிடித்திருக்கின்றன.

## குடம்

நீர் முகந்து வைக்கும் பயன்பாட்டிற்குரிய ஒருவகைக் கொள்கலனைக் குடம் எனக் குறிப்பர் (அகம்.217:11). இது மண்ணால் செய்யப்படும் ஒருவகை பாண்டம் என்பதே இதற்கான அடையாளம். பின்னாளைய உலோகப் பண்பாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட குடங்களுக்கும் மண்ணாலான இக்குடங்களே முன்மாதிரியாக விளங்கியிருக்கின்றன. இடங்கர், தசும்பு, கடம், கும்பம், குடம், கன்னல் முதலான பெயர்களைக் 'குடம்' என்ற ஒரு பொருளுக்கான பல பெயர்களாகத் திவாகர நிகண்டு குறிப்பிடுகின்றது (திவா.7:260). இவையனைத்தும் உருவத்தாலும் உற்பத்தியாலும் ஒத்தத் தன்மையைக் கொண்டிருந்தாலும் பயன்பாட்டளவில் நிலம்சார்ந்த சிற்சிறு மாற்றங்களைத் தன்னகத்தே கொண்டிருப்பனவாகும். இதை முல்லை நில ஆயர்கள் பால், தயிர், மோர், பதநீர் முதலானவற்றை நிரப்பிவைக்கும் பாண்டமாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். இதனை 'ஆய்மகள் நகத்தால் தெறித்த சிறிய மோர்த்துளி குடத்திலுள்ள பால் முற்றும் கலங்கி கெடுதற்குக் காரணமானாற் போல' (புறம். 276) எனப் புறநானூற்றுப் பாடலில் வரும் உவமை உணர்த்துகிறது. இதைப் போலவே 'விடியற்காலத்தே கடாவடியிட்டு வைக்கோலை உதறிய உழவர் மாங்காயுடன் புளிப்பதன் சேர்த்துப் புதுக்குடங்களில் அமைத்த அதிகமாகப் பெய்த சாரங்களை வெயில் வேளையில் உண்டு மகிழ்ந்தனர்' (அகம். 37;5-11) என்ற அகநானூற்றுப் பாடலும் குடத்தின் பயன்பாட்டைக் குறிக்கின்றது.

மேலும், பொருள்சார் பயன்பாட்டில் ஒரு பொருள் இருவேறு விதமான மதிப்பீட்டினைக் கொண்டிருப்பதையும் காணமுடிகின்றது. 'குடம்' என்ற கொள்கலன் நீர் நிரைத்தலுக்குப் பயன்படுத்தப்படும்போது பெறுகின்ற மதிப்பீட்டினைவிடச் சடங்கியலுக்குப் பயன்படுத்தப்படும்போது பெருமதிப்புப் பெறுவதாகிறது. இதை மருதநில மக்கள் செய்த சடங்கில் 'முதுசெம்பெண்டிர் மணநாளன்று விடியலில் நீர் நிறைந்த குடத்தினை உச்சியில் உடையவராகவும், கையில் புதிய அகன்ற மண்டை என்னும் கலத்தினை உடையவராகவும் வந்து மணவினைச் செய்தனர்' (அகம். 86;8-10) என்ற பாடலின்வழி அறியமுடிகின்றது. மேலும் நீர் எடுக்கும் கலமாகவும் (அகம். 336;4-9) தாழைச் சோற்றைச் சொரிகின்ற கலமாகவும் (நற். 335;4-5) குடம் பயன்படுத்தப்பட்டு இருக்கின்றது என்பதைச் சங்க இலக்கியப் பாடல்களின்வழி அறியமுடிகின்றது.

## செங்கல்

இயற்கைக் கூறுகளாகிய நிலம், நீர், காற்று, நெருப்பு முதலானவைகளைத் தனித்தனியாகவும் ஒன்றோடொன்று கலந்து சேர்மானம் செய்தும் தங்களுக்கான தேவைகளை நிவர்த்திச் செய்துகொள்ளும் மனித அறிவின் தொடக்கமாக மண்ணாலான பொருள் உற்பத்தியைக் குறிப்பிடலாம். இதில் செங்கல் என்பது நெருப்பிலிட்டு சுட்டுத் திடப்படுத்தப்பட்ட மண்ணாலான ஒரு கட்டுமானப்பொருள். இது தவிர்த்து சக்கரத்தின் உதவியுடன் மண்பாண்டங்கள் செய்து பயன்படுத்தியதை இத்தொழிலில் இதற்கடுத்தடுத்த கட்டத்தில் நிகழ்ந்த

தொழில்நுட்ப வளர்ச்சியாகக் கொள்ள இயலும். மனிதன் ஓரிடத்தில் நிலையாக வசிக்க நேர்ந்தபோது தனக்கான பாதுகாப்பான வாழிடத்தை உருவாக்க முனைந்திருக்கின்றான். இப்பின்னணியில் உருப்பெற்றவைகளாக குடில், மண்குடிசை முதலானவற்றைக் கொள்ளலாம்.

மண்ணாலான சுவர் எழுப்பி அதன்மேல் கூரை வேயப்பட்டிருக்கும் குடிசை மண்குடிசை (பதிற்.30;22). அவ்வாறு எழுப்பப்படும் சுவர்கள் கெட்டித் தன்மையுடன் இருக்கவேண்டி மண்ணைப் பதப்படுத்திப் பயன்படுத்தும் முறையைக் கையாண்டிருக்கின்றனர். இம்முறையைப் பின்னாளில் மண்ணாலான பொருள் உற்பத்தியில் ஈடுபட்ட குயவர்களே செய்திருக்கின்றனர். இன்றியமையாதப் பயன்பாட்டுப் புழங்குபொருள்களாகிய மண்பாண்டங்களைச் சூளையிட்டு சுட்டெடுத்தலைப் போலவே மண்ணாலான கல்லையும் சுட்டுத் திடப்படுத்தித் தந்திருக்கின்றனர். இதனைக் கொண்டே மிகப்பெரிய பாதுகாப்பு அரண்களும் வீடுகளும் கட்டப்பட்டிருக்கின்றன. இதை,

*சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின் (பெரும். 405)*

என்ற பெரும்பாணாற்றுப்படை அடி புலப்படுத்துகின்றது. மேலும் ஓவியத்தைப் போன்று உருவாக்கப்பட்டிருக்கும் மிகுந்த அழகினை உடைய தொழில்திறம் நிரம்பிய வீடு (அகம். 98) என்பதைத் தச்சு, கொல்லு, குயவு என்ற இம்மூன்றின் துணைகொண்டு இயற்றப்பட்ட வீடு என்பதாகக் கொள்ளலாம். இதில் குயவர்களால் உற்பத்தி செய்தளிக்கப்பட்ட பொருளாகச் செங்கல், ஓடு முதலானவற்றைக் கொள்ளலாம். செங்கல்லின் உதவிகொண்டு வலிமையான நெடுஞ்சுவர்களும் (ஐங். 386) பாதுகாப்பு அரண்களும், வீடுகளும் கட்டப்பட்டிருந்ததை ஐங்குறுநூறு, அகநானூறு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை முதலான நூல்களில் பாடப்பட்டிருக்கும் பாடல்களைக் கொண்டு அறியமுடிகின்றது. சான்றாக,

*இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென (அகம். 167)*

எனும் அகநானூற்றுப் பாடலில் இடம்பெற்றுள்ள 'இட்டிகை நெடுஞ்சுவர்' என்பதற்குச் செங்கல்லால் கட்டப்பட்ட பெரிய சுவற்றின்மேல் நிறுத்தப்பட்ட மரத்தாலான மாடம் என்பதாகப் பொருள் கூறுவர் உரையாசிரியர். இக்கூற்றிலிருந்து முதலில் செங்கல்லாலான வலுவான சுவர்கள் எழுப்பப்பட்டு அதன்மேல் எடை குறைந்த மரத்தாலான மாடம் கட்டி வாழ்ந்திருக்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது. இது மண்ணிற்கான தட்பவெப்பச் சூழலோடு ஒத்த ஒன்றாக அமைந்திருப்பதைக் கொண்டு அக்கால மக்களின் இருப்பிடம் குறித்த அறிவினை அறியமுடிகின்றது.

**கலம்**

பயன்பாட்டுப் பொருளைக் குறிக்கும் 'பாண்டம்' என்ற சொல்லுக்கு இணையான சொல் 'கலம்'. இச்சொல் ஒரு பொதுச்சொல். முடிப்பொருள், அளவு, வடிவம், நிறம், பயன்பாடு உள்ளிட்ட தனித்தன்மைகளைக் கொண்ட

கலங்கள் வெவ்வேறு விதமாகக் குறிக்கப்படுகின்றன. இதில் அக்கலத்திற்கான தனித்தன்மை என்பது அக்கலப்பெயரின் முன்னொட்டாக அமைந்து இருப்பது சிறப்புக்குரியது. சான்றாக, மூலப்பொருளை முதன்மைப்படுத்தும் முன்னொட்டுப்பெயர் - மட்கலம், பொற்கலம், மரக்கலம் முதலியன. அதாவது மண்ணால் உற்பத்தி செய்யப்பட்ட கலம் மண்கலம். அளவினை முதன்மைப்படுத்தும் முன்னொட்டுப்பெயர் - சிறுகலம். அதாவது சிறிய அளவுடைய கலம் சிறுகலம் (புறம்.232;4). இவற்றினைப் போன்றே பசிய மண்ணால் செய்யப்பட்டு சுடப்படாத கலம் பசுங்கலம் (குறு.29:2). சுட்டபின்பு கருங்கலன் (புறம்.322;5). நிறம் பூசப்பட்டது புதுக்கலம். அடுப்பிலிட்டு உணவு சமைக்கப் பயன்படுத்தப்பட்ட கலம் அடுகலம். பொருளிட்டு நிரப்பப்பட்டது கொள்கலன், அவ்வாறு நிரப்பப்படாத சிறிய கலன் வறுங்கலம் (புறம்.160:21) எனப்பலவாறு பயன்பாட்டிற்கேற்ப கலன்கள் பிரித்தறியப்படுகின்றன. அந்த வகையில் 'கலம்' என்ற சொல் சங்ககால மக்களிடையே மிகுதியான அளவில் வழக்கிலிருந்திருக்கின்றது (நற். 308:8; குறு. 27:1; ஐங். 303:1; கலி. 116:16; அகம். 308:6, 394:9; புறம். 228:1, 256:1).

**சாடி**

சங்க இலக்கியப் பாடல்களில் பயின்றுவரும் 'சாடி' என்ற சொல் ஒரு வகையான மண்பாண்டத்தைக் குறிப்பதாகும் (நற். 295:7; பரி. 20:54; புறம்.297:6, 319:3). மருதநில மண்பாண்ட உற்பத்தியில் உருவாக்கப்பட்ட இச்சாடி மதுக்கலனாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. சாடி என்பதற்கு மதுச்சாடி என்பதை மாற்றுப் பெயராகக் கொள்ள முடியும் என்பதற்கேற்ப அவ்வித பயன்பாட்டிற்கு உரிய பொருளாய் இருந்திருக்கின்றது. அகன்ற வாயையுடைய இச்சாடியில் நெய்தல் நில மக்கள் 'குற்றாத கொழியலரிசியை அழகிய களியாகத் துழாவியட்ட கூழை, மலர்ந்த வாயையுடைய தட்டுபிழாவிலேயிட்டு உலரும்படி அந்நிலப் பாம்பு கிடக்கும் புற்றின்கட் பெற்ற புறத்தையுடைய நல்ல முளையை இடித்துச் சேர அதனை அதிலே கலந்து அது இனிமை பெறும்படி இரண்டு பகலும் இரண்டு இரவும் கழித்து வலிய வாயினையுடைய சாடியில் இட்டு, வெந்நீரில் வேகவைத்து நாரால் வடிகட்டி விரலாலே அணைத்துப் பிழியப்பட்ட நறிய கள்ளைப் பச்சை மீன் சூட்டோடு உண்டு பசியாறினர் (பெரும். 275-282) என்ற குறிப்பிலிருந்து அறியமுடிகின்றது.

பழந்தமிழர்களுடைய வாழ்வியலில் உண்டாட்டு என்பது ஒரு அங்கமாகவே திகழ்ந்திருக்கின்றது. வெற்றிவாகை சூடிய வீரர்களும், பெரும் விளைச்சலைக் கொண்ட உழவர்களும் கள்ளுண்டு களித்திருந்ததைச் சங்கப்பாடல்கள் சுட்டுகின்றன. மேலும், கள் வடிப்பதைத் தொழிலாகக் கொண்டவர்கள் இருந்தனர் என்பதை 'கள் வழங்குபவனே! முன்பு இத்தலைவன் கந்தார நாட்டிற்குட் புகுந்து நிரை கவர்ந்து கொணர்ந்து கள் விலைக்கு ஈடாக வழங்கினான். இன்றும் அவ்வாறே செல்ல முடிவெடுத்துள்ளான். சென்றிருக்கின்றான் என்று கொள்வாயாக, ஆதலால் நின்பால் உள்ள கள்ளைச் சேமித்து அவன் ஆநிரை

கொண்டு வரும்போது வழங்குவதற்கு முதுகட்சாடியொன்றைப் பேணி வைப்பாயாக' (புறம். *258*) என்ற உலோச்சனார் பாடல்வழி அறியமுடிகின்றது.

மேலும் மதுச்சாடி, மதுக்குடம் என்ற இவ்விரு பெயர்களும் உருவத்தால் ஒத்த ஒரு மண்பாண்டத்தைக் குறிக்கும் இருவேறான சொற்களாகக் கொள்ளலாம். இவ்விரண்டில் குடம் என்ற பாண்டத்துடன் ஒப்பிட்டு நோக்கும்போது 'மதுச்சாடி' என்பது அளவில் சற்றுப் பெரிய கலனாக இருந்திருக்கலாம். இதைப் பல நாளும் வடிக்கப்பெற்ற கள் நிறைந்த சாடியைக் கள் முகக்கும் கலம் உடைத்திடின், மழைத்துளிபோல் தெருவெல்லாம் கள் துளிகள் சிதறி கிடக்கும் (அகம். *166:1-3*) என்ற அகநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது. இதிலிருந்து உடைபடும் கலமான 'மதுச்சாடி' மண்ணாலான பாண்டம் என்பதும் கலம் கொண்டு கள் முகக்கும் அளவிற்கு அது அகன்ற வாயுடைய பெரிய பாண்டம் என்பதும் தெளிவாகிறது.

## குழிசி

குழிசி என்பது மண்ணாலான ஒருவகை அடுகலம் (நற். *12:1*; அகம். *77:7*; புறம். *65:2, 237:7, 393:4*). இது உணவு சமைத்தலுக்கான கலம் என்பதன்றி தயிர்க்கடைதலுக்கான பயன்பாட்டிற்கும், வாக்களித்தலுக்கு வேண்டிய முத்திரை இடப்பட்ட வாக்குப்பெட்டியாகவும் பயன்படுத்தப்பட்டிருப்பதைச் சங்கப்பாடல்களின் வழி அறிய முடிகின்றது. 'குழிசி' என்பது கூடுதலான கொள்ளளவு உடைய சற்றுப் பெரியபானை என்பதாகக் கருதலாம். சிதைந்த வாயினையுடைய சமைத்தற்கான குழிசி (புறம்.*371;5*). மான்கறி சமைக்கப்பட்ட வெளிறிய நிறத்தினையுடைய பெரிய குழிசி (புறம்.*168;9*)யின் பயன்பாடென்பது அடுகலமாகவும், பால் தயிர் முதலான பண்டங்கள் பயன்படுத்தப்படுவதால் அப்பாண்டம் முடை நாற்றத்துடன் வெள்ளிய கோடுகள் படிந்து காணப்படும். அவ்வாறு வெண்கோடு தோன்றாக் குழிசியோடு நாட்கலத்தில் உறைதெறிப்பக் கடையும் மத்தொளியும் கேளாதவாறு தான்கவர்ந்து வந்த ஆநிரைகளைப் பிறர்க்குக் கொடுத்து இன்புறுவதில் வல்லவனானவன் (புறம்.*257;8-13*) என்பதிலிருந்து தயிர்த்தாழி 'குழிசி' என்ற பெயரால் வழங்கப்பட்டிருக்கின்றது என்பதையும் அறிய முடிகிறது.

நெய்தல் நில எயினர்கள் நிலவுரலில் இட்ட புல்லரிசியை உலக்கையால் தீட்டியெடுத்து கிணற்றில் முகந்த நீரைப் பழைய ஒருவாய்ப்போன குழிசியில் உலையாக வார்த்து, அடுப்பில் ஏற்றி ஆக்கின சோற்றைப் பாணர்கள் உப்புக் கண்டத்தோடு பெற்றனர் (பெரும். *94-105*). முல்லை நில இடையர்கள் வரகரிசியைச் சுனைநீரோடு முகந்து மண்ணால் செய்த குழிசியில் இட்டு கல்லடுப்பில் ஏற்றிச் சமைத்த அவிழ் சோற்றை வழியே செல்லும் புதியவஃர்களுக்குப் பாலோடு பகுத்துக் கொடுப்பர் (அகம். *393*). இது போன்று முல்லை, குறிஞ்சி, நெய்தல் நிலத் தேவைகளை நிவர்த்திக்கும் பயன்பாட்டுப் பொருள்களாக விளங்கும் எந்த ஒரு மண்பாண்டப் பொருளும் அவ்வவ்

நிலப்பகுதியிலேயே உருவாக்கப்பட்டவைகளாக இல்லை. மேலும் அவ்வாறு வெளிநிலப் பகுதியிலிருந்து பெற்றுப் பயன்படுத்தப்படும் மண்பாண்டங்கள் அனைத்தும் ஒருங்கிணைத்த நிலையில் பொதுவான பயன்பாட்டுப் பெயர்களைப் பெறுகின்றன. இது பொருள் உற்பத்திக்கான நிலப்பகுதியில் அப்பொருளினைக் குறிக்கும் பெயரிலிருந்து வேறுபட்டது. 'குழிசி' என்ற சொல்லையும் அவ்வகைத்தானதாகவே கருதலாம்.

## மஞ்ஞிகை

சங்க கால மக்களிடையே புழக்கத்திலிருந்த ஒருவகையான கொள்கலன் மஞ்ஞிகை. இது தானியம் சேகரித்து வைக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது என்பதற்கு,

*கூழுடை கொழு மஞ்ஞிகை* *(பட். 163)*

என்ற பாடலடி சான்றாகின்றது. கூழ் என்பதற்குச் செல்வம் என்பது பொருள். ஆக, செல்வம் நிரம்பிய பெரிய கொள்கலன் என்று இவ்வடியைப் பொருள்கொள்ள இயலும். உழவுத் தொழிலை முதன்மைத் தொழிலாகக் கொண்ட சங்க காலத்தில் செல்வம் என்பது உபரி தானியங்களே. ஆதலால் தானியங்கள் நிரம்பிய கொள்கலன் என்பது இதன்வழி அறியத்தக்கது. இதில் 'கொழு' மஞ்ஞிகை என்றது 'மஞ்ஞிகையின்' புற அமைப்பினைச் சுட்டுவதாக அமைகின்றது. 'கொழுத்த' என்ற சொல்லை, பருமையான என்ற பொருளில் கொண்டால் மஞ்ஞிகையின் வாய்ப்புறமும் அடிப்புறமும் குறுகியும் வயிற்றுப் பகுதி பெருத்தும் உள்ள வடிவத்தையே குறிக்கிறது. ஆக, உணவுப்பொருளைச் சேகரித்து வைக்கும் பழக்கத்தினையுடைய மக்களிடையே புழக்கத்திலிருந்த ஒரு வகையான கொள்கலனாக மஞ்ஞிகையைக் கொள்ள இயலும்.

## மண்டை

'மண்டை' என்பது ஒரு வகையான மண்பாண்டத்தைக் குறிக்கும் சொல். இதற்கு உண்கலம், இரப்போர் கலம் என்று தமிழ்மொழி அகராதி பொருள் கொள்கின்றது. (2003:1125). இது இரப்பவர்கள் வைத்திருக்கும் உணவு உண்ணும் பாத்திரம் (புறம்.103;3-4) என்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. மேய்ச்சல் தொழிலையுடைய முல்லை நிலத்துக் கோவலர்கள் தங்களுக்குத் தேவையான நீர் உள்ளிட்ட உணவுப் பொருள்களை உறிகட்டித் தோளில் மாட்டியபடி மேய்ச்சல் தொழிலுக்குச் சென்றிருக்கின்றனர். அவ்வாறு உறியில் வைத்து எடுத்துச் செல்வதற்கு ஏற்ற அளவிலான பாண்டம் 'மண்டை' என்ற பெயரால் வழங்கப்பட்டிருக்கின்றது (கலி.106). இவ்வாறு இருவேறு விதமாகப் புரிந்துகொள்வதற்கான சான்றாதாரங்களைச் சங்க இலக்கியப் பாடல்கள் கொண்டிருக்கின்றன. மேலும்,

*சூடு கிழித்து வாடுஊண் மிசையவும்*
*ஊன்கொண்ட வெண் மண்டை* *(புறம். 386:4-5)*

என்ற அடிகள் பசு நெய்யில் வறுத்தெடுக்கப்பட்ட ஊன் வகைகள் அடுக்கி வைத்திருக்கும் உணவுக்கலம் என்பதாகவும் அதிலும் சிறப்பாகப் பசு நெய்யில் சமைக்கப்பட்ட மிகுதியான உணவுவகைகள் இடப்பட்டுப் பழகியிருந்ததால் அவ்வுணவுக் கலத்தைச் சுற்றியும் வெண்ணெய் படிந்த வெண்கோடுகள் காணப்பட்டன. ஆதலால் கோவூர்க்கிழார் அதனை 'வெண்மண்டை' என்று குறிப்பிடுகிறார் என்பர் உரையாசிரியர். இதேபோல் இரவலர்களான பாணர்களின் பயன்பாட்டிலிருந்த பாண்டமாகவும் 'மண்டை' குறிக்கப்பெறுகிறது (குறு. *169:4*). ஆக நிலையான வசிப்பிடமற்றவர்கள் பயன்படுத்திய ஒருவகையான மண்ணாலான உண்கலத்தை 'மண்டை' என்று குறிக்கும் வழக்கம் சங்க கால மக்களிடையே இருந்திருக்கின்றது எனக் கொள்ளலாம்.

### பானை

மண்பாண்டத்திற்கான ஓர் அடையாளக் குறியீடாகக் குறிக்கப்பெறுவது பானை. இது மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் மிகுதியாக உற்பத்தி செய்யப்படும் உருக்களில் ஒன்று. திரவக் கொள்கலனுக்கான பெரிய வயிறு சிறிய வாய் என்ற அமைப்பிற்கான ஒரு பொதுப்பெயர். இப்பொதுப் பெயரோடு முன்னொட்டாகப் பயன்பாட்டுப் பெயர் சேர்ந்துவரும்போது அவை பயன்பாட்டு நோக்கிலான தனித்தனி வகைமையாகப் பிரித்தறியப்படுகின்றது. அவை தயிர்ப்பானை, மோர்ப்பானை, நீர்ப்பானை என்பனவாகும்.

*தடாவும் குழிசியும் மிடாவும் பானை (திவா. 7:262)*

தடா, குழிசி, மிடா, பானை இவை நான்கும் ஏறக்குறைய ஒத்த உருவினை உடையவை. இதில் தடா என்பதற்கு 'பருமை' என்று பொருள். அதாவது பருமையான உருவைக் கொண்ட ஒரு கொள்கலன். மிடாவும் இதை ஒத்தது. குழிசி என்பது அடுகலம். அதாவது உணவு ஆக்குதற்குரிய கலம் அடுகலம். ஆக, மேற்கூறியது போன்று சற்று பருத்த வயிற்றையும் சிறுத்த வாயையும் உடைய அமைப்பினை பானை என்பதற்கான பொதுத்தன்மையாக இருந்துள்ளது. இது பரவலான பல திணைநில பயன்பாட்டிற்கு உரிய பொருளாகக் கொள்ளப்படுகிறது. இதை, 'கள் விற்கும் மகளின் இடையிற் சுமந்து வந்த விரிந்த வாயினையுடைய பானையின் கள்ளை நிரம்ப உண்டு போரை விரும்பிச் செய்யும் ஆடவர் ஆர்ப்பரிப்பர் (அகம்.157;2) என்ற பாடற்செய்தியிலிருந்தும் தோளில் கட்டித் தொங்கவிடப்பட்ட பானை உரியினையுடைய காடன் (அகம்.274;6) என்ற பாடற்செய்தியிலிருந்தும் அக்கால 'மண்பாண்ட' பயன்பாட்டில் பானை என்ற சொல் பயன்பாடு குறித்தும்' எவ்விதமான பயன்பாட்டிற்குரிய பொருள்களும் பானை என்றே அழைக்கப்பட்டன என்பது குறித்தும் அறியமுடிகின்றது.

### தசும்பு

'தசும்பு' என்பது மண்பானையின் ஒரு வகை (புறம். *239:16, 377:18*). ஒத்த தன்மையில் உருவாக்கப்படுகின்ற மண்பாண்டங்கள் அனைத்தும் வடிவ

அடிப்படையிலும் பயன்பாட்டு அடிப்படையிலும் பல்வேறு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இதில் வடிவ அடிப்படையில் பிரிக்கப்படுவன அனைத்தும் பயன்பாட்டினைக் கருத்தில் கொண்டு உருவாக்கப்பட்டவை. இது மண்பாண்ட உற்பத்தியாளர்களான குயவர்களின் அறிவுத் திறமைக்கான ஓர் எடுத்துக்காட்டு. இது தவிர்த்து ஒரே மாதிரியான வடிவ ஒற்றுமையில் உருவாக்கப்படுகின்ற அல்லது அதிக அளவிலான பயன்பாட்டினைக் கருத்தில் கொண்டு உருவாக்கப்படுகின்ற ஒரு பொருள் இன்னபிற தேவைகளை நிவர்த்திப்பதற்கு ஏற்றாற்போல் அமைந்துவிடுவதால் அவ்விதமான தேவைக்கும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. அவ்வாறு வெவ்வேறு தேவைக்குப் பயன்படுத்தும் பட்சத்தில் அந்த மண்பாண்டம் பயன்பாட்டளவிலான வேறொரு பெயரினையும் கொண்டு விளங்குகின்றது. இது மாதிரியான நிகழ்வுகள் மண்பாண்ட உற்பத்திக்கு ஏற்ற தகவமைப்பு இல்லாத நிலப்பகுதிகளில் மிகுதியாக நிகழ்ந்திருக்கின்றன. தவிர்த்து அவை உற்பத்தி செய்யப்பட்ட நிலப்பகுதியில் பயன்பாட்டிற்கு ஏற்றவாறு தனித்தனியான தன்மைகொண்ட மண்பாண்டங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. குறைந்தபட்சம் அதனில் சிற்சிறு அளவிலான வேறுபாடுகளையாவது காட்டுவதைத் தனது தொழில் திறனாகவும் அறிவாகவும் குயவர்கள் கொண்டிருந்திருக்கின்றனர். ஆதலால் வேற்று நில மக்களுக்கான தேவையைக் கருத்தில் கொள்ளாதபோது பண்டமாற்றில் அவர்களுக்குக் கிடைக்கும் மண்பாண்டப் பொருள்கள் பயன்பாட்டு நோக்கில் பெயரிடப்பட்டிருக்கின்றன. அவ்வாறான பெயர்களுள் ஒன்றாகத் 'தசும்பு' என்ற மண்பாண்டத்தினைக் குறிக்கலாம்.

தசும்பு என்பதற்குத் தயிர்ப்பானை என்றும் பொருள் கொள்ள இயலும் *(புறம்.33;3)*. இச்சொல்லிற்குச் சூடாமணி நிகண்டு மிடா, குடம் என்று ஒத்த பிற பெயர் விளக்கத்தைத் தருகின்றது *(சூடா.11:35)*. இதில் மிடா என்ற சொல் '*சால்*' என்று குறிக்கப்பெறும் வாயகன்ற பெரிய பானையைக் குறிப்பதாகின்றது. குடம் என்பது நீர் முகக்கும் ஒருவகைப் பாத்திரம். ஆக, தசும்பு, மிடா, குடம் போன்றவை ஒத்த வடிவத்தை உடையன என்றாலும் தசும்பு என்பது வாயகன்ற மோர் சிலுப்புவதற்கு வாகான அகன்ற வாயுடைய தாழி எனக்கொள்ளலாம். தயிர், மோர், நிறைத்து வைக்கும் இம்மண்பா.ண்டம் ஆயர்குடி மக்களின் பயன்பாட்டில் இருந்திருக்கின்றது. மேலும், முல்லை நில மக்களான ஆயர்கள் ஆநிரை மேய்க்கும் தொழிலை உடையவர்கள் ஆதலால் தயிர், மோர் முதலான உணவுப் புழக்கம் இவர்களிடத்தே அதிகம். இவைகளை நிரப்பி வைத்த மண்பாண்டத்திற்கு இவர்கள் வழக்கத்தில் வைத்திருக்கும் பெயர் தசும்பு என்பதை சங்கப்பாடல்களின் வழி அறிய முடிகின்றது.

மண்ணால் செய்து சுடப்பட்ட தாழியில் தயிரை மத்தாற் கலக்கிய காலத்து வெண்ணெய் வெப்பத்தால் கைக்கூடாது போனது; என்பதை,

*சுடுமண் தசும்பின் மத்தந் தின்ற*
*பிறவா வெண்ணெய் உருப்பித் தன்ன* *(நற். 84:6)*

என்ற நற்றிணைப் பாடலடிகள் விளக்குகின்றன. மேலும் குறிஞ்சிநில வேட்டுவர்கள் கொண்டுவந்த மான்கறி நிறைந்த கடகமும் முல்லைநில இடையர் மகள் தயிர் கொண்டுவந்த 'தசும்பு'ம் நிறையுமாறு மருதநில உழவர் மகளிர் வெண்ணெல்லை முகந்து கொடுப்பர் என்ற செய்தியை,

*கானுறை வாழ்க்கை கதநாய் வேட்டுவன்*
*மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்*
*தயிர்கொடு வந்த தசும்பு நிறைய*
*ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்*
*குளக்கீழ் விளைந்த கலிக்கொள் வெண்ணெல்*
*முகந்தனர் கொடுப்ப வுகந்தனர்* *(புறம்.33;1-6)*

என்பதாக அமைந்த இப்பாடலடிகளிலிருந்து முல்லை நிலமக்களின் பயன்பாட்டிலிருக்கும் மண்பாண்டப் பொருளாக 'தசும்பு' இருந்திருக்கின்றது என்பதை அறிய முடிகின்றது. மேலும், குறிஞ்சி, மருதநில மக்களுக்கான பயன்பாட்டிலிருக்கும் மண்பாண்டப் பொருள்களுக்கான பெயர்கள் அனைத்தும் அவ்வவ் நிலத்திற்கான பயன்பாட்டு அடிப்படையில் சுட்டப்பட்டிருக்கின்றது என்பது இதன்வழி புலப்படுகின்றது. இச்சூழலில் 'கள்' நிரப்பி வைக்கும் மண்பாண்டத்தையும் 'தசும்பு' என்றழைத்திருக்கின்றனர். உ.வே. சாமிநாதையர் தம்முடைய புறநானூற்றுப் பதிப்பில் 'தசும்பு' என்பதற்கு 'மதுக்குடங்கள்' என்று பொருள்கொண்டுள்ளார். கரிகால்பெருவளத்தான் துணையாய்க் கூடின இனத்தொடு கூடித் தசும்பினை நுகர்ந்து தொலைத்துப் பாண்சுற்றத்தைப் பாதுகாத்தான் (புறம்.224;2-3) என்பதில் 'தசும்பு' என்பதற்கு மது நிரப்பப்பட்ட குடங்கள் என்று பொருள் கொள்ளுதலே சரியென்ற உ.வே.சாவின் கருத்து ஏற்கத்தக்கதாக இருக்கின்றது. அந்த வகையில் 'மதுக்குடம்' என்பதற்கு இணையான பொருளில் 'தசும்பு' குறிக்கப்படுதலை அறியமுடிகின்றது. மேலும் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி கிணைப்பொருநர்க்கு மணியும் பொன்னும் முத்தும் உடையும் கள் நிறைந்த தசும்பும் கொடுத்து அவர்களது வருத்தத்தை நீக்கினான் (பதிற். 5;2:10-15) என்பதையும் சங்கப்பாடல்கள் சுட்டுகின்றன.. நிறைதலையும் குறைதலையும் அறியாத கோக்காலி என்னும் ஏணியிடத்தே எப்போதும் நிறைந்தே காணப்படும் கள் நிறைந்த தசும்பு காணப்படும். இது கூத்தர் உள்ளிட்டவர்கள் உண்டு களித்தலின்போதும் குறையாத அளவிற்குக் கள்ளை அளித்தருளிய வண்கை வேந்தன் என்று கடல்பிறகோட்டிய செங்குட்டுவன் சிறப்பிக்கப்பட்டுள்ளான் (பதிற். 5;3:33-36) என்பதன் மூலம் மதுக்கலமாக விளங்கிய மண்பாண்டத்தையும் 'தசும்பு' என்ற பெயரால் குறிக்கப்பட்டிருத்தலை அறியமுடிகிறது.

## தொகுப்புரை

- சங்க இலக்கியங்கள் பலபுலங்களுக்கான தரவுகளைத் தன்னகத்தே கொண்டிருக்கின்றன. அவற்றில் பொருள்சார் பதிவுகள் குறித்த ஆய்வென்பது மிகவும் அரிதாகவே நடந்திருக்கின்றது. ஆதலால் அதனை இலக்கியத்திலிருந்து வருவித்துக் கொள்ள வேண்டிய அவசியம் இருக்கின்றது.

- சங்க இலக்கியப் பாடல்களைப் பொருண்மையின் அடிப்படையில் இரண்டு வகையாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை 1. அகப்பாடல்கள், 2. புறப்பாடல்கள். மேலும், ஆய்வின் தேவைக்கேற்ப இவை இரண்டிரண்டாக வகைபிரித்துக் கொள்ளப்படுகின்றது. அவை,

  1. எட்டுத்தொகையிலமைந்த அகப்பாடல்கள்
  2. எட்டுத்தொகையிலமைந்த புறப்பாடல்கள்
  3. பத்துப்பாட்டிலமைந்த அகப்பாடல்கள்
  4. பத்துப்பாட்டிலமைந்த புறப்பாடல்கள்

  என்பனவாகும்.

- எட்டுத்தொகையில் அமைந்த அகப்பாடல்கள் பெரும்பாலும் அளவில் சிறியதாகவும் பல்வேறு புலவர்களாலும் பாடப்பட்டிருப்பதால் அவற்றுள் சமூகச் சித்திரிப்புகள் குறித்த விரிவான பதிவுகள் வெளிப்படையானதாக இல்லை. மாறாக, தனிமனித அகஉணர்வுகள் மிகுதியாகப் பேசப்பட்டிருக்கின்றன. இவை இவ்வக ஒழுக்கத்திற்கான உரிப்பொருளாக விளங்குகின்றன. ஆகையால், முன்னகர்த்தப்பட்ட இவ்வுரிப்பொருளை இலக்கிய நயத்தோடு பேச வேண்டி அதற்கான நிலச்சூழல் பேசப்பட்டிருக்கின்றது. அவையும் மிகுதியான அளவு உள்ளுறையாகவே பேசப்பட்டிருக்கின்றன. அவ்வாறு பேசப்பட்ட உரிப்பொருளுக்கான உறுதிப்பொருளாக இருப்பவை கருப்பொருள்கள். இவற்றில் கருப்பொருளற்ற, உரிப்பொருளை முதன்மைப்படுத்திய திணைப்பகுப்புமுறை சில இடங்களில் நிலைமாற்றத்தினைக் கொண்டிருப்பதால், அதனைத் தவிர்க்க கருப்பொருள்களின் தேவை இன்றியமையாததாகிறது. அதிலும் இயற்கையான நிலத்தன்மையோடு தொடர்புடைய இயற்கை விளைபொருளால் உற்பத்தி செய்யப்படும் புழங்குபொருள்கள் அவ்வித நிலவாழ் மக்களின் உண்மை நிலைப்பாட்டினை உணர்த்துவதாக அமையும். ஆகவே திணைப்பாகுபாட்டில் உரிப்பொருள் நிகழக் காரணமாயிருந்த நிலச்சூழலும் அதன் விளைபொருளான கருப்பொருள்களையும் கருத்தில் கொள்ளவேண்டிய தேவை இருக்கிறது.

- பத்துப்பாட்டில் அமைந்துள்ள அகப்பாடல்கள் அனைத்தும் தனியொரு புலவரால் பாடப்பட்ட அதிக அடிகளையுடைய பாடலாதலால் அவற்றில் சமூகச் சித்திரிப்புகள் மிகுதியாக உள்ளன. திணைப் பாகுபாட்டில்

இவையனைத்தும் முதன்மைப்படுத்தப்படாமல் இதன்பால் உருவான மனித மனஉணர்வு முதன்மைப்படுத்தப்பட்டிருக்கின்றது. அவ்வாறானபோது அவை ஒருசார்பான மனஉணர்வு வெளிப்பாடாக அமைந்துவிடுவதால் அவற்றுள் பேசப்பட்ட சமூகச் சூழல்சார்ந்த பொருளறிவினையும் கருத்தில் கொள்ளவேண்டிய தேவையினை இவ்வியல் சான்றாதாரத்துடன் நிறுவுகின்றது.

- மேலும் இயற்கை வழிவந்த கருப்பொருள்கள் மாறும் தன்மையுடையன. ஆனால் பயன்பாட்டுவழி உருவாக்கப்பட்ட கருப்பொருள்கள் அந்நிலத்திற்கான நிலைத்த கருப்பொருளாக விளங்குகின்றன. முன்னது இயற்கையின் வெளிப்பாடு. பின்னது இயற்கையோடு மனிதன் இயைந்ததன் வெளிப்பாடு.

- எட்டுத்தொகைப் புறப்பாடல்களான பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரண்டும் பல்வேறுபட்டச் சூழலில் பல புலவர்களால் பாடப்பட்டவை. ஆகையால் இவை மிகுதியான சமூக வரலாற்றுத் தரவுகளைக் கொண்டிருக்கின்றன. மேலும், வேடன்-வேந்தன் என்ற ஏறுவரிசையில் அமைந்திருந்த அன்றைய தமிழ்ச் சமூக அமைப்பினை இதன்வழி அறிய முடிகின்றது. மேலும் சமூகம் மற்றும் தொழிலடிப்படையில் பாகுபடுத்தப்பட்ட குடிகள் குறித்த செய்திகளையும் அக்குடிகள் சமூகத்திற்குச் செய்த ஊழியம் குறித்த செய்திகளும் இவற்றில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. அதில் மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்ட குயவர் குடியினரின் பங்களிப்பிற்கான முக்கியத்துவம் பேசப்பட்டிருக்கின்றது.

- பத்துப்பாட்டுப் புறப்பாடல்கள் அனைத்தும் குறிப்பிட்ட ஒரு மன்னனின் கொடைநலம் குறித்தும் நாட்டுவளம் குறித்தும் பாடப்பட்டவையாகும். இவற்றைப் பாடிய புலவர்கள் அனைவரும் இரந்துபட்டவர்கள். ஆதலால் அவர்களின் வறுமையானச் சூழலும் பாடப்பட்டோரின் வளமையான நாட்டுவளமும் பாடப்பட்டிருக்கின்றன. இவ்விரு வேறுபட்ட நிலச்சூழலைப் பாடும்போது அவற்றிற்கான பயன்பாட்டுப் பொருள்களும் பாடப்பட்டிருக்கின்றன. அவற்றின்வழி மண்சார்ந்த புழங்குபொருள்கள் மிகுதியான அளவு உற்பத்தி செய்யப்பட்டிருப்பதையும் பயன்படுத்தப்பட்டிருப்பதையும் அறிய முடிகின்றது.

- திணை அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டிருக்கும் சங்க இலக்கியப் பாடல்களில் அகத்திணை ஐந்தாகக் கொள்ளப்படுகின்றது. இதற்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பவையே அடிப்படை. அதனினும் உரிப்பொருளை முதன்மைப்படுத்தி திணைப்பாகுபாடு செய்யப்பட்டிருக்கின்றது. இதில் சிலபோது கருத்தியல் தடுமாற்றம் ஏற்பட வாய்ப்பிருக்கின்றது. ஆகவே அதற்கு உறுதுணையாகக் கருப்பொருள் கொள்ளப்படும். அந்நில மக்களின் பொருளறிவினைக் கொள்வதன் வழி

அதன்பால் சில உறுதிப்பாடுகளைக் கொள்ள இயலும். புறத்திணை ஒழுக்கம் அனைத்தும் நேரடி சமூகச் சித்திரிப்பினைச் சற்று மிகையாகக் கொண்டிருப்பினும் அவற்றிலிருந்து அக்காலத்திய 'பொருளறிவு' குறித்தச் செய்தியை எளிதில் பெற இயலுகிறது. அதிலும் குறிப்பாக மண்சார்ந்த புழங்குபொருள்கள் பரவலாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

- சங்ககாலச் சமூகச் சூழலில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களுள் ஒன்றாகிய மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தி செய்பவர்களை 'வேட்கோவர்கள்' என்றும் 'குயவர்கள்' என்றும் குறிக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. நாகரிக வளர்ச்சிக்கு வித்திட்ட இவர்களால் உற்பத்தி செய்தளிக்கப்பட்ட தாழி, குடம், சாடி, குழிசி, மண்டை, பானை, தசும்பு உள்ளிட்ட அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களும், குதிர், மஞ்ஞிகை உள்ளிட்ட தானியக் கலன்களும் புழக்கத்தில் இருந்திருப்பதைச் சங்க இலக்கியப் பாடல்களின்வழி அறியமுடிகின்றது. மேலும் சாவுச்சடங்கு செய்வதற்கான 'ஈமத்தாழியை' உற்பத்தி செய்து தருபவர்களாகவும் சங்ககாலக் குயவர்கள் இருந்திருக்கின்றனர் என்பதனையும் புறநானூற்றுப் பாடல்கள் தெளிவுறுத்துகின்றன.

- சங்ககாலச் சமூகச் சூழலில் இலக்கிய அறிவிற்கு இணையான பொருளறிவு இருந்திருப்பதை புழங்குபொருள் குறித்தப் பதிவினைக் கொண்டு அறிய இயலும். மேலும் அக்காலச் சூழலில் முதன்மைப்படுத்தப்பட்ட எழுத்தறிவிலிருந்து அப்போது இரண்டாந்தரப்படுத்தப்பட்ட பொருளறிவிற்கான தரவுகளைத் தற்போது பெற வேண்டியிருப்பதால் இவற்றை நிறுவுவதற்குச் சற்று கடினமாயிருக்கிறது. இது தவிர்த்து இவ்வித இலக்கியத் தரவுகளைத் தொல்பொருள் அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட பண்டைக்கால மண்பாண்டப் பொருள்களுடன் ஒப்பிட்டு ஆராயும்போது அக்காலகட்டத்தைய பொருளறிவினை மிகத் தெளிவாக எளிதில் அறிந்து கொள்ள இயலும்.

கல்வெட்டு ஒரு வரலாற்று ஆவணம். இவை மிகுதியான அளவு செய்தி அறிவிப்பு முறையிலேயே அமைந்திருக்கின்றன. அவ்வாறான இவை பெரும்பாலும் சமூக இயங்கியலின் மதிப்புறு செயல்களைத் தன்னகத்துக் கொண்டிருக்கின்றன. இதனை நமக்குக் கிடைத்த கல்வெட்டுக் குறிப்புக்களைக் கொண்டு அறிய முடிகிறது. இது அதிகாரத்தின்பாற்பட்டது. ஆகையால் இவற்றை அரச நிர்வாகத்தைப் பறைசாற்றும் தட்டையான வரலாற்றுத்தரவுகள் எனக் குறிப்பிடலாம். ஆயினும் இவ்விதத் தரவுகளிலிருந்து அவ்வக்கால சமூக நிலைப்பாட்டினை மீட்டெடுக்க வேண்டிய அவசியம் இருக்கின்றது. அதனடிப்படையில் நோக்கும்போது கல்வெட்டுகளில் மிகக்குறைந்த அளவே அதற்கான தரவுகள் காணப்படுகின்றன.

சமூகம் என்பது மக்களையும் அவர்களுக்கான தொழிலையும் மையமிட்டது. அதேபோல் அரசு என்பது அது இயக்கம்பெறத் தேவையான வரி வசூலிப்பினை மையமிட்டது. இதனடிப்படையில் இவையிரண்டும் ஒன்றோடொன்று தொடர்புடையன. ஆகையால் அரச அதிகாரத்தின்கீழ் வெட்டப்பட்ட கல்வெட்டுத் தரவுகளிலிருந்து சமூக இயங்கியலுக்கான அடிப்படைத் தேவைகளை நிவர்த்திச் செய்வதைத் தொழிலாகக் கொண்டவர்களைப் பற்றிய செய்திகளையும் அவர்களுக்கான பங்களிப்பினையும் வருவித்துக்கொள்ள இயலும். அந்த வகையில் சமூக அசைவியக்கத்திற்குத் தேவையான மிக முக்கிய பயன்பாட்டுப் பொருள்களாக மண்சார் புழங்குபொருள்களைக் குறிப்பிடலாம். ஆகவே இவை குறித்தும் இவற்றை உற்பத்தி செய்தவர்கள் குறித்தும் கல்வெட்டுத் தரவுகளின் வழி இவ்வியல் ஆய்கிறது.

## மண்ணாலான புழங்குபொருள்கள்

மண்ணாலான புழங்குபொருள்கள் பழங்காலப் பொருள்களுள் முதன்மையானதாக இருந்திருக்கின்றன. தவிர்த்து இயற்கை விளைபொருள்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட இன்னபிற பயன்பாட்டுப் பொருள்கள் புழக்கத்தில் இருந்ததற்கான தரவுகள் ஏதும் தெளிவாக இல்லை. இதனை தொல்பொருள் அகழ்வாய்வின் வழியும் இலக்கியக் குறிப்புகளின் வழியும் அறியமுடிகிறது. இதனைத் தொடர்ந்து வரலாற்றில் 'இரும்புக்காலம்' என்று குறிக்கப்பெறும் காலகட்டத்தில் இரும்பாலான கருவிகளும் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. அதுசார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் இரும்பினை மூலப்பொருளாகக் கொண்டதற்கான எவ்விதத் தரவுகளும் பெரிதளவில் இதுவரை கிடைக்கப்பெறவில்லை. ஆனால் மண்ணால் உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்களின் தன்மையினை அடிப்படையாகக் கொண்டு அது

எக்காலத்தில் உற்பத்தி செய்யப்பட்டது, அதை உற்பத்தி செய்ய பயன்படுத்தப்பட்ட கருவிகள் எவை, என்பன போன்ற பல யூகங்களை வரலாற்றாசிரியர்களும், தொல்லியலாளர்களும் முன்வைக்கின்றனர்.

> ஆதித்த நல்லூர் மண்பாண்டங்கள் நன்றாக வெந்து சிவப்பு, கருப்பு வண்ணங்களில் அழகும், உறுதியும் உடையனவாய் இருந்ததற்குக் காரணம், அவை இரும்பு ஊழியிலே எழுந்தவை என்பதேயாகும். அந்த மண்பாண்டங்களை வனைந்த மண்ணீட்டாளர் நல்ல கருவிகளை பெற்றவர்களாகவும் பட்டறிவு வாய்ந்தவர்களாகவும் இருந்ததேயாகும். *(2007:122)*

என்பார் சாத்தன்குளம் ராகவன். இக்கருத்தினை ஒத்து, வழவழப்பான மிகவும் மெல்லிதான மண்பாண்டங்கள் இரும்புக் காலத்திற்குப் பின்னானவை. மேலும் இரும்புக் கருவிகளின் பயன்பாட்டால் உற்பத்தி செய்யப்பட்டவை என்ற கருத்தினையும் தொல்லியல் ஆய்வாளர்கள் முன்வைக்கின்றனர். இதை,

> இரும்புக்காலத்தில் வாழ்ந்த தென் இந்திய மக்கள் வகைவகையான வண்ணம் வாய்ந்த மண்பாண்டங்களைச் செய்துள்ளனர். அவைகளை ஏராளமாக அங்குள்ள புதைக்குழிகளில் வைத்துப் புதைத்துள்ளனர். சிந்துவெளியில் செம்பு ஊழியில் செய்யப்பட்ட மண்பாண்டங்கள் இரும்பு ஊழியில் செய்யப்பட்ட ஏற்றமிகு மண்பாண்டங்களுக்கு ஈடாக இருக்க முடியாது. (மேற்படி:129)

என்ற இக்கருத்து வலுசேர்க்கும் விதமாக அமைந்திருக்கிறது.

தொல்பொருள் அகழ்வாய்வில் மிகுதியாகக் கிடைக்கும் வரலாற்றுத் தரவுகளாக மண்பாண்ட வகைகளைக் கொள்ளலாம். திட்டமிட்டுப் புதைக்கப்பட்ட 'தாழி' உள்ளிட்ட மண்பாண்ட வகைகள் முழுமையாகவும் காலத்தால் அழிந்த மண்பாண்ட வகைகள் சில்லுகளாகவும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைக் கொண்டு அப்பொருளின் பயன்பாட்டினையும் அப்பொருள் கண்டெடுக்கப்பட்ட பகுதிகளில் கிடைத்த கல்வெட்டுக் குறிப்புகளின் உதவிகொண்டு அதற்கான பெயரினையும் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் யூகித்துள்ளனர். குறிப்பாக, ஆதித்தநல்லூர் பறம்பில் அறிஞர் கிரியா அவர்கள் அகழ்ந்து கண்ட பொருள்களில் அணிபெறத் திகழும் மட்கலங்கள் 600க்கும் மேல் உள்ளன. அவற்றில் சுமார் 100க்கு மேற்பட்டவைகளை வகுத்துத் தொகுத்துச் சென்னை அரசினர் தொல்பொருள் காட்சிச் சாலையில் இடம்பெறச் செய்துள்ளார். அவற்றில்,

கிண்ணம், பானை, சட்டி, குண்டாபோணி, பானைமூடி, தாழி, குதிர், கலயம், மரவை, செம்பு, போணி, குண்டா, குண்டாச்செம்பு, சாடி, உருளி, பள்ளை, குடுவை, சிதை, தம்ளர் வடிவமான கிண்ணம், மூக்குக்கிண்ணம், தாலம், பாலி, சுரக்காய் லோட்டா, குடம், கூசா, தோண்டி, தவளை, சந்தனப் பேழை, அகல், குவளை, வானலி, மையக்கிண்ணம், முக்காலிக் குதில், கொட்டுக் கடலை, எண்ணெய் கிண்ணம், தோசைக்கல், பனியாரச்சட்டி, முக்குளிச்சட்டி, சுரக்காய்

போணி, வட்டில், பொரிக்கண்சட்டி, வெண்ணைச்சட்டி, தயிர்ப்பானை, கும்பாச்சட்டி, போணிசட்டி, பொங்கல்படி, பானை, சோற்றுப்பானை, குழம்புச்சட்டி, தொட்டி (சாந்தன்குளம் அ. ராகவன்; 2007:119) முதலானவை பெயர் தெரிந்தனவாகும். மற்றவை பெயர் அறியப்படாதன. மேற்குறிப்பிட்ட இவற்றுள் பல மண்பாண்ட வகைகள் தற்போது நடைமுறை வழக்கில் இல்லை. ஆனால் சில வகை மண்பாண்டங்கள் தற்போதும் புழக்கத்திலிருக்கின்றன. இது தவிர்த்து மூக்கு வட்டகை (அ) மூக்கு மத்தளிகை, மிடா, பாலிகை, தூப பாத்திரம், தாலம், தாலா, தட்டம், கை வட்டகை, சட்டுவம், குடுவை, குடம், ஓலோமி, ஒட்டுட்டி முதலான பொருள்களும் புழக்கத்தில் இருந்திருப்பதனைத் தென்னிந்தியக் கல்வெட்டுக் குறிப்புகளின்வழி கண்டறிய முடிகின்றது.

### கலன்

'கலன்' என்ற சொற்பயன்பாடு கல்வெட்டுப் பதிவுகளில் மிகுதியான அளவில் காணப்படுகின்றன. இதனை ஒட்டுமொத்தமான பயன்பாட்டுப் பொருள்களையும் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்ட ஒரு சொல்லாகக் கருத முடியும். இச்சொல் மண், மரம், உலோகம் முதலானவற்றால் உற்பத்தி செய்யப்பட்ட அனைத்துவிதமான பயன்பாட்டுப் பொருள்களையும் குறிக்கும் விதத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மண்கலம், வெண்கலம், குசக்கலம், அடுகலன், பரிகலன் முதலான சொற்களை இதன்பாற்பட்டதாகக் கொள்ளலாம். இதில் 'கலன்' என்பது பொதுச்சொல்லாக அமைந்தாலும் அதனை ஒட்டி வரும் பகுதிச்சொல் அதன் தன்மையையும் பயன்பாட்டையும் குறிப்பதாகிறது. அந்த வகையில் மண்ணாலான பயன்பாட்டுக் கலன்களை அதன் தன்மையை முன்வைத்து மண்கலம் என்றும், அதை உற்பத்தி செய்பவர்களை முன்னிலைப்படுத்தி குசக்கலம் என்றும் அழைக்கும் வழக்கம் பரவலாக இருந்திருப்பதைக் கல்வெட்டுப் பதிவுகளின் வழி அறிய முடிகின்றது. இதற்குச் சான்றாக,

> . . . . பாக்கு பத்துக்கும் வெற்றிலை நாற்பதுக்கும் நெல் இருநாழியும் அடுவானுக்கு நெல் குறுணியும் குசக்கலத்துக்கு நெல் நாழியும் விறகுக்கு நெல் நாழியும் . . . (SII; VII:409)

என்ற கல்வெட்டுப் பதிவினைக் கொள்ளலாம்.

### குடுவை

இது ஒரு காரணப் பெயர். அமைப்பின் அடிப்படையில் குறுகிய வாயும் பருத்த உடலையுடைய மண்பாண்டப் பொருளாதலால் இவ்விதப் பெயர் பெற்றிருக்கலாம். இதனைச் சுரைக்குடுவை போன்று அமைந்த கலன் என்பர் தொல்லியலாளர்கள். மேலும் இவ்விதமான குடுவைகள் குசவரால் செய்தளிக்கப்பட்டிருப்பதை,

. . . பழுவூர் வெட்கோவன் பசுவழி நகரத்தானான கருவிளை பெருங்குசவனுக்கும் உரானாச்சனுக்கும் முண்டன் நகரத்தானுக்கும் நிலன் கல்லறைக்கும் நிசதம் மூன்று **குடுவை**யும் நிசதம் மூன்று சட்டியும் மற்று வேண்டும் கலமும் இட . . . (SII; XIX:238)

என்ற கல்வெட்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. இது பெரும்பாலும் அன்றாடப் பயன்பாட்டில் நீருண்கலமாகவும், நீராகார உண்கலமாகவும் இருந்திருக்க வேண்டும்.

***குடம்***

ஒருவகையான திரவக் கொள்கலன். திரவக் கொள்கலனில் இதுவே முதன்மையானது. தற்காலத்தும் புழக்கத்திலிருக்கும் இவ்வித புழங்குபொருள் நீண்ட மரபுடையதாக இருக்கிறது. காலந்தோறுமான இதன் பயன்பாட்டினைக் கல்வெட்டுக் குறிப்புகள்வழி அறிய முடிகிறது. மிகுதியான கல்வெட்டுப் பதிவில் 'குடமும் குச்சியும் கொண்டு கோயில் புகுவோன்' என்ற சொற்றொடர் இடம் பெற்றிருக்கிறது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள 'குடம்' என்பது மண்ணால் செய்யப்பட்டிருப்பதற்கான சாத்தியக் கூறுகள் மிகுதியாக இருக்கின்றன. ஏனெனில் கோயிலுக்குத் தேவையான அனைத்துப் பொருள்களையும் உற்பத்தி செய்யப் பணிக்கப்பட்டவர்களாகக் குயவர்குடியினர் இருந்திருக்கின்றனர். ஆகையால் கோயிலுக்குத் தேவையான பெரும்பாலான பொருள்களை புனிதத்தின் அடிப்படையில் புதிது புதிதாகச் செய்து பெற்று சடங்கிற்குப் பயன்படுத்தும் வழக்கம் முன்னாளில் இருந்திருக்க வேண்டும். அவ்வாறான இவ்வழக்கத்திற்கு ஏதுவான புழங்குபொருள்களை மண்ணால் உற்பத்தி செய்து பயன்படுத்துதல் என்பது சாத்தியப்பட்டிருக்க வேண்டும். இதனை அடியொற்றியே அடுத்தடுத்த காலகட்டங்களில் 'செம்பு' பயன்பாட்டிற்கு வந்ததன் பிறகு இம்மாதிரியான சடங்குப்பொருள்களைச் செம்பு உலோகத்தால் செய்து பயன்படுத்துதல் என்பது தெய்வங்களுக்கு ஏற்புடையதாயிருக்கும் என்ற கருத்துநிலை பரவலாக இருந்திருக்க வேண்டும். இதற்குப் 'பஞ்சலோக சிலை, பஞ்சலோக பாத்திரம்' முதலானவற்றைச் சான்றாகக் கொள்ளலாம்.

இதன் பின்னணியில் உற்பத்தி செய்யப்பட்டவைகளே செம்பாலான புழங்குபொருள்கள். அந்த வகையில் நோக்கும்போது 'செம்பு' உலோகப் பொருள்களுக்கு முன் மாதிரியாக விளங்கியவை மண்ணாலான புழங்குபொருள்களே எனக் குறிக்கலாம். இவற்றில் குடமும் ஒன்று. இது பல்பயன்பாட்டுப் பொருளாக இருந்திருக்கிறது. அதிலும் முக்கியமாகத் தண்ணீர் கலமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதை,

...**தண்ணீர் கலம்** கொடு வருவானுக்கு நெல் நானாழியும்... (SII; IV:223)

என்ற கோயில் திருப்பணிகள் குறித்த கல்வெட்டிலிருந்து அறிய முடிகிறது.

*மிடா*

'மிடா' (SII; XXII:10) என்ற இச்சொல் நடைமுறை வழக்கில் உள்ள 'மொடா' என்ற பயன்பாட்டுக் கலனின் பெயருடன் ஒத்துப்போவதைக் காணமுடிகிறது. முன்னர்க் குறிப்பிட்டபடி கல்வெட்டு மொழி நடையானது வாய்மொழி வழக்காற்றுடன் நெருங்கிய தொடர்புடையதாகக் காணப்படுகின்றது. ஆதலால் இவ்வித ஒப்பீட்டு முறையைத் தர்க்கபூர்வமானதாக அமைத்துக் கொள்ள முடியும். மிடா என்பதைப் போன்று மடா என்ற சொல்லும் கல்வெட்டுக் குறிப்புகளில் காணப்படுகின்றன.

*கலவரை அரிசி பத்தெட்டுக் குத்தல் **மடா**வில் அட்டும் (SII; XII: 61)*

'மடா' என்ற இச்சொல்லிற்குத் தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி 'பெரிய மண்கலம்' என்பதாகப் பொருள் தருகிறது. 'மிடா' என்பதற்கும் இதுவே பொருளாகிறது. தற்போது நடைமுறை வழக்காற்றில் உள்ள 'மொடா' என்ற சொல்லும் நீர் நிறைத்து வைக்கும் பெரிய பானையைக் குறிப்பதாகவே இருக்கிறது. ஆக, மிடா, மடா, மொடா எனப் பலவாறாக வழக்கிலிருந்திருக்கும் இச்சொல் மண்ணாலான பெரிய நீர்கொள்கலனைக் குறிப்பதாக இருந்திருக்க வேண்டும். இது, கொள்கலனாகவும் அளவையாகவும் பயன்படுத்தப் பட்டிருக்கிறது என நடன. காசிநாதன் தனது தொல்லியல் ஆய்வில் பதிவுசெய்துள்ளார் *(1994:128)*.

*பானை*

*...மண்ணுடையான் நிசதம் ஒரு திருவமுது **பானை**யும் கறிச்சட்டியும் குடமும் கடாம் கலசமும் . . . (SII; XIX:169)*

என்ற இக்கல்வெட்டுக் குறிப்பிலிருந்து 'மண்ணாலான பொருள் உற்பத்தியில் ஈடுபட்ட குயவர்கள் 'மண்ணுடையான்' என்ற பெயரில் அழைக்கப்பட்டிருப்பதை அறிய முடிகிறது. மேலும் அவர்கள் கோயில் ஊழியமாகத் தினந்தோறும் கோயிலில் பொங்கல் சமைக்க ஒரு பொங்கல் பானையும், அதற்கான காய்கறி வகைகள் சமைக்க சட்டியும், நீர்கலனான குடமும் கலசமும் தருவதை வழக்கமாகக் கொண்டிருந்திருந்ததையும் கல்வெட்டுகள் சுட்டுகின்றன.

மேலும் இக்கல்வெட்டுக் குறிப்பின் வழி ஆராயும்போது 'பானை' என்பது அடுகலனாகப் பயன்படுத்தப்பட்டிருப்பது புலனாகிறது. இம்முறை தற்போது வழக்கிலிருப்பினும் நீர் மற்றும் தானியங்கள் சேகரித்து வைக்கப் பயன்படும் கலனாகவும் மாற்றுப் பயன்பாட்டுப் பரிமாணம் பெற்றிருக்கிறது. தற்கால அளவில் இப்பயன்பாடே இப்பொருளுக்கான அடையாளம். ஆனால் மேற்குறிப்பிட்ட கல்வெட்டுக் குறிப்பில் உள்ளபடி அடுகலனைக் குறிக்கும் சொல்லாகவும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. சான்றாகச் சோற்றுப்பானை, கூழ்ப்பானை முதலானவற்றை இதன்பாற்பட்டதாகக் கொள்ளலாம். தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி 'பானை' என்ற சொல்லிற்குச் 'சோற்றுக்கலம்' எனப் பொருள் தருகிறது.

***சால்***

கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள 'சால்' என்ற சொல்லுக்குத் தண்ணீர் நிரப்பும் பானை எனத் தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி பொருள் தருகிறது. இச்சொல் தற்போதும் நடைமுறை வழக்கில் இருக்கின்றது. ஆனால் இதற்கான பயன்பாடு கூடுதல் தேவையை நிவர்த்திக்கும் விதத்தில் அமைந்திருக்கிறது. அதாவது இக்கலன் நீர் நிரப்பி வைத்தலுக்கு மட்டுமானது என்றில்லாமல் தானிய வகைகள் நிரப்பி வைக்கவும் மிகுதியாகப் பயன்படுத்தப்படும் வழக்கம் தற்போது தொண்டை மண்டல வட்டார வெகுமக்களிடையே இருந்து வருகிறது. அதிலும் 'சால்' என்ற கலன் நீர் நிறைத்து வைப்பதற்கானது என்ற வழக்கம் வெகுவாகக் குறைந்து தானியம் நிரப்பி வைத்தலுக்கானது என்ற வழக்கம் தற்போது மேலோங்கிக் காணப்படுகின்றது. ஆனாலும் இதற்கான முன்னாளையப் பயன்பாடென்பது நீர் நிறைத்து வைப்பதற்கானதாகவே இருந்திருக்கிறது. இதை,

...கலசங்களும் மற்றுஞ் **சால்**களும் . . . . . . (SII; XVIII:222)

என்ற கல்வெட்டுக் குறிப்புகளின்வழி அறிய முடிகிறது.

***சட்டி***

அடுகலத்தின் ஒருவகை பொதுப்பெயர். 'சட்டி' என்பது அடுகலமாகவும் அளவையாகவும் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் கல்வெட்டுக் குறிப்புகளின்வழி அறியமுடிகிறது. 'சட்டிச்சோறு' அளித்தல் என்ற செய்தியைப் பரவலாகக் கல்வெட்டுக் குறிப்புகளில் காணமுடிகின்றது. இவ்விடத்தில் இதனை ஒரு அளவையாகக் கொள்ள வாய்ப்பிருக்கிறது. இது தவிர்த்து அடுகலனைக் குறிக்கும் பொருட்டும் 'சட்டி' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதை,

நிசதம் மூன்று குடுவையும் நிசதம் மூன்று **சட்டி**யும் மற்றும் வேண்டும் கலமும் . . . (SII; XIX: 238)

என்ற கல்வெட்டுக் குறிப்பின்வழி அறியமுடிகிறது. மேலும் இதனைக் குயவர் சமூகத்தினர் கோயிலுக்கு ஊழியமாகச் செய்து தருவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர் என்பது இதன்பாற் புலப்படுகிறது.

அடுகலனாகப் பயன்படுத்தப்படும் இவ்விதச் சட்டிக்கு 'அடிக்கால்' வைத்துப் பயன்படுத்தும் வழக்கமும் இருந்திருக்கிறது. இதற்குச் சட்டிக்கால் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. இதனை, கல்வெட்டுச் செய்தியில் உள்ள

தாராச் **சட்டி**க்கால் ஒன்று (SII; V:521)

என்ற குறிப்பின்வழி அறியமுடிகிறது. விறகில் சமைக்கப்படும்போது அடுகலனில் அதிகப்படியான கரி படிகிறது. அக்கரி, கலனை வைத்துப் பயன்படுத்தப்படும் இடமெல்லாம் பூசிவிடக் கூடாது என்பதனால் இவ்விதச் சட்டிக்கால் வைத்துப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். அதுவல்லாது சட்டியின் அடிப்பகுதி உருளையான அமைப்புடையதாக இருப்பதால் அவற்றைத் தரையில் நிறுத்திவைப்பதற்கான நிலைக்கலனாக இவ்விதச் 'சட்டிக்கால்' பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

### *கறிச்சட்டி*

இது ஒரு வகையான அடுகலன். பயன்பாட்டடிப்படையில் இவை பலவகைப்பட்டன. இதை,

திருவமுது பானையும் **கறிச்சட்டி**யும் குடமும் கடாம் கலசமும் (SII; XIX:169)

என்பன போன்ற கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து 'கறிச்சட்டி' என்ற சொல்லை அறியமுடிகிறது. இது கோயில் பயன்பாட்டிற்கானதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. நிறுவனமயப்படுத்தப்பட்ட கோயில்களே அரச நிர்வாகத்தின் கீழ் இயங்கி இருக்கின்றன. அவ்வாறான கோயில்கள் அசைவ உணவினை ஏற்றிருக்கவில்லை. ஆதலால் இச்சொல்லில் குறிப்பிடப்பட்டுள்ள 'கறி' என்ற சொல்லுக்கு 'மரக்கறி' என்பதாகப் பொருள் கொள்ள இயலுகிறது. இதனை 'காய்கறி' என்ற பயன்பாட்டுச் சொல்லினோடும், 'பத்துகறி பதார்த்தத்துடனான சாப்பாடு' என்ற வாய்மொழி வழக்காற்றுத் தொடரினோடும் ஒப்பு நோக்கமுடியும். ஆக, 'கறிச்சட்டி' என்பதனைப் 'பச்சைக் காய்கறிகள் சமைக்கப் பயன்படுத்தப்பட்ட மண்ணாலான அடுகலன்' என்பதாகப் புரிந்து கொள்ளலாம். இதனை நடைமுறை வழக்கில் உள்ள புடலங்காய்ச் சட்டி, பூசணிக்காய்ச் சட்டி, கீரைச்சட்டி என முறையே தனித்தனிப் பயன்பாட்டினைக் குறிக்கும் பச்சைக் காய்கறிகள் சமைப்பதற்கான அடுகலன்களுடன் பொருத்திப் பார்ப்பது சிறந்தது.

### *ஒட்டுட்டி*

சமைப்பதற்குரிய பாத்திரம். மதுரைக்கு அருகில் அமைந்துள்ள ஆனைமலையில் உள்ள "முதலாம் பராந்தகனின் கல்வெட்டு வேத பிராமணர்கள் உணவுண்ண, சமைப்பதற்கான கலனாக ஒட்டுட்டி அளிக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றது." (நடன. காசிநாதன்; ***1994:125***). இதை,

. . . தாலமஞ்சும் வட்டிலஞ்சும் **ஒட்டுட்டி** ஒன்று . . . (SII; III: 240)

என்ற கல்வெட்டுப் பதிவின் வழியும் அறிய முடிகிறது.

### *ஓலோமி*

அடுகலனுக்குரிய ஒருவகைப் பெயர். திருச்செந்தூர்க்கு அருகில் உள்ள பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆத்தூர்க் கல்வெட்டு திருவமுது செய்வதற்காக அளிக்கப்பட்ட கலன்களில் ஒன்றாக இதனைக் குறிப்பிடுகிறது. 'ஓலம்படி' அல்லது 'உலை மூடி' என்று தற்காலத்தில் வழங்கும் கலனாகவும் இது இருந்திருக்க வேண்டும் (நடன. காசிநாதன்; ***1994:241***). இதைக் குயவர்களே உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். ஆகையால் இது மண்கலம் என்பதில் ஐயப்பாடேதுமில்லை. இக்கருத்திற்குச் சான்றாக,

நித்தர் படி புதுமுடாவும் புத்**தோலோமி**யும் இடும் குசவனுக்கு ...
(SII; XIII:35)

என்ற கல்வெட்டுப் பதிவினையும்,

> . . . திருப்பள்ளி சந்தம் கொடு வருவார்க்கு நெல்லு நானாழியும் திருவமுது அட்ட மிடா இரண்டு சட்டி நாலும் **ஓலோமி** இரண்டுக்கும் நெல் அறுநாழியும் . . . (SII; XIV:192)

என்ற கல்வெட்டுப் பதிவினையும் சான்றாகக் கொள்ள முடிகிறது. இப்பதிவுகளில் 'ஓலோமி'யுடன் கூறப்பட்டுள்ள மிடா, சட்டி முதலான பாண்டங்கள் மண்ணாலான கலன்களாகத் தற்போதும் வழக்கில் இருக்கின்றன. அதே போல் 'ஓலோமி' என்பதும் முன்னர்க் குறிப்பிட்டபடி தற்போது வழக்கிலுள்ள 'ஒலைமூடி' என்ற மண்கலனாகவோ அல்லது வழக்கொழிந்த ஒரு வகைப்பட்ட அடுகலனாகவோ இருந்திருக்க வேண்டும்.

### *சட்டுவம்*

'சட்டுவம்' என்பது ஒரு வகையான அடுகலன் என்பர் தொல்லியல் ஆய்வாளர்கள் (நடன. காசிநாதன்; **1994:240**). இது மண்ணாலான கலனாகவே இருந்திருக்க வேண்டும் என்பதை,

> . . . தாலமஞ்சும் வட்டிலைஞ்சும் ஒட்டுட்டி ஒன்றும் **சட்டுவம்** ஒன்றும் அடுவான் ஒருவனுக்கு நிசதி நெல்லு அஞ்ஞாழி அறு திங்களொரு புடவை வைச்சு இப்பரிசு இக்கலமூட்டுவதாக . . . (SII; III: 240)

என்ற கல்வெட்டுப் பதிவின்வழி அறிய முடிகிறது. மேலும் 'சட்டுவம்' என்ற கலன் புழக்கத்திலிருந்ததை,

> சுட்ட சட்டி **சட்டுவம்** கறிச்சுவை அறியுமோ (சிவவாக்கியார்)

என்ற சித்தர் பாடல்களின் வழியும் அறிய முடிகிறது. இதில் சட்டுவம் என்பதை 'அகப்பை' (ஆப்பை - மரத்தாலான கரண்டி) எனப் பொருள் கொள்வாரும் உண்டு. ஆனாலும் மேற்குறிப்பிட்ட கல்வெட்டுச் சான்றுகளின் படி 'சட்டுவம்' என்பதை மண்கலனாகக் கொள்ள இயலும்.

### *தட்டம்*

தட்டம் என்ற இப்பெயர் பொருளின் வடிவத்தை மையமாகக் கொண்டு உருவானதாக இருக்கலாம். அதாவது தட்டையாக இருக்கும் கலம் தட்டம் என்றழைக்கப்பட்டிருக்க வேண்டும். இதுகுறித்துத் தொல்லியலாய்வாளர் நடன. காசிநாதன் குறிப்பிடுகையில்,

> . . . . தட்டம் என்பது ஒரு உண்கலம். இது தட்டு என்று தற்காலத்தில் வழங்கப்படுகிறது. சோழர்காலக் கல்வெட்டுகளில் பொன்தட்டம், வெள்ளித்தட்டம் என்று பல்வகை உலோகத்தாலான தட்டுகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன (நடன காசிநாதன்; **1994:125**).

இதற்குச் சான்றாக,

> . . . நாற்பத்தென் கழஞ்சரை . . . **தட்டம்** ஒன்று வெள்ளி நாற்பத்தென் கழஞ்சு முக்காலே மூன்றிநால் வெள்ளி . . . (SII; XIX:23, II:91, 115)

என்ற கல்வெட்டுக் குறிப்பினைக் கொள்ள முடிகிறது. இவ்விடத்து மண்ணாலான உண்கலன் நடைமுறை வழக்கில் தாலம், தாலா என்ற தனித்த பெயர் பெற்று இருப்பது குறிப்பிடத்தக்கது.

***தாலம்***

இது ஒரு வகையான உண்கலன். "இது வேத பிராமணர்கள் உணவு உண்பதற்குச் செய்தளிக்கப்பட்டிருக்கிறது" (நடன. காசிநாதன்;*1994:125*). இதை,

...**தாலம**ஞ்சும் வட்டிலைஞ்சம் ஒட்டுட்டி ஒன்று... (SII; III:106)

என்ற கல்வெட்டுப் பதிவிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. இதில் 'தாலம்' என்ற பொருளைத் தொடர்ந்து கூறப்பட்டுள்ள வட்டில், ஒட்டுட்டி முதலான பொருள்கள் மண்ணாலான பொருள்களாக இருக்கும் பட்சத்தில் இதுவும் மண்ணாலான உண்கலமாகவே இருந்திருக்க வேண்டும். இதற்குச் சான்றாக நடைமுறை வழக்காற்றில் உள்ள 'தாலா'வின் பயன்பாட்டினைக் கொள்ளலாம். தற்போதும் இஸ்லாமியர்கள் தங்களுக்கான மரபான உண்கலமாக 'தாலா'வைக் கொண்டிருக்கின்றனர். ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் உணவு உண்ணும் அளவிற்கு அளவில் பெரியதாக இருக்கும் இவ்வுண்கலம் இன்றும் இஸ்லாமியர்களிடையே புழக்கத்திலிருக்கின்றது. தற்போது இது உலோகத்தால் செய்து பயன்படுத்தப்படினும் இதற்கு இப்பெயரே வழங்கப்பட்டிருக்கிறது. இதனை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது 'தாலம்' என்பதை முன்குறிப்பிட்ட கல்வெட்டுக் குறிப்பின்படி மண்ணாலான உண்கலனாகக் கொள்ள இயலும்.

***மூக்கு வட்டகை***

அகன்ற வாய்ப்புறத்தின் ஒரு புறத்தில் அக்கலத்தின் கொள்பொருள் வெளிவருவதற்கான வழி வடிவமைக்கப்பட்டிருக்கும். மண்ணாலான சிறிய பயன்பாட்டுப் பொருளை மூக்கு வட்டகை என்றழைக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. இதன் சிறிய உருவமாகவும், சிறந்த உதாரணமாகவும் 'அகல்' விளக்கினைக் குறிக்கலாம். இது 'தீபம்' ஏற்றுவதற்கானதாகவே பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் மூக்கு வட்டகை என்பது அன்றாடப் பயன்பாட்டிலிருந்த ஒரு பொருளாக இருந்திருக்க வேண்டும். இதைத் தொல்லியலறிஞர் நடன. காசிநாதனின்,

> **மூக்கு வட்டகை** என்பது மூக்கு போன்ற வாயையுடைய கிண்ணம். நெய்யிடுவதற்கு இருந்த கலன். மூக்கு மத்தளிகை என்று கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது (நடன. காசிநாதன்; *1994:128*).

என்ற கருத்துடன் ஒப்புநோக்கிப் பார்க்க இயலும். இப்பயன்பாட்டுப் பொருள் செப்பிலும் செய்து பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஆயினும் இதற்கான முன்னுரு மண்ணாலானதாகவே இருந்திருக்க வேண்டும். இதை,

. . . விக்கிரம சிங்கமு வேந்த . . . . வெளாளெந் செய்துவித்திட்ட நிறைச் செம்பொன் ஆறு கழஞ்சு இவ்வாறு நெய்யிட்ட செப்பு **மூக்கு மத்தளிகை.** . . (SII; XXVI:742)

என்ற கல்வெட்டுக் குறிப்பினைச் சான்றாகக் கொண்டு அனுமானிக்க முடிகிறது.

***பாலிகை***

பாலிகை என்பது சடங்கோடு தொடர்புடைய ஒரு மண்ணாலான பயன்பாட்டுப் பொருள். சடங்கும், சடங்கு நிகழ்வுகளும் இயற்கையோடு தொடர்புடைய ஒன்று. ஆதலால் அவற்றிற்கு இயற்கை மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களே உகந்ததாக அமைகின்றன. அவ்வாறானவற்றில் பாலிகையும் ஒன்று. கல்வெட்டுக் குறிப்புகளில் இது 'திருமுளைப்பாலிகை' எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

....திருமஞ்சநத்துக்குத் திருமுறைச் சார்ந்த **திருமுளைப்பாலிகை** முப்பத்தாருக்கு..... (SII; III:80)

...கலசங்களும் மற்றுஞ் சால்களும் குடங்களும் பெருந்திருவமுதுக்கு பானைகளும் சட்டிகளும் **திருமுளைப்பாலிகை**களும் இடுங் குசவனுக்கு நிசதந் நெல்லு முந்நாழியும்..... (SII; XVII:222)

...**பாலிகை**க்கு கிழட்ட முளையட்ட பயிருங் கடுகும் எள்ளும் முதலாக வேண்டுவன எல்லாத்துக்கும்.... (SII; XIX:380)

எனப் பலவாறு 'பாலிகை' குறித்தப் பதிவுகள் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளன.

***தூபபாத்திரம்***

இது புகையிடுவதற்கானதாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தற்போது நடைமுறை வழக்காற்றில் உள்ள தூபக்கால், தூபகலசம் முதலான சொற்களை இதன்பாற்பட்டதாகக் கொள்ளலாம். 'தீபம்' என்ற சொல் வாய்மொழி வழக்கில் 'தூபம்' என மருவி இருக்கலாம். கல்வெட்டு மொழியானது பெரும்பாலும் வெகுசன பேச்சுமொழியோடு ஒத்திருப்பதால் இவ்வகைத்தான சொற்பயன்பாடுகள் கல்வெட்டுத் தரவுகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன. மேலும் கோயிலை மையமிட்டு நடத்தப்பட்ட அரச நிர்வாகத்தில் கோயிலுக்குச் செய்யப்பட்ட பணிகள் மிகுதியானவை. ஆகையால் இவ்விதச் சடங்குப் பொருள்கள் குறித்த பதிவுகள் கல்வெட்டுக் குறிப்புகளில் மிகுதியாகக் கிடைக்கப் பெறுகின்றன. இதை,

. . . . பன்னிரு கலமும் அளப்பதாகவும் இந்நிலஞ்சுட்டி மற்றெப்பேர் பட்டதும் செய்யாதிருக்கவும் இந்நிலத்து இலமனை . . . முன்செய்யின் மெலைமனைய இலைமனை ஆவதாகவும் இவனை துருப்புகைக்கு இட்ட திராதூப பாத்திரம் நிறை அறுபத்து நாற்பலம் . . . (SII; XXVI:732)

என்ற கல்வெட்டுச் செய்தியிலிருந்து அறிய இயலுகிறது. மேலும் இவை ஊழியத்தின் பேரில் உற்பத்தி செய்து தரப்பட்டதற்கான சான்றும் இதன்பால் இருப்பது குறிப்பிடத்தக்கது.

***கடாரம்***

'கடாரம்' என்ற சொல்லுக்குத் தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி 'கொப்பறை' எனப் பொருள் தருகிறது. தற்போது 'கொப்பறை' என்ற பொருள் வேளாண் சமூகப் பயன்பாட்டில் இருக்கிறது. இது 'வெல்லம்' வார்த்தெடுப்பதற்குப் பயன்படுத்தப்படும் ஒருவகை மண்கலம். கரும்பு விளையும் நிலவளம் மிக்க வட்டாரங்களில் இவ்வித மண்பாண்டப் பொருள் புழக்கத்தில் இருக்கிறது. (விழுப்புரம், திருவண்ணாமலை, காஞ்சிபுரம்). இக்கொப்பறையின் உள்ளீடாக ஈரத்துணியை இட்டு அதனுள் சுடச்சுடக் காய்ச்சப்பட்ட வெல்லப்பாகினை ஊற்றி அது ஆறித் திடப்பட்டவுடன் அதனை வெல்லக் கட்டியாக உருவாக்கி எடுக்கும் வழக்கம் இருந்து வருகிறது. அரைவட்ட வடிவில் உள்ள இம்மண்கலத்தின் அடிப்பகுதியில் சிறுசிறு துளைகள் இடப்பட்டிருக்கின்றன. இவ்வித அமைப்பினை உடைய இதை 'கொப்பறை' என்றழைக்கின்றனர். கல்வெட்டில் கூறப்பட்டுள்ள 'கடாரம்' (S11; XIII:255) என்பது இப்பொருளாக இருக்க வாய்ப்பிருக்கிறது.

**மண்பாண்ட உற்பத்தியாளர்கள்**

மண்ணாலான புழங்குபொருள்களை உற்பத்தி செய்தளித்த தொழிநுட்ப வினைஞர்களை 'குயவர்கள்' என்றழைக்கும் மரபு இருந்திருப்பதை மிகுதியான கல்வெட்டுக் குறிப்புகள் நிறுவுகின்றன. இவர்கள் இவ்வுற்பத்தியை மட்டுமே தொழிலாகக் கொண்டிருந்ததால் சமூக நிலைப்பாட்டில் இத்தொழிலே இவர்களுக்கான அடையாளமாக்கப்பட்டிருகிறது. இன்றியமையாத தேவையை நிறைவுசெய்யும் தொழிலை முதன்மையாகக் கொண்ட இக்குயவர்கள் சமூக இயங்குதளத்தில் இருவேறுபட்ட நிலையினைக் கொண்டிருந்திருக்கின்றனர். இதைக் கல்வெட்டுக் குறிப்புகளில் காணப்படும் குயவர், வேட்கோவர் என்ற இருவகையான சொல்லாளுகையைக் கொண்டு உணரமுடிகிறது. இதில் குயவர் என்ற சொல் கையாளப்பட்டுள்ள கல்வெட்டுக் குறிப்புகள் அனைத்தும் அவர்களுக்கு அளிக்கப்பட்ட கோயில் / ஊர் மானியம் குறித்த செய்திகளைக் குறிப்பிடுகின்றன. இக்குறிப்புகளில் இவர்கள் கோயிலுக்கு ஊழியம் செய்பவர்களாகவும்; அதன்பொருட்டு கோயில் கருவூலத்திலிருந்து கடன்தொகை பெற்றவர்களாகவும் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர். இதுகுறித்து டி.வி.மகாலிங்கம் குறிப்பிடுகையில்,

> அக்காலத்தில் இன்றிருப்பது போன்ற போக்குவரத்து வசதிகள் இல்லை. கிராம மக்கள் தங்களுக்குத் தேவையான பொருள்களை வெளியே சென்று வாங்க இயலாது ஆகவே ஒவ்வோர் கிராமத்திலும் வெவ்வேறு தொழில் செய்பவர்கள் இருந்தனர். மண்பாண்டம் செய்யும் குயவர்கள் கல்வெட்டுகளில் 'வேட்கோவர்'

> என்று குறிப்பிடப்படுகின்றனர். 'குசக்காணம்' என்னும் பெயரில் தங்கள் தொழிலுக்குரிய வரியை அரசுக்குச் செலுத்தியுள்ளனர். பானை செய்யப் பயன்படும் சக்கரத்திற்குத் தனியாகச் 'சக்கரக் காணிக்கை', 'திரிகை ஆயம்' என்னும் பெயரில் வரி செலுத்தியுள்ளனர். இவர்கள் செய்யும் பணிக்கு ஊதியமாக 'குசக்காணி', 'குசப்பட்டி' எனும் பெயரிலும் மண்பாண்டம் செய்வதற்குரிய மண்ணுக்காக 'குலால விருத்தி' எனும் பெயரிலும் நிலங்கள் வழங்கப்பட்டன. குயவர்கள் ஒரு மேலாடை அணிந்துகொள்வதற்கு ஊர்க்கடை உரிமை அளித்துள்ளதை ஆச்சான்புரக் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. (T.V.Mahalingam; 1967:423)

என்று குறிப்பிடுகிறார்.

மேலும் இவர்கள் கோயில் ஊழியம் செய்தமைக்காக கோயில் நில வினைபொருளில் இருந்து தானிய வகைகள் கூலியாக தரப்பட்டிருக்கின்றன. இம்முறைமை தற்போது நடைமுறையில் 'மேரை' மெராசி, குடிமை' என்று வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது. கல்வெட்டுக் குறிப்பில் உள்ள செயல்பாடும் நடைமுறைச் செயல்பாடும், ஒத்துப்போகும் இந்நிலையில் இதற்கு உரியவர்களாகக் குறிப்பிட்ட ஒருவகைக் குயவர்களைக் கொள்ளலாம். இவர்கள் ஒட்டுமொத்த ஊர்மக்களுக்குப் பொதுவானவர்களாக இருந்திருக்கின்றனர் என்பதனை இவ்விதமான ஒத்தத் தரவுகளைக் கொண்டு அனுமானிக்க முடிகின்றது. எனவே, இத்தொழில் செய்பவர்களுள் 'குயவர்' என்ற பெயரால் குறிப்பிடப்படுபவர்கள் பொதுமக்களுக்குத் தேவையான மண்பாண்டப் பொருள்களை உற்பத்தி செய்து தருபவர்களாக இருந்திருக்கலாம். ஆனால் வேட்கோவர் என்ற சொல் குறைவான அளவே கல்வெட்டுக் குறிப்புகளில் காணப்படுகின்றன. குயவர், குசவர் என்ற சொல்லைப்போல மிகுதியான அளவு இச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கவில்லை. மிகவும் அரிதாகவே காணக்கிடக்கும் இச்சொல் 'அரசாணை' பற்றிய கல்வெட்டுக் குறிப்புகளில் மிகுதியாக இருக்கின்றன. 'வேட்கோவர்கள்' எனப்பட்ட இவர்கள் நில ஆவணங்களில் கையெழுத்திட்டவர்களாகவும், கோயிலுக்குத் திருநந்தா விளக்கெரிக்க நிலம், காசு, ஆடு, தானியம் முதலானவைகளை தானமளித்தவர்களாகவும் இருந்திருக்கின்றனர். மேலும் இவர்கள் பெருநிலப்பரப்பை உடைமையாகக் கொண்டிருந்திருக்கின்றனர். அந்நிலப்பரப்பை 'வேட்கோவக்காணி' என்று குறிக்கும் வழக்கம் இருந்திருப்பதையும் கல்வெட்டுக் குறிப்புகள் குறிப்பிடுகின்றன.

வேட்கோவர்கள் திறை (வரி) செலுத்தியதைக் குறிக்கும் கல்வெட்டுக் குறிப்புகள் பெருமளவில் ஏதுமில்லை. ஆனால் குயவர்கள் வரி செலுத்தியதற்கு அடையாளமாகக் 'குசக்காணம்' என்ற சொல்லைக் காணமுடிகிறது. இவ்வாறான இருவேறுபட்ட நிலையினை அடிப்படையாகக்கொண்டு குயவர், வேட்கோவர் என்ற இரு பிரிவினர் இருந்திருப்பதை அறிய முடிகிறது. மண்பாண்டத் தொழிலினை முதன்மையாகக் கொண்ட இவ்விரு தரப்பட்டவர்களும் சமூக நிலைப்பாட்டில் வெவ்வேறு வகையில் மதிக்கப்பட்டிருக்கலாம். அவ்வாறு

ஒவ்வொரு சமூகத்திலும் இருவேறுபட்ட நிலையினர் இருந்திருப்பதற்கான தரவுகள் இளங்கோவடிகள் காலந்தொட்டே கிடைக்கிறது. ஆகையால், இதை இளங்கோவடிகளின் வேத்தியல் மரபு, பொதுவியல் மரபு என்ற இருவேறுபட்ட பாகுபாட்டில் பொருத்திப் பார்க்க வேண்டிய அவசியம் இருக்கின்றது. இளங்கோவடிகள் குறிப்பிடும் வேத்தியல் மரபு என்பது 'அரச குடிகளுக்கானது. பொதுவியல் மரபு என்பது பொதுமக்களுக்கானது. பாணர்கள், கூத்தர்கள் உள்ளிட்ட கலைஞர்களிலும் இவ்விருவேறுபட்ட வகை இருந்திருப்பதை இளங்கோவடிகளின் இக்கூற்றுவழி அறியமுடிகின்றது. இதை வைத்து ஒப்பு நோக்கும்போது குயவர்களைப் பொதுவியல் மரபுக்கானவர்களாகவும், வேட்கோவர்களை வேத்தியல் மரபுக்கானவர்களாகவும் பிரித்தறிய இயலும். இதை உறுதிப்படுத்தும் விதமாக,

*கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே*
*அச்சுடை சாகாட் டாரம் பொருந்திய*
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
*நனந்தலை மூதூரக் கலஞ்செய் கோவே* *(புறம். 256)*

என்ற ஐயனூர் முடவனாரின் பாடல் அமைந்திருக்கின்றது. இதில் அரசனுக்குத் 'தாழி' வனைய பணிக்கப்பட்டவராக 'வேட்கோவர்' குறிப்பிடப்படுகின்றார். அதேபோல் ஊர் செய்தி சொல்லுபவராகவும் (நற்.200), ஊர் மன்றத்தில் 'பலியிடும்' தொழிலைச் செய்பவராகவும் (நற்.293) குயவர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர். இவ்விரு வேறுபட்ட நிலைப்பாடுகளும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கனவாக இருக்கின்றன.

## கோயில் ஊழியம் - குயவர்கள்

பிற்காலச் சோழர்காலத்தில் கோயில்கள் நிலவுடைமை நிறுவனங்களாக இருந்துள்ளன. மேலும் நிர்வாக அமைப்புகளாகவும் நாட்டின் கருவூலங்களாகவும், கலைக்கூடங்களாகவும், கல்விச் சாலைகளாகவும் மருத்துவமனைகளாகவும் இருந்திருக்கின்றன. மேலும் கோயில்கள் அதன் நில வேளாண்மை, அதன் பராமரிப்பு, அதன் பாதுகாப்பு என்று பல்வேறு வகைகளில் மக்களுக்கு வேலைதரும் நிறுவனங்களாகவும் விளங்கி உள்ளன. அக்காலக் கோயில்கள் மக்களின் அன்றாட வாழ்வியலோடு இணைந்து அவர்களின் வாழ்வியல் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு இயங்கியதால் கோயில் நிர்வாகம் முறைமைப்படுத்தப்பட்ட சமூக அமைப்பாகச் செயல்பட்டு இருக்கிறது. தனி நபரிடமோ அல்லது தனிக் குழுக்களிடமோ இந்நிர்வாகப் பொறுப்பு இருந்தால், சீர்கேடுகள் விளைவதற்குச் சாத்தியம் இருக்கின்றன. ஆகையால் இதனைத் தவிர்க்க கோயிற் பணிகள் மிகுதியாக்கப்பட்டு ஒவ்வொரு பணியையும் செய்யத் தனித்தனிக் குழுக்கள் அமர்த்தப்பட்டிருக்கின்றன (தி.வை. சதாசிவபண்டாரத்தார்; 1979:56). அவ்வாறு அமர்த்தப்படும் அக்குழுக்கள் சமூகக் கட்டமைப்பில் அவர்கள் செய்யும் தொழிலை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றனர்.

அவர்களுக்குக் கோயில் கருவூலத்திலிருந்து பணமும், தானியமும் ஆண்டுதோறும் கூலியாகத் தரும் வழக்கம் இருந்திருக்கின்றது. ஆண்டிற்கு ஒருமுறை பெறுவதால் இதை ஊழியமென்றும்; அதையே கோயிலுக்குச் செய்வதால் கோயில் ஊழியம் என்றும் குறிப்பிடுதல் மிகவும் பொருத்தமானதாயிருக்கும். மேலும், இதைச் சமூக வழக்கத்தின் பிரதிபலிப்பு எனவும் கொள்ள முடிகின்றது.

வேளாண் குடிகளுக்கு ஆண்டு முழுக்க ஊழியம் செய்து அதற்குப் பலனாக அவ்வாண்டின் முடிவில் அல்லது அவ்வாண்டின் இடைப்பகுதியில் ஆண்டிற்கு ஒருமுறை தானியங்களைக் கூலியாகப் பெறும் வழக்கத்தினைக்கொண்டு இம்முறை உருவாகியிருக்கலாம். ஆக ஊழியம் செய்யும் குடியினர் ஊருக்கும் ஊருக்குப் பொதுவான கோயிலுக்கும் பொதுவானவர்களாக இருந்திருக்கின்றனர். இதைச் சிதம்பரத்திலுள்ள இராசேந்திரச் சோழன் கல்வெட்டு தெரிவிக்கின்றது. அக்கல்வெட்டில் சிற்றம்பல உடையார் கோயிலில் ஆவணித் திருநாள் நடைபெறுவதற்கும் உடையார்க்கு அமுது செய்வதற்கும் கொடை வழங்கப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இச்செய்தியில் விழாக்காலத்தில் அமுது படைத்துச் சட்டிச்சோறு ஆயிரம் வழங்கப்பட்டதையும் அதற்காக இக்கோயிலுக்குத் தேவையான மண்பாண்டப் பொருள்களைச் செய்து தந்த குயவர் ஒருவருக்கு 'நான்கு நாழி' நெல் கூலியாக வழங்கப்பட்டிருப்பதையும்,

> ....விறகு கட்டு ஒன்றுக்கு நெல்லு முக்குறுணி நானாழியும் சனி ஒன்றுக்கு எண்ணை உரி ஆழாக்குக்கு நெல்லு ஐங்குறுணியும் சாலை மடையன் ஒருவனுக்கு நெல்லு அறுநாழியும் மேற்படியானுக்குப் புடவை..... நெல்லு எண்கலமும் குசவன் ஒருவனுக்கு நெல்லு நானாழியும் வாழ்வாக்கி . . . (SIl; IV:223-31)

என்ற கல்வெட்டுக் குறிப்பின்வழி அறியமுடிகின்றது. இவ்வாறு கூலிபெறும் குயவர்கள் கோயிலுக்கு வேண்டிய இன்னின்ன பொருள்களை உற்பத்தி செய்து தரவேண்டும் என்று பணிக்கப்பட்டிருப்பதையும் இக்கல்வெட்டுக் குறிப்பில் காண முடிகின்றது. இதைப்போலவே குயவர் கோயிலுக்கு தினந்தோறும் ஒரு திருவமுது பானையும் அதன் பிறகு கறிச்சட்டி, குடம், கடாம், கலசம் முதலான மண்பாண்ட வகைகளையும் உற்பத்தி செய்து அளித்தமையைத் திருப்பழங்கோளூர் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது. ஆக இதுபோன்று கோயிலுக்கு ஊழியம் செய்யும் முறை அக்காலச் சமூக வழக்கத்தில் இருந்திருக்கின்றது. அதை அப்படியே அடுத்தடுத்த காலகட்டங்களில் பின்பற்றவும் செய்திருக்கின்றனர். ஆதலால் பிற்காலத்தில் கோயில்கள் சமூக இயங்கியலுக்கான மையமாகத் திகழ்ந்திருக்கின்றன. இவ்வாறான தொடர்ச்சியை மையமாக வைத்து நோக்கும்போது கோயிலுக்காகக் குயவர்கள் செய்த பணியைச் சமூக வழமையை ஒத்த ஊழிய முறைமையாகக் கருத இடமுள்ளது.

மேலும் ஒப்பந்த முறையில் கோயிலுக்குத் தேவையான மண்பாண்டப் பொருள்களை உற்பத்தி செய்துதரும் பணியையும் குயவர்கள் செய்திருக்கின்றனர். இது சமூக வழமையிலிருந்து சற்று மாறுபட்டது. அதாவது தான் செய்யப்போகும்

பணிக்கு முன்கூட்டியே கூலி பெற்றுக்கொள்ளுதல் அல்லது ஒரு குறிப்பிட்டத் தொகையைப் பெற்றுக்கொண்டு அதற்கான வட்டித்தொகைக்கு வேலை செய்தல் (சான்று : கோர கும்பர் கதை) இம்முறை பரவலாக மேற்கொள்ளப்பட்டிருக்கின்றது. இந்த முறையில் கோயில் ஊழியம் செய்த செய்தியை முதலாம் இராஜராஜ சோழனின் 24ஆம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது. இதில் இவ்வூர்க் குயவர்கள் இரு காசுகள் பெற்றுக்கொண்டு அதற்கு வட்டியாக இவ்வூர்க் கோயிலில் நடக்க இருக்கும் சித்திரைத் திருநாள் விழாவின் ஏழு நாட்களுக்கும் அடுகலன்கள் மற்றும் நீர்க்கலன்கள் ஆகியவற்றைச் செய்தளித்ததற்கான குறிப்பு காணப்படுகிறது. இதை,

..... இவ்வூர்க் குசவர் ஆழ்வார் பண்டாரத்தே இரண்டு காசு கொண்டு இக்காசின் பலிசையால் (இ)வ்வேழு நாளைக்கும் வேண்டும் அடுகலமும் நீர்கலமும் இட.... (திருவீழி.கல்.தொ.எ.1977/536)

என்ற கல்வெட்டுக் குறிப்பின் வழி அறியமுடிகின்றது. மேலும் குயவர்கள் தங்களது ஊழிய ஊதியமாக கோயில் கருவூலத்திலிருந்து காசுபெறும் இம்முறை தவிர்த்து கோயிலுக்குத் திருப்பணிச் செய்ய நினைப்பவர்கள் தங்களுடைய பணத்தினை இவ்வாறு ஊழியம் செய்ய நினைப்பவர்களுக்குக் கொடுத்து அதற்கு வட்டியாகக் கோயில் ஊழியம் செய்ய பணிக்கப்பட்ட செய்தியும் கல்வெட்டுக் குறிப்புகளில் காணமுடிகின்றது. இதைக் கன்னியாகுமரி மாவட்டம், நியமம் என்ற ஊரில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டு தெரிவிக்கின்றது. இதில் 'நாஞ்சில் நாட்டுச் சுசீந்திரத்தைச் சேர்ந்த கணக்கர் பரியேறும் நல்லபெருமாள் என்பார் தாழைக்குடியில் கல்மடம் ஒன்று கட்டுவித்து அதில் வழிபாடு நடப்பதற்குத் தேவையான பொருளை நிபந்தமாக அளித்திருக்கின்றார். அவ்வாறு அளித்த அப்பொருளை முன்னதாகப் பெற்றவர்கள் அதற்கான வட்டித்தொகைக்கு ஈடாக ஊழியம் செய்ய பணிக்கப்பட்டச் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அக்கல்வெட்டுச் செய்தியில் குயவர்கள் அவ்வாறு பணிக்கப்பட்டதற்கான பதிவுகளும் காணப்படுகின்றன'. அப்பதிவுகளுக்கான வரிகளாக,

..... மேற்படியூர் வேளாமார் பட்டையம் தந்தபடிக்கு குசக்கலம் உரு 20ம் எடுத்துக் கையாண்டு நந்தவனமும் பயிர்செய்து......(கன்.மா.கல்.தொ.எ.1969/57)

என்பதனைக் கொள்ளலாம். இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் 'வேளாமார்' என்ற சொல் குயவர்களைக் குறிக்கும் சொல்லாக இருந்திருக்கலாம். இதை யூகத்தின் அடிப்படையில் தற்போது நடைமுறை வழக்கில் உள்ள 'வேளார்' என்ற சொல்லுடன் பொருத்திப் பார்க்க வேண்டிய அவசியம் இருக்கிறது. 'வேளார்' என்ற இச்சொல் கன்னியாகுமரி உள்ளிட்ட தென்மாவட்டங்களில் குயவரைக் குறிக்க பயன்படுத்தப்படும் ஒரு சொல்லாக இருக்கின்றது. ஆகையால் இதனை அடிப்படையாகக்கொண்டு வேளார் என்று சுருங்கிய இச்சொல்லின் வேராக வேளாமர் என்ற சொல்லினைக் கொள்ள வாய்ப்பிருக்கிறது.

இவை மட்டுமின்றி, இதேபோல் குயவர்கள் பலதரப்பட்ட நிலையில் கோயில் ஊழியம் செய்ததற்கான மிகுதியான சான்றாதாரங்களைக் கல்வெட்டுக் குறிப்புகள் கொண்டிருக்கின்றன. அவ்வாறுள்ள சான்றுகள் அனைத்தையும் ஒப்புநோக்கி ஆராய்ந்து பார்க்கும்போது கோயில் என்ற நிறுவனத்திற்குள் இவ்வூழியம் செய்தலைக் குயவர்கள் தங்களுக்குக் கிடைத்த அங்கீகாரமாக நினைத்திருக்கின்றனர் என்பதை இதுகொண்டு அறியமுடிகின்றது.

## கோயிலுக்கு நிபந்தங் கொடுத்தல்

நிபந்தம், நிமந்தம், நிவந்தம் என்று மூன்று வகையாகக் கல்வெட்டுக் குறிப்புகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் இச்சொல் அனைத்தும் ஒரே பொருளைக் குறித்து நிற்கின்றன. இதற்குக் கல்வெட்டுச் சொல்லகராதி "கோயில் நிர்வாகத்திற்குக் கொடுக்கப்படுவது" எனப் பொருள் தருகிறது (தி.ந.சுப்பிரமணியம்;2011:68). பிற்காலச் சோழர்காலத்தில் கோயில்கள் அரசின் நேரடி மேற்பார்வையின் கீழுள்ள நிறுவனங்களாகவும், நிர்வாக அமைப்புகளாகவும் இருந்திருக்கின்றன. ஆதலால் கோயில் என்பது பெருமதிப்புடைய இடமாகக் கொள்ளப்பட்டிருக்கலாம். எனவே அங்கு வரைமுறையுடனான புனிதம்சார்ந்த மற்றும் அதிகாரம்சார்ந்த அனைத்து சடங்குகளும் தொடர்ச்சியாக நிகழ்த்தப்பட்டிருத்தல் வேண்டும். அவ்வாறு நிகழ்த்துவதற்குத் தேவையான பொருள்களைக் கோயில் நிர்வாகத்திற்குக் கொடையாகச் சிலர் கொடுத்திருக்கின்றனர். அவ்வாறு கொடுக்கப்பட்ட கொடைகள் சமூகத்தில் அவர்களுக்கான நிலைப்பாட்டை உணர்த்துவதாய் அமைந்திருக்கின்றன.

சோழர் காலத்தில் கோயில்களுக்குக் காசு, பொன், கால்நடை, நிலம் முதலியன கொடைகளாகத் தரப்பட்டுள்ளன. நிலம் தவிர்த்த மற்றைய தானப்பொருள்கள் இயங்குதிணைச் செல்வங்களாகும். ஆனால் நிலைதிணைச் செல்வமாகும். கோயில் நிலங்களைக் கொடைகளாகப் பெறுவதன் மூலம் நிலவுடைமை அமைப்பாக மாறுகிறது. கோயில் தன்னை நிலைப்படுத்திக் கொள்வதற்கும் மேலும் வளர்வதற்கும் நிலைத்த செல்வமான நிலம் உதவியது. கோயில்களுக்குத் தம்மைத் தாமே அடிமையாக்கிக் கொண்டவர்களை அல்லாமலும், கோயில்கள் அடிமைகளை விலைக்கு வாங்கியுள்ளன. கோயிலுக்குத் தானமாக அடிமைகளைச் சிலர் வழங்கியுள்ளனர் (தி.வை. சதாசிவபண்டாரத்தார்; 1979:22). அந்த வகையில் மண்பாண்ட உற்பத்தியில் ஈடுபட்டிருந்த குயவர்கள் கோயில் நிர்வாகத்திற்குக் கொடுக்கப்பட்ட கொடைகள் குறித்த பதிவுகளைக் கல்வெட்டுகளில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. இக்கல்வெட்டுக் குறிப்புகளில் குயவர்கள் வேட்கோவர்கள் என்றே குறிப்பிடப்பட்டிருக்கின்றனர். தவிர்த்து மிகவும் அரிதாகவே 'குயவர்' என்ற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்விரு பெயர் வேறுபாட்டினைக் கொண்டு மேற்குறிப்பிட்டது போன்று குயவர் குடியினருக்குள் இருவேறுபட்ட பிரிவினரை உள்வாங்கியதாக அக்காலச் சமூகச் சூழல் இருந்திருக்கலாம் என அனுமானிக்க முடிகின்றது. இதைத் தமிழ்நாடு

அரசு தொல்லியல் துறையினரால் கோயமுத்தூர் மாவட்டத்தில் கண்டெடுக்கப்பட்ட சுந்தரபாண்டியனின் ஆட்சிக்கால கல்வெட்டுக் குறிப்பு நிறுவுகிறது. இது பசுவேஸ்வரர் கோயிலில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டு ஆகும். இதில் கோயிலுள் சந்தியா தீப விளக்கெறிக்கத் தேவைப்படும் காசினை வேட்கோவ மரபினைத் சார்ந்த சித்திரமேழிப்பட்டன் என்பவர் கொடையளித்துள்ள செய்தி பதிவுசெய்யப்பட்டுள்ளது. இதேபோல் இங்குக் கிடைத்த மற்றொரு கல்வெட்டில் வேட்கோவ மரபினைச் சேர்ந்த செயபாலன் வயிரதேவரான வழித்துணை பெருமாள் கோயிலுக்கு நூறு பணம் கொடையளித்துள்ள செய்தியை,

> திரிபுவனச் சக்கரவர்த்திகள் சிரி சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு ...... விக்கிரமரச் சோழ வளநாட்டு நல்லூர் மருதவன பெருமாள் கோயிற் தேவர்கன்மிகளுக்கு நாங்கள் தீட்டுக் ........ வேட்கோவரில் செயபாலன் வயிரத் தேவரான வழித்துணைப் பெருமாள்....... இப்பணம் நூற்றுக்கும் உபையமாக நாயினார் மருதவனப் பெருமாளுக்கு..... (கோ.மா.கல்.II.தொ.எ.2003/940)

என்ற கல்வெட்டுச் செய்தி குறிப்பிடுகின்றது.

வேட்கோவர்கள் நிலவுடைமையாளர்களாகவும் இருந்திருக்கின்றனர். இவர்களுக்கான நிலத்தை 'வேட்கோவக் காணி' என்று குறிப்பிடும் வழக்கம் இருந்திருப்பதை மிகுதியான கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. அவ்வாறு வேட்கோவக் காணியுடைய வேட்கோவர் மூவர் கோயிலுக்குத் தானம் வழங்கிய செய்தியை ஈரோடு சோழீசுவரர் கோயிலில் உள்ள குலோத்துங்கன் ஆட்சிகால கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இதை,

> ......ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு எட்டாவது காங்கய நாட்டு முத்தூர் வேட்கோவக் காணி உடைய வேட்கோவந் சேவிடை பெரியானு நடுவிற் பெரியானு சிறுப்பெரி யானும் முத்துராளுடையார் குலோத்துங்க சோழீஸ்வரமுடையார் தண்டேஸ்வர ஸ்ரீ ஹஸ்தத்தால் நாங்கள் இவ்வச் சொற்(ற)ரையு . . . . (ஈ.மா.கல்.தொ.எ.2004/301)

என்ற அக்கல்வெட்டு செய்தியைக் கொண்டு அறிய முடிகின்றது. இதிலிருந்து முத்தூரில் வேட்கோவக் காணியுடைய வேட்கோவரில் செவிடைப் பெரியான், நடுவிற் பெரியான், சிறுபெரியான் மூவரும் ஒன்றரை அச்சு, (அச்சு என்பது முன்னாளில் வழங்கி வந்த ஒரு நாணயம்) சண்டிகேசுவரர் பெயரால் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்துள்ளனர். இவர்களின் பெயர் அமைப்பின்படி நோக்கும்போது இம்மூவரும் சகோதரர்களாக இருக்கலாம் என்று தெரிகின்றது. அதேபோல் வேட்கோவர்கள் கோயிலுக்கு நிலதானம் வழங்கிய செய்திகளைக் குறிப்பிடும் கல்வெட்டுகளையும் காண முடிகின்றது. இதற்குத் தஞ்சாவூரில் உள்ள மிகிராரூனேஸ்வரர் கோயில் சாந்தநாயகி அம்மன் கோயிலில் உள்ள முதலாம் பராந்தகச் சோழனின் ஆட்சிக்காலக் கல்வெட்டினைச் சான்றாகக் கொள்ளலாம். இதில் திருமெய்ச்சூரில் உள்ள மூலஸ்தானமுடைய மஹாதேவர்க்கு நித்தம்

இரண்டு நந்தா விளக்குகள் எரிப்பதற்கு வேட்கோவன் புகழன் முன்னூற்றுவன் என்பவன் இவ்வூர் சபையாரிடம் ஒன்பது மாவரை அரைக்காணி நிலம் வாங்கி கோயிலுக்குத் தானம் அளித்த செய்தியும் அந்நிலத்திற்கான எல்லையும் குறிப்பிடப்பட்டுள்ளது (நன்.கல்.I.தொ.எ.*1977/3*). அந்நிலத்தினை விளைவித்துக் கொள்பவர்கள் கோயில் சபையார் குறிப்பிடும் அந்தக் காலகட்டம்வரை அக்கோயிலில் உள்ள நந்தா விளக்கிற்கு நெய்யிட்டுத் தீபம் ஏற்ற வேண்டும் என்ற நிர்வாக முறையையும் இம்மாதிரியான கல்வெட்டுக் குறிப்பின்வழி அறியமுடிகின்றது. இது தவிர்த்து கால்நடைகளைக் கோயிலுக்கு நிவந்தம் கொடுக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. இம்முறை தற்போதும் வழக்கத்திலிருப்பது குறிப்பிடத்தக்கது. சாமிஆடு, சாமிமாடு என்று நேர்ந்து விடுகின்ற வழக்கத்தினைத் தற்போதும் கிராமப்புறங்களில் பரவலாகக் காணமுடிகின்றது. கோயிலுக்குக் கால்நடைகளைக் கொடையாகக் கொடுத்த அந்த மரபிலிருந்தே நேர்ந்துவிடும் இம்முறைமை தோன்றியிருக்க வேண்டும்.

கோயிலுக்குக் கொடையளித்தல் என்பது கோயிற்பணி மற்றும் கோயிலுக்கான ஆன்மீக சேவையோடு தொடர்புடைய ஒன்றாகக் கருதப்பட்டிருக்கின்றது. ஆனால் கோயிலுக்கு நேர்ந்து விடுதல் என்பதைத் தனிமனிதத் தேவையை ஒட்டிய நம்பிக்கைசார்ந்த செயலாகக் கருதலாம். இவ்வுளவியல் 'கொடையளிப்பவர்களுக்கு உள்ளும் செயல்படும் என்றாலும் அது முதன்மைப்படுத்தப்படாமல் கோயிலுக்கான சேவையாக எண்ணி தன்னிடம் மிக்கிருக்கும் செல்வங்களைக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்து 'புண்ணியம் தேடிக் கொள்ளும் மனநிலை அவ்வக்காலச் சூழலில் இருந்திருக்கலாம் அல்லது அளவிற்கு அதிகமான செல்வம் உடையவர்கள் அதில் ஒரு பகுதியைக் கோயிலுக்குக் கொடையளிக்கும்படி அதிகார மையங்களால் கூறப்பட்டிருக்கலாம் என்று இதற்கான அனுமானங்கள் பலவாக விரிந்து செல்கிறது. இவற்றையெல்லாம் ஒப்புநோக்கும்போது கொடையளிப்பவர்கள் மிக்க செல்வமுடையவர்களாக இருந்திருக்கின்றனர் என்பது தெளிவாகிறது. இவ்வாறானவர்களே கோயிலுக்குக் கொடையளித்து இருக்க வேண்டும். அவ்வாறு கோயிலுக்குப் பணம், நிலம், ஆடு முதலானவற்றைக் கொடையாகத் தந்தவர்களுள் வேட்கோவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாவர். மேலே குறிப்பிட்டபடி பணம், நிலம் முதலானவற்றைக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்த வேட்கோவர்கள் கோயில் திருநந்தா விளக்கெறிக்க 'ஆடுகளைக் கோயிலுக்குக் கொடையாக அளித்துள்ளனர். இதை, தஞ்சாவூர் மேகநாதசாமி கோயிலில் உள்ள முதற்பராந்தகச் சோழனின் ஆட்சிக்காலக் கல்வெட்டுச் செய்தியைக்கொண்டு அறிந்துகொள்ள இயலும். இதில் இக்கொயிலுக்குத் திருமெய்ச்சூரைச் சேர்ந்த வேட்கோவன் புகழன் முன்னூற்றுவன் என்பவன் நந்தா விளக்கு எரிப்பதற்காகத் தொண்ணூறு ஆடுகள் தானமாகக் கொடுத்த செய்தி தெரியவருகிறது. மேற்கூறியபடி இதற்காக நிலம் தானம் கொடுத்தவரும் இவரே என்பது குறிப்பிடத்தக்கது (நன்.கல்.I.தொ.எ. *1977/11*).

கோயிலுக்குக் கொடை கொடுக்க நினைப்பவர்கள் நேரடியாகக் கோயில் சபையாரிடமோ அல்லது கோயில் நிர்வாகத்தினரிடமோ பணம், நிலம், கால்நடைகள் முதலானவற்றை தானமாகக் கொடுக்கின்ற பழக்கம் அக்கால வழக்கத்திலிருந்திருக்கின்றது. அவ்வாறு கொடுத்த பொருளைக் கொண்டு அக்கோயிலுக்கான தேவையை நிர்வாகத்தினரே தங்களின் மேற்பார்வையில் பூர்த்திசெய்கின்றனர். ஆதலால் இம்முறை தவிர்த்து சிலர் தாங்களாகவே முன்னின்று கோயிலுக்குத் தேவையான திருப்பணிகளை உபயமாகச் செய்துதரும் வழக்கத்தையும் மேற்கொண்டிருக்கின்றனர். அவ்வாறு குயவர் குடியைச் சேர்ந்த வேட்கோவர் ஒருவரின் மனைவி கோயில் திருப்பணியை முன்னின்று செய்ததற்கான கல்வெட்டுச் செய்தியை கோயமுத்தூர் காலக்கலேஸ்வரர் கோயிலில் காணமுடிகின்றது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள,

> .... ஸ்வஸ்திக் ஸ்ரீ வீரராஜேந்திர தேவர்க்கு யாண்டு இருபத்தி நாலாவது வடபரிசார நாட்டில் கள்ளமடையிலிருக்கும் வேட்கோவரில் மூர்க்கங் குருடநான நடைகொண்ட நாட்டுச் செட்டி மநைக் கிழத்தியேன் ஆளுடையார் காலகாலேதேவர் கோயிலில் பெரிய திருமண்டபத்தில் யிந்த நாயகத்தூண் மூர்க்கன் அரசியேந் தந்மம் இதுபன் மயேசுர ரக்ஷை . . .
> *(கோ.மா.கல்.I.தொ.எ. 2004/163).*

என்ற கல்வெட்டுக் குறிப்பினைக் கொண்டு ஆயும்போது வடபரிசார நாட்டுக் கள்ளமடையைச் சேர்ந்த வேட்கோவரில் மூர்க்கன் குருடனான நடைகொண்ட நாட்டுச் செட்டியின் மனைவியாகிய மூர்க்கன் அரசி என்பவள் காலகாலத்தேவர் கோயிலில் பெரிய திருமண்டபத்தில் உள்ள நாயகத்தூணை கொடையளித்த செய்தியை அறிய முடிகின்றது. இதில் 'நாட்டுச்செட்டி' என்ற சொல் கவனிக்க வேண்டியதாயிருக்கிறது. குயவர்களுக்கான பட்டப்பெயர்களுள் ஒன்று செட்டி மற்றும் செட்டியார் என்பதாகும். மண்சார்ந்த பொருள்உற்பத்தியில் ஈடுபட்டு வரும் குயவர்களைச் செட்டியார் என்றழைக்கும் வழக்கம் கோயமுத்தூர் பகுதிகளில் இன்றளவும் காணமுடிகிறது. இது வாணிபச் செட்டியை குறிக்காது என்பதற்காக இவர்களைப் பிரித்து அடையாளங்காட்டும் நோக்கோடு நாட்டுச்செட்டி என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். (மரபான இனமாட்டினை நாட்டுமாடு என்பதும், கலப்பின மாட்டினை சீமைமாடு என்று கூறும் வழக்கமும் மரபான முறையில் வீட்டுக்கூரை வேய்வதற்குப் பயன்படுத்தப்படும் மண்ணாலான ஓட்டினை 'நாட்டு ஓடு' என்றும் நவீன முறையில் கூரை வேய்வதற்கு இயந்திரத்தால் உற்பத்தி செய்யப்படும் ஓட்டினை 'சீமை ஓடு' என்று கூறும் வழக்காற்று முறைகளும் இதனோடு ஒப்புநோக்கத்தக்கதாகும்.) இதனடிப்படையில் இதுமாதிரியான குடிகளின் பெயர்களை ஆய்வுக்குட்படுத்தி அவர்களுக்கான மரபினை அறியவேண்டிய அவசியம் இருக்கின்றது.

சோழரது கல்வெட்டுகள் வரலாற்று நிகழ்ச்சிகளைக் காட்டுவதைக் காட்டிலும் சமுதாயச் செய்திகளையே பெரிதுபடுத்துகின்றன. கோயிலுக்கு

நிவந்தம் அளிப்பது, அறச்சாலைகளுக்கு நிலம் அளிப்பது, திருப்பணி செய்வது, திருவிழா எடுப்பது, விளக்கெரிப்பது, ஊர்ச்சபையின் முடிவுகளைக் கூறுவது, ஊர் எல்லையின் பரப்பைத் தெரிவிப்பது, தண்டனையைக் கூறுவது போன்ற செய்திகளைச் சோழர்காலக் கல்வெட்டுகள் முதன்மைப்படுத்துகின்றன. கோயில்களை அரசாட்சி நிர்வாகத்தின் மையமாகக் கொண்ட சோழ மன்னர்கள் அது கொண்டே சமுதாயத்தை இயக்கினார்கள். ஆதலால் கோயில்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கலாம். இது தவிர்த்த அதாவது கோயில் பணி தவிர்த்த (ஏனென்றால் அக்காலச் சூழலில் கோயில் வேறு அரச நிர்வாகம் வேறு என்றிருக்கவில்லை) மற்ற ஊர்ச்சபை குறித்த முடிவுகளும் நில அளவைகளுமே சமுதாயம் குறித்த செய்திகளாகும்.

## குயவர்களுக்கு அளிக்கப்பட்ட கொடை

மண்பாண்டப் பொருள் உற்பத்தியை மட்டுமே தொழிலாகக் கொண்டு ஊழியம் செய்து வந்த குயவர் குடியினர் நலிந்து போகாமல் இருக்கவேண்டி அவர்களுக்குத் தானிய விளைபொருள்களும், அவற்றை விளைவித்துக் கொள்ளுவதற்கு ஏற்ற விளைநிலங்களும் ஊர்ச்சபையினரால் அளிக்கப்பட்டிருக்கின்றன. குயவர்களுக்கு வாழ்வியல் ஆதாரமாக விளங்கிய இவற்றைக் குயவர்களுக்கு அளிக்கப்பட்டட கொடையாகக் கல்வெட்டுத் தரவுகள் குறிப்பிடுகின்றன. நிலம், தானியம் என்ற இரு நிலைகளில் அளிக்கப்பட்ட இக்கொடைகள் கோயில் ஊழியம் செய்யும் குயவர்களுக்கு மிகுதியாக அளிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் நிலக்கொடையை 'குலால விருத்தி', 'குசக்காணி' என்ற பெயரில் அளித்ததற்கான கல்வெட்டுச் சான்றுகள் மிகுதியாகக் கிடைக்கின்றன. இவற்றில் பெரும்பாலான கல்வெட்டுகள் சோழர்காலக் கல்வெட்டுகள் என்பது குறிப்பிடத்தக்கது. இக்கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக,

> தச்சர், குயவர், தட்டார், உவச்சர், தறியாளர் முதலியோர் தொழில் அடிப்படையில் அமைந்த மக்கட் கூட்டத்தினாராகக் கருதப்படுகின்றனர். சோழர் காலத்தில் தொழிலடிப்படையில் அமைந்த சாதிப்பிரிவுகளாக இவை இருந்துள்ளன. இவர்கள் தமக்குரிய வேலைகளைச் சமூகக் கடமையாகவே செய்திருக்கின்றனர். அதற்குரிய ஊதியத்தைக் காணி, விருத்தி என்ற பெயரில் தானங்களாகப் பெற்றுள்஌ளனர். இவர்கள் உழைப்பு, கூலி அடிப்படையில் அமையாமல் வேலைக்கு ஈடாக நிலங்களையும் விளைச்சல் பொருள்களையும் பெற்றுள்ளனர். **(1979:92)**

என்ற தி.வை.சதாசிவபண்டாரத்தாரின் கருத்து இங்க ஒப்புநோக்கத்தக்கதாய் அமைகிறது. அதே போல் "சோழ மன்னர்கள் போரில் ஈடுபட்டு வெற்றித் தேடித்தந்த வேளாளர் குடும்பத்தைச் சார்ந்தோருக்கு நிலங்களைத் தானமாக வழங்கினர். அதேபோல் உழவுத்தொழிலுக்கும், போர்த்தொழிலுக்கும் தேவையான கருவிகளைச் செய்தளித்த தச்சர், குயவர், தட்டார் முதலியோருக்கும் உழைப்பிற்கு ஈடாக நிலங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. இவ்வகையில்

வழங்கப்பட்டட நிலதானத்தில் குடித்தொழில் செய்பவர்களுக்கு வழங்கப்பட்ட நிலத்தினை ஜீவித நிலம் என்ற பெயரால் குறிப்பிட்டிருக்கின்றர்" *(1999:133)* என்ற அரங்க மு.முருகையனின் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாய் இருக்கின்றது.

முன்னர்க் குறிப்பிட்டிருத்தல் போன்று குடித்தொழில் செய்த குயவர்களுக்கும் கொடையாக அளிக்கப்பட்ட நிலத்தினைக் குலால விருத்தி எனக் குறிக்கும் வழக்கம் இருந்திருப்பதைக் கன்னியாகுமரி, அகத்தீஸ்வரத்தில் உள்ள அகத்தீஸ்வரர் கோயில் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. இதில் புறத்தாய நாட்டுத் தென்வாசிவாரண நன்னாட்டு அகத்தீச்சுரமான உதய மார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலத்துப் பட்டர்களுக்கு அரசன் தனது பிறந்த நாளான பரணி நாளில் அகரம் ஏற்படுத்தி அவர்கள் ரிக், யஜூர், சாம வேதங்களைப் பயிலுவதற்கும் அவர்களின் மருத்துவ வசதிக்கும் மண்பாண்டத் தேவைக்கும் நிலம் வழங்கியதைக் குறிக்கின்ற வகையில்,

> இருக் வேதவிருத்தி நிலம் ஒரு மாவும் யஜுர்வேதவிருத்தி நிலம் ஒரு மாவும் சாம வேதவிருத்தி நிலம் ஒரு மாவும் சல்லிய விருத்தி நிலம் ஒரு மாவும் குலால விருத்தி நிலம் முக்காணியும் காருவிருத்தி நிலம் முக்காணியும்.... *(கன்.மா.கல்.தொ.எ. 1968/22)*

எனக் கல்வெட்டுச் செய்திகள் அமைந்திருக்கின்றன. இதுமாதிரியான நிலதானம் பெறுபவர்கள் பெரும்பாலும் பொதுவியல் மரபில் அதாவது பொதுமக்களுக்கான ஊழியம் செய்தவர்களாக இருந்திருக்க வாய்ப்பில்லை. மேலும் இவர்களை வேத்தியல் மரபில் அதாவது அரச மரபில் இணையாக அவர்களால் மதிக்கப்படுகின்ற வேதகல்வி கற்கும் மற்றும் கற்பிக்கும் குடிகளுக்கு ஊழியம் செய்யும் குயவர்களாகக் கருத வாய்ப்பிருக்கின்றது. ஆயினும் இவ்விதமான வேத்தியல் மரபில் ஊழியம் செய்யும் பெரும்பாலான மண்பாண்ட உற்பத்தியாளர்கள் வேட்கோவர் என்றழைக்கப்பட்டிருப்பதை முன்னர்க் குறிப்பிட்டுள்ளபடி கவனத்தில் கொள்ளவேண்டிய அவசியமும் இருக்கின்றது. இதுபோலவே குயவர்களுக்கு நிலதானம் அளிக்கப்பட்ட செய்தியினை உக்கல் புவனிமாணிக்க விஷ்ணு கிரகம் கோயிலில் உள்ள பரகேசரி வர்மனின் 16ஆவது ஆட்சிக்காலக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது (SII; III:11). இதில் இக்கோயிலில் திருமஞ்சணம் (குடமுழுக்கு) செய்வதற்காகக் குசக்கலம் (மண்கலம்) செய்து கொடுத்த குயவர்களுக்கு இக்கோயில் மேலாளர் சக்கரபாணி நம்பி என்பவரின் வேண்டுகோளின்படி நிலம் வழங்கிய செய்தி பதிவு செய்யப்பட்டுள்ளது. மேலும் கோயிலில் திருஅமுது படைக்க மற்றும் பகிர்ந்தளிக்கத் தேவையான மண்கலன்களைத் தினந்தோறும் உற்பத்தி செய்து கொடுப்பதற்குக் குயவர்கள் பணிக்கப்பட்டிருக்கின்றனர். அதற்காக அவர்களுக்குப் பருத்தி விளையக்கூடிய கரிசல் நிலம் கொடையாகக் கொடுக்கப்பட்ட செய்தியைக் கழுகுமலைக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது (SII;V:361). இதையொத்த வழக்கம் தற்போது நடைமுறை வழக்கத்தில் இருந்து வருகின்றது. சான்றாக, திருவண்ணாமலை

மாவட்டம் வந்தவாசி வட்டத்தில் உள்ள வெங்காரம் கிராமத்துக் கோயில் திருவிழாவின்போது குயவர்கள் அதிகப்படியான மடக்கினை விற்பனைக்காக எடுத்துச்செல்கின்றனர். அவ்வாறு எடுத்துச் செல்லும் அந்த மண்பாண்டம் இரு கை அகலத்தில் குவிந்திருக்கும் அளவுடையதாயிருக்கிறது. ஆதலால் அப்பாண்டத்தை அமுதுபடைக்க நினைக்கும் பக்தர்கள் மிகுதியாக வாங்கிச் செல்கின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு இது காலங்காலமாக இருந்துவரும் வழக்கம் எனக் கடையிட்டு மண்பாண்டப்பொருள்களை விற்பனை செய்யும் குயவர்களும் வாடிக்கையாளர்களான பக்தர்களும் தெரிவிக்கின்றனர். ஆக மண்பாண்டத்தில் திருஅமுது படைக்கும் இவ்வழக்கம் முன்னர்க் குறிப்பிட்ட கழுகுமலைக் கல்வெட்டு எழுதப்பட்ட காலத்திலிருந்து தற்போது வரை தொடர்ந்து வந்திருக்கின்றதென அனுமானிக்க முடிகின்றது. அவ்வாறான அவ்வழக்கத்தைத் தினந்தோறும் செய்யத் தேவையான மண்பாண்டப் பொருள்களை உற்பத்தி செய்துதர குயவர்கள் பணிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களுடைய வாழ்வாதாரத்திற்கு நிலம் மானியமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அதற்கான ஆவணமாக வெட்டப்பட்ட கல்வெட்டுகளுள் கழுகுமலைக் கல்வெட்டும் ஒன்று என்பதை அக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள செய்திகளை அடிப்படையாகக் கொண்டு அறிந்துகொள்ள முடிகின்றது. இதேபோல், ஊரம்பலம் எடுப்பித்து அதைப் பராமரிப்பதற்காக ஊழியக் குடிகள் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களுக்கு அவ்வம்பலத்தைச் சுற்றியுள்ள நிலப்பகுதிகள் தானமாகத் தரப்பட்டிருக்கின்றன. அந்த வகையில் தினந்தோறும் தண்ணீர் கொண்டுவந்து தருபவனுக்கு எட்டு 'மா' நிலமும் அம்பலம் மெழுகுபவர்க்கு அரைக்கால் 'மா' (ஒரு வகையான நில அளவை) நிலமும் விளக்கெரிக்க எண்ணெய் கொடுப்பவனுக்கு 'கால் மா' நிலமும் அம்பலத்திற்குத் தேவையான மண்பாண்டப் பொருள்களை உற்பத்தி செய்து தரும் குயவர்களுக்கு ஒரு மா நிலமும் தானமாகத் தரப்பட்டிருக்கின்றன. இதைத் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள செந்தலைப்பகுதி சுந்தரேஸ்வரர் ஆலயக் கல்வெட்டில்,

> ...... இந்நிலம் வெலிச்செய்யிலும் இவ்வம்பலத்து கொடைமாத் தண்ணீர் நிலம் எட்டு மாவும் அம்பலம் மெழுகுவார்க்கு நிலம் அரைக்காலும் விளக்கெண்ணை அட்டுவாறுக்கு காலும் கலம் இட்டும் குசவநுக்கு ஒருமாவரை புதுக்குப்புற.....
> (SII, XIII; No.187,10-11)

என்றவாறு பொறிக்கப்பட்டுள்ளது. இதில் ஊர்ச் சபையினர் அதிகாரத்தில் அம்பலம் பராமரிக்கப்பட்டு இருப்பதனால் அதற்கு ஊழியம் செய்யும் குடிகளுக்குக் கூலி தானியமாகத் தரப்படாமல் அந்தளவு தானியம் விளைவிக்கப் போதுமான நிலத்தினைத் தானமாகத் தந்திருக்கின்றனர். ஆனால் பொதுமக்களிடையே ஊழியம் செய்யும் குயவர்களுக்குத் தானியங்கள் மட்டுமே ஆண்டுக்கு ஒருமுறை கூலியாகத் தரப்பட்டிருக்கின்றது. இது தவிர்த்து கோயில் ஊழியம் செய்பவர்களுக்குக் கோயில் தானியக் கருவூலத்திலிருந்து நெல் தானமாக அளிக்கப்பட்டிருக்கின்றது. இதை மேல்பாடி அருளாளப்பெருமாள் கோயிலில்

உள்ள விக்கிரமச்சோழன் கல்வெட்டு தெரிவிக்கின்றது. இதில் இக்கோயில் திருவிழாவிற்குத் தேவையான மண்கலன்கள் செய்து தருவதற்கான கூலியாகக் குயவர்களுக்குக் கலம் நெல் வழங்கப்பட்ட செய்தி பதிவுசெய்யப்பட்டுள்ளது (SII, III; No.11). ஆக அதிகார மையத்தின் மேற்பார்வையில் இயங்கும் கோயில், அம்பலம் உள்ளிட்ட நிறுவனங்களில் ஊழியம் செய்யும் குயவர் குடிகளுக்குச் சிலபோது தானியமாகவும் சிலபோது அந்தளவு தானியத்தை விளைவித்துக் கொள்வதற்கான நிலமாகவும் கொடையளிக்கப்பட்டமையை மேற்சுட்டப்பெற்ற கல்வெட்டுத் தரவுகளின் துணைகொண்டு அறியமுடிகின்றது.

## குயவர்களுக்கான வரி

அரசுருவாக்கத்தை மையமிட்ட வேளாண்மைச் சமூகத்தில் வேளாண்மைத் தொழிலே முதன்மையாகக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். இது மனித வாழ்வின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றான உணவு உற்பத்தியைச் சார்ந்தது என்பதால் இதனை மையமாகக் கொண்டு பிறதொழில்கள் உருவாகியின. இதன் அடிப்படையில் உடை, உறைவிட உற்பத்தி சார்ந்த தொழில்களை இதற்கு அடுத்தடுத்த நிலையிலேயே வைத்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. இவையனைத்தும் தனி நபர் தேவையாயிருப்பினும் அவற்றை நிவர்த்தி செய்துகொள்ள கூட்டுழைப்பு அவசியமானதாக இருக்கிறது. அதனடிப்படையிலேயே தொழில்கள் உருவாக்கம் பெற்றிருக்கலாம். அவ்வாறு மனித வாழ்வின் தேவையைக் கூட்டுழைப்பால் நிவர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு உருவான தொழில்முறைகள் அரசுருவாக்கத்திற்குப் பிறகு நிலைப்படுத்தப்பட்டன. அவ்வாறு தொழில்கள் நிலைநிறுத்தப்படுவதற்கு அரசின் வரி வசூலிப்பு முறையும் ஒரு காரணமாக இருந்திருக்க வேண்டும். அந்த வகையில் தொழில்களுக்கான தரம்பிரிப்பு, அதற்கான வரிவசூலிப்பு என்பதும் இவ்வக்காலச் சூழல் சார்ந்ததாகவே கொள்ள முடியும். இதன் தொடர்ச்சியில், "வரியை இறை, காணம், பாட்டம், ஆயம், சுங்கம், பூச்சி உள்ளிட்ட பல சொற்களைக்கொண்டு அழைத்திருக்கின்றனர். மேலும் வசூலிப்பதற்கான காலகட்டத்தினை மையமாக வைத்து குறிக்கப்பெறும் பல பெயர்கள் வழக்கத்திலிருக்கின்றன. மாதந்தோறும் வசூலிக்கும் வரிதனை திங்கள் என்றும் வருடத்தின் நடுவில் வசூலிக்கப்படும் வரிதனை இடைவட்டை என்றும் ஆண்டுதோறும் வசூலிக்கப்படும் வரிதனை ஆண்டுக் கள்ளடவு, ஆண்டெழுத்துத் தேவை, ஆண்டாண்டு என்றும் ஆண்டின் இறுதியில் வசூலிக்கப்படும் வரிதனை கடையிறை என்றும் எக்காலத்தும் மாறாமல் ஒரே மாதிரியான முறையில் வசூலிக்கப்படும் வரிதனை நிலைவரி என்றும் குறிப்பிடும் வழக்கம் இருந்திருப்பதைத் தொல்பொருள் அகழ்வாய்வில் கிடைத்த கல்வெட்டுக் குறிப்புகளின்வழிஅறிய முடிகின்றது" (அழகேசன்; 2004:111).

அவ்வாறான தொழில்முறைப் பாகுபாட்டில் சமூக இயங்கியல் சார்ந்த தொழில்கள் அனைத்தும் குடிமைத்தொழில்களாகக் கருதப்பட்டிருக்கின்றன. இது பணிக்கப்பட்ட தொழிலாயிருப்பினும் மிகுதியான வரவேற்பினைப் பெற்றிருந்ததால் இதற்கும் வரி விதிக்கப்பட்டிருக்கின்றது. மேலும் வேளாண்மைத்

தொழிலில் ஈடுபட்டவர்களிடமிருந்து ஈழம் புஞ்சை (SII; III:151) என்ற பெயரில் நிலவரி வசூலையும் செய்திருக்கின்றனர். அதேபோல் குடிமை ஊழியம் செய்தவர்களிடமிருந்தும் வரி வசூலிக்கப்பட்டிருக்கின்றன. இதனை வேளாண் சமூக இயங்கியலுக்குத் தேவையான மண்ணாலான புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்ட குயவர்களின் மீது விதிக்கப்பட்ட வரிகளைக் கொண்டு அறிய இயலும். இத்தகு செய்தியை மற்ற வரலாற்றுத் தரவுகளைவிட கல்வெட்டுத் தரவுகள் தெளிவாகப் பிரதிபலிக்கின்றன.

அரசு நிறுவனமாக இயங்கிய கோயில் நிர்வாகத்திற்கான தேவையைப் நிறைவு செய்ய பல வகையில் வரி வசூலிக்கப்பட்டிருக்கின்றன. இவை நேரடி வரியாக அல்லாமல் கோயில் நிபந்தமாக அளிக்கப்பட்டிருப்பதைக் கல்வெட்டுச் செய்திகள் குறிப்பிடுகின்றன. குயவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட திரிகைச் சுங்கத்தினைக் கொண்டு அதாவது மண்பாண்ட உற்பத்தித் தொழிலை மேற்கொள்ளும் குயவர்கள் மீது விதிக்கப்படும் தொழில் வரியை அவர்களின் தொழிலுக்கு அடிப்படையாக அமைந்த சக்கரத்தின்மீது விதிக்கப்படும் வரியாகக் குறிக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. அவ்வாறு விதிக்கப்பட்ட சக்கர வரிதனைக் கொண்டு கோயிலில் உள்ள திருநந்தா விளக்கு எரிக்க ஆணையிடப்பட்ட செய்தியை ஈரோடு மாவட்டதில் உள்ள வீரநாராயணப் பெருமாள் கோயிலில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுச் செய்தி தெரிவிக்கின்றது. இதில் பாப்பினியைச் சேர்ந்த கொங்கு வேளாளரில் தோடை குலத்து மாந்தன் தத்தன் காங்கேய நாட்டில் சுங்கம் வசூலிப்பவராக இருந்தார் என்பதும் அவர் குயவர்கள் திரிகைக்குச் செலுத்தும் சுங்கத்திலிருந்து வீரநாராயணப் பெருமாளுக்கு ஒரு திருவிளக்கு வைத்தார் என்பதும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது (ஈ.மா.கல்.தொ.எ.2004/285). இவ்வாறு குயவர்களிடம் இருந்து வசூலிக்கப்பட்ட வரிதனைக் கோயிலுக்குப் பயன்படுத்திக் கொள்வதைப்போலக் கோயிலுக்கெனக் குயவர்களிடமிருந்து வசூலிக்கப்படும் வரிவகைகளும் இருந்திருக்கின்றன. அவ்வாறு வசூலிக்கப்பட்ட வரிக்குச் 'கச்சாணம்' என்று பெயர். இதை முருகன் கோயிலுக்காகக் குயவர்களிடம் இருந்து வசூலிக்கப்பட்ட 'குமரக்கச்சாணம்' (கா.மா.கல்.தொ.எ.2004/25) என்ற வரி வசூல் முறை குறித்த கல்வெட்டுச் செய்தியிலிருந்து அறிய முடிகின்றது. இங்கு குமரன் என்ற சொல் முருகனைக் குறிக்கும் சொல்லாதலில் குமரக்கச்சாணம் எனப்பட்டது.

வரி செலுத்துவதற்கு இணையாகக் கோயிலுக்கு ஊழியம் செய்தற்கான வழக்கத்தினையும் குயவர்கள் மேற்கொண்டிருக்கின்றனர். அதாவது கோயிலுக்கு தங்களின் தொழிலையே வரியாகச் செலுத்தியிருக்கின்றனர். இதைக் கோப்பெருஞ்சிங்கன் காலத்திய கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது (SII; VIII:79). இதில் தச்சும், கொல்லும், குசவேலை செய்வோரும் தங்களது தொழிலைத் திருவண்ணாமலை கோயிலுக்கு வரியாக செலுத்தியிருக்கின்றனர். அதாவது அக்கோயிலில் நடக்கும் குறிப்பிட்ட உற்சவத்திற்கு வேலை செய்தல் அல்லது அக்கோயிலில் விளக்கெரிக்கத் தேவையான எண்ணெய்க்கான செலவுக்குத் தகுந்த

வேலையைத் தான் செய்து தருதல் என்பதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். உதாரணமாக அக்கோயிலில் விளக்கெரிக்க ஆகும் செலவு நூறு ரூபாய் என்றால் குயவர்கள் அக்கோயிலுக்கோ அல்லது அவ்விளக்கெரிக்கத் தேவையான எண்ணெய் தருபவர்களுக்கோ நூறு ரூபாய் மதிப்புள்ள வேலையைச் செய்து தருவர். இதுவே தொழிலை வரியாகச் செலுத்தும் முறையெனக் கல்வெட்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

## சமூக மதிப்பீட்டில் குயவர்கள்

மனித கூட்டுணர்வின் விளைவால் உருவானதே சமூகம். இதில் மனிதர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்பவர்கள். இவர்களின் வளமையான வாழ்முறைக்கு இதையே காரணமாகக் கொள்ளலாம். இதை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது சமூகத்தில் உள்ள ஒவ்வொருவரும் மற்றொருவரைச் சார்ந்து வாழ்பவராகவே இருந்து வருகின்றனர். இச்சார்பு என்பது வாழ்வியல் தேவையை மையமிட்டது. ஆகையால் அத்தேவையை நிறைவு செய்துகொள்ள ஒருவர் மற்றொருவரை நாடுதல் இயல்பாகிறது. இச்செயல்பாடு அவரவரின் திறனடிப்படையில் அவரவருக்கான தனித்தன்மையை உருவாக்குகிறது. இதுவே காலப்போக்கில் அவரவர்களுக்கான தொழிலாகவும் அடையாளமாகவும் மாறிப்போயின. அதன் அடிப்படையில் உருவானதே சமூகம் என்ற கட்டமைப்பு. இதில் ஒருவருக்கும் மற்றொருவருக்குமான உறவுநிலையை ஏற்படுத்துவது அவரவருக்கான வாழ்வியல் தேவையே ஆகும். அவ்வாறான ஒவ்வொருவரின் தேவையையும் மற்றொருவரின் உற்பத்தித் திறனே நிறைவு செய்கிறது.

> உற்பத்தி சக்திகள் தேங்குவதில்லை. காலந்தோறும் இவை வளர்ச்சிபெற்றே வருகின்றன. இவை யாருடைய அல்லது எதன் கட்டுப்பாட்டில் இருக்கின்றன என்பதைப் பொறுத்து உற்பத்தி உறவுகளின் தன்மை மாறுகிறது. எளிமையாகச் சொல்லவேண்டுமானால் நிலவுடைமைச் சமுதாயத்தில் உற்பத்தி சக்திகள் நிலப்பிரபுக்களின் கட்டுப்பாட்டில் இருந்தன. அப்போது பிரதான உற்பத்தி சாதனமாக நிலம் இருந்தது. அதில் உழவுக்கருவிகளே பிரதானக் கருவிகளாக இருந்தன. மனித உழைப்பு பிரதானமாக விவசாயத்தில் ஈடுபடுத்தப்பட்டது. உற்பத்தி உறவென்பது அப்போது நிலவுடைமையாளருக்கும் நிலத்தில் உழைக்கும் உழவர்களுக்கும் இடையிலானதாக இருந்தது. ஆனால் உற்பத்தி சக்திகள் வளர்ச்சி அடைய அடைய நிலம் பிரதான உற்பத்தி சாதனமாக இருந்தநிலை மாறியது. மனித உழைப்பின் தன்மை மாறுபாடடைந்தது" *(வெ.கிருஷ்ணமூர்த்தி; 1985:47).*

இதனடிப்படையில் நோக்கும்போது மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபடுத்தப்பட்ட குயவர்கள் ஊருக்கு ஊழியம் செய்யப் பணிக்கப்பட்டு இருந்திருக்கின்றனர். ஆதலால் இவர்கள் ஊர்க்குடிகள் என்றும் இவர்கள் செய்யும் தொழிலைக் குடிஊழியம் என்றும் அழைக்கப்பட்டிருக்கின்றன. இது சமகால நடைமுறை வழக்காற்றில் குடிமை செய்தல் என்று

குறிப்பிடப்படுகின்றது. ஆக, மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்டு வரும் குயவர்களுக்கும் அவர்களை அதிகாரம் செய்யும் வேளாண் குடிகளுக்குமான உறவுநிலை மரபு என்பது கால மாற்றத்தினை உள்வாங்கி தொடர்ந்து வருவதாகக் கொள்ளலாம். இதில் பெரிய அளவில் தேக்கநிலை உருவாகுவதற்கான வாய்ப்புகள் இல்லை. ஏனெனில் அன்றாட மனித வாழ்வியல் தேவையை நிறைவு செய்வதில் இம்மண்ணாலான புழங்குபொருள்களே முக்கியமானவை. இந்நிலை தற்போது சற்றுத் தேக்கமுற்று இருப்பினும் இன்று வரை இம்மண்ணாலான புழங்குபொருள்களே குயவர்களை மற்ற குடிகளுடன் பிணைப்பாகத் திகழ்கின்றது. மண்ணாலான இப்பொருள் உற்பத்தியில் ஈடுபட்ட இவர்களைச் சமூக மதிப்பீட்டின்படி முன்னர்க் குறிப்பிட்டபடி இரண்டாக வகைப்பிரித்துக் கொள்ளலாம். இதில் வேட்கோவர்கள் நிலவுடைமையாளர்களாக இருந்திருக்கின்றனர்; இவர்களுக்கான நிலத்தை வேட்கோவகாணி என்ற சொல்லால் குறிப்பிட்டிருக்கின்றனர். இதேபோல் குயவர்களும் நிலவுடைமையாளர்களாக இருந்திருக்கின்றனர். இது குறித்த செய்தியைத் தஞ்சாவூர் மாவட்டம், திருக்கொட்டாரத்தில் உள்ள ஐராதீஸ்வரர் கோயில் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது (நன்.கல்.II.தொ.எ.*1978/386*). இவ்வாறு 'குயவர்' என்ற சொல்லால் குறிக்கப்பட்டவர்கள் நிலவுடைமையாளர்களாக இருந்ததற்கான கல்வெட்டுத் தரவுகள் மிகவும் குறைவாகவே கிடைக்கின்றன. இது தவிர்த்து குயவர்கள் கோயில் நிர்வாகத்திற்கு மண்பாண்டம் செய்துதரும் ஊழியம் செய்பவராக மட்டுமல்லாமல் கோயில் கணக்கராகவும் பணியாற்றியிருக்க வேண்டும் என அனுமானிக்க முடிகிறது. இதைக் கோனேரி ராஜபுரம் உமாமகேஸ்வரஸ்வாமி கோயிலின் கருவறைக் கல்வெட்டில் உள்ள,

> ....... கரணத்தான் குசவனொருவனுக்கு நிசதம் பதக்காக ஓராட்டைக்கு நெல்லுபதின் கலசத்துக்கு பூங்குடியிலொன்பது மாவரைக்காணி திங்கள் முட்பட கலமிடும் குசவனுக்கு நிசதம் அறுநாழியாக ஓராட்டைக்கு நெல்லு இருபத்திரு கலனை தூணிபதக்கு..... (SII; III:1514).

என்ற இவ்வரிகள் தெரிவிக்கின்றன. இதில் கரணத்தான் குசவன், கலமிடும் குசவன் என்ற இரு பாகுபாட்டினைக் காணமுடிகின்றது. இப்பாகுபாடு அவர்கள் செய்யும் தொழிலால் வந்தது எனலாம். மட்கலம் உற்பத்தி செய்து தருதல் குயவர்களுக்கான மரபான தொழிலாதலால் கலமிடும் குசவன் என்பதைக் கோயிலுக்கு மண்கலம் செய்து தரும் குயவன் என்பதாகப் புரிந்துகொள்ள முடிகின்றது. ஆனால் அதே கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள கரணத்தான் குசவன் என்ற சொல்லை அவ்வாறு அனுமானிப்பதற்கு இல்லை. கரணத்தான் என்பதற்கு கணக்கன் அல்லது கணக்குத் தொழில் செய்பவன் என்று தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி பொருள் கொள்கிறது. இப்பொருள்கோடலைத் துணையாகக் கொண்டு நோக்கும்போது கரணத்தான் குசவன் என்ற சொல் அக்கோயிலில் கணக்குத் தொழில் செய்துவந்த குயவரைக் குறிப்பதாக வரையறை செய்ய முடிகின்றது.

மேலும் நிலம் விற்றல் வாங்குதலுக்கான ஆவண உடன்படிக்கையில் பலர் சாட்சிக் கையெழுத்திடுவது மரபாக இருந்திருக்கின்றது. அம்மரபுப்படி வேட்கோவர் சாட்சிக் கையெழுத்து இட்டதற்கான செய்தியை இராஜராஜ சோழன் காலத்திய கல்வெட்டுக் குறிப்பினைக்கொண்டு அறியமுடிகின்றது (SIl; V:1409). இது கொண்டு சமூக மதிப்பீட்டில் குயவர்களுக்கான மதிப்பீட்டினை உய்த்துணர இயலும். நில விற்பனைச்செய்யும்போது பலதரப்பட்டோரின் கையெழுத்துகள் சாட்சிக்காகப் பெறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் குயவரின் கையெழுத்தும் ஒன்று. குயவர்கள் ஊருக்கு ஊழியம் செய்பவர்கள் என்பதால் அவர்களுக்கான கூலியானது நிலம்சார்ந்த விளைபொருளாகவே இருந்திருக்கின்றது. எனவே நிலத்தை, நில உரிமையாளர்களை அவர்களுக்கு ஊழியம் செய்யும் குடியினரான அம்பட்டர், வண்ணார், குயவர், கொல்லர் முதலானவர்கள் அறிந்து வைத்திருப்பதற்கான அவசியம் இருந்திருக்கின்றது. ஆகையால் அந்நிலம் விற்பனை செய்யும்போது அதற்குத் தகுந்த சாட்சியாக இவர்களைக் கொள்ளும் வழக்கம் இருந்திருக்கின்றது. இது தவிர்த்து குடிஊழியம் செய்பவர்களுக்கான ஓர் அறிவிப்பாகவும் இதைக் கருதமுடியும். இதைத் தஞ்சாவூர் ஐராவதேஸ்வரர் கோயில் கல்வெட்டில் உள்ள,

> .... இப்படி அறிவேன் இவ்வூர் வேழ்க் கோவன் மாறன் சூற்றியேன் எழுத்து இப்படி அறிவேன் பாயற்றூர் கிழவன் அரையன் நாகடியேன் எழுத்து....
> *(தஞ்.வ.கல்.தொ.எ.1981/454)*

என்ற கல்வெட்டுக் குறிப்பிலிருந்து உய்த்துணர முடிகின்றது. ஆகச் சமூக நிலைப்பாட்டில் கலமிடும் குசவர்களாகவும் காணியுடைய வேட்கோவர்களாகவும் கரணத்தான் எனப்படும் கணக்கராகவும் நிலவிலை ஆவணத்தில் சாட்சிக் கையெழுத்து இடுபவர்களாகவும் குயவர்கள் இருந்திருக்கின்றனர் என்பதை மேற்குறிப்பிட்ட கல்வெட்டுத் தரவுகளைக்கொண்டு உறுதிசெய்ய முடிகின்றது.

## தொகுப்புரை

- கல்வெட்டு என்பது ஒரு வரலாற்று ஆவணம். இது பொதுப்படையான செய்தி வெளியீட்டு முறைமை. ஆயினும் இது, அதிகாரத்தின்பாற்பட்டது எனலாம். ஆகையால் இவ்விதக் கல்வெட்டுத் தரவுகளில் பொதுப்பயன்பாட்டுப் பொருள்களாகிய புழங்குபொருள்கள் குறித்த செய்திகளை நேரடியாகப் பெறுவதற்கில்லை. மாறாக அவை இலைமறை காயாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இவ்விதப் பதிவுகளின்வழிச் சமூக அசைவியக்கத்தில் புழங்குபொருள்களின் பங்களிப்பினையும் அவற்றை உற்பத்தி செய்தளித்த குடிகளின் நிலைப்பாட்டினையும் ஓரளவு அனுமானிக்க இயலும்.

- மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாகக் கொண்ட குடியினர் குயவர், வேட்கோவர் என்று இருவேறுபட்ட முறையில் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டிருக்கின்றனர். இதில் வேட்கோவர் எனப்பட்டவர்கள்

கோயிலுக்கு மிகுதியான அளவு நிபந்தம் கொடுத்திருக்கின்றனர். ஆனால் 'குயவர்' எனப்பட்டவர்கள் மிகுதியான அளவு கோயிலுக்கு ஊழியம் செய்திருக்கின்றனர். சமூகத்தளத்தில் இவ்விருவேறுபட்ட நிலைப்பாட்டினைக் கொண்டிருந்த இவர்களை இருதரப்பட்டவர்களாகக் கொண்டு வேத்தியல் மரபு, பொதுவியல் மரபு என்பவற்றுடன் பொருத்திப் பார்க்கப்பட்டிருக்கிறது.

- கோயில் ஊழியம் செய்வதைக் கோயில் என்ற நிறுவனத்திற்குள் தங்களுக்குக் கிடைத்த அங்கீகாரமாகக் குயவர்கள் நினைத்திருக்கின்றனர் என்பது நிறுவப்படுகிறது.

- கூட்டுணர்வின் விளைவால் உருவானதே சமூகம். அதன்படி மனித வாழ்வின் தேவையைக் கூட்டுழைப்பால் நிறைவு செய்துகொள்ளும் பொருட்டு உருவான தொழில்முறைகள் அனைத்தும் அரசுருவாக்கத்திற்குப் பின்னான காலகட்டத்தில் நிலைநிறுத்தப்பட்டிருக்கலாம். இச்செயல்பாட்டினை வரிவசூலிப்பிற்கானதாகவும் கொள்ள வாய்ப்பிருக்கிறது. அந்த வகையில் மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாகக் கொண்ட குயவர்களிடம் இருந்து திரிகை ஆயம், திரிகைச் சங்கம், குமரக்கச்சாணம் முதலான வரிகள் வசூலிக்கப்பட்டிருக்கின்றன. இவை வெவ்வேறு காலத்தன என்பது தவிர்த்து வெவ்வேறு முறையில் வசூலிக்கப்பட்ட வரி வகைமைகள் என்பது நிறுவப்பட்டுள்ளது. மேலும், குயவர்கள் இவ்வகைப்பட்ட தொழில் வரிதனை அரசிற்கு அல்லது அது சார்ந்த நிறுவனத்திற்கு முறையே ஊதியமாகவோ அல்லது தங்களின் உழைப்பாகவோ செலுத்தியிருக்கின்றனர்.

- ஊழியக் குடிகளுள் ஒருவரான குயவர்கள் நில விலையாவணத்தில் சாட்சிக் கையெழுத்திட்டவர்களாகவும், ஊர்க்கணக்காளர்பணி செய்தவர்களாகவும் இருந்திருக்கின்றனர். இது சமூக இயங்குதளத்தில் குயவர்களுக்கான வேறுபட்ட நிலைப்பாட்டினைக் குறிப்பதாயிருக்கின்றது.

- பண்டைக் காலத்தில் மண்ணாலான புழங்குபொருள்களே மிகுதியான அளவு பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். [நவீன அறிவியல் வளர்ச்சியற்ற அக்காலச் சூழலை அவ்வாறு கருத வேண்டிய அவசியம் இருக்கிறது. இதற்குத் தொல்பொருள் அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட மண்பாண்டங்களே சான்று.] ஆயினும் அவை மதிப்புமிக்க ஒன்றாகக் கொள்ளப்பட்டிருக்கவில்லை. ஆதலால் பெருமளவு அவ்விதப் பொருள்கள் மற்றும் அவற்றினை உற்பத்தி செய்தவர்கள் குறித்த செய்திகள் மௌனப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஊழியமாகப் பணிக்கப்பட்டிருந்த இவ்வித உற்பத்தியானது குறிப்பிட்ட ஒரு குடியினரால் தலைமுறைதோறும் கடத்தப்பட்டு வந்திருக்கின்றது. மேலும் இதுகுறித்தப் புரிதலைப் பழம்பெரும் ஆவணமான கல்வெட்டுத் தரவுகளோடு ஆராயும்போது அவ்வக்காலத்தில் பயன்பாட்டிலிருந்த மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்கள் பலவற்றைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

- ‘கலம்’ என்ற சொல் கொள்பொருள் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. அந்த வகையில் குயவர்கள் உற்பத்தி செய்த மண்ணாலான கொள்கலனை ‘குசக்கலம்’ என்றழைக்கும் வழக்கம் இருந்திருக்கின்றது.
- குசக்கலங்கள் அனைத்தும் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் மற்றும் சடங்குப் பொருள்கள் என இரண்டு வகைகளாகப் பாகுபடுத்திப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.
- கோயில் ஊழியம் செய்யும் குயவர்கள் கோயிலுக்குத் தேவையான சடங்குப் பொருள்களையும் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களையும் செய்தளித்திருக்கின்றனர். அவை, குடுவை, கலசம், குடம், மிடா, பானை, சால், சட்டி, கறிச்சட்டி, ஒட்டுட்டி, சட்டுவம், தட்டம், தாலம், மூக்கு வட்டகை, பாலிகை, தூப பாத்திரம் (தூபக்கலசம், தூபக்கால்), கடாரம் முதலானவைகளாகும்.
- இவற்றுள் திருமஞ்ஞுணக்குடம், கலசம், பானை, தூப பாத்திரம் முதலாவன கோயிலுக்கான சடங்குப்பொருள்கள். மற்றவை கோயில் நிர்வாகத்திற்கும் நிர்வாகத்தினருக்கும் செய்தளிக்கப்பட்ட அன்றாட பயன்பாட்டுப் பொருள்கள் என்பதாக வகைபிரித்து நிறுவப்பட்டுள்ளது.

நமக்குரிய மரபான புழங்குபொருள்களுள் குறிப்பிடத்தக்கனவாக மண்சார் புழங்குபொருள்களைக் விளங்குகின்றன. அந்த வகையில் அவற்றிற்கான சமகாலச் சமூக நிலைப்பாடு என்னவாயிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டுவதாக இப்பகுதி அமைகின்றது. இவ்வாய்விற்கான களம் தொண்டை மண்டலம்.

## தொண்டை மண்டலம்

பண்டைத் தமிழகத்தின் வட எல்லையில் உள்ள பெருநிலப்பரப்பினைக் குறிக்கும் சொல்லாகத் தொண்டை மண்டலம் இருந்து வருகிறது.

தொண்டை நாடு என்னும் பெயரே பொதுவாக இப்பகுதிக்கு வழங்கப்பட்டு இருந்தாலும் பின்னர் இது 'மண்டலம்' என்னும் பெரும்பிரிவுக்குரிய பெயரிலும் அழைக்கப்பட்டிருக்கிறது. தொண்டை மண்டலம் என்னும் பெயர் முதன்முதலாகக் கன்னரத்தேவன் ஆட்சிக் காலத்திய [கி.பி.*949* ஆம் ஆண்டு] கல்வெட்டு ஒன்றில் காணப்படுகின்றது (சோ. சாந்தலிங்கம்; *2003:27*).

தொண்டை மண்டலத்திற்கு ஜெயங்கொண்ட சோழமண்டலம் என்ற மற்றொரு பெயரும் இருந்திருக்கிறது என்பதனை,

> சக்கரவர்த்தி கந்நரதேவன் வல்லந் ராஜாதித்தரை எறிந்து தொண்டை மண்டலம் புகுந்த வாண்டு (SII; III: 9)

என்பதை உக்கல் கல்வெட்டுக் குறிப்பினைக் கொண்டு அறியமுடிகிறது. இது குறித்து தொல்லியல் துறை ஆய்வாளர் சோ. சாந்தலிங்கம் குறிப்பிடுகையில்,

> சோழப் பேரரசன் முதலாம் இராசராசன் தன் ஆட்சிக்கு உட்பட்டிருந்த சோழ நாட்டையும் தன்னால் வெல்லப்பட்ட அண்டை நாடுகளையும் பல மண்டலங்களாகப் பிரித்து புதிய பெயர்களைச் சூட்டினான். அப்பெயர்கள் அனைத்தும் அவனது சிறப்புப் பெயர்களாகவே அமைந்தன. அதன்படி இத்தொண்டை நாட்டுப்பகுதி அவனது சிறப்புப் பெயர்களில் ஒன்றாகிய 'ஜெயங்கொண்ட சோழன்' என்பதனை அடியாகக் கொண்டு, 'ஜெயங்கொண்ட சோழ மண்டலம்' என்னும் பெயரினைப் பெற்றது (*2003:27*)

எனப் பதிவு செய்கின்றார்.

## தொண்டை மண்டலம் - தொண்டமண்டலம்

தொண்டை மண்டலம் என்று ஒரு தரப்பினரும், தொண்டமண்டலம் என்று மற்றொரு தரப்பினரும் குறிப்பிடும் விவாதப்போக்கு தமிழாய்வுலகில் தற்போதும் இருந்து வருகின்றது. இவ்விரு வேறுபட்ட கருத்திற்கு முறையே இருதரப்பினரும் முறையே பெயர்க்காரணங்களைக் குறிப்பிடுகின்றனர்.

முதலாவதாக, தொண்டை மண்டலம். இப்பெயரின் முன்னொட்டாக உள்ள 'தொண்டை' என்ற பகுதிச்சொல் சோழ மரபில் வந்த 'தொண்டைமானைக்' குறிப்பது என்ற கருத்து பரவலாக இருந்து வருகிறது. இன்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்டு முன்னர், சோழமண்டலத்தின் ஒருபகுதி தனிமண்டலமாகப் பிரிக்கப்பட்டு 'தொண்டை மண்டலம்' என்ற பெயர் எய்தியது. இத்தொண்டை மண்டலத்தை அந்நாளில் அரசாண்டவர்கள் தொண்டைமான் மரபினர் ஆவர். இவர்கள் சோழர் வழியினர். இவர்கள் தம் குடிமுதல்வராகிய சோழரைப்போல் அத்திமாலையைத் தம் அடையாளமாகக் கொள்ளாமல், ஒரு காரணம் பற்றித் 'தொண்டை மாலையை'த் தம் அடையாளமாகக் கொண்டமையின் 'தொண்டைமான்' என அழைக்கப்பட்டனர். இவ்வேந்தர்களுள் முதல்வன் தொண்டைமான் இளந்திரையன். இவன் ஆண்ட நிலப்பகுதி ஆதலால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என இது குறித்த அனுமானங்கள் அறிஞர்களால் பரவலாக முன்வைக்கப்பட்டிருக்கின்றன. மேலும்,

> சோழ இளவரசன் கிள்ளிவளவனுக்கும் நாகர் தலைவன் வளைவணன் மகள் பீலிவளைக்கும் இடையே ஏற்பட்ட உறவில் பிறந்தவன் இளந்திரையன். இவன் பெரியவன் ஆனதும் இவன் உடலில் தொண்டைக் கொடியை அடையாளமாகச் சுற்றித் தந்தைகாண பீலிவளையால் கடல்வழி அனுப்பி வைக்கப்பட்டான். கடல் வழியே திரைகளால் கொண்டு வரப்பட்டவன் என்பதால் 'திரையன்' எனப் பெயர் பெற்றான். தொண்டைக்கொடி அடையாளமாக்கப்பட்டதால் தொண்டைமான் எனப்பட்டான் (சோ. சாந்தலிங்கம்; ***2003:13***)

என்ற கருத்தும் இங்கு நோக்கத்தக்கதாய் இருக்கின்றது. இதனடிப்படையில் இவன் ஆட்சி செய்த பகுதியாதலால் தொண்டை மண்டலம் எனப் பெயர் பெறலாயிற்று என்ற கருத்தும் வரலாற்று ஆய்வுலகில் நிலவிவருகிறது.

> ஆ தொண்டைச் சக்கரவர்த்தி என்பவன் இப்பகுதியை ஆண்டதால் இப்பகுதி தொண்டை மண்டலம் எனப்பட்டதாகச் செவிவழிச் செய்தியும் உண்டு ***(2006:4)***

என்பார் இராசமாணிக்கனார். இதேபோல் 'தொண்டை' என்பது குறித்த நிலவியல் வகைப்பட்ட கருத்துகளும் முன்மொழியப்பட்டிருக்கின்றன. "தென்னிந்தியப் பகுதி மிகவும் வளமையான அடர்ந்த காடுகளைக் கொண்டதாக இருந்திருக்கிறது. குறிப்பாகத் தொண்டை மண்டலப் பகுதி அவ்வாறாகவே இருந்தது எனவும் அதைச் சீர்ப்படுத்தி முதன்முதலாக 'குரும்பர்களே' கோட்டை அமைத்தனர் என்பதும் தொண்டை மண்டலம் குறித்து வரலாற்றில் குறிபபிடப்படும் செய்தி" *(சு. சௌந்தரபாண்டியன்; **1997:78**).*

இதனை அடிப்படையாக வைத்துப் பார்க்கும்போது முன்னாளில் தொண்டை மண்டலம் வளமிகுந்த அடர்ந்த காட்டுப் பகுநியாக இருந்திருக்க வேண்டும். அந்த வகையில் அந்நிலப்பகுதியில் எண்ணற்ற செடி, கொடி வகைகள் வளர்ந்திருக்க வாய்ப்பிருக்கிறது. அதில்,

> தொண்டை என்பது கோவைக் கொடியின் ஒருவகை. ஒசினியா இண்டிகா (Occina indica) என்பது இக்கொடியின் தாவரப்பெயர். இக்கொடி இம்மண்ணில் அதிகமாக வளர்ந்திருக்கலாம். சேர, சோழ, பாண்டியர்கள் பனை, அத்தி, வேம்பு ஆகியவற்றை முறையே தத்தம் குலச்சின்னங்களாகக் கொண்டதுபோல் தொண்டைக் கொடியை, காஞ்சிப்பகுதியின் குடித்தலைவர்களான திரையர்கள் கொண்டிருக்கலாம். இதன் காரணமாகவே அவர்கள் தொண்டையர்கள் எனவும் பெயர்பெற்றனர் போலும் (சோ. சாந்தலிங்கம்; *2003:9*)

என்ற கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

அடுத்தது மற்றொரு வகைப்பட்ட தொண்டமண்டலம். 'தொண்டமண்டலம்' என்பதற்குப் பெயர்ச்சொல் இலக்கணம் குறிப்பிடும் வள்ளலார் என்றழைக்கப்படும் இராமலிங்கர் இதற்கான விளக்கத்தினைத் தனக்கான வியாக்கியான நடையிலேயே எழுதியிருக்கிறார். அதாவது,

> தொண்டனென்பது வழக்கியற்பாடு, ஒற்றுமைச் செறிவு, வேற்றியற்கரணம், குறிப்புயர் நோக்கம், பொருள் விரியாக்கம், குற்றியல் வண்ணம், இடைப்பல் வயிற்றொகை முதலிய சொல்லியல் பாகுபாட்டில் அமைந்த முதல்தொகைச் சிறப்பு உயர்திணைக் காரணப் பொருட்பெயர். மண்டலம் என்பது வடசொல் நோக்கியற் காரணப் பண்பு கோள் இடப்பெயர். இத்தொடர்கண் இயை புண்மையிற் பொருள்கொளின் தொண்டன் - ஆதொண்டனென்னும் மோரையன்; மண்டலம் - இருபதின் காதவெல்லை வட்ட மாயநாடு; இதனுள் தொண்ட மண்டல மென்பதனியலை விளங்க வகுத்துணர்த்துக வெனின் : ஆ தொண்டந் தழை வயிற் கிடத்தப் பட்டதனால் ஆதொண்டனெனக் காரணக் குறிப்புப் பெயரேற்று இரவி மரபின் கண்ணோர் இறைமகனால் ஆளப்பட்ட வெதிரிலாட்சி உடைமையின் இம்மண்டலத்திற்குத் தொண்ட மண்டலம் எனப் பெயர் வழங்கிற்று (ஆ. பாலகிருஷ்ணபிள்ளை (ப.ஆ.); *2010:140*)

என்பதாகக் குறிப்பிட்டிருக்கின்றார். மேலும் இதற்கான கல்வெட்டுச் சான்றுகளையும் வழக்குச் சொற்களையும் சுட்டிக்காட்டி விளக்கும் இவர் 'தொண்டை மண்டலம்' என்பதைத் 'தொண்டமண்டலம்' என நிறுவியிருக்கிறார்.

நிலப்பரப்பினை அதன் தன்மையையும் எல்லையையும் அடிப்படையாகக் கொண்டு காடு, நாடு என இரண்டாக வகைப்படுத்துவர். இதில் 'நாடு' என்பது மனிதர்கள் மேலோங்கி வாழ்கின்ற பகுதியைக் குறிப்பதாகின்றது.

தமிழக வரலாற்றின் இடைப்பட்ட காலத்தில் மேலே குறிப்பிட்டது போன்று மனிதர்கள் மேலோங்கி வாழும் பகுதியை 'நாடு' என்ற சொல்லால் குறிப்பிட்டிருக்கின்றனர். அவ்வாறான பல நாடுகளின் தொகுப்பினை வளநாடு, கோட்டம் எனக் குறிப்பிட்டிருக்கின்றனர். இதை,

> முதலாம் இராசராசனின் ஆட்சிக்காலத்தில் வளநாடு என்னும் பெரும்பிரிவு உருவாக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வளநாடும் பல நாடுகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதாகிறது (தி. வை. சதாசிவபண்டாரத்தார்; *1979:43*).

*கோட்டம் என்பது பல சிறு நாடுகளை உள்ளடக்கிய ஒரு பெரும் நிலப்பிரிவு (சோ. சாந்தலிங்கம்; 2003:30)*

என்பன போன்ற விளக்கங்களைக் கொண்டு விளங்கிக்கொள்ள முடிகிறது. மேலும் இவற்றின் அடுத்தகட்ட நிலையாகப் பல வளநாடுகள், கோட்டங்கள் ஒருங்கிணைந்த பெருநிலப்பரப்பினை மண்டலம் என வகைப்படுத்தப் பட்டிருக்கின்றது. ஆகவே பெருநிலப்பரப்பினைக் குறிக்கும் சொல்லாக 'மண்டலம்' என்ற சொல்லைக் கருதலாம்.

தென்னிந்தியாவில் ஒவ்வொரு நாடும் முற்காலத்தில் மண்டலம் என்னும் பெரும்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு இருந்திருக்கின்றன. இதனை ஒரு குடையின் கீழ் ஆட்சியதிகாரம் செலுத்திய பேரரசுகளின் எல்லைப் பகுப்பு எனக் கொள்ளலாம். இது ஒரு வகையில் அதிகாரத்தின் எல்லை வரையறையாக இருப்பினும் மற்றொரு வகையில் இவை அனைத்தும் ஏதேனும் ஒரு அடிப்படையில் ஒத்தத் தன்மையுடையதாக இருந்திருக்க வேண்டும். அதாவது இவ்வித எல்லைக்குள் வாழ்ந்த மக்களிடையே ஒத்தப் பழக்கவழக்கங்களைக் கொண்ட தொழில்முறைகள் இருந்திருக்க வேண்டும். இதை,

*சேரநாடு வேழம் உடைத்து*
*சோழ நாடு சோறுடைத்து*
*பாண்டிய நாடு முத்துடைத்து*
*தொண்டை நாடு சான்றோருடைத்து*
*வையம் பெறினும் பொய்சொல்ல மாட்டார் தொண்டை நாட்டார்*

என்ற சொலவடைகளைக் கொண்டு அனுமானிக்க இயலும். மேலும், இதனை அவ்வையார் எழுதிய

*வேழம் உடைத்து மலைநாடு மேதக்க*
*சோழ வளநாடு சோறுடைத்து - பூழியர்கோன்*
*தென்னாடு முத்துடைத்து தென்நீர் வயல்தொண்டை*
*நன்னாடு சான்றோர் உடைத்து*

*(கச்சபாலய ஐயர் (தொ.ஆ.); 1940: பா.61)*

என்ற பாடல்வரிகளும் மெய்ப்பிப்பதாக அமைந்திருக்கின்றன.

விவாதப் பொருளாக இருக்கும் தொண்டை, தொண்ட என்ற இவ்விரு சொற்களை அடிப்படையாகக் கொண்டு அரியதொரு வரலாற்று ஆய்வு நிகழ்த்த வேண்டிய அவசியம் இருக்கிறது. ஆகையால் இங்கு அவ்வித சொல்லாராய்ச்சி முதன்மைப்படுத்தப்படவில்லை.

மேலும், இலக்கியங்களையும் மிக முக்கிய அடிப்படைத் தரவுகளாகக் கொண்டு நிகழ்த்தப்படும் இவ்வாய்வில் பெரும்பாணாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ள 'தொண்டைமான் இளந்திரையன், தொண்டையோர் மருகன்' (பெரும். *454*), குறுந்தொகையில் குறிப்பிடப்பட்டுள்ள 'வண்தேர்த்

தொண்டையர்' (குறு. 260), அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ள 'விறர்போர்த் தொண்டையர்' (அகம். 213) முதலான இலக்கியப் பதிவுகளை அடிப்படையாகக் கொண்டு 'தொண்டை' என்ற சொல்லாட்சியை ஏற்புடையதாகக் கருதி இவ்வாய்வில் கையாளப்பட்டுள்ளது.

## தொண்டை மண்டலம் - எல்லை

தொண்டை மண்டலத்திற்கான எல்லை வரையறையை வரலாற்றாளர்களும் தொல்லியலாளர்களும் இலக்கியவாதிகளும் தங்களுக்குக் கிடைத்த துறைசார்ந்த தரவுகளை அடிப்படையாக வைத்துப் பலவாறாக வரையறை செய்வர். அவற்றுள் முதலாவதாக,

*மேற்கு பவளமலை வேங்கடம் நேர் வடக்காம்*
*ஆர்க்கும் உவரி அணிகிழக்கு - பார்க்குள் உயர்*
*தெற்குப் பினாகி திகழ் இருபதின் காதம்*
*நற்றொண்டை நாடெனவே நாட்டு*

*(மு. இராகவையங்கார் (தொ.ஆ.); 1935: பா.2102)*

என்ற பழம்பாடலிலிருந்து தொண்டை நாட்டின் எல்லைகளையும் பரப்பளவையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

> இதன்படி பவளமலை என்பது மேற்கு எல்லையாகவும், வேங்கடம் என்னும் இன்றையத் திருப்பதி வடக்கு எல்லையாகவும் கிழக்கில் வங்காள விரிகுடாக் கடலும், தெற்கில் பெண்ணாறும் எல்லைகளாகக் கூறப்படுகின்றன. இருபது காதம் என்னும் பரப்பு இன்றைய நிலையில் சுமார் 100 மைல் அல்லது 160 கி.மீ. வீச்சுக்குட்பட்டது எனக் கருதலாம் (சாந்தலிங்கம்; 2003:10)

என்ற கருத்து 'தொண்டை நாடு' என்பதற்கான எல்லை வரையறையாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. இதே எல்லை வரையறை கொண்ட பகுதியைத் 'தொண்டை மண்டலம்' என வழங்கி வரும் நிலையையும் தமிழாய்வுலகில் காண முடிகின்றது.

இதேபோல் "தொண்டை மண்டலத்திற்கான எல்லைப் பரப்பினை 'ஏர் எழுபது' இலக்கியத்திற்கு உரை எழுதிய உரையாசிரியர் குறிப்பிடுகையில்,

*கோட்டுமோ ரிருபா னான்கு*
*கூறுநா டெழுபத் தொன்பான்*
*தோட்டெழி லாயிரத்துத்*
*தொள்ளாயிரம் நத்தமாகும்*

எனக் குறிப்பிடுகிறார். இதற்குத் தொண்டை மண்டலமாகிய ஜெயங்கொண்ட சோழமண்டலம் இருபத்து நான்கு கோட்டங்களையும் எழுபத்தொன்பது நாடுகளையும் ஆயிரத்துத் தொள்ளாயிரம் நத்தங்களையும் முற்காலத்தில் தன்னகத்தே கொண்டு விளங்கிற்று என்பதே பொருளாகிறது" (1979:51) என்பார் தி. வை. சதாசிவ பண்டாரத்தார்.

மேலும், மெக்கன்சி சுவடிகளில் இது குறித்த தரவாக,

> தொண்டை மண்டல எல்லைக்களாவது கிழக்கே கடல், தெற்கே பெண்ணையாற்றங்கரை, மேற்கே திருவண்ணாமலை, வடக்கே காளஹஸ்தி, இந்த சதுரம் (மெக்கன்சி; டி. *3089)*

என்ற செய்தி இடம்பெற்றிருக்கிறது. இதனைக் கொண்டு பெரும்பான்மையாகப் பார்க்கும்போது "ஒவ்வொரு வளநாடும் இரண்டிரண்டு பேராறுகளுக்கு இடையே அமைந்திருந்த பெருநிலப்பரப்பாகும்" *(1979:51)* என்ற தி.வை.சதாசிவபண்டாரத்தாரின் கருத்து தொண்டை மண்டல எல்லை வரையறையைக் கோடிட்டுக் காட்டுவதாகிறது. இக்கருத்து மா.இராசமாணிக்கனாரின் கருத்தோடு ஒத்துப்போவதாகிறது. அதாவது

> வடபெண்ணை முதல் தென்பெண்ணை வரை இருந்த நிலப்பரப்பே அக்காலத் தொண்டை மண்டலம் எனப்பட்டது. அஃது அருவா நாடு, அருவா வடதலை நாடு என இரண்டு பிரிவுகளாக இருந்தது. முன்னது காஞ்சி நகரம் உட்பட்டது. பின்னது காஞ்சி முதல் வடபெண்ணை வரை இருந்த நாடாகும். இது குன்றுகளும், காடுகளும் சூழ்ந்த இடமாகும். காளத்தி முதலிய மலையூர்களைத் தன்னகத்தே பெற்றது. அவ்விடம் இன்றும் தொண்டைமான் மாகனி (மாகாணம்) எனப்படுகிறது (மா. இராசமாணிக்கனார்; *2009:43)*

என்பதாகத் தொண்டை மண்டல எல்லையை வரையறை செய்வார்.

இது குறித்துக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகையில், தமிழ்நாட்டின் வடபகுதி. இம்மண்டலத்தின் பழைய எல்லை, கிழக்கே கடல், மேற்கே பவளமலை, வடக்கே திருவேங்கடம் என்னும் திருப்பதி, தெற்கே தென்பெண்ணையாறு என்பதாகும். இவை இப்போது செங்கற்பட்டு, சித்தூர், வடஆற்காடு, (வேலூர், திருவண்ணாமலை), தென்னாற்காடு (விழுப்புரம், கடலூர்) முதலான மாவட்டங்கள் இதனுள் அடங்கியிருக்கின்றன என்பதாக வரையறை செய்கிறது.

மேற்கூறிய இவையாவும் தொண்டை மண்டலம் குறித்து நிகழ்த்தப்பட்ட முதன்மையான ஆய்வின் வழியானவை என்றில்லாமல் பிறிதொரு ஆய்வின் தேவை கருதிய துணைமைத் தரவாகக் குறிப்பிடப்பட்டனவாக இருக்கிறது. தவிர்த்துத் தொண்டை மண்டல வரலாறு குறித்து நிகழ்த்தப்பட்ட முழுமையான ஆய்வினைச் சத்யநாத ஐயர், கே.என். சிவராஜ பிள்ளை, டி.வி. மகாலிங்கம், கே.வி. சுப்ரமணிய ஐயர், கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் நிகழ்த்தியிருக்கின்றனர். இவர்களைத் தொடர்ந்து கி.கேசவன், சோ. சாந்தலிங்கம், பா. திருஞானசம்பந்தம் முதலானவர்களும் ஆய்வு நிகழ்த்தியிருக்கின்றனர். இவர்களுள் அண்மைக் காலத்தில் 'தொண்டை மண்டலம் - நாடும் ஊரும்' *(2003)* என்ற தலைப்பில் தனது முனைவர்பட்ட ஆய்வை நிகழ்த்தியிருக்கும் சோ. சாந்தலிங்கம்,

> தொண்டை நாடு நிலவியல் அமைப்பில் $12^{\circ}$-$14^{\circ}$ வடக்கு அட்ச ரேகையிலும், $78^{\circ}30'$ - $80^{\circ}10'$ கிழக்குத் தீர்க்க ரேகையிலும் அமைந்திருக்கிறது. இன்றைய நிலையில் சென்னை, காஞ்சிபுரம், திருவள்ளூர், வேலூர், திருவண்ணாமலை

> (ஒரு பகுதி), மாவட்டங்களையும், ஆந்திராவின் சித்தூர், நெல்லூர் மாவட்டங்களின் தென்பகுதிகளையும் உள்ளடக்கிய நிலப்பரப்பே தொண்டைநாடு எனக் கொள்ளலாம் *(2003:10)*

என்பார்.

இதேபோல் தொண்டை மண்டலம் குறித்து **2008** ஆம் ஆண்டு 'Territorial Division's and Economic Trends of Tondamandalam' என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்திய பா. திருஞானசம்பந்தன் குறிப்பிடுகையில்,

> பழம் பாடல்களில் உள்ள தரவுகளின் அடிப்படையில் மரபான தொண்டை மண்டலம் வட எல்லையாக வேங்கடத்தையும் மேற்கு எல்லையாகப் பவளமலையையும் தென் எல்லையாக பினாகி என்கிற பெண்ணையாற்றையும் கிழக்கு எல்லையாகக் கடலையும் கொண்டிருக்கிறது. இது தற்போது காஞ்சிபுரம், திருவள்ளூர், கடலூர் (ஒருபகுதி), திருவண்ணாமலை, வேலூர் மற்றும் விழுப்புரம் முதலான தமிழக மாவட்டங்களையும்; சித்தூர், புத்தூர் மற்றும் நெல்லூர் ஆகிய ஆந்திர மாவட்டங்களின் தென்பகுதிகளையும் கொண்டிருக்கிறது. 25,600 ச.கி.மீ. பரப்பில் அரைவட்ட அளவில் உள்ள இப்பகுதித் தென்னிந்தியத் தமிழர்களின் நிர்வாகப் பகுதியாகவும் வாழிடமாகவும் அமையப்பெற்று தொண்டை மண்டலம் எனப் பெயரிட்டு அழைக்கப்பட்டிருந்திருக்கிறது. *(2008:8)*.

என்பார். அந்த வகையில், பண்டைத் தமிழக எல்லையை மையமாக வைத்தும் இன்னபிற வரலாற்று ஆதாரங்களைக் கொண்டும் நிகழ்த்தப்பட்ட மேற்கூறிய அத்துணை ஆய்வாளர்களின் ஆய்வுத் தரவுகளை ஒருவாறு ஒப்பீடு செய்து தற்கால தமிழக எல்லைக் கோட்டிற்குள் அமைந்துள்ள திருவள்ளூர், சென்னை, காஞ்சிபுரம், வேலூர், திருவண்ணாமலை (வடக்குப் பகுதி), விழுப்புரம் (வடக்குப் பகுதி) முதலான மாவட்டங்களை இவ்வாய்விற்கான தொண்டை மண்டலப் பகுதியாக வரையறை செய்து அதனடிப்படையில் இப்பகுதியில் புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் குயவர்களிடம் களஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

மனித வாழ்வியலுக்கு மிக இன்றியமையாத ஒன்றாக இருப்பது புழங்குபொருள்கள். தொடக்ககாலத்தில் இவற்றை மண், கல், மரம் முதலான இயற்கை மூலப்பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்து பயன்படுத்தியிருக்கின்றனர். அவ்வாறான பொருள் உற்பத்தியைக் குறிப்பிட்ட சிலரே செய்திருக்கின்றனர். இவர்களால் இது காலந்தோறும் தங்கள் தலைமுறையினரிடையே கடத்தப்பட்டு அதற்கான மரபு தற்காலம் வரை நீட்சி பெற்றிருக்கிறது. அவ்வாறானவற்றில் மண்சார்ந்த புழங்குபொருள்கள் குறித்தும், அவற்றை உற்பத்தி செய்த குயவர்கள், அதற்குப் பயன்படுத்தப்படும் கருவிகள் குறித்தும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## குயவர்

சமூக இயங்கியலுக்குத் தேவையான இன்றியமையாத புழங்குபொருள்களை உற்பத்தி செய்து தருபவர்களுள் குயவரும் ஒருவர். இதற்கு இவர்கள் மண்ணை மூலப்பொருளாகக் கொண்டனர். ஆதலால், மண் அழுக்குப்பொருள் என்ற கருத்தாக்கத்தினை உடைய அதிகார மேட்டிமைச்சமூக அமைப்பில் இவர்கள் ஊழியக் குடிகளாகப் பணிக்கப்பட்டனர். இக்கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக,

> சுத்தமற்ற பொருள்களைத் தொட்டு வேலை செய்தல் கேவலம் என நம்பப்பட்டது. 'சுத்தமற்ற' மூலப்பொருள்களிலிருந்து பயன்பாட்டிற்கு உகந்தவற்றை உற்பத்தி செய்த தொழிலாளிகள் அனைவருமே கீழ்ச்சாதிகளாக ஆக்கப்பட்டனர். அதுபோலவே கருத்தரிக்க வல்ல உடலமைப்பால் பெண்கள் அனைவரும் சுத்தமற்றவர்கள் என்று அடையாளப்படுத்தப்பட்டனர். ஆனால் பூசை செய்வோர், மந்திரவாதிகள், நிர்வாகிகள் மற்றும் எழுதப் படிக்கத் தெரிந்த சாதியினர் அறிவு வாய்ந்தவர்களாகக் கருதப்பட்டனர் **(2009:72)**

என்ற ஆய்வாளர் காஞ்சா ஐலைய்யா கருத்து அமைந்திருக்கின்றது. ஆகையால், மண்பாண்ட உற்பத்தியைக் குடிமைத்தொழிலாகக் கொண்ட குயவர்கள் சமூகத்தில் பெருமதிப்பற்றவர்களாகவே நடத்தப்படுகின்றனர் என்ற கருத்துப் பரவலாக இருக்கின்றது.

குடிமைத் தொழில்கள் என்று பணிக்கப்பட்ட தொழில்கள் பல. அவற்றை இரண்டு வகையாகப் பிரித்தறிய இயலும். முதலாவதாக அழுக்கோடு சம்பந்தப்பட்ட தொழில் அதாவது அப்புறப்படுத்தும் தொழில். (உ-ம்) வண்ணார் - துணிகளில் உள்ள அழுக்கினை அகற்றுதல். நாவிதர் - மனிதனுக்கு மயிர் மழித்தல், பறையர் - இறந்த கால்நடைகளை அகற்றல் முதலாவன. இவ்வகையான தொழில் செய்தவர்களை ஒரு வகையாகவும் பயன்பாட்டுப் பொருள் உற்பத்தித்

தொழிலில் ஈடுபட்டவர்களை மற்றொரு வகையாகவும் கொள்ளலாம். (உ-ம்) மரத்தாலான பொருள்களைச் செய்து தருபவர்கள் - தச்சர்கள், உலோகத்தாலான பொருள்களைச் செய்து தருபவர்கள் - கொல்லர்கள், மண்ணாலான பொருள்களைச் செய்து தருபவர்கள் குயவர்கள்.

மேற்கூறிய இவ்விரு வகைமைகளில் முதல் வகைப்பட்டவர்களைக் காட்டிலும் இரண்டாம் வகைப்பட்டவர்கள் கூடுதல் மதிப்பு உடையவர்களாகச் சமூகத்தளத்தில் காணப்படுகின்றனர். சமூக மதிப்பீட்டில் முதல் வகைப்பட்ட தொழில் ஒரு 'பணியாகவே' கருதப்படுகின்றது. இரண்டாம் வகைப்பட்ட தொழிலும் அவ்வாறே கருதப்பட்டாலும் அதனுள் ஒளிந்திருக்கும் தொழில் நுட்பம் இயல்பாகவே மற்றவர்களைக் கவர்ந்து அத்தொழில் செய்வோரை மதிக்கச் செய்யும்படியான நிலையினை ஏற்படுத்தியிருக்கிறது. எனவேதான் உற்பத்தித் தொழிலைச் செய்யும் இவர்கள் தங்களை 'பிரம்ம குலத்தினர்' என்று கூறிக்கொள்கின்றனர்.

மண்ணாலான புழங்குபொருள்களைச் செய்து தருவோரைக் குயவர் என்ற பொதுச் சொல்லால் அழைக்கும் மரபு பரவலாக இருந்து வருகிறது.

குயவர் என்ற சொல்லுக்குத் திவாகர நிகண்டு பொருள் கொள்கையில்

*கும்பகாரர் குலாலர் வேட்கோவர் என்று இங்கு இவை*
*குயவர் மட்பகைஞர் என்ப* *(நூ.2:38)*

என்றும், சூடாமணி நிகண்டு,

*கும்பகாரன் குலாலன்*
*சக்கிரி (நம்பும்) மட்பகைஞன் (ஐந்தும் நாட்டிய)*
*குயவன் (நாமம்)* *(நூ:120)*

என்றும் குறிப்பிடுகின்றன. இச்சொல் வடமொழிச் சொல்லான குசவர் என்பதிலிருந்து பிறந்தது என்கிறார் ஸ்டீபன் இங்க்லீஸ். வடமொழியில் 'கு' என்பது நிலத்தைக் குறிக்கிறது. 'அவன்' என்பது மனிதர்களைக் குறிக்கிறது என்பார் எச்.ஏ. ஸ்டர்ட். (சு. இரவிக்குமார்; 1991:18)

குசவன் என்பது குசிவன் என்ற வார்த்தையிலிருந்தும் குசத்தி என்பது குசக்தி என்ற வார்த்தையிலிருந்தும் வருவிக்கப்பட்டவை.

கு + சிவன் = குசிவன் = குசவன்
கு + சக்தி = குசக்தி = குசத்தி

இதில் 'கு' என்பதற்கு 'மண்' என்று பொருள் சொல்வர். தவிர்த்து சிவனும் சக்தியும் உலகத்தின் முதன்மை. அவர்களின் சிருஷ்டிப்பே உலக உயிரினங்கள் அனைத்தும். அதுபோல் மண்ணால் சிருஷ்டிப்புத் தொழிலைச் செய்பவன் குசவன். அதற்கான பக்க வேலைகள் செய்து பலம் சேர்ப்பவள் குசத்தி. மேற்கூறிய இரண்டும் படைத்தல் தொழிலை மையமிட்டது (எஸ். ஜோதிலிங்கம்; பி.இ.4:119) என்ற வழக்கும் நடைமுறையில் இருந்து வருகின்றது.

கழகத் தமிழ் அகராதி குயம் என்ற சொல்லுக்கு அரிவாள், கத்தி, ஊசி என்ற பொருள்களைத் தருகின்றது (1979:358). இவையனைத்தும் அறுத்தெடுக்கும் கருவிகளாம். பச்சை மண்ணைக் கொண்டு சக்கரத்தில் வனைந்த மண்கலன்களை ஊசியால் அறுத்தெடுப்பவனாதலால் குயவன் (குயம் + அவன்) எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும்.

குயவர்களை வேட்கோவர், மட்பகைஞர், குலாலர், கும்பகாரர் மண்ணுடையான், மண்ணர்வான், மண்ணீட்டாளன், குடுமிக்குயவன், குசவன் என்றழைக்கும் குலமரபு இருந்திருக்கின்றது.

## வேட்கோவர்

வேட்கோவர் என்ற இச்சொல்லிற்கு 'வேள்' என்ற சொல்லை வேராகக் கொள்ளலாம். 'வேள்' என்ற சொல்லுக்கு மண் என்று பொருள். இம்மண்ணை அடிப்படையாகக் கொண்டு செய்யப்படும் தொழில் வேளாண்மை; அத்தொழிலைச் செய்பவர்கள் வேளாளர் என்பனவற்றிலிருந்து விளங்கிக்கொள்ள முடிகின்றது. இதை அடிப்படையாக வைத்து நோக்கும்போது மண்ணாலான பொருளுற்பத்தியில் ஈடுபட்டோரை 'வேட்கோவர்' என்று குறிப்பிடும் வழக்கம் இருந்திருக்கிறது. இதைச் சங்க இலக்கியப் பாடல்களின்வழி அறியமுடிகிறது (புறம். 228).

## மட்பகைஞர்

'பகைஞர்' என்ற சொல்லுக்குச் சத்ருக்கள், விரோதிகள் என்று பொருள் (கழகத் தமிழ் அகராதி; 1979:730). எனவே மட்பகைஞர் (மண் + பகைஞர்) என்ற சொல்லுக்கு மண்ணைத் தன் எண்ணப்படி மாற்றும் வல்லமையுடையவன், மண்ணைத் தனதாளுகையின் கீழ் கொண்டு வருபவன் என்று பொருள் கொள்ளமுடியும். மட்பகைஞன் என்பதற்கு தமிழ்மொழி அகராதி 'குயவன்' என்று பொருள் தருகிறது. (2003:1120)

## குலாலர் - பெயர் முதன்மை

மண்பாண்டத் தொழில் செய்வோரை 'குலாலர்' என்றழைக்கும் மரபும் தமிழகத்தின் வடபகுதியில் நிலவிவருகின்றது. இது தெலுங்கு மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட குயவர்களைக் குறிக்கும் சொல்லாகக் கருதலாம். ஏனெனில் 'குலாலர்' என்று தங்களைக் கூறிக்கொள்ளும் மரபுடையவர்கள் பெரும்பாலும் தெலுங்கு மொழியைப் பேசுபவர்களாகவே இருக்கின்றனர். தற்போது தமிழ்மொழி பேசும் சிலரும் தங்களைக் குலாலர் எனக் கூறிக் கொள்கின்றனர். 'குயவர்' என்று சொல்லிக் கொள்வதில்லை. குயவர் என்ற சொல்லைக் காட்டிலும் குலாலர் என்ற சொல்லை மதிப்பு மிக்கதாக இவர்கள் கருதுவதே இதற்குக் காரணம். எந்த ஒரு சொல் வளமையான வரலாற்றுப் பின்புலத்தைக் கொண்டதாக இருக்கின்றதோ அதுவே வழக்காற்றில் நிலைபெறும்

என்ற கருத்தை இதற்குப் பின்னணியாகக் கொள்ளலாம். அதாவது குயவர் என்ற சொல்லால் குறிக்கப் பெறுபவர்கள் செய்த சாதனைகள் ஆட்சியதிகாரங்களைவிட குலாலர் என்ற குலப்பெயரினை உடைய பல ஆளுமைகள் (சாலிவாகனன்) வரலாற்றில் இடம்பெறும் படியான செயல்களைச் செய்திருக்கின்றனர். தமிழகக் குயவர்கள் ஆண்டபரம்பரை என்ற மேட்டிமைத்தனத்தோடு தங்களைத் தொடர்புபடுத்தி பெருமிதமடையும் நோக்கில் தங்களைக் குலாலர் எனக் கூறிக்கொள்கின்றனர்.

குலாலன் என்பவன் அம்புச முனியை முதலாகக் கொண்ட சந்ததியான் என அபிதான சிந்தாமணி (*1981:474*) குறிக்கிறது. மேலும் குயவர் சாதியினைச் சேர்ந்த சிலர் தங்களை பிரமன் மகனான குலாலன் வழிவந்த வம்சத்தவர் எனக் கூறிக்கொள்கின்றனர். இதனைக் குயவன் என்ற பெயரைவிட மதிப்பு வாய்ந்ததாகக் கருதுவதே இவர்கள் தங்களை இவ்வாறு அழைத்துக் கொள்வதற்குக் காரணமாகும் என்பார் எட்கர் தர்ஸ்டன். இதற்கு மாறாகத் தமிழ்ச் சமூகச் சூழலில் குறிக்கப்படுகின்ற குயவர் என்ற மரபான குலப்பெயரினை உடையவர்கள் தங்களுக்கான பாரம்பரிய பழமை பேசுவதில் தடுமாற்றம் உடையவர்களாகவே இருக்கின்றனர். தமிழிலக்கிய ஈடுபாடு கொண்ட சிலர் வெண்ணிக் குயத்தியாரையும் அதிலும் சைவ சமய ஈடுபாடு கொண்ட சிலர் திருநீலகண்டரையும் முன்னோடியாகக் குறிப்பிடுவர். இது தவிர்த்து குயவர் என்று தங்களை அடையாளப்படுத்திக் கொள்ளும் இவர்களின் வழக்காற்றுக் கதைகள் யாவும் பெருமை பேசும்படியாக இல்லை.

## கும்பார்

கும்பார் என்ற சொல்லை 'கும்பம்' என்ற சொல்லோடு தொடர்புடையதாகக் கொள்ளலாம். 'கும்பம்' என்ற வடமொழி சொல்லிற்கு 'பானை' என்று பொருள். ஆக, பானை வனையும் தொழில் செய்பவர்கள் 'கும்பார்' எனப்பட்டனர். 'கும்பி' என்ற சொல் குயவர்களைக் குறிக்கும் சொல் என்பார் எட்கர் தர்ஸ்டன். மேலும் தமிழ்நாட்டுக்கும் மலபாருக்கும் புறத்தே வாழும் குயவர்கள் தெலுங்குப் பகுதிகளில் 'கும்மர' எனவும், உரியர் வாழும் பகுதிகளில் 'கும்பாரோ' எனவும், கன்னடப் பகுதிகளில் 'கும்பார்' எனவும் வழங்கப்படுகின்றனர். இப்பெயர்கள் அனைத்தும் 'கும்பகார' என்ற வடசொல்லின் சிதைந்த வடிவமாகவும் சமுதாயப் படிநிலையில் இவர்கள் சூத்திரர்களைவிட உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர் (எட்கர் தர்ஸ்டன்; *2004*:IV.*139*) எனவும் குறிப்பிடுகின்றார்.

'கும்ஹார் (Kumhar) என்று பரவலாக அழைக்கப்படும் இவர்கள் ராஜஸ்தான் குயவர்கள் ஆவர். இவர்களில் 'குபா கும்பார்' எனப்படுபவர் குறிப்பிடத்தகுந்தவராவர். இவர் ஹரிபக்தி மிகுந்தவர் (அபிதானசிந்தாமணி; *1981: 472*)

## குயவர்களுக்கான பட்டப்பெயர்கள்

தமிழகத்தில் குயவர்கள் ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒவ்வொரு வகையான பட்டப்பெயரினைக் கொண்டு அழைக்கப்படுகின்றனர். திருவள்ளூர், காஞ்சிபுரம், சென்னை, வேலூர், திருவண்ணாமலை முதலான பகுதிகளில் 'உடையார்' என்றும் மதுரை உள்ளிட்ட தென்தமிழக வட்டாரங்களில் 'வேளார்' என்றும் சேலம், தர்மபுரி வட்டாரங்களில் 'செட்டியார்' என்றும் வடதமிழகத்தைச் சார்ந்த தெலுங்கு பேசும் குயவர்களை 'பத்தர்' என்று அழைக்கும் வழக்கம் இருக்கின்றது.

***உடையார்***

இச்சொல் குயவர்களைக் குறிக்கும் ஒரு வகையான பட்டப்பெயர். இது வடதமிழகத்தைச் சார்ந்த தமிழ்க்குயவர்களைக் குறிக்கின்றது. இவர்களை 'மண்ணுடையார்' என்றும் குறிப்பர்.

***வேளார்***

இது தென் தமிழகத்தைச் சார்ந்த தமிழ்க் குயவர்களுக்கான பட்டப்பெயர். 'வேள்' என்ற சொல்லுக்கு 'மண்' என்று பொருள். ஆகவே மண்ணை மூலாதாரமாகக் கொண்டு தொழில் புரியும் குயவர்களுக்கு இப்பட்டப்பெயர் வந்திருக்கலாம்.

***செட்டியார்***

சேலம், தருமபுரி, ஈரோடு, நாமக்கல் மற்றும் தென்தமிழக மாவட்டங்களில் வசிக்கும் தெலுங்கு குலாளர்களுக்கான பட்டப்பெயர் செட்டியார். இப்பகுதிகளில் "மண்பாண்ட உற்பத்தியில் ஈடுபடும் குயவர்களில் தமிழைத் தாய்மொழியாகச் கொண்டவர்கள் வேளார் என்றும் தெலுங்கினைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் செட்டியார் என்றும் அழைக்கப்படுகின்றனர்" (சரஸ்வதி வேணுகோபால் (தொ.ஆ.); 2000:30).

***பத்தர்***

இது தொண்டை மண்டல பகுதியில் வசிக்கும் தெலுங்கு குயவர்களுக்கான பட்டப்பெயராகும். இவர்கள் தாங்களைப் 'பத்தர்' அல்லர், பக்த்தர் என்று கூறிக்கொள்கின்றனர். 'பத்தர்' என்பது பொற்கொல்லரைக் குறிக்கும் சொல் பக்த்தர் என்பதுதான் எங்களுக்கான பெயர் என்றும் அதற்கு விளக்கம் அளிக்கின்றனர். (சுப்பிரமணி உடையார்; பி.இ.ப.66). இது குறித்து ஆய்கையில் பக்தர் என்ற சொல்லுக்குத் தமிழ்மொழி அகராதியில் 'பத்தர்' என்று பொருள் கூறப்பட்டிருக்கின்றது (2003:640). ஆகையால் பக்தர், பத்தர் என்ற இவ்விரு சொல்லு'ம் வட்டார வழக்கில் குயவர்களைக் குறிக்க பயன்படுத்தப்பட்டிருப்பதாகக் கருதலாம்.

## குயவர் - தொன்மம்

தமிழ்ச் சூழலில் உள்ள குடும்பம், குலம், ஊர், நாடு என்ற படிநிலைப் பிரிவுகளில் இருக்கும் பெரும்பாலான சடங்கு முறைகளைச் செய்பவர்களாக் குயவர்கள் இருந்திருக்கின்றனர். அதிலும் குறிப்பாகக் குலதெய்வம், ஊர்தெய்வம் முதலானவற்றிற்கான உருவங்களை மண்ணால் செய்து அத்தெய்வங்களுக்கான 'பூசை புனஸ்காரங்களைச் செய்யும் பூசாரியாக இருந்திருக்கின்றனர். இதைச் 'சாதிபேதத் திறவு' என்ற நூல்,

*சாதிபற் பலவா இயற்றிச் சாதிச் சடங்குகள் பலவிதமாக*
*வோதியவ் வழிக்கே யுகந்த கற்பனையா ஒவ்வொரு சாத்திரமியற்றி*
*நீதிபோற் கோயில் பலவதிற் றெய்வ நிச்சயம் போலவே யமைத்துக்*
*கோதின்றியதனை வழிபடச் சொல்லுங் குருக்கள் நாமென்பரிக் கொடியோர்*

*குசவனே யய்யனார்க்கு கந்தவனாங் குலவுகாளிக் கோச்சப்பட்டன்*
*திசையொடு நொண்டி கருப்பன் காட்டேரி சிற்சில தெய்வங்களவற்றை*
*நீசமெனப் பல்லோர் பூசைபோட்டிடவும் நேசித்த மவரிடம் பொருளைப்*
*பசப்பியே வாங்கி பிழைக்கின்ற வஞ்சப் பதரோ பிராமணரம்மா*

*(கா.அ. ஆனந்தபாரதி சுவாமிகள்; 1933: பா.6-7).*

என்பதாகக் குறிப்பிடுகின்றது. ஆனால் சாதிய அமைப்பில் குயவர்கள் நால்வருணப் பாகுபாட்டினின்றும் கீழானவர்களாக அதாவது "சங்கரசாதியினர்" (சங்கர சாதியினர் எனப்படுபவர்கள் உயர்ந்தசாதி ஆணுக்கும் தாழ்ந்த சாதி பெண்ணுக்கும் அல்லது தாழ்ந்த சாதி ஆணுக்கும் உயர்ந்த சாதி பெண்ணுக்கும் பிறந்தவர்கள்) எனக் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர். இதை,

*புறமுற வந்தனாளன் புல்கவே வணிக மாதின்*
*மயலுறு களவில் வந்தோர் துணைவர் மட்கலங்களெல்லாம்*
*முயலுறு வேள்வியோர்க்கு முகப்பணி தானுஞ்செய்து*
*குயவராய் வேள்வி தன்னிற் கொல்லுவோர் பசுவந்தானே*

*(உலகநாதபண்டிதர்; 1909: பா.4)*

என்ற இப்பாடல் புலப்படுத்துகின்றது.

## குயவர் - கோத்திரம்

தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களிடையே ஒன்பது வகையான கோத்திரப் பாகுபாடுகள் காணப்படுகின்றன. அவை,

1. குலால மாமுனி கோத்திரம்
2. சஞ்சீவிராயர் கோத்திரம்
3. கோளரிஷி கோத்திரம்
4. கும்பமுனி கோத்திரம்

5. போக மகரிஷி கோத்திரம்
6. பச்சாளி மகரிஷி கோத்திரம்
7. நொச்சிலி மகரிஷி கோத்திரம்
8. அகத்தியர் கோத்திரம்
9. கொங்கண மகரிஷி கோத்திரம் (சே.பெ. காளியப்பன்; *1983:81*)

முதலானவைகளாகும்.

## குயவர் - சாதி உயர்நிலையாக்கம்

அழுக்கோடு தொடர்புடைய மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாகச் செய்யும் குயவர்கள் சமூகத்தின் அடித்தட்டில் வைத்து மதிக்கப்பட்டிருக்கின்றனர். முன்னர்க் குறிப்பிட்டது போன்று சிலபோது சமூகத்தின் மேல்தட்டில் வைத்து மதிக்கக்கூடிய நிலையை அடைந்தாலும் அவர்களுக்கான நிரந்தர நிலைப்பாடு என்பது அடித்தட்டு நிலையாகவே இருக்கிறது. இந்தச் சமூக மதிப்பீடு செய்தொழிலால் வந்தது என வரையறை செய்ய முடிகின்றது. அதுபோலவே அவரவர்களுக்கான வாழ்க்கைவட்டச் சடங்குகளும் அவரவர் செய்தொழிலை மையமிட்டே உருவாகியிருக்க வேண்டும். அதன் அடிப்படையில் நோக்கும்போது குயவர்கள் செய்தொழிலை முன்வைத்த சாதிமுறைப்படி, சமூகத்தின் அடித்தளப் பிரிவினராகக் கருதப்படுகின்றனர். இது குயவர்கள் மீதான ஒட்டுமொத்த சமூகத்தின் மதிப்பீடு. அதே செய்தொழிலை முன்வைத்து உருவான சடங்கு செய்முறைப்படி குயவர்கள் தங்களைச் சமூகத்தின் மேல்தளப் பிரிவினராக நிலைநிறுத்திக் கொள்கின்றனர். இது அவர்களுக்கான தன்னிலை என்றாலும் அவர்கள் இதற்கான சான்றுகளைத் தங்களுடைய சடங்கு முறையிலிருந்தும் செய்தொழிலின் பொருள்கொள்ளலிருந்தும் சுட்டிக்காட்டி நிறுவுகின்றனர்.

முதலாவதாகச் செய்தொழிலை முன்வைத்த சாதிமுறைப்படி குயவர்கள் பெரும்பான்மையாகச் சமூகத்தின் அடித்தட்டுப் பிரிவினராக மதிக்கப்பட்டாலும் தெய்வ உருக்களை உருவாக்கித்தரும் சில கணங்களில் அவர்கள் சமூக மதிப்பீட்டில் உயர்நிலையாக்கம் அடைகின்றனர். மண்பாண்ட உற்பத்தித் தொழிலினுள் கரைந்திருக்கும் இம்மதிப்பீடே குயவர்களுடைய உண்மையான நிலை எனத் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் வாதிடுகின்றனர். மேலும் மண் தொழிலின் மதிப்பறியா மக்களிடத்தே தங்களுக்குரிய உயர்மதிப்பு தொடர்ச்சியாகக் கிடைக்காமல் போனாலும், சிலபோது அவர்கள் உண்மையறிந்து தங்களை மதிக்கவே செய்கின்றனர் எனவும் குறிப்பிடுகின்றனர்.

மண்பாண்ட உற்பத்தித் தொழிலை மேற்கொள்ளும் குயவர்கள் பெரும்பாலும் வைதீகச் சமயத்தினைத் தழுவியிருக்கின்றனர். ஆதலால் அவர்கள் தங்களைப் படைக்கும் தொழிலை மேற்கொள்ளும் வைதீக தெய்வமான 'பிரம்மா'விற்கு இணையானவர்களாகக் குறிப்பிடுகின்றனர். அதாவது தங்களைப்

'பிரம்ம' குலத்தினர் எனச் சொல்லிக் கொள்ளும் வழக்கம் தொண்டை மண்டல வட்டார முது குயவர்களிடையே இருந்து வருகிறது. அதேபோல் குயவர்கள் மண்பாண்ட உற்பத்திக்குப் பயன்படுத்திய நிலத்தினை 'பிரம்ம பூமி' எனக் குறிக்கும் வழக்கம் கிராமத்து மக்களிடையே இருந்து வருகிறது. அவ்வகைப்பட்ட நிலத்தைப் பிற எந்த பயன்பாட்டிற்கும் பயன்படுத்தக் கூடாது எனவும் நம்பிக்கைக் கொண்டிருக்கின்றனர். இதே நிலையை இலக்கியப் பதிவுகளின் வழியும் அறிய முடிகிறது. இதற்கு மண் மீதான உயிரின உருவாக்கத்தை மண்பாண்டப்பொருள் உற்பத்தித் தொழிலாகப் பாவித்து பாடப்பட்டிருக்கும் சித்தர் பாடல்கள் சான்றாகின்றன. அதாவது பாம்பாட்டிச் சித்தர் பாடிய,

*ஊத்தைக் குழிதன்னிலே மண்ணை எடுத்தே*
*உதிரப் புண்ணிலே உண்டை சேர்த்தே*
*வாய்த்த குயவனார் பண்ணும் பாண்டம்*
*வரை ஓட்டுக்கும் ஆகாதென்று ஆடு பாம்பே*

*(த. கோவேந்தன்; 1979:237)*

என்ற பாடலும் திருமூலர் பாடிய,

*காயமே இது பொய்யடா - வெறும்*
*காற்றடைத்த பையடா*
*மாயனார் குயவன் செய்த*
*மண்ணுபாண்டம் ஓடடா* *(மேற்படி:326)*

என்ற பாடலும், இதே போல் கடுவெளிச் சித்தர் பாடிய,

*நந்த வனத்திலோர் ஆண்டி அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்*
*கொண்டு வந்தானொரு தோண்டி அதைக்*
*கூத்தாடி கூத்தாடி போட்டுடைத் தாண்டி* *(மேற்படி:224)*

என்ற பாடலும் இதனை உணர்த்துகிறது.

இவ்வாறான தங்களின் உயர்நிலை மதிப்பீட்டை உணர்ந்தவர்களாக இருக்கும் தற்காலக் குயவர் சமூகத்தினர் தங்களை வட இந்தியக் குயவர்களுடன் ஒருங்கிணைத்துக் கொள்ளும் தன்மை உடையவர்களாக இருக்கின்றனர். தங்களை ஆண்ட பரம்பரை எனக் கூறிக்கொள்ளும் இவர்கள் அதற்கான ஆதாரங்களை மைசூர் மற்றும் வட இந்திய வரலாற்றில் இருந்து சுட்டிக்காட்டுகின்றனர். இம்மாநிலங்களில் தற்போதும் குயவர்கள் தங்களைப் பிரஜா, பிரஜாபதி எனக் குறித்துக் கொள்ளும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். இவர்களுக்கான ஒருங்கிணைப்புக் குழுமம் 'பிரஜா ராஜ்ஜியம்' எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. (www. prajarajjiyam.com) இதில் வரும் 'பிர' என்ற வடமொழிச் சொல்லிற்கு முதன்மையான அல்லது உயர்ந்த நிலையிலான எனப் பொருள் கொள்ள முடியும். இதற்குப் பிரசாதம், பிரதமை, பிரபு, பிரதிஷ்டை, பிரம்மன், பிராமணன் முதலான வடமொழிச் சொற்களை சான்றாகக் கொள்ளலாம்.

மேலும், குயவர்கள் தங்களுக்குத் தாங்களே செய்து கொள்ளும் சடங்குகளிலும், தாங்கள் பிறருக்குச் செய்யும் சடங்குகளிலும், தாங்கள் உயர்ந்தவர்கள் என்பதற்கான கூறுகள் நிறைந்திருப்பதாகக் குறிப்பிடுகின்றனர். அதாவது, தங்களுக்குத் தாங்களே சடங்கு செய்துகொள்ளும்முறை குயவர் சமூகத்தினரிடையே இருந்திருக்கிறது. இதன் நீட்சியாகத் தற்போதும் சில குயவர்கள் தங்கள் சமூகத்து முது குயவரைக் கொண்டு தங்களுக்கான சடங்கினைச் செய்து கொள்ளும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர் (களாய்வு; ராஜகிளி (80): துறிஞ்சிக்குப்பம், 10.04.2009). இவர்கள் இயற்கை தெய்வ சக்தியோடு தங்களைத் தொடர்புபடுத்திக் கொள்ளும் சடங்குமுறைகளைத் தங்களுக்குத் தாங்களே உருவாக்கிக் கொண்ட அறிவுமுதிர்ச்சி உடையவர்களாக இருக்கின்றனர். இவர்களின் இந்நிலைப்பட்டச் சடங்கு முறையானது தற்போது சமூக மதிப்பீட்டில் மேல்தளப் பிரிவினர்களாகக் கருதப்படும் பார்ப்பன சாதியினரின் சடங்குமுறைக்கு முன்னானது என்றும் இவர்களைப் பின்பற்றியே பின்னாளில் அவர்கள் இந்நிலையை அடைந்தனர் என்றும் குறிப்பிடுகின்றனர். இதனடிப்படையிலேயே இவ்விதச் சடங்குமுறை உற்பத்தியில் பார்ப்பனர்களுக்கு குயவர்கள் மூத்தவர்கள் எனக் குறிப்பிடும் கருத்து உடையவர்களாக இருக்கின்றனர். இதற்குச் சான்றாக, குயவர்கள் தங்களின் திருமணச் சடங்கில் பயன்படுத்தப்படும் 'சாலுகரக' சடங்குப்பொருள்கள் பார்ப்பன சாதிப்பிரிவினரின் திருமணச் சடங்குப்பொருள்களுடன் ஒத்துப்போவதைச் சுட்டிக்காட்டுகின்றனர். அதோடு அப்பொருளை உற்பத்தி செய்பவர்களாகத் தாங்கள் இருப்பதால் முதன் முதலில் அச்சடங்குப்பொருள் பயன்பாடு தங்களிடமே இருந்தது என்றும் பின்னாளில் அதைப் பிற சாதியினர் பின்பற்றினர் என்றும் அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்களாகப் பார்ப்பனர்களைக் கொள்ளலாம் என்றும் குறிப்பிடுகின்றனர். ஆக, தங்களுக்கான பாரம்பரியத்தை அறிந்து வைத்திருக்கும் குயவர் சமூகத்தினரின் இந்நிலை அவர்களை மேல்தட்டு நிலைக்கு உயர்த்துவதாகிறது.

மேற்கூறிய கருத்துகள் அனைத்தையும் ஒப்புநோக்கும்போது, வடநாட்டுக் குயவர்கள் தங்களுக்கென்று தனித்த அடையாளம் உடையவர்களாகவும் அதற்கான வரலாற்றுப் பின்புலம் உடையவர்களாகவும் இருந்திருக்கின்றனர். ஆனால் தென்னிந்தியக் குயவர்கள் நிலவுடைமைச் சமூகத்தினரால் அடக்கியாளப் பட்டிருந்திருக்கின்றனர். தற்போது மண்பாண்ட உற்பத்தியும் பயன்பாடும் நீர்த்துப்போன இந்நவீனச் சூழலில் மீண்டெழுந்த குயவர்கள், தங்களைவிட மதிப்பு மிக்கவர்களாக இருக்கும் மத்திய மற்றும் வட இந்தியக் குயவர்களுடன் தங்களை இணைத்துக் கொள்வதில் ஆர்வம் உடையவர்களாக இருக்கின்றனர்.

## குயவர் - தொழில்முறை வேறுபாடு

மண்ணாலான பொருளுற்பத்தியில் ஈடுபடும் குயவர்களுக்கு மிக முக்கியமான தொழிற்கருவி சக்கரம். இச்சக்கரத்தைப் பயன்படுத்தும் முறைமையின் அடிப்படையில் குயவர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை **1.** தள்ளு குசவர்கள் **2.** திரிகோல் குசவர்கள்.

### *தள்ளு குசவர்கள் அல்லது இழுத்திருவல் குசவர்கள்*

சக்கரத்தை முதன்மையாகக் கொண்டு செய்யப்படுகின்ற மண்பாண்டத் தொழிலில் சக்கரப் பயன்பாடும் அதைப் பயன்படுத்தும் முறையும் மிக முக்கியமானதாக இருக்கின்றது. ஆண், பெண் இருபாலரும் சேர்ந்து ஈடுபடும் இத்தொழிலில் சக்கரத்தில் மண்ணிட்டு பொருள் செய்யும் பணி ஆண்களுக்கானது. அதைச் சுழற்றிவிடும் பணி பெண்களுக்கானது. அதாவது ஆண்கள் பொருள் வனையும்போது சக்கரச் சுற்றின் முன்பாகப் பெண்கள் அமர்ந்து சக்கரத்தை வலக்கையால் இழுத்து இடக்கையால் தள்ளிச் சுழற்றுவர். இவ்வகையான தொழில் முறையை மேற்கொள்வோரைத் தள்ளு குசவர்கள் அல்லது இழுத்திருவல் குசவர்கள் என்றழைக்கும் வழக்கம் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களுக்கிடையே இருந்து வருகின்றது. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட இவ்வகை குயவர்கள் தென்தமிழக வட்டாரங்களில் மிகுதியாக இருக்கின்றனர்.

### *திரிகோல் குசவர்கள்*

திரிகை + கோல் = திரிகைக்கோல்; திரிகோல். இதில் திரிகை என்பது 'திகிரி' என்ற சொல்லின் மரூஉ. 'திரிகை' என்றால் சக்கரம் என்று பொருள் (கழகத் தமிழ் அகராதி). சக்கரத்தில் மண்ணை வைத்துப் பின்பு அதைச் சுழற்றி அதிலிருந்து பொருள் உற்பத்தி செய்வது என்பது மண்பாண்டம் செய்வதற்கான தொழில்முறை. இதில் இத்தொழிலின் இயக்கமாயிருப்பது சுழலும் சக்கரம். அவ்வாறான சக்கரத்தைச் சுழற்றிவிடப் பயன்படும் கருவியாகத் திகழ்வது ஆறடி உயரமுடைய மரத்தாலான கோல். கோல் என்பது வடதமிழக வட்டார வழக்கு (கோல் என்பதைக் குச்சி, கொம்பு, கம்பு என்றும் குறிப்பிடுவர்). குயவர்கள் இதைத் தங்களுடைய தொழில் வழக்காற்று மொழியில் 'திரிகோல்' என்கின்றனர். அதாவது திரிகைக் கோல் என்பது மறுவி 'திரிகோல்' என்றாயிற்று எனலாம். ஆக, சக்கரத்தைக் கோலால் சுழற்றிவிட்டு அதில் பொருள் வனையும் தொழில்முறையை மேற்கொள்பவர்கள் திரிகோல் குசவர்கள் எனப்படுகின்றனர். இவ்விதத் தொழில்முறையை மேற்கொள்ளும் இவர்கள் தனியொரு நபராகப் பொருள் வனைவதற்கு ஏற்றளவில் சக்கரத்தை வடிவமைத்துக் கொள்கின்றனர். இவ்வாறான இத்தொழில்முறை வேறுபாடு இவர்களுக்கான தனித்த அடையாளமாகத் திகழ்கின்றது. தெலுங்கினைத் தாய்மொழியாகக் கொண்ட இவர்கள் வடதமிழக வட்டாரங்களில் மிகுதியாக இருக்கின்றனர்.

## சடங்குமுறை வேறுபாடு

சடங்கு என்பது மனிதர்களின் வாழ்க்கைப் பயணத்திற்கான உளவியல் பாதை. ஆகவே அறிவுப்பூர்வமான பயணமாக இருந்தாலும் உணர்ச்சிப்பூர்வமான பயணமாக இருந்தாலும் அது அந்த உளவியல் பாதையில்தான் நகர்கிறது. ஒவ்வொருவருக்கான உளவியல் என்பது அவரவர் வாழ்வியல் அனுபவங்களிலிருந்து உருவாக்கம் பெறுகிறது. அதாவது தொழில்முறைசார்ந்த அனுபவம், மனிதர்கள் இயங்கும் சூழல்சார்ந்த அனுபவம் ஆகியவற்றிலிருந்து

உருவாக்கம் பெறுகின்றது. இப்படி அனுபவங்கள் வேறுபடுவதால் மனஅமைப்பின் தன்மையும் அதனைத் தொடர்ந்து சடங்கின் தன்மையும் வேறுபடுகின்றது (இ. முத்தையா; 2010:V). அந்த வகையில் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களைத் தொழில்முறைசார்ந்த சடங்குகளாலும், வாழ்வியற் சடங்குகளாலும் இருவேறுபட்ட பெரும்பிரிவுகளாகப் பகுக்க முடியும்.

1. குயவர் சமூகத்தினருக்கான சடங்குகள்

2. குயவர்கள் பிற சமூகத்தினருக்குச் செய்யும் சடங்குகள்

இவ்விரு வகைமையும் அவரவர்களுக்கான பூர்வீகத்தினை அறிந்துகொள்ள வகை செய்கின்றன.

### குயவர் சமூகத்தினருக்கான சடங்குகள்

குயவர்கள் வட்டாரத்திற்கு வட்டாரம் தொழில்முறையால் வேறுபடுவதைப் போன்று சடங்குமுறையாலும் வேறுபடுகின்றனர். இவர்கள் தங்களுக்குச் செய்து கொள்ளும் வாழ்க்கை வட்டச் சடங்குகளான திருமணச் சடங்குகளிலும் சாவுச் சடங்குகளிலும் இன்னபிற சடங்குகளிலும் இருவேறுவிதமான நிலைப்பாடுகளைக் கொண்டிருக்கின்றனர்.

மொழி, சடங்கு, பழக்கவழக்கங்கள் முதலானவைகளே ஒவ்வொருவரையும் தனித்தனிக் குழுவுக்குள் அடையாளப்படுத்தி நிற்கும் அடையாளக் கூறுகளாகும். அந்த வகையில் இவர்களை இரண்டு வகையாகப் புரிந்து கொள்ளலாம். 1. தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கான சடங்குமுறை, 2. தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கான சடங்குமுறை. இதில் முதலாமவர்கள் இரண்டாமவர்களின் சடங்கு முறையிலிருந்து தத்தம் வேறுபட்டிருக்கின்றனர். இதற்குச் சான்றாக இவர்களுக்கிடையேயான திருமணச் சடங்குமுறையையும் சாவுச் சடங்குமுறையையும் கொள்ளலாம்.

### திருமணச்சடங்கு

வாழ்வியற் சடங்குகளுள் மிக முக்கியமானதும் முதன்மையானதுமாகக் கருதப்படுவது திருமணச்சடங்கு. "தமிழர் வாழ்வில் திருமணம் என்பது ஒரு மனிதனுக்குச் சமூகத் தகுதியையும்; சடங்கியல் வாழ்வில் பங்கேற்கும் உரிமையையும் கொடுக்கிறது. திருமணத்தால் அமையும் வாழ்வே முழுமை பெற்ற வாழ்வு என்றும் திருமணமாகா வாழ்வு முழுமைபெறா வாழ்வு எனவும் கருத்தாக்கம் செய்யப்பட்டுள்ளது" (பக்தவத்சலபாரதி; 2008:218). இதனை அடிப்படையாகக் கொண்டு திருமணச் சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன.

அந்த வகையில், தெலுங்கினைத் தாய்மொழியாகக் கொண்ட குயவர்களுக்கான திருமணமுறை, தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களின் திருமணமுறையிலிருந்து வேறுபட்டிருக்கின்றது. அதாவது தெலுங்குக் குயவர்கள் இருதாலி அல்லது ரெட்டைத்தாலி கட்டும் வழக்கமுடையவர்களாக

இருக்கின்றனர். இத்தாலி 'பொட்டுத்தாலி' என்றும் அழைக்கப்படுகின்றது. இது திருமணத்தின்போது இரண்டு முறை கட்டப்படுகின்றது. ஆதலாலேயே இதனை இவ்வாறு அழைக்கும் வழக்கம் வந்திருக்கலாம். இதில் முதல்முறையாக ஊர்ப் பெரியோர்கள் மற்றும் உற்றார் உறவினர்கள் கூடியிருக்கும் அவையின் முன்னால் குயவர்குல மணமகன் தங்களுடைய சடங்கு முறைப்படி மணமகளின் கழுத்தில் தாலி கட்டுகிறான். சிறிது நேரம் கழித்தபிறகு, அம்மணமக்களின் முன்னால் திரையொன்று பிடிக்கப்படுகின்றது. அதன் மறைவில் மற்றொரு தாலியை அதே மணமகன் அதே மணமகளின் கழுத்தில் கட்டுகிறான். இத்துடன் இச்சடங்கு முறை நிறைவேறுகிறது.

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட குயவர்கள் ஊர்ப் பெரியோர்கள் மற்றும் உற்றார் உறவினர்கள் முன்னிலையில் ஒருமுறை மட்டுமே தாலிகட்டும் வழக்கம் உடையவர்களாக இருக்கின்றனர். இவ்விரு பிரிவினரும் பெரும்பாலும் பிராமணர்களின் வழிகாட்டுதலிலேயே இச்சடங்கு முறைகளைத் தற்போதும் செய்து வருகின்றனர். இது தொண்டை மண்டலச் சமூக அமைப்பில் இருக்கும் பொதுவானதொரு திருமணச் சடங்குமுறை. இதிலிருந்து சிலபோது விலகி பிராமணர்களைத் தவிர்த்து தம் குலப்பெரியவரை முன்னிலைப்படுத்தி அவர்களை மந்திரம் ஓதச்செய்து திருமணம் செய்யும் வழக்கமும் இவர்களிடம் இருக்கிறது. தங்களைப் பிராமணர்களுக்கு இணையானவர்களாகக் கொள்ளும் இவர்கள் 'சாலுகரகம்' உள்ளிட்ட திருமணச் சடங்குப்பொருள்களை மிகுதியான அளவு பயன்படுத்துவதில்லை.

இவ்வளவில் தெலுங்கு குயவர்களும் தமிழ்க் குயவர்களும் அடிப்படையான சிலவற்றில் ஒன்றிப்போனாலும் சடங்கு முறைகளில் பெரும்பாலும் வேறுபட்டே நிற்கின்றனர். இதுவே அவர்களுக்கான அடையாளம். இந்த அளவில் வேறுபட்ட பண்புகளைக் கொண்டுள்ள இவ்விரு உட்பிரிவினரும் தங்களுக்குள்ளாகக் 'கொண்டல் - கொடுத்தலை' பெரும்பாலும் வைத்துக் கொள்வதில்லை. அவ்வாறு வைத்துக் கொண்டால் அதில் மணமகன் வீட்டார் மேற்கொள்ளும் திருமணச் சடங்குமுறையே பின்பற்றுகின்றனர். அதாவது தமிழ்க் குயவர் சமூக ஆணுக்கும் தெலுங்குக் குயவர் சமூகப் பெண்ணுக்கும் திருமணம் செய்ய நிச்சயிக்கப்பட்டால் அத்திருமணம் தமிழ்க்குயவர் திருமணச்சடங்கு முறைப்படியே செய்யப்படுகின்றது. ஆக ஆண்களைச் சார்ந்தே இவ்விதச் சடங்குமுறைகள் பின்பற்றப்படுகின்றன. ஆனாலும் மிகுதியான சடங்கிற்கு உரியவளாக இச்சமூகப் பெண் முன்னிறுத்தப்படுகின்றாள்.

***சாவுச்சடங்கு***

தமிழ்க் குயவர்கள் பெரும்பாலானோர் 'சிவகோத்திர'த்தினராய் இருக்கின்றனர். திருநீலகண்டரின் வழிவந்தோர் என்று குலப்பெருமை கூறிக்கொள்ளும் இவர்கள் தங்களுடைய சடங்குமுறைப்படி இறந்தவர்களைச் 'சமாதி' நிலையில் அதாவது உட்காரவைத்துப் புதைக்கும் வழக்கமுடையவர்களாக

இருக்கின்றனர். இதற்கான சடங்கு முறையின் தொடக்கமாக, உடலைவிட்டு உயிர் பிரிந்தவுடன் சடலத்தைச் சம்மணமிட்டிருக்கும் வாக்கில் உட்காரவைத்து விபூதி பட்டையடித்து சந்தனப்பொட்டு வைக்கின்றனர். பிறகு சடலத்தின் தலையைத் துணிக் கயிற்றால் கட்டி, அந்தத் துணிக்கயிற்றைச் சுவற்றில் வைத்து ஆணி அடிக்கின்றனர். இறந்தவர் ஆணாயிருந்தால் அவர் இறந்த நாளிலிருந்து சரியாகப் பதினேழாவது நாள் அவரின் மனைவிக்கு 'தாலியறுக்கும்' சடங்கு நடைபெறுகின்றது. 'இதைத் தாலிவாங்கும் சடங்கு' என்றும் குறிப்பிடுகின்றனர். இவர்கள் இச்சடங்கினை அதிகாலை 4 மணியளவில் செய்யும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். பெண்கள் மட்டுமே கலந்து கொள்ளும்படியான இச்சடங்கு இறந்தவரின் வீட்டிலேயே நிகழ்த்தப்படுகின்றது. இதை அடுத்தநாள் பகல்பொழுது முதல் அவள் வீட்டைவிட்டு வெளியில் உலவக்கூடாது என்ற பழங்கால வழக்கத்தின் அடிப்படையாகக் கொள்ளமுடியும். தவிர்த்து 'தாலியறுப்பு' என்பது ஒரு 'துன்பச் சடங்கு' என்பதால் அதை, பகல்பொழுதில் செய்தால் மற்றவர்களுக்கு மனத்துன்பம் ஏற்படும் என்ற உளவியல் கூறும் இதனுள் இருப்பதாகக் கருதமுடிகின்றது.

ஆனால் தெலுங்கு குயவர்கள் இறந்தவர்களின் உடலை நீட்டிப் படுக்கவைத்துப் புதைக்கும் வழக்கமுடையவர்களாக இருக்கின்றனர். இதற்கான சடங்கு முறையின் தொடக்கமாக உடலைவிட்டு உயிர் பிரிந்த அடுத்த கணமே தாங்கள் தொழில் செய்யும் சக்கரத்தைச் சுவற்றில் சாய்வாக வைத்து அச்சக்கரத்தின் மீது சடலத்தைச் சார்த்தி அதன் தலையைச் சக்கரத்தோடு சேர்த்து கட்டிய பிறகு அதற்குச் சந்தனப்பொட்டு வைக்கின்றனர். இறந்தவர் ஆணாயிருந்தால் அவர் இறந்த நாளில் இருந்து சரியாகப் பதினெட்டாவது நாள் கருமகாரியம் செய்யப்படுகின்றது. அன்றே அவரின் மனைவிக்குத் 'தாலியறுக்கும்' சடங்கும் செய்யப்படுகின்றது. இச்சடங்கினை இவர்கள் பகல் பொழுதில் செய்கின்றனர். முற்பகல் 10 அல்லது 11 மணியளவில் கருமகாரியச் சடங்கிற்கு வந்திருக்கும் உற்றார் உறவினர் முன்னிலையில் இறந்தவரின் சடலம் புதைக்கப்பட்ட இடத்தில் இச்சடங்கு செய்யப்படுகின்றது.

### குலதெய்வ வழிபாட்டுச்சடங்கு

தமிழ்க் குயவர்கள் பெரும்பாலானோர் முனீஸ்வரனைத் தெய்வமாகக் கொண்டிருக்கின்றனர். முனீஸ்வரன் என்பது 'முனி' என்பதன் சமஸ்கிருத (வைதீக) மயமாக்கல். இத்தெய்வம் வட்டாரத்திற்கு வட்டாரம் வெவ்வேறாகக் குறிப்பிடப்படுகின்றது. அவை முனி, முனியப்பன், முனுசாமி முதலானவைகளாகும். இவை இன்றளவும் பரவலாகக் குயவர் சமூகத்தினருக்கான குலதெய்வமாக இருந்து வருகின்றது.

தொண்டை மண்டல வட்டாரத்தில் வசிக்கும் குயவர்கள் பெரும்பாலும் முனீஸ்வரனை குலதெய்வமாக வழிபடுகின்றனர். உடன் சிலர் காட்டேரி, பாப்பாத்தி என்கிற பெண் தெய்வங்களையும் வணங்குகின்றனர். ஆனால் முனீஸ்வரன் தவிர்த்து மற்ற இவ்விரு தெய்வங்களையும் தனித்தனியாகவோ,

அல்லது ஒன்றாகச் சேர்த்தோ வழிபடுகின்ற வழக்கம் இவர்களிடம் இல்லை. முனீஸ்வரனை முதன்மை தெய்வமாகக் கொண்டு பூசை புனஸ்காரங்கள் செய்த பிறகே காட்டேரி மற்றும் பிற துணை தெய்வங்களுக்கான சடங்குகளைச் செய்கின்றனர். வந்தவாசி வட்டாரக் குயவர்கள் முனீஸ்வரனைத் தனியாகவும் காட்டேரி தெய்வத்தைத் தனியாகவும் வழிபடுகின்ற வழக்கத்தினை மேற்கொள்கின்றனர். இது தவிர்த்து பச்சையம்மன், கன்னியம்மன் முதலான தாய் தெய்வங்களை வழிபடும் வழக்கமும் சில குயவர்களிடம் இருக்கின்றது.

**முனீஸ்வரன்**

முனீஸ்வரனைத் துடியான தெய்வமாகக் கருதி தீட்டுத்துடக்கு ஏற்பட்டுவிடாமல் மிகவும் எச்சரிக்கையாக வழிபடுகின்றனர். பெரும்பாலும், பெண்களே இவ்விதத் தீட்டுத் துடக்குக்கு உரியவர்களாகக் கருதப்படுகின்றனர். சான்றாகப், பெண்களின் மாதவிடாய் நாட்களில் இவ்வித வழிபாட்டுச் செயல்பாடுகளில் அவர்கள் ஈடுபடக்கூடாது என்பதில் இப்பகுதி குயவர்கள் மிகவும் கண்டிப்பு உடையவர்களாக இருக்கின்றனர். ஏனெனில் திருமணப் பருவம் அடைந்த இளைஞன் ஒருவன் திருமணமாகாத நிலையில் இறந்துவிட்டால் அவன் 'முனீஸ்வரனாக' வணங்கப்படுகின்றான். ஆக, 'முனீஸ்வரன்' திருமணமாகாத தெய்வம் (அ. இராசேந்திரன் (க.ஆ.); *2005:54*). 'முனீஸ்வரன் இளமையான, துடியான, நடமாடும் தெய்வம். அதனால் அதற்கு நிலையான தங்குமிடமோ, கோயிலோ இல்லை. எனவே அத்தெய்வத்திற்கு உருவச் சிலை வைத்து வணங்கும் வழக்கம் இல்லை' (ஸ்ரீரங்கம்; பி.இ.*4:46*). இதைச் சாமி என்றால் எங்கும் நிறைந்திருப்பது என்ற கருத்தாக்கத்திற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

முனீஸ்வரனைக் குலதெய்வமாக வழிபடும் குயவர்கள் அத்தெய்வத்திற்கு 'உருவச்சிலை' செய்ய முயலவில்லை, முயன்றதற்கான அறிகுறியும் இல்லை. இவர்கள் தங்களுக்குத் தேவையானபோது முனீஸ்வரனைத் தற்காலிகமாக உருவாக்கி வழிபடுகின்றனர். வழிபாடு முடிந்த அடுத்த கணமே அவ்வுருவைக் குலைத்துவிடும் வழக்கத்தைக் கொண்டிருக்கின்றனர். இது குயவர்களின் தொழிலோடு தொடர்புடைய ஆக்கல் - அழித்தல் நிகழ்வினை மையமிட்டதாயிருக்கிறது. குறிப்பாக, திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டத்தில் வசிக்கும் குயவர்கள் இம்முறையை மேற்கொள்பவர்களாக இருக்கின்றனர். முனீஸ்வரனைக் குலதெய்வமாகக் கொண்ட இவர்கள் காதுகுத்தல், கல்யாணம் என்று ஏதேனும் சடங்கு செய்யவிருந்தால், அப்போது முனீஸ்வரனை வழிபடும் பொருட்டுத் தங்களுடைய வீட்டின் முற்றத்திலோ அல்லது தோட்டத்திலோ (பெரும்பாலும் முன்வாசல் அல்ல) ஈரமான மணலைக் கொண்டு முக்கோண வடிவில் சிலை செய்கின்றனர். இதற்கான மணலைக் காலடி படாத காட்டுப் பகுதியிலிருந்து கொண்டு வரவேண்டும் என்பதில் கவனமாயிருக்கின்றனர். அவ்வாறு முக்கோண வடிவில் மணலால் செய்யப்பட்ட அந்த உருவை 'முனீஸ்வரனாக'ப் பாவித்து அதற்கானச் சடங்குகள் செய்து வழிபடுகின்றனர். இதே வந்தவாசி வட்டாரத்தைச் சார்ந்த வேறு சில குயவர்கள்

வேறுவிதமான வழிபாட்டு முறையைக் கடைப்பிடிக்கின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு அவர்கள், 'நாங்க எப்போ சாமி கும்பிட நெனக்கிறமோ அப்போ மூனு புதுசெங்கல்லை எடுத்துவந்து கழுவி வீட்டு வாசலில் நட்டுவைத்து அதனையே தங்களது குலதெய்வமாகப் பாவித்து வழிபாடு செய்வோம்' என்கின்றனர். அந்த மூன்று செங்கல்லையும் மூன்று முனீஸ்வரனாக அடையாளப்படுத்துகின்றனர். அவை 1. கருமுனி, 2. செம்முனி, 3. சுருமுனி. இம்மூன்று தெய்வங்களும் சில ஊர்களில் பச்சையம்மன் தெய்வத்திற்கு எதிர் உடையானாக அமைக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அக்கோயிலில் முனீஸ்வரனுக்குத் தனித்தனியான சிலை இருக்கிறது.

பெரும்பாலான ஊர்களில் ஏழு முனிகளின் அணிவகுப்பு காணப்படுகின்றது. அங்குச் சென்று முனீஸ்வரனை வழிபடும் வழக்கத்தினை (சில குயவர்கள் மேற்கொள்கின்றனர். கூடவே பச்சையம்மனையும் வணங்குகின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு 'பச்சையம்மாவுக்கு எதிருடையார்தான் முனீஸ்வரன். அப்போ முனீஸ்வரனை அடக்கி ஆளுற சாமி பச்சையம்மாதான். அதனால பச்சையம்மாவைக் கும்பிடுவோம்' என்று குறிப்பிடுகின்றனர். சில குயவர்கள் பச்சையம்மனைக் குலதெய்வமாகக் கொண்டு வழிபடுவதற்கான அடிச்சரடு இதுவாக இருக்கலாம் (கெம்பு உடையார்; பி.இ.4:38) இவ்வழிபாட்டு முறை இரண்டு வகைப்பட்டதாக இருக்கின்றது. ஒன்று பால்பூசை மற்றொன்று காவுபூசை.

**பால்பூசை**

பால்பூசை எனப்படுவது அசைவம் கலக்காமல் செய்யப்படுவது. சமூகத்தில் பொருளாதார ரீதியாகப் பின்தங்கியிருப்பவர்கள் பெரும்பாலும் இவ்வகைப்பட்ட பூசையைச் செய்கின்றனர். ஆதலால் ஆடம்பரமற்று இருக்கின்றது. மேலும் தனியொரு குடும்பத்தார் மட்டும் வழிபடுவதாயிருந்தால் பால்பூசை செய்வதும், இரண்டு மூன்று குடும்பத்தார் சேர்ந்து வழிபடுவதாயிருந்தால் காவு பூசை செய்வதும் நடைமுறை வழக்கமாக இருக்கின்றது. பால் பூசையின்போது 'கொழுக்கட்டை' செய்து படையலிடும் பழக்கம் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களிடம் இருக்கின்றது. அதாவது ஒரு மரக்கால் பச்சரிசியை இடித்து, அம்மி, குழவி, குழந்தை முதலான உருவங்களைப் போன்று 'கொழுக்கட்டை' செய்கின்றனர். அத்துடன் அவல், பொறி, கடலை முதலான இஷ்டப் பொருள்களையும் படையலிட்டு பொங்கல் வைத்து வழிபாடு செய்கின்றனர்.

**காவுபூசை**

காவுபூசை என்பது சற்று பொருளாதார வசதி படைத்தவர்கள் செய்வது. காவுபூசையில் முக்காவுபூசை என்பது ஒருவகை. முக்காவுபூசை என்பதற்கு ஆடு, கோழி, பன்றி என மூன்று உயிர்களைப் பலியிட்டு வழிபடுதல் என்று பொருள். முனீஸ்வரனைக் குலதெய்வமாக வழிபடும் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் பெரும்பாலானோர் இவ்வகையான காவு பூசையே முனீஸ்வரனுக்கு

உகந்ததாகக் கருதிச் செய்கின்றனர். அத்துடன் அவல், பொறி, கடலை, சாராயம், சுருட்டு முதலானவற்றையும் படையலிட்டு வழிபடுகின்றனர்.

காட்டேரி

திருமணப் பருவம் அடைந்த பெண் திருமணம் ஆகாமலே இறந்துவிட்டால் அவள் 'காட்டேரி' தெய்வமாக வணங்கப்படுகிறாள் (அ. இராசேந்திரன்; 2005:53). இத்தெய்வ வழிபாடு தனியொரு குடும்பத்தாரின் நம்பிக்கை சார்ந்ததாக இருக்கின்றது. அதாவது தனியொரு குடும்பத்துப் பெண்கள் கருவுற்றிருக்கும்போது 'காட்டேரியை' வழிபடுகின்றனர். அவ்வாறு வழிபட்டால் குடும்பத்திற்கும் பிறக்கப்போகும் குழந்தைக்கும் எந்தவிதமான தீங்கும் ஏற்படாது என நம்புகின்றனர். தவிர்த்து முறையே ஆண்டுதோறும் வழிபடும் வழக்கமும் இருக்கின்றது. இதைத் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் தங்களுடைய குலதெய்வ வழிபாட்டின்போது 'காட்டேரி' தெய்வத்தையும் சேர்த்து வழிபடுகின்ற வழக்கத்தினைக் கொண்டு அறிய முடிகின்றது. இவ்வாறான இவ்வழிபாட்டில் மேற்கூறியபடி 'காட்டேரி' தெய்வத்திற்கென அமைக்கப்பட்ட வீட்டின் நடுப்பகுதியில் சோறு, முருங்கைக்கீரைக் குழம்பு, கருவாட்டுக் குழம்பு, கோழிமுட்டை முதலானவற்றை வைத்துப் படையலிடுகின்றனர். அத்துடன் கருப்புப் புடவை, கருப்பு மணி, காதோலை முதலானவையும் வைத்து முட்டையிடாத கருப்புநிறக் கன்னிக்கோழியை அறுத்து வழிபாடு செய்கின்றனர். வழிபாடு முடிந்ததும் படையலிட்ட அந்தக் கருப்புப் புடவையை, கருவுற்றப் பெண்ணை உடுத்தச் செய்து அவளுக்குக் காட்டேரிக்குப் படைத்த படையலை சாப்பிடக் கொடுக்கின்றனர். அந்தப் படையலை வேற்றாள் சாப்பிட அக்குடும்பத்தினர் அனுமதிப்பதில்லை. அதுபோலவே அந்த கருப்புப் புடவையைக் கருவுற்றப் பெண்கள் அல்லது வயது முதிர்ந்த பெண்களே உடுத்த வேண்டும். தவிர்த்து மாதவிடாய்க்குத் தகுதியான பெண்கள் உடுத்தக்கூடாது என்பதில் கவனமாக இருக்கின்றனர். இந்த வழிபாட்டு முறைமை வட்டாரத்திற்கு வட்டாரம் மாறுபடுகின்றது.

வந்தவாசி வட்டாரத்தில் 'காட்டேரி' தெய்வத்திற்குப் பெண்கள் மட்டுமே வழிபாடு செய்யும் வழக்கம் இருந்து வருகின்றது. இவர்கள் ஊரின் ஒதுக்குப்புறமாயிருக்கும் நீர்நிலை சார்ந்த ஆற்றங்கரை, ஏரிக்கரை, குளத்தங்கரை, கிணற்றங்கரைப் பகுதியையே 'காட்டேரி' தெய்வத்தை வழிபாடு செய்வதற்கான இடமாகத் தேர்ந்தெடுக்கின்றனர். அங்கு வழிபாடு செய்வதற்கு முடிவு செய்யப்பட்ட பின்பு அதற்குத் தேவையான கருப்புக்கோழி உள்ளிட்ட அனைத்துப் பொருள்களையும் அங்கேயே எடுத்துச் சென்று சமைக்கின்றனர். பின்பு காட்டேரி தெய்வத்தைச் செங்கற்களைக் கொண்டு உருவாக்கி அதற்கெனச் சமைத்தப் பொருள்களைப் படையலிட்டு கருப்புக்கோழி அறுத்து பூசை செய்கின்றனர். வழிபாடு முடிந்ததும் சமைத்துப் படையலிட்ட அனைத்து உணவு வகைகளையும் அங்கேயே சாப்பிட்டு முடித்து அதற்கான பயன்பாட்டுப் பொருள்களையும் அவ்விடத்திலேயே விட்டுவிட்டு வீடு திரும்பிவிடுகின்றனர்.

### பாப்பாத்தி

பாப்பாத்தி என்றழைக்கப்படும் இத்தெய்வத்தினைப் 'பூவாடைக்காரி' என்றழைக்கும் வழக்கம் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களிடம் இருக்கின்றது. இவர்கள் இத்தெய்வத்தை வீட்டுத் தெய்வமாக அனுசரிக்கின்றனர். இத்தெய்வத்திற்கான வழிபாடு இருவேறு வகையில் நடைபெறுகின்றது.

1. வீட்டுக்குள் செய்யும் வழிபாடு
2. வீட்டுக்கு வெளிப்புறத்தில் செய்யும் வழிபாடு

'பாப்பாத்தி அல்லது பூவாடைக்காரி என்பது வீட்டுத் தெய்வம் என்பதால் வீட்டிலேயே அதற்கான உருவச் சிலையைக் களிமண்ணால் உருவாக்கி அதற்கான அலங்காரங்களைக் குயவர்களே செய்கின்றனர். பிறகு பொங்கலிட்டு அதனுடன் அவல், பொறி, கடலை மற்றும் பழவகைகள் வைத்துப் படையலிட்டு வழிபடுகின்றனர். சற்று விமரிசையாக வழிபட நினைப்பவர்கள் பம்பை, உடுக்கை முதலான வாத்தியங்கள் முழக்கி வழிபாடு செய்கின்றனர்.

சிலர் குலதெய்வத்தையும் வீட்டு தெய்வத்தையும் ஒருங்கே வைத்து வழிபடும் வழக்கமுடையவர்களாக இருக்கின்றனர். திருவள்ளூர், காஞ்சிபுரம் உள்ளிட்டப் பகுதிகளில் இருக்கும் குயவர்கள் தங்களுடைய குலதெய்வமான முனீஸ்வரனை வழிபடுங்காலத்து வீட்டு தெய்வமான பாப்பாத்தி அல்லது பூவாடைக்காரியையும் சேர்த்து வழிபடுகின்றனர். இவ்வழிபாடென்பது இரண்டு தெய்வத்தையும் சமநிலையில் நிறுத்தி செய்யப்படுகின்றது. மேற்சுட்டியபடி குலதெய்வத்திற்குச் செய்யும் அத்தனை வழிபாட்டுச் சடங்குகளையும் வீட்டுத் தெய்வமான பாப்பாத்திக்கும் செய்கின்றனர். கல்யாணம், காதுகுத்தல் முதலான சிறப்பு நிகழ்வுகளை முன்னிட்டு இவ்வழிபாடு செய்வதை இவ்வட்டாரக் குயவர்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

### பச்சையம்மன்

தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் சிலர் பச்சையம்மனைக் குலதெய்வமாகக் கொண்டிருக்கின்றனர். பச்சையம்மன் வழிபாடு என்பது பரவலாக இருக்கும் ஒன்று. நாட்டார் குலதெய்வங்களில் தொண்டை மண்டல வட்டாரத்தில் மிக அதிகப்படியானோர்களால் வணங்கப்படும் குலதெய்வம் பச்சையம்மன். பசுமை, வளமை வேண்டிய விவசாயக் குடிமக்களே மிகுதியான அளவில் இத்தாய் தெய்வத்தினை வணங்குகின்றனர். தமிழ்ச்சமூக மரபில் தாய் தெய்வத்தின் மற்றொரு குறியீடு மறுஉற்பத்தி. ஆகையால் தாய தெய்வங்களுக்குக் காவல்தெய்வமாக ஆண் தெய்வங்கள் இருக்கின்றன. அவ்வாறு பச்சையம்மனுக்குக் காவல், ஏவல் தெய்வமாக எதிர் உடையானாக முனீஸ்வரன் விளங்குகின்றது.

ஆக, பச்சையம்மனுக்கு முனீஸ்வரனை எதிர்உடையானாக, காவலாக, ஏவலாக நிர்மாணித்திருப்பதற்கும் குடியானவர்களுக்கு ஊழியம் செய்பவர்களாக குயவர்களைப் பணித்திருப்பதற்குமான ஊடாட்டத்தினை நுணுகி ஆராய

வேண்டிய தேவை இருக்கின்றது. அதாவது குயவர்களுக்கான குலதெய்வம் முனீஸ்வரன். குடியானவர்களுக்கான குலதெய்வம் பச்சையம்மன். குடியானவர்களுக்கு குடிஊழியம் செய்யவேண்டி குயவர்கள் பணிக்கப்பட்டிருக்கின்றனர். இதை ஒட்டியே குடியானவர்களின் குலதெய்வமான பச்சையம்மனுக்குக் குயவர்களின் குலதெய்வமான முனீஸ்வரன் காவல் தெய்வமாக, ஏவல் தெய்வமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கலாம் என்பது இங்கு உற்று நோக்கத்தக்கது.

**கன்னியம்மன்**

குயவர் சமூகத்தைச் சார்ந்த சிலர் கன்னியம்மனைக் குலதெய்வமாக வழிபடுகின்றனர். இத்தெய்வம் வாய்மொழி வழக்காற்றில் 'கன்னிமார்' எனக் குறிப்பிடப்படுகின்றது. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட குயவர்கள் கன்னியம்மனை ஏழாக வகைப்படுத்தி வணங்குகின்றனர். இதில் ஏழு கன்னிக்கும் இளைய கன்னி துடியான தெய்வம் என்று கூறுவதோடு அதற்குச் சிறப்பு பூசையும் செய்கின்றனர்.

இது முனீஸ்வரன் வழிபாட்டோடு ஒத்ததாயிருக்கின்றது. பச்சையம்மன் கோயிலில் காவல், ஏவல் தெய்வமாக நிர்மாணிக்கப்பட்டிருக்கும் முனீஸ்வரன் ஏழாக இருக்கின்றது. இதில் ஏழு முனியில் இளையமுனிக்குச் சிறப்பு பூசைகளைச் செய்கின்றனர். குயவர்களால் செய்யப்படும் மேற்கூறிய ஏழு கன்னியில் இளைய கன்னி வழிபாடும், ஏழு முனியில் இளைய முனி வழிபாடும் ஒன்றையொன்று ஒத்ததாயிருக்கின்றது. இச்செயல்பாட்டை ஆண் தெய்வத்தை முதன்மைப் படுத்தியிருப்பவர்கள் முனியையும், பெண் தெய்வத்தை முதன்மைப் படுத்தியிருப்பவர்கள் கன்னியையும் குலதெய்வமாக வழிபடுகின்றனர் என்பதாக வரையறுக்க முடிகின்றது.

**முத்தெய்வ வழிபாடு**

திருவள்ளூர், காஞ்சிபுரம் மாவட்டங்களைச் சார்ந்த குயவர்கள் மூன்று தெய்வங்களை வழிபடும் வழக்கமுடையவர்களாக இருக்கின்றனர். அவை 1. முனீஸ்வரன், 2. காட்டே ரி, 3. பாப்பாத்தி (பூவாடைக்காரி). இம்மூன்று தெய்வங்களுக்கும் உருவச்சிலை கிடையாது. ஆதலால் இவ்வட்டாரக் குயவர்கள் தாங்கள் வழிபாடு செய்ய நினைக்கும் காலத்தில் மட்டும் தற்காலிகமான தெய்வ உருக்களை உருவாக்குகின்றனர். அவ்வுருக்கள் குறிப்பிட்ட எண்ணிக்கை உடையனவாக இருக்கின்றன இவ்வெண்ணிக்கை வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றது. இருப்பினும் அதிகப்படியானவர்கள் வழிபடும் தெய்வ உருக்களின் எண்ணிக்கை பதினெட்டாகும். ஒவ்வொரு தெய்வத்திற்கும் தலா 18 பிடிமண் உருக்கள் என மூன்று தெய்வத்திற்கும் மொத்தம் 54 உருக்கள் செய்து அவற்றைத் தனித்தனியாக அமைத்து வழிபடுகின்றனர். அதாவது தங்களுடைய வீட்டுத்தோட்டத்திலோ, (பெரும்பாலும் குயவர்களுடைய வீடுகளனைத்தும் ஊரோரத்தில் இருப்பதால், வீட்டின் பின்புறம் வயல்வெளி அல்லது பெரிய

தோட்டப்பகுதி இருக்கின்றது.) அல்லது ஊருக்கு ஒதுக்குப்புறமான பகுதியிலோ களிமண்ணைக் கொண்டு கிழக்கு முகமாக வாயிற்படி வைத்துக் கட்டங்கட்டமாக மூன்று வீடு கட்டுகின்றனர் (சிறுபிள்ளைகள் விளையாட்டிற்கு வீடு கட்டுவது போன்று). அவ்வாறு கட்டப்பட்ட ஒவ்வொரு வீட்டினுள்ளும் மேற்கூறிய பதினெட்டு உருக்களைக் கீழே குறிப்பிட்டுள்ள முறைப்படி இருக்கச் செய்கின்றனர்.




அதன்பின் அப்பிடிமண் உருக்களுக்குச் சந்தனம், குங்குமத்தால் பொட்டு வைக்கின்றனர். பின்பு எல்லா பிடிமண் சாமிகளின் மீதும் துண்டு துண்டாக அறுக்கப்பட்ட நூலினைச் சாற்றி வழிபடுகின்றனர். வழிபாடு முடிந்ததும் அந்நூலினை எடுத்து கை மணிக்கட்டில் கட்டிக் கொள்கின்றனர். இதில் முதல்வீடு முனீஸ்வரன், இரண்டாவது வீடு காட்டேரி, மூன்றாவது வீடு பாப்பாத்தி (பூவாடைக்காரி) என்று தனித்தனியாக வகைப்படுத்தி அந்தந்த தெய்வத்திற்கேற்றாற் போல் வழிபாடு செய்கின்றனர்.

முனீஸ்வரனை மட்டுமே முதன்மைக் குலதெய்வமாகக் கொண்டு வழிபடும் சிலர், பால்பூசை, காவுபூசை என்று இரண்டு விதமான பூசையையும் செய்கின்றனர். அதற்கு ஏற்றாற்போல் முனீஸ்வரனைப் பால்பூசை முனீஸ்வரன், காவுபூசை முனீஸ்வரன் என்று தனித்தனியாக நியமம் செய்கின்றனர். மேற்கூறியபடி இவ்விரு தெய்வத்திற்கும் மண்ணாலான வீடு கட்டுகின்றனர். அதனுள் அறுபத்திநான்கு பிடிமண் உருக்களை வைத்து வழிபடும் வழக்கம் இவர்களிடையே காணப்படுகின்றது. பிடிமண் உருக்களின் எண்ணிக்கையில் மட்டும் வேறுபாட்டைக் காட்டும் இவர்கள் மற்றபடி மேற்கூறிய அதே வழிபாட்டுச் சடங்குகளை அப்படியே செய்கின்றனர். அதாவது, பால்பூசை முனீஸ்வரனுக்கு அவல், பொறி, கடலை, 9 வகையான பழம், பூக்கள் முதலானவற்றை வைத்துப் படையலிடுகின்றனர். காவுபூசை முனீஸ்வரனுக்கு, பால்பூசை முனீஸ்வரனுக்கு இட்டது போலவே படையலிட்டு அதனுடன் கூடுதலாகப் பீடி, சுருட்டு, சாராயம் முதலான பொருள்களை வைத்து ஆட்டுக்கிடா காவு கொடுத்து வழிபடுகின்றனர் (சுதாகர்; பி.இ.4:137).

கருமுனி, செம்முனி, சடாமுனி, இளையமுனி என்ற முனீஸ்வரனில் பல வகைகள் குறிக்கப்படுகின்றன. இவை ஒவ்வொன்றும் நிறத்தாலும் குணத்தாலும் வேறுபட்டவை என்ற கருத்து பரவலாக இருக்கின்றது. ஆனால் குயவர்களின் 'உருவமற்ற' முனீஸ்வர வழிபாடு இவை எதையும் கண்டுகொள்ளாத பழமையைச் சுட்டுவதாகத் திகழ்கின்றது.

### *குயவர் பிற சமூகத்தினருக்குச் செய்யும் சடங்குகள்*

சமூகத்திற்குத் தேவையான புழங்குபொருள்களை உற்பத்தி செய்துதரும் ஊழியக் குடிகளான குயவர்கள் தங்களின் தொழிலோடு தொடர்புடைய சிலச் சடங்குகளையும் பிற சமூகத்தினருக்குச் செய்கின்றனர். அவ்வாறு குயவர்களால் செய்யப்படும் சடங்குகளுள் அக்கி எழுதுதலும் ஒன்று.

### *அக்கி எழுதுதல் / சிம்மம் எழுதுதல்*

அக்கி என்பது கோடைக்காலத்தில் வரும் ஒருவகையான வெப்பு நோய். இதனை 'அக்கினி மாரியாத்தாள்' என்றும் குறிப்பிடுகின்றனர். அக்கினி என்பதற்கு நெருப்பு அல்லது சூடு என்று பொருள். ஆக, உடற்சூட்டினால் அதாவது அக்கினியால் தோன்றும் நோய் 'அக்கினி மாரியாத்தாள்'. இது ஒரு வகையான அம்மை நோய். இதனை குணப்படுத்தும் இயற்கை மருத்துவர்களாகக் குயவர் குடியைச் சார்ந்த பெண்கள் இருக்கின்றனர். இவர்கள் தங்களின் தொழிலுக்குப் பயன்படுத்தும் செம்மண்ணை இந்நோயைக் குணப்படுத்துவதற்கான மருந்தாகக் கொண்டு செய்யப்படும் இச்சடங்கை 'அக்கி எழுதுதல்' என்பர். இதை 'உருப்போடுதல்' என்று குறிக்கும் வழக்கமும் இருக்கின்றது.

உப்பு, மிளகாய், புளி, துவரம்பருப்பு ஆகிய நான்கு பொருள்களையும் நோய் வாய்ப்பட்டவர்களின் வீட்டாரைக் கொண்டு வரச்செய்து அதை முறத்தில் கொட்டி வைத்துவிடுகின்றனர். அத்துடன் தட்சிணையாக 10 ரூபாய் பணமும் வைக்கப்படுகின்றது. பிறகு அக்கி நோய்வாய்ப்பட்டவரைக் கிழக்கு முகம்பார்த்து உட்காரச் செய்து அவர்களின் முதுகில் கோழி இறகினை அல்லது துணி சுருட்டப்பட்ட சிறு குச்சியினைக் கொண்டு நீரில் கரைத்த செம்மண் குழம்பைத் தொட்டு சிங்க உருவினை வரைகின்றனர். இதை 'சிம்மம் எழுதுதல்' என்று குறிப்பிடும் வழக்கமும் இருக்கிறது (களாய்வு; நீலாவதி **(69)**: காணியம்பாக்கம், **18.06.2010)**. பிறகு உடல்மேல் உள்ள கொப்பளம் மற்றும் காயங்களின்மீதும் அதனைச் சுற்றியும் செம்மண்ணைப் பூசுகின்றனர். பூசி முடித்ததும் நோய்வாய்ப்பட்டவர்களின் வீட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட பொருள்கள் கொட்டி வைத்திருக்கும் முறத்தினை வீட்டுத் தெருவாசலில் வைத்து நோய்வாய்ப்பட்டவரை மேற்கிலிருந்து கிழக்காகவும், கிழக்கிலிருந்து மேற்காகவும் மாறி மாறி மூணுமுறை தாண்டச் செய்கின்றனர். பின்பு திரும்பிப் பார்க்காமல் வீட்டுக்குச் செல்லும்படி நோயாளியை அறிவுறுத்தி அனுப்புகின்றனர். அவ்வாறு அவர்கள் சென்றபிறகு அந்த முறத்திலிருக்கும் பத்துரூபாய் பணத்தை எடுத்துக்கொண்டு மற்ற பொருள்களைத் தெரு முச்சந்தியில் கொட்டி விடுகின்றனர். இதே போன்று மூன்று நாள் தொடர்ந்து அக்கியெழுதுகின்றனர். சிலர் முதல்நாள் உப்பு, இரண்டாவதுநாள் புளி, மூன்றாவதுநாள் மிளகாய் என்ற வைப்புமுறையில் சுற்றிப்போடும் சடங்கினைச் செய்கின்றனர். அவ்வாறு செய்தால் அந்நோய் குணமாகிவிடும். குணமாகும் வரை கத்தரிக்காய், கருவாட்டுக்குழம்பு முதலான உடற்சூட்டை உருவாக்கும் உணவினை உண்ணக்கூடாது என்று

நோயாளியை அறிவுறுத்துகின்றனர். நோயாளி இவ்வாறான பத்திய முறையைக் கடைபிடிக்காவிட்டால் 'அக்கி' நோய் குணமடைய காலதாமதமாகும். அத்தருவாயில் அதற்குத் தனியான கை மருந்து ஒன்றைக் குயவர்கள் செய்து தருகின்றனர். கூடவே அம்மருந்து என்னவென்று சொல்லக்கூடாது. சொன்னால் பலிக்காது என்ற நம்பிக்கையையும் தெரிவிக்கின்றனர்.

மேற்கூறிய மருத்துவச் சடங்கு முறையில் மண்பாண்டத் தொழிலுக்குப் பயன்படுத்தும் செம்மண் மிக முக்கிய மருந்தாகக் கொள்ளப்படுகின்றது. மண்பாண்டங்களின் பொலிவிற்குப் பூசப்படுகின்ற செம்மண்ணை உடல் மேலிருக்கும் கொப்பளங்கள் மற்றும் காயங்களின் மீது பூசுவதோடு அதனைச் சுற்றி வட்டமாகவும் பூசுகின்றனர். அவ்வாறு பூசினால் அந்தக் கொப்பளங்கள் மற்ற இடங்களுக்குப் பரவாது என்று நம்பிக்கை கூறுகின்றனர். இது அடிப்படையில் ஓர் அறிவியல் உண்மையைச் சுட்டுவதாக உள்ளது. கொப்பளங்களாக வரும் அம்மை, சிரங்கு உள்ளிட்ட புற உடல் நோய்கள் அனைத்தும் பரவும் தன்மை கொண்டவை. ஆதலால் அதைப் பரவாமல் தடுப்பதே அந்நோய்க்கான தடுப்புமுறையாகும்.

'அக்கிநோய்' உடற்சூட்டினால் வருவது. ஆதலால் அதைக் குளிர்விப்பதே அதற்கான மருத்துவமுறை. அதுவே அதற்கான மருந்து. மண் என்பது குளிர்வித்தலுக்கான பொருளாயிருக்கின்றது. மண் மருந்தாவது இயற்கை. இருப்பினும் 'அக்கி' என்கிற 'அக்கினி மாரியாத்தாள்' குயவர் வீட்டில் பிறந்த பெண் தெய்வம். ஆதலால் அந்நோய் வந்தால் உடனே குயவர்களிடம் சென்று வைத்தியம் பார்த்துக்கொள்ள வேண்டும் என்ற நம்பிக்கை காலங்காலமாக இருந்து வருகின்றது. அதற்குக் குயவர்கள் மண்ணை மருந்தாகத் தருகின்றனர். அப்போது மண்ணின் மருத்துவ குணம் குயவர்களுக்கானதாக மாறிவிடுகின்றது. இதை அறியாத சில குயவர்கள் செயற்கையான வண்ணக்குழம்பு (Water Paint) வாங்கி அக்கி எழுதுவதைத் தங்களின் அறிவு வளர்ச்சியாக நினைத்துப் பெருமைப்படுகின்றனர். (டி.என். சங்கர்; பி.இ.4:60). இவர்களிடத்தில் சடங்கு என்பது பொருளற்ற ஒன்றாகக் காட்சியளிக்கின்றது.

மதுரை வட்டாரக் குயவர்கள் மேற்குறிப்பிட்ட பொருள்களுடன் கோழிமுட்டை ஒன்றும் கொண்டு வரச்செய்து அதில் கோழி இறகின் காம்புப் பகுதியால் காவிக் கலவையைத் தொட்டு முட்டையில் முகம் ஒன்று வரைவார்கள். (சு. இரவிக்குமார்; 1991:30). இதனைக் காளியம்மன் என்று நம்புகின்றனர். பின்பு அத்தெய்வத்தின் முன்னிலையில் மேற்கூறிய சடங்கு செய்யப்படுகின்றது.

## மண்பாண்டத் தொழில்

எல்லாத் தொழிலும் நுட்பம் நிறைந்த ஒன்றாகும். அந்நுட்பம் எதற்குப் பயன்படுகின்றது? யாருக்கு பயன்படுகின்றது? என்பதிலிருந்தே அதற்கான மதிப்பு நிர்ணயிக்கப்படுகிறது. அந்த வகையில் குடித்தொழிலாகச் செய்ய பணிக்கப்பட்ட அனைத்துத் தொழில்களும் நுட்பம் நிறைந்தவையாக இருப்பினும், அவை எளிய

வகையில் புழக்கத்திலிருப்பதால் அவையனைத்தும் சமூகத்தில் பெருமதிப்பு பெறாது போயின. அதிலும் குறிப்பாக மண்பாண்டத் தொழில்.

இயற்கையாகக் கிடைக்கும் விலையற்ற களிமண் மற்றும் விறகுகள் முதலானவை மண்பாண்டத் தொழிலுக்கான மூலப்பொருள்; அவை அன்றாடப் பயன்பாட்டிற்கு வேண்டி மிகுதியாக உற்பத்தி செய்யப்படுவது; அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் மண்பாண்டப் பொருள்கள் அனைத்தும் உடையும் தன்மை கொண்டவை; ஆகையால் இத்தொழில் சமூகத்தில் பெருமதிப்பு பெற்றிருக்கவில்லை. மேலும் இத்தொழில்நுட்பம் அறிவு நிறைந்தது என ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கவுமில்லை. ஆனால் இத்தொழில் நுட்பத்தின் அழகியல் மக்களின் நனவிலி மனதில் இயல்பாகவே மதிப்பினை ஏற்படுத்தியிருந்தன.

## மண்பாண்ட உற்பத்திக் கருவிகள்

ஒரு பொருள் மற்றொரு பொருளை உருவாக்குமாயின் அப்பொருளைக் கருவி எனக்கூறமுடியும். பொருளை உற்பத்தி செய்பவர்களே கருவிகளையும் உற்பத்தி செய்கின்றனர். கருவியானது பெரும்பாலும் கடின உழைப்பினைக் கொண்ட நெருப்போடு தொடர்புடைய வன்மையான தொழில் செய்பவர்களால் உற்பத்தி செய்யப்படுகின்றது. கல், மரம், இரும்பு முதலான வன்மையான மூலப்பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்யப்படும் இக்கருவிகளைப் பெரும்பாலும் ஆண்களே உற்பத்தி செய்கின்றனர். இதனை ஆண்கள் வன்மையானவர்கள், மறுஉற்பத்திக்கு வித்திடுபவர்கள் என்பதன் குறியீடாகச் சுட்டமுடியும். மேலும் பொருள் உற்பத்தித் தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் ஒவ்வொன்றும் இதேபோன்ற மனித உளவியல் அறிவின்படி அமைப்பாக்கம் செய்யப்பட்டிருப்பதை அவதானிக்க இயலும்.

இதனடிப்படையில் மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் பயன்படுத்தப்படும் கருவிகளான சக்கரம், திரிகோல், ஊசி, மூங்கில் பத்தை, தெரசில் துணி (திரைசீலை துணி), தட்டுக்கல், தட்டுக்கட்டை, கொந்து கோல் முதலானவற்றை இதனடிப்படையில் நோக்கலாம். இதில் உற்பத்திக்கான முதன்மைக் கருவிகளாகச் சக்கரம், திரிகோல், ஊசி, தட்டுக்கல், தட்டுக்கட்டை முதலானவற்றையும் மற்றவை அதற்கு உறுதுணையாக அமைகின்றன.

***சக்கரம்***

மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்திக் கருவிகளுள் முதன்மையானது சக்கரம். மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்தி மனித உயிர் உற்பத்தியோடு தொடர்புடையதாகக் கொள்வர். இதைப் பின்வரும் குறிப்பால் அறியலாம்.

> மண்பாண்டப் பொருள் உற்பத்திக்குச் சக்கரம் அடிநாதமாய் விளங்குகின்றது. இது மண்பாண்ட உற்பத்தித் தொழிலின் குறியீடாகவும் கொள்ளப்படுகின்றது.

இதனை மறுசுழற்சியின் குறியீடாக அதாவது மறுஉற்பத்தியின், பெண்ணின் குறியீடாகக் குறிப்பிடுவார் புரோவர் (2008: 331)

என்பார் பக்தவத்சலபாரதி.

பெண்ணின் குறியீடாகக் குறிப்பிடப்படும் இக்கருவி ஆண்களால் கையாளப்படுகிறது. அதேபோல் பெண்கள் செய்யும் பொருள் உற்பத்தித் தொழிலில் (கூடை முடைதல், முறம் கட்டுதல் முதலான தொழில்கள்) பெரும்பாலும் கத்தி பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது. இதை ஆண்களின் குறியீடாகக் கொள்ளலாம். ஆக, ஆண் பெண்ணைச் சார்ந்து இயங்குதல், பெண் ஆணைச் சார்ந்து இயங்குதல் என்ற வாழ்வியலுக்கான அடிப்படைத் தத்துவத்தைப் பிரதிபலிப்பதாகக் இக்கருவிகளின் பயன்பாடுகள் அமைந்திருக்கின்றன.

மண்பாண்டம் வனையும் சக்கரம் சங்க இலக்கியத்தில் திகிரி என்றும், கல்வெட்டுக் குறிப்புகளில் திரிகை என்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன. நடைமுறை வழக்காற்றில் குயவர்கள் இதனைத் திகிரி என்றே பெரும்பாலும் அழைக்கின்றனர். இளம் தலைமுறையினராய் இருக்கும் குயவர்கள் இதைச் சக்கரம் என்று குறிப்பிடும் வழக்கத்தைக் கொண்டிருக்கின்றனர். அவ்வாறான இச்சக்கரம் மூன்று ஆரக்கால்களைக் கொண்டதாகவும் நான்கு ஆரக்கால்களைக் கொண்டதாகவும் இருவேறு வகையானதாக அமைப்பாக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. மேலும் இதன் தன்மையின் அடிப்படையில் இதனை மூன்று விதமாக வகைப்படுத்தலாம் (பி.இ.5:156). அவை 1. மண் சக்கரம், 2. சிமெண்ட் சக்கரம், 3. இரும்புச் சக்கரம். இதை காலப்படிமலர்ச்சியின் அடிப்படையிலும் அணுக வேண்டியுள்ளது. அதாவது சிமெண்ட் என்ற மூலப்பொருள் புழக்கத்திற்கு வராத காலகட்டத்தில் இருந்த முதுகுயவர்கள் தாங்களாகவே தங்களுடைய தொழிலுக்குத் தேவையான சக்கரத்தை மண்ணால் செய்து கொண்டனர். இது முதல் வகை. நீரோடு அதிகமான தொடர்புடைய இத்தொழிலில் இவ்வகையான சக்கரத்திற்கான ஆயுட்காலம் மிகவும் குறைவானதாக இருந்திருக்கிறது. ஆகையால் அதைத் தவிர்க்க அவ்வித சக்கரம் நவீன மூலப்பொருளான சிமெண்ட்டால் உருவாக்கிப் பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டாவது வகை. இக்காலகட்ட குயவர்கள் பெரும்பாலானோர் தங்கள் தொழிலுக்குத் தேவையான சக்கரத்தினைத் தாங்களாகவே செய்து கொள்ளும் திறன் அற்றவர்களாக இருக்கின்றனர். ஆகையால் இதில் தேர்ந்த சில குயவர்களால் இவ்வகையான சக்கரங்கள் உற்பத்தி செய்யப்பட்டு மற்ற குயவர்களுக்கு அளிக்கப்படுகின்றது. மேலும், இவ்விரு வகையான ஈக்கரங்களும் மண்பாண்டத் தொழிலோடு தொடர்புடையவர்களால் உருவாக்கித் தரப்படுகின்றன. அவ்வாறு உருவாக்கப்பட்ட சக்கரத்தின் மையப்பகுதிக்கு 'மொகுரு' என்று பெயர். இது பெரும்பாலும் மரப்பலகையால் ஆனதாயிருக்கிறது. இதைத் தச்சர்களின் உதவியால் பெற்று, பிறகே இவ்விரு வகைப்பட்ட சக்கரங்களும் உருவாக்கப்படுகின்றன. ஆனால் மூன்றாவதாகச் சொல்லப்பட்ட இரும்புச் சக்கரம் குயவர்களின் கவனத்திற்கு அப்பாற்பட்ட ஒருவரால் செய்தளிக்கப்படுகின்றது. நவீனமயமான இக்காலகட்டத்தில் மரபான

மண்பாண்ட உற்பத்தியை எளிமைப்படுத்தும் தோரணையில் உருவாக்கித் தரப்படுகின்ற இவ்வகையான இரும்புச் சக்கரங்கள் மண்பாண்ட உற்பத்திக்கு ஏதுவானதாக இல்லாததால் பெரும்பாலான குயவர்கள் இதைப் பயன்படுத்துவதில்லை. மாறாக இடைப்பட்ட காலத்தில் உருவான சிமெண்ட் சக்கரங்களையே பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். தற்போதும் இந்நிலையே நீடித்து வருகின்றது.

***திரிகோல்***

திகிரியைச் சுழற்ற பயன்படுத்தப்படும் மரக்கொம்பினைத் திரிதடி, திரிகோல் என்றழைக்கும் வழக்கம் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களிடையே காணப்படுகின்றது. இதனாலேயே இவர்கள் திரிகோல் குயவர்கள் எனவும் திரிதடி குயவர்கள் எனவும் அடையாளப்படுத்தப்படுகின்றனர். மண்பாண்ட உற்பத்தியின் போது ஒவ்வொரு பொருளையும் வனைவதற்கு முன்பாகத் தாங்களே திரிகோலால் சக்கரச் சுற்றில் அதற்கென இடப்பட்டுள்ள துளையில் வைத்துச் சக்கரத்தினைச் சுழற்றிக் கொள்ளும் பழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர் என்பதே இதற்கான சிறந்த உதாரணமாகும். இந்நேரத்தில் இவர்கள் பெண்களை உதவிக்கு வைத்துக்கொள்வதில்லை.

பொருள் உற்பத்தியில் பயன்படுத்தப்படும் சக்கரத்தைப் பெண்ணின் குறியீடாகக் கொள்வதைப் போலவே அதைச் சுழற்றிவிடும் திரிகோலினை ஆணின் குறியீடாகக் கொள்ளலாம். ஆறடி உயரமுடைய இத்திரிகோல் மூங்கில் அல்லது பிரம்பு மர வகையைச் சார்ந்ததாக இருக்கின்றது. வட தொண்டை மண்டலக் குயவர்கள் தங்களின் அடையாளமாகக் குறிப்பிடும்போது சக்கரத்துடன் திரிகோலையும் சேர்த்துக் குறிப்பிடுகின்றனர். ஆதலால் அவர்கள் 'தள்ளு குசவர்கள்' என்றழைக்கப்படுகின்றனர். இவ்வழக்கம் தென் மண்டலத்தைச் சார்ந்த குயவர்களிடம் இல்லை.

***ஊசி***

சக்கரத்தில் இடப்பட்ட களிமண் தொழுவில் வனைந்த மண்பாண்டத்தைப் பிரித்தெடுக்க வேண்டிப் பயன்படுத்தப்படும் கருவிதனைக் குயவர்கள் ஊசி என்றழைக்கின்றனர். இது இரும்பாலான ஒரு சிறு கம்பி. ஆனால் மரபான முதுகுயவர்கள் சிலர் இதற்கு வலசல் என்ற மெல்லிய மரப்பட்டையைப் பயன்படுத்துகின்றனர். சிறிய பட்டை வடிவிலான இக்கம்பி ஐந்து அல்லது ஆறு அங்குலம் நீளம் உடையதாக இருக்கிறது.

பெண்ணின் குறியீடான சக்கரத்திலிருந்து, மறுஉற்பத்தியின் குறியீடான முழுமையாக வனையப்பட்ட மண்பாண்டத்தைப் பிரித்தெடுக்க அறுக்கும் இம்முறையைப் பெண்ணின் பிள்ளைப்பேற்றில் தொப்புள் கொடி அறுக்கும் நிகழ்வோடு ஒப்பு நோக்கலாம்.

***தட்டுக்கல்***

சக்கரத்தில் வனையப்பட்ட மண்பாண்டங்களின் அடிப்பகுதியைக் கூட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் முதன்மைக்கருவி தட்டுக்கல் (பி.இ.5:156). மண்பாண்டத்தின் உட்புறத்தில் கல்லை வைத்து அதன் மேல்புறத்தில் தட்டுக் கட்டையால் தட்டி மண்பாண்ட உடற்சுவற்றிற்கான பருமனைச் சீர்படுத்தவும் திடப்படுத்தவும் செய்கின்றனர். இவ்வகையான தட்டுக்கல்லின் மேற்பகுதி கைப்பிடிப்பதற்கு ஏதுவான வகையில் சிறியதாகவும் அடிப்பகுதி அகன்று சற்றுப் பெரியதாகவும் காணப்படுகின்றது. இதைக் கல்லாலான பொருள் உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் ஒட்டர் குடியினரிடமிருந்து வடிவமைத்துப் பெறுவதாக மண்ணாலான பொருள் உற்பத்தியில் ஈடுபடும் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு பெறப்படும் இவ்விதத் தட்டுக்கற்கள் சிறியதும் பெரியதுமாக மூன்றிற்கும் மேற்பட்ட வகைகளில் உருவாக்கப்பட்டிருக்கின்றன. இவ்வகைப்படுத்தலுக்கு அவற்றின் பயன்பாடே அடிப்படை. அதாவது பெரிய மண்பாண்ட வகைகளைத் தட்டுவதற்குப் பெரிய தட்டுக்கல்லும் சிறிய மண்பாண்ட வகைகளைத் தட்டுவதற்குச் சிறிய தட்டுக்கல்லும் பயன்படுத்தப்படுகின்றன. தேவையை மையமிட்டு உருவாக்கப்பட்ட இவ்விதத் தட்டுக்கல்லின் வகைமைகளை இதனடிப்படையில் அறிந்துகொள்ள இயலும்.

***தட்டுக்கட்டை***

தட்டுக்கல்லோடு தொடர்புடைய மரத்தாலான மற்றொரு வகைப்பொருள் தட்டுக்கட்டை (பி.இ.5:156). இது மண்பாண்டத்தின் மேற்புறத்திலிருந்து தட்டி அதனை ஒழுங்குபடுத்தப் பயன்படுத்தப்படுகின்றது. மரத்தாலான இப்பொருள் உருளையான கைப்பிடியில் தட்டையான தலைகீழ் முக்கோணம் இணைக்கப்பட்டது போன்ற வடிவமைப்பினை உடையது. இது மரப்பொருளுற்பத்தித் தொழிலில் ஈடுபடும் தச்சர்களிடமிருந்து பெறப்படுகின்றது. இவ்விதமான தட்டுக்கட்டைகள் குறைந்தபட்சம் 6 அங்குலம் அதிகபட்சம் 12 அங்குலம் நீளம் உடையதாகவும் மூன்றிலிருந்து ஆறு அங்குலம் வரைக்குமான அகலம் உடையதாகவும் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.

உரம் வாய்ந்த கனமான மரத்தால் செய்யப்படும் இவ்விதத் தட்டுக்கட்டைகள் அளவினடிப்படையில் மூன்றுக்கும் மேற்பட்ட வகைகளில் செய்து பயன்படுத்தப்படுகின்றன. கனமான உடற்சுவற்றினை உடைய அளவில் பெரியதான மண்பாண்டங்களைத் தட்டிச் சீர்படுத்த பெரிய அளவிலான தட்டுக் கட்டையையும்; அளவில் சிறிய மெல்லிய உடற்சுவற்றினை உடைய மண்பாண்டங்களைத் தட்டிச் சீர்படுத்த சிறிய அளவிலான தட்டுக்கட்டையையும் பயன்படுத்துகின்றனர்.

### *மூங்கில் பத்தை*

சுழற்றிவிடப்பட்ட சக்கரத்தில் வனையப்படும் மண்பாண்டங்களின் மீதுள்ள தேவைக்கும் அதிகமான மண்ணை வழித்தெடுக்கப் பயன்படுத்தப்படும் மூங்கில் கழியின் மேல்தோல்பட்டை மூங்கில் பத்தை என்றழைக்கப்படுகின்றது (பி.இ.*5:157*). மரபான முதுகுயவர்கள் இதனைக் கவர்கோல்பத்தை என்றழைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். ஒரு அங்குலம் அளவு அகலமும் அதிகபட்சம் ஆறு அங்குலம் அளவு நீளமும் கொண்ட இம்மூங்கில் பத்தை நன்கு முதிர்ந்து விளைந்த பருத்த மூங்கிலிலிருந்து பெறப்படுகின்றது. முதிர்ந்த மூங்கில் பட்டை எளிதில் வளைந்து கொடுக்காது என்பதறிந்து அதிலிருந்து இவ்வகைப்பட்ட எளிமையான கருவிகளைப் பெறும் அறிவுடையவர்களாக மரபான குயவர்கள் இருக்கின்றனர்.

### *தெரசில் துணி*

சேலை என்பதன் வழக்காற்றுச் சொல் சீலை என்பதாக இருக்கிறது. திரைத்துணி அதாவது இடைமறைப்பாக இருக்கும் துணி என்பது நாளடைவில் திரைச் சீலை என்பதாயிற்று எனலாம். இது தனிச்சொல்லாகிக் காலப்போக்கில் தெரசில் துணி என்று வழக்காறாகி இருக்க வேண்டும். இதில் துண்டிக்கப்பட்ட நூலாடையைக் குயவர்கள் தெரசில் துணி என்ற சொல்லால் குறிக்கும் வழக்கத்தினைக் கொண்டு விளங்கிக் கொள்ள முடியும்.

கட்டமாக வெட்டப்பட்ட உள்ளங்கை அளவுள்ள நூலாடையே மண்ணைக்கொண்டு பொருள் வனையும்போது பயன்படுத்தப்படுகின்றது. சுழற்றிய சக்கரத்தில் வனையப்படும் மண்பாண்டத்தின் மேற்பரப்பினை மென்மையானதாக, வழவழப்பானதாக மாற்றவேண்டி இத்தெரசில் துணி பயன்படுத்தப்படுகின்றது. தண்ணீரில் நனைக்கப்பட்டத் தெரசில் துணியைச் சக்கரச் சுழலில் வனையப்படும் பச்சைமண்பாண்டத்தின் மேலிட்டு லேசாகத் தேய்த்து அம்மண் பாண்டம் வழவழப்புடையதாக்கப்படுகின்றது. இதைக் குயவர்களுடைய தொழில்நுட்ப அறிவின் உச்சமாகக் கொள்ளலாம். சிறப்புநிலைக் கருவிகளின் எதிர்பார்ப்பு ஏதுமின்றித் தனக்கு அண்டையில் உள்ள அல்லது தனது பயன்பாட்டில் உள்ள பிறிதொரு பொருளைத் தனது தொழில் நுட்பத்திற்கான சிறப்புநிலைக் கருவியாக மாற்றிக்கொள்ளும் குயவர்களின் இவ்வறிவுத்திறன் மரபானது.

### மண்பாண்ட மூலப்பொருள்கள்

இயற்கையைக் கொண்டு தன்னை மேம்படுத்திக்கொள்ள மனிதன் மேற்கொண்ட முயற்சிகளில் மண்பாண்ட உற்பத்தியும் ஒன்று. இப்பொருள் தேவைக்கான உந்துதலை இயற்கையே தந்திருக்கிறது. ஆதலால் இதற்கான மூலப்பொருள்களை மனிதன் இயற்கையிலிருந்தே பெற்றிருக்கிறான். இயல்பாகக் கிடைக்கும் மண்ணைக்கொண்டு தன்னை மேம்படுத்த முயற்சி செய்திருக்கிறான்.

அதன் விளைவே மண்பாண்ட உற்பத்தி. ஆக, இத்தொழிலுக்கான முதன்மைத்தேவை என்பது மூலப்பொருளாகவே இருந்திருக்கின்றது.

### *முதன்மை மூலப்பொருள்கள்*

களிமண், வண்டல்மண், சோரல்மண், மணல் (மிருதுவான மணல்) முதலானவை மண்பாண்டத் தொழிலுக்கான முதன்மை மூலப்பொருள்கள் ஆகும். இதுதவிர்த்து மண்பாண்டப் பகட்டுக்காக வேண்டி வண்ணம் பூசுவதற்குப் பயன்படும் செம்மண். தேவையான அளவு நீர், ஈர மண்பாண்டத்தைச் சுட்டு திடப்படுத்த விறகு, வறட்டி, முள், வைக்கோல் முதலான மூலப்பொருள்களும் தேவைப்படுகின்றன. இது தவிர்த்து சவுடு, பதர், வைக்கோல் கூளம் முதலான மூலப்பொருள்களும் தேவைப்படுகின்றன.

### *களிமண்*

கரிய நிறமுடைய வளம் நிறைந்த ஒருவகை மண். மிகவும் அடர்த்தி நிறைந்த இம்மண்ணில் நுண்துகள்கள் அதிகம் என்பதால் மண்பாண்டப் பொருள்உற்பத்திக்கு இது ஏதுவாயிருக்கின்றது. இம்மண் தனியொரு வகையாக இருப்பினும் அது அவ்வாறே அதன் முழுத் தனித்தன்மையுடன் கிடைப்பது என்பது அரிதானதாயிருக்கின்றது. ஆதலால் அத்தன்மையை ஒத்த வண்டல் மண் உள்ளிட்ட கலவைகள் இதற்கு ஈடாகக் கொள்ளப்படுகின்றது. தனித்த களிமண் என்பது எல்லாக் காலங்களிலும் ஒரு குறிப்பிட்ட மண்ணடுக்கின்கீழ்க் கிடைப்பது. ஆனால் களிமண்ணின் தன்மையை ஒத்த வண்டல் மண் வகைகள் ஒரு குறிப்பிட்ட இயற்கை நிகழ்வின் ஈற்றாக நிலத்தின் மேற்பரப்பில் கிடைப்பதாகும். ஆதலால் இவ்விதப் பொருள் உற்பத்திக்கான நிலையான தேவை களிமண்ணையே மையமிட்டிருக்கிறது.

### *வண்டல் மண்*

வண்டல் மண் என்பது நீரில் வீழ்படிவாகக் கிடைக்கும் ஒருவகை மண். மழைக்காலங்களில் பெருக்கெடுத்து வரும் வெள்ளம் வழியெங்கும் மண்ணரிப்பை ஏற்படுத்துகிறது. அந்நிகழ்வில் மண்ணிலுள்ள நுண்துகள்கள் நீருடன் இரண்டறக் கலந்துவிடுகின்றன. ஆனால் அதிலிருக்கும் சிறுகற்பரல்கள் அவ்விடத்திலேயே தங்கிவிடுகின்றன. நீரோடு கலந்து வரும் மண்ணின் நுண்துகள்கள் நிலையாக ஆறு, ஏரி, குளம் உள்ளிட்ட இடங்களில் தேங்கி நிற்கும்போது வீழ்படிவாகின்றன. அந்நீ ர்நிலைகள் வற்றிய சிறிது காலத்திற்குப் பிறகு கிடைக்கும் நுண்மண்துகள்களின் ஒருங்கிணைப்பான கெட்டித் தன்மை கொண்ட தொகுப்பே வண்டல் மண். இது மிகுந்த மென்மைத் தன்மையுடையது என்பதால் மண்பாண்டம் வனைவதற்கு ஏதுவாயிருக்கிறது என்கின்றனர் குயவர்கள் (*மணி; பி.இ.4:53*). இது மண்பாண்டம் செய்வதற்கு உகந்த நேரடி மூலப்பொருள் அல்ல. ஆகையால் இதனுடன் சவுடு மணல் (நுண் மணல்) சேர்த்துப் பயன்படுத்தும் தொழில்நுணுக்கம் உடையவர்களாகக் குயவர்கள் இருக்கின்றனர்.

### சோரல் மண்

தனது தனித்தன்மையை இழந்த களிமண்ணின் ஒரு வகையைக் குயவர்கள் சோரல் மண் என்கின்றனர் (முனுசாமி; பி.இ.4:31). களிமண் என்பது நுண் மண் துகள்களுடன் சிறுமணல் கலந்த ஒரு கலவை. இது தவிர்த்துச் சிறுமணல் கலக்காதவை வண்டல் மண் என்றும் சுட்டப்படுகின்றது. நுண்மண் துகள்களுடன் பெருமணல் கலந்த கலவை சோரல் மண். இவ்விதமான சோரல் மண் கிடைப்பது எளிது. ஆனால் இதை நேரடியாகச் சக்கரத்திலிட்டு மெல்லிய வகை மண்பாண்டங்கள் செய்ய இயலாது. மாறாக கையால் வனையப்படும் கனமான வகை மண்பாண்டங்கள் செய்ய இவை ஏதுவானதாயிருக்கிறது. ஆதலால் இவற்றைக் கையால் வனையப்படும் திடமான மண்பாண்டங்கள் செய்யப்பயன்படுத்துகின்றனர். இம்மண்வகை பரவலாக விளைநிலங்களில் கிடைக்கின்றது. எனவே இதற்கான தட்டுப்பாடு ஏதுமிருந்திருக்கவில்லை.

### செம்மண்

செந்நிறத்தன்மை கொண்ட இம்மண் மண்பாண்டங்களின் பகட்டான தோற்றப் பொலிவிற்காகப் பயன்படுத்தப்படுகிறது. இதைச் செங்காட்டு மண் என்றழைக்கும் வழக்கமும் இருக்கிறது. இம்மண் சில குறிப்பிட்ட வட்டாரங்களில் மிகுதியாகக் கிடைக்கின்றது. பரவலாகக் கிடைப்பதில்லை. அவ்வாறு கிடைத்தாலும் அவை மிக்க நிறப் பொலிவுடன் இருப்பதில்லை. எனவே தேவை கருதி பொலிவு மிக்க செம்மண்ணை ஒரு குறிப்பிட்ட பகுதிக்குச் சென்று எடுத்து வருவதைத் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

நகர்ப்புறங்களில் தற்போது பூச்செடி வளர்ப்பதற்கு இம்மண் பயன்படுத்தப்படுவதால் இம்மண் விற்பனைப் பொருளாகிவிட்டது. ஆதலால் நகர்ப்புறத்தைச் சுற்றியிருக்கும் மண்பாண்டத் தொழில் செய்யும் குயவர்கள் இதை விலைக்கு வாங்கும் நிலை ஏற்பட்டிருக்கின்றது.

### மணல்

மண்பாண்டத் தொழிலுக்குத் தேவையான களிமண் நேரடி கொள்பொருளாகத் தரமானதாக இருக்குமாயின் அதற்குச் சேர்மான பொருள்கள் ஏதும் தேவைப்படுவதில்லை. அவ்வாறு தரமான களிமண் கிடைக்காத பட்சத்தில் அதற்கு ஈடான மண் கலவையைக் குயவர்களே உருவாக்குகிறார்கள். அவ்வாறான உருவாக்கத்தில் வண்டல் மண்ணுடன் மணல் சேர்மானமாகச் சேர்க்கப்படுகிறது. அவ்வாறு சேர்க்கப்படும் மணல் சிறுமணலாக இருப்பது அவசியம். இதைச் சவுடு மணல் என்றும் தவுட்டு மணல் என்றும் குறிப்பிடும் வழக்கம் கிராமத்துக் குயவர்களிடம் இருக்கிறது. இத்தன்மை கொண்ட மணல் நேரடிக் கொள்பொருளாகக் கிடைப்பதில்லை. எனவே சாதாரணமாகக் கிடைக்கக் கூடிய மணலைச் சல்லடையால் சலித்து அதிலுள்ள சிறுமணலைப் பெறுகின்றனர்.

சிலபோது ஓடை, ஆறு முதலானவற்றின் முகப்புப் பகுதிகளில் இத்தன்மை கொண்ட மணல் இயல்பாகவே கிடைப்பதும் உண்டு. அவ்வாறு கிடைத்தால் அதை வண்டல் மண்ணுடன் நேரடியாகக் கலந்து பிசைந்துப் பயன்படுத்துகின்றனர்.

பெரும்பாலும் தற்போது மண்பாண்டம் செய்வதற்குத் தேவையான தரமான களிமண் நேரடிக் கொள்பொருளாகக் கிடைப்பதில்லை என்பதால் இம்மாதிரியான சேர்மான முறைகளே மிகுதியாகக் கடைபிடிக்கப்படுகின்றன. ஆதலால் இவ்வகையான மணலின் தேவை தற்போது அவசியமாயிருக்கின்றது.

### *விறகு*

மண்பாண்டங்களைச் சூளையிட்டுச் சுட்டுத் திடப்படுத்த தேவையான எரிபொருள் விறகு. மண்பாண்ட வகைகள் மெல்லிதானவை என்பதால் அதை ஏற்ற அளவில் சுடுவதற்கு விறகுகள் பயன்படுத்தப்படுகின்றன. ஆகையால் பெரிய அளவுடைய விறகுக் கட்டைகள் தேவைப்படுவதில்லை. எனவே காடு முதலான பகுதிகளுக்குச் சென்று விறகினைக் கொள்முதல் செய்யவேண்டிய அவசியம் குயவர்களுக்கு இருந்திருக்கவில்லை. ஊரைச் சுற்றியிருக்கும் தோப்புகளிலும், தரிசு நிலப்பகுதிகளிலும் கிடைக்கும் விறகுகளே போதுமானதாயிருக்கின்றன என்கின்றனர் கிராமப்புறக் குயவர்கள் (களாய்வு; பூபாலன் (78): தெள்ளூர், 29.03.2009). நகர்ப்புறச் குயவர்கள் இவ்வித இடர்ப்பாடுகள் ஏதுமின்றி விறகு மண்டிகளுக்குச் சென்று தேவையானஅளவு விறகுகளை விலைக்கு வாங்கிவந்து சூளை வைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர்.

### *முள் அல்லது மிலார்*

சூளையில் எளிதில் தீப்பிடிப்பதற்காகப் பயன்படுத்தப்படும் மெல்லிதான மரக்குச்சிகளை மிலார் என்பர். முள் மரங்களில் இருந்து பெறப்படுகின்ற இவ்விதக் குச்சிகளை முள் என்றும் அழைக்கின்றனர். நமக்கான தற்போதைய கிராமத்துச் சூழலில் முள் மரங்களே மிகுதியாயிருக்கின்றன. ஆதலால் அங்கு அவ்விதமான சுள்ளிகளும் மிலாருகளும் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றன. இவையே சூளை வைப்பதற்கான அடிப்படைத் தேவையாயிருக்கின்றது. நகர்ப்புறங்களில் இவ்விதமான எரிபொருள் கிடைப்பது அரிது ஆகையால் விறகு மண்டிகளுக்குச் சென்று சவுக்கை மிலாருகளை விலை கொடுத்து வாங்கி வருகின்றனர். சிலபோது இதற்குப் பதிலீடாக வறட்டியைப் பயன்படுத்தும் வழக்கமும் நகர்ப்புறக் குயவர்களிடம் இருக்கிறது. கிராமப்புறக் குயவர்களுக்கு இவ்விதமான நிர்பந்தங்கள் ஏற்படுவதில்லை.

### *வறட்டி*

மிதமான சூட்டினை ஏற்படுத்தத் தேவைப்படும் ஒருவகையான எரிபொருள் வறட்டி. இவ்வித வறட்டி மாட்டு சாணத்துடன் நெல்பதறு, வேர்க்கடலைத்தோல் (இதனை விழுப்புரம் மற்றும் திருவண்ணாமலை மாவட்டத் தென்பகுதிகளில்

'மல்லாகொட்டைத் தொலும்பு' என்கின்றனர்), நெல் உமி, வைக்கோல் கூளம் முதலானவைகளைச் சேர்த்து தயாரிக்கப்படுகின்றது. இதனை எரிபொருளாகக் கொள்வதனால் சற்று நேரம் நீடித்த நிலையான சூட்டினைப் பானை பெறும். ஆகவே மண்பாண்டச்சூளை வைத்தலின்போது மெல்லிய கனத்தில் தயாரிக்கப்பட்ட பாண்டங்களுக்குத் தேவையான சூட்டளவினை விறகளவைக் கொண்டு கணிக்க இயலாதபோது இவ்விதமான வறட்டிச்சூடு முறை குயவர்களால் மேற்கொள்ளப்படுகின்றது.

வறட்டித் தயாரிப்பு வேளாண்மைத் தொழில்தனைச் செய்யும் வட்டாரங்களிலேயே மிகுதியாக இருக்கின்றது. ஆனால் சூளையில் வறட்டியை உபயோகிக்கும் முறை மிகுதியாக நகர்ப்புறக் குயவர்களிடமே இருக்கிறது. கிராமத்தில் வறட்டி தயாரிப்பதைச் சிலர் தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். அவ்வாறு அவர்கள் உற்பத்தி செய்யும் வறட்டியை விற்கும் அளவுமுறை சற்று வித்தியாசமானது. அதாவது வறட்டியை 'கையளவு' என்ற கணக்கீட்டு முறையில் கணக்கிடுகின்றனர். இது குறித்துத் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களிடம் கேட்கப்பட்ட ஆய்வாளரின் கேள்விக்கு,

> ஒருகை என்பது நாலு வறட்டி. அதாவது இடது கையில் இரண்டு வறட்டி வலது கையில் இரண்டு வறட்டி எடுத்துப் போட்டாங்கன்னா அது ஒரு கை என்று கணக்கு. அப்படியாக நூறு கை வறட்டியினை ஐம்பது ரூபாய் விலை குடுத்து வாங்குவோம் (நீலகண்ட உடையார்; பி.இ.4:72)

என்பதே பதிலாக உள்ளது.

***வைக்கோல்***

எளிதாகத் தீப்பிடிக்கும் ஒரு வகையான எரிபொருள். இது நெல் விளைவிக்கும் வேளாண்மைத் தொழிலில் நெல்லை நீக்கியதன் மிச்சம். இது மாட்டிற்கான உணவுப் பொருளாகவும் இருக்கிறது. குயவர்கள் இதைச் சுமைக்கட்டு அளவில் விலைகொடுத்து வாங்கிப் பயன்படுத்துகின்றனர். ஏனெனில் சூளையை மூடி சேறுபூசுவதற்கு ஏற்றபொருள் வைக்கோல். ஆதலால் இது இத்தொழிலுக்கான இன்றியமையாதப் பொருளாகக் கருதப்படுகின்றது. கிராமப்புறங்களில் மிகுதியாக நெல் விளைவிக்கப்படுவதால் வைக்கோல் எளிதாகக் கிடைக்கின்றது. ஆனால் நகர்ப்புறங்களில் அவ்வாறு கிடைப்பதில்லை. என்றாலும் இது ஒரு இன்றியமையாதப்பொருளாக இருப்பதால் இது கிடைக்குமிடம் தொலைவாக இருந்தாலும் அங்குச் சென்று வாங்கிவந்து நகர்ப்புற குயவர்கள் உபயோகப்படுத்துகின்றனர். இதற்குப் பதிலீடாக பெரிதளவில் இதுவரை வேறு எந்தப் பொருளையும் கொண்டாரில்லை.

***துணைமை மூலப்பொருள்கள்***

மிகுதியான கொள்ளளவு கொண்ட பெரிய மண்கலன்களைக் கையால் உற்பத்தி செய்வதைத் தொண்டை மண்டல வட்டார குயவர்கள் வழக்கமாகக்

கொண்டிருக்கின்றனர். இவ்வளவிலான பொருள்கள் சக்கரத்தில் வனைய சாத்தியப்படாது. இக்கலன்கள் அளவில் பெரியன என்பதால் அதற்கேற்றாற் போல் இதன் உடற்சுவரும் சற்றுத் தடிமனாகவே வனையப்படுகின்றது. களிமண்ணை மட்டும் கொண்டு அவ்வாறு வனைந்தால் அப்பாண்டம் சுட்டு திடப்படுத்தும்போது விரிசல்விடும் என்பதால் அதனுடன் சில துணைமை மூலப்பொருள்களைச் சேர்த்து அவ்வகையான மண்கலன்களை உருவாக்குகின்றனர். அவ்வாறு களிமண்ணுடன் நெல் பதறு மற்றும் வைக்கோல் கூளம்தனை துணைமை ஆகியனவற்றை மூலப்பொருள்களாகச் சேர்க்கின்றனர்.

### *நெல்பதர்*

கருவற்ற நெல்லைப் 'பதரு' எனக் குறிப்பிடும் வழக்கம் நடைமுறையில் இருக்கிறது. நெல் சாகுபடியில் நெல்லைத் தரம் பிரிக்கும்போது ஒதுக்கப்படும் பயனற்ற பதருகளைக் களிமண்ணுடன் சேர்த்துப் பிசைந்து மண்பாண்டப் பொருள் உற்பத்தி செய்வதைக் குயவர்கள் தங்களுக்கான தொழில்நுட்பமாகக் கொண்டிருக்கின்றனர். இவ்வாறு செய்வதால், சுட்டுத் திடப்படுத்தும்போது மண்பாண்டப் பொருள்கள் விரிசல் விடாமல் இருக்கிறது. இந்த வகையில் தொட்டி, அடுப்பு, ரஞ்சிகம், குதிர், உறை, சாடி முதலான பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

### *கூளம்*

நெற்பயிர்ச் சோலைகள் முதிர்ந்து நுணுங்கிய நிலையே கூளம். இதைக் களிமண்ணுடன் சேர்த்து மண்பாண்டங்களை உற்பத்தி செய்யும் வழக்கம் காலங்காலமாக இருந்து வருவதாக இத்தொழில் செய்வோர் குறிப்பிடுகின்றனர் (சுப்பிரமணிய உடையார்; பி.இ.4:143). நெல் அறுவடை செய்யும் வயல்வெளிகளில் இம்மாதிரியான கூளப்பொருள்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. ஆதலால் கிராமப்புறக் குயவர்களே இவ்வகைப்பட்ட பொருளை அதிகபடியாக உற்பத்திசெய்கின்றனர். நகர்ப்புறக் குயவர்களுக்கு இம்மாதிரியான கூளப்பொருள்கள் எளிதாகக் கிடைப்பதில்லை. மேலும் இவர்கள் கூளம் சேர்த்து செய்யும் மண்பாண்டப்பொருள்களை மிகுதியான அளவு உற்பத்தி செய்வதில்லை. பதரைக் காட்டிலும் கூளம் கொள்முதல் செய்வது கடினம் என்பதே அதற்குக் காரணமாகும். இது தவிர்த்து இவை கிடைக்காதபோது இவற்றை ஈடுகட்ட மிகச் சரியான பதிலீட்டுப்பொருள்கள் எதுமில்லை என்கின்றனர் இத்தொழில்செய் முதுகுயவர்கள்.

## மூலப்பொருள்கள் கொள்முதல்

தம் வாழிடத்திலுள்ள மூலப்பொருள்களைக் கொண்டு தமது வாழ்வியற் தேவையை நிறைவு செய்து கொள்ளுதல் என்ற மரபான அறிவின்வழி உருப்பெற்றதாக மண்பாண்டத் தொழிலைக் கொள்ளலாம். ஆதலால் அதற்கான முதன்மை மூலப்பொருளான களிமண், தம் வாழிடத்தைச் சுற்றியுள்ள ஏரி, குளம்

உள்ளிட்ட நீர்நிலைகளிலிருந்தே பெறப்பட்டிருக்கின்றது. அதேபோல் அதைச் சூளையிடுவதற்கான மூலப்பொருள்களும் ஊரைச் சுற்றியுள்ள வயல் வெளிகள், தரிசு நிலங்கள் மற்றும் ஏரிக்கரை உள்ளிட்ட பகுதிகளிலிருந்து பெறப்பட்டுள்ளன. தற்போதும் இந்நிலையே இருந்து வருகின்றது. குயவர்கள் இத்தேவைக்காகக் காட்டிற்குச் செல்வதில்லை. ஏனெனில் காட்டிலிருந்து பெறுமளவிற்குத் திடமான விறகுக் கட்டைகள் இதற்குத் தேவைப்படுவதில்லை. அதேபோல் பகட்டிற்குத் தேவையான செம்மண், கலர் நிலங்களிலிருந்து (தரிசு) பெறப்படுகிறது. இம்மண் அதிக அளவு தேவைப்படுவதில்லை என்பதால் குயவர்கள் இதற்காகப் பெரிய அளவில் சிரமப்படுவதில்லை. இப்பொருளை வெகு தொலைவு சென்று தேடி எடுத்து வரும்படியான சூழலமைந்தாலும் அவை சிறிதளவே தேவைப்படுவதால் ஒருமுறை எடுத்துவரும் 'செம்மண்ணை' ஒரு வருடத்திற்கும் மேலாக வைத்து பயன்படுத்துகின்றனர்.

மண்பாண்டப் பொருள்களைச் சூளையிடுவதற்கு வைக்கோல், பதறு, கூளம் முதலானப் பொருள்களைப் பயன்படுத்துகின்றனர். இவற்றை வேளாண் வெளிகளில் உள்ள கதிரடிக்கும் களத்தில் வீண் என ஒதுக்கப்பட்டிருப்பதிலிருந்து கொண்டு வருகின்றனர்.

## மூலப்பொருள்களின் மாற்றுத்தன்மை

இயற்கை வளம் எந்தவிதமான புறச்சூழலாலும் பாதிக்கப்படாமல் இருந்தவரை மரபான தொழில் ஒவ்வொன்றிற்குமான மூலப்பொருள்கள் வெகு எளிதாகவும் நேரடிக் கொள்பொருளாகவும் கிடைத்தன. ஆனால் நவீனத் தொழிற்கருவிகள் பயன்பாட்டிற்கு வந்த பின்னான காலகட்டங்களில் இவ்வித வளங்கள் படிப்படியாகக் குறைந்துவிட்டன எனலாம். குறிப்பாக மண்பாண்டத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருளான களிமண்ணானது ஏரி மற்றும் குளம் உள்ளிட்ட நீர் நிலைகளில் வீழ்படிவாகக் கிடைத்து வந்தனவாம். ஆனால் தற்போது அவ்வித வீழ்படிவு ஏற்படுவதில்லை என்பது பெரும்பாலான குயவர்களின் வருத்தமாயிருக்கின்றது. ஆதலால் மண்பாண்டத் தொழிலின் தேவைக்கேற்ப நேர்த்தியான களிமண் பெரும்பாலும் இயல்பாகக் கிடைப்பதில்லை. இது மூலப்பொருள்களின் தன்மை மாறுபாட்டை நன்குணரச் செய்கிறது. ஆதலால் மண்பாண்டம் செய்வதற்கு ஏதுவான தன்மையுடைய களிமண்ணைப் பெற சில தொழில்நுட்ப உத்திகளைக் குயவர்கள் மேற்கொள்கின்றனர். இதைப்போலவே மற்ற மூலப்பொருள்களும் அதற்கான சுயத்தன்மையை இழந்துவிடும் வேளையில், அதனை ஈடுசெய்ய மாற்று ஏற்பாடுகளைக் கற்றவர்களாகவும் தொண்டை மண்டல வட்டார குயவர்கள் இருக்கின்றனர்.

## மாற்று மூலப்பொருள்கள் உற்பத்தி

சக்கரத்தில் வனையும் மண்பாண்டப் பொருள் உற்பத்திக்குத் தேவையான தரமான மூலப்பொருள்களை நேரடிக் கொள்முதல் செய்ய இயலாதபோது

அவர்கள் அத்தரத்திற்கு இணையான பதிலீட்டு மூலப்பொருள்தனைச் சேர்மானமாக உருவாக்குகின்றனர். இதை நேரடி கொள்பொருளுக்கு மாற்றாகக் கொள்ளலாம். தரமான களிமண் கிடைக்காத வேலூர், காஞ்சிபுரம், சென்னை உள்ளிட்ட பகுதிகளில் இம்முறை மேற்கொள்ளப்படுகின்றது. இவ்வாறு தங்களது தொழிலுக்கு ஏதுவான மூலப்பொருளை உருறுவாக்குவதை இப்பகுதி குயவர்கள் தனியொரு கலையாகச் செய்கின்றனர். இதற்கு வீழ்படிவாக்கல் முறை பின்பற்றப்படுகின்றது. அதற்காகப் பெரிய தண்ணீர் தொட்டி இரண்டு கட்டப்பட்டிருக்கின்றது. ஒரு தொட்டி தரைமட்டத்திற்கு மேல் சிமெண்ட்டால் (Cement) கட்டப்பட்டிருக்கின்றது. மற்றொரு தொட்டி தரைமட்டத்திற்கு அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் முதலாவது தொட்டியின் மேற்புறம் தவிர்த்து மற்ற ஐந்து பக்கமும் சிமெண்ட்டால் பூசப்பட்டிருக்கிறது. ஆனால் இரண்டாவது தொட்டியின் அடிப்பகுதி சிமெண்ட்டால் பூசப்பட்டிருக்கவில்லை. ஆனால் மேல் கீழ் தவிர்த்து மற்ற நான்கு பக்கங்களும் சிமெண்ட்டால் பூசப்பட்டிருக்கின்றன. இவை களிமண் கரைப்பதற்கானவை. கரைத்தவுடன் களிமண்ணை வடிகட்டுவதற்கு இரும்பு சல்லடையையோ அல்லது அதற்கென தயாரிக்கப்பட்டிருக்கும் சிறு துளையிட்ட மண்பாண்டமோ பயன்படுத்தப்படுகின்றது. இவ்விரண்டே இவ்வீழ்படிவாக்கல் முறைக்குத் தேவையான அடிப்படைக் கருவிகளாக இருக்கின்றன.

இதற்கான செய்முறையாவது, களிமண் நாள் முழுக்க வெய்யிலில் நன்றாக காயவைக்கப்படுகின்றது. பிறகு அவை இரும்புச் சுத்தியல் கொண்டு சிறுசிறு துணுக்குகளாக நறுக்கப்பட்டு, தரைக்கு மேல் கட்டப்பட்டிருக்கும் சிமெண்ட் தொட்டியில் கொட்டப்படுகிறது. பிறகு அதற்குத் தேவையான அளவு நீர் ஊற்றி இரவு முழுக்க ஊற வைக்கப்படுகிறது. மறுநாள் அத்தொட்டியினுள் ஒரு ஆள் இறங்கிக் களிமண்ணைக் காலால் மிதித்துக் கரைத்துக் குழம்பாகக் கலக்குகின்றார். அவ்வாறு கலக்கும்போது களிமண்ணெல்லாம் நீரோடு சேர்ந்து குழம்பாகிவிடுகின்றது. அதில் கலந்திருக்கும் பெருங்கற்கள் உள்ளிட்டத் தேவையற்ற பொருள்கள் தொட்டியின் அடிப்பகுதியில் நின்று விடுகின்றன. மேல் எழும்புகிற களிமண் குழம்பானது ஒரு பாத்திரத்தால் முகந்து தரைமட்டத்தில் கட்டப்பட்டிருக்கும் சிமெண்ட் தொட்டியில் ஊற்றப்படுகிறது. அவ்வாறு ஊற்றிய களிமண் குழம்பு அத்தொட்டியின் அடிப்பகுதியால் உறிஞ்சப்பட்டு சில நாட்களில் கெட்டியான களிமண் கிடைக்கின்றது. அவ்வாறு கிடைக்கும் அந்தக் களிமண்ணுடன் தேவையான அளவு மிருதுவான மணல் சேர்த்துப் பிசைந்து எடுக்கப்படுகிறது. அவ்வாறு பெறப்படும் களிமண்ணே மண்பாண்ட பொருள் செய்வதற்கு ஏதுவானதாக இருக்கிறது என்கின்றனர் அவ்வித வீழ்படிவாக்கல் முறையைக் கையாளும் குயவர்கள். விழுப்புரம், திருவண்ணாமலை, திருவள்ளூர் மாவட்டங்களில் இவ்விதத் தரமுடைய களிமண் நேரடிக் கொள்பொருளாகவே கிடைக்கின்றது. அவ்வாறு கிடைக்காத பகுதிகளிலும், கிடைக்காத தருணங்களிலும் மேற்கூறிய இவ்வீழ்படிவாக்கல்முறை மேற்கொள்ளப்படுகின்றது.

## மண்பாண்டப் பொருள் உற்பத்தி

மண்பாண்டப் பொருள் உற்பத்தியில் மிகுதியான அளவில் கவனத்துடன் பதப்படுத்த வேண்டிய பொருள் களிமண் ஆகும். இதுவே இத்தொழிலுக்கான முதன்மை. சுட்டெடுக்கப் பயன்படும் விறகு, வறட்டி உள்ளிட்ட எரிபொருள்கள் அனைத்தையும் நன்றாகக் காயவைத்தல் மட்டுமே போதுமானதாயிருக்கின்றது.

பொருளுற்பத்தியின் தேவைக்கேற்ப களிமண் இருவேறு வகைகளில் பதப்படுத்தப்படுகின்றது. அதாவது சக்கரத்தின் உதவியால் உற்பத்தி செய்யப்படும் மண்பாண்டப் பொருள்களுக்கு ஒரு விதமாகவும் கையால் வனையப்படும் பொருள்களுக்கு ஒருவிதமாகவும் பதப்படுத்தப்படுகின்றது. பதப்படுத்தலுக்கான குயவர்களின் இவ்வறிவு என்பது மரபானது. மேலும் இத்தொழில் விவசாயத்தை மையமிட்ட சமூகச் சூழலில் உருவானது என்பதற்கு இப்பதப்படுத்தலுக்கான சேர்மானப் பொருள்கள் சான்றாகின்றன.

### *களிமண் பதப்படுத்தல்*

பொருள் செய்வதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட களிமண் ஒரு நாள் பகல் முழுக்க நன்றாகக் காயவைக்கப்படுகிறது. அவ்வாறு காயவைக்கப்பட்ட அம்மண்ணைச் சிறுசிறு துணுக்குகளாக நறுக்கி அதில் இருக்கும் கல், தாது முதலானவை அகற்றப்படுகின்றன. பிறகு அவற்றைக் களிமண் மிதிக்கும் இடத்தில் பட்டறையாகக் கூட்டி அதன் நடுவே குழி பறித்து, தண்ணீர் ஊற்றி ஊற வைக்கப்படுகின்றது. மறுநாள் காலையில் அதை மூன்று அல்லது நான்கு முறைத் திரும்பத் திரும்ப மிதித்து மண்பாண்டம் வனைவதற்கு ஏற்ற வகையில் இலகுவாக மசித்துக் கொள்ளப்படுகின்றது. இதை விளக்கும் விதமாக,

> எல்லாத்துக்கும் மூலதனம் களிமண்தான். அந்த களிமண்ணோட தரத்தப் பொறுத்து அதுக்குத் தகுந்த மாதிரி மணல் சேர்த்து பெசயனும். அப்பதான் பொருள் சூளையிடும்போது பொழைக்கும். இல்லேன்னா பொழைக்காது. ரொம்ப களிப்பான வண்டல் மண்ணாயிருந்தா அதுங்கூட சவுடு மணல் சரிபாதி கலக்கணும். கொஞ்சம் மணல் கலந்த களிமண்ணாயிருந்தா அப்படியே உபயோகப்படுத்தலாம். பெருங்கல்லு இருக்குற களிமண்ணா இருந்தா அந்த கல்லுங்கள பொருக்கிட்டு அப்புறம் ஊறவைக்கனும். (கெம்பு உடையார்; பி.இ.*4:38*)

என்ற தகவல் அமைந்திருக்கின்றது.

மேற்கூறிய இப்பதப்படுத்தல்முறை சக்கரத்தின் உதவியோடு செய்யப்படுகின்ற மெல்லிதான உடற்சுவற்றைக் கொண்ட மண்பாண்ட வகைகளுக்கு உரித்தானது. இதுவன்றிக் கையால் வனையப்பெறும் கனமான உடற்சுவற்றைக் கொண்ட மண்பாண்ட வகைகளுக்கு வேறுவகையில் மண் பதப்படுத்தப்படுகின்றது. அதாவது, இவ்வகைப்பட்ட பொருள் உற்பத்திக்குக் களிமண் எந்தத் தரத்திலானது என்றாலும் பரவாயில்லை. ஏனென்றால் இவை

கனத்த உடற்சுவர் உடையதாக இருப்பதால் அதனுள் களிமண்ணில் உள்ள வேண்டாதவைகள் புதைந்துவிடுகின்றன. ஆகையால் அம்மண் எத்தரத்திலானது என்றாலும் அதை எடுத்து வந்து நன்றாகக் காயவைத்து அவையனைத்தையும் மண் மிதிக்கும் இடத்தில் பட்டறையாகக் கூட்டி அதனுடன் நெல்பதறு, வைக்கோல் கூளம் முதலானவை சேர்க்கப்படுகின்றன. பின்பு அதில் தண்ணீர் விட்டு ஊறவைத்து மறுநாள் காலையில் களிமண்ணும் பதரும் கூளமும் உறவு சேரும்படி மூன்று அல்லது நான்கு முறை நன்றாகக் காலால் மிதித்து, அதை அப்படியே இரண்டு அல்லது மூன்று நாட்கள் புளிக்க வைத்து, அதன்பின் அதனைக் கொண்டு குதிர், சாடி, அடுப்பு, தொட்டி, ரஞ்சகம் முதலான பொருள்கள் கையால் வனைந்து உற்பத்தி செய்யப்படுகின்றது. அவ்வாறு பதப்படுத்தினால்தான் களிமண் புளிப்பு ஏறி வழவழப்புடன் கைக்கு இலகுவாகப் பொருள் செய்ய இயலும் என்ற குயவர்களின் தொழில்நுட்ப உத்தியும் இங்கு உற்று நோக்கத்தக்கது. மேலும் இது குறித்த காஞ்சா ஐலைய்யாவின்,

*மண்பாண்டம் செய்வதில் சரியான களிமண்ணைத் தேர்ந்தெடுப்பது முக்கியம். மணலும் வண்டலும் பானை செய்ய உதவாது. களிமண் அனைத்துப் பொருள்களின் துகள்களையும் பிணைக்கக் கூடியது. ஆனால் விரைவில் கெட்டித் தட்டிவிடும். எனவே மண்வினைக் கலைஞர்கள் களிமண்ணுடன் தவிடு, சாம்பல், மணல் மற்றும் சுண்ணாம்பைக் கலப்பார்கள். சலித்த சாம்பலையும் சில சமயங்களில் கரித்தூளையும் கலந்து களிமண்ணின் நெகிழ்தன்மையை அதிகரிக்கும் பழக்கம் இந்தியாவில் உண்டு. அடுப்புகள் செய்ய களிமண்ணுடன் கரித்தூள் கலக்கப்படுகின்றது. சுண்ணாம்பு போன்ற பொருள்கள் மண்ணுக்கு நிறமூட்டவும் சேர்க்கப்படுவதுண்டு* ***(2009:73)***

என்ற கருத்து இங்கு கவனிக்கத்தக்கது.

இவ்வாறு மண்பாண்டப் பொருள் செய்வதற்கு ஏற்ற மண்ணாகக் களிமண்ணைக் கொண்டது குயவர்களின் மரபான பொருளறிவு. இப்பொருளறிவு அனுபவ ரீதியில் அறியப்பட்டது. இவ்வனுபவ அறிவினைப் பின்னாளைய அறிவியல் ஆய்வுகள் உண்மை என உறுதிப்படுத்துகின்றன. மேலும், களிமண்ணின் தன்மை குறித்த அறிவியல் ஆய்வில்,

*களிமண் வகைகள் நுண்ணியத் துகள்கள் நிறைந்தவை. ஈரமாக்கும்போது அவை நெகிழ்தன்மை (Plasticity) பெறும். வேதியியல் ரீதியாகக் களிமண் என்பது ஹைட்ரஸ் அலுமினியம் சிலிகேட், தவிர பொட்டாசியம், சோடியம், கால்சியம், மெக்னீசியம் மற்றும் இரும்பு ஆகியவை அதில் சிறு அளவுகளில் கலந்திருக்கும். களிமண் நெகிழ்தன்மை கொண்டது மட்டுமல்ல சுட்டப்பிறகு சுருங்கிவிடும் தன்மையும் கொண்டது. சுட்ட களிமண் பாண்டங்கள் வண்ணமும் கடினத் தன்மையும் திண்மையும் பெற்றுவிடும் (மேற்படி:****81)***

என்பதான விளக்கங்கள் தரப்படுகின்றன. பின்னாளில் வளர்ந்த நவீனத் தொழில்நுட்பக் கருவிகளைக் கொண்டு ஆராயப்பெற்று அதன்வழி அறிந்த

இக்கருத்தினை குயவர்கள் அனுபவத்தின் அடிப்படையில் மிக நீண்ட காலத்திற்கு முன்பே அறிந்து வாழ்ந்தமை குறிப்பிடத்தக்கது. இதனைக் குயவர்களின் பொருளறிவுச் சிந்தனைக்குச் சான்றாகக் கொள்ளலாம்.

### *சக்கரத்தின் உதவியால் வனைதல்*

மண்பாண்ட உற்பத்தித் தொழிலின் குறியீடாகச் சக்கரம் விளங்குகின்றது. சக்கர வருகைக்குப் பின்னரே மண்பாண்ட உற்பத்தியில் மறுமலர்ச்சி உண்டாயிற்று எனலாம். இதனால் பொருளின் நிலையான வடிவம், சீரான அளவு முதலான தொழில்நுட்பங்கள் மிகுதியாயின. இதற்குப் பின்னான காலகட்டங்களில் இவ்விதத் தொழில்நுட்ப வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு மிகுதியான பயன்பாட்டுப்பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. இதற்குத் தொல்பொருள் அகழ்வாய்வில் கிடைத்த மண்பாண்ட ஓடுகளைச் சான்றாகக் கொள்ளலாம். மிகவும் மெல்லிதான உடற்சுவற்றினையுடைய மண்பாண்டங்கள் உற்பத்தி செய்வதற்குச் சக்கரமே மூலமாக இருந்திருக்கின்றது என்பதும் இதுகொண்டு அறிய இயலும்.

சக்கரத்தில் மண்பாண்டம் வனையப்பட்ட பின்பே அத்தொழில்முறை கலை என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். தற்போது இம்முறையிலேயே மிகுதியாக மண்பாண்டப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. கையால் மண்ணை வனைதல் என்ற தொழில்நுட்பத்தைவிட சக்கரத்தில் பொருள் வனைதல் என்ற தொழில்நுட்பமே சிறப்பானது எனும் நிலை இத்தொழில்முறை வளர்ச்சிக்கான அடையாளம். ஆகையால் குயவர்கள் சக்கரத்தில் மண்பாண்டம் வனைவதைத் தங்களுக்கான தனித்தன்மையை நிரூபிக்கும் செயல்பாடாகக் கொண்டிருக்கின்றனர். இத்தொழில்நுட்பமுறையே தற்போது குயவர்களைப் பரவலாக அறிமுகப்படுத்துகிறது. இத்தொழில்முறை காலப்போக்கில் சிற்சில மாற்றங்களையும் அவ்வப்போது உள்வாங்கித் தொடர்ந்து வருகின்றது. இம்மாற்றமென்பது நிலம், சூழலோடு தொடர்புடைய மூலப்பொருள்களை மையமிட்டதாயிருக்கின்றது. அதாவது தரமான மூலப்பொருள்கள் நேரடிக் கொள்பொருளாகக் கிடைக்காததால் அதற்காக மேற்கொள்ளப்பெறும் மாற்று முயற்சிகளாகவே இருக்கிறது.

சக்கரத்தின் உதவியால் உற்பத்தி செய்யப்படுகின்ற மண்பாண்டப் பொருள்கள் எளிதாகக் கையாளக் கூடிய வகையில் மெல்லிதான உடற்சுவற்றினை உடையதாக இருக்க வேண்டும் என்பதில் குயவர்கள் கவனத்துடன் செயல்படுகின்றனர். அதற்கு ஏற்ப களிமண்ணைத் தயார் செய்து கொள்கின்றனர். அவ்வாறு தயார் செய்யப்பட்ட களிமண் கலவையைத் தேவையான அளவு எடுத்து கிடைமட்டமாய் இருக்கும் சக்கரத்தின் மையப்பகுதியில் இடுகின்றனர். அவ்வாறு மண்ணிடும் மையப்பகுதி மரப்பலகையால் ஆனது. வட்ட வடிவில் இருக்கும் இப்பகுதி 'மொகுரு' எனப்படுகின்றது. இப்பகுதியில் வைக்கும் மண்ணைக் குயவர்கள் தங்களுக்குத் தேவையானஅளவு வட்டவடிவில் உயர்த்திக் கொள்கின்றனர். இச்செயல்பாடு 'தொழுவேத்தல்' என்று குறிப்பிடப்படுகின்றது.

இதனைத் தென்தமிழகக் குயவர்கள் 'திரைவளர்த்தல்' என்று குறிக்கும் வழக்கமுடையவர்களாக இருக்கின்றனர் (இ. முத்தையா (க.ஆ.); 2000:132). அவ்வாறு தொழுவேற்றப்பட்ட களிமண் குவியலைத் தண்ணீரால் நனைத்து, கையால் அழுத்தி அடர்த்திமிக்கதாக்குகின்றனர். அதற்குப் பிறகு பொருள் வனைவதற்கான ஆயத்தப்பணி தொடங்குகின்றது. முதல் கட்டமாகக் களிமண் தொழுவேற்றப்பட்ட சக்கரத்தைச் சுழற்றுகின்றனர். முன்னரே குறிப்பிட்டபடி இச்செயல்பாடு இருவேறு முறையில் மேற்கொள்ளப்படுகின்றது. முதலாவதாகக் கையால் சக்கரத்தைச் சுழற்றி பொருள் உற்பத்தி செய்யும் முறை. இதில் சக்கரம் சுழற்றும் பணியைப் பெண்கள் செய்கின்றனர். விழுப்புரம், திருவண்ணாமலை மாவட்டப் பகுதிகளில் இது நடைமுறையில் இருக்கிறது. இரண்டாவது திரிதடியால் சக்கரத்தினைச் சுழற்றி பொருள்வனையும் முறை. இதில் பொருள்வனையும் பணியை மேற்கொள்ளும் ஆண்கள் திரிதடியின் உதவிகொண்டு சக்கரத்தைத் தேவையானபோது அடிக்கடிச் சுழற்றிக் கொள்கின்றனர்.

சக்கரம் சுழற்றும் பாணியில் இவ்விரு வேறுபட்ட முறை இருப்பினும் பொருள் வனையும் விதத்தில் ஒரே மாதிரியான பாணியே மேற்கொள்ளப்படுகின்றது. இதில் உற்பத்தி செய்யப்படும் பொருளானது அடி, வயிறு, கழுத்து, உதடு என்ற வரிசையில் மேல்நோக்கி வளர்த்தெடுக்கப்படுகின்றது. அவ்வாறு வளர்த்தெடுக்கப்படும்போது அடிப்பகுதியில் கனமான அளவு மண்இருக்கும்படிச் செய்கின்றனர். மேலும், அவ்வப்போதே அதன் தலைப்பில் கைவிரல் நகங்களைக் கொண்டு கீறல் இடுகின்றனர். இது 'கீத்துப்போடுதல்' எனப்படுகின்றது. இதை மூங்கில் பத்தை என்றழைக்கும் மூங்கில் குச்சியின் உதவியுடனும் செய்கின்றனர். எளிமையான இந்தக் கருவியை 'வலசல்' எனக் குறிக்கும் வழக்கம் விழுப்புரம் மாவட்டக் குயவர்களிடையே இருக்கின்றது. இதனுடன் உற்பத்திப் பொருளின் புறத்தோற்றம் வழவழப்புடன் இருக்க வேண்டி ஈரத்துணியைக் கொண்டு பொருளின் மேற்புறத்தை வழித்தெடுக்கின்றனர். ஒருவாறு இவ்வாறான வேலைப்பாடுகள் முடிந்ததும் அதனை இரும்புக் கம்பிதனைக் கொண்டு அறுக்கின்றனர். அதற்குப் பயன்படுத்தும் அக்கம்பியை ஊசி என்ற தங்களின் தொழில்சார் கலைச்சொல்லால் குறிப்பிடுகின்றனர். அவ்வாறு அறுக்கப்பட்ட பொருளைச் சக்கரம் சுழன்று கொண்டிருக்கும்போதே வெகு லாவகமாகக் கையால் ஏந்தி சமமான தரைப்பகுதியில் வைக்கின்றனர். இதனைப் பொருள் **"இறக்கி வைத்தல்"** என்று குறிப்பிடுகின்றனர். சக்கரத்தில் களிமண் இடுவதை **"தொழு ஏற்றல்"** என்பதை இதனோடு தொடர்புபடுத்தி பார்க்கத்தக்கது. இவ்வாறு ஒவ்வொரு முறையும் பொருள் வனைவதற்கு முன்பாகத் திரிதடியால் சக்கரத்தைச் சுழற்றிவிடும் வழக்கத்தைத் திரிதடி குயவர்கள் மேற்கொள்கின்றனர். ஆனால் தள்ளு குயவர்கள் சளைக்காமல் தொடர்ச்சியாகப் பொருள் வனைவதில் மட்டுமே ஈடுபடுகின்றனர். இதற்குக் காரணம் அவர்களுடன் தொழில் செய்யும் பெண்கள் அவ்வப்போது சீரான வேகத்தில் சக்கரம் சுழற்றுவதேயாகும். இதில், பெரிய அளவிலான பொருள்களுக்குச் சற்று

வேகமாகவும் சிறிய அளவிலான பொருள்களுக்கு மிதமாகவும் சக்கரம் சுழற்றப்படுகின்றது. இதற்கான உடலுழைப்பு தொழுவேற்றப்பட்ட களிமண்ணின் கனத்தைப் பொருத்து அமைகிறது. இதனைத் தொடர்ந்து ஒருமுறை தொழுவேற்றப்பட்ட களிமண் முழுதுமாகத் தீர்ந்தவுடன் அதேபோல் மீண்டும் களிமண் தொழுவேற்றி பொருள்கள் வனைவதை முறையாக வைத்திருக்கின்றனர். இதுபோல் கிராமத்துக் குயவர்கள் ஒரு நாளைக்குச் சராசரியாக இரண்டு அல்லது மூன்று முறையும் நகரத்துக் குயவர்கள் ஒன்று அல்லது இரண்டு முறையும் தொழுவேற்றி பொருள் செய்கின்றனர்; செய்த பொருள்கள் அனைத்தும் நிழலில் உலர்த்தப்படுகின்றது. பின்பு அறுக்கப்பட்ட அப்பொருளின் அடிப்பகுதியை நிறைவு செய்து அதற்கான முழு உருவைக் கொண்டுவருகின்றனர். அவ்வாறு செய்யப்படும் இதை இத்தொழில் செய்முறையின் உட்பிரிவாகக் குறிப்பிடப்படுகின்றனர். இதற்கு 'தட்டுதல்' என்ற தொழிற்பெயரும் வழக்கத்தில் இருக்கின்றது.

***தட்டுதல்***

சக்கரத்தில் வனையப்படும் மண்பாண்டப் பொருளின் அடிப்பகுதி மூடப்படாமல் இருக்கிறது. ஆகையால் அதை, உலர வைத்து, தேவையான பக்குவத்திற்கு வந்ததும் அதைத் தட்டுக்கல், தட்டுக்கட்டைக் கொண்டு முழுமை செய்யப்படுகின்றது. வாயகன்ற மிகச்சிறிய பொருள்களைச் சக்கரத்தில் செய்யும்போதே முழுமையுடன் செய்கின்றனர். ஆகையால் அவற்றைத் தட்டுக்கட்டையால் தட்டி நிரவப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால் வாய்க்குறுகி வயிறுபருத்த பொருள்களைத் தட்டுக்கட்டை, தட்டுக்கல் கொண்டு மூன்று கட்ட நிலையில் தட்டுகின்றனர். இவ்வுத்திமுறையானது பெரும்பாலும் பெரிய பெரிய பானைகளைத் தட்டும்போது மேற்கொள்ளப்படுகின்றது. இவ்வுத்திமுறை தற்போது வழக்கொழிந்து காணப்படுவதற்கு அளவில் பெரிய பானைகள் புழக்கத்தில் இல்லாது போனதே காரணம். ஆகவே முற்காலப் பயன்பாட்டிலிருந்த இவ்வுத்திமுறையை வயது மூத்த குயவர்களிடமிருந்து வாய்மொழியாக மட்டுமே கேட்டறிந்து கொள்ள முடிகிறது. அவர்கள் அளித்த தகவலின்படி இவ்வுத்திமுறையில் மூன்று நிலைகள் உள்ளன. அவை,

1. மூதை
2. நிரவுதல்
3. தட்டுப்பானை

என்பனவாகும். இதில் மூதை எனப்படுவது சக்கரத்தில் செய்த பொருளை ஊசியால் அறுத்து எடுத்து வெயிலில் காயவைத்த பிறகு அதன் அடிப்பகுதியைத் தட்டுக்கட்டை, தட்டுக்கல்லின் உதவியோடு மூடி இணைப்பதாகும். அதே பொருள் இன்னும் சற்றுக் காய்ந்ததும் அதனை அதற்கான வடிவத்திற்குக் கொண்டு வருவதை நிரவுதல் என்கின்றனர். அவ்வாறு நிரவிய பானையை மழுமழுப்பாக்கி

செம்மண் பூசும் நிலைக்குக் கொண்டு வரப்பட்ட நிலையைத் தட்டுப்பானை என்கின்றனர் (நீலகண்டன் உடையார்; பி.இ.4:72). இச்செய்முறை எல்லா வட்டாரங்களிலும் ஒரே மாதிரியாக இருந்தாலும் இதற்கான வழக்காறுகள் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றன. இதை மதுரை வட்டாரக் குயவர்கள் தேம்பல், குதும்பை, நிரவுதல் என்பனவாகக் குறிப்பிடுகின்றனர். இது குறித்து ஆய்வாளர் முத்தையா குறிப்பிடுகையில்,

> திகிரியில் இட்ட மண்ணைப் பாண்டமாக்கி பிரித்தெடுக்கப்படும் உருவம் அடிக்கலம் என அழைக்கப்படும். அடிக்கலத்தின் அடிப்பகுதி திறந்த நிலையில் இருக்கும். இவ்வாறுள்ள அடிக்கலத்தை வெயிலில் நன்றாகக் காயவைப்பர். பின்னர் அதனை எடுத்து அதன் உட்பகுதியில் தட்டுக்கல் என்றழைக்கப்படும் கைக்கு அடக்கமான ஒரு சமதளக் கல்லை அண்டைக்கொடுத்து அதற்கு நேரெதிரே உள்ள மேற்பகுதியில் தட்டுப்பலகை என்றழைக்கப்படும் தோசைக்கரண்டி வடிவத்திலுள்ள ஒரு பலகையினால் தட்டி திறந்த நிலையில் இருக்கும் அடிப்பகுதியை மூட்டுவர். இவ்வாறு மூட்டுவது 'தேம்பல்' என்றழைக்கப்படும். பாண்டத்தின் அடிப்பகுதியை மூட்டும்போது தட்டுக் கல்லில் மண் ஒட்டாமல் இருப்பதற்காகப் பாண்டத்தில் உட்பகுதியில் சாம்பல் தூவிக்கொள்வர். அடிக்கலத்தின் அடிப்பகுதியை மூட்டிய பின்னர் கிடைக்கும் உருவம் 'குதும்பை' என்று அழைக்கப்படும். இக்குதும்பை மறுபடியும் செம்மைப்படுத்தப்படும். இவ்வாறு செம்மைப்படுத்தும் செயல் நிரவுதல் என அழைக்கப்படும். செம்மைப்படுத்தப்பட்ட முழுமையான பாண்டம் பச்சை என அழைக்கப்படும் (இ. முத்தையா (க.ஆ.); 2000:134)

எனத் தம் கட்டுரையில் குறிப்பிடுகின்றார்.

### *அலங்காரக் கீறல்கள்*

மண்பாண்ட உற்பத்தியில் பல வகையான அலங்காரக் கீறல்கள் பயன்பாட்டில் இருந்திருக்கின்றன. இக்கீறல்கள் அனைத்தும் சக்கரச்சுற்றில் பொருள் வனைந்து முடிந்ததும் சக்கரச்சுற்றில் பொருளைச் சுழலவிட்டு அதில் கைகளாலும், இன்னபிற சிறு சிறு எளிய கருவிகளாலும் அலங்காரக் கீறல்கள் வரைவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

இது தவிர்த்து சக்கரத்தில் வனையப்பட்ட மண்பாண்டப் பொருளை நிழலில் உணர்த்தி அதனை 'தட்டுக்கல், தட்டுக்கட்டை' கொண்டு தட்டி முழுமையாக்கும் போது, 'அலங்கார முத்திரைகள்' சிலவற்றை மண்பாண்டத்தின் கழுத்துப் பகுதியில் வரையும் வழக்கம் தற்போது நடைமுறையிலிருக்கின்றது. இதற்குத் தேவையான முத்திரைக்கருவிகளைத் தச்சரிடம் இருந்து செய்து பெறுவதைப் பெரும்பாலான குயவர்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இவை மரத்தாலான முத்திரைக்கருவிகள். இதனை 'அச்சுக்கோல்' என்று குறிபபிடுகின்றனர் (பி.இ.5:156). தவிர்த்து சிலபோது மேலதிகமான அலங்கார வடிவங்களுக்குத் தேவையான அலங்கார முத்திரைகளைத் தன்னுடைய அழகியல்

உணர்வுந்துதலுக்கேற்ப தாமாகவே செய்து கொள்ளும் வழக்கமும் குயவர்களிடம் இருக்கிறது. இவ்வாறான முத்திரைகள் மண்ணால் செய்யப்படுவனவானாலும் அவை பெருமளவில் நீர் நிலைகளில் பயன்படுத்த வேண்டியதாய் இருப்பதால் அவற்றைச் சுட்டு திடப்படுத்திப் பயன்படுத்துகின்றனர். இவ்வாறு வெவ்வேறு வகையில் பயன்படுத்தப்படுகின்ற அலங்கார வரைவுகள் பின்வருமாறு:

- சக்கரச் சுற்றில் மண்பாண்டத்தினைச் சுழலவிட்டு அவ்வப்போது குயவர்கள் தங்களின் நகத்தால் கீறி உருவாக்கும் அலங்கார வடிவம். இது மேல் கீழ் அமைப்பிலானது.



- சக்கரச் சுற்றில் சுழன்று கொண்டிருக்கும் மண்பாண்டப்பொருளின் கழுத்துப் பகுதியில் கைவிரல் நகத்தால் சீராக அழுத்தி உருவாக்கப்படும் அலங்கார வடிவம்.இதைப் பயன்பாட்டு நோக்கில் பானையின் வாய்ப்புற உதட்டில் வரைவது என்பது பானை வனையும் தொழில்நுட்பக் கூறுகளுள் ஒன்று. இதற்கு 'தலைப்பு பிளத்தல்' என்ற பெயரும் உண்டு.



- சக்கரச் சுற்றில் மண்பாண்டப் பொருள் சுழன்று கொண்டிருக்கும் போது 'வலசல்' மற்றும் தெரசில் துணியின் உதவியால் உருவாக்கப்படும் அலங்கார வடிவம். இது மேல்கீழ் அலைவு அமைப்பினை உடையது.



- சக்கரச் சுற்றில் மண்பாண்டப் பொருள் சுழன்று கொண்டிருக்கும்போது 'ஊசி'யைப் பயன்படுத்தி அதன் கழுத்துப் பகுதியில் உருவாக்கப்படும் அலங்கார வடிவம்.



சக்கரச்சுற்றிலிருந்து அறுத்தெடுக்கப்பட்ட மண்பாண்டத்தை உலர வைத்து பின்பு அதனைத் தட்டி முழுமைப்படுத்தும்போது செய்யப்படும் அலங்கார வடிவங்கள். இவை அனைத்தும் குயவர்குடிப் பெண்களால் இடப்படுகின்றன.

- தட்டுப்பானையின் கழுத்துப்பகுதியில் எளிய கருவியான (இதற்கென விசேஷமாக உருவாக்கப்படாதது) ரூபாய் நாணயத்தினைக் கொண்டு செய்யப்படும் அலங்கார வடிவம்.



- தட்டுப்பானையின் கழுத்துப்பகுதியில் தச்சரின் உதவியால் செய்து பெற்ற மர அச்சினைக்கொண்டு பொறிக்கப்படும் அலங்கார வடிவம். இது சிறப்புநிலைப் பொறிப்பு. அதாவது அழகுபடுத்தலுக்காகவே செய்யப்படும் வேலை. ஆதலால் இவற்றைக்



குறிப்பிட்ட சில மண்பாண்டங்களில் மட்டுமே வரைகின்றனர். (எ.கா.) அச்சுப்பானை, சொப்புக்குடம் முதலானவை.

- திரிக்கப்பட்ட சிறு நூல்கயிற்றினைச் சிறிய மரத்துண்டில் சுற்றிக்கொண்டு அதனால் தட்டுப் பானையின் கழுத்தில் தட்டி உருவாக்கப்படும் அலங்கார வடிவம். இது கயிற்றின் பிண்ணல் போன்று காட்சியளிக்கின்றது.



- எளிய கருவியான மூக்குப்பொடி டப்பாவின் மூடியைக் கொண்டு தட்டுப்பானையில் உருவாக்கப்படும் அலங்கார வடிவம்.



- சிறப்பு வனைவான 'அக்னிச்சட்டி'யைத் தட்டி முழுமைபடுத்தும்போது அதன் கழுத்துச்சுற்றில் பொறிக்கப்படும் சிறு மண்உருவ அலங்கார வடிவம். இது ஆண்களாலும் வரையப்படுகின்றது.



- மேற்கூறிய சிறிய மண்உருவங்களுக்கு இடையிடையே சிறு குச்சியினால் வரையப்படும் அலங்கார வடிவம். இது ஆண்களாலும் வரையப்படுகின்றது.



- 'அக்னிச்சட்டியின்' கழுத்துச் சுற்றில் ஊசியைக் கொண்டு இடப்படும் சிறு துளைகள். இது ஆண்களாலும் இடப்படுகின்றது.



- அக்னிச்சட்டியின் கழுத்துச் சுற்றில் அறுத்து எடுக்கப்படும் 'ஓட்டை' வடிவம். இது ஆண்களாலும் அறுத்தெடுக்கப்படுகின்றது.



**கையால் வனைதல்**

சிலவகை மண்சார்ந்த புழங்குபொருள்கள் கருவிகளின் துணையின்றி கையால் வனையப்படுகின்றது. இதனை மனிதன் நிலையாக ஓரிடத்தில் வசிக்கத் தொடங்கியபோது மேற்கொண்ட தொடக்ககால பொருள் உற்பத்தி முறையில் ஒன்றாகக் கொள்ளலாம். அதாவது, சக்கரத்தால் பொருள் வனைய முற்பட்ட காலத்திற்கு முன்னான காலகட்டத்துத் தொழில்நுட்ப முறையின் தொடர்ச்சியாக இதைக் கொள்ளலாம். இதனடிப்படையில் தற்போது அடுப்பு, தொட்டி, உறை, கோழிக்கூண்டு முதலான பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. கையால் வனையப்படும் இவையனைத்தும் கணத்த உடற்சுவருடையதாகவும் ஓரிடத்தில் நிலையாக வைத்துப் பயன்படுத்தும்படியானதாகவும் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.

***உலர வைத்தல்***

உற்பத்திப் பொருள்கள் தொழிற்களத்தில் பச்சை என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. அவ்வாறான இதன் அடுத்தகட்ட நேர்த்திநிலை உலர வைத்தல் என்பதாகும். இது சீரான முறையில் செய்யப்படவேண்டிய ஒரு நுட்பமான செயல். எனவே ஒரு பொருளின் எல்லாப் புறமும் சீரான அளவில் உலரும்படி செய்யவேண்டும் என்பதால் அப்பொருளைப் பெரும்பாலும் நிழலில் உலர்த்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். தவிர்த்து வெய்யிலில் உலரவைக்கும்போது மிகவும் கவனத்துடன் சீரான முறையில் உலரும்படி வெப்பக்கதிர் வீசும் திசை நோக்கிப் பொருளைச் சுழற்றிச் சுழற்றி வைக்கின்றனர். இவ்வேலை ஓரிரு நாட்கள் நீடிக்கின்றது. அவ்வாறு மண்பாண்டப்பொருள்கள் நன்கு உலர்ந்த பிறகு அதனை அழகுபடுத்தும் நோக்கோடு அதன் மேற்புறத்தில் செம்மண் பூசும் வழக்கம் நடைமுறையில் இருக்கின்றது. பிறகு செம்மண் பூசப்பட்ட அப்பொருள்கள் உச்சி வெயிலில் நன்றாகக் காயவைக்கப்பட்டு நெருப்பில் சுடுவதற்கேற்பப் பக்குவப்படுத்தப்படுகின்றது. அவ்வாறு பக்குவப்படுத்தப்பட்ட பொருள்கள் தனியொரு கொட்டகையில் சேகரித்து வைக்கப்படுகின்றன.

இத்தொழிலில் உற்பத்தி செய்த பொருள்களை உலரவைத்துப் பக்குவப்படுத்துதல் என்பதை முதன்மையான நுட்பமாகச் செயலாகக் கருதுகின்றனர். ஆதலால் இதனை மையமிட்டே இத்தொழில் செய்வதற்கான பருவகாலங்கள் கணிக்கப்படுகின்றன. மண்பாண்டப்பொருள்களின் தேவையை முன்னிலைப்படுத்துகின்ற கார்த்திகை தீபம், தைப்பொங்கல் திருநாள் முதலான விழாநாட்கள் வெயில் உக்கிரம் அற்ற பருவகாலத்திலேயே வருகின்றன. இவை மண்பாண்ட உற்பத்திக்கு உகந்த பருவகாலங்கள் அல்ல. ஆனால், அக்காலக்கட்டத்தில் மிகுதியான மண்பாண்டப்பொருள்கள் தேவைப்படும். ஆகையால், அதற்கான மாற்றுவழிகளைக் கொண்டு இப்பருவகாலங்களிலும் மண்பாண்ட உற்பத்தியை மேற்கொள்ளும் குயவர்கள் பரவலாக இருக்கின்றனர். ஆனால் சிலர் இப்பண்டிகை தினத்திற்குத் தேவையான பொருள்களை வெயில் காலங்களில் உற்பத்தி செய்து, சேகரித்து வைத்துப் பின்னர் இவ்விழாக்காலங்களில் விற்பனைச் செய்வதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு, குயவர் ஒருவர் பதில் கூறுகையில்,

> *இந்தத் தொழிலுக்கு ஏத்த காலம்னா அது வெயில் காலம்தான். அப்பதான் நாம செய்யிற பொருளை சரியா பக்குவப்படுத்த வசதியா இருக்கும். ஆனாலும் நாங்க எல்லாக் காலங்களிலேயும் இந்தத் தொழிலைச் செய்யுவோம். அதாவது எப்போ அதிகமாக பொருள் விற்பனையாகுமோ அந்த நேரத்துலதான் அதிகமாகச் செய்வோம். குறிப்பாக சொல்லனும்னா பொங்கல், தீபம் வர்ற மாசங்கள்ல அதிகமா பொருள் செய்வோம். ஆடி, புரட்டாசி மாசங்கள்ல அதிகமாகப் பொருள் செய்வோம். அதிகமான சூளை போடுவோம் (கெம்பு உடையார், பி.இ.4:38)*

என்கிறார். இதுதான் வழமை. இதை இத்தொழிலுக்கான பாணியில்,

இந்தத் தொழிலைப் பொருத்தவரைக்கும் ஆறுமாசம் உழைக்கனும் ஆறுமாசம் உட்கார்ந்து சாப்பிடணும். வெய்ய காலத்துல உழைக்கணும், மழைக்காலத்துல உட்கார்ந்து சாப்பிடணும். ஏனென்றால் வெய்ய காலத்துல தொழில் செய்ய முடியும். மழைக்காலத்துல தொழில் செய்ய முடியாது (பூங்காவனம்; பி.இ.4:102)

என்கிறார். ஆக, இத்தொழிலுக்கான பருவகாலப் பாகுபாட்டைப் பிரித்தறிபவர்களாகவும் இத்தொழில் செய்யும் குயவர்கள் இருக்கின்றனர்.

### *செம்மண் பூசுதல்*

பச்சைப் பாத்திரங்களை வெயிலில் நன்கு உலர வைத்த பிறகு, அதன் மேல் செம்மண் பூசும் வழக்கத்தினைத் தொண்டை மண்டல வட்டார குயவர்கள் தங்களது தொழில்முறை உத்தியாகக் கொண்டிருக்கின்றனர். இது பொருள்களின் பகட்டிற்காகச் செய்யப்படும் ஒருவித அழகியல் உத்தி.

மண்ணின் நிறம் மூன்று வகைப்பட்டன. அவை, கருப்பு, சிவப்பு, வெள்ளை. இவற்றில் வெள்ளை நிறத்திலிருக்கும் மண் சுண்ணாம்புச் சத்து நிறைந்தது. ஆதலால் அவ்வகை மண்ணைச் சுட்டு திடப்படுத்த இயலாது. தவிர்த்து, தென்னிந்திய தட்பவெப்பச் சூழலில் கிடைக்கும் பெரும்பாலான மண் வகைகள் கருமை நிறம் கலந்தது. ஆதலால் அதிலிருந்து வேறுபடும் சற்று பகட்டான நிறத்தை மக்கள் விரும்புகின்றனர். அதை நிறைவுசெய்யும் நோக்கோடு மண்பாண்டங்களைக் குயவர்கள் செந்நிறமாக்க முயற்சிக்கின்றனர். அதற்கான உத்தியாக இச்செம்மண் பூசுதலைக் கொள்ளலாம்.

செந்நிற மண்ணும், வெண்ணிற மண்ணும் தீயில் சுடும்போது மிகுபொலிவு பெறும் தன்மையுடையன. கருமை நிறம் கலந்த மண்ணும் அவ்வகைத்தானதே. ஆனாலும் கருமை நிறத்தைப் பொலிவான நிறமாகக்கொள்ளும் விருப்ப மனநிலையை வெகுமக்கள் மிகுதியாகக் கொண்டிருக்கவில்லை எனலாம். சான்றாகத் தமிழர் திருநாளாகிய தைப்பொங்கலுக்கு அடுத்த நாளான உழவர் திருநாளன்று உழவுக்கருவிகளைச் சுத்தப்படுத்தி வண்ணந்தீட்டி வைத்துப் படைக்கும் வழக்கம் வேளாண்மைத் தொழிலை மேற்கொள்ளும் தமிழ்ச்சமூக வெகுமக்களிடையே இருக்கின்றன. அவ்வாறு தீட்டப்படும் வண்ணங்கள் இயற்கையானது. ஆனாலும், பெரும்பான்மையாக இவ்விதப் பயன்பாட்டிற்கு வெள்ளை, பச்சை மற்றும் சிவப்பு வண்ணங்களே பயன்படுத்தப்படுகின்றன. வெள்ளை நிறத்திற்குச் சுண்ணாம்பினையும் பச்சை நிறத்திற்கு தாவரத் தழைகளையும் சிவப்பு நிறத்திற்குச் செம்மண்ணையும் பயன்படுத்துகின்றனர் (களாய்வு; அரிபரந்தாமன் (65): தேவதானம்பேட்டை, 07.05.2009). இவை எளிதில் கிடைக்கும் இயற்கையான வண்ணப்பொருள்கள். இதுபோலவே கருமை நிறத்திற்கான கரி முதலான இயற்கை வண்ணப் பொருள்கள் எளிதாகக் கிடைத்தாலும் அதை மங்கலச் சடங்கு தொடர்பான நிகழ்வுகளுக்கு மிகுதியான அளவு யாரும் பயன்படுத்தவில்லை. வெகுமக்களின் இவ்வுளவியலைத் தனியொரு

ஆய்வாக மீளாய்வுச் செய்யலாம். ஆக, சிவப்பு நிற மண்ணே மங்கலகரமானது மற்றும் பொலிவானது என்ற மனநிலை வெகுமக்களிடையே பரவலாகக் காணப்படுகின்றது. இதற்குச் சான்றாக மண்பாண்டத்திற்குச் செம்மண் பூசுவதைக் கொள்ளலாம்.

பகட்டாக இருக்க வேண்டும் என்பதே செம்மண் பூசுவதற்கான அடிப்படை. மண்பாண்டப் பொருள்களின் பயன்பாடு மிகுதியாக இருக்கும்போது பயன்பாட்டிற்கு முதன்மை முக்கியத்துவமும் பகட்டிற்கு இரண்டாம் தர முக்கியத்துவமும் அளிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் மண்பாண்டப் பொருள்களின் பயன்பாடு குறையும்போது அவற்றில் அழகியல் உணர்வை எதிர்பார்க்கும் மனநிலை வெகுமக்களிடையே உருவாகியிருக்கிறது. அப்போது அம்மண்பாண்டப் பொருள்களுக்கான பயன்பாடு என்பது இரண்டாம் தரமானதாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. மண்பாண்டப்பொருள்களின் இவ்விரு வேறுபட்ட நிலைப்பாடுகளை முறையே கிராம மற்றும் நகர்ப்புறங்களில் காணமுடிகின்றன. இவ்வித மண்பாண்ட உற்பத்தியும் இதனை அடிப்படையாகக் கொண்டே செய்யப்படுகின்றது. இதை

> *அப்போவெல்லாம் 20 வருஷத்துக்கு முன்னாடி அதிகமான உருப்படிகள் செய்வோம். அதனால பாத்து பாத்து நுணக்கமா செய்யிறது இல்ல. எல்லா பொருளையும் ஒரே மாதிரியாதான் செய்வோம். விசேஷமானதா எந்த அலங்காரமும் பகட்டும் செய்யத்தேவை இல்லை. ஏனென்றால் அப்போ மண்பாண்டப் பொருள் அதிகமாகத் தேவைப்பட்டிச்சி. அதிகமா வாங்குனாங்க. அப்போ அவங்களுக்குத் தெரிஞ்சதெல்லாம் உபயோகந்தான். பகட்டா இருக்கணும்னு கேட்கமாட்டாங்க. அப்போவெல்லாம் அலங்காரம் பெருசா படல. ஆனாலும் கைக்கீத்து அலங்காரம் இருந்துச்சி. அப்போவெல்லாம் பொருளுக்குப் பூசுற செம்மண் ரொம்ப நிறமா இருக்கணும்னு மெனக்கிடமாட்டோம். உள்ளூர்லேயே எங்கயாவது பக்கத்துல செம்மண் கிடைச்சா அதை கொண்டு வந்து பூசுவோம். நல்ல நெறம் கெடைக்கலனாலும் கவலைப்படறது இல்லை. ஆனால் இப்போ அப்படி இல்லை. பானைங்க நல்ல நெறமா பளபளன்னு இருக்கனும்னு நெனக்கிறாங்க. அதனால இப்போவெல்லாம் புதுச்சேரி போயி செம்மண் எடுத்து வரவேண்டியதிருக்கு. ஏன்னா, அங்கதான் நல்ல நெறமான செம்மண் கெடைக்குது அதனால (கெம்பு உடையார்; பி.இ.4:38)*

என்ற மண்பாண்ட உற்பத்தியாளரின் வாய்மொழித் தகவலின்வழி அறிய முடிகிறது. இவ்வாறு மேற்கொள்ளப்படும் இருவேறுபட்ட பயன்பாட்டிற்கான செம்மண்ணைத் தனித்தனியான பெயரிட்டு அழைக்கும் வழக்கமும் இருக்கின்றது. அவற்றில் இரண்டு வகை, 1. நாட்டு செம்மண், 2. செம்மண். முதலாவதான, நாட்டு செம்மண் என்பது மண்பாண்ட உற்பத்தியாளர்களின் வாழிட எல்லைக்குள் கிடைத்திருக்கின்றது. பகட்டினை கருத்தினில் கொள்ளாத தொடக்ககால பயன்பாட்டில் மிகுதியாக இவையே

பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆகையால் இப்பெயர் பெற்றிருக்கலாம். இரண்டாவது நல்ல நிறமான செம்மண். இது பகட்டான பொலிவினை விரும்பும் மண்பாண்டப் பயன்பாடு குறைந்த தற்காலப் பயன்பாட்டிற்கானது. தற்போது பகட்டிற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவதால் அதற்கான இவ்வகைப்பட்ட செம்மண்ணை குயவர்கள் மெனக்கிட்டு தேடுகின்றனர். பலர் வெளியூர் சென்று செம்மண் எடுத்துவரும் வழக்கமுடையவர்களாகவும் இருக்கின்றனர். இதை, கிராமப்புற மண்பாண்ட உற்பத்தியாளரின், 'தொழிலுக்குத் தேவையான செம்மண்ண நம்ம ஊர்லயே எடுத்துக்குவோம், அதுக்கு நாட்டு செம்மண்ணுனு பேர். அது அவ்வளவா நெறம் தராது. அதனால பாண்டிச்சேரி போயி செம்மண் எடுத்து வருவோம். ஒரு கோணியளவு செம்மண் கொண்டு வந்தா ஒரு வருடத்துக்கு வச்சிக்குனு பூசுவோம்' என்ற தகவலின் வழி அறியமுடிகின்றது. ஆக மண்பாண்டத்திற்குச் செம்மண் பூசுதல் என்பது மரபான தொழில்நுட்ப அறிவு என்பதனை இது கொண்டு அறியமுடிகிறது. இது தொடக்ககாலத் தொழில்நுட்ப அறிவின் தொடர்ச்சி.

பச்சையாக (ஈரமாக) வனையப்பட்ட மண்பாண்டம் காயவைத்த பின்பு செம்மண் பூசப்படுகின்றது. அவ்வாறு பூசும்போது காய்ந்த அப்பாண்டம் நீர்த்த செம்மண் பூச்சினை உறிஞ்சி உள்வாங்கிக் கொள்கிறது. அதன்பின் மீண்டும் அப்பாண்டம் வெயிலில் உலரவைக்கப்படுகின்றது. உறிஞ்சப்பட்ட ஈரப்பதம் காய்ந்ததும் அப்பாண்டத்தின் மேற்புறத்தைச் சணல்சாக்குப்பட்டைகள், மெல்லிய பிளாஸ்டிக் இழையாலான கொசுவலைகள் முதலான மென்மையான பொருள்களைக் கொண்டு தேய்த்து மழுமழுப்பாக்குகின்றனர். இவ்விரு பொருள்களின் வருகைக்கு முன்னதாகத் தூக்கணாங் குருவிக் கூடுதனைக் கொண்டு தேய்க்கும் வழக்கத்தினைக் கொண்டிருந்திருக்கின்றனர். இவ்வாறு செய்வதனால் மேற்பூச்சு செய்யப்பட்ட செம்மண்ணின் சொரசொரப்புத் தன்மை நீங்கி அதன் நிறம் மட்டும் மண்பாண்டத்தின் மீது படிந்து காணப்படும் நிலை உருவாகிறது. அத்துடன் மண்பாண்டப் பொருள்கள் கூடுதல் வழவழப்புத் தன்மையையும் பெறுகின்றது. அழகியல் உணர்வை முன்வைத்த இம்முறை இன்றளவும் நீடித்து வருகின்றது. இது தவிர்த்து இவ்வகையான பொருள் உற்பத்தியில் மாற்று நிறம் பயன்படுத்துவது குறித்த அடிச்சுவடு எதுவும் இதுவரைக்கும் இல்லை. சிவப்பு நிறமே இதற்கான நிறமாகக் கொண்டு உற்பத்தியாளர்கள் செயல்படுகின்றனர். ஆனால் இந்நிற மூலப்பொருளான செம்மண்ணில் 'கேசரிதூள்' (இனிப்பு பலகாரத்திற்கு பயன்படுத்தப்படும் நிறப்பொருள்) முதலான செயற்கைப் பொருள்களைக் கலவை செய்து புதுவிதப் பகட்டினை உருவாக்கும் முயற்சியை அவ்வப்போது செய்வதாகவும் குறிப்பிடுகின்றனர். (சுதாகர்; பி.இ.4:137). ஆனாலும் மண்பாண்டத்திற்கான மரபான நிறமும் அதற்கான பூச்சு முறையும் இன்றளவும் பெரிதளவில் மாற்றம் பெறாத ஒன்றாகவே இருக்கின்றது.

செம்மண் பூசப்பட்ட இவ்வகையான பச்சைப் பாத்திரம் 'உருப்படி' என்றழைக்கப்படுகின்றது.

***சூளையிடுதல்***

மண்பாண்டங்களைச் சுட்டுப்பயன்படுத்தும் வழக்கம் மிகவும் பழமையானது. இதனை நமக்கான பழமரபுச் சின்னங்களைக் கொண்டு அறிய முடிகின்றது. இவ்வழக்கம் இன்றளவும் நீட்சிபெற்று வருகின்றது. இச்செயல்பாட்டினை வடதமிழக வட்டாரங்களில் சூளையிடுதல் என்று குறிப்பிடுகின்றனர். இதனையே தென்தமிழக வட்டாரங்களில் 'சுள்ளை வைத்தல்' என்றழைக்கும் வழக்கமிருக்கிறது.

மண்பாண்டங்களைச் சுட்டெடுக்கும் இம்முறைமையில் பெரும்பாலும் ஒரே மாதிரியான தொழில்நுட்பங்களே கடைபிடிக்கப்படுகின்றன. தமிழகத்தைப் பொருத்தவரையில் இம்முறைமையினுள் பெரியளவிலான மாற்றத்தினைக் காண இயலவில்லை. பயிற்சியின் வழியாக அடுத்தடுத்த தலைமுறைகளுக்குக் கடத்தப்படும் இத்தொழில்நுட்பஅறிவு இத்தொழிலை மரபாகக் கொண்ட குயவர்களுக்கான சிறந்த அடையாளமாகக் கருதப்படுகின்றது. மேலும், இதற்கான பக்குவப்பாட்டினைக் கண்டறிய கருவிகள் ஏதும் இன்றளவும் கண்டறியப்படவில்லை. ஆகையால் இதனைப் பயிற்சியினால் பெறப்படும் உணர்த்த முடியாத அறிவு என்பதாகக் கொள்ளலாம். இவ்வறிவு மண்பாண்டத் தொழிலில் முழுமையாக ஈடுபடும் ஒருவருக்கே சாத்தியமாகிறது. ஏனெனில் மண்பாண்டத் தொழில் என்பது ஒரு தொகுதி. பகுதி பகுதியாகப் பிரித்துச் செய்யப்படும் ஒரு தொழில் அல்ல. இதன் தொடக்கம் முதல் இறுதி வரை தனி ஒருவரின் மேற்பார்வையின்கீழ்ச் செய்யப்படுவதாயிருக்கின்றது. ஆதலால் சூளையிடுவதற்கான தொழில்நுட்பஅறிவு அவரையே சார்ந்ததாயிருக்கிறது. ஏனெனில் இவ்வறிவென்பது களிமண் தேர்ந்தெடுத்தல் தொடங்கி, உற்பத்திப்பொருளின் உடற்சுவர் தடிமண் அமைத்தல் வரையிலான பொருளுற்பத்தியின் பல நிலைகளை மையமிட்டதாய் இருக்கின்றது. குறிப்பாக மண்ணாலான ஒரு பொருளைச் சுட்டெடுக்க வேண்டுமானால் அப்பொருள் உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்ட மண்ணின் தன்மை, அதன் உடற்சுவற்றின் தடிமன் முதலானவற்றை அறிந்தால்தான் அதற்குத் தேவையான அளவு தீயிடுவதற்கான எரிபொருள் இட முடியும். மேற்கூறிய இவ்விரு நிலைகளிலும் கவனம் இல்லாத ஒரு நபரால் இவ்வேலையைச் சரிவரச் செய்ய இயலாத நிலையே ஏற்படுகின்றது. எனவே காலங்காலமாக இத்தொழிலைச் செய்துவரும் மண்பாண்ட உற்பத்தியாளர்களுக்கே இது சாத்தியமாகிறது. ஆகையால் மண்ணாலான பொருள் உற்பத்தியில் குயவர் தவிர்த்த பிற சாதியினர் ஈடுபட்டாலும் அவர்கள் அவற்றைச் சூளையிடுவதற்குக் குயவர்களையே நாடுகின்றனர். இந்நிலை வந்தவாசி வட்டாரத்தில் தற்போது இருந்துவருகிறது. இது குறித்து முழுநேரமும் மண்பாண்ட உற்பத்தியில் ஈடுபட்டு வரும் குயவர் ஒருவர் கூறும்போது,

> முழுநேரமும் எனக்கு இதே தொழில்தான். ஆனால் ஊர்ல செங்கல் சூளை வக்கிற வேலைய உடையார் தவிர்த்த மற்ற சமூகத்தினரும் செய்யிறாங்க.

*என்னதான் எங்க தொழிலை அவங்க செய்தாலும் எங்கள மாதிரி செய்யமுடியாது. அதனால் சூளை வக்கிறதுக்கு எங்களதான் கூப்பிடுவாங்க. நானும் தினக்கூலியா போயி சூளைபோட்டு குடுத்துட்டு வருவேன். (மணி; பி.இ.4:53)*

என்று குறிப்பிடுகின்றார்.

மண்பாண்டத் தொழிலில் பொருள் உருவாக்கத்திற்கு இணையான தொழில்நுட்ப அறிவாக அப்பொருளைச் சுட்டு எடுக்கும் நுட்பமுறையைக் குறிப்பிடலாம். இது மண்பாண்ட உற்பத்தியின் ஒரு பகுதி. இதற்கு வலுசேர்க்கும் விதமாக பின்வரும் கருத்து அமைந்திருக்கின்றது.

*மண்ணின் கலவை, கலவை தயாரிக்கப்படும் விதம், பாண்டத்தைச்சுடும் விதம், மற்றும் மெருகூட்டும் முறை ஆகியவற்றைப் பொருத்து மண்பாண்டங்களின் தன்மை வேறுபடும். இதனடிப்படையில் மூன்று வகையான மண்பாண்டங்கள் உண்டு. 500 டிகிரி செல்சியஸ் வெப்பத்தில் சுடப்படுவன முதல்வகை. இதுதான் முதன்முதலான மனிதர் பயன்படுத்திய வகை. அவ்வகைப் பாண்டங்களைத் தயாரிக்க மூலமான மண்ணில் சில கழிவுகள் இருக்கலாம். இவை கசியும் தன்மை கொண்டவை. திரவங்களை ஊற்றினால் கசிந்துவிடும். பாண்டத்தின் வெளிப்பரப்புக்கு மெருகூட்டும்போது கசிவுத் தன்மையை நீக்கிவிட முடியும். அப்படிச் செய்தால் அந்தப் பாண்டத்தில் திரவங்களைச் சேமிக்கலாம். மண்பாண்டங்கள் 500 டிகிரி செல்சியஸ்க்கு அதிகமான வெப்பத்தில் சுடும்போது அவை இறுகிக் கடினத்தன்மை பெறும். இப்படிப்பட்ட பாண்டங்கள் நீண்டநாட்கள் உழைக்கும். 1600 டிகிரி செல்சியஸில் சுட்டால் அமிலம் போன்றவற்றால் பாதிக்காமல் பளிங்குத்தன்மை அடையும் (Vitreous quality). இம்மாதிரியான பாண்டங்கள் களிமண்ணால் செய்யப்பட்டாலும் கற்பாண்டங்கள் (Stoneware) என்று அறியப்படுகின்றன. மூன்றாவது வகையான பீங்கான் பாண்டங்கள். இது முதன்முதலாகச் சீனாவில் செய்யப்பட்டன (காஞ்சா ஐலைய்யா; 2009:80)*

என்ற அறிவியல் பூர்வமான இவ்வுண்மை பின்னாளைய வளர்ச்சியால் அறியப்பட்டது என்றாலும் இம்முறை அனுபவ ரீதியாக இதற்கு முன்னரே பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

மண்பாண்டங்களைச் சுடுவதற்குப் போதுமான வெப்ப அளவு 500 டிகிரி செல்சியஸ் என்பது வெப்ப அளவுகோல்கள் கண்டுபிடிக்கப்பட்டதற்குப் பின்பு அறியப்பட்டது. ஆனால் இவ்வித அறிவியல் கருவிகள் கண்டுபிடிப்பதற்கு முன்பே மண்ணால் உற்பத்தி செய்யப்பட்ட பொருளின் தன்மை, அதற்குத் தேவையான வெப்ப அளவு முதலானவற்றை அறிந்து, அவற்றைச் சுட்டெடுக்கத் தேவையான எரிபொருளின் தன்மையறிந்து அப்பொருளுக்குத் தேவையான வெப்பத்தைத் தருமளவிற்கு அதன் உள்ளும் புறத்தும் எரிபொருளையிடும் தொழில்நுட்பஅறிவு என்றைக்குத் தோன்றியது? அது எதனுடைய பிரதிமாதிரி? என்று அறிவதற்கில்லை. ஆனால் அவ்வகைப்பட்ட இத்தொழில்நுட்பமுறை மரபின் அடிப்படையில்

இன்றளவும் பின்பற்றப்பட்டு வருகின்றது. சிற்சிறு மாற்றங்களைப் பெற்று இருப்பினும் சுட்டெடுத்தலுக்கான சூத்திரம் இன்னும் மாறாமல் இருக்கின்றது. அதன்படி சூளையிடும் தினத்தன்று சுடுவதற்குத் தயாரான எல்லாப் பொருளையும் எடுத்து காலை முதல் நண்பகல் வரை காயவைக்கின்றனர். பிறகு நண்பகல் ஒரு மணியளவில் சூளையிடுவதற்கான ஆயத்தப்பணி தொடங்குகிறது. சூளையிடுவதற்கு நண்பகல் நேரத்தைத் தேர்ந்தெடுத்திருப்பதிலும் தொழில் நுட்பம் நிறைந்திருப்பதாகக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். சூளையிடுவதற்கான பொருள்கள் முன்னமே நன்றாகக் காயவைத்து பாதுகாக்கப்பட்டவை என்றாலும் அவற்றைச் சூளையிடும் தினத்தன்று மிதமான வெப்ப நிலைக்குக் கொண்டு வந்த பிறகே சூளையில் அடுக்கவேண்டும். அப்போதுதான் மண்பாண்டப்பொருள்கள் சீரானமுறையில் வேகும். எனவேதான் சூளையிடும் வேலையை மண்பாண்ட உற்பத்தியாளர்கள் நண்பகல் ஒரு மணி அளவில் செய்கின்றனர். காலையிலிருந்து வெயிலில் காய்ந்து வெப்பத்தைச் சீராக உள்வாங்கியிருக்கும் பொருள்களைச் சூளையில் அடுக்கி அதற்குக் கூடுதலாகச் சூட்டினைத் தரும்போது, அவை அதை ஏற்கும் சக்தியைப் பெறுகின்றன. அவ்வாறு அன்றைய தினம் அப்பொருளை வெயிலில் வைத்து மிதமான வெப்பமூட்டாமல் அப்படியே சூளையில் ஏற்றி உயர்ந்த அளவு வெப்பத்தினை அதன்மீது செலுத்தினால் அவை அதை ஏற்காது உருக்குலைந்து விடுகின்றன. எனவேதான் நண்பகல் நேரத்தில் மண்பாண்டங்கள் சூளையிடப்படுகின்றன. மழைக்காலங்களில் இச்சூழலுக்கான சாத்தியப்பாடு குறைவு என்பதால் அப்பருவகாலங்களில் சூளை வைப்பதில் சுணக்கம் ஏற்படுகின்றது. (சுதாகர்; பி.இ.*4:137*)

மேற்கூறியமுறையில் மண்பாண்டப் பொருள்களைச் சுடுவதற்கான சூளைகள் நிலம், தட்பவெப்பநிலை, எரிபொருள் முதலான மிக முக்கியக் காரணிகளை மையமிட்டு அமைக்கப்படுகின்றன. அதனடிப்படையில் சூளையிடுதல் என்பதைப் பருவகாலத்திற்கு ஏற்றவாறு இரண்டு வகையாக வகைப்படுத்திக் கொள்ளலாம். இவற்றில் வெயில் காலங்களில் சூளையிடும் முறையே முதன்மையானது. இதற்கான செய்முறை குறித்துக் குயவர் ஒருவர் குறிப்பிடுகையில்,

> சூளை வைக்கனும்னா முதல்ல வேலிக்காத்தான் முள் எடுத்துவந்து சூளை அடுக்கும் அகலப்பரப்பிற்கு பரவலா பரப்பனும். பிறகு அதை உலக்கையால இடிச்சி சமப்படுத்தனும். அதுக்கு மேல வெறகு அடுக்கணும். பிறகு அதுக்கும் மேல மண்பாண்டங்களை அடுக்கணும். பொருள் அடுக்கி முடிச்சதும் அதைச் சுற்றி அவை சரியாமல் இருப்பதற்காக சுத்து பல்லா அடுக்கணும். பிறகு அதைச் சுத்தி வெறகு அடுக்கணும். அதுக்கும் மேல வைக்கோல சீராகப்பரப்பி குச்சியால தட்டி ஒழுங்குபடுத்தனும். ஒழுங்கா படிஞ்சதும் களிமண் சேறு கொழப்பி அதுக்கு மேல பூசிடனும். அவ்வாறு பூசும்போது உச்சியில மட்டும் பூசாம கொஞ்சம் தெறப்பு விட்டு வைக்கணும். இவ்வளவும் செய்ஞ்சபிறகுதான் சூளைய கொளுத்தணும் (மணி; பி.இ.*4:53*)

என்கிறார். பெரும்பாலும் இவ்விதமான சூளைவைப்புமுறையே தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களின் வழக்கத்திலிருக்கிறது. தொழில்நுட்பத்தின் அடிப்படையில் இது பொதுவானதொரு முறையாயிருப்பினும் சூளையிடப்படும் நிலம், சூழல், அதுசார்ந்த விளைபொருள்களை மையமிட்டே செய்யப்படுகிறது. ஆதலால், இவை வட்டாரத்திற்கு வட்டாரம் மாறுபடும். இதனை அடிப்படையாக வைத்து இத்தொழில்நுட்ப முறையில் காணப்படும் வட்டார அளவிலான சிற்சில தொழில்முறை வேறுபாடுகளையும், அதனூடான வழக்காற்றுக் கலைச்சொற்களையும் கண்டறிய முடிகிறது. சான்றாக, மண்பாண்ட உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் கொங்கு மண்டல வட்டாரக் குயவர்களின் சூளை வைப்புமுறையைக் கொள்ளலாம். இதனை அவர்கள் 'சுள்ளை வைத்தல்' என்கின்றனர். அதன் செய்முறை குறித்து ஆய்வாளர் இ. முத்தையா குறிப்பிடுகையில்,

> நாட்டுக் கருவேலை, சீமைக் கருவேலை ஆகிய மரங்களிலிருந்து முட்கோப்புகளை வெட்டிவந்து அவற்றை வட்டவடிவமாக அடுக்குவர். பின்னர் முள்ளின் மேல் மரப்பலகைகளைப் போட்டு அவற்றின் மேற்பகுதியில் உலக்கையினால் குத்துவர். இச்செயல் முட்குத்தல் என அழைக்கப்படுகிறது. இவ்வாறு குத்தப்பட்ட முள்ளின்மேல் உருவாக்கப்பட்ட உருப்படிகளை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்குவர். அதன் பின்னர் வட்டமாக அடுக்கப்பட்டுள்ள உருப்படிகளின் ஓரப்பகுதியில் வைக்கோலைச் செறிவாக அடைத்து வைப்பர். நடுப்பகுதியில் உருப்படிகளின் மேல் பனை ஓலைகளை அடுக்குவர். அப்பனை ஓலைகளுக்கு மேல் வைக்கோலைப் போட்டு அதன்மேல் குளத்துச் சேற்றினைப் பூசுவர். இவ்வாறு சேற்றினைப் பூசுவதற்கு வதிவைத்தல் என்று பெயர். வதிவைத்தப் பின்னர் வதியைச்சுற்றித் துளை போடுவர். அதன் பின்னர் வட்டவடிவமான சுள்ளையின் ஓரப்பகுதியில் வைக்கப்பட்டுள்ள வைக்கோலில் தீ வைப்பர் (**2000:135**)

என்று பதிவு செய்கின்றார். இம்முறையில் எரியூட்டப்படும் மண்பாண்டத்திற்கான வெப்ப அளவினை அறிவதற்குரிய கூறுகளைக் கவனத்தில்கொண்டு சூளை அமைக்கப்படுகிறது. அதற்கான அறிகுறிகளை அறிவதற்கான பகுதியாகச் சூளையின் சேறு பூசப்படாத மேற்பகுதி அமைக்கப்பட்டிருக்கிறது. அடிப்புறத்தில் தீயிடப்பட்ட சூளையின் உட்புறம் தீப்பிடித்து எரியும்போது அதன் மேற்பகுதி வெண்ணிறப் புகை சூழ்ந்து காணப்பட்டால் சூளையின் உள்ளிருக்கும் மண்பாண்டப் பொருள்கள் சரியான வெப்பநிலையில் வெந்திருக்கிறது என்றும், அம்மேற்பகுதியில் உள்ள சேறு பூசப்படாத வைக்கோல் கருகி கருப்பாக மாறுமேயானால் சூளையினுள் இடப்பட்டிருக்கும் மண்பாண்டப் பொருள்களின் தேவைக்கு அதிகமான வெப்பம் உள்ளுறைகிறது என்றும் அறியப்படுகிறது. அப்போது சூளையின் சேறு பூசப்பட்ட மற்ற பக்கங்களைப் பிரித்தெறிந்து அதன்வழியாகத் தேவைக்கு அதிகமான தீ வெளியேற்றப்படுகிறது. அவ்வாறு செய்வதனால் அதிக வெப்பத்தால் மண்பாண்டப் பொருள்கள் உருகுவதை அல்லது உருக்குலைவதைத் தடுக்க முடியும் எனக் குயவர்கள் கருதுகின்றனர்.

இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்குச் சென்னை, கொசப்பேட்டையைச் சேர்ந்த ஜோதிலிங்கம் என்பவர் பின்வருமாறு பதிலளித்தார். அதாவது,

> சூளையிலப் பொருள்களை அடுக்கி அதற்குத் தேவையான விறகுக் கட்டைகளை அடுக்கி அதற்கும் மேல வைக்கோல் போட்டு மூடிய பிறகு அதற்கும்மேல் களிமண் சேறுகுழப்பி பூசிடுவோம். அந்த சூளையோட உச்சியில சேறு பூசாம கொஞ்சம் பகுதி திறந்து வச்சிருப்போம். அதில்தான் உள்ளிருக்கும் பொருளுக்கான வெப்பத்திற்கான அளவைக் கண்டறிவோம். சீரான முறையில் தீ விழுந்தால் உச்சிப்பகுதி வெண்புகையில் வெளுக்கும். அவ்வாறு வெளுத்தால் சூளையை அப்படியே எரியூட்டுவோம். மாறாக சூளைக்குள் தீ கொஞ்சம் அதிகமானால் சேறு பூசப்படாத உச்சிப்பகுதியில் உள்ள வைக்கோல் கருப்பாகக் கருகும். அவ்வாறு கருகினால் களிமண்ணால் பூசப்பட்ட சூளையின் மற்றப்பகுதிகளில் ஓட்டையிட்டு அதன் வழியாகத் தீயின் வெம்மையை வெளியேற்றி விடுவோம். அவ்வாறு செய்தால்தான் உள்ளிருக்கும் மண்பாண்டப் பொருள்கள் பொழைக்கும். இல்லையேல் அவை உருகுநிலையை அடைந்துவிடும். அதேபோல் பொருள்கள் வேகுவதற்குத் தேவையான விறகு இல்லையென்றால் அரைவேக்காட்டுப் பொருளாகி அவையனைத்தும் திடத்தன்மையை இழந்துவிடும் (ஜோதிலிங்கம்; பி.இ.4:119)

என்கிறார். இவையனைத்தும் தக்க தட்பவெப்பச்சூழல் அமையும்போது சராசரியாகச் சூளையிடுவதில் மேற்கொள்ளப்பெறும் பொதுப்படையான உத்திமுறைகள். இது தவிர்த்து சூளையிடுவதற்குத் தக்க தட்பவெப்பச்சூழல் அமையாதபோது அதாவது, மழைக்காலங்களில் சில சிறப்பு உத்திகளைப் பயன்படுத்தி சூளையிடுவதற்கான சூழல் உருவாக்கப்படுகிறது. இதை மண்பாண்டத் தொழிலை எந்த பருவத்திலும் தொடர்ந்து செய்வதற்கான நுணுக்கமுறையாகக் கடைப்பிடிக்கின்றனர். இம்முறை சராசரியான சூளையிடும் முறையிலிருந்து மாறுபட்டது. அதாவது சூழலைத் தேவைக்கேற்ப மாற்றிக்கொள்ள முனையும் சிற்சில நுணுக்கங்களை உள்வாங்கியது. இம்முறையில் சூளையிடும் வழக்கம் இன்றளவில் மிகவும் அரிதாகவேக் காணப்படுகின்றது. குறிப்பாக வயது முதிர்ந்த சிற்சில குயவர்களுக்கு மட்டுமே இந்நுணுக்கமுறை தெரிந்திருக்கின்றது. பிற இளைய தலைமுறையினர் இதனைப் பெரிதளவில் அறிந்திருக்கவில்லை. எனவே, அவர்கள் மண்பாண்டச் சூளை வைத்தலுக்கு உகந்த காலமாக வெயில் காலத்தினையே கருதுகின்றனர். ஆனால் இதற்கு முந்தைய தலைமுறையைச் சேர்ந்த குயவர்கள் மழை நாட்களில் சூளையிடுவதற்கான மாற்று ஏற்பாடுகளைச் செய்து சூளையிட்டிருக்கின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு,

> தைப்பொங்கல் மற்றும் கார்த்திகை தீபத்திற்கெல்லாம் அதிகப்படியான மண்பாண்டப் பொருள்கள் தேவைப்படும். அதனால நாங்களும் அதிகப்படியான மண்பாண்டப் பொருள்களைச் செய்து சூளையிட்டுத் தருவோம். வெயில் காலத்தை எதிர்பார்க்கறது கெடையாது. வெயில் காலத்தை எதிர்பார்த்து இருந்தா நாங்க இது மாதிரியான பண்டிகைக்குத் தேவையான

*பொருள்களை மக்களுக்குச் செய்து தரமுடியாது. ஏன்னா கார்த்திகை, மார்கழி மாதங்களில் அதிகப்படியான மழையும் பனியும் பெய்ஞ்சிட்டே இருக்கும். உக்ரமான வெயில் காயாது. ஆனாலும் நாங்க அதற்கான மாற்று ஏற்பாடுகளை செய்து சூளை போடுவோம். ஈரமான இடத்தில் சூளை போட்டா ஈரப்பதம் சூளையைத் தாக்கும். மழைக்காலத்துல நல்லா காய்ஞ்ச இடமும் இருக்காது. எனவே சூளை போடுற இடம் ஈரமா இருந்தால் அந்த இடத்தில் வைக்கோல் தூவி சமப்படுத்திக்கொள்வோம். அதன்பிறகு அதன்மேல் பழைய சூளையில் உள்ள ஈரசாம்பலை கொண்டு வந்து தூவி நிரவுவோம். அதற்கும் மேல் மணல் கொட்டி நிரவுவோம். அதுக்கும் மேல வேலிக்காத்தான் முள்ளெடுத்து வந்து பரவலாகப் போட்டு மரப்பலகையால் தட்டி பிறகு உலக்கையால் இடிச்சி நொறுக்கி சமப்படுத்திக்கொள்வோம். அதுக்கப்புறம் அதன்மேல் மண்பாண்டப் பொருள்களை அடுக்கி சூளை வைப்போம். இப்படி செய்ஞ்சா தரையில் இருக்குற ஈரப்பதம் சூளையைத் தாக்காது. பொருள் பொழைக்கும் (களாய்வு; சண்முகம் (54): தெள்ளூர், 30.03.2009)*

எனத் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் பதிலளிக்கின்றனர்.

காலச்சூழலைத் தன்வயப்படுத்தும் இவ்வுத்தியைப் போலவே மண்பாண்டப் பொருள்கள் கவர்ச்சிகரமான பொலிவினைப் பெறவேண்டி சூளையிடும்போது அதற்கான தக்க எரிபொருளைத் தருவதன் மூலமாகச் சூளையில் உள்ள மண்பாண்டப் பொருள்களைப் பொலிவுடையதாக மாற்றுவதற்கான உத்திகள் மேற்கொள்ளப்படுகின்றன. அதாவது, சூளையிடப்படும் மண்பாண்டப் பொருள்களுக்கு வறட்டியை எரிபொருளாக வைத்தல் என்பதை இதற்கான உத்தியாகக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு சாண வறட்டியை மண்பாண்டப் பொருளின் உள்ளும் புறத்தும் வைத்துச் சூளையை அடுக்கித் தீயிட்டு எரிக்கும்போது சாண வறட்டியில் இருந்து வெளிப்படும் வாயு செம்மண் பூசப்பட்ட மண்பாண்டங்களுக்கு மிகுதியான பொலிவினைத் தருகிறது. இது தவிர்த்து மண்பாண்டங்கள் உள்ளும் புறத்தும் சீராக வேகுவதற்கு ஏதுவாகவும் இருக்கிறது என்பதே பெரும்பாலான குயவர்களின் கருத்தாயிருக்கின்றது. கிராமப்புறங்களைக் காட்டிலும் நகர்ப்புறங்களிலேயே இவ்வுத்திமுறை மிகுதியாக மேற்கொள்ளப்படுகின்றது. நகர்ப்புற மக்கள் மண்பாண்டப் பொருளின் பொலிவிற்குத் தரும் முக்கியத்துவமே இதற்கான முழு முதற் காரணமாகும். இடவசதியின்மையும் எரிபொருள் பற்றாக்குறையும் இதற்கான இரண்டாவது காரணமாகும்.

### *சூளை பிரித்தல்*

எரியூட்டப்பட்ட மண்பாண்டச் சூளை அளவில் சிறியதாக இருந்தால் அன்று மாலைப் பொழுதே பிரித்துப் பொருளை வெளியே எடுக்குமளவிற்கு சூடு தணிந்துவிடுகிறது. ஆகையால் அன்றைய தினமே அச்சூளையைப் பிரித்து எடுத்துவிடுகின்றனர். ஆனால் மிகுதியான உருப்படிகளைக் கொண்டு

எரியூட்டப்பட்ட பெரிய மண்பாண்டச் சூளையாக இருப்பின் அது அன்றிரவு முழுக்கச் சூடு தணிந்து மறுநாள் காலையில்தான் அச்சூளையைப் பிரித்தெடுக்க இயலுகிறது என்கின்றனர் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள். மேலும் மண்பாண்டத்தில் ஏறிய சூடு சீரான முறையில் தணிந்த பிறகு அதை எடுத்துக் கையாளுதலே சிறப்பானதாக இருக்கும். சூளையின் சூடு தணிவதற்குள் பிரித்தெடுத்துப் பயன்படுத்துவோமானால் மண்பாண்டத்தின் திடத்தன்மை குலைந்துவிடும் என்று குறிப்பிடுகின்றனர். அதாவது வெப்பமூட்டப்பட்ட ஒரு பொருளின் வெப்ப அளவினைச் சீரான விகிதத்தில் குறைக்க வேண்டும். தவிர்த்து அதிவேகமாகக் குளிர்ச்சிடையச் செய்தால் அப்பொருள் தனது திடத்தன்மையை இழந்து விடும் என்று பின்னாளில் அறிவியல் முறையில் உறுதிபடுத்தப்பட்ட இக்கருத்துநிலை பன்னெடுங்காலத்திற்கு முன்பே குயவர்களால் கையாளப்பட்ட ஒன்று என்பதை இத்தொழில் முறை நிரூபிப்பதாகக் கொள்ளலாம்.

இவ்வாறு சூளையிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட மண்பாண்டங்களை அதற்கெனவே கட்டப்பட்டுள்ள பாதுகாப்பான கொட்டகையில் வகைபிரித்து அடுக்கிவைத்துப் பின்பு சில்லரையாகவோ மொத்தமாகவோ விற்பனை செய்வதைக் குயவர் குடியினர் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

## தொழில் - பால்பாகுபாடு

எல்லாவிதமான பொருள் உற்பத்தியும் ஆண் துணையுடன் பெண்ணும் பெண் துணையுடன் ஆணும் சேர்ந்து செய்யப்படுவதாகும். என்றாலும் உற்பத்தித் தொழிலுக்கான தன்மை, அதற்குத் தேவையான மூலப்பொருள்களைப் பெறுவதற்கான சூழல் இவற்றை அடிப்படையாகக் கொண்டு வேலைகள் பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. அந்த வகையில் பொருள் உற்பத்தித் தொழிலை இரண்டாகப் பாகுபடுத்துவர். அவை

1. ஆண்களுக்கான தொழில்
2. பெண்களுக்கான தொழில்

இதில் ஆண்களுக்கான தொழிலெனப்படுவது கடினமானது, பெண்களுக்கான தொழிலெனப்படுவது சற்று எளிமையானது என்ற கருத்துநிலை இருக்கின்றது. இதற்கு ஆண் வன்மையானவன், பெண் மென்மையானவள் என்ற கருத்தாக்கமே அடிப்படை. இதனைக் கொண்டே இவ்விதப் பொருள் உற்பத்தித் தொழில்கள் பாகுபடுத்தப்பட்டிருக்கலாம்.

மனித உடலையும் பொருள் உற்பத்தித்தொழிலின் தன்மையையும் முதன்மைப்படுத்தி வகைப்படுத்தப்பட்டிருக்கும் இப்பாகுபாட்டில் இவ்விரண்டிற்கும் இடையேயான தொடர்பினை ஆராய வேண்டிய அவசியம் இருக்கின்றது. இது குறித்த ஆய்வில், "புழங்குபொருள்களைச் செய்யும் பல்வேறு தொழில்களில் ஆணும் பெண்ணும் எந்தெந்த வகையில் பங்கேற்கின்றார்கள் என்னும் புள்ளியில் இருந்து தன் புரிதலைத் தொடங்குகிறார் புரோவர்.

முதலாவது பெண்கள் பங்கேற்பதில் எவ்விதத் தடையும் இல்லாத தொழில்கள் ஒருவகை. இன்னும் சொல்லப் போனால் பெண்களே மிகுதியாக ஈடுபடும் தொழில்கள் பல உள்ளன. முறம் கட்டுதல், கூடை முடைதல், பாய் பின்னுதல், மூங்கில் பொருள்கள் செய்தல், பிரம்பு வேலை, மரச்சீப்பு செய்தல், தாவரங்களின் நடுத்தண்டிலிருந்து கிடைக்கும் மென் சோற்றிலிருந்து செய்யும் மாலைகள், பூ வேலைகள், மலர் வளையங்கள், ஒப்பனை செய்தல் போன்ற தொழில்களில் பெண்களே ஈடுபடுகின்றனர். இரண்டாவது வகையான தொழில்களில் பெண்கள் சில கட்டங்களில் மட்டுமே பங்கேற்கின்றனர். உதாரணத்திற்கு நெசவு. மூன்றாவது வகையான தொழில்களான தச்சரின் மரவேலைகள், கருமாரின் இரும்பு வேலைகள், தட்டாரின் பொன் வேலைகள் இவையாவற்றிலும் பெண்களுக்கான முதன்மையான வேலை இல்லை" *(2008:327)* என்ற புரோவரின் கருத்தாக்கத்தினை வழிமொழியும் பக்தவத்சலபாரதியின் கருத்தினை அடிப்படையாகக் கொண்டு நோக்கும் போது பெண்களுக்கான பொருள் உற்பத்தித்தொழிலை இரண்டு வகையாகக் கொள்ளலாம். முதலாவது பெண்களை முதன்மையாகக் கொண்டது இரண்டாவது பெண்களைத் துணைமையாகக் கொண்டது.

இது தவிர்த்து, "மரம், கல், இரும்பு, பொன் போன்ற கச்சாப் பொருள்களைக் காடு என்னும் பகுதிக்குரியனவாகக் கருத்தாக்கம் செய்யப்பட்டுள்ளதால் அவற்றுடன் காட்டில் உலவும் தீய ஆவிகள் அடங்கியிருக்கும் என்பது பஞ்ச கம்மாளர்களின் நம்பிக்கை. இந்நிலையில் காடு என்னும் பகுதியில் இருந்து கிடைக்கும் கச்சாப் பொருள்களைக் கொண்டு செய்யப்பெறும் தொழிலிலும் பெண்கள் முதன்மையாக ஈடுபடுவதில்லை" (மேற்படி:*329*). ஆக, இம்மாதிரியான உற்பத்தித் தொழில்கள் அனைத்தும் ஆண்களை மட்டுமே முதன்மையாகக் கொண்டு இயங்குவதாய் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதனைப் பின்வரும் கருத்து உறுதிப்படுத்துகின்றது.

> புழங்குபொருள் உற்பத்தித் தொழிலில் பெண்கள் முழுவதுமாக ஈடுபட்டுச் செய்யும் பாய்முடைதல், கூடை பின்னுதல், பிரம்பு வேலைகள் ஆகிய அனைத்திற்கும் தேவைப்படும் கச்சாப் பொருள்கள் நீர்நிலையை ஒட்டிய சதுப்புநிலம், ஏரிக்கரை, குளக்கரை, ஆற்றங்கரை முதலான நீர் நிலையை ஒட்டிய பகுதிகளிலிருந்தும் கிடைக்கின்றன. அதுபோலவே அவற்றைக் கொண்டு பொருள் உற்பத்தி செய்யும்போது அவ்விதப் பட்டைகளை வளைத்து முடைவதற்கு ஏற்ப நீர் தெளித்து இணக்கத்துடன் வளைக்கப்படுகிறது. இப்படியாகப் பெண்கள் மேற்கொள்ளும் பொருள்உற்பத்தித் தொழில்கள் அனைத்திலும் 'நீர்' முதன்மைப்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆக, நீரே பெண்களால் உற்பத்தி செய்யப்படுகின்ற பொருள்களுக்கு அடிப்படை. இதற்கு நேர்மாறாக, இரும்பைக் காய்ச்சி அடிப்பதற்கும் வனைந்த பச்சை மண்பாண்டங்களை சுடுவதற்கும், பித்தளை, பொன் முதலானவற்றைக் கொண்டு அணிகலன் செய்யவேண்டி அவற்றினை உருக்குவதற்கும் நெருப்பு இன்றியமையாததாக உள்ளது (மேற்படி:*330*).

இதுபோன்று நெருப்போடு தொடர்புடைய உற்பத்தித் தொழில்கள் அனைத்தும் ஆண்களால் செய்யப்படுகின்றன. ஆக, ஆண்கள் நெருப்பையும் பெண்கள் நீரையும் அடிப்படையாகக் கொண்டு புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கின்றனர் என்பதை இவ்விதமான செயல்பாட்டினைத் துணையாகக் கொண்டு நிறுவலாம்.

மேலும், பெண்களால் உற்பத்தி செய்யப்படுகின்ற பெரும்பாலான புழங்குபொருள்கள் மறுஉற்பத்தியோடு தொடர்புடையதாக இருக்கின்றது. பெண் என்பவள் மறுஉற்பத்திக்கானவள் ஆகையால் அவளால் உற்பத்திசெய்யப்படுகின்ற பொருள்களும் மறுஉற்பத்தியோடு தொடர்புடையதாக அமைந்திருக்கின்றன என்ற உளவியல் ஒற்றுமை இங்கு ஒப்புநோக்கத்தக்கது. இதற்கு மாறாக மறுஉற்பத்தியை நாடாத நீண்ட காலத்திற்கு உழைக்கும் பொருள்கள் மற்றும் மறுஉற்பத்திக்குத் துணைபுரியும் விதமான கருவிப்பொருள்களை ஆண்கள் உற்பத்திசெய்கின்றனர் என்பதும் மேற்கூறிய கருத்தாக்கத்துடன் ஒப்புநோக்க வேண்டிய ஒன்றாக இருக்கின்றது. இதற்கு வலுசேர்க்கும் விதமாகப் புரோவரின் பின்வரும் கருத்து அமைந்திருக்கின்றது என்பார் பக்தவத்சலபாரதி. அதாவது,

> பெண்கள் காடு என்னும் பகுதிக்குள் நுழையாமல் நாடு என்னும் பகுதியில் நீர்நிலை சார்ந்த இடங்களில் கச்சாப் பொருள்களைப் பெற்று நீரின் உதவியோடு ஆணின் உருவகமான கத்தியின் துணையோடு மீண்டும் மீண்டும் மறுஉற்பத்தி செய்யும் படைப்பாளியாக இருக்கின்றனர். ஆனால் பெண்களுக்கு மாறாக ஆண்கள் காட்டுப் பகுதியில் கிடைக்கும் கச்சாப் பொருள்களை நெருப்பின் துணைகொண்டு, பெண்ணின் உருவகமான சக்கரம் (அல்லது ஒரு சுழற்சித் தளத்தில் மீண்டும் மீண்டும் ஒரு தொடர்பு இயக்கமாக உள்ள ஏதாவது ஒரு கருவியின் துணையுடன்) மறுஉற்பத்தியை நாடாத, நீண்ட காலத்திற்கு உழைக்கும் பொருள்களைச் செய்கின்றனர் (மேற்படி, 331).

ஆக, இவ்விரு வேறுபட்ட பொருள் உற்பத்தித் தொழிலில் ஆணுக்குத் துணையாகப் பெண்ணும் பெண்ணுக்குத் துணையாக ஆணும் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ சார்ந்திருக்கின்றனர். இதற்கு எடுத்துக்காட்டாக மண் சார்ந்த உற்பத்தித் தொழிலைக் கொள்ளலாம்.

### மண்பாண்டத் தொழில் - பால்பாகுபாடு

இத்தொழில்முறையில் ஆண்கள் முதன்மையானவர்களாகவும் பெண்கள் அவர்களுக்குத் துணையானவர்களாகவும் செயல்படுகின்றனர். இதில் இன்னின்ன வேலைகள் ஆணுக்கானவை இன்னின்ன வேலைகள் பெண்களுக்கானவை என்றும், சில வேலைகள் ஆண், பெண் இருபாலரும் செய்யலாமென்றும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வேலைப் பகிர்வினை இத்தொழில் செய்வதற்கு முதன்மையானவர்களாகக் கருதப்படும் ஆண்களுடன் நடத்தப்பட்ட உரையாடலைச் சற்று உற்றுநோக்கினால் அறிந்துகொள்ள இயலும்.

மண் சார்ந்த புழங்குபொருள் உற்பத்தியில் சக்கரத்தில் பொருள் வனைதல் என்பதே பிரதானமாகக் கருதப்படுகின்றது. இவ்வேலையை ஆண்கள் செய்கின்றனர். பெண்கள் அவர்களுக்கு உறுதுணையாக இருக்கின்றனர். இது தவிர்த்து, பெண்களுக்கான வேலைகளாகக் கொந்து கோல்போடுதல், செம்மண் பூசுதல் முதலான அலங்கார வேலைகளைக் குறிப்பிட முடியும். எனவே இம் மண்பாண்ட உற்பத்தித் தொழிலுக்கான முதன்மை நிலையில் இருக்கும் ஆண்களை அணுகி நேர்காணல் செய்தபோது, அவர்கள் தகவல் கூறும் முறையிலிருந்து இத்தொழிலில் ஆண், பெண்களுக்கான வேலைப் பகிர்மானங்களையும் அவர்களுக்குள்ளான கூட்டுழைப்பின் அவசியத்தையும் ஆய்வாளரால் அறிய முடிந்தது. அதாவது தொழிலின் தொடக்க நிலையிலிருந்து இறுதி நிலை வரைக்குமான வேலைகளைப் பற்றித் தகவலாளி விவரிக்கையில், சக்கரத்தில் பொருள் வனைதல், அதைத் தட்டுக்கட்டையால் தட்டுதல் முதலான வேலைகள் குறித்துக் கூறும்போது செய்வேன், தட்டுவேன் என்று தன்மையிலும் செம்மண் பூசுதல், கொந்துகோலால் அலங்காரம் செய்தல் முதலான வேலைகள் குறித்துக் கூறும்போது பூசுவார்கள், செய்வார்கள், தேய்ப்பார்கள் என்று முன்னிலையிலும் மண் காயவைத்தல், கரைத்தல், வனைந்த பாண்டங்களைக் காயவைத்தல், சூளை அடுக்குதல் முதலான வேலைகள் குறித்துக் கூறும்போது செய்வோம் என்று படர்க்கையிலும் குறிப்பிடுவதனைக் கொண்டு ஆண் மற்றும் பெண்களுக்கான தனித்தனியான வேலைகளும் இருவரும் சேர்ந்து செய்யும் வேலைகளையும் வகைப்பிரித்து அறியலாம்.

### *ஆண்களுக்கான வேலை*

மண்பாண்ட உற்பத்தித் தொழிலுக்குரிய முதன்மையான வேலைகளை ஆண்களே செய்கின்றனர். இத்தொழிலுக்குத் தேவையான மூலப்பொருளான களிமண்ணை ஊர்ப்புறத்தே உள்ள ஏரியிலிருந்து எடுத்து வருகின்றனர். பிறகு மண்களத்தில் ஊறவைக்கப்பட்ட களிமண்ணை மிதித்து பொருள் வனைவதற்கேற்ப இலகுவாக்குகின்றனர் (இத்தொழிலில் இந்நுட்பம் இவர்களுக்கு மட்டுமே தெரிந்திருக்கின்றது). இலகுவாக்கிய களிமண்ணைச் சக்கரத்தில் இட்டு மண்பாண்ட வகைகளை உற்பத்தி செய்கின்றனர். பிறகு அதைத் தட்டுக்கட்டையால் தட்டி முழு உருவத்திற்குக் கொண்டு வருகின்றனர். இதில் சக்கரம் என்பது மறுஉற்பத்தியின் குறியீடாகவும் அதில் உற்பத்தி செய்யப்படும் பானையானது பெண்ணினுடைய கருப்பையின் குறியீடாகவும் மானிடவியல் ஆய்வாளர்கள் குறிப்பர். இதை, வாழ்வியற்தத்துவத்தின் அடிப்படையில் நோக்கினால் ஆண்கள், பெண்களின் துணையோடு மறு உற்பத்திக்கான வேலைகளைச் செய்பவர்களாக இருக்கின்றனர். இதற்கு அடுத்தபடியாக மண்ணால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைச் சூளையிலிட்டுச் சுட்டுத் திடப்படுத்தும் நெருப்போடு தொடர்புடைய வேலையையும் ஆண்களே செய்கின்றனர். இதற்கான எரிபொருளையும் ஆண்களே ஊர்ப்புறத்திலிருந்து சேகரிக்கின்றனர். இதற்குப் பெண்கள் உறுதுணையாக இருக்கின்றனர்.

இத்தொழிலில் ஆண்களால் செய்யப்படும் இவ்வேலைகள் அனைத்தும் கடின உடலுழைப்புச் சார்ந்ததாகவும் அதாவது, வன்மையானதாகவும் நெருப்போடு தொடர்புடையதாகவும் அமைந்திருக்கிறது. இத்தன்மையை முன்னர்க் குறிப்பிட்டபடி ஆண்களுக்கான குறியீடாகக் கொள்ளலாம்.

### *பெண்களுக்கான வேலைகள்*

இத்தொழிலில் பெண்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கும் வேலைகளனைத்தும் நீரோடு தொடர்புடையதாகவும் மிகுதியான அளவு உடலை வருத்துவதற்கான அவசியம் இல்லாமல் சற்று எளிமையானதாகவும் இருக்கிறது. ஊர்ப்புறத்திலிருந்து ஆண்களால் கொண்டு வரப்பட்ட களிமண்ணை ஒவ்வொருநாளும் தொழில் செய்வதற்குத் தேவையான அளவு களிமண்ணைப் பட்டறையிலிருந்து பிரித்தெடுத்து அதனை வெயிலில் காயவைத்து, சிறு சிறு துணுக்குகளாக நறுக்கி, பிறகு அதைத் தண்ணீர் விட்டு ஊறவைக்கின்றனர். இதனை, வன்மையான ஒன்றை மென்மையானதாக மாற்றும் பெண்ணின் தன்மையோடு தொடர்புடைய செயல்பாடாகக் கொள்ளலாம். அடுத்தபடியாக, பொருள் உற்பத்தியில் ஆணுக்குத் துணையாக இயங்குதல். தென்தொண்டை மண்டலப் பகுதியில் செய்யப்படும் மண்பாண்ட உற்பத்தித் தொழில்முறையில் சக்கரத்தின் உதவியால் பொருள் உற்பத்தி செய்யும்போது அதற்கு ஏதுவாக அச்சக்கரத்தைச் சுழற்றி விடுபவர்களாகப் பெண்கள் இருக்கின்றனர். அதாவது மறுசுழற்சியின் குறியீடான பெண்ணின் துணையோடு உற்பத்திக்கு வித்திடும் ஆணின் செயல்பாட்டிற்கு ஏற்றவாறு பெண்கள் ஒத்துழைப்பதாக இச்செயல்பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை நல்ல பதத்துடன் காயவைத்து பேணிக்காக்கும் பணி பெண்களுக்கானதாக இருக்கின்றது. மேலும் அப்பொருளை அழகுபடுத்தும் நோக்கோடு செம்மண் பூசும் வேலையும் பெண்களுக்கு உரித்தானதாக இருக்கிறது. இதனைத் தொடர்ந்து இவ்வுற்பத்தித் தொழிலில் அடுத்தடுத்து இது போன்ற மென்மைத் தன்மையுடைய, நீரோடு தொடர்புடைய வேலைகளும் பெண்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளன.

## மண்பாண்டத் தொழிலுக்கான பருவ காலங்கள்

மண்சார்ந்த பொருள் உற்பத்திக்கு உகந்த பருவகாலமாக வெயில்காலம் குறிப்பிடப்படுகின்றது. வருடத்தின் ஒரு பாதி வெயில்காலம் என்றால் மறுபாதி மழைக்காலமாகும். வெயில் காலம் முழுக்க மண்பாண்ட உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் குயவர்கள் மழைக்காலத்தில் தங்களின் தொழிலில் சுணக்கம் ஏற்பட்டு விடுவதாகக் குறிப்பிடுகின்றனர். இதை மெய்ப்பிக்கும்படியாக,

*ஆறு மாசம் விடாம வேலை செய்தா*
*ஆறு மாசம் உட்கார்ந்து சாப்பிடலாம்*

*(டி.லோகநாதன்; பி.இ.4:80)*

என்ற பழமொழியும்

*ஆறு மாசம் மிச்ச சோறு*
*ஆறு மாசம் பிச்ச சோறு*

*(கெம்பு உடையார்; பி.இ.4:38)*

என்ற பழமொழியும் வழக்கில் இருக்கின்றன. இருப்பினும் குயவர்கள் மழைக்காலங்களிலும் தொடர்ந்து தொழில் செய்வதற்கான தொழில்நுட்பம் அறிந்தவர்களாக இருந்திருக்கின்றனர். இதுகுறித்து இவ்வியலின் தொடக்கத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றது.

## மண்பாண்டத்தொழில் - உற்பத்திப்பொருள்கள்

மண்ணால் உற்பத்திசெய்யப்படும் புழங்குபொருள்களை இரண்டு வகையாகப் பகுத்தறியலாம். அவை,

1. அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள்
2. சடங்குப் பொருள்கள்

என்பனவாகும்.

### *அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள்*

அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான அத்தனை புழங்குபொருள்களும் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள். தொடக்க காலத்திலிருந்து இவ்வாறான தேவையைக் கல், மண், மரம், இரும்பு முதலான மூலப்பொருள்களைக் கொண்டு நிறைவு செய்யப்பட்டிருக்கின்றன. அதற்கான நீட்சியை இன்றைக்கும் காண முடிகின்றது. இது மனிதனுக்கான மரபான அறிவு. தற்போது இவ்வறிவு நவீன இயந்திரங்களின் வரவால் நீர்த்துப் போயிருக்கின்றது. அதிலும் குறிப்பாக மண்ணாலான புழங்குபொருள்களின் பயன்பாடு வெகுவாகக் குறைந்து காணப்படுகின்றது.

மண்சார்ந்த அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களை அடுகலம், உண்கலம், நீர்க்கலம் என்ற மூன்று வகைக்குள் அடக்கிவிட இயலும்.

### *அடுகலம்*

அடுப்பிலிட்டு சமைப்பதற்குப் பயன்படும் கலன்கள் அனைத்தும் அடுகலம். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி இதற்குச் 'சமையற் பாத்திரம்' என்று பொருள் கூறுகின்றது. இதில் 'கலம்' என்ற சொல் மிகவும் பழமையானது.

மண்ணாலான புழங்குபொருள்கள் நீர், நெருப்பு ஆகிய இருவிதமானப் பயன்பாட்டிற்கும் ஏற்றதாக இருக்கின்றன. ஆகையால் வீட்டிற்குத் தேவையான பெரும்பாலான புழங்குபொருள்கள் மண்ணால் செய்யப்பட்டிருக்கின்றன. அதிலும் குறிப்பாகச் சமையல் கலங்கள்.

'சமையல்' என்பது சுவையோடு சம்பந்தப்பட்டதொரு செயல். பல பொருள்களை வேண்டுமான விகிதாச்சாரத்தில் சேர்த்து சமைப்பதற்கான

அடிப்படை. ஆதலால், இச்சுவைத்தன்மை குன்றாமல் அவற்றை முழுமையாகத் தரும் தன்மை மண்ணாலான பொருள்களுக்கு உண்டு என வெகுமக்கள் நம்புகின்றனர். ஆகையால் அவ்வாறான சமையற் கலன்களை அவர்கள் குயவர்களின் உதவியால் மண்ணால் செய்து பெறுகின்றனர். அலுமினியம், ஸ்டீல் பாத்திரங்களின் வருகைக்கு முன்னர் ஒவ்வொரு வீட்டிலும் மிகுதியான அளவு மண்ணாலான சமையல் கலங்கள் இருந்திருக்கின்றன. இதை இலக்கிய மற்றும் வழக்காற்றுத் தரவுகளைக் கொண்டு அறிய முடிகின்றது. இவற்றில் பெரும்பாலான மண்பாண்டத்திற்கான இடத்தை மேற்கூறிய அலுமினியம், ஸ்டீல் பாத்திரங்கள் கையகப்படுத்திக் கொண்டதால் மண்ணாலான அவ்வகையானப் பயன்பாட்டுப் பொருள்கள் வழக்கொழிந்து போயின. ஏனெனில் ஸ்டீல், அலுமினியப் பாத்திரங்கள் கையாளுவதற்கு எளிதானவை. எளிதில் உடைந்துவிடும் தன்மையற்றவை. கவர்ச்சிகரமான தோற்றமுடையவை. ஆனால் மண்ணாலான சமையல் பாத்திரங்கள் எளிதில் உடைந்துவிடும் தன்மையுடையது. சற்று கனமாயிருப்பதால் கையாளுவதில் சிரமம் ஏற்படுகிறது. ஆதலால் அவை வழக்கொழிந்து போயிருக்கலாம். இருப்பினும் 'சுவையோடு தொடர்புடைய' சில சமையலுக்கு மண்ணாலான பாத்திரங்களே பயன்படுத்தப்படுகின்றன. அது அச்சமையலுக்கான தனித்துவம். எனவேதான் அவ்விடத்தைப் பிற நவீன சமையல் பாத்திரங்களால் கைப்பற்ற இயலவில்லை. அந்த வகையில் சில மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்கள் தற்போது வரை புழக்கத்திலிருக்கின்றன. அவை மீன்குழம்பு சமைப்பதற்கான சட்டி, கருவாட்டுக் குழம்பு சமைப்பதற்கான சட்டி, பருப்பு மற்றும் கீரை கடைவதற்கான சட்டி, மோர்ப்பானை, தண்ணீர்ப்பானை, உணவு உண்பதற்கான 'சிப்பி', ஆப்பச்சட்டி, தோசைக்கல், வானல் (கடாய்), பனியாரச்சட்டி முதலானவைகளாகும். இவ்வாறான சிறப்புத்தன்மை கொண்ட மண்ணாலான புழங்குபொருள்கள் சில மட்டுமே தற்போது புழக்கத்திலிருக்கின்றன. இவை தவிர்த்த மற்ற எல்லா விதமான பயன்பாட்டிற்கும் அலுமினியம், ஸ்டீல் முதலான நவீனத்தன்மை கொண்ட புழங்குபொருள்களே பயன்படுத்தப்படுகின்றன.

***சட்டி***

மிகுதியான பயன்பாட்டில் இருக்கும் ஓர் அடுகலன் சட்டி. இது சுவையுடன் தொடர்புடைய உணவுகளைச் சமைத்தலுக்கான கலம். முன்பு கூறியது போல் மண்ணுக்கும் சுவைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இயற்கையான மண்ணிலிருந்து உற்பத்தி செய்யப்படும் கலனான சட்டியில் இயற்கை விளைபொருளை இட்டு சமைத்தால் கூடுதல் சுவை கிடைப்பதாக வெகுமக்கள் கருதுகின்றனர். அதே போல் மண்ணாலான அடுகலன்களுக்குச் சுவையை உட்கிரகிக்கும் தன்மை இருக்கிறது. ஆதலாலேயே பல்சுவை அறிவுமிக்க முன்னோர்கள் வகை வகையான சுவைக்கு ஏற்றவாறு பலவகையான சட்டிகளைப் பயன்படுத்தியிருக்கின்றனர். கருவாட்டுச்சட்டி, கறிக்குழம்புச் சட்டி, பூசணிக்காய்ச்சட்டி, புடலங்காய்ச் சட்டி, பருப்புச்சட்டி (கல்ச்சட்டி), கூழ்ச்சட்டி,

சலாச்சட்டி, ஆப்பச்சட்டி, பனியாரச்சட்டி என்று பல வகையான சட்டிகள் புழக்கத்திலிருக்கின்றன (பி.இ.5:160-162). இவை ஒவ்வொன்றும் பயன்பாட்டு நோக்கில் வகைப்படுத்தப்பட்டவை என்றாலும் அந்தந்த சமையல் செய்முறைக்கு ஏற்றவாறு வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.

### குழம்புச் சட்டி

'குழம்பு' என்பது பல்சுவையின் சேர்க்கை. இது ஒரு துணைமை உணவு. இதை சமைக்கப் பயன்படும் மண்ணாலான அடுகலனை 'குழம்புச்சட்டி' என்ற பொதுச்சொல்லால் குறிப்பர். ஒரு சில சுவைகள் வேறு சில சுவைகளைக் குன்றச் செய்யும் தன்மையுடையன. ஆதலால் மேற்கூறியதுபோல் சுவையின் வகையை வைத்து இதனை மூன்று வகையாகப் பாகுபடுத்தியிருக்கின்றனர். அவை 1. கருவாட்டுக்குழம்புச் சட்டி 2. கறிக்குழம்புச் சட்டி, 3. பருப்புக்குழம்புச் சட்டி. இதில் தற்போது கருவாட்டுக்குழம்புச் சட்டி மட்டுமே வழக்கத்திலிருக்கின்றது. மற்றவற்றை அரிதாகவே காணமுடிகின்றன.

### கருவாட்டுக்குழம்புச் சட்டி

அசைவ உணவு வகைகளில் கருவாட்டிற்குத் தனித்த சுவையும் வாசமும் உண்டு. ஆதலால் கருவாடு சமைத்த கலனில் மற்ற குழம்பு வகைகள் சமைத்தால் அதற்கான சுவை முழுமையாக வெளிப்படாது. குலைந்து விடும். ஆதலால் கருவாட்டுக் குழம்பிற்கெனத் தனித்த கலனைப் பயன்படுத்துவதாக வெகுமக்கள் வட்டாரம் தெரிவிக்கின்றன.

தமிழர் உணவு முறையில் கருவாட்டிற்குத் தனித்த இடமுண்டு. இதுவே அவர்களுக்கான தனித்துவம். தெய்வங்களுக்கு 'கருவாட்டுக் குழம்பு' சமைத்து படையலிடும் வழக்கம் தற்போது வரை நடைமுறையில் இருப்பதே இதற்கான சான்று.

### கறிக்குழம்புச் சட்டி

இறைச்சி என்பது தமிழர் உணவு முறைகளில் இரண்டறக் கலந்த ஒன்று. மரக்கறி உணவு என்பது வளர்ந்த வேளாண் சமூகத்திற்குப் பின்னானது. ஆனால் இறைச்சி உணவுக்கான ஆதி அறிய இயலாது. ஆனால் அதற்கான நீட்சியை இன்றளவும் மக்களிடையே காண முடிகின்றது. இதை அதற்கெனத் தனித்துப் பயன்படுத்தும் 'கறிக்குழம்புச் சட்டி' என்ற கலவகைதனைக் கொண்டு அறியமுடிகின்றது.

இக்கலனின் வாய் அகன்றதாகவும் அடிப்பகுதி அழுத்தமானதாகவும் காணப்படுகின்றது. 'கறி' வேகவைப்பதற்கு அதிகமாகச் சூடேற்ற வேண்டியிருக்கும் காரணத்தால் இவ்வாறு செய்யப்பட்டிருக்கலாம். இச்சட்டியில் கறி உணவுவகை தவிர்த்து மற்றவை சமைக்கப்பட்டிருக்கவில்லை.

### பருப்புக்குழம்புச் சட்டி

மரக்கறியைப் பயன்படுத்தி குழம்பு சமைக்கும் கலனை 'பருப்புக்குழம்புச் சட்டி' என்பர். எல்லா வகையான மரக்கறிக்கும் ஒரே சட்டியைப் பயன்படுத்துகின்றனர். பெரும்பாலான மரக்கறி உணவு வகைகளின் சுவைகள் ஒன்றை ஒன்று ஒத்தவை என்பதே இதற்குக் காரணம்.

இவ்வகைச் சட்டி அரைவட்ட வடிவிலான உருவத்தை அகன்ற வாயினையும் உடையதாயிருக்கின்றது. பயன்பாட்டு நோக்கில் கொள்ளளவினை மையமாக வைத்துத் தேவைக்கேற்ப ஒன்றிற்கு மேற்பட்ட சட்டிகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. இவை மண்ணாலான கலன் என்பதால் அதிகப்படியாகச் சூடேற்ற வேண்டியிருக்கிறது. மர விறகினைப் பயன்படுத்தி சமைத்த காலகட்டத்தில் இது சாத்தியமாயிற்று. ஆதலால் அப்போது இம்மாதிரியான பொருள்கள் புழக்கத்திலிருந்திருக்கின்றன. ஆனால் தற்போது கையாளுவதற்கு எளிதாகவும் சூட்டினை எளிதில் உள்வாங்கும் தன்மை கொண்டதாகவும் இருக்கும் நவீன அலுமினியப் பாத்திரங்களின் வரவால் இவ்வித சட்டி வகைகள் வழக்கொழிந்திருக்கின்றன.

### சலாச்சட்டி

இது திட உணவுப் பொருள்களை வறுத்தெடுக்கப் பயன்படுத்தப்படும் புழங்குபொருள். இதன் அடிப்பகுதி சற்றுக்குழிந்து தட்டையாகவும் அதனைவிட அப்பொருளின் மேற்பகுதி வாய் அகன்று பெரியதாகவும் காணப்படுகின்றது. கையாளுவதற்கு வாகாகப் பெரிய, தடிமனான உதடு வைக்கப்பட்டுள்ளது. இதை 'போன்சட்டி' என்றழைக்கும் வழக்கம் விழுப்புர மாவட்டத்தினரிடையே இருக்கின்றது.

### கூழ்ச்சட்டி

கூழ் என்பது இம்மண்ணிற்கான உணவுப் பொருள்களுள் மிக முக்கியமான ஒன்று. இம்மண் கம்பு, கேழ்வரகு, சோளம் முதலான தானிய வகைகள் விளைவதற்கேற்ற தட்பவெப்பச்சூழலைக் கொண்டிருக்கிறது. ஆதலால் அவை இம்மண்ணில் வாழும் மக்களுக்கான உணவுப்பொருள்களில் பெரும்பங்கு வகிக்கின்றது. எனவே அவர்களுக்கான அன்றாட வாழ்வில் கூழ் நீக்கமற்ற ஒன்றாக இடம்பெற்றிருக்கின்றது. ஆகையால் அதைச் சமைக்கும் கலனும் அப்பயன்பாட்டிற்கேற்பக் குயவர்களால் வடிவமைக்கப்பட்டிருக்கிறது.

சின்னதும் பெரியதுமான அளவினை மையமாக வைத்து இது மூன்று மற்றும் நான்கு வகைகளில் உற்பத்தி செய்யப்படுகின்றது. இச்சட்டிக்கான வடிவமே 'சட்டி' என்ற பொதுச்சொல்லுக்கான வடிவமாக இருக்கின்றது. வட்டமான வயிற்றுப்பகுதியுடனான இக்கலனுடைய வாய் சற்று அகலமாக இருக்கிறது. அதனுள் மரத்துடுப்பு துழாவி சுழன்று வருமளவிற்கு வாய்ப்புறத்தினைக் கொண்டிருக்கின்றது.

**ஆப்பச்சட்டி**

இது ஒருவகையான அடுகலன். ஆப்பம் செய்வதற்கு ஏற்ப வனையப்பட்ட சிறப்பான வனைவு என்பதால் இப்பெயர் பெற்றது. இது மாவு வார்த்து சுழற்றுவதற்கேற்ப தடிமனான மேற்புற உதட்டினை உடையது. சற்றுக்குழிந்து காணப்படும் இக்கலன் குறைவான உயரத்தில் அகன்ற வாயுடன் கூடியதாயிருக்கிறது. இக்கலன் மற்ற மண்கலன்களைக் காட்டிலும் சற்று கூடுதல் கனமுடையதாக உற்பத்தி செய்யப்பட்டுள்ளது. இக்கலன் தற்போது புழக்கத்தில் இல்லை.

**குழிபனியாரச் சட்டி**

'குழிபனியாரம்' என்பது ஒருவகையான சிற்றுண்டி. இதைச் செய்யப் பயன்படுத்தப்படும் அடுகலனுக்கு 'குழிபனியாரச் சட்டி' என்று பெயர். இதில் அளவில் சிறியது, பெரியது என இரண்டு வகைகள் உள்ளன. சிறியது 9 குழிகளை உடையது. பெரியது 12 குழிகளை உடையது. இது சற்று கனத்திருக்கின்றது. ஆதலால் இச்சட்டியில் சமைக்க மிகுதியான தீயிட வேண்டியிருக்கிறது. அதுமட்டுமல்லாமல் கையாளுவதற்கும் கடினமாக இருப்பதால் தற்போது இவை வழக்கொழிந்து அவ்விடத்தை 'கல்ஈயப் பாத்திரங்கள்' கையகப்படுத்தி இருக்கின்றன.

*குண்டன் குழிக்குள் விழுந்துவிட்டான்*
*எலும்பன் தூக்கி விடுகின்றான் - அவன் யார்?*
*(களாய்வு; நீலாவதி (69): காணியம்பாக்கம், 18.06.2010)*

என்ற விடுகதை குழிபனியாரச் செய்முறையை விளக்குவதாக அமைந்திருக்கின்றது.

**வானல்ச்சட்டி**

இது 'எண்ணெய்ச் சட்டி' என்றும் குறிக்கப்படுகின்றது. எண்ணெயில் பலகாரங்கள் செய்ய இப்பாண்டம் பயன்படுவதால் இப்பெயர்பெற்றது. அரை வட்ட வடிவில் குழிந்து காணப்படும் மண்ணாலான இச்சட்டி தற்போது முற்றிலும் வழக்கொழிந்துப் போயிருக்கின்றது. வேலூர் மாவட்ட 'ஆற்காடு' பகுதியிலும் திருவள்ளூர் மாவட்ட, போந்தவாக்கம் பகுதியிலும் இப்பொருளை மிகுதியாகக் காணமுடிகின்றது. பழைய பயன்பாட்டுப் பொருளாகக் காணக்கிடக்கும் இப்பொருள் தற்போது பயன்பாட்டில் இல்லாததாலும், போட்டியாக அலுமினிய 'வானல்கள்' வந்துவிட்டதாலும் இதன் உற்பத்தி மிகவும் அரிதாகிவிட்டது. அலுமினிய வானல்கள் வெகு விரைவில் வெப்பத்தை உள்வாங்கி கொள்ளும் தன்மையுடையன. ஆனால் மண்கலன்கள் அவ்வாறு இல்லை. அதேபோல் மண்சட்டி எளிதில் உடைந்துவிடும் தன்மைஉடையது. ஆனால் அலுமினியச் சட்டி எளிதில் உடையாது. ஆதலால் அலுமினியச் சட்டியின் வருகைக்குப் பின் மண் வானல்சட்டியின் உற்பத்தி மறைந்து போயிருக்கலாம். தற்போது அரிதாக ஒரு சில இடங்களில் மட்டும் இதை

சிறப்பான வனைவாகக் கருதி செய்கின்றனர். இப்பொருளை 'கடாய்' என்று அழைக்கும் வழக்கமும் இருக்கின்றது.

**கல்ச்சட்டி**

சட்டியின் உள்ளிருக்கும் அடிப்பகுதியில் சிறுங்கற்பரல்களைக் கொண்டு சொரசொரப்பாக்கப்பட்டிருக்கும். இப்பகுதியே இச்சட்டியின் முக்கியப் பயன்பாட்டிற்குரியது. ஆதலால் இது 'கல்ச்சட்டி' என்றழைக்கப்பட்டிருக்கலாம். இச்சட்டி அதிகளவில் பருப்பு கடைவதற்கான பயன்பாட்டிற்குரியது என்பதால் இது 'பருப்புச்சட்டி' என்றும் அழைக்கப்படுகின்றது. இது பருப்பு, கீரை வகைகளைக் கூழ்மம் ஆக்குவதற்கான பயன்பாட்டிற்கு உரியது. திடப்பொருளாக இருக்கின்ற சுவைப் பொருள்களை வேகவைத்து, மசித்து குழம்பு உணவு வகைகளைக் கூட்டுவர். அவ்வாறு கூட்டுவதற்கான அடிப்படை தேவையாயிருப்பது 'கல்சட்டி'. எனவே தான் அரைத்தலுக்கும் மசித்தலுக்குமான நவீன இயந்திரப்பொருள்கள் (Mixi & Grinder) பல புழக்கத்திற்கு வந்த போதிலும் கிராமப்புற மக்களிடையே தற்போதும் வழக்கொழியாத புழங்குபொருளாய் விளங்குகின்றது. மண்ணாலான புழங்குபொருள் பயன்பாட்டில் தற்காலத்தில் மிகுதியான அளவில் பயன்பாட்டிலிருக்கும் பொருள்களில் 'கல்ச்சட்டியும்' ஒன்று. குயவர்கள் தற்போது இப்பொருளை மிகுதியாக உற்பத்தி செய்கின்றனர்.

தற்போது இப்பொருள் உற்பத்தி முறையில் சிறுங்கற்பரல்களுக்குப் பதிலாகச் சட்டியின் உள்ளிருக்கும் அடிப்பகுதியில் 'சொரசொரப்பான' கோடுகளை இரும்புக் கம்பி அல்லது திடமான மூங்கில் பட்டைகளைக் கொண்டு கீறும் புதுவிதத் தொழில்நுட்ப உத்தியை மேற்கொள்கின்றனர். இவ்விதத் தொழில்நுட்பத்தினைக் காஞ்சிபுர மாவட்டக் குயவர்களிடம் காண முடிகின்றது.

சக்கரத்தில் வனையப்படும் இப்பொருள் அகன்ற வாயுடையதாக இருக்கின்றது. அடிப்பகுதியிலிருந்து மேல்பகுதி வரைக்கும் வளைவற்று நேர் நிலையில் வனையப்பட்டிருக்கும் இப்பொருளுக்கான அடிப்பகுதி சற்றுக் குழிந்த நிலையில் தட்டையாக உள்ளது. இப்பொருளின் தலைப்பில் வைக்கப்பட்டுள்ள உதடு உள்நோக்கியபடி குவிந்து இருக்கிறது. மரத்தாலான 'மத்து' (அரைவட்ட கனத்தின் மையப்பகுதியின் மேல் நீண்ட கைப்பிடியுடன் கூடியது) இதற்கான துணைக்கருவி, இத்துணைக் கருவியினை 'கல்சட்டியின் உள்ளிட்டு அழுத்தி வேகமாக இழுத்துச் சுழற்றும்போது மத்துக்கும் கல்சட்டியில் உள்ள கற்பரலுக்கும் இடையிலிடப்பட்ட பொருள்கள் அரைத்து கூழ்மமாக்கப்படுகின்றன. அக்கூழ்மம் வெளிப்புறத்து தெறிக்காமல் உட்புறத்தே வழிந்து விழுவதற்கேற்ப அச்சட்டியின் உதடு உள்நோக்கியபடி அமைக்கப்பட்டிருக்கின்றது. இது பொருள் உற்பத்தி செய்வோரின் பயன்பாட்டு அறிவினைப் புலப்படுத்துவதாக அமைந்திருக்கின்றது.'

**பிறவகை சட்டிகள்**

வெவ்வேறுபட்ட சுவையுணவு சமைப்பதற்கு ஏற்ப 'சட்டி' செய்து தரும் பயன்பாட்டு அறிவுடையோர்களாகக் குயவர்கள் இருக்கின்றனர். அந்த வகையில்

பூசணிக்காய் சமைப்பதற்கான சட்டியை 'பூசணிக்காய்ச்சட்டி' என்றும் புடலங்காய் சமைப்பதற்கான சட்டியை 'புடலங்காய்ச்சட்டி' என்று பல வகையிலான சட்டிகளை உற்பத்தி செய்துதருகின்றனர். இது பயன்பாட்டினை மையமிட்டு அக்கலனுக்கு இடப்பட்ட பெயர்களாகும். இவ்வகைப்பட்ட சட்டிகள் தொழில்நுட்ப வளர்ச்சி காணாத குக்கிராமப் பகுதிகளிலேயே மிகுதியாக வழக்கத்திலிருக்கின்றன.

**தோசைக்கல்**

நமக்கான உணவுமுறையில் தோசை இடம்பெற்றபோது அதற்கான அடுகலனும் உற்பத்தி செய்யப்பட்டிருக்கலாம். 30 செ.மீ. அளவு ஆரமுள்ள வட்ட வடிவிலான இவ்வடுகலன் தட்டையாகவும், இதன் சுற்றுப் பகுதிகளில் தடிப்பான உதட்டினைக் கொண்டதாகவும் வடிவமைக்கப்பட்டிருக்கின்றது (பி.இ.5:162). மிகவும் அரிதாகவே பயன்படுத்தப்படுகின்ற மண்ணாலான இவ்வடுகலன் வேலூர் மாவட்டம், ஆற்காடு வட்டாரப் பகுதிகளில் புழக்கத்திலிருக்கின்றது. மண்ணாலான பொருள்களில் உணவு சமைப்பது உடல் நலத்திற்கு நல்லதெனக் கருதும் சிலரே இப்பொருளைக் குயவர்களிடம் கேட்டு வாங்கிப் பயன்படுத்துகின்றனர். இதற்கு மாற்றாக இப்பொருளை இரும்பு, வார்ப்படம், தாமிரம் (Copper Coating) முதலான உலோகத்தால் செய்தளிக்கும் நவீனத் தொழில்நுட்பம் வளர்ச்சியடைந்திருப்பதால் இப்பொருளை மண்ணால் செய்து பயன்படுத்தும் வழக்கம் தற்போது வெகுவாகக் குறைந்து வருகின்றது.

**ஒலமூடி (உலைமூடி)**

அடுகலன்களில் உணவு சமைக்கும்போது நீராவி வெளியே சென்றுவிடாமலிருக்க பயன்படுத்தப்படும் மண்ணாலான புழங்குபொருள் ஒலமூடி (பி.இ.5:162). அகன்ற மிகப்பெரிய உதட்டுடன் இருக்கும் இதன் மையப்பகுதி சற்று குழிந்து காணப்படுகின்றது. இது அடுகலனுக்கு ஏற்றவாறு, வெவ்வேறு அளவில் செய்யப்படுகின்றன. விழுப்புரம், திருவண்ணாமலை மாவட்டத்தினரிடையே புழக்கத்திலிருந்த இப்பொருள் குயவர்களால் தற்போது அரிதாகவே உற்பத்தி செய்யப்படுகிறது. ஆதலால் இப்பயன்பாட்டுப் பொருளை மிகவும் அரிதாகவே காணமுடிகின்றது. தற்போது இப்பொருளின் பயன்பாட்டை எவர்சில்வர் (Steel) பாத்திரங்கள் கையப்படுத்தியிருக்கின்றன.

**மடக்கு, சாணகை, தடசிப்பு**

மண்ணால் உற்பத்தி செய்யப்படும் பல்பயன்பாட்டுப் பொருள்களுள் மடக்கு, சாணகை, தடசிப்பு என்ற இம்மூன்று பொருள்களும் உருவத்தால் ஒத்தன. வட்டாரத்திற்கு வட்டாரம் சிற்சில வடிவவேறுபாடுகளைக் கொண்டு வெவ்வேறான பெயர்களில் இவை குறிக்கப்பட்டிருக்கின்றன. தற்போது நடைமுறையில் ஒவ்வொரு வட்டாரத்திலும் இம்மூன்றில் ஏதேனும் ஒரு பொருள் மட்டுமே புழக்கத்தில் இருந்து வருகிறது. இம்மூன்று வகையான பொருள்களும்

ஒருசேர புழக்கத்திலிருப்பதைக் காண இயலவில்லை. மேலும், இம்மூன்று பொருள்களும் வெவ்வேறான பயன்பாட்டிற்குரியது என்றாலும் அதற்கான அத்தனைத் தேவைகளையும் இவற்றில் ஏதேனும் ஒரு பொருளைக் கொண்டு நிறைவு செய்துகொள்கின்றனர். ஆதலால் மற்ற இருவகைமைகளும் வழக்கொழிந்துள்ளன.

மடக்கு என்பது வட்ட வடிவில் தட்டையாகவும் அதன் மையப்பகுதியில் சற்று குழிந்தும் காணப்படுகின்றது (பி.இ.5:163). பானையின் மேல்மூடியாகப் பயன்படுத்தப்படும் அளவிற்கான அகலத்தைக் கொண்டிருக்கும் இதன் விளிம்பில் அமைக்கப்பட்டிருக்கும் உதடு சற்று உள்குவிந்தபடி மடிக்கப்பட்டிருக்கிறது. இதே வடிவத்தை ஒத்திருக்கும் சாணகையில் உதடு மடிக்கப்பட்டிருக்கவில்லை. தடசிப்பு என்பதும் இதே வடிவத்தை ஒத்திருக்கின்றது.

**வடித்தட்டு**

திரவப் பொருளிலிட்டு வேகவைக்கப்படும் திடஉணவுப் பொருளை மீண்டும் தனித்தனியாகப் பிரித்தெடுக்கப் பயன்படுத்தப்படும் பொருள் 'வடித்தட்டு' (பி.இ.5:162). இது பெரும்பாலும் சோறுசமைத்தலில் பயன்படுத்தப்படுகின்றது. வட்ட வடிவிலான இதன் உட்புறம் சற்று குழிந்து தட்டையாகக் காணப்படுகின்றது. இதில் சரியாக பாதியளவு சிறுசிறு துளையிடப்பட்டுள்ளன. மிகச்சரியாக அடுகலனில் பொருந்துவதற்கேற்ப இதன் உதடு வெளிப்புறமாக நீண்டுள்ளது. மேலும் இதை, சூடான தருணத்தில் பயன்படுத்தும்போது எளிமையாகக் கையாளுவதற்கேற்ப இதில் 2 அங்குலம் அளவிற்கு மேல்நோக்கிய வரம்பு வைக்கப்பட்டுள்ளது. இப்புழங்குபொருளை 'வடித்தட்டு' என்று சொல்லுவதே பெருவழக்காக உள்ளது. இதை 'சில்தட்டு' எனும் வழக்கம் திருவள்ளூர் மற்றும் காஞ்சிபுரம் மாவட்டத்தினரிடையே காணப்படுகின்றது.

'சில்லு' என்றால் சிறியது என்று பொருள். சிறுசிறு ஓட்டைகளை உடைய பொருளாதலால் இது 'சில்தட்டு' என்றழைக்கப்பட்டிருக்கலாம். மண்ணாலான இப்பொருள் தற்போது மிகுதியான அளவு உற்பத்தி செய்யப்படுவதில்லை. ஆகையால் அரிதாகவே புழக்கத்திலிருக்கின்றன. இதற்குப் பதிலாக அலுமினியம், எவர்சில்வரால் ஆன வடித்தட்டுகள் பயன்படுத்தப்படுகின்றன. இவை கையாளுவதற்கு எளிதானவை. எளிதில் உடையாதவை என்பதும் நீண்ட காலத்திற்குப் பயன்படுத்தமுடியும் என்பதும் இம்மாற்றத்திற்கான காரணமாயிருக்கிறது.

**கலவோடு**

மண்கலன்களைத் தரைப்பகுதியில் ஓரிடத்தில் நிலையாக நிற்கச்செய்யப் பயன்படுத்தப்படும் பொருள் கலவோடு. இது நான்கு விறற்கிடை அளவு உயரமுடைய வட்ட வடிவிலான மெல்லிய சுற்றினை உடையது. ஆதலால் 'ஓடு' எனப்பட்டிருக்கலாம். இது மண்ணால் உற்பத்தி செய்யப்படும் ஒரு பொருள். இது இரண்டு வகையான பயன்பாட்டிற்குரியது. ஒன்று, விறகினைக் கொண்டு

எரித்து சமையல் செய்யும்போது அதிலிருந்து வெளிப்படும் தீச்சுவாலைகள் அதில் பயன்படுத்தப்படும் அனைத்து அடுகலன்களிலும் சுடராகப் படிந்திருக்கும். அக்கலன்களை அடுப்பிலிருந்து அப்படியே இறக்கி வைத்தால் புழங்குகின்ற வீட்டின்கண் தரைப்பகுதியில் அக்கரிச்சுடர் ஒட்டிக்கொள்ளும். ஆதலால் அவ்வாறு ஆகாமலிருக்க கலவோடு வைத்து அதன்மேல் அடுகலனை இறக்கி வைப்பர். இது தவிர்த்து இன்னொரு வகையான பயன்பாடும் இக்கலவோட்டிற்கு உரித்தானது. மண்ணால் உற்பத்தி செய்யப்படுகின்ற பெரும்பாலான பொருள்கள் வட்டமான வயிற்றினை உடையன. ஆதலால் அவற்றைத் தரையில் நிலையாக நிற்க வைக்க இயலாது. எனவே அவற்றைக் கலவோட்டின் உதவியோடு நிற்க வைப்பர். இம்முறை திருமணச் சடங்கிலும் மேற்கொள்ளப்படுகின்றது.

'ஆசாரி' (தச்சர்)களின் திருமணச் சடங்கில் வைக்கப்படும் கல்யாணப் பானைகள் உள்ளிட்ட அனைத்து மண்பாண்டங்களுக்கும் அடியில் கலவோடு வைக்கும் வழக்கம் தற்போது நடைமுறையில் இருக்கின்றது.

## அடுப்பு

மனிதன் நிலையாக வாழத் தொடங்கியதன் குறியீடு அடுப்பு. இது உணவு சமைப்பதற்காகப் பயன்படுத்தப்படும் ஒருவகை எரியூட்டுக்கலன். அடுப்பின் மீது கால்தவறிப் பட்டுவிட்டால் உடனே அடுப்பினைத் தொட்டுக் கும்பிடும் வழக்கம் கிராம மக்களிடம் இன்றளவும் இருந்து வருகின்றது. விழாநாட்களின்போதும், இன்னபிற முக்கியமான வீட்டு நன்னிகழ்வுகளுக்குச் சமைக்கும்போதும் அடுப்பிற்கு பொட்டு வைத்து வணங்கும் வழக்கத்தினைத் தற்போதும் காணமுடிகின்றது. இது அடுப்பிற்கான தொன்மத்தைப் பிரதிபலிப்பதாகக் கொள்ளலாம்.

தீப்பெட்டி வருகைக்கு முன்னான காலக்கட்டத்தில் நெருப்பு உருவாக்கம் என்பது அரிதானதாக இருந்திருக்கின்றது. ஆதலால் அதைப் பொது இடத்தில் உருவாக்கி முப்பொழுதும் எரியவிட்டிருக்கின்றனர். தேவைப்படுவோர் அதிலிருந்து 'நெருப்பு' எடுத்துச்சென்று அடுப்பு எரிப்பது வழக்கமாக இருந்திருக்கின்றது. இவ்வளவு அரிதான, இன்றியமையாத நெருப்பினைத் தெய்வமாக நினைத்து வணங்கியிருக்கின்றனர். அதன் நீட்சியே தற்போதும் அடுப்பிற்குப் பொட்டு வைத்து வணங்கும் இவ்வழக்கம் எனக் கொள்ளலாம். இதனைத் தொடர்ந்து அடுத்தடுத்த காலகட்டங்களில் பொது இடங்களில் மிகப்பெரிய மண்ணாலான சட்டி வைத்து, அதில் நெருப்பினை உருவாக்கி பராமரித்து விநியோகிக்கும் வழக்கம் இருந்து இருக்கின்றது. நெருப்பு இருக்கும் அக்கலனை வணங்கியிருக்கின்றனர். ஆதலால் அது 'கும்பிடு சட்டி' ஆயிற்று. அந்த நெருப்புச் சட்டியைப் பராமரிக்கப் பணிக்கப்பட்டவர்களே பின்னாளில் தனிச் சமூகமாகக் 'கும்மிடிச்சட்டி' என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இவ்வித அனுமானத்திற்கு வலுசேர்க்கும் விதமாகப் பின்வரும் எட்கர் தர்ஸ்டனின் கருத்து அமைந்திருக்கிறது.

வடஆற்காடு மாவட்டக் கையேட்டில் வேளாளரின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ள கும்மிடிச்சட்டி என்பவர்கள், வேளாளரின் சாவுச்சடங்கின்போது சட்டியில் நெருப்பினை எடுத்துச் செல்பவர்கள். தமிழில் கும்பிடுச்சட்டி எனப்படுவது எப்பொழுதும் நெருப்பு எரிந்து கொண்டிருக்கும் சட்டியினைக் குறிப்பதாகும். இந்தச் சட்டிகள் சமையல் காரியங்களுக்காக நெருப்பைப் பெறவும் குளிர்காலத்தில் வயதானவர்கள் குளிர்காயவும் பயன்படுத்தப்பட்டு வந்தன (1993:146).

மரபான இயற்கை எரிபொருளுக்கேற்ப வடிவமைக்கப்பட்டிருக்கும் 'அடுப்பு' பல வகைப்பட்டன. அவற்றிற்கான எரிபொருளை மையமாக வைத்து விறகு அடுப்பு, மரத்தூள் அடுப்பு (ரம்பத்தூள் அடுப்பு) என்றும், வடிவத்தை மையமாக வைத்து சாதா அடுப்பு, ஜாங்கிரி அடுப்பு, தொட்டியடுப்பு என்றும் பயன்பாட்டுத் தேவையை மையமாக வைத்து ஒத்தை அடுப்பு, இரட்டை அடுப்பு என்றும் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன (பி.இ.5:164-165).

இயற்கை விளைபொருள்களான மரப்பொருளை எரிபொருளாகக் கொண்டமைக்கப்பட்ட அடுப்பு வகைகளில், பொதுவான பயன்பாட்டிற்கானதென ஒரு சில அடுப்புகளும், சிறப்புப் பயன்பாட்டிற்கானது என ஒரு சில அடுப்புகளும் வகைபிரிக்கப்படுகின்றன. சான்றாக, மரவிறகினை எரிபொருளாகக் கொண்டமைக்கப்பட்ட அடுப்புகள் அனைத்து விதமான சமையலுக்கும் உரித்தானது. மாறாக, மரத்தூள் அடுப்பு என்பது 'பால் காய்ச்சுதல்' உள்ளிட்ட மிதமான சூட்டில் செய்யப்படும் சமையல் வேலைக்கென வடிவமைக்கப்பட்டது. இதில் முதலாவது பொதுப்பயன்பாட்டிற்கு உரியது. மற்றது சிறப்புப்பயன்பாட்டிற்கு உரியது.

### மரத்தூள் அடுப்பு

இதற்கான எரிபொருள் மரத்தை வாளால் (ரம்பத்தால்) அறுக்கும்போது கிடைக்கும் மரத்தூள்கள், மரச்சில்லுகள் ஆகும். ஆதலால் இது மரத்தூள் அடுப்பு அல்லது ரம்பத்தூள் அடுப்பு என்றழைக்கப்பட்டிருக்கலாம். இது மிதமான சூட்டில் சமைப்பதற்குப் பயன்படுத்தப்படுவது. ஆதலால் இதற்கான எரிபொருள் எளிமையானதாயிருக்கிறது. மரத்தூள் அடுப்பிற்கான பயன்பாடு தொண்டை மண்டல வட்டாரத்திலுள்ள எல்லாப் பகுதிகளிலும் இல்லை. வந்தவாசி, காஞ்சிபுரம் உள்ளிட்ட வட்டாரங்களிலேயே இவ்வித அடுப்பு பயன்பாட்டிலிருக்கின்றது. இதற்கு மாற்றாக மிதமான சூட்டில் செய்ய வேண்டிய சமையல்களைச் சாதாரண விறகு அடுப்பில் 'வறட்டி எரித்து' செய்கின்றனர். இம்முறையில் பால்காய்ச்சும் வழக்கம் விழுப்புரம் மாவட்டப் பகுதிகளில் காணப்படுகின்றது. மேலும் ரம்பத்தூள் தட்டுப்பாடு இருக்கும் பரவலான ஒருசில இடங்களில் இம்மாதிரியான மாற்று மேற்கொள்ளப்படுகின்றது. கால்நடைகளே இம்மண்ணிற்கான மரபான செல்வங்கள் என்பதால் வறட்டிக்கு எப்பகுதியிலும் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கவில்லை. மேலும் வறட்டி எரித்து பால் காய்ச்சி, தயிராக்கி, மோர் கடைந்தால் அதிகப்படியான வெண்ணை திரண்டு வரும் என்று

நம்புகின்றனர். ஆதலால் பால் காய்ச்சுவதற்கு இவ்வெறியூட்டு முறையே இப்பகுதிகளில் மிகுதியாகக் கையாளப்படுகின்றது.

### கரி அடுப்பு

மரக்கரியை எரிபொருளாகக் கொண்டு இயங்கும் அடுப்பு மரக்கரி அடுப்பு. மிதமான சூடு நெடுநேரம் தேவைப்படும்போது இவ்வடுப்பு பயன்படுத்தப்படுகின்றது. இது 'பால் காய்ச்சுதல்', வெந்நீர் வைத்தல் முதலான தேவைகளுக்கு மிகுதியான அளவு பயன்படுத்தப்படுகின்றது.

கையால் வனையப்படும் இவ்வடுப்பு உள்ளீடற்ற நிலைக்குத்தான உருளை வடிவில் உள்ளது. மேல் கீழ் என இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளதில் கீழ் பிரிவின் முன்பக்கம் வாய்ப்பகுதி அமைந்துள்ளது. மேல் பகுதியின் சுற்று முழுவதும் அடைக்கப்பட்டு அதன் உச்சி திறந்த நிலையில் உள்ளது. இதன் மேற்புற விளிம்பில் மூன்று 'கொம்மைகள்' வைக்கப்பட்டுள்ளன. (கொம்மை என்பது அடுகலன் சீராக நிற்பதற்கான மண்குமிழ்) மேல்பகுதியின் உச்சித்திறப்பு வழியாக, மரக்கரியைப் போட்டு அதனில் நெருப்பு உண்டாக்கி அதைக் கங்காக மாற்றிவிடுவர். அவ்வாறான கங்கு அணையாமல் இருக்க அந்த மேற்பகுதியின் சுற்றில் சிறு சிறு துளைகள் இடப்பட்டுள்ளன. இதன் வழியாக சீரான காற்று உள்ளே வரும்போது கங்கு கனன்று கொண்டே இருக்கும் என்ற குயவர்களின் பயன்பாட்டு தொழில்நுட்ப அறிவினை இது கொண்டு அறிய முடியும். இதே மாதிரியான துளைகள் மேல் பிரிவிற்கும் கீழ் பிரிவிற்கும் இடையே உள்ள தடுப்பில் இடப்பட்டிருக்கின்றன. இது மேல்பகுதியில் உள்ள கங்கு நீருபூக்கும்போது உதிரும் சாம்பல்கள் இதன் வழியாகக் கீழ்ப்பகுதியை வந்தடைகின்றன. அவ்வாறு கீழ்ப்பகுதிக்கு வந்த சாம்பல்களை வெளியேற்றுவதற்காகக் கீழ்ப்பகுதியில் வாயில் அமைக்கப்பட்டுள்ளது. இத்தகைய அமைப்பினை உடைய இவ்வடுப்பிற்கான எரியூட்டுப் பொருள் மரக்கரி. அதனை அடிப்படையாகக் கொண்டே இவ்வடுப்பு அமைப்பாக்கம் செய்யப்பட்டுள்ளது. விறகு எரிக்கும் எல்லாப் பகுதிகளிலும் மரக்கரி கிடைக்கும். மரக்கரியை எரிபொருளாகக் கொண்ட இம்முறை தொண்டை மண்டல வட்டாரத்தில் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றது. பெரும்பாலும் 'தேநீர்க் கடைகளில்' இவ்வடுப்புப் பயன்படுத்தப்படுகின்றது. தேநீர் கடைகளில் தற்போது இதற்கு மாற்றாகச் செம்பாலான கொதிகலன்கள் (Boiler)கள் பயன்படுத்துகின்ற போதிலும், தனியொரு குடும்பப் பயன்பாட்டில் வெந்நீர், பால், தேனீர் முதலானவற்றைக் காய்ச்சுவதற்கு மண்ணாலான இக்கரி அடுப்பினையே பயன்படுத்துகின்றனர்.

### தொட்டியடுப்பு

இவ்வடுப்பின் மேற்பரப்பு அடுகலனைத் தாங்குவதற்கு ஏற்ப அகன்று, வட்ட வடிவில் தொட்டியின் வாயினை ஒத்திருப்பதால் இது 'தொட்டி அடுப்பு' என்று வழங்கப்பட்டிருக்கலாம். இவ்வடுப்பின் ஒட்டுமொத்த வடிவம் என்பது உடுக்கையை ஒத்திருக்கின்றது. இடைப்பகுதி குறுகியும் அடிப்பகுதியும்

மேற்பகுதியும் அதைவிடச் சற்று அகன்றும் காணப்படுகின்றது. அடிப்பகுதி மூடியும், மேற்பகுதி திறந்தும் இருக்கும் இவ்வடுப்பின் சுற்றுப்பகுதி மேற்கூறியபடி உடுக்கை வடிவில் உருவாக்கப்பட்டிருக்கின்றது. இவ்வடுப்பின் மேற்புறத் திறப்பில் மூன்று அல்லது நான்கு 'கொம்மைகள்' வைக்கப்பட்டுள்ளன. மேலும், கீழ் இடையின் முன்பகுதியில் இவ்வடுப்பிற்கான வாய்ப்புறம் வடிவமைக்கப்பட்டுள்ளது. சற்று கனமான சுவற்றினைக் கொண்டிருக்கும் இவ்வடுப்பு எங்கு வேண்டுமானாலும் இடம்பெயர்த்து எடுத்துச்செல்ல ஏதுவானதாக இருக்கின்றது.

தொண்டை மண்டல வட்டாரத்திலுள்ள அத்தனைக் கிராமங்களிலும் இவ்வடுப்பு புழக்கத்திலிருக்கின்றது. அடுப்பு வகைகளில் அதிகப்படியான பயன்பாட்டிற்குரிய இதனைக் குயவர் சமூகத்துப் பெண்களே அதிகமாக உற்பத்தி செய்கின்றனர். விறகினை எரிபொருளாகக் கொண்டவர்கள் இதனை விரும்பி வாங்கிச் செல்கின்றனர். ஏனெனில் இது சற்றுத் தடிமனாகச் செய்யப்பட்டிருப்பதால் அவ்வளவு எளிதில் உடையாது. மேலும் சற்று பெரிய அடுகலன்களிட்டு சமைக்க ஏதுவாயிருக்கும் என்பதே பயன்பாட்டாளர்கள் இதனை மிகுதியாகப் பயன்படுத்துவதற்கான காரணமாகக் குறிப்பிடுகின்றனர்.

**சாதாரண அடுப்பு**

எவ்விதமான சிறப்புக் கூறுகளுமற்று எரிகலனுக்கான ஒரு பொத்தாம் பொதுவான வடிவத்தில் அமைக்கப்பட்டிருப்பதைச் 'சாதாரண அடுப்பு' என்றழைக்கின்றனர். இது தனித்து கையாளுவதற்கு ஏற்ற எரிகலன் அல்ல. மிகவும் மெல்லிய கணத்தில் செய்யப்பட்டிருக்கும் இது வீட்டுச் சமையலறையில் நிரந்தரப் பயன்பாட்டிற்கு வேண்டிப் பொருத்தப்பட்டிருக்கின்றது. இதைப் பலப்படுத்தும் வகையில் இதைச் சுற்றிலும் மண்ணாலோ அல்லது சிமெண்ட் உள்ளிட்ட இறுகுத்தன்மை கொண்ட திடப்பொருளாலோ கணத்த திண்டு அமைக்கப்பட்டிருக்கின்றது.

இவ்வடுப்பின் வடிவம் தேவைகருதி இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. ஒத்தையடுப்பு, 2. இரட்டையடுப்பு. ஒத்தையடுப்பு என்பது ஒரு கலன் வைத்து சமைப்பதற்கான வடிவத்தையுடையது. இரட்டையடுப்பு என்பது ஒரே நேரத்தில் இரண்டு கலன் வைத்து சமையல் செய்வதற்கான வடிவமைப்புடையது. இவ்விரு எரிகலனுக்கும் அடிப்பக்கம் திறந்த நிலையிலேயே இருக்கின்றது. சீரான உள்ளீடற்ற வட்ட வடிவிலான வயிற்றுப் பகுதியினையும், முன் பகுதியின் மேலிருந்து அடிப்பகுதி வரைக்கும் திறந்த வாயினையும் கொண்டு வடிவமைக்கப்பட்டிருப்பது 'ஒத்தையடுப்பு'. இது ஓரடி அளவு உயரமுடையது. இரட்டையடுப்பு என்பது சீரான உள்ளீடற்ற நீள்வட்ட வடிவினை உடையது. இவ்வெரிகலனும் ஓரடி அளவு உயரமுடையது. இரட்டையடுப்பு என்பது சீரான உள்ளீடற்ற நீள்வட்ட வடிவினை உடையது. இது இரண்டு கலன் வைத்துச் சமைக்கும் பயன்பாட்டிற்கேற்ப வடிவமைக்கப்பட்டு இருப்பதால் இப்பெயர்

வழங்கப்பட்டிருக்கலாம். இதை 'கொடியடுப்பு' என்று கூறும் வழக்கம் விழுப்புரம், திருவண்ணாமலை வட்டாரத்தினரிடையே இருக்கிறது. இரண்டு கலன் வைப்பதற்கேற்ப வடிவமைக்கப்பட்டிருக்கும் இதன் மேற்புற அமைப்பில் உள்ள இரண்டு சிறுவட்டப் பகுதிகளைப் பாலம் போன்ற மண்திண்டு இணைக்கிறது. அதற்கு நேரே உள்ள முன்பகுதியில் சற்று அகலமான வாய்ப்புறம் உள்ளது. இவ்வொற்றை வாயின் வழியாக இரு பக்கத்திற்கு விறகிட்டு எரிக்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. மேற்கூறிய ஒத்தையடுப்பினைப் போலவே இவ்வடுப்பையும் சற்று மெல்லிய கணத்தில் செய்திருக்கின்றனர். மேலும், இவ்வடுப்பு ஒரே இடத்தில் நிரந்தரமாக வைத்துப் பயன்படுத்துவதற்கானதாக இருக்கிறது. இது மண்ணால் மற்றும் 'சிமெண்ட்'டால் அமைக்கப்படும் அடுப்பிற்கான உட்கூடாகவும் விளங்குகிறது. எனவேதான் இவ்வடுப்பு இவ்விதத்தன்மையில் உருவாக்கப்படுகிறது என்கின்றனர் இவ்வட்டாரக் குயவர்கள் (சிக்கன அடுப்பு உடையார் ஜி. தங்கவேல், சக்கரமல்லூர், வேலூர் மாவட்டம்).

### வணிக நோக்கிலான உணவக அடுகலன்கள்

மரபு மாற்றத்தை உள்செறித்திருக்கும் தற்போதைய நகர்மயச்சூழலில் மண்ணாலான புழங்குபொருள்களின் பயன்பாடு வெகுவாகக் குறைந்துவருகின்றன. ஆதலால் இவை கவர்ச்சியானதாகக் காட்சியளிக்கின்றன. இதை உணர்ந்த நகர்சார் உணவகங்கள் அவற்றின் கவர்ச்சிகரமான விளம்பரத்திற்காக வேண்டி மண்ணாலான புழங்குபொருள்கள் பயன்படுத்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றன. அவ்வகைப்பட்ட உணவகங்களுக்குத் தேவையான அடுகலன்களாக தந்தூரி அடுப்பு, தயிர்ச்சொப்பு முதலானவற்றைக் குறிப்பிடலாம்.

### தந்தூரி அடுப்பு

தற்போதைய உலகமயமான சூழலில் எதையும் எங்கு வேண்டுமானாலும் பெறமுடியும் என்ற நிலை நிலவி வருகின்றது. இதில் மனிதவாழ்வின் மிக இன்றியமையாதத் தேவைகளில் ஒன்றான உணவு, அவரவர்களுக்கான நிலம், பாரம்பரியம் என்ற எல்லை கடந்து அவை எங்கு வேண்டுமானாலும் கிடைக்கும் என்ற அளவிற்கு மனிதர்களுக்கான போக்குவரத்து வசதிகள் பெருகியுள்ளன. அந்தவகையில் ஒவ்வொரு நாட்டிலும் பிற நாட்டுப் பாரம்பரிய உணவு வகைகளுக்கான மூலப்பொருள்களும் அவற்றைச் சமைப்பதற்கான அடுகலன்களும் இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, அவ்வுணவைச் சமைப்பதற்கு அவர்கள் பாரம்பரியமாகப் பயன்படுத்திய மண்ணாலான அடுகலன்களும் இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றன. நாளடைவில், இறக்குமதி செய்யப்பட்ட அவ்வடுகலன்களுக்கான தேவை அதிகரிக்கும்போது அதைப்போலவே உற்பத்தி செய்துதரும் முயற்சியில் குயவர் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றனர். அந்த வகையில் உற்பத்தி செய்யப்பட்ட ஒருவகை அடுகலனே 'தந்தூரி அடுப்பு'. நான்கடி முதல்

ஐந்தடி வரையிலான உயரத்தில் அகன்ற வாயுடன் இருக்கும் இது உருவ அடிப்படையில் இம்மண்ணிற்கான பாரம்பரிய தானியக்கலனான 'ரஞ்சகம்' என்ற கொள்கலனை ஒத்திருக்கின்றது. இதனை வணிக ரீதியான உணவகங்களில் மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். மாறாக, குடும்பத்திற்கான அன்றாடப் பயன்பாட்டில் இது இல்லை.

**தயிர்ச்சொப்பு**

'சொப்பு' என்பது சிறிய மட்கலனைக் குறிக்கும் சொல். துணைமை உணவுப் பொருளான தயிர்தனைச் சீரான அளவில் பரிமாறுவதற்குப் பயன்படுத்தப்படும் சிறிய அளவிலான கலன்கள் 'தயிர்ச்சொப்பு' என்றழைக்கப்படுகின்றன. குளிர்ச்சியோடு தொடர்புடைய தயிர், மோர், வெண்ணெய் முதலான பொருள்களைத் தயாரித்து அதற்கு ஏதுவான பாண்டங்களில் வைத்துப் பயன்படுத்தும்போது அதன் இயல்பானத் தன்மையைப் பெறமுடிகிறது. ஆதலால் உணவகங்களில் தயிரைப் பதப்படுத்தி வைப்பதற்கான கலமாக மண்ணாலான சொப்பு பயன்படுத்தப்படுகின்றது. இடைப்பட்ட காலத்தில் பிளாஸ்டிக் கலன்கள், மண்ணாலான இவ்விதக் கலன்களை நீர்த்துப்போகச் செய்திருக்கின்றன. ஆனாலும் மரபான உணவு உற்பத்தியில் மண்கலன்களுக்கான பங்கு மிக முக்கியமானது. அவையே அவ்வுணவின் இயல்பானத் தன்மையைப் புலப்படுத்தும் என்பதால் மரபான உணவு வகைகளைத் தயாரிக்கும் உணவகங்களில் மண்கலன்களைப் பயன்படுத்தும் வழக்கம் தற்போது இருக்கின்றது. ஆகையால் அதற்குத் தேவைப்படுகின்ற மண்கலன்களை மண்பாண்ட உற்பத்தியாளர்களான 'குயவர்களிடம்' கேட்டுப் பெறுகின்றனர். சென்னை போன்ற பெருநகரங்கள், வேலூர், திருவண்ணாமலை, விழுப்புரம், காஞ்சிபுரம், செங்கல்பட்டு முதலான நகரங்களில் உள்ள உணவகங்களில் இவ்வகைப் பயன்பாடு மிகுதியான அளவில் இருக்கின்றது.

**உண்கலம்**

உணவு உண்பதற்குப் பயன்படும் கலம் உண்கலம். திரவ உணவு, திட உணவு என்ற இருவகையான உணவிற்கேற்ப உண்கலனும் இருவகைப்பட்டதாக இருக்கின்றன. திரவ உணவிற்கான உண்கலத்தை 'கலயம்', 'மொந்தை' என்றும், திட உணவு உண்பதற்கான கலத்தை, 'கட்ரா', 'சிப்பி' (*பி.இ.5:163*) என்றும் குறிப்பிடும் வழக்கமிருக்கின்றது. இதில் கலயம் என்பது கஞ்சி குடிப்பதற்கானது (கஞ்சிக்கலயம்). 'மொந்தை' என்பது 'கள்' குடிப்பதற்கானது (கள்ளுமொந்தை). வடிவத்தால் ஒத்திருக்கும் இவையிரண்டும் பயன்பாட்டு முறையால் வெவ்வேறான பெயரினையும் சமூக மதிப்பீட்டினையும் பெற்றிருக்கிறது. அதேபோல் 'சிப்பி' என்பது திட உணவு உண்பதற்குப் பயன்படுத்தப்படும் கலன். 'கட்ரா' என்பதும் அவ்வாறானதே. அவ்வகையில் வடிவத்தால் ஒத்திருக்கும் இவையிரண்டும் பயன்படுத்துபவர்களை மையமிட்டு இருவேறு விதமாய் வழங்கப்படுகின்றது. அதாவது தமிழ்ச் சமூக மரபை அடியொற்றி வாழ்ந்துவரும் வேளாண் குடிகளும்

அதைச் சார்ந்த பிற தொழில்சார் குடிகளும் திடஉணவு உண்பதற்கான கலத்தைச் 'சிப்பி' என்று அழைக்கின்றனர். இதே பொருளைத் தற்போது மிகுதியாகப் பயன்படுத்தும் இஸ்லாமியச் சமயத்தினர் இதனை 'கட்ரா' என்றழைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர்.

மேற்கூறியபடி உண்கலன்கள் அனைத்தும் பெயராலும், பயன்பாட்டாலும் அதற்கென ஒரு சமூக மதிப்பீட்டினைப் பெற்றிருக்கின்றன. பிற்காலத்திய நவீனப் புழங்குபொருள்களையும் அதன் மூலப்பொருள்களின் தன்மையை மையமாக வைத்து அவ்வாறு பொருத்திப் பார்க்க இயலும். அதனடிப்படையில் நோக்கும்போது நவீனப் புழங்குபொருள்கள் அதற்கான மூலப்பொருள்களை மையமாக வைத்து இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை 1. அலுமினியம், 2. எவர்சில்வர். இதில் அலுமினியம் என்பது முந்தைய வரவு. எவர்சில்வர் என்பது அதற்குப் பின்னானது. அலுமினியப் பொருள்கள் மிகவும் பரவலாகக் கிடைக்க நேர்ந்தபோது செல்வந்தர்க்கான தனித்தன்மையை அடையாளப்படுத்தும் விதத்தில் வந்ததே எவர்சில்வர். ஆக, அலுமினியப் பொருள்களைப் பயன்படுத்துவோருக்கும், எவர்சில்வர் பொருள்களைப் பயன்படுத்துவோருக்குமான சமூக மதிப்பீடு என்பது காலந்தோறும் வெவ்வேறானதாக இருந்துவந்துள்ளது.

மேற்கூறியதைப் போலவே மண்ணாலான உண்கலனைப் பயன்படுத்துவது பொதுவானதாக இருந்த சமூகச் சூழலில் பீங்கான், எவர்சில்வர், வெண்கலம் முதலான பொருள்களின் வரவு அதன் வளர்ச்சி என்றாலும் அவை மேட்டிமையின் குறியீடாகவே காட்சியளித்திருக்கிறது. ஆதலால் மண்ணாலான உண்கலனில் உணவு உண்ணுதல் என்பதைத் தாழ்வானதாகக் கருதும் மனோநிலை மக்களிடையே உருவாகியிருக்கிறது. ஆகையால் அப்பொருள்களின் பயன்பாடு வெகுவாக வழக்கொழிந்து போயிருக்க வேண்டும். ஆனாலும் சிலர் இதன் மருத்துவக்குணம் அறிந்தவர்களாய் இதனைத் தற்போதும் பயன்படுத்துகின்றனர். தொண்டை மண்டல வட்டாரத்தில் வேலூர் மாவட்டத்திலிருக்கும் இஸ்லாமிய மதத்தினைச் சார்ந்த லெப்பைப் பிரிவினர் இவ்வகையான உண்லகத்தை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். மேற்கூறியது போன்று இவர்கள் பயன்படுத்தும் உண்கலத்தை 'கட்ரா' என்றழைக்கின்றனர். இதே உண்கலத்தினைக் குயவர்கள் 'சிப்பி' என்றழைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர்.

### நீர்க்கலன்

மனிதவாழ்வில் நீர் இன்றியமையாதது. ஆதலால் நீரின் தேவையை நன்குணர்ந்த மனிதன் அதைத் தேக்கிவைத்துப் பராமரிப்பதைத் தலையாய கடமையாக நினைத்துச் செய்திருக்கிறான். இந்த எண்ணம் தொடக்க காலந்தொட்டே மனிதனிடம் இருந்து வந்திருக்கிறது. ஆதலால் அவன் நீர்நிலைகள் மற்றும் நீர்க்கொள் கலன்கள் (பி.இ.5:159) உருவாக்குவதில் முனைப்பு கொண்டிருந்திருக்கின்றான். இதையே மண்பாண்ட உருவாக்கத்திற்கான அடிப்படையாகக் கொள்ளலாம். இது நீரின் தேவையுணர்ந்த மனிதனின் முதல்

பொருளறிவு சிந்தனை. இச்சிந்தனையின் வழி உருப்பெற்ற உற்பத்திப் பொருள்களுள் தலையானது பானை. தண்ணீர் சேகரித்து வைப்பதற்காக உருவாக்கப்பட்ட இப்பொருள் நாளடைவில் அடுகலனாகவும், தானியக் கொள்கலனாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பெரிய பானை**

நீர் நிறைத்து வைக்க உதவும் மண்ணாலான ஒரு கொள்கலன். அளவில் சற்றுப் பெரியதாக இருக்கும். இது வீட்டுக்குத் தேவையான இன்றியமையாத பொருள்களில் ஒன்றான நீரினைச் சேகரித்து வைக்கப்பயன்படுவது. பருத்த வயிறும் சிறுத்த வாயுமுள்ள இக்கலனை வெகு எளிதில் இடம்பெயர்த்துக் கையாள இயலாது. ஆகையால் அதை நிலையான ஓரிடத்தில் வைத்துப் பயன்படுத்தும் வழக்கம் நடைமுறையிலிருக்கின்றது. இது பெரும்பாலும் வீட்டுப் புழக்கடையில் வைத்து பயன்படுத்தப்படுகிறது. அவ்வாறான இப்பொருள் 'சிமெண்டாலான தொட்டி', Sintex தொட்டிகளின் வருகையால் வழக்கொழிந்தன. ஆதலால் இதன் உற்பத்தியும் அற்றுப் போனதாக இவ்வட்டாரக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர்.

பானை நீர் கொள்கலனாக இருப்பதை வாழ்வியற் தத்துவத்தின் குறியீடாகக் குறிப்பர். இதற்கான செயல்முறை விளக்கமாகச் சாவுச்சடங்கினைக் கொள்ளலாம். இறந்தவர்களுக்காகச் சுடுகாடு மற்றும் இடுகாடுதனில் நிகழும் இறுதிச் சடங்கில் 'குடம் சுமத்தல்' என்ற சடங்கு நிகழ்கின்றது. தாய்க்குத் தலைப்பிள்ளையும் தந்தைக்குக் கடைப்பிள்ளையும் இச்சடங்கினைச் செய்வர். ஒரு குடத்தில் நீரை முகந்து அதைத் தோளில் சுமந்தபடி, எரிப்பதற்கு அல்லது புதைப்பதற்கு வைத்திருக்கும் சடலத்தை மூன்றுமுறை சுற்றிவந்து அதைக் கீழேபோட்டு உடைத்து விடுகின்றனர். அவ்வாறு சுற்றிவரும்போது அப்பானையின் வயிற்றுப் பகுதியில் ஒவ்வொரு சுற்றிற்கும் ஒவ்வொரு ஓட்டையிட்டு சடங்கு நிகழ்த்தப்படுகின்றது. இதில் நீர் உயிராகவும் அது ஓட்டையின்வழி ஒழுகி, இறுதியில் தீர்ந்துபோதலை உயிர் போவதாகவும், நீர் தீர்ந்த குடத்தை உடைத்தல் என்பது இறந்த சடலமாகவும் கொள்ளப்படுகின்றது.

இதைப் போலவே வாழ்வுச் சடங்கான திருமணச் சடங்கிலும் வண்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட சாலுகரகம் / கல்யாணப்பானையில் மஞ்சள்நீரை நிறைத்து வைக்கும் வழக்கம் இருக்கின்றது. மஞ்சள் என்பது சுப நிகழ்விற்கான குறியீடு. இது உயிர் உற்பத்தியை மையமிட்டது. ஆதலால், இவ்வித சடங்கில் மஞ்சள் நீர் நிறைத்து வைக்கப்படுகின்றது. அதாவது திருமணம் என்பது மறுஉற்பத்திக்காகச் செய்யப்படும் சடங்கு என்பதன் தத்துவப்பொருளாக இதைக் கொள்ளலாம்.

மனித உடலைப் போலவே மண்பானைக்கும் வாய், கழுத்து, வயிறு மற்றும் கால் என்ற அடிபாகம் ஆகியவை உண்டு. ஆகையால் இது மனித உடலின் குறியீடு. நீர் என்பது உயிரின் குறியீடு. ஆகையால் 'நீர்க்கொள்கலன்' யாவும் மனித உடலின் தத்துவப்பொருளைப் புலப்படுத்துவதாகக் கொள்வர்.

அந்தவகையில் உருவாக்கப்பட்ட நீர்க்கலன்களில் 'தண்ணீர்ப்பானை' சிறப்பானது. மேலும் தண்ணீர் சாடி, குடம், தோண்டி முதலானவையாவும் பானை வடிவத்தினை ஒத்து அளவால் வேறுபட்டு இருப்பதால் வந்த பெயர்களாகும்.

**தண்ணீர்ச்சாடி**

நீர்க்கொள்கலன் வகைகளில் 'தண்ணீர்ச்சாடி' உருவத்தால் பெரியது. அளவில் உயரமாயிருக்கும் இக்கலன் நீண்ட வயிறும் அகன்ற வாயினையும் உடையதாயிருக்கின்றது. இது சக்கரத்தின் உதவியின்றி கையால் வனையப்படுகின்றது. இது தவிர்த்து மற்ற நீர்கொள்கலன்களான பானை, குடம், தோண்டி, பல்லா முதலானவை சக்கரத்தின் உதவியால் செய்யப்படுகின்றன. கையால் வனையப்படும் பொருள்கள் சற்று தடிமனாகவே இருக்கின்றன. 'தண்ணீர் சாடியும்' அவ்வாறு இருப்பதால் விரும்பிய இடத்திற்கு அடிக்கடி இடம்பெயர்த்து வைத்தல் இயலாததாகின்றது. எனவே இது புழக்கடைப் பகுதியில் நிலையான ஒரு இடத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றது. இதன் வாயளவு பயன்பாட்டு நோக்கில் சற்று அகன்றதாக இருக்கும்படி உருவாக்கப்பட்டுள்ளது. மிகுதியான அளவு நீரை நிரப்பி வைக்கும் இக்கலனிலிருந்து பயன்பாட்டிற்குத் தேவையான அளவு சிறுகலன் கொண்டு முகர்வதற்காக இவ்வாறு வடிவமைக்கப்பட்டிருக்கலாம். இதன் வடிவம் ஏறக்குறைய 'ரஞ்சகம்' என்ற தானியக் கொள்கலனின் வடிவத்தை ஒத்திருக்கின்றது. இதனை 'குடுமா' எனக் குறிக்கும் வழக்கம் காஞ்சிபுர வட்டார வெகுமக்களிடையே இருந்து வருகிறது.

**குடம்**

குடம் என்ற சொல்லுக்கு 'குவிந்த' என்ற பொருள் (கதிரைவேற்பிள்ளை; *2003: 182*). 'குடக்கம்' என்றால் வளைவு என்றும், 'குட' என்பதற்கு வளைந்த என்றும் கழகத் தமிழ் அகராதி (*1979:355*) பொருள் கூறுகிறது. அந்தவகையில் 'குடம்' என்ற இப்பெயர் காரணத்தால் வந்தது. வயிறு பெருத்து வளைந்து வாய் குவிந்த இப்பொருளின் வடிவமே இச்சொல்லுருவாக்கத்திற்கான அடிப்படை.

இது நீர் நிரப்பி வைப்பதற்குப் பயன்படும் ஒரு வகையான மண்ணாலான புழங்குபொருள். 'குடம்' என்ற சொல் நீரோடு தொடர்புடைய ஒரு சொல்லாகும். மனித வாழ்வில் இச்சொல் தத்துவப் பொருள் பொதிந்த சொல்லாகக் கையாளப்பட்டிருக்கின்றது. பிறப்பின்போது 'பனிக்குடம்' உடைதல் என்பதும், சாவின்போது நிகழ்த்தப்படும் 'குடம் உடைத்தல்' சடங்கும் நெருங்கியத் தொடர்புடையன. பிறப்பு தொடங்கி இறப்பு வரையிலான வாழ்வியல் ஓட்டத்தில் 'குடம்' என்பது மனிதனோடு ஒன்றிய தவிர்க்க இயலாத தேவையாய் இருந்திருக்கின்றது. ஆகையால் குடம் மிகுதியாகப் புழக்கத்திலிருக்கும் பொருளாயின . இதைப் பயன்பாட்டுப்பொருள் என்ற வகையில் நோக்குவோமானால் எண்ணெய்க்குடம், மோர்க்குடம்,

தண்ணீர்க்குடம் என்று பலவகைகளாகப் பாகுபடுத்தலாம். இதில் நீர்க்கொள்கலனாக விளங்கும் 'தண்ணீர்' குடங்கள் வடிவத்தாலும் அளவாலும் வேறுபட்டன. இந்த அளவு என்பது பயன்பாட்டுத்தேவை கருதியது. அந்த வகையில் அளவினை அடிப்படையாகக் கொண்டு நீர்க்கலன்கள், குடம், தோண்டி, பல்லா என்பதாக வகைப்படுத்தப்படுகின்றன. 'குடம்' என்பது தனியொரு நபர் கையாளுவதற்கேற்ற அளவில் வடிவமைக்கப்பட்டது. தோண்டி என்பது குடத்தின் அளவில் பாதியைக் கொண்டது. பல்லா என்பது குடத்தின் அளவில் கால்பாகத்தினைக் கொண்டது. இதன் உருவ அளவை முறையே *1*, ½, ¼ என்று வரிசைப்படுத்தலாம். இது எளிதாகக் கையாளுவதற்காக வேண்டி வகைப்படுத்தி செய்யப்பட்டவை என்பர் குயவர். இவையனைத்தும் 'குடம் அல்லது முடா' என்ற சாதாரண வடிவத்தின் பிரதி மாதிரிகள். இவை சிறிய வாய்ப்புறத்தினையும் பெரிய வயிற்றினையும் கொண்டிருக்கின்றன. இவை பொதுப்பயன்பாட்டிற்கான நீர்க்கலன்கள். ஆதலால் அலங்கார வேலைகள் அதிகமாகச் செய்யப்பட்டிருக்கவில்லை. ஆனால் அலங்கார வேலைகள் நிறைந்த 'குடத்தினையும்' இவ்வட்டார குயவர்கள் உற்பத்தி செய்கின்றனர். இதற்குச் 'சொப்புக்குடம்' என்று பெயர். இது சற்று அகன்ற வாய்ப்புறத்தினையும், தரையில் நிற்பதற்கேற்ப அடிப்புறத்தினையும், கழுத்தில் அலங்கார வேலைகளையும் கொண்டிருக்கின்றது. இதில் வெவ்வேறான அளவுகள் கொண்ட வகைமைகள் உற்பத்தி செய்யப்படவில்லை. இது 'குடிநீர்' நிரப்பி வைப்பதற்காக வேண்டி செய்யப்படும் 'சிறப்பான வனைவு' எனக் குறிக்கப்படுகின்றது.

### தானியம் சேகரிக்கும் கலன்

வேளாண்மையை மையமிட்ட தமிழ்ச் சமூக மரபில் தானியங்களே செல்வங்களாக விளங்கின. உபரியான தானியங்களைச் சேகரித்து வைத்திருப்பவனே செல்வந்தன் என்ற நிலை இருந்திருக்கிறது. நெடிதான உயர்ந்த பருத்த குதிர்கள் செல்வச் செழிப்பின் அடையாளமாகக் குறிக்கப்பட்டிருக்கின்றன (மதுரைக் காஞ்சி). அக்காலக்கட்டத்தே தானியங்களைச் சேகரித்து வைப்பதற்கான கலன்களை குயவர்கள் மண்ணாலும், தச்சர்கள் மரத்தாலும் செய்தளித்திருக்கின்றனர். அவ்வாறு குயவர்கள் மண்ணால் செய்தளித்த தானியக்கலன்கள் பல வகைத்தன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு அளவினை உடையதாக இருந்திருக்கின்றன. அதோடல்லாமல் தானிய வகையறிந்து அதன் உபரிக்கேற்றவாறு கலன்கள் செய்துதரும் கருத்துடையவர்களாகக் குயவர்கள் இருந்திருக்கின்றனர். அந்த வகையில் 'நெல்'லுக்கு உறை, கம்பு, கேழ்வரகு, திணை, சோளம் முதலான தானியங்களுக்குக் குதிர் (தொம்பை), ரஞ்சிகம் (பி.இ.*5:165*), மஞ்சிகை முதலான தானியக் கலன்களையும், அரிசி, பருப்பு வகைகள் நிரப்பி வைக்கும் கொள்கலனாக 'சால்', பெரியபானை முதலானவைகளும் குயவர்களால்

உற்பத்தி செய்தளிக்கப்பட்டிருக்கின்றது. இவையனைத்தும் ஒரே மாதிரியான தொழில் நுட்ப முறையில் உற்பத்தி செய்யப்படுவதாகும். இவற்றில் காலப்போக்கில் வழக்கொழிந்தவைகள் பல.

நவீனத்தொழில்நுட்ப வளர்ச்சியால் உருவான கருவிகளைப் பயன்படுத்தத் தொடங்கிய காலந்தொட்டு மரபார்ந்த கருவிகளும் அதனாலான உற்பத்தியும் தேக்கமடையத் தொடங்கின. ஆதலால் இவ்வகையான பொருள்கள் காலப்போக்கில் வழக்கொழிந்து காணப்படுகின்றன. நுகர்வோரின் தேவைக்கேற்ப பொருளுற்பத்தி செய்துதரும் வழக்கத்தினை உடைய குயவர்கள், பயன்பாட்டிலில்லாமல் வழக்கொழிந்து வரும் இப்பொருள் உற்பத்திக் குறித்த நுணுக்கங்களை மறந்து வருகின்றனர். மேலும், இத்தலைமுறைக் குயவர்கள் பலருக்கு இவ்விதமான பொருள்களைச் செய்யத் தெரியவில்லை. செல்வக்குறியீடாகக் காட்சியளித்த இவ்வகையான தானியக் கலன்கள் தற்போது ஏளனத்திற்குரியதாக இருக்கின்றன. அரிதாகவே காணக்கிடைக்கின்ற இவ்வகையான பொருள்களனைத்தும் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றன. பெரிய வயிறு கொண்ட ஆளுயர தானியக்கலனை விழுப்புரம், திருவண்ணாமலை வட்டாரத்தினர் குதிர் என்று அழைக்கின்றனர். அதே அமைப்பினையுடைய கொள்கலனை திருவள்ளூர், காஞ்சிபுரம், வேலூர் வட்டார மக்கள் தொம்பை என்றழைக்கின்றனர். இவ்வட்டாரத்திற்குள்ளாகவே சில பகுதிகளில் 'குதிர்' என்றழைக்கும் வழக்கமும் இருக்கின்றது. ஒரே அளவினை ஒத்த பல தானியக் கலன்கள் இருந்தன என்பதைப் பெயரளவிலேயே அறிய முடிகின்றது. நாளடைவில் இவையனைத்தும் குறிப்பிட்ட ஒரேயொரு கொள்கலனைக் குறிக்கும் சொல்லாக அடையாளப்படுத்தப்பட்டன. 'குதிர்' என்பதை அவ்வாறான ஒரு கொள்கலனாகக் குறிப்பிடலாம். இது ஒரு பொதுப்படையான தானியக் கொள்கலனாகத் தற்போது நடைமுறையில் இருக்கின்றது. இது தவிர்த்து ரஞ்சிகம், உறை உள்ளிட்ட தானியக் கொள்கலன்களும் புழக்கத்தில் இருக்கின்றன.

## குதிர்

தற்போது தானியக் கொள்கலனுக்கு அடையாளமாகத் திகழும் ஒருவகையான மண்பாண்டப் பொருள் குதிர். நவீனத்தொழிற்கருவிகள் அதிக அளவில் கோலோச்சாத குக்கிராமங்களில் இன்றளவும் இது புழக்கத்தில் இருக்கின்றது. தானியங்கள் நிறைத்து வைக்கப்பட்டிருக்கும் இக்கலனானது பெரும்பாலும் சிறு, குறு விவசாயிகளின் வ்ட்டில் இருக்கின்றது. மிகவும் பழைய பொருளாயிருக்கும் இக்கலன் இவர்களுடைய தொடர்ச்சியான பயன்பாட்டில் இருப்பதால் இன்றளவும் அது நிலைத்திருக்கிறது என்பதாக அனுமானிக்க முடிகின்றது. தவிர்த்து இம்மாதிரியான கொள்கலன்களை யாரும் தற்போது விரும்பிக் கேட்பதில்லை. ஆதலால் நுகர்வுத்தன்மை அற்ற இப்பொருளைக் குயவர்களும் உற்பத்தி செய்வதில்லை. இதற்குத் தானிய சேகரிப்பு இல்லாது போனதே காரணம் எனலாம். விற்பனை - கொள்முதல் மிகவும் எளிதாகிப்போன

தற்போதைய வணிகச்சந்தைச் சூழலில் 'இருப்பு வைத்தல்' என்பதற்கான அவசியம் ஏற்படுவதில்லை. ஆதலால் இம்மாதிரியான கொள்கலன்கள் வழக்கொழிந்து கொண்டிருக்கின்றன. அவ்வாறு 'இருப்பு' வைப்பதாயிருந்தாலும் கையாளுவதற்கு சிரமமான இம்மாதிரியான கொள்கலனை மக்கள் விரும்புவதில்லை. மாறாக எளிதாகக் கையாளும் விதத்திலான சாக்குப்பைகள், தகரத்தாலான 'இரும்புக்கூடு' (Drum)முதலான பொருள்களையே விரும்புகின்றனர். இவ்வகையான பொருள்கள் விருப்பப்படி இடம் மாற்றி வைக்க ஏதுவாகவும் இடநெருக்கடியைக் குறைப்பதாகவும் இருப்பதால் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன. இம்மாதிரியான வசதிகளுக்குக் குதிர் ஏதுவானதாக இல்லாததால் அவை வழக்கொழிந்து போயின.

**ரஞ்சிகம்**

இது மண்ணாலான ஒருவகைப் புழங்குபொருள். தற்போது புழக்கத்திலிருக்கும் சிறிய அளவிலான தானியக் கொள்கலன். 4 அடி முதல் 5 அடி உயரம் கொண்டதாயிருக்கும் இக்கொள்கலனின் வாய் சற்று அகன்றதாகவும் நீள்உருளை வடிவில் குதிர்தனைவிட சற்று சிறியதாகவும் இருப்பதால் கையாளுவதற்கு எளிதாக இருக்கிறது. இதுவே இப்பொருள் இந்நாள்வரை தொடர்ச்சியான புழக்கத்திலிருப்பதற்கான காரணம் எனக் கொள்ளலாம்.

தற்போது அனைத்து உபரி தானியங்களையும் சேகரித்து வைக்க வேண்டிய தேவையில்லாததால் அளவில் பெரிய கொள்கலன்கள் வழக்கொழிந்து விட்டன. மாறாக வீட்டுக்குத் தேவையான உணவுப் பொருள்களைச் சேகரித்து வைப்பதற்கான கொள்கலன்கள் மட்டுமே புழக்கத்திலிருக்கின்றன. அவற்றில் 'ரஞ்சிகம்' குறிப்பிடத்தக்கது.

**உறை**

அளவில் பெரிய தானிய சேகரிப்புக் கொள்கலன். இதை நெடுங்கூடு என்கிறது நற்றிணைப் பாடல் (26:4). மண்ணால் செய்யப்பட்ட இக்கொள்கலன் பல அடுக்குகளால் ஆனவை. இது கொள்ளளவிற்கு ஏற்ப வடிவமைக்கப்பட்டிருக்கின்றது. 15 கலம் முதல் 20 கலம் வரையிலான கொள்ளளவு கொண்ட உறை வட்டவடிவிலும், 20 கலம் முதல் 30 கலம் வரையிலான அளவு கொண்ட உறை நீள்வட்ட வடிவிலும் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன. இவை ஒவ்வொன்றும் குறைந்தது 5 முதல் 7 அடுக்குகளைக் கொண்டிருக்கின்றன. வட்ட வடிவிலும் நீள்வட்ட வடிவிலுமான உறைகளைக் கிராமப்புற நிலச்சுவான்தாரர்களின் வீட்டில் காணமுடிகின்றது. வீட்டிற்குள் அமைக்கப்பட்டிருக்கும் இக்கொள்கலன் இடம்பெயர்த்து வைக்க இயலாத நிலையில் இருக்கின்றன. ஆகையால் வீட்டிற்குள் மிகவும் பாதுகாப்பான ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு தரைமட்டத்திற்குக் கற்பலகை புதைத்து அதன்மேல் உறையின் ஒவ்வொரு அடுக்கினையும் பொருத்தியிருக்கின்றனர்.

உறையின் அடிப்பகுதியை ஈரப்பதம் தாக்காமலிருப்பதற்காக இவ்வாறு செய்யப்பட்டிருக்கலாம். பெரும்பாலும் இதை ஓரிரு தலைமுறைகளுக்கு முன்பு கட்டப்பட்ட வீடுகளில் மட்டுமே காண முடிகின்றது. தவிர்த்து தற்போது இப்பொருளுக்கான நுகர்வோர் யாருமில்லை. ஆதலால் இதற்கான உற்பத்தி மிகவும் அருகிப்போயிருக்கிறது.

### *பிறவகை புழங்குபொருள்கள்*

### *கழுநீர்த் தொட்டி*

உணவு சமைக்கும்போது கிடைக்கும் கழிவினைச் சேகரித்து வைக்கும் தொட்டி கழுநீர்த்தொட்டி. இதைத் தொண்டை மண்டல வட்டாரத்தினர் ‘மாட்டுத்தொட்டி’ என்றழைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். ‘மாடு’ என்ற சொல்லுக்கு ‘செல்வம்’ என்று பழந்தமிழ் இலக்கியங்கள் பொருள் கொள்கின்றன. அந்த வகையில் மாடுகளுக்குத் தரப்பட்ட முக்கியத்துவத்தின் விளைவால் உருவானதாக ‘கழுநீர்த்தொட்டி அல்லது மாட்டுத்தொட்டி’யைக் கொள்ளலாம்.

இது இரண்டு வகைப்பட்டன. *1.* வட்டத்தொட்டி, *2.* நீள்வட்டத் தொட்டி *(பி.இ.5:166).* வட்டத்தொட்டி என்பது ஒரு மாடு தண்ணீர் குடிப்பதற்கான அளவுடையது. நீள்வட்டத் தொட்டி என்பது இரண்டு மாடுகள் தண்ணீர் குடிப்பதற்கேற்ற அளவுடையது. இவ்விரண்டு தொட்டிகளும் அளவால் வேறுபட்டிருப்பினும் அமைப்பால் ஒற்றுமையுடையன. சமமான அடிப்பகுதியிலிருந்து *1½* அடி அளவு உயரத்திலிருந்து இரண்டு அடி வரைக்குமான உயரத்தினைக் கொண்டிருக்கின்றது. அடிப்பகுதி சற்றுக் குறுகலாகவும் மேற்பகுதி அடிப்பகுதியைவிட சற்று அகன்று பெரியதாகவும் காணப்படுகின்றது. இதைக் கையாளுவதற்கு எளிதாக இருக்கும் வகையில் இதன் தலைப்பில் கைப்பிடி அளவுள்ள உருளையான ‘பிடிமானம்’ வைக்கப்பட்டிருக்கின்றது. இது அப்பொருளின் பயன்பாடு குறித்த அமைப்பாக்க அறிவு. இவ்வமைப்பாக்கத்தை அடியொற்றித் தற்போது இதேபோன்று ‘சிமெண்ட்’டாலான மாட்டுத் தொட்டிகள் அதிக அளவில் புழக்கத்தில் இருக்கின்றன. ஆகவே மண்ணாலான மாட்டுத் தொட்டிகள் வழக்கொழிந்து போயிருக்கின்றன. மண்ணாலான தொட்டி எளிதில் உடைந்துவிடும். சிமெண்டால் ஆன தொட்டி எளிதில் உடையாமல் நீண்டு உழைக்கும் என்பதே இம்மாற்றத்திற்கான காரணம்.

#### *பானை*

மண்பாண்டப் பொருள் என்றவுடன் நினைவிற்கு வருவது பானை. இது மண்பாண்டப் பொருளுக்கான குறியீடு. மண்ணாலான பொருள் வனைவில் இவ்வனைவு சிறப்பானது. “மனித உடலைப்போல மண்பாண்டத்துக்கும் வாய், கழுத்து, வயிறு மற்றும் கால் போன்ற அடிப்பாகம் ஆகியவை உண்டு. அடிப்படையில் பானையின் வடிவம் பெண்ணின் கருப்பையை ஒத்திருப்பதால்

பழங்காலத்தில் மண்பானை வழிபாட்டிற்கு உரியதாகவும் செழுமையின் சின்னமாகவும் கருதப்பட்டது" (காஞ்சா ஐலைய்யா; 2009:72).

இது ஒரு பல்பயன்பாட்டுப் பொருள். இதன் வடிவம், அளவுதனைக் கொண்டு இதனைப் பலவாக வகைப்படுத்தலாம். 'பானை' என்ற சொல்லுக்குப் 'பெரிய கலன்' என்ற பொருளே எல்லோருடைய நனவிலி மனதிலும் பதிந்திருக்கின்றது. (எ-கா. பானை வயிறு). அதேபோல் இதே வடிவத்தினை ஒத்து அளவில் சிறியதாயிருக்கும் பயன்பாட்டுப்பொருளை 'பல்லா' என்று குறிப்பிடும் வழக்கமும் இருக்கின்றது. இவ்வாறு அளவினை மையமாக வைத்து பெரியபானை, சின்னபானை, இரண்டுபடிப் பானை, ஒருபடிப் பானை, ஆழாக்குப் பானை, புள்ள பல்லா என்றும், (புள்ள பல்லா என்பதற்கு சிறிய பானை என்பது பொருள். குடும்ப அங்கத்தினர்களுள் பிள்ளைகளே வயதிலும் அளவிலும் சிறியதாக இருப்பர். அதுபோல் மற்ற பானைகளை ஒப்புநோக்கும்போது அளவில் சிறியதாக இருக்கும் பானையை 'புள்ள பல்லா' என்றழைக்கின்றனர்). பயன்பாட்டை மையமாக வைத்து தண்ணீர்ப்பானை, சோற்றுப்பானை, பொங்கல் பானை என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இதில் தண்ணீர்ப்பானை என்பது ஒரு வகையான நீர்க் கொள்கலன். சோற்றுப் பானை என்பது சோறு சமைக்கும் அடுகலன்.

பொங்கல் பானை என்பது பொங்கலிடுவதற்கென வனையப்படும் அடுகலன். தொடக்க காலத்தில் பொங்கலிடும் அடுகலனை 'பொங்கல் பானை' என்றழைக்கும் வழக்கம் இருந்திருப்பதை 'வழக்காறு'களின் வழி அறிய முடிகின்றது. இதையே 'பொங்கல் பல்லா' என்றழைக்கும் வழக்கம் தற்போதும் இருந்து வருகின்றது. பானை என்ற வடிவத்தைக் காட்டிலும் 'பல்லா' என்ற வடிவம் சிறியது. ஆகையால் தற்போது சிறிய மண்கலனில் பொங்கலிடுவதை வழக்கமாகக் கொண்டவர்கள் இவ்வாறு குறிப்பிட்டிருக்க வேண்டும். இப்போது 'பொங்கல் குடுவை' என்று அழைக்கும் வழக்கம் திருவள்ளூர் மற்றும் காஞ்சிபுரம் வட்டாரங்களில் இருக்கிறது. 'குடுவை' என்பது மிகவும் சிறியகலன். அச்சிறிய கலனில் பொங்கல்வைக்கும் வழக்கமே இவ்வழக்காறுக்கு அடிப்படை. ஆக, 'பொங்கலிடுதல்' என்பது நாளடைவில் 'ஒரு சடங்கு செய்தல்' என்ற நிலையில் மட்டுமே நிகழ்ந்து வருகின்றது என்பதை இது கொண்டு அறிய இயலும்.

மேற்குறிப்பிட்டபடி தண்ணீர்பானை, பொங்கல்பானை, சோற்றுப்பானை எனப் பயன்பாட்டளவில் பாகுபடுத்தப்பட்ட ஒவ்வொன்றிலும் தேவைக்கேற்ப அளவு ரீதியாக மூன்று அல்லது நான்கு வகைகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆயினும் மண்ணாலான புழங்குபொருள்களுக்கான சிறந்த அடையாளமாக எக்காலத்தும் திகழ்வது 'பெரியபானை' ஆகும்.

### *கோழிக்கூண்டு*

கோழியின் இருப்பிடப் பயன்பாட்டிற்காக மண்ணால் செய்யப்பட்ட கூடுதனை 'கோழிக்கூண்டு' (பி.இ.5:166) என்று அழைக்கின்றனர். "தமிழகத் தென்

மாவட்டங்களில் இதனை 'கோழி கெடப்பு' என்றழைக்கும் வழக்கம் இருக்கின்றது" (சு. ரவிக்குமார்; *1991:112*).

இதன் பயன்பாடு கிராமங்களிலேயே மிகுதியாக இருக்கின்றன. கவிழ்த்துப் போடப்பட்ட அரைவட்ட வடிவிலான இக்கூடு ஆமையின் உருவை ஒத்திருக்கின்றது. கோழியின் மூச்சுக்காற்றுப் போக்குவரத்துக்காக இதன் உடலெங்கும் சிறு சிறு ஓட்டைகள் இடப்பட்டிருக்கின்றன. கோழிகளின் எண்ணிக்கையைப் பொறுத்து இதன் அளவுகள் வேறுபடுகின்றன. இது அளவில் சிறியது, பெரியது எனத் தேவைக்கேற்ப குயவர்களால் செய்தளிக்கப்படுகின்றது. வீட்டில் கோழி வளர்ப்பு குறைந்துபோன இக்காலக்கட்டத்தில் மண்ணாலான இக்கூட்டிற்கான தேவை அரிதாகிவிட்டது. மாற்றாக இரும்புக் கம்பியால் பின்னப்பட்ட கூடுகள் இதற்கான இடத்தைக் கையகப்படுத்தியுள்ளன.

***அலங்காரப் பொருள்கள்***

மண்ணாலான கைவினைப் பொருள்கள் இன்றிமையாதப் பயன்பாட்டிற்கு மட்டுமின்றி அலங்காரத்திற்காகவும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்களின் உற்பத்திக் குறையும்போது அலங்காரப் பொருள்களின் உற்பத்தித் தொடங்கியிருக்க வேண்டும். இக்காலத்தில் மண்ணாலான பொருள்கள் 'மருத்துவக்குணம் உடையன' என்பது மறக்கப்பட்டு மண்ணால் உற்பத்தி செய்யப்படுகின்ற பொருள்கள் மரபான அழகியலைக் கொண்டவை என்ற கருத்து மேலோங்கி நிற்கின்றது. அழகியல் என்பது இயற்கையோடு இயைந்த ஒன்று. எனவே இயற்கை விளைபொருளிலிருந்து அலங்காரப் பொருள்களை உற்பத்தி செய்தல் என்பது இயல்பான தோற்றத்தைத் தரும். கூடவே இத்தோற்றம் இயற்கையோடு இயைந்து வாழ்வதற்கான தாக்கத்தையும் தரும். தவிரவும் செயற்கையான (Artifitial) அலங்காரப் பொருள்களுக்கு இவ்விதமானப் பண்புகள் இல்லை என நகரக்கலாச்சாரத்தில் ஊறிய வெகுமக்கள் நம்புகின்றனர்.

இயந்திரகதியில் இயங்கும் மனிதர்களுக்கு ஓய்வு என்பது வரையறுக்கப்பட்டது. இவ்வோய்வு நேரத்தைக் கழிக்க இவர்களுக்கு அமைதியான, அழகியலுணர்வு மிக்கதொரு சூழல் தேவைப்படுகின்றது. அது இயற்கையானதாயிருப்பதையே விரும்புகின்றனர். ஆனால் ஓய்வற்ற உடலுழைப்பு அவர்களைத் துரித கதியில் இயங்க வைப்பதால் அவர்களால் இயற்கையோடு ஒன்றி வாழ இயலுவதில்லை. ஆதலால், அவர்களுடைய பயன்பாட்டுப் பொருள்கள் அனைத்தும் துரிதமாகக் கையாளும் விதத்தில் எளிமைப்படுத்தப்பட வேண்டிய தேவையை உணரும்போது மரபான மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்கள் அதற்கு ஏற்றவை அல்ல எனக்கருதி நவீன உலோக/அலோக பயன்பாட்டுப் பொருள்களின் மீது நாட்டம் கொள்கின்றனர். ஏனென்றால் அவை உடையாதவை, பராமரிக்க எளிதானவை. நாகரிக வளர்ச்சிக்கு அடையாளமானவை என்ற கருத்து பரவலாக நிலவியிருக்கின்றது. ஆகையால்

அத்யாவசியப் பயன்பாட்டுப் பொருள்கள் அனைத்தும் நவீனத் தொழில்நுட்பத்தால் உருவாக்கப்பட்ட பொருள்களாகவும், அலங்காரப் பொருள்கள் பெரும்பாலும் மண் முதலான இயற்கை மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்பட்டனவாகவும் இருக்கின்றன. அந்த வகையில் மண்ணால் உருவாக்கப்பட்ட அலங்காரப் பொருள்களாகப் பூந்தொட்டி, லவ்பேர்ட்ஸ் பானை (Love Birds Pot) முதலானவற்றைக் கொள்ளலாம் (பி.இ.*5:168*).

அலங்கார வேலைப்பாடுகளில் மிகுதியாயிருப்பது 'பூந்தொட்டி'. பெரும்பாலும் வீட்டின் முகப்பில் பூந்தொட்டிகளைக் கொண்டு அலங்கார வேலை செய்யப்படுகின்றது. பெரும்பாலானோர் விதவிதமான பூச்செடிகள், தழைச்செடிகள் முதலானவற்றைத் தங்களுக்குத் தேவையான இடத்தில் வைத்து அழகுபடுத்திக் கொள்ளும் பொருட்டு அதற்கான சாடியை மண்ணால் செய்து பெறுகின்றனர். இதற்குச் செயற்கை மூலப்பொருள்களாலோ அல்லது உலோகத்தாலோ செய்யப்பட்ட சாடிகள் மிகுதியாகப் பயன்படுத்தப்படுவதில்லை. இயற்கைக்கு அப்பாற்பட்ட அவ்வகையான கலன்களில் செடி, கொடிகள் செழிப்புடன் வளர்வது கடினம். ஆதலால் இயற்கை மூலப்பொருளான மண்ணால் செய்யப்பட்ட சாடிகளையே இவ்விதச் தேவைக்குப் பயன்படுத்துகின்றனர். இப்பயன்பாடு என்பது பெரும்பாலும் நகர மற்றும் மாநகர வட்டாரங்களில் பெருமளவு வழக்கத்தில் இருக்கின்றன.

மேற்கூறியது போலவே இயற்கையான சூழலைத் தாமிருக்கும் இடத்தில் உருவாக்கிக் களிக்க வேண்டிய கால நெருக்கடியில் இருப்பவர்கள் குருவி, கிளி முதலான செல்லப் பறவைகளைத் தாமிருக்கும் இடத்தில் வசிக்க வைக்க வேண்டி அதற்கான வாழிடச் சூழலைச் செயற்கையாக உருவாக்கித்தர முயலுகின்றனர். அம்முயற்சியின் ஒரு பகுதியே 'லவ்பேர்ட்ஸ் பானை'. 'லவ்பேர்ட்ஸ்' என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும் 'காதல் கிளிகளை' வீட்டில் வளர்க்க வேண்டி அதற்கான கூடுகளைக் குயவர்களின் உதவியால் மண்ணால் செய்து பெறுகின்றனர். இவ்விதப் பறவைகள் மிகுயான வெப்பச் சூழலைத் தாங்கும் திறனற்றவை என்பதால் அவைகளை வெப்பம் தாக்காத வகையில் இருக்க மண்பாண்டக் கூடு பயன்படுத்தப்படுகின்றது. இக்கூடு தனியானதொரு உற்பத்திப் பொருள் அல்ல. மாறாக 'மொந்தை' என்ற மண்கலனையே இவ்விதமான தேவைக்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்கின்றனர். அதாவது ஒன்று அல்லது இரண்டு கிளிகள் உள்ளிருக்கும் அளவிலான மண் மொந்தைகள் செய்து, அதன் வயிற்றுப் பகுதியில் அப்பறவைகள் உள்ளே நுழைந்து செல்வதற்கான நுழைவாயிலை அரிவாளால் அறுத்தெடுக்கின்றனர். இம்மண்கூட்டிற்கான இந்த வடிவமைப்பு மரபானதல்ல. ஆனால் மரபான ஒரு பொருளைத் தற்காலத் தேவைக்கேற்ப மாற்றிப் பயன்படுத்தும் இந்த பயன்பாட்டறிவு மண்பாண்டத்தொழில் செய்யும் குயவர்களைச் சார்ந்ததாகும். அதேபோல் இப்பொருளறிவு என்பது மரபான முறையில் கடத்தப்பட்டு வந்த பொருள் அறிவிலிருந்து கிளைத்தெழுந்தது எனக் கொள்ளலாம்.

### *விளையாட்டுப் பொருள்கள்*

சிறுபிள்ளைகளுக்கான பொழுதுபோக்கு முறைமைகளில் ஒன்று விளையாட்டு. அவ்விளையாட்டு என்பது நடைமுறை வாழ்வின் பிரதிமாதிரி. அதாவது நடைமுறை வாழ்விலிருந்து இவ்வித விளையாட்டிற்கான கூறுகள் பெறப்படுகின்றன.

'குடும்பம்' என்ற கட்டமைப்பிற்குள் இருந்து அதைச் சரியான முறையில் செயல்படுத்துவதே அறிவு எனக் கொள்ளப்படுகின்றது. தமிழ்க் கலாச்சாரக் குடும்பச் சூழலில் இது தொன்றுதொட்டு இருந்து வரும் வழக்கம். ஆதலால் இதற்கான பயிற்சி சிறுபிள்ளைப் பருவத்திலிருந்தே தொடக்கம் பெற்று வந்திருக்கிறது எனலாம். மேலும் விளையாட்டு என்பது முறைமை சார்ந்த ஒன்றைப் பின்பற்றுவது. அதில் குறிப்பாக மனித நடத்தைமுறையை முன்னோடியாகக் கொண்ட விளையாட்டுக்களாகச் சிலவற்றைக் குறிக்கலாம். அவற்றில் குடும்பம் சார்ந்த விளையாட்டுகள் குறிப்பிடத்தக்கன.

இவ்வகையான விளையாட்டில் அப்பா, அம்மா என்ற குடும்ப அங்கத்தினர்களும், வீடும், வீடு என்பதை அடையாளப்படுத்துவதற்கான சமையற் கலன்களையும் சின்னச் சின்னதாக மண்ணால் செய்து தரும் பணியைக் குயவர்கள் செய்திருக்கின்றனர். இது தவிர்த்து சிறுசேமிப்பிற்கான 'உண்டியல்' (பி.இ.*5:169*), குழந்தை, ஆடு, மாடு உள்ளிட்ட பொம்மைகளைச் செய்தளித்திருக்கின்றனர். ஆனால் தற்போது இவ்விதமான விளையாட்டுப் பொருள்கள் மிகவும் அரிதாகிவிட்டன. திருவிழாக் காலங்களில் மட்டும் உற்பத்தி செய்யப்படுகின்ற இவ்விதமான விளையாட்டுப் பொருள்களைச் பெரும்பாலான குழந்தைகள் விரும்பி வாங்குவதில்லை.

நவீனத் தொழில்நுட்ப வளர்ச்சியின் காரணத்தால் மரபான விளையாட்டுகளும், விளையாட்டுப் பொருள்களும் பெரும்பாலும் வழக்கொழிந்துவிட்டன. ஆனால், பொருளாதாரத்தை முன்னிலைப்படுத்தும் நடைமுறைச் சமூகதளத்தில் சேமிப்பினை அடையாளப்படுத்தும் உண்டியல் சிறுவர்களிடையே பெரிய வரவேற்பைப் பெற்றுள்ளது. ஆதலால் இவ்வகையான பொருள்கள் மிகுதியாக உற்பத்தி செய்யப்படுகின்றன. இப்பொருள் மண்ணால் செய்யப்பட்டிருத்தலையே மிகுதியான சிறுவர்கள் விரும்புகின்றனர். சிறுகச்சிறுக காசு சேமித்து அதை மொத்தமாகப் பெற வேண்டும் என்ற உளவியலை அடிப்படையாகக் கொண்ட இவர்கள் சிறுகச்சிறுக சேமித்த காசினைச் சிறுகச்சிறுக பெற விரும்புவதில்லை. ஆதலால் சிறுசேமிப்புக்கலனை உடைத்து அதை மொத்தமாகப் பெற விரும்புகின்றனர். இவ்விதமான தேவைக்கு ஏதுவானதாக 'மண்ணாலான' உண்டியல் இருப்பதால் இதனைச் சிறுவர்கள் பெரிதும் விரும்பி வாங்குகின்றனர். ஆகையால் இதுவே குயவர்களின் திருவிழாக்கால கடைவிரிப்பில் மிகுதியாக இடம் பெற்றிருக்கின்றது.

### *பிற தொழிலுக்கான பயன்பாட்டுப் பொருள்கள்*

தமிழ்ச்சமூகச் சூழலில் உள்ள தொழில்சார் குடிகள் அனைத்தும் ஒன்றையொன்று சார்ந்து இயங்குவனவாகும். ஆகையால் ஒரு தொழில்சார் குடியினருக்குத் தேவையான உற்பத்திக் கருவிகளை அல்லது பயன்பாட்டுப் பொருள்களை மற்றொரு தொழில்சார் குடியினரிடமிருந்து பெறுவதையே வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இது தத்தம் தொழில்சார் குடிகளுக்கு இடையேயான பரிமாற்றமாய் இருந்திருக்கின்றது. அந்த வகையில் மண்ணாலான பொருள் உற்பத்தியில் ஈடுபடும் குயவர்களிடம் இருந்து மற்ற தொழில்சார் குடிகள் தங்களுக்குத் தேவையான கருவிப்பொருள்களைக் கேட்டுப் பெறுகின்றனர்.

துணி வெளுக்கும் தொழிலைச் செய்யும் வண்ணார் சமூகத்தினர் துணியை வெள்ளாவி போடுவதற்குப் பெரிய அளவிலான பானைகளையும் பொன்னாபரணத் தொழில் செய்யும் பொற்கொல்லர்கள் தங்களுக்குத் தேவையான 'குமுட்டி' என்ற கலனையும், பறையடித்தலைத் தொழிலாகக் கொண்ட பறையர் சமூகத்தினர் 'மேளம்' கட்டுவதற்கான மேள வட்டங்களையும், மேளச் சட்டிகளையும் குயவர்களிடமிருந்து மண்ணால் செய்து பெற்றிருக்கின்றனர்.

### *வெள்ளாவிப் பானை*

துணி வெளுப்பிற்காக 'ஆவி காட்டப்' பயன்படும் இவ்வகை மண்கலன் அகன்ற வாயுடையதாகவும், அளவில் மிகப்பெரியதாகவும் இருக்கின்றது. இது மற்ற பானை வகைகளைக் காட்டிலும் சற்றுப் பெரியதாகவும் தடிமனானதாகவும் காணப்படுகின்றது. இதன் வாய்ப்புற விளிம்புகள் கையாளுவதற்கேற்ற வகையில் தடிமனானதாகவும் உறுதியானதாகவும் வனையப்பட்டிருக்கின்றன.

'துணி வெளுத்தல்' என்பது குடித்தொழிலாக இருந்த நிலை தற்போது முற்றிலும் மாறிவிட்டது. ஆதலால் தற்போது 'வெள்ளாவி' வைத்தல் என்ற மரபான துணி வெளுக்கும் முறை நடைமுறையில் இல்லை. ஆகவே 'வெள்ளாவி' வைத்தலுக்குப் பயன்படுத்தப்பட்ட பானைகள் வழக்கொழிந்து விட்டன. இதனைத் தற்போது வாய்மொழி வழியாக மட்டுமே அறிந்து கொள்ள முடிகின்றது. இதற்கான பயன்பாடு தற்போது முற்றிலும் வழக்கொழிந்து விட்டது.

### *குமுட்டி*

பொன் ஆபரணம் செய்யும் தொழிலில் பயன்படுத்தப்படும் மண்கலனை 'குமுட்டி' (பி.இ.5:169) என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இது இத்தொழில் செய்யத்தேவையான நெருப்பினை நிரப்பிவைக்கப் பயன்படுத்தப்படுகின்றது. இத்தொழிலில் உருக்குதல், ஒட்டவைத்தல் முதலான வேலைகள் மிக முக்கியமானவை. இவ்விரண்டு செயல்பாட்டிற்கும் நெருப்பு அவசியமென்பதால் அதைப் பொற்கொல்லர்கள் மண்ணாலான குமுட்டியில் வைத்துப் பயன்படுத்தும் வழக்கத்தைக் கொண்டிருக்கின்றனர். நவீனத் தொழில்நுட்பத்தால் உருவாக்கப்பட்ட கலன்கள் இதற்கு ஏதுவானதாக அமையாததால் தற்போதும் மண்ணாலான 'குமுட்டியையே' பொற்கொல்லர்கள் பயன்படுத்துகின்றனர்.

அரைவட்ட வடிவிலிருக்கும் இம்மண்கலன் அகன்ற வாயுடையதாக இருக்கின்றது. இவ்வரைவட்டப் பகுதியின் அடிப்பகுதி அரைஅடி அளவு உயரமுடைய கூம்பின் மீது அமைக்கப்பட்டிருக்கிறது. இதை உட்கார்ந்த நிலையில் தொழில் செய்யும் பொற்கொல்லர்கள் குனிந்து 'கங்கினை' ஊதுவதற்கான வசதி கருதி வடிவமைக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளலாம். மிகவும் அரிதாகவே புழக்கத்திலிருக்கும் இக்கலன் தற்போது வரை எவ்விதமான மாற்றத்தையும் உள்வாங்கியிருக்கவில்லை. இது தவிர்த்து இதற்கு மாற்றாக நவீனத் தொழில்நுட்பத்தால் உருவாக்கப்பட்ட பொருள்கள் எதுவும் பயன்படுத்தப்படவில்லை. ஏனெனில், "இத்தொழிலுக்கு உகந்த இம்மாதிரியான பொருள்களை மண்ணைத் தவிர்த்து மற்ற மூலப்பொருள்களால் செய்து பயன்படுத்த இயலாது" (களாய்வு; சி. லோகநாதன் *(38)*: கொளத்தூர், *06.06.2009)* என்பதை இதற்கான காரணமாக தொண்டை மண்டல வட்டாரக் குயவர்கள் கருதுகின்றனர்.

### மேளக்கட்டை அல்லது வட்டம்

மரபான இசைக்கருவிகளில் ஒன்று மேளம். இது தோற்கருவி. வட்ட வடிவில் அமைந்திருக்கும் இதற்கு மண்ணால் செய்யப்பட்ட மேளக்கட்டையே அடிப்படை. இதனை மேள வட்டம் (பி.இ.*5:169)* என்றழைக்கும் வழக்கம் காஞ்சிபுர வட்டார மக்களிடையே இருக்கின்றது. இம்மேள வட்டத்தின்மேல் தோல் விரிப்பு இழுத்துக் கட்டப்பட்ட வடிவத்தையே மேளம் என்கின்றனர். இதற்கு 'பறை' என்ற பெயரும் வழக்கிலிருக்கிறது, இதைப் பறையர் (பறையைக் கொட்டும் தொழிலைச் செய்ததால் பறையர் எனப்பட்டிருக்கலாம்) சமூகத்தினர் வாசிப்பதால் 'பறைமேளம்' என்றும் பரவலாகக் குறிக்கப்படுகின்றது.

தற்போது மண்ணாலான மேளக்கட்டையை மிகவும் அரிதாகவே பயன்படுத்துகின்றனர். இதற்கு மாற்றாக இரும்பு மற்றும் பிளாஸ்டிக்கால் (Plastic) ஆன மேளவட்டங்களை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். இது எளிதில் உடையாதது, கையாள சுலபமானது, எடை குறைவானது, தோற்றப் பொலிவு மிக்கது என்பன போன்ற பல சிறப்புக் கூறுகளைக் கொண்டிருக்கிறது. ஆனால் மண்ணாலான மேளவட்டங்கள் மேற்கூறிய நவீனத் தொழில்நுட்பத்தால் உருவாக்கப்பட்ட மேளவட்டங்களைக் காட்டிலும் எடை அதிகமானது. உடையும் தன்மை கொண்டது. ஆதலால் இவ்வகையான மேளவட்டங்கள் தவிர்க்கப்படுகின்றன. ஆனாலும் சிலர் மண்ணாலான மேளவட்டங்களையே தற்போதும் பயன்படுத்தி வருகின்றனர். இதற்குக் காரணம் இதில்தான் நல்ல நயமான இசை கிடைக்கும் என்ற அவர்களின் நம்பகத்தன்மையே ஆகும். இது தவிர்த்து இதற்கு வேறெந்த காரணமும் இல்லை என்பதே பறையடிப்பவர்களின் கருத்தாயிருக்கின்றது என்கின்றனர் காஞ்சிபுரம் வட்டாரக் குயவர்கள். (நீலகண்ட உடையார்; பி.இ.*4:72)*.

### *மேளச்சட்டி மற்றும் தமுக்குச்சட்டி*

தோலிசைக் கருவிகளில் ஒன்றான மேளம் இரண்டு வகைத்தானது. ஒன்று மேற்கூறியது போன்ற மேள வட்டத்தால் உருவாக்கப்பட்ட மேளம். இது தோளில் மாட்டிக் கொண்டு வாசிக்கப்படுவது. மற்றொரு வகையாவது இடுப்பில் கட்டிக் கொண்டு வாசிக்கும் தோற்கருவி. இதற்கு மேளச்சட்டி (பி.இ.5:169) என்று பெயர். இதில் சின்னதும் பெருசுமாக இரண்டு அளவுகளுடைய மேளச்சட்டிகள் இருப்பதாக காஞ்சிபுரம் மற்றும் திருவள்ளூர் மாவட்டக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர் (சுதாகர்; பி.இ.4:137), (நீலகண்ட உடையார்; பி.இ.4:72). இதில் சற்று பெரிய அளவில் இருப்பதை மேளச்சட்டி என்றும், சிறிய அளவில் இருப்பதை 'தமுக்கு' என்றும் அழைக்கும் வழக்கம் இருக்கின்றது. இரண்டும் வெவ்வேறான பயன்பாட்டிற்கு உரிய இசைக்கருவிகளாகும். இவற்றிலிருந்து வரும் வேறுபட்ட ஓசை அதை உணர்த்தும். ஓசையை அடிப்படையாகக் கொண்ட வகைபிரிப்பில் தமுக்கு என்பது செய்தி அறிவிப்பிற்கானது. மேளச்சட்டி என்பது வாழ்க்கை வட்டச் சடங்கிற்குரியது என்பதை அறியமுடிகிறது. ஓசைவழிப் பிரித்தறியப்படும் இவ்வகைமைக்கு அடிப்படையாய் அமைவது அம்மேளத்தின் வடிவம். அவ்வடிவத்தை நிர்ணயிப்பது அம்மேளத்திற்கான சட்டி. அந்த வகையில் அந்தச் 'சட்டியை' மண்ணால் உற்பத்தி செய்து தரும் குயவர்கள் இதற்கான பிரத்யேக உத்திகளைக் கையாண்டு இவ்விதச் சட்டிகளைச் செய்து தருவதாகக் குறிப்பிடுகின்றனர் (களாய்வு; பூபாலன் (78): தெள்ளூர், 29.03.2009).

பெரிய மேளச்சட்டி என்பது அரைவட்ட வடிவிலிருந்து சற்று அழுந்தி தட்டையாக இருக்கின்றது. இது ஓசைநயம்மிக்க ஒலிப்பிற்கு ஏதுவானதாக இருக்க வேண்டி இப்பொருளின் மேல் கோழிமுட்டை கலந்த செம்மண் பூச்சினைப் பூசும் உத்தியை இவ்வட்டாரக் குயவர்கள் வழக்கத்தில் வைத்திருக்கின்றனர். வடிவத்தில் இதையொத்து ஆனால் அளவில் சற்று சிறியதாக உற்பத்தி செய்யப்படும் மேளச்சட்டியை 'தமுக்கு'விற்கு உரியதாகக் குறிப்பிடுகின்றனர்.

இவ்விரு மேள வகையும் அரிதாகிப் போனதால் இதற்கான மேளச்சட்டியைத் தற்போது இவ்வட்டாரக் குயவர்கள் அரிதாகவே உற்பத்தி செய்கின்றனர். ஆனால் இப்பொருள் தற்போதும் பயன்பாட்டிலிருப்பதை காஞ்சிபுரம், திருவள்ளூர் மாவட்டப் பறையர் சமூகத்தினரிடையே காணமுடிகின்றது.

### *சடங்குப்பொருள்கள்*

சடங்கு என்பது மனித வாழ்வியலின் ஓர் அங்கம். ஆதலால் இதை 'வாழ்வியற் சடங்கு' எனவும் ஆய்வாளர்கள் குறிப்பர். மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான வாழ்நாளில் ஒரு பருவத்திலிருந்து அடுத்த பருவத்திற்கு வளர்ச்சி அடையும்போது அதைச் சடங்கு வழியாக வெளிப்படுத்தும்முறை காலங்காலமாக இருந்து வருகின்றது. அவ்வழி உருப்பெற்ற சடங்குகளை இயற்கைக்கு அதாவது தெய்வத்திற்கு, இயற்கை விளைபொருள்களைக் கொண்டு

செய்திருக்கின்றனர். அதற்கான செய்முறை மனித வாழ்முறையோடு தொடர்புடையதாக அமைந்திருக்கின்றது. ஆகையால் மனிதன் பயன்படுத்திய பயன்பாட்டுப் பொருள்களும் அவ்வித சடங்குச் செய்தவற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அடுத்தடுத்த காலகட்டத்தில் அவ்வாறான பொருள்களைத் தனித்து அடையாளப்படுத்த வேண்டி அதனில் சிற்சில மாற்றங்களை ஏற்படுத்தியிருக்க வேண்டும். அவ்வாறான மாற்றத்திற்குப் பின்னான அப்பொருள்கள் 'சடங்குப்பொருள்கள்' என்ற அடையாளத்தைப் பெற்றிருக்கக் கூடும். ஆகவே பெரும்பாலான சடங்குப்பொருள்கள் அனைத்தும் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களிலிருந்தே தோற்றம் பெற்றிருக்க வேண்டும். அந்த வகையில் மண்சார்ந்த 'சடங்குப்பொருள்கள்' (பி.இ.5:170) மிகுதியாக உருவாக்கப்பட்டிருக்கின்றன.

சடங்குப்பொருள்கள் பயன்பாட்டின் அடிப்படையில் வாழ்வுச்சடங்குப் பொருள்கள் என்றும் சாவுச்சடங்குப்பொருள்கள் என்றும் வகைபிரிக்கப்படுகின்றன. இவற்றில் கலசம் என்பது இருவகையான சடங்குகளுக்கும் பயன்படுத்தும் பொருளாகக் கொள்ளப்படுகிறது.

**கலசம்**

சடங்கு செய்யப் பயன்படும் கலம்தனை 'கலசம்' என்றழைக்கின்றனர். சடங்கின் தேவைக்கேற்ப கலசத்தின் அளவு மாறுபடுகின்றது. ஆனால் ஒரே மாதிரியான வடிவத்தையே கொண்டிருக்கின்றன. உடல் பெருத்து கழுத்து சிறுத்து ஆனால் வாயகன்று காணப்படும் வடிவமே கலசத்திற்குரியது. பெரும்பாலான சடங்கில் கலசம் நீர் கொண்டு நிரப்பப்படுகின்றது.

கலசத்திற்கு உள்ளிடப்பட்டிருக்கும் நீர் உயிராகவும் மண்ணாலான கலசம் உடலாகவும் கருதி சடங்குகள் செய்யப்படுகின்றன. கலசத்தில் நிறைக்கும் நீரை சடங்கின் தன்மைக்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்வது வழக்கமாயிருக்கின்றது. மங்கலச் சடங்கு செய்வதாயிருந்தால் மஞ்சள் நீர் நிரப்பியும் அமங்கலச் சடங்கு செய்வதாயிருந்தால் வெறும் நீர் நிரப்பியும் சடங்கு செய்கின்றனர். அன்றாட பயன்பாட்டில் சிறுக சிறுக மறைந்து வரும் மண்கலன்கள் சடங்குகள் செய்வதன் வாயிலாகத் தற்போதும் வழக்கிலிருக்கின்றன. அதில் ஒன்று கலசம்.

வீடு குடிபுகுதலுக்குச் செய்யப்படும் சடங்கில் கலசம் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றது. இச்சடங்கிற்கான கலசங்களைக் குயவர்கள் தற்போது சிறப்பான வனைவாகவே செய்கின்றனர். அளவில் சிறியதான இக்கலசங்கள் 3, 5, 7 என்ற ஒற்றை எண்ணிக்கையில் இச்சடங்கிற்குப் பயன்படுத்தப்படுகின்றது. இதைக் குயவர்கள் குடிபுகுவோரின் வீட்டிற்குக் கொண்டு போய் கொடுத்துவிட்டு வரும் வழக்கம் வேலூர் மற்றும் காஞ்சிபுர மாவட்ட கிராமங்களில் இருக்கின்றது. இதற்குத் தகுந்த சன்மானத்தை வீட்டு விசேஷம் முடிந்த பிறகே குயவர்களுக்குக் கொடுக்கும் வழக்கம் தற்போதும் இருக்கின்றது.

### வாழ்வுச் சடங்குப்பொருள்கள்

வாழ்வில் வளமை வேண்டி செய்யப்படும் சடங்குகள் அதிகம். அதில் சில வகையான சடங்கிற்கு மண்ணாலான பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன. அவையே வாழ்வுச் சடங்குப்பொருள்கள் எனச்சுட்டப்படுகின்றன.

உடல், உயிர் என்ற அடிப்படைத் தத்துவார்த்தத்தை மையமாகக் கொண்ட 'கலசம்', வீடு குடிபுகுதல் தொடங்கி இறப்பு வரை அனைத்துச் சடங்கிற்கும் பயன்படுத்தப்படுகின்றது. அதேபோல் வளமை வேண்டி வைக்கப்படும் 'குபேர பொம்மைகள்' (Happy man), அவ்வாறு பெற்ற வளமை பிறரின் கண்திருஷ்டியால் கலைந்துவிடும் என்ற நம்பிக்கை கொண்டிருத்தலால் வைக்கப்படும் 'கண்திருஷ்டி' பொம்மைகள், மற்றும் திருமணச் சடங்கிற்கும் பயன்படுத்தப்படும் 'சாலு கரகம்' முதலானவைகள் குடும்பம் என்ற கூட்டுணர்வில் உருவான சடங்குமுறைக்கான சடங்குப்பொருள்களாகும். மழை வேண்டி செய்யப்படும் ஊர்ச்சடங்கிற்கான 'அக்னிச்சட்டி', 'அரவான் சிலை' முதலானவைகளும் வீட்டில் செல்வ வளமை வேண்டி வைக்கப்படும் கொலு பொம்மைகளும், நோயிலிருந்து காக்க வேண்டி செய்யப்படும் மதலம்பிள்ளை, மாடு முதலான பொம்மைகளும் இவ்வகையில் குறிப்பிடத்தக்கனவாகும்.

### சாலுகரகம் அல்லது கல்யாணப்பானை

திருமணம் என்பது ஒரு தனிக்குடும்ப உருவாக்கம். ஆகவே அதற்கு அடிப்படையாகத் தேவைப்படுவது மணமக்களுக்கான அறிவு முதிர்ச்சி மற்றும் அவர்கள் வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான வசதிகள். திருமண வயதை அடைந்த இருவர்க்குத் திருமணச்சடங்கு செய்யும்போதே அவர்கள் வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையானவற்றைத் தயார்செய்து தருவது மரபாக இருந்திருக்கிறது. அந்த வகையில் திருமணத்தின்போது மணமக்களுக்குத் தரப்பட்ட பண்டபாத்திரங்களே பிற்காலத்தில் சடங்குப்பொருளாக மாறி கல்யாணப்பானை, சாலுகரகம், அரசாணிப்பானை என்ற பெயரில் அழைக்கப்பட்டிருக்க வேண்டும் (பி.இ.*5:171*).

### அக்னிச்சட்டி

மழை வேண்டி செய்யப்படும் 'தீச்சட்டி' சடங்கிற்கு மண்ணாலான சட்டியே மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றது. இது தேவைகருதி உருவாக்கப்படும் ஒரு சடங்குப்பொருளாக இருக்கிறது. இதை 'அக்னிச்சட்டி' (பி.இ.*5:170*) என்றழைக்கும் வழக்கமும் இருக்கின்றது. அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களில் ஒன்றான 'சலாச்சட்டியின்' வடிவத்தை ஒத்திருக்கும் இதன் சுற்றுப்பகுதிகளில் 'கங்கு' கனருவதற்கேற்ப காற்று வருவதற்கான ஓட்டைகள் இடப்பட்டிருக்கின்றன. இது தவிர்த்து திரிசூலம், பாம்பு முதலான குறியீடுகளும் அதன் மேலிடப்பட்டிருக்கின்றன. இவ்விதமான சடங்குப்பொருள்கள் விழுப்புரம், திருவண்ணாமலை வட்டாரங்களில் மிகுதியாகப் புழக்கத்திலிருக்கின்றன.

### கொலுபொம்மைகள்

வீட்டில் செல்வம் கொழிக்கச் செய்யப்பெறும் சடங்குகளில் 'கொலு' வைத்தலும் ஒன்று. நவராத்திரிநாளை முன்னிட்டு செய்யப்பெறும் இச்சடங்கில் 'பிள்ளையார்' பொம்மையை முதன்மையாகக் கொண்டு பலவகையான பொம்மைகள் அணிவகுத்து வைக்கப்படுகின்றன. இதற்குப் பெரும்பாலும் மண்ணால் ஆன பொம்மைகளையே பயன்படுத்துகின்றனர். இதைப் பெரும்பாலும் குயவர் சமூகத்தைச் சார்ந்தவர்களே உற்பத்தி செய்துதருகின்றனர். அதிலும் குறிப்பாக இவ்வேலையைத் தெலுங்குக் குயவர்களே மிகுதியாகச் செய்கின்றனர். பொருளாதார வசதிக்கேற்ப செய்யப்படும் இச்சடங்கில் அதற்கேற்றவாறு பொம்மைகள் வைக்கப்படுகின்றன. இப்பொம்மைகளை இரண்டு வகையாகப் பாகுபடுத்தலாம். அவை 1. சமயம் சார்ந்தது, 2. சமயம் சாராதது.

சமயம் சார்ந்த பொம்மைகள் பல குழுக்களாகப் பிரிக்கப்படுகின்றன. அவை,

1. தசாவதாரம்
2. அஷ்டலட்சுமி
3. ஆழ்வார்கள்
4. கருட சேவை
5. துளசி மாடம்
6. கோயில் பூசை
7. பிள்ளையார் மியூசிக்கல்ஸ்
8. கிருஷ்ண லீலை

முதலானவைகளாகும். இதேபோல் சமயம் சாராத பொம்மைகள் பல குழுக்களாகப் பிரிக்கப்படுகின்றன. அவற்றில்,

1. பள்ளிக்கூடம்
2. கிரிக்கெட்
3. இண்டியன் லேடீஸ்
4. பாட்டி வடை சுட்ட கதை
5. கல்யாணக் குழு

முதலானவை மிக முக்கியமானதாகக் கொள்ளப்படுகின்றது. இது தவிர்த்து கிரிக்கெட், டென்னிஸ், கபடி, கால்பந்து முதலான விளையாட்டுக் குழு பொம்மைகளும், விவசாயம் உள்ளிட்ட தொழில்சார் பொம்மைகளும் நிகழ்த்துக்கலைகள் சார்ந்த பொய்க்கால் குதிரை, கரகாட்டம் உள்ளிட்ட பல வகையான பொம்மை குழுக்களும் புழக்கத்திலிருக்கின்றன.

மேற்கூறியன அனைத்தும் செல்வச்செழிப்பு வேண்டி வீட்டில் வைக்கப்படும் பொம்மைகளாகும். இது ஒரு குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே வைக்கப்படுவனவாகும்.

### திருஷ்டி பொம்மை

தமது செல்வச் செழிப்பின் மீது பொறாமை கொள்பவர்களின் பார்வையால் தீங்கு நிகழும் எனக் கருதுபவர்கள் அதைத் தடுக்க 'கண் திருஷ்டி பொம்மையை' *(பி.இ.5:171)* ஆண்டு முழுதும் வீட்டில் வைத்துப் பயன்படுத்தும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். இவ்வகையான பொம்மையும் குயவர்களின் கைவண்ணத்தில் உருவாகிறது.

### சாவுச்சடங்குப் பொருள்கள்

சாவுச்சடங்கில் மண்ணாலான இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்களைக் கொண்டு சில சடங்குகள் செய்யப்படுகின்றன. அதற்குத் தோண்டி, பானையின் சிறிய வகையான பல்லா, அஸ்திக்கலசம், நெருப்புச்சட்டி முதலான பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன. இதில் அஸ்தி கலசம் தவிர்த்த மற்ற மூன்று பொருள்களும் அன்றாடப் பயன்பாட்டிற்காக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களாகும். ஆனால் தற்காலச் சூழலில் அப்பொருள் பயன்பாடு மிகுதியாக இல்லாததால் இவ்விதச் சடங்கிற்காக மட்டுமே அவை உற்பத்தி செய்யக்கூடிய நிலை இருக்கிறது.

### தோண்டி

சாவுச்சடங்கில் இது 'பால் தோண்டி' அல்லது 'பால் குடம்' என்றழைக்கப்படுகின்றது. சாவுச் சடங்கில் இறந்தவர்களைப் புதைத்தப் பிறகு அவர்களுக்கு 'பாலூற்றுவது' அச்சடங்கின் ஓர் அங்கம். அவ்வாறு பாலூற்றுவதற்குத் தேவையான பாலினை மண்கலத்தில் கொண்டுசெல்வது என்பது காலங்காலமாக நிலவி வரும் வழக்கம். அதற்குப் பயன்படும் கலமே தோண்டி. இத்தோண்டி இதற்கென உற்பத்தி செய்யப்படும் தனியானதொரு மண்கலன் அல்ல. அன்றாடப் பயன்பாட்டில் நீர்க்கலனாகப் பயன்பாட்டிலிருப்பது. அதற்கென உற்பத்தி செய்யப்பட்ட கலனையே இதற்கும் பயன்படுத்துகின்றனர். அன்றாடப் பயன்பாட்டில் இதனைத் 'தோண்டி' என்றும் 'சாவுச்சடங்கில்' மேற்கூறியதுபோல் 'பால் குடம்' என்றும் குறிப்பிடும் வழக்கம் இருக்கின்றது. இவ்விரு பெயர்களே சமூகத்தில் இவற்றிற்கான தனித்தனி அடையாளத்தை ஏற்படுத்துகின்றன.

### கொள்ளிப்பானை

இதனைச் சாவுச்சடங்கில் 'கொள்ளிப்பானை' என்று குறிப்பிடும் வழக்கம் இருக்கின்றது. சாவுச்சடங்கில் இதுவே முதன்மையானது. ஆகவே இச்சடங்கில் மிகுதியான பொருள் பொதிந்த நிகழ்விற்குரிய கலனாக இதைக் கொள்ளலாம். இக்கலன் மண்ணால் செய்யப்பட்டிருப்பதே இவ்விதச் சடங்கில் இது பெருமதிப்புப் பெறுவதற்கான காரணமாகும். இக்கலன் இதற்கென உருவாக்கப்படுவதில்லை. மாறாக அன்றாடப் பயன்பாட்டுக் கலனை இவ்விதச் சடங்கிற்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

**நெருப்புச்சட்டி**

இதனைக் 'கொள்ளிச்சட்டி' எனக் குறிப்பிடுகின்றனர். இறந்த உடலை எரிக்கும் வழக்கம் பிற்காலத்தியது என்பதைத் தொல்பொருள் அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட முதுமக்கட் தாழிகள் உறுதிப்படுத்துகின்றன. பிற்காலத்தில் உருவான எரியூட்டும்முறை தொடங்கி இக்கொள்ளிச்சட்டி நடைமுறைப்படுத்தப்பட்டிருக்கலாம். நெருப்பு அரிதான காலகட்டத்தில் தொடங்கிய, இறந்த உடலை எரிக்கும் இவ்வழக்கத்தில் நெருப்பினை வீட்டிலிருந்து கொண்டு செல்லும் பழக்கம் இருந்திருக்க வேண்டும். அதற்கு மண்ணாலான சட்டி பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். அதுவே பின்னாளில் சடங்குப் பொருளாக மாறி 'கொள்ளிச்சட்டி' என மாறியிருக்க வாய்ப்பிருக்கிறது.

அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களில் ஒன்றாகிய 'சலாச்சட்டி'யைச் சாவு சடங்கிற்கான கொள்ளிச் சட்டியாகப் பயன்படுத்துகின்றனர். 'கொள்ளிச்சட்டி' என்பது சடங்குப் பயன்பாட்டால் வந்த பெயரே தவிர இது தனித்த ஒரு பயன்பாட்டிற்குரிய பொருள் அல்ல. தற்போது இந்நிலை முற்றிலும் மாறியிருக்கிறது. சலாசட்டியின் பயன்பாடு வெகுவாகக் குறைந்துவிட்டதால் இவ்வுருவிற்கான இப்பெயர் மறைந்து சாவுச்சடங்கில் தற்போதும் இதனைப் பயன்படுத்துவதால் இதற்குக் 'கொள்ளிச்சட்டி' என்ற பெயர் தற்போதும் வழக்கத்திலிருக்கின்றது.

**அஸ்திக்கலசம்**

இது சாவுச்சடங்கிற்கென குயவர்களால் உற்பத்தி செய்யப்படும் சிறப்பான வனைவாகும். இதைச் சுடாமல் பசுமண்கலமாகப் பயன்படுத்தப்படுவதே இதன் தனிச்சிறப்பு. இதற்குப் பயன்பாட்டு நோக்கிலான காரணம் இருப்பதைக் குயவர்களின் வழி அறிய முடிகின்றது.

அஸ்தி என்பது இறந்தவரின் உடலை எரித்தால் கிடைக்கும் சாம்பல். இதை அடைத்து வைக்கும் கலனை 'அஸ்திக்கலசம்' (பி.இ.*5:171*) எனக் குறிப்பர். பெரும்பாலும் அஸ்தியை ஆற்றிலோ, கடலிலோ மற்றும் இன்ன பிற நீர் நிலைகளிலோ கரைத்து விடும் வழக்கம் இருந்துவருகிறது. அவ்வாறு கரைப்பதற்கு எடுத்துச் செல்லும் அஸ்தியைக் கரைத்தபிறகு மிஞ்சும் கலனை தனியே விடுத்தால் அது அவமதிப்பாகிவிடும். ஆதலால் அதனையும் சேர்த்துக் கரைத்துவிடுதல் நல்லதெனக்கருதி இச்சடங்கிற்குச் சுட்ட மண்கலனைப் பயன்படுத்தாமல் பசுமண் கலனைப் பயன்படுத்துகின்றனர். தொண்டை மண்டல வட்டாரத்தில் இறந்தவர்களை எரிக்கும் வழக்கமுடைய எல்லோரும் இவ்வித அஸ்திகலசத்தைப் பயன்படுத்துகின்றனர். குறிப்பாக 'மின்சார மயானம்' உள்ள சென்னை உள்ளிட்ட பெருநகர்ப்பகுதிகளில் அஸ்திக்கலசத்திற்கான பயன்பாடு அதிகமாயுள்ளது. பெரும்பாலும் இப்பொருள் கையடக்க அளவிற்கே வடிவமைக்கப்படுகின்றது.

### *நேர்த்திக்கடன் சடங்குபொம்மைகள்*

நோய் தீர்த்தலுக்காகத் தெய்வத்திடம் நேர்ந்து கொள்பவர்கள் நோய்வாய்ப்பட்ட குழந்தைகள், மாடுகள் முதலான உருவங்களில் பொம்மைகள் செய்து கோயிலில் வைப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இதில் குழந்தை நோய்வாய்ப்பட்டால் செய்து வைக்கும் பொம்மையை 'மதலம்பிள்ளை' (பி.இ.5:170) என்று அழைக்கின்றனர். மற்றவற்றிற்கு அச்சிறப்பு இல்லை. இவ்வகையான சடங்குபொம்மைகள் அனைத்தையும் அன்று முதல் இன்று வரை மண்ணால் செய்து வைப்பதையே மக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இவ்வழக்கத்திற்குக் காலங்காலமாகக் குயவர்களே உறுதுணையாக இருக்கின்றனர்.

நவீனப் புழங்குபொருள்களின் வருகையால் மண்ணாலான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் மிகுதியாக வழக்கொழிந்து வருகின்றன. அதே வேளையில் குயவர்களின் மரபான தொழிலை இவ்விதமான சடங்குப் பொருள்களே அடையாளப்படுத்துகின்றன. ஆக, இதிலிருந்து பயன்பாட்டுப் பொருள்களின் இடத்தைக் கைப்பற்றிய அளவிற்குச் சடங்குப்பொருள்களின் இடத்தை நவீனப் புழங்குபொருள்களால் கைப்பற்ற இயலவில்லை என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

## பயன்பாட்டுப் பொருள்களின் மாற்றுப்பரிமாணம்

சமூக மதிப்பீட்டில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களைக் காட்டிலும் சடங்குப் பொருள்கள் கூடுதல் மதிப்புடையதாகக் கருதப்படுகின்றன. எனவேதான் பெரும்பாலான பயன்பாட்டுப் பொருள்கள் வழக்கொழிந்த போதிலும் சடங்குப்பொருள்கள் மிகுதியாக வழக்கத்தில் இருக்கின்றன. இதற்கான காரணத்தை,

> சடங்குப்பொருள்கள் ஒரு குறியீட்டு ஒழுங்கை ஏற்படுத்துகிறது. கரகம், அரசாணிப்பானை, பொங்கல் பானை போன்ற எல்லாமே அடிப்படையில் பானைதான். ஆனால் இப்பானைகள் சடங்கியல் களத்தில் பானையாகப் பொருண்மை பெறுவதில்லை. பானைக்கும் அப்பாற்பட்ட குறியீடுகளின் உறவால் புதிய பொருண்மைகளை உருவாக்குகின்றன. ஒரு ஜடப்பொருளாக, இயக்கமில்லாத ஒரு பனிக்கட்டியைப் போன்று உறைந்து நிற்கும் இக்கைவினைப் பொருள்கள் சடங்கு நிகழ்வின் இயக்கத்தில் மக்களின் கூட்டு நனவிலியில் பண்பாட்டின் அர்த்தப்பாடுகளை மீள நினைத்துப் புதுப்பிப்பவை (பக்தவத்சலபாரதி (க.ஆ.); 2000:17)

என்ற கருத்திலிருந்து விளங்கிக்கொள்ள முடிகின்றது.

மேற்கூறியபடி அன்றாடப் பயன்பாட்டிலிருக்கும் 'மொந்தை' சடங்குப் பொருளாகப் பயன்படுத்தும்போது 'கரகம், கலசம்' என்பன போன்ற பெயரினைப் பெறுகின்றது. இப்பெயர்கள் அனைத்தும் சமூக மதிப்பீட்டால் உருவாக்கப்படுபவையாகும். இதே போல் அடுகலனாகப் பயன்படுத்தப்படும்

'சலாச்சட்டி' சாவுச்சடங்கின்போது நெருப்புச்சட்டியாகப் பயன்படுத்தப்படுகின்றது. மேற்கூறியது போன்ற இவ்விரண்டிற்குமான சமூக நிலைப்பாடு என்பதும் வெவ்வேறானதாகவே இருக்கின்றது.

நீர் நிறைத்து வைக்கும் குடம் அன்றாடப் பயன்பாட்டுப் பொருளாக இருக்கும் போது பெறும் மதிப்பினைவிட சாவுச்சடங்கில் 'பால் குடமாக'ப் பயன்படுத்தப்படும்போது அதற்கான தேவை என்பது நிலைநிறுத்தப்படுகின்றது. ஆகவே அது பெருமதிப்புடையதாகிறது. 'குடம் உடைத்தல்' சடங்கிற்கான பொருளும் இவ்வகைத்தானதே. இவ்வகைப் பொருள்கள் யாவும் சடங்கிற்கென செய்யப்படுவனவல்ல. மாறாக அன்றாடப் பயன்பாட்டிற்காக உற்பத்தி செய்யப்படும் இப்பொருள்களைச் சடங்கிற்கு வேண்டி பயன்படுத்திக் கொள்ளுதல் என்ற இவ்வியல்பான நிலையே இச்சடங்குப் பொருள்களின் தொடக்க நிலையாக இருந்திருக்கலாம். பின்னாளில் 'சடங்கிற்கு' அதிகப்படியான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டபோது அதற்கெனத் தனித்த பொருள் உற்பத்தி செய்யாமல் மேற்கூறியபடி அதற்குரிய பயன்பாட்டுப் பொருள்களை பயன்படுத்தியிருக்க வேண்டும்.

## சடங்குப்பொருளின் மாற்றுப்பரிமாணம்

வீட்டில் அன்றாடம் பயன்படுத்தப்படும் புழங்குபொருள்கள் சில வாழ்வியற் சடங்கு செய்வதற்கான சடங்குப் பொருளாக மாற்றமுறும் போது பெருமதிப்புப் பெறுகின்றன. இப்பொருள்கள் சடங்கு நிகழ்ந்து முடிந்ததும் மீண்டும் தனது பழைய நிலையை அடைந்துவிடுகிறது. சடங்கின்போது மட்டுமே இப்பொருளுக்கான மதிப்பு கூடுகிறது. இதில் இப்பொருளுக்கான மதிப்பென்பது குறைவிலிருந்து கூடுதலை நோக்கி நகர்கிறது. ஆகவே சடங்கு நிமித்தம் முடிந்ததும் சிலபொருள்கள் மீண்டும் தனது பழைய நிலைக்கே வந்து விடுகின்றது. ஆனால் சடங்கிற்கென உற்பத்தி செய்யப்படுகின்ற பொருள்கள் சடங்கு நிமித்தம் முடிந்ததும் அவை சாதாரண பயன்பாட்டுப் பொருளாகப் பயன்படுத்தப்படுவதில்லை. அவ்வாறு அதைப் பயன்படுத்தினாலும் அதன் மதிப்பீடு சற்றும் குறையாமல் அதே நிலையில் இருப்பதைக் காண முடிகிறது.

சான்றாக, திருமணச் சடங்கில் பயன்படுத்தப்படும் 'சாலு கரகங்கள்' திருமணச்சடங்கு நடந்து முடிந்த பிறகு அதை எவரும் பொதுப் பயன்பாட்டிற்குப் பயன்படுத்துவதில்லை. மாறாக அதில் தானியம் நிரப்பி வைப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். அவ்வாறு செய்வதால் வீட்டில் செல்வம் கொழிக்கும் என்பது அவர்களின் நம்பிக்கை. இதுவே சடங்குப்பொருள் சாதாரணப் பொருளாகக் கருதப்படாததற்குக் காரணம். அதில் தெய்வத்தன்மை நிறைந்திருப்பதாக நம்பப்படுகின்றது. இதுபோன்ற நிலையில் சடங்குப் பொருள்கள் மிகுதியான அளவு புழக்கத்திலிருப்பதில்லை. அவை மிகவும் அரிதாகவே இருப்பதால் அதற்குக் கூடுதலான மதிப்புத் தரப்படுகின்றது. இவ்வகையான மதிப்பீடுகள் அனைத்தும் தொண்டை மண்டல வட்டார

கிராமவாசிகளிடமே மிகுதியாக வழக்கத்தில் இருக்கின்றன. தவிர்த்து நகரவாசிகள் இவ்வகையான சடங்குப்பொருள்களைப் பராமரிக்காதவர்களாய் இருக்கின்றனர்.

**படிவ அச்சு உற்பத்தி**

புழங்குபொருள் உற்பத்தியில் மரபான உருவ அறிவுமிக்க குயவர்கள், பிற வகையான மூலப்பொருள்களைக் கொண்டு தொழில் நிறுவனங்களால் உற்பத்தி செய்யப்படுகின்ற நவீனப் புழங்குபொருள்களுக்கும், இன்ன பிற வகையான கருவிகளுக்குமான வடிவ உருக்களைச் செய்து தருபவர்களாகவும் இருந்துவருகின்றனர்.

நிலைத்தன்மையுடைய, கூடுதல் மதிப்புடைய உலோக உருக்களைச் செய்வதற்கான படிவ அச்சுகள் குயவர்களிடமிருந்து நவீனத் தொழில் நிறுவனங்களால் கேட்டுப் பெறப்படுகின்றன. அவ்வாறு பெறப்படும் மண்ணாலான இப்படிவ அச்சுகள் நிலைத்தன்மை அற்றவை என்பதும் மலிவான விலையில் கிடைப்பவை என்பதும் இதற்கான காரணமாகக் கொள்ளப்படுகின்றது. மண்ணாலான நிலைத்தன்மையற்ற இப்படிவ அச்சில் திடத்தன்மை மிக்க உலோக வார்ப்புகளை இட்டு அவை இறுகியதும் நிலைத்தன்மையற்ற மண்ணாலான இப்படிவ அச்சினை உடைத்து அகற்றி அதற்கான உருவத்தினைப் பெறுகின்றனர். இதற்குத் தேவையான படிவ அச்சுகளை மண்ணால் செய்து தருவதில் தங்களுக்குப் போதிய வருமானம் கிடைப்பதால் தாங்கள் இவ்விதமான படிவ அச்சு உற்பத்தியில் ஈடுபடுவதாகச் சென்னை நகர்ப்புற வட்டாரக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். இங்கு இவர்களுக்கான மரபான அறிவு என்பது மதிப்பிழந்து இயந்திரத்தனமான தொழில் நிறுவனத்தின் வெற்று உடலுழைப்பு மதிப்பு பெறுவது சமூகத்திலான தலைகீழ் மாற்றம்.

மண்பாண்ட உற்பத்தித் தொழில் என்பது வெறும் உடலுழைப்போடு தொடர்புடைய ஒன்று; அதில் பெரிய அளவிலான புத்திகூர்மைக்கான தேவை ஏதுமில்லை என்ற கருத்தாக்க மரபில் குயவர்கள் சமூக மதிப்பீட்டில் பெருமதிப்பு பெறாது போயினர். இதற்கு சாதிய அடுக்கில் அவர்களுக்கான இடமே சான்றாகிறது. அக்காலக்கட்டத்தில் அவர்களுக்கான மூளை உழைப்பு என்பதை உடலுழைப்பாகக் கருதும் நிலை இருந்தது. தற்காலத்தில் அவ்வித அறிவு அறியப்பட்டபோதும் அதற்கு பெருமதிப்பு கிட்டாத நிலையையே மேற்கூறிய இச்சூழல் சுட்டுகிறது. ஆனால் அவ்வித அறிவை வெற்று உடலுழைப்பினை மூலாதாரமாகக் கொண்ட நிறுவனங்கள் தங்களுக்கானதாக மாற்றிக் கொள்ளுகின்ற எத்தனத்தையும் இதன்வழி அறிய முடிகின்றது. இதன்படி அக்காலத்தும் இக்காலத்தும் சமூக ஊழியத்திற்காகத் தங்களை அர்ப்பணித்து வாழ்ந்த / வாழ்கின்ற குயவர் சமூகத்தினருக்கான மதிப்பென்பது அங்கீகரிக்கப்படாத ஒன்றாகவே இருக்கின்றது.

## அச்சு வார்ப்பு உற்பத்தி

மண்சார்ந்த புழங்குபொருள்களின் நுகர்வு எல்லை விரிவடையும்போது அதற்கான தேவை மிகுதியாகிறது; ஆதலால் அதற்கான உற்பத்தியும் பெருக்கமடைகின்றது. வட்டாரம் கடந்து முகமறியாதவர்களுக்குச் செய்தளிக்கப்படும் இவ்வகையான புழங்குபொருள்களுக்கான உருவப்பொறிப்பு வெவ்வேறுபட்டதாக இருக்க வேண்டிய அவசியம் இருப்பதில்லை. அதேபோல் ஓரிடத்தில் குயவர்களால் உற்பத்தி செய்யப்படுகின்ற இவ்வித மிகுதியான உருக்கள் மிகப் பரவலாக நுகரப்படுகிறது. ஓரிடத்திலேயே குவிவதற்கான சாத்தியப்பாடில்லை; ஆதலால் சலிப்பினை ஏற்படுத்துவதற்கான எவ்விதமான வழியும் இல்லை எனலாம். மாறாக இவை பரவலாக நுகரப்படுவதால் அனைத்து வட்டார மக்களும் விரும்பும் வகையிலான அழகுணர்ச்சியுடன் கூடிய உருக்கள் செய்யப்படுகின்றன. ஆயிரக்கணக்கில் தேவைப்படுமாயின் அனைத்து உருக்களையும் இவ்வித அழகுணர்ச்சியுடன் தனித்தனியாக உற்பத்தி செய்வதென்பதைச் சாத்தியமற்றதாகக் கருதி அவற்றை அச்சில் வார்த்து ஒரே மாதிரியான அழகுணர்ச்சியுடன் கூடிய பல உருக்களை உற்பத்தி செய்யும் முறை தற்போது மேற்கொள்ளப்படுகின்றது. அதற்குத் தேவையான படிவ அச்சினைக் குயவர் சமூகத்தினரே தேர்ந்த முறையில் செய்தளிக்கின்றனர். சிலபோது அவ்வாறான படிவ அச்சு (die) செய்வதற்கான வார்ப்புகளைச் செய்து தருவதையும் தங்களின் முதன்மையான தொழிலாக நகர்வாழ் குயவர்கள் மேற்கொள்கின்றனர்.

மண்சார்ந்த பொருள் உற்பத்தி குறித்த தொழில்நுட்ப அறிவுடன் செய்யும்படியான புழங்குபொருள்கள் அன்றாடப் பயன்பாட்டு வழக்கொழிந்த நிலையில் அவை அலங்காரப் பொருள்களாகவும் சடங்குப்பொருள்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. அவ்வாறு பயன்படுத்தப்படும் பொருள்களில் 'கொலு பொம்மைகள்' மிகுதி. கொலு வைக்கும் சடங்கிற்கும் அலங்காரத்திற்கும் மிகுதியான அளவு மண்ணாலான பொம்மைகளே பயன்படுத்தப்படுகின்றன. சடங்கோடு தொடர்புடைய இவ்வகையான பொம்மைகளை ஆண்டுதோறும் கணிசமான எண்ணிக்கையில் வாங்கி வழிபடும் வழக்கம் நகர்வாழ் மக்களிடையே மிகுதியாக இருக்கின்றது. ஆகையால் அவர்கள் மிகுதியான மண் பொம்மைகளை நுகர்வதற்குத் தயாராக இருக்கின்றனர். இதை வணிக நோக்கில் அறிந்த குயவர்கள் அல்லாத பிற சமூகத்தினர் அவ்விதப் பொருள் உற்பத்தியைச் செய்ய முனைப்புக் காட்டியிருக்கின்றனர். அவ்வாறு செய்வதால் எந்தவிதமான சமூக இழிநிலைக்கும் அவர்கள் தள்ளப்படுவதில்லை. ஏனெனில் அவர்களுக்கான விற்பனைச் சந்தையில் பணம் மட்டுமே முதன்மை. உற்பத்தி செய்பவர்களோ நுகர்பவர்களோ அல்ல. ஆகையால் சமூக மதிப்பீடு குறித்த கவலையின்றி காசுபார்க்க நினைக்கும் பிற சமூகத்தினரும் இத்தொழிலை மேற்கொள்ள விழைகின்றனர். அவ்வாறு விழைபவர்களுக்கு அதுகுறித்த அடிப்படை அறிவு இல்லாதபோது அதில் தேர்ந்த குயவர்களை நாடி அதற்கான பலவகைப்பட்ட படிவ அச்சுகளைக் கேட்டுப் பெறுகின்றனர். குயவர்களும் தங்களது தொழிற்திறனைக் கொண்டு அவ்வித

'பொம்மை உற்பத்திக்கான' (பி.இ.5:158) படிவ அச்சினைச் செய்து விலைக்கு விற்கின்றனர். இதில் பணம் மட்டுமே பரிவர்த்தனைப் பொருளாகிறது. தவிர்த்து ஒருவரை ஒருவர் அறிந்தாரில்லை. இது குறித்து சென்னை கொசப்பேட்டைப் பகுதியைச் சேர்ந்த ஜோதிலிங்கம் குறிப்பிடுகையில்,

> நான் செய்யிற இந்தத் தொழில் தற்காலத்திற்கானது. சட்டி, பானை செய்யிறதுதான் இதுக்கு அடிப்படை. அதிலிருந்துதான் தற்காலத்துக்குத் தகுந்த மாதிரி இந்தத் தொழில நான் செய்துட்டு வர்றேன். களிமண் பொம்மை செய்யிறது எனக்குப் பகுதிநேர தொழில்தான். சினிமா கம்பெனிக்கு செட்டிங் போட போயிடுவேன். அதுதான் எனக்குப் பிரதான வேலை. களிமண் பொம்மை செய்யிறப்போ எந்த பொம்மை செய்யப்போறமோ அந்த பொம்மை செய்யிறதுக்கான களிமண்ணை பக்குவமா எனக்குத் தேவையான மாதிரி பெசைஞ்சுக்குவேன். ஏனென்றால் அந்த களிமண் பொம்மையில் நுணுக்கமான சில வேலைகளை நான் செய்ய வேண்டியிருக்கும். அதனால ரொம்ப மிருதுவா பெசஞ்சி களிமண் பொம்மையினை மிக நுணுக்கமா செய்வேன். நான் இப்ப செய்யிறது ஒரு பொம்மையில்லை. ஆயிரக்கணக்கான பொம்மை அப்படிங்கிற நெனப்புலயே நான் அதைச் செய்வேன். இதுதான், பல ஆயிரம் பொம்மைகளை உருவாக்கப்போற படிவ அச்சுக்கான (Die) வார்ப்பு (Mould). அதுக்கப்புறம் அத கல்நார் (Plast of Paris) மாவுல வச்சி படிவ அச்சு (Die) செய்து தருவேன். அதுக்கு அப்புறம் அத வச்சி வீட்டிலிருக்கும் பெண்கள் அதே மாதிரியான பல உருவ பொம்மைகளைக் களிமண்ணால உற்பத்தி செய்திடுவாங்க. இத நான் தொழில் ரீதியாக வந்து கேக்கறவங்களுக்கும் செய்து தந்திருக்கிறேன். அப்படிக் கேட்டு வர்றவங்க பெரும்பாலும் வேற சமூகத்தைச் சார்ந்தவங்களாகத்தான் இருக்குறாங்க (ஜோதிலிங்கம்)

என்கிறார். இவர் குறிப்பிடும் இவையே தற்போதைய நகர்ச்சூழலில் மண்சார் பொருள் உற்பத்தியில் ஈடுபடும் குயவர்களுக்கான நிலைப்பாடாகம் அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கான நிலைப்பாடாகவும் இருக்கின்றது.

### *காகிதப்பொம்மைகள்*

குயவர்கள் மண்ணாலான புழங்குபொருள்கள் உற்பத்தி செய்வதை அடையாளமாகக் கொண்டுள்ளனர். அதுவே அவர்களுக்கான முழுமுதல் குலத்தொழில் என்றிருந்த நிலை தற்போது முற்றிலும் மாறி வருகின்றது. மண்ணாலான புழங்குபொருள்களின் பயன்பாடு குறைந்து அலுமினியம், பித்தளை, எவர்சில்வர் முதலானவற்றாலான புழங்குபொருள்கள் அவ்விடத்தைக் கைப்பற்றியதும் காலங்காலமாக மண்பாண்ட உற்பத்தியில் ஈடுபட்டிருந்த குயவர்கள் அதை விடுத்து வெகுசன மக்களின் தேவையறிந்து அதற்கேற்றாற்போல தொழில் செய்ய முனைப்புக் காட்டியிருக்கின்றனர். அவ்வாறு அவர்கள் மண்பாண்ட உற்பத்தியிலிருந்து விலகி மேற்கொள்ளும் அது சார்ந்த மற்றொரு தொழில் காகிதப்பொம்மை செய்தல். இதற்கான முதன்மை மூலப்பொருள் காகிதத்

துகள்கள். இதனால் செய்யப்படும் பொம்மைகள் வெகு எளிதில் உடைவதில்லை என்பதால் மக்களிடையே இத்தன்மையிலான பொம்மைகளுக்கு வரவேற்பு அதிகமாயிருக்கின்றது. ஆகையால் மண்பாண்ட உற்பத்தியில் ஈடுபட்டிருந்த குயவர்கள் தற்போது கணிசமான அளவில் இத்தொழில் செய்வதில் முனைப்புக் காட்டுகின்றனர். இவ்வாறான இத்தொழிலில் ஈடுபடும் குயவர்கள் வடதமிழக வட்டாரத்தில் மிகுதியாக இருக்கின்றனர். தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட இவர்கள் "பக்த்தர்" என்றழைக்கப்படுகின்றனர்.

### *கல்நார் பொம்மைகள்*

மண்பாண்டத் தொழிலிலிருந்து 'காகிதப்பொம்மை' தயாரிக்கும் தொழிலுக்குத் தாவிய குயவர்கள் அதையே முழுமுதற் தொழிலாகக் கொண்டு செயல்பட்டு வருகின்றனர். இது இயற்கை மூலப்பொருளான மண்ணைக் கொண்டு மரபான தொழில்நுட்ப அறிவால் எச்சார்புமின்றி இத்தொழிலைச் செய்து வந்த குயவர்கள் இயந்திரமயமான தொழில்நுட்ப அறிவின் துணையுடன் செயல்படத் தொடங்கியதன் முதற்படி. இதன் அடுத்தகட்ட வளர்ச்சி 'கல்நார் பொம்மை' (Plast of Paris Doll) தயாரித்தல். இத்தொழில் சில செயற்கையான வேதிப்பொருள்களைக் கொண்டு செய்யப்படுகின்றது. இருப்பினும் இத்தொழிலில் உற்பத்தி செய்யப்படும் அனைத்துப் பொருள்களுக்கும் அடிப்படையாக அமைவது மண்ணால் செய்து உருவாக்கப்படும் வார்ப்பு அச்சுகளே (Mould (or) Die) ஆகும். ஆகவே சுதைச்சிற்பம் உள்ளிட்ட உருவப்பொறிப்பில் ஊறிப்போன குயவர்களுக்கு இயல்பாகவே இத்தொழில் ஒத்துப்போகிறது. பெரும்பாலும் பிற சாதியினரால் இத்தொழிலைச் செய்ய இயலுவதில்லை. இத்தொழிலில் குயவர்களுக்கான மரபான பயன்பாட்டுப் பொருளறிவு மழுங்கி பெருநிறுவனங்களின் இசைவுக்கேற்ப கலைப்பொருள்களை உற்பத்தி செய்துதரும் தொழிலறிவு மிகுந்து காணப்படுகின்றது.

### *சிமெண்ட் சிற்பங்கள்*

'சுதைச்சிற்பம்' செய்தலை மரபான தொழிலாகச் செய்து வந்த குயவர்கள் தற்போது சிமெண்ட்டாலான சிலைகள் உள்ளிட்ட கலை வேலை செய்யும் பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். சிமெண்ட் (Cement) சிற்பம் செய்யும் இக்கலை கற்சிலைகளை உருவாக்கும் சிற்பக்கலைக்கும் மண்சிலைகள் உருவாக்கும் 'சுடுமண்' கலைக்கும் இடைப்பட்டதாகும். "கல்லில் உருவத்திற்குத் தேவையில்லாத பகுதிகளை நீக்கும்போது உருவம் வெளிப்படுகின்றது. மண் சிற்பமோ ஒவ்வொரு பகுதியாக ஒட்டவைக்கப்பட்டு முழு உருவமாக உருவாக்கப்படுகின்றது" (சு. இரவிக்குமார்; 1991:95). ஆனால் 'சிமெண்ட்' சிற்ப உருவாக்கத்தில் மேற்கூறிய இவ்விரு தொழில்நுட்ப உத்தியும் கையாளப்படுகின்றன. இருப்பினும் இச்சிற்ப உருவாக்கமென்பது 'சுதை சிற்ப' உருவாக்கத்துடனே பெரிதும் ஒத்துப்போகின்றது. கல் கடினத்தன்மை கொண்டது. களிமண் நெகிழ்வுத்தன்மை கொண்டது. சிமெண்ட் கலவை குறுகியகால நெகிழ்வுத்தன்மை கொண்டது. ஆதலால்

களிமண்ணால் சுதைச்சிற்பம் செய்தலை ஒத்ததாயிருக்கும் இவ்வேலை சற்று துரிதமாகச் செய்யப்படவேண்டிய ஒன்று. ஆகையால் குயவர்களுக்குச் சிமெண்ட் சிற்ப உருவாக்கம் என்பது எளிதான ஒன்றாக அமைந்துவிடுகின்றது. எனவே பெரும்பாலான குயவர்கள் சிமெண்ட் சிற்ப உருவாக்கப்பணியில் ஈடுபடுகின்றனர். இத்தொழில் செய்யும் இவர்களை 'ஸ்தபதி' என்றழைக்கும் வழக்கம் தற்போது நடைமுறையில் இருந்து வருகின்றது.

## தொகுப்புரை

- சமகால சமூகச்சூழலில் மண்சார் புழங்குபொருள்களுக்கும் அதனை உற்பத்தி செய்தளிக்கும் குயவர் குடியினருக்குமான நிலைப்பாடு என்னவாயிருக்கிறது என்பதை இவ்வியல் எடுத்துக் கூறியுள்ளது.

- இவ்வாய்வுக் களமான தொண்டை மண்டல வட்டாரத்தில் குயவர்களைக் 'குலாலர்கள்' என்றழைக்கும் வழக்கம் இருக்கிறது. இதே போன்று பிற வட்டாரங்களில் 'கும்பார்', 'கும்ஹார்' என்றழைக்கும் நிலையும் இதற்கு முன்னான காலகட்டங்களில் இவர்கள் 'வேட்கோவர்கள்', 'மட்பகைஞர்கள்' என்றழைக்கப்பட்டிருந்த நிலையும் மனங்கொள்ளத்தக்கது. இவற்றை இவர்களுக்கான சாதிப்பெயர்களாகக் கொள்ளலாம். இது தவிர்த்து இதேபோல் இவர்களுக்கான பட்டப்பெயர்களும் மரியாதைப் பெயர்களும் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபட்டிருக்கின்றன.

- சாதிவாரியாகப் பிரிக்கப்பட்டிருக்கும் இச்சமூகச்சூழலில் குயவர்களுக்கான நிலைப்பாடு என்ன? அதாவது மேல் - கீழ் சாதிய அமைப்பில் அவர்களைப் பற்றிய பதிவு என்னவாயிருக்கின்றது? என்பன பற்றிய செய்திகள் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

- மண்ணாலான பொருள் உற்பத்தியை அடையாளமாகக் கொண்ட குயவர் சமூகத்தினர் அத்தொழில்செய்முறை அடிப்படையில் இரண்டு வகையாகப் குறிக்கப்பட்டிருக்கின்றனர். அவை, 1. தள்ளுகுசவர், 2. திரிகோல் குசவர் என்பனவாகும். இப்பாகுபாடு தொழில்முறை வேறுபாட்டால் வந்தது. ஆதலால் அதற்கான சூழல்சார்ந்த நெருக்கடிகளும் ஆராய்ந்து அறியப்பட்டிருக்கின்றன. மேலும் மொழி மற்றும் சடங்கின் அடிப்படையில் வேறுபட்டிருக்கும் குயவர்களின் நிலைப்பாடுகள் குறித்தும் பேசப்பட்டிருக்கின்றன.

- ஊழியக் குடிகளான குயவர்கள் பொருள் உற்பத்தி செய்து தருபவர்களாக மட்டுமின்றி மிக முக்கிய ஊர்ச்சடங்கு நிகழ்த்துனர்களாகவும் இருந்திருக்கின்றனர். அவற்றுள் முதன்மையானதாக 'அக்கி எழுதுதலைக்' கொள்ளலாம். ஒருவிதத்தில் இது சடங்காகச் செய்யப்படும் ஒருவகை மருத்துவம். மண்ணை மருந்தாக்கித் தரும் இவர்களின் இவ்வறிவுத் திறம் சமூகத்தில் பெருமதிப்பற்றதாகக் கருதப்பட்டதால் அவற்றைச் சடங்காகக் கொள்ளும் நிலை உருவாகியிருக்க வேண்டும். ஆகையால் அவற்றை

வெளிச்சமிட்டுக் காட்டும் பொருட்டு தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்பட்டு வரும் மண்பாண்ட உற்பத்திக்கான தொழில்நுட்ப அறிவினை ஆவணப்படுத்தும் வகையில் மண்பாண்ட உற்பத்திக்குத் தேவையான மூலப்பொருள்கள், அவற்றைப் பதப்படுத்தும் முறை, உற்பத்திக் கருவிகள், அவற்றைக் கொண்டு பொருள் வனையும் விதம், வனைந்த பொருள்களைச் சுட்டு திடப்படுத்தும் முறை முதலானவை குறித்து இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

- மண்பாண்ட உற்பத்தியில் பயன்படுத்தப்படும் மரபான தொழில்நுட்ப முறைகள் காலமாற்றத்தால் சிற்சில வேறுபாடுகளை உட்செறித்துக் காணப்படுகின்றன. அவற்றைக் காலத்திற்கேற்றவாறு தங்களது தொழிலைத் தகவமைத்துக் கொள்ள முயலும் குயவர்களுடைய சூழலறிவின் அடுத்தகட்ட வளர்ச்சியாகக் கருதமுடிகின்றது. இதற்குச் சான்றாகக் குயவர்களின் மாற்று மூலப்பொருள் உருவாக்கத்தினைக் குறிப்பிட இயலும். காலமாற்றத்தை உள்வாங்கி இந்நிலைப்பட்ட சமகால சமூகச் சூழலில் உற்பத்தி செய்யப்படும் மண்சார் புழங்குபொருள்களுக்கான முக்கியத்துவம் குறித்து இவ்வியலில் பேசப்பட்டிருக்கின்றது. மேலும் அவை அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள், சடங்குப்பொருள்கள் என இரண்டாகப் பிரித்து வகைதொகைச் செய்யப்பட்டிருக்கின்றன. இவற்றில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களாகத் திகழும் பானை, சட்டி, தோசைக்கல், அடுப்பு, மடக்கு, சாணகை, தடசிப்பு உள்ளிட்ட அடுகலன்களையும் தண்ணீர்ப்பானை, கழுநீர்த்தொட்டி, சாடி முதலான நீர்க்கலன்களையும் குதிர், ரஞ்சகம், உறை முதலான தானியக் கலன்களையும் பற்றி விவரிக்கப்பட்டுள்ளன.

- பயன்பாட்டடிப்படையில் பிரித்து இனங்காணப்பட்ட மண்ணாலான பொருள்களின் வடிவமும் அவற்றிற்கான தொழில்நுட்ப அறிவும் விளக்கப்பட்டுள்ளது. இது மரபானது. ஆனால் மரபு மாற்றத்தை உட்செறித்திருக்கும் தற்போதைய நகர்மயச் சூழலில் மண்ணாலான புழங்குபொருள்களின் பயன்பாடு வெகுவாகக் குறைந்து வருகிறது. ஆயினும் சிலபோது நகர்சார் உணவகங்கள் அதன் கவர்ச்சிகரமான விளம்பரத்திற்காக வேண்டி மண்ணாலான புழங்குபொருள்களைப் பயன்படுத்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். அதனையும் அவ்வகைப்பட்ட உணவகங்களுக்குத் தேவையான அடுகலன்களை உற்பத்தி செய்து தரும் குயவர்களின் தொழில்முறை உத்திதனையும் இவ்வியலில் விரிவாக எடுத்துக்கூறப்பட்டுள்ளது. மேலும், மண்ணாலான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களின் மீது அதிக நாட்டம் கொண்டிராத நகர்வாழ் மக்களுக்கான அலங்காரப் பொருள்களை மண்ணால் செய்து தருவதை வழக்கமாகக் கொண்டிருக்கும் குயவர்களின் தொழில்முறை வேறுபாடும் இவ்வியலில் பேசப்பட்டுள்ளது. இவற்றுடன் இன்னபிற மரபார்ந்த

தொழிலுக்குத் தேவையான பயன்பாட்டுப் பொருள்களைச் செய்தளிப்பதன் வழி உருவான சமூக உறவுகள் குறித்த செய்திகளையும் இவ்வியல் பதிவு செய்துள்ளது.

- மனித வாழ்வியலில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களைத் தொடர்ந்து சடங்குப் பொருள்களும் முக்கியத்துவம் பெறுகின்றன. பெரும்பாலான சடங்குப் பொருள்களை மண்ணால் செய்து பயன்படுத்துவதையே வழக்கமாகக் கொண்ட வெகுமக்களுக்குத் தேவையான சடங்குப் பொருள்களை இரண்டு வகையாகப் பாகுபடுத்தி ஆராயப்பட்டிருக்கின்றது. இதனைத் தொடர்ந்து உற்பத்தி அடிப்படையில் சடங்கிற்கென உற்பத்தி செய்யப்படுகின்ற சடங்குப்பொருள்கள் குறித்தும், சிலபோது அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் சடங்குப்பொருளாகப் பயன்படுத்தப்படுவது குறித்தும் இவ்வியல் ஆராய்ந்துள்ளது. இதனை இத்தொழிலின் நசிவாகக் கருதி இதற்கான அடுத்தடுத்தகட்ட வளர்ச்சி நிலைகள் ஆராயப்படுகின்றன. அதாவது நவீனத் தொழில்நுட்ப வளர்ச்சிக்குப் பின்னான காலகட்டத்தில் மரபார்ந்த மண்சார் புழங்குபொருள் உற்பத்தியில் ஏற்பட்ட தேக்க நிலையினையும் அதனால் அத்தொழிலையே வாழ்வாதாரமாகக் கொண்ட குயவர்கள் அவ்விதத் தொழில்நுட்பத்தினை அடிப்படையாகக் கொண்டு 'பொம்மைத்' தொழிலில் மடைமாற்றம் செய்திருக்கும் தற்போதைய நிலையினையும் இவ்வியல் விவரித்திருக்கின்றது.

ஒவ்வொரு மனிதரும் தனக்குப் புறத்தேயுள்ள மற்ற மனிதர்களோடும் இயற்கைப் பொருள்களோடும் தொடர்பு கொண்டிருக்கின்றார்கள். அவ்வாறு தொடர்பு கொள்ளும்போது ஒவ்வொரு மனிதரும் மற்ற மனிதர்களிடம் தங்கள் அடையாளத்தைத் தேடுகின்றனர். இதேபோன்று "ஒவ்வொரு மனிதரும் தங்களுக்குப் புறத்தேயுள்ள இயற்கைப் பொருள்களிலும் தங்களின் பொது அடையாளங்களைத் தேடுகின்றனர். இத்தகையத் தேடல்களின் விளைவாக அவரவர்களுக்கான பொது அடையாளங்கள் கண்டறியப்படுகின்றன. இவை சாதி அடையாளங்களாகவோ வட்டார அடையாளங்களாகவோ பொதுவான குண இயல்புகளாகவோ இருக்கலாம்" (இ. முத்தையா; *2010:211*). இதில் சாதி அடையாளம் எனப்படுவதைக் கற்பிதமாகக் கொள்ளலாம். ஆனால் வட்டார அடையாளம் எனப்படுவது அவரவரின் வாழ்முறையை மையமிட்டதாக இருக்கிறது. அவரவர் வாழ்முறையைச் சுற்றுச்சூழலே நிர்ணயம் செய்கிறது. ஒவ்வொருவரின் வாழ்முறை நகர்விற்கும் தேவையான புழங்குபொருள்கள் அச்சுற்றுச்சூழலிலிருந்தே பெறப்படுகின்றன. ஆதலாலேயே அவை அச்சூழலை ஒட்டிய வட்டார அடையாளத்திற்குள் இனங்காணப்படுகின்றன. அவ்வாறான அடையாளப்படுத்தலுக்கு முக்கியக் காரணியாக விளங்குவது அவ்வட்டார மண்ணும் மண்சார்ந்த விளைபொருளுமேயாகும். இவ்விரு வகைத்தான இயற்கைப் பொருளிலிருந்து மனித வாழ்வியலுக்குத் தேவையான பயன்பாட்டுப் பொருள்களை மிகச்சிலரே தொடர்ச்சியாகச் செய்தளிக்கின்றனர். இத்திறன் மரபு சார்ந்து வழங்கி முதன்மைத் தொழிலாகப் பின்பற்றப்பட்டு அது சார்ந்த குடிகள் உருவாகக் காரணமாயின. இதையொத்து மக்களின் தேவைகளை நிவர்த்தி செய்தவர்களாகச் சமூக இயக்கத்தில் மறுக்கமுடியாத அங்கத்தினராகக் குயவர் உள்ளிட்ட பிற கைவினைக்குடிகளைக் குறிப்பிடலாம்.

குயவர்கள் மண்ணாலான புழங்குபொருள்களை உற்பத்தி செய்துதரும் குடியினராக இருந்திருக்கின்றனர். மண்ணோடு தொடர்புடைய இத்தொழில் சமூக மதிப்பீட்டில் அழுக்கானதாகக் கருதப்பட்டதால் இத்தொழில் செய்வதற்குப் பிற குடியினர் ஆர்வம் கொண்டிருக்கவில்லை. ஆதலால் இத்தொழிலைக் குயவர் குடியினர் மட்டுமே செய்திருக்கின்றனர் / செய்யப் பணிக்கப்பட்டிருக்கின்றனர். அவ்வாறு குயவர்களால் உற்பத்தி செய்தளிக்கப்பட்ட மண்ணாலான புழங்குபொருள்கள் ஒட்டுமொத்த சமூகத்திற்கான நுகர்வுப்பொருளாக இருந்திருக்கின்றன. சமூக அசைவியக்கத்திற்குத் தேவைப்படும் இன்றியமையாத பொருள்களுள் இவை முதன்மையானவை என்பதே இதற்குக் காரணமாயிருக்கலாம்.

மண்பாண்டப் பொருள்கள் சமுதாயத்தின் தேவையை முன்னிறுத்தியே நிலைப்பேறு கொண்டிருக்கின்றன. அன்றாடப் பயன்பாடு, சடங்குப் பயன்பாடு என்ற இருநிலைகளிலும் பயன்படுத்தப்பட்ட இவ்விதமான புழங்குபொருள்களை உற்பத்தி செய்துதரும் குயவர்கள் அதனைத் தங்களது கடமையாக நினைத்துச் செய்திருக்கின்றனர். இதனைக் குடிஊழியம் எனக் குறிக்கும் வழக்கம் இருந்திருக்கிறது. இவ்வாறு ஊழியமாகச் செய்தளிக்கப்படும் இவ்விதப் புழங்குபொருள்களுக்கு மாற்றாக நிலவிளைபொருள்களை குடிமக்கள் தந்திருக்கின்றனர். இதை மேரை, மெராசி, குடிமை, வரும்படி என்ற பெயர்களால் குறிப்பிட்டிருக்கின்றனர். அவ்வாறு குறிப்பிடும் இம்முறை தற்போதும் வழக்கில் இருக்கிறது. இது குயவர் குடியினர் வாழ்வாதாரத்திற்கானதே தவிர அவர்கள் உற்பத்தி செய்து தருகின்ற புழங்குபொருள்களுக்கு நிகரான மதிப்புடையதல்ல. அதாவது உழைப்பிற்கேற்ற கூலி அல்ல. இதற்குக் காரணம் உடலுழைப்பு தவிர்த்து வேறெந்த பெருமுதலீடுமற்ற இத்தொழில் பொருளாதாரத்தோடு தொடர்புடையதாகக் கருதப்படவில்லை. தவிர்த்து இது சமூகஉறவோடு தொடர்புடைய ஒன்றாகக் கருதப்பட்டிருக்கின்றது. இந்நிலை முன்னாளில் முற்றிலும் மாறியிருக்கின்றது. இது குறித்த பண்பாட்டு மானிடவியல் அறிஞர் ஜான் மொனகன் (John Monagan) கூறும் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது. அதாவது,

> எளிய சமூகங்களில் காணப்படும் பரஸ்பர பரிவர்த்தனையும் பரிமாற்றமும் முற்றிலும் ஒரு பொருளாதார நடவடிக்கையாகும். என்றாலும் அப்பரிவர்த்தனைகளால் ஏற்படும் சமூக உறவு பரிவர்த்தனையின் பொருளாதாரத் தன்மையைக் குறைத்துச் சமூக உறவை மேலோங்கச் செய்துவிடுகின்றது. கவனமாக நோக்கினால் சமூகத்தில் ஒவ்வொரு பரிவர்த்தனையும் தனித்தன்மை வாய்ந்ததாகும். இத்தகு பரிமாற்ற முறைக்கு நேர்மாறானதாக சந்தை, பணம் சார்ந்த பொருளாதார முறை காணப்படுகிறது. இதுவே நவீனப் பொருளாதார முறையின் அடித்தளமாக உள்ளது. பொருள்களின் மதிப்பைப் பொதுமைப்படுத்தி, தரப்படுத்தி இன்னொன்றாக (பணமாக) மாற்றிவிடுவதன் மூலம் இப்பொருள்களுடைய பரிமாற்றத்தின் வேகமும் அளவும் அதிகரிக்கின்றன (ஜான் மொனகன்; **2005:16**)

எனக் குறிப்பிடுகிறார். இந்நிலை குயவர்களுக்கான சமூக உறவுநிலைத் தொடர்பை அறுத்து அவர்களை மக்களிடமிருந்து கொஞ்சங்கொஞ்சமாக அந்நியப்படுத்துவதற்கான அடிப்படை.

ஒரு சமுதாயத்தின் பொருளாதாரப் பிரச்சினைகள் எவ்வாறு தீர்மானிக்கப்படுகின்றன என்பதைப் பொருத்தே அச்சமுதாயத்தின் பண்பு தீர்மானிக்கப்படுகின்றது. சமூக அசைவியக்கத்தில் ஒவ்வொரு குடியினரும் தங்களுக்குத் தேவையான புழங்குபொருள்களை வாங்கிப் பயன்படுத்தும் அளவிற்கான பொருளாதார நிறைவைக் கொண்டிருந்திருக்கின்றனர். அப்போது ஒட்டுமொத்த சமூகத்தினரின் வாழ்வியற் தேவையைக் கைவினைக் குடிகள் நிறைவு

செய்வதும் கைவினைக் குடியினரின் வாழ்வியற் தேவையை ஒட்டு மொத்த சமூகத்தினரும் சேர்ந்து நிறைவு செய்வதையும் வழக்கமாகக் கொண்டிருந்ததால் அவர்களுக்குள்ளான சமூக உறவுநிலை பலம் பொருந்திய ஒன்றாக இருந்திருக்கின்றது. இவ்வழக்கம் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்வதற்கான கூட்டு மனநிலையை மக்களிடம் உருவாக்கியிருக்கின்றது. ஆனால் பின்னாளில் மிகவும் மாறுபட்ட அரசியல் கோட்பாடுகளுடனும் வழிமுறைகளுடனும் இந்தியாவிற்கு வந்த ஆங்கிலேயர்களால் தபால்தந்தி, போக்குவரத்து, வங்கி முதலானவை அறிமுகப்படுத்தப்பட்டன. ஆதலால் சீரான வாழ்க்கைத் தரத்தை மேற்கொண்டிருந்த சமூகத்தில் ஏற்ற இறக்கங்கள் ஏற்படத் தொடங்கின. இதனைத் தொடர்ந்து நவீன இயந்திரங்களின் வருகையால் மரபுவழியில் வந்த கருத்துகள், நம்பிக்கைகள், மதிப்பீடுகள் ஆகியவை திருத்தியமைக்கப்பட்டதனால் சமூக ஒழுங்கில் நேர்முகமான மற்றும் மறைமுகமான மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் மரபான தொழில்நுட்ப முறையில் ஏற்பட்ட மாற்றமேயாகும். இதற்கு வலுசேர்க்கும் வகையில் பின்வரும் கருத்து அமைந்திருக்கின்றது.

> மரபுவழித் தொழில்நுட்ப முறைகள் சமூகத்தளத்தின் மையத்தைச் சார்ந்தவையாக இல்லாமல் பரவலாக்கப்பட்டவையாக இருந்தன. மேலும் இயற்கையை வெல்வதை நோக்கமாகக் கொண்டவையாக இல்லாமல் இயற்கையைப் புரிந்து கொண்டு அதனோடு இணக்கமான வாழ்க்கையை அமைத்துக் கொள்வதையே நோக்கமாக கொண்டிருந்தன (இ. முத்தையா; *2010: 183).*

ஆனால், நவீன தொழில்நுட்ப முறைகள் அனைத்தும் இயற்கையை வெல்வதை நோக்கமாகக் கொண்டு அதற்கு எதிரான திசையில் செயல்படத் தொடங்கின எனலாம். அதாவது இவை அனைத்தும் இயல்பு மீறியனவாக அமைந்தன. ஆகையால் இவை மக்களிடையே வியப்பினையும் பகட்டினையும் ஏற்படுத்தியிருக்கின்றன. மேலும், இது மக்களை மரபார்ந்த தொழில்நுட்ப முறையிலிருந்து நவீனத் தொழில்நுட்பத்திற்கு மாறச் செய்வதற்குக் காரணமாக அமைந்திருக்கிறது. இதையே அறிவியல் வளர்ச்சி எனக் கருதி வாழ்முறையை எளிமைப்படுத்தித் தரும் இவ்வகையான எல்லா கருவிகளையும் புழக்கத்தில் வைத்திருப்பதை நாகரிகமெனக் கொள்ளும் மனநிலை உடையவர்களாகச் சமகால வெகுமக்கள் இருக்கின்றனர். இவ்விதமான வளர்ச்சியை நோக்கியதாகக் காணப்படும் இன்றைய சமூகநிலையை ஒருவிதமான முதலாளிய/அதிகார வர்க்கத்தின் சூட்சுமச் செயல்பாடாகக் கொள்ளலாம்.

மேலும், மேலே குறிப்பிட்டதுபோல் இயந்திரங்களின் வருகை சமூகத்தில் பெரிய அளவிலான ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்தின. அதாவது பொருளாதார நிலை பரவலானதாக இல்லாமல் மேல் மட்டத்தினரிடம் மட்டும் குவியும்படியான நிலையை ஏற்படுத்தின. ஆதலால் அடித்தட்டு மக்களிடையேயான பண்டமாற்றில் சுணக்கம் ஏற்பட்டதெனலாம். ஆகையால் நிலைத்தன்மை அற்ற மண்பாண்டப் பொருள்கள் உள்ளிட்ட புழங்குபொருள்களை வாங்கிப் பயன்படுத்துவதற்கான

பொருளாதார வசதி எல்லோருக்கும் இயல்பாக இல்லை. அத்தருவாயிலில் நவீனத் தொழில்நுட்ப முறையில் உருவாக்கப்பட்ட பிளாஸ்டிக், ஸ்டீல் உள்ளிட்ட மூலப்பொருள்களால் ஆன பயன்பாட்டுப் பொருள்களை மக்களிடம் சென்று சேர்க்கும் வணிக ரீதியான வேலையை முதலாளிய வர்க்கம் செய்திருக்கிறது. இவ்வகையான புழங்குபொருள்கள் அடிக்கடி உடைந்து போகாமல் இருக்கும் நிலைத்தன்மை உடையதாக இருப்பதால் இவற்றை வெகுமக்கள் விரும்பி வாங்கிப் பயன்படுத்துகின்றனர். இதற்கு இம்மாதிரியான பகட்டுத்தன்மை ஒரு காரணமாக இருந்தாலும் நிலைத்தன்மையற்ற புழங்குபொருள்களை சுழற்சிமுறையில் தொடர்ச்சியாக வாங்கி பயன்படுத்துமளவிற்குப் பொருளாதார நிறைவு அற்றவர்களாக மக்கள் மாற்றப்பட்டிருப்பது மற்றொரு காரணமாகக் கொள்ளலாம். இவ்வகையான மறைமுக ஆதிக்கம் மக்களிடையேயான கூட்டுணர்வைக் குலைத்திருக்கிறது. மேலும் மரபான புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்ட குயவர் உள்ளிட்ட பிற கைவினைக் குடிகளை மக்களிடமிருந்து அந்நியப்படுத்தியிருக்கிறது.

அன்றாடப் பயன்பாட்டில் மண்சார்ந்த புழங்குபொருள்களின் பயன்பாடு அருகிப் போனதால் அவற்றை உற்பத்திசெய்தலை மட்டுமே முதன்மைத் தொழிலாகக் கொண்ட குயவர்கள் அதிலிருந்து விலகி மண்ணாலான உருவபொம்மைகள், இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்கள், வழிவழியாகப் பின்பற்றப்பட்டு வரும் மறக்க முடியாத, மறுக்க இயலாத மரபான சடங்கிற்குத் தேவையான சடங்குப்பொருள்கள் மட்டுமே உற்பத்தி செய்து தருபவர்களாக இருக்கின்றனர். இவர்கள் மக்களின் தேவையறிந்து அதற்கேற்பத் தனது உற்பத்தி முறையை அமைத்துக் கொண்டிருக்கின்றனர். இந்நிலை அவர்களின் தன்னிலையை இழக்கச் செய்து அதன்வழி மரபிலிருந்து நவீனத் தொழில்நுட்ப முறைக்கு இழுத்து வருவதாக இருக்கின்றது. "இயற்கையோடு இயைந்த மண்ணாலான புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்ட குயவர்கள் அவ்வகையான பொருள்களின் நிலையற்ற தன்மையை மனத்தில் நிறுத்திச் செயல்படும் மக்களின் நுகர்வுத் தன்மை குறையும்போது அவர்களின் விருப்பத்திற்கேற்ப நிலைத்தன்மையுடைய மூலப் பொருள்களால் அவர்களுக்குத் தேவையானவற்றை உற்பத்தி செய்து தருவதைத் தற்போதைய தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். அதாவது பிளாஸ்ட் ஆப் பேரிஸ் மாவு (Plast of Paris) மற்றும் பைபர் (Fibre) மூலப்பொருள்களைக் கொண்டு வீட்டிற்குத் தேவையான பொம்மை உள்ளிட்ட அலங்காரப் பொருள்களைச் செய்து தருகின்றனர். இதனால் பொருள் உற்பத்திமுறை, வணிகமுறை, சமூக பண்பாட்டு அமைப்புகள், சமூக மதிப்புகள் போன்றவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டன. இவ்வாறான மாற்றத்திற்கு உட்பட்ட இக்காலகட்டத்தினைப் பின்கைவினைக் காலம் அல்லது நவீன நிலைக்காலம் என்றழைக்கலாம்" (இ. முத்தையா; *2010:161*). இக்காலகட்டத்தில் மண்சார் புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்ட / ஈடுபடுகின்ற குயவர்களுக்கும் குடிமக்களுக்குமான சமூக உறவு என்னவாயிருக்கிறது என்பதையும் அவர்களால் உற்பத்தி செய்யப்படும் புழங்குபொருள்களின் நிலைப்பாடு குறித்தும் இவ்வியல் ஆய்கின்றது.

## மண்சார்ந்த புழங்குபொருள்களின் மாற்றுப்பரிமாணம்

நவீனத் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு முன்னான காலகட்டத்தில் மக்களுக்குத் தேவையான அனைத்துத் தேவைகளும் நேரடி இயற்கை விளைபொருளிலிருந்தே பெறப்பட்டிருக்கின்றன. அவை மண், கல், மரம், செடி, கொடி முதலானவைகளாகும். அதற்குப் பின்னான காலகட்டத்திலேயே இரும்பு, செம்பு, வெண்கலம் உள்ளிட்ட உலோக வகைகள் புழக்கத்தில் வந்தன என்பது வரலாறு மற்றும் தொல்லியல் துறை அறிஞர்களின் கருத்தாக இருக்கிறது. இதனடிப்படையில் நோக்கும்போது தொடக்ககாலத் தொழில்நுட்பம் இயற்கையோடு இரண்டறக் கலந்து இருந்திருக்கின்றது. அக்கால கட்டத்தில் மக்களுக்கான தேவையை நிறைவுசெய்ய இயற்கையை மறு உருவமாக்கித் தந்த தொழில்நுட்பவாதிகளும் இருந்திருக்கின்றனர். அவர்களை மையமிட்டே அக்காலச் சமூகம் இயக்கம் பெற்றிருக்கின்றது. ஆதலால் அவர்களின் தேவை அச்சமூக வெகுமக்கள் அவர்களைத் தங்களுக்கான குடிகளாகப் பணியமர்த்தி இருக்கின்றனர். இவ்வாறு தங்கள் வாழ்வியற் தேவைகளை நிறைவுசெய்யப் போதுமான தொழிற்குடிகள் இல்லாதபோது அவர்களை வேற்று ஊர்களிலிருந்தும் வேற்று நாட்டிலிருந்தும் கொண்டு வந்து குடியமர்த்தியிருக்கின்றனர் (கன்.மா.கல்.தொ.எ.1969/33). இந்நிலை தொழில்சார் குடிகளின் முக்கியத்துவத்தைச் சுட்டுவதாக அமைகிறது. அவற்றுள் ஒன்றான மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாக மேற்கொண்டவர்களாகக் குயவர்களைக் கொள்ளலாம்.

மண்ணில் தோன்றிய அனைத்தும் மறுசுழற்சிக்கான தன்மையுடையது. எவையும் நிலையானவை அல்ல என்ற நிலையாமைக் கருத்து தமிழ்ச் சமூக வரலாற்றில் வழமையான தத்துவமாக இருந்திருக்கின்றது (பதினெண் மேற்கணக்கு மற்றும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலான அறக்கருத்துகள் தொடங்கி இதற்கான தற்கால நீட்சி வரை). ஆக அத்தத்துவத்தினை அடிப்படையாகக் கொண்டே அவர்கள் தங்களுக்கான சடங்குப்பொருள்களையும் அமைத்துக் கொள்வதில் முனைப்புக் காட்டியிருக்கின்றனர். அவ்வித முனைப்பின் பயனாக விளைந்ததே மண்ணாலான சடங்குப்பொருள்கள். இவை நிலைத்தன்மை அற்றிருப்பதே இவற்றைச் சடங்குப்பொருள்களாகப் பயன்படுத்துவதற்கு முதற்காரணம் எனலாம். இரண்டாவதாக நம்பிக்கையும் சடங்கும் தொழில்நுட்பத்திறன் வளருவதற்கு முன்பே தோன்றியது. ஆகையால் அதற்கேற்றாற்போல் சடங்குப்பொருள் செய்து கொள்ளும் நிலை உருவாகியிருக்கலாம். அதற்கு நெகிழ்ச்சித் தன்மையுடைய மண் ஏதுவானதாக இருந்திருக்க வேண்டும் என்பதே இதற்கான அடிப்படை. எனவே மண்ணுக்கும் மனிதனுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பினை அடிப்படையாகக் கொண்டு மண் மற்றும் மண்ணின் விளைபொருள்களால் மனிதன் தன்னைச் செழுமைப்படுத்திக் கொள்ள முயன்றதன் விளைவால் உருவானதே இந்நாகரிக வளர்ச்சி என்பதனை மெய்ப்பிப்பனவாக மண்ணாலான புழங்குபொருள்கள்

இருக்கின்றன. இவை மனிதன் தனது அன்றாடத் தேவையை உணர்ந்து அதனை நிறைவுசெய்து கொள்வதற்காக உற்பத்தி செய்யப்பட்டவையாகும். இதனடிப்படையில் மண்சார்ந்த புழங்குபொருள்களை அதன் பயன்பாட்டின் அடிப்படையில் இரண்டு வகையாகப் பகுக்க முடியும். அவை ஒன்று அன்றாடப் பயன்பாட்டுப்பொருள்கள் மற்றொன்று சடங்குப் பயன்பாட்டுப்பொருள்கள் என்பவையாகும்.

***அன்றாடப் பயன்பாட்டுப்பொருள்கள்***

ஒவ்வொரு நாளும் மனிதன் தனது தேவையை நிறைவுசெய்துகொள்ள பயன்படுத்தப்பட்ட பொருள்களை இவ்வகைமைக்குள் அடக்கலாம். இதன் பரிமாணங்களை வடிவ அடிப்படையில் பிரித்து ஆராய இயலும். மண்பாண்ட வகைகளின் முதன்மை வடிவங்களாகப் பானை, சட்டி, குடம், தட்டு முதலானவற்றைக் கொள்ளலாம்.

***பானை***

வட்ட வடிவிலான வயிற்றினை உடையது என்பது பானைக்கான பொது அடையாளம். அதிலிருந்து தேவையான அளவு மற்றும் பயன்பாட்டினை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வடிவங்களில் பானைகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. அவை சோற்றுப்பானை, கூழ்ப்பானை, மோர்ப்பானை, தயிர்ப்பானை, தண்ணீர்ப்பானை, மாவுப்பானை போன்றனவாகும்.

இதில் சோற்றுப்பானை என்பது சோறு சமைக்கப் பயன்படுத்தப்படுவது. இது சற்று அகன்ற வாயுடன் 10 லிட்டர் கொள்ளளவுடையதாகக் காணப்படுகிறது. கூழ்ப்பானையும் இதே அளவுடையதாயிருக்கிறது . இதன் வாயானது மரத்துடுப்பின் உதவியால் கூழினைத் துழாவுவதற்கேற்ப அகன்று காணப்படுகிறது. அடுத்து மோர்ப்பானை, கால்நடைகளைச் செல்வமாகக் கருதிய தமிழ்ச்சமூக மரபில் மோர்ப்பயன்பாடு மிகுதி. ஆதலால் மேற்கூறிய இவ்விரண்டு பானைகளைவிட சற்றுப் பெரிய வயிற்றினையும், மத்திட்டு மோர் சிலுப்புவதற்கேற்ற அகன்ற வாயினையும் உடையதாக இருக்கிறது. தயிர்ப்பானை இதே வடிவில் வாய் குறுகி சற்றுச் சிறியதாகக் காணப்படுகின்றது. ஏனெனில் உபரியான நீர்மோரை உருவாக்கும் கூழ்ம நிலையே தயிர். ஆதலால் நீர் சேர்க்கப்படாத தயிர் உறையும் பானை குறைந்த கொள்ளளவு உடையதாயிருக்கிறது.

மாவுப்பானை என்பது பயன்பாட்டு அடிப்படையிலான ஒருவகைப் பானை. மரபான உணவு வகைகளுள் ஒன்றான 'கூழ்' சமைப்பதற்குத் தேவையான மாவுப் பொருள்கள் முதல் நாளே ஊற வைக்கப்படுகின்றது. அவ்வாறு மாவு ஊற வைக்கப் பயன்படுத்தப்படும் பானை 'மாவுப்பானை'. இதன் வாய் குறுகி கூழ்பானையை விட அளவில் சற்று குறைந்து காணப்படுகிறது.

தண்ணீர்ப்பானை என்பது அன்றாடப் பயன்பாட்டுக் கலனுள் அளவில் பெரியது. பருத்த வயிறும் மற்றொரு சிறுகலன்கொண்டு தண்ணீர் முகருவதற்கேற்ப அகன்ற வாய்ப்பகுதியையும் உடையது. இது முன்னமே குறிப்பிட்டபடி தண்ணீர் சேகரித்து வைக்கும் கலம்.

***சட்டி***

அரைவட்ட வடிவில் சற்று அழுந்தி வாயகன்று காணப்படும் ஒரு மண்பாண்ட வகை சட்டி. இது பயன்பாட்டின் அடிப்படையில் பல்வேறு பரிமாணங்களைக் கொண்டிருக்கின்றது. அவை குழம்புச்சட்டி, அரிக்கன் சட்டி, கல்ச்சட்டி, சலாச்சட்டி, பனியாரச்சட்டி முதலானவைகளாகும். இவற்றின் தன்மைகள் குறித்து முன்னியலில் பேசப்பட்டுள்ளது.

***குடம்***

இது வட்ட வடிவிலான வயிற்றினையும் குறுகலான வாயையும் உடைய ஒருவகை மண்பாண்டம். இது இதற்கான பொது அடையாளம். ஆனால் பயன்பாட்டுத் தேவைக்கேற்ப இதன் அளவும் வாய்ப்புறமும் மாற்றி அமைக்கப்பட்டிருத்தலில் இதற்குள் வெவ்வேறு வடிவங்கள் உண்டாகியிருக்கின்றன. அவை தண்ணீர்க்குடம், எண்ணெய்க்குடம், தோண்டி, பல்லா முதலானவைகளாகும். இவற்றின் தன்மைகள் குறித்து முன்னியலில் பேசப்பட்டுள்ளது.

***தட்டு***

இது தட்டையான அமைப்பினை உடைய ஒருவகைப் பயன்பாட்டுப் பொருள். இதனாலேயே இதற்குத் தட்டு என்ற பொதுப்பெயர் உண்டாகியிருக்கலாம். இது பயன்பாட்டின் அடிப்படையில் பல வகைகளாகப் பிரிந்திருக்கின்றன. அவை வடிதட்டு, சாணகை, மடக்கு, தாலா முதலானவைகள் ஆகும். இவை ஒவ்வொன்றின் தன்மை குறித்தும் முன்னியலில் பேசப்பட்டுள்ளது.

***சடங்குப் பொருள்கள்***

மனித வாழ்வியலில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களைத் தொடர்ந்து சடங்குப் பொருள்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. சடங்கு பொருள்கள் குறித்த அறிதலுக்கு முன்னதாகச் சடங்கு என்றால் என்ன? சடங்குகள் குறித்த ஆய்வாளர்களின் கருத்துகள் என்ன? என்ற இரு கேள்விகள் இயல்பாகவே மேலெழுகின்றன. இக்கேள்விகளை விளக்கி இவற்றோடு தொடர்புடைய சடங்குப் பொருள்கள் குறித்து விளக்குவதாகப் பின்வரும் பகுதி அமைகிறது.

சடங்கு என்பதை நம்பிக்கையின் நிகழ்த்து வடிவம் எனப் பொருள் கொள்ளலாம். ஆகையால் நம்பிக்கையின் தோற்றப் பின்புலத்தினை அடிப்படையாகக் கொண்டும், அது நிகழ்த்தப்படும் தன்மையைக் கொண்டும் சடங்கினைப் பலவாறாக வகைதொகைப்படுத்துவர். இதை,

*நாட்டார் தம் வாழ்க்கை விருப்பங்களான நீர்வளம், நிலவளம், பயிர்வளம், இனவளம், பொருள்வளம், உடல்வளம் ஆகியனவற்றைப் பாவனைகளாக வெளிப்படுத்துகிறார்கள். இப்பாவனைகளே சமயச் சடங்குகளாகின்றன (1991:அணிந்துரை)*

என்று ஆய்வாளர் சு. இரவிக்குமார் எழுதிய 'குதிரையெடுப்பு' என்னும் நூலின் அணிந்துரையில் இ. முத்தையா குறிப்பிடுகின்றார்.

மேலும், சமூக மாற்றங்களின் விளைவாக இச்சடங்கின் செய்முறைகளிலும் அதற்கான பொருள் கொள்ளலிலும் மாற்றம் ஏற்பட்டிருக்கின்றது. இதனடிப்படையில் இச்சடங்கிற்கானத் தேவை முற்றிலும் மறையும்போது சடங்கும் முற்றிலும் மறைந்துவிட வாய்ப்பு உண்டு. இது குறித்து இ. முத்தையா குறிப்பிடுகையில்,

*சமூகமரபு வழியாகச் சில தேவைகளின் காரணமாகச் செய்து வருகின்ற சடங்கினை காட்டுமிராண்டித்தனமானது, மனிதத் தன்மையற்றது (Barbaric irritional in human) என்று வசைபாடி கண்டிப்பதின் மூலமாகவோ, எங்கேயோ ஓரிடத்திலிருந்து கொண்டு சட்ட விதிகளை மட்டும் தங்களுடைய சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு வெளியிடுகின்ற அறிக்கையின் மூலமாகவோ, அரசாங்கத்தின் சட்டத்தின் மூலமாகவோ அழித்து ஒழித்துவிட முடியாது. அப்படியே அதிகார வன்முறையின் மூலம் தற்காலிகமாகத் தடை செய்தாலும் சடங்கிற்கான தேவை இருக்கும் வரை அது அப்படியாகவோ வேறு வடிவத்திலோ தொடரவே செய்யும். எந்த தேவை கருதி ஒரு சடங்கு செய்யப்படுகின்றதோ, அத்தேவையை அறிவியல் பூர்வமாக நிறைவேற்றினால் மட்டுமே அச்சடங்கினை மக்களிடமிருந்து அகற்ற முடியும். உதாரணமாக, அறிவியலால் மழையைப் பெய்விக்க முடியும் என்ற நிலை உருவாகும்போது மழைத்தொடர்பான நாட்டுப்புறச் சடங்கு மறைந்து போகும். அனைவருக்கும் மருத்துவத்தின் பயன் கிடைக்கும்போது நோய்த் தொடர்பான மருத்துவ மந்திரச் சடங்குகள் மறைந்து போகும் (இ. முத்தையா; 2010:147)*

என்பார். மேலும், இதுகுறித்து ரோத்தன் பூலர் (Rothen Buheler) கூறுவதை ,

*சடங்கென்பது சிரத்தைக்குரிய வாழ்வில் குறியீட்டளவில் உந்துதலைப் பெற அல்லது நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள பொருத்தமான நடத்தை முறைகளுடன் தன்னார்வமாக நிகழ்த்தும் ஒரு நிகழ்வாகும் (2005: 272)*

எ ன்று பக்தவத்சலபாரதி தன் நூலில் குறிப்பிடுகிறார். இவை ஒருபுறமிருக்க அந்தோணி வாலஸ் (Antony Wallace) சடங்குகளை இரண்டாகப் பகுத்து ஆராய்வார். அவை,

1. தொழில்நுட்பச் சடங்குகள் (Technical Rituals)

2. கருத்தியல் சடங்குகள் (Idiology Rituals)

என்பனவாகும் (மேற்படி:273). இதில் முதல்வகையான 'தொழில்நுட்பச் சடங்குகள்' என்பது மனிதன் ஏற்படுத்திக்கொண்ட பண்பாடு என்னும் தளத்திற்கு

மறு துருவமாக நிற்கும். இயற்கை என்னும் தளத்திற்குரிய ஆற்றல்களை நுட்பமான வகையில் தன்வயப்படுத்தும் முயற்சி சடங்கு வாயிலாகத் தொடர்கிறது. இதனை அடிப்படையாகக் கொண்டு மந்திரம், சூனியம், செய்வினை, தெய்வ ஆற்றலை மனிதத் தளத்திற்கு வருவித்து அருள்வாக்குக் கூறுதல், தீய ஆவிகளிடமிருந்து தற்காத்துக் கொள்ளுதல், தீய பார்வை படாமல் இருக்கக் கண்ணேறு கழித்தல், வந்த ஆவிகளை விரட்டுதல், கட்டிய புதிய வீட்டில் தீய ஆவிகளை விரட்டி புதுமனையைச் சாந்தி செய்தல், ஆவிகளை நீக்கிப் புதுத்தோணிகளை விடல் முதலான சடங்குகளைக் குறிப்பிடலாம்.

அடுத்த இரண்டாவது வகையான 'கருத்தியல் சடங்குகள்' என்பது சமூகத்தைக் கட்டிக்காக்கவும், கட்டுக்கோப்பாக வைத்திருக்கவும், முரண்பாடுகளைக் களைந்து ஒற்றுமை ஏற்படவும், சமூகம் போற்றவேண்டிய விழுமியங்களைக் காக்கவும், சமூகஉறவுகளைப் பேணவும், தனிமனித விழைவுகளை நிறைவடையச் செய்து அவற்றின் வாயிலாக அத்தனிமனிதனை உகந்தநிலைச் சமூகத்திற்கேற்ற மனிதனாக வளர்த்தெடுக்கும் தன்மைகளைக் கொண்ட அனைத்துச் சடங்குகளும் இவ்வகையில் அடங்கும். இதில் வாழ்க்கை வட்டச் சடங்குகள், திருவிழாக்களில் இடம்பெறும் சடங்குகள், பலியிடுதல், படையலிடுதல், நேர்த்திக்கடன் செய்தல், யாத்திரை செல்லுதல், வீடுபேறுக்கான சடங்குகள், மறு உயிர்ப்பித்தல் சடங்குகள் முதலானவை அனைத்தும் மிக முக்கியமானவை என்பார் (மேற்படி:272).

இதேபோல், அர்னால்டு வான் கென்னப்பின் (Arnold van Gennep) கூற்றுப்படி ஒவ்வொரு வாழ்க்கை வட்டச் சடங்குகள் மக்களை ஒரு தகுதி நிலையிலிருந்து பிரித்து, அவர்களை நிலைமாற்றம் செய்து மறுநிலைத் தகுதிக்கு அறிமுகப்படுத்துகிறது. இவற்றை இவர் மூன்று வகையாகப் பாகுபடுத்தியிருக்கிறார். அவை,

1. பிரித்தல் சடங்குகள்
2. நிலைமாற்றுச் சடங்குகள்
3. இணைத்தல் சடங்குகள் (மேற்படி: 273)

என்பதாகும்.

இவற்றில் பிரித்தல் சடங்குகள் என்பதை ஒருவரின் பழைய வாழ்வியற் தகுதி நிலையிலிருந்து பிரித்தல் நிகழ்வு. நிலைமாற்றுச் சடங்குகள் என்பது ஒருவரின் வாழ்வியற் தகுதிநிலையில் மாற்றம் ஏற்படுத்தும் நிகழ்வு. இணைத்தல் சடங்குகள் என்பது ஒருவர்க்கு வாழ்வியற் தகுதிநிலையில் சார்த்தப்படும் புதுத்தகுதிக் குறிக்கும் நிகழ்வு என்பதாகப் பொருள் கொள்ளலாம். இதைப் போலவே சடங்குகளை அமைப்பின் அடிப்படையில் ஆராய்ந்த எமிலி துர்க்ஹைம் (Emile Durkheim) அதன் அமைப்பியல்புகளை முன் வைத்து,

1. ஆக்க நிலைச் சடங்குகள்
2. எதிர்நிலைச் சடங்குகள் (மேற்படி:275)

என இரண்டாகப் பகுப்பர்.

இதில் முதலாவதாகக் குறிப்பிடப்படுவது இயல்புத் தளத்தைப் புனிதத் தளத்தோடு இணைக்க முயலும் சடங்கு. அடுத்ததாகக் குறிப்பிடப்படுவது 'புனிதம் என்பது இயற்கை கடந்தது; அறிவெல்லை கடந்தது; புலன் காட்சிக்கு அப்பாற்பட்டது. இது மண்ணியல் சார்ந்த, புனிதம் சாராத இயல்பு உலகின் தன்மைகள், புனித உலகின் தன்மையிலிருந்து வேறுபட்டது என்பதை வலியுறுத்துவதாகும். அதாவது புனிதத் தளத்திற்கும் இயல்புத் தளத்திற்குமான வேறுபாட்டினை வலியுறுத்துவது என்பதாகப் பொருள் கொள்ளலாம்.'

ஆக, வாழ்வியல் அடிப்படையில் சடங்கினை இரண்டாகப் பகுத்துப் பார்க்கலாம். இதுகுறித்து மானிடவியல் ஆய்வாளர் பக்தவத்சலபாரதி குறிப்பிடுகையில்,

> தமிழர் வாழ்வியலில் வாழ்வு, சாவு ஆகிய இரண்டு சடங்கு வரிசையிலும் இடம்பெறும் பொருள்கள் / நிகழ்வுகள் ஒரே தன்மையன. ஆனால் அவற்றுள் தர்க்க ரீதியிலும் கருத்தியல் ரீதியிலும் அமையும் உறவானது அதனளவில் மறுதலித்துக் கொள்வதால் எதிர்மைப் பண்புடைய குறியியலை உணர்த்துகிறது. வாழ்வு, சாவு இரண்டிற்குமான சடங்கு குறியியல் மணஉறவின் பொருண்மையை மையப்படுத்துகிறது. வாழ்வுச் சடங்குகள் ஈரியல் உறவைக் (மணமகன் - மணமகள் இரு வழி உறவு) குறியீடாக்க, சாவு சடங்குகளில் பங்காளிகள் மட்டும் சடங்குகள் செய்யும் ஓரியல் உறவைக் (இருவழியிலும் இணைந்தவர்கள் இறப்பால் ஈரியல் சீர்மை இழந்து ஒரு வழியாக மாறுதல்) குறியீடாக்குகிறது (மேற்படி:289)

என்பார்.

மானிடவியல் ஆய்வாளர்களின் இவ்வகையான வகைதொகைப்படுத்தலை அடிப்படையாகக் கொண்டு சடங்கினைக் கோட்பாட்டு ரீதியாக இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை,

1. செயல்பாட்டுத் தன்மையை முன்வைத்தது
2. அமைப்பை முன்வைத்தது

இதில் முதல் வகையானது மனிதர்கள் தனது அனுபவ வழியில் அறிவது. ஆகையால் அவர்கள் செய்யும் ஒவ்வொரு சடங்கிற்கும் ஒரு தனித்த பங்குண்டு, பண்புண்டு, செயல் உண்டு, காரண, காரியமுண்டு என்பதை அறிய இயலும். அந்த வகையில் அறியப்படும் சடங்கினைத் தனித்த ஒரு வகைமைக்குள் அடக்கி விடலாம். அவ்வாறான சில சடங்குமுறைகள் தற்போது நடைமுறையில் இருந்து வருவதும், அதைச் செயல்படுத்துபவர்களாகச் சில குடியினர் மட்டுமே இருப்பதும்

கவனிக்கத்தக்கதாகும். அந்த வகையில் 'குயவர் குடியினரை' நாட்டார் சடங்கு சார்ந்த செயல்பாட்டாளர்களாகக் கொள்ள இயலும். ஏனெனில் நாட்டார் சடங்குகள் அனைத்தும் மண்ணோடும் மரபோடும் தொடர்புடைய ஒன்று. அது அவர்களின் வாழ்விடம் சார்ந்ததாகவும், அதைச்சுற்றி உள்ள இயற்கை விளைபொருளைக் கொண்டு நிகழ்த்தப்படுவதாகவும் அமைந்திருக்கின்றது. ஆக, அவ்விதமான இயற்கையோடு ஒன்றிய ஒன்றினைத் தானாகப் பெறுதல், தன்னைச்சார்ந்த அல்லது தான்சார்ந்த பிறிதொருவரின் துணைகொண்டு பெறுதல் என்ற சமூக வழக்கத்தில் இவ்விதமான இயற்கையோடு ஒன்றிய சடங்குப் பொருள்களை மண்ணால் உற்பத்தி செய்துதரும் வழக்கத்தினை 'குயவர் குடியினரே' செய்திருக்கின்றனர். சடங்கு மற்றும் சடங்குப்பொருள் என்பது மண்ணோடும் மக்களோடும் தொடர்புடைய ஒன்றாதலால் அதனைக் காக்கும் பொருட்டு மண்ணாலான சடங்குப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். ஏனெனில் முன்னர்க் குறிப்பிட்டதுபோல மண்பாண்டப் பொருள்கள் அனைத்தும் மறுசுழற்சிக்கும் மற்றும் எண்ணம்போல் ஏற்ற வடிவத்தில் எளிதில் உற்பத்தி செய்து கொள்வதற்கும் ஏதுவானதாகும். ஆதலால் அதிகப்படியான சடங்குகளுக்கு மண்ணாலான பொருள்களைப் பயன்படுத்தும் வழக்கம் உருவாகியிருக்கலாம். மேலும் சடங்கு என்பது மனித வாழ்வியல் தத்துவத்தோடு தொடர்புடைய ஒன்று. சடங்கிற்கான மந்திர வார்த்தைகள் அதற்கு உயிராகவும், சடங்குப் பொருள்கள் அதைச் செயல்படுத்துவதற்கான உடலாகவும் கொண்டு நிகழ்த்தும் இவ்வமைப்புமுறை இதை உணர்த்துகிறது. எனவே உடல் நிலையாமையை உணர்த்த வேண்டி மண்ணாலான சடங்குப்பொருளைப் பயன்படுத்துவதென்பது சடங்கு தோன்றிய காலந்தொட்டே செய்யப்பட்டிருக்கிறது. அவ்வாறு அவர்களின் சிந்தனையோட்டத்திற்கு ஏற்ப சடங்கு செய்வதற்கு 'மண் சார்ந்த உற்பத்திப் பொருள்களே' மிகவும் ஏற்புடையதாக அமைந்திருக்கின்றன.

மேற்கூறிய கருத்துப்படி, சடங்கின் செயல்பாட்டு முறையை அடிப்படையாகக் கொண்டு, அதனை இரண்டு வகையாகப் பகுத்துக் கொள்ளலாம். அவை,

1. வாழ்வுச்சடங்கு
2. சாவுச்சடங்கு

இதனடிப்படையில் இவ்விரு நிலைப்பட்ட சடங்குமுறைகளுக்கு பயன்படுத்தப்பட்ட மண்ணாலான சடங்குப்பொருள்களை இதனடிப்படையில் கீழ்க்கண்டவாறு பிரித்து ஆராயப்படுகின்றன.

***வாழ்வுச்சடங்குகளுக்கான பொருள்கள்***

மனித வாழ்வியலில் செய்யப்படும் வாழ்வுச்சடங்குகள் அனைத்தும் இந்நிலவுலகியலோடு தொடர்புபடுத்திச் செய்யப்படுவன. மனிதனுக்கு அச்சத்தை விளைவிக்கும் இயற்கையை வணங்கி வழிபடுவதால் உருவானவை. மனித உடல் மாற்றம் பெறுவதன் அடிப்படையில் அதனைப் பருவமாகப் பிரித்து ஒவ்வொரு

பருவத்தின் போதும் அப்பருவத்திற்குத் தேவையான வளமை வேண்டி செய்யப்படுபவை. அதேபோல் மனிதன் இந்நிலவுலகில் வாழ்வதற்கான அடிப்படைத் தேவையாகிய உணவு, உடை, உறைவிடம் முதலானவற்றில் வளமை வேண்டி தெய்வத்திடம் முறையிடுவதற்காகக் செய்யப்படுபவை.

இச்சடங்குகள் செய்வதற்கு, இதற்கெனவே சிறப்பான முறையில் உற்பத்தி செய்யப்பட்ட சில பொருள்களும், மனிதனின் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களில் சிலவும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. அவ்வாறு இவ்வித வாழ்வுச் சடங்குகளுக்கான சடங்குப்பொருளாகக் கலசம், சாலு கரகம், பாலிகை, பானகத் தோண்டி, பொங்கல் பானை, அகல், தூப கலசம், அக்னிச்சட்டி, விளக்குக் கூண்டு, மதலம்பிள்ளை, குதிரை, நாய், யானை, காளை, கொலுபொம்மைகள், தெய்வ உருக்கள் முதலானவற்றைக் கொள்ளலாம்.

**கலசம்**

வாழ்வியற் சடங்குகள் பெரும்பாலானவற்றில் 'கலசம்' பயன்படுத்தப்படுகின்றது. செய்யப்படுகின்ற ஒவ்வொரு சடங்கின் தேவையைப் பொருத்து இக்கலசத்திற்கான பெயர்களும் மாற்றமடைகின்றன.

புதுவீடு குடிபோவதற்காகச் செய்யப்படும் சடங்கிற்குத் தேவையான இன்றியமையாதப் பொருள்களுள் 'கலசமும்' ஒன்று. இச்சடங்கில் ஒன்பது கலசங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இச்சடங்கின் அர்த்தப்பாட்டில் இவ்வொன்பது கலசங்களும் ஒன்பது கோள்களாகக் கற்பிதம் செய்து அவற்றிற்கான சடங்குகள் செய்யப்படுகின்றன. இச்சடங்கிற்குத் தேவையான இக்கலசங்கள் பெரும்பாலும் மண்ணாலானதாகவே இருக்கின்றன.

அந்த வகையில், இச்சடங்கிற்குத் தேவையான மண்ணாலான கலசங்களை மண்பாண்ட உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் குயவர்களே செய்து தருகின்றனர். குடிஊழியம் செய்வதை வழக்கமாகக் கொண்ட இக்குயவர் சமூகத்தினர், குடியானவர்களின் வீட்டில் நிகழும் சில வகையான சடங்குகளுக்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்தளிக்கப் பணிக்கப்பட்டிருக்கின்றனர். சமூகக் கட்டமைப்பில் இது அவர்களுக்கான கடமை எனப்பட்டிருக்கும் அதே நிலையில் அவர்கள் இதை தங்களுக்கான உரிமையாகவே நினைத்துச் செய்கின்றனர். அதன் வெளிப்பாடாகக் குடி ஊழியம் செய்யும் ஒரு கிராமத்துக் குயவரின் பின்வரும் கூற்று அமைந்திருக்கின்றது.

> நாங்க எங்களுக்குள்ளாகவே 'குடிமை' செய்யிற வீடுகளைப் பிரிச்சிப்போம். அதன்பிறகு அவங்கவங்க செய்யிற குடிமை வீட்டில் நடக்கும் நல்லது கெட்டதுக்கு அவங்கவங்கதான் போவோம். மாறிப் போற பழக்கமில்லை. உதாரணமா நான் குடிமை செய்யிற வீட்டுல புதுசா வீடுகட்டி குடிபோறாங்க அப்படின்னா எங்களுக்கு அவங்க வெத்தலை, பாக்கு வெச்சி வீடு குடிபோற விசயத்தையும் தேதியையும் முறையா சொல்லுவாங்க. நாங்க அந்தத் தேதியில் வீடு குடிபோறதுக்குத் தேவையான கலசங்களைக் கொண்டு போயி குடுப்போம்.

அவங்க வந்து எடுத்துப் போற வழக்கமில்ல. அதனால நாங்க கொண்டுபோயி குடுப்போம். அதுக்கு அவங்க அந்த விசேஷம் முடிந்த பிறகு அரிசி, பருப்பு, புளி, காய்கறி அப்புறம் கலசத்துக்கான காசு எல்லாத்தையும் சேர்த்துக் கொடுப்பாங்க. நாங்க வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்துடுவோம். நாங்க குடிமை செய்யிற ஒவ்வொரு வீட்டிலேயும் இந்த மரியாதை எங்களுக்கு உண்டு. *(களாய்வு; மண்ணாங்கட்டி (66): தேவதானம்பேட்டை, 06.05.2009).*

என்பதிலிருந்து குயவர்களுக்கும் குடிகளுக்குமான சடங்குவழித் தொடர்பினை அறிந்துகொள்ள முடிகின்றது.

**சாலுகரகம்**

சாலுகரகம், அரசாணிப் பானை, மணவறைப்பானை, கல்யாணப்பானை என்று பலவாறாக அழைக்கப்படும் இச்சடங்குப்பொருள் திருமணச் சடங்கின்போது பயன்படுத்தப்படுவதாகும். அர்னால்டு வான் ஹென்னப்பின் கூற்றுப்படி மண்ணாலான இச்சடங்குப்பொருள்கள் மனிதரை ஒரு நிலைப்பாட்டிலிருந்து மற்றொரு நிலைப்பாட்டிற்குத் தகுதி உயர்வு செய்யப் பயன்படுத்தப்படுவன.

சம அளவிலான இரு பானைகளைச் சேர்த்து சாலுகரகம் எனப்படுகிறது. இதில் வாயகன்ற பானையைச் 'சாலு' என்றும், வாய் சற்றுக் குவிந்து சிறியதாயிருக்கும் பானையை 'கரகம்' என்றும் குறிப்பிடுகின்றனர். திருமணத்தின் போது மணமக்கள் அமர்ந்திருக்கும் மணவறையின் முன்பு வைக்கப்படும் இதனுள் மஞ்சள் நீர் நிறைத்து வைக்கப்பட்டிருக்கின்றது. இதனுடன் முளைப்பாலிகை, குடவிளக்கு, ஹோம குண்டச்சட்டி முதலான சடங்குப்பொருள்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. இவை ஒவ்வொரு சாதியிலும் ஒவ்வொரு விதமாகக் கையாளப்படுகின்றன. அதேபோல் சாதிய அடிப்படையில் மேற்குறிப்பிட்ட மணவறைச் சடங்குகளும் வேறுபடுகின்றன.

ஒவ்வொரு சாதியினரும் ஒவ்வொரு விதமாகப் பயன்படுத்தும் இவ்வகையான திருமணச்சடங்குப் பொருள்களைச் செய்து தரும் பணியை மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாக மேற்கொள்ளும் குயவர்களே செய்து தருகின்றனர்; செய்து தர பணிக்கப்பட்டிருந்திருக்கின்றனர். இதனை கிராமத்துக் குயவர்களிடம் உள்ள வழமையை வைத்து அறியமுடிகின்றது. தற்போதும் இவர்கள் தாங்கள் 'குடிஊழியம்' செய்யும் குடும்பத் திருமணத்திற்குத் தேவையான மணவறைச் சடங்குப்பொருள்கள் செய்து தருவதைத் தங்களுக்கான உரிமையாக நினைக்கின்றனர். ஊர்க்குடிகளும் அவ்வாறே கோருகின்றனர். திருமணத்திற்கு முன்னான தேதியில் அவர்களுக்கு முறையான அறிவிப்பும் முன்பணமும் தருகின்றனர். அதைப் பெற்றுக் கொண்ட குயவர்கள் அவர்களுக்கான சாதிய முறைப்படி மணவறைச் சடங்குப்பொருள்கள் செய்து, அவற்றைத் திருமண வீட்டிற்கோ அல்லது திருமண மண்டபத்திற்கோ கொண்டு போய் கொடுத்துவிட்டு வருகின்றனர். இவ்வேலையைப் பெரும்பாலும் குயவர் சமூகத்துப்

பெண்களே செய்கின்றனர். அவ்வாறு கொண்டு போகும் குயவருக்கு அச்சடங்குப் பொருள்களுக்கான பணம் மற்றும் பச்சைக்காய்கறிகள், அரிசி, பருப்பு முதலானவற்றைக் கொடுக்கின்றனர். இதை குடியானவர்கள் தங்களுக்குச்செய்யும் மரியாதையாக குயவர்கள் நினைக்கின்றனர். பல நிலைகளில் பார்ப்பனர்களோடு தங்களை இணைத்துப் பேசும் வழக்கமுடைய இவர்கள், பார்ப்பனர்களின் வரவுக்கு முன்னான காலக்கட்டங்களில் தாங்களே இவ்விதச் சடங்கு வேலைகளைச் செய்தவர்களாவோம். பின்னாளில் அதைப் பார்ப்பனர்கள் சதிவேலை செய்து தங்களிடமிருந்து பறித்துக் கொண்டனர் என்கின்றனர். இதைத் திருமணத்தின்போது பார்ப்பனர்களுக்கும் குயவர்களுக்கும் தரப்படுகின்ற பச்சையான, வேக வைக்காத பொருளைத் தரும் வழக்கம் மெய்ப்பிப்பதாகக் கொள்ளலாம். இதனை,

> *பாப்பான் ஆச்சாரம் பாப்பான். அதனால அவனுக்கு பச்சையா கொடுத்துரு*
> *(களாய்வு; பாலகிருஷ்ணன் (78): தேவதானம்பேட்டை, 10.05.2009)*

என்ற கேலி தொணி நிறைந்த வழக்காற்றிலிருந்தும் அறிந்துகொள்ள முடிகின்றது. தாங்கள் பிரம்ம குலத்தைச் சேர்ந்தவர்கள், 'படைக்கும் தொழிலை முதன்மையாகக் கொண்டவர்கள்' என்று தங்களைக் கூறிக்கொள்ளும் குயவர்கள் இவ்விதமான நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டித் தங்களின் மேன்மையைக் கூறிக் கொள்கின்றனர்.

**முளைப்பாலிகை**

திருமணச் சடங்கில் நவதானியங்களை முளையிட்டு வைக்கும் சடங்கு செய்யப்படுகின்றது. அவ்வாறு செய்யும் அச்சடங்கிற்குத் தேவையான சடங்குப் பொருளே முளைப்பாலிகை. மேல் வாயகன்று அடி குறுகியிருக்கும் இம்மண்பொருளை எல்லாச் சாதியினரும் தாங்கள் செய்யும் திருமணச் சடங்கில் பயன்படுத்துகின்றனர். ஒன்பது (நவ) தானியங்களைக் கொண்டு செய்யப்படும் இச்சடங்கிற்கு ஒன்பது பாலிகை பயன்படுத்தப்படுகின்றது. இப்பாலிகைகள் விதை முளைப்பிற்கு ஏற்றபடி வடிவமைக்கப்பட்டுள்ளது. விதை முளைப்பு மண்ணோடு தொடர்புடையது. ஆகையால் மண்ணாலான இக்கலன்கள் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். இதில் விதை உயிராகவும் மண்ணாலான பாலிகை உடலாகவும் அமையும் தத்துவம் அடங்கியிருப்பதாக இதை உற்பத்தி செய்யும் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். (களாய்வு; ராஜகிளி (80): துறிஞ்சிக்குப்பம், 10.04.2009).

**பானகத் தோண்டி**

மறுநாள் நடக்கப்போகும் திருமணத்திற்கு முன்னாளில் தரப்படும் இனிப்பு நீர் 'பானகம்' எனப்படுகின்றது. இதை மணமக்களின் குடும்பத்தினர்கள் தயார் செய்து தருகின்றனர். அவ்வாறு பானகம் தருதல் என்பது இரு குடும்பத்தாரிடையே உறவினை உண்டு பண்ணும் ஒரு சடங்காகக் குறிப்பிடப்படுகின்றது. இச்சடங்கு செய்யத் தேவையான சம அளவுள்ள மண்ணாலான தோண்டிகளைக் குயவர்களே செய்து தருகின்றனர். தோண்டி எனப்படுவது வடிவில் குடத்தினையொத்து

அளவில் அதனில் பாதியாக இருக்கும் மண்பாண்டப் பொருளாகும். பெரும்பாலும் 'பானகம்' தருவதற்கான பயன்பாட்டுப் பொருளாக மண்ணாலான தோண்டியே பயன்படுத்தப்படுகின்றது. இதை மணவறைச் சடங்குப் பொருள்களுடன் சேர்த்து ஒரு தொகுதியாகத் தருவதையே குயவர் சமூகத்தினர் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இவ்விதமாக மணவறைச் சடங்குப்பொருள்கள் முன்னர்க் குறிப்பிட்டது போன்று சாதி வாரியான வேறுபாடுகளைக் கொண்டிருக்கின்றன. அவ்வேறுபாட்டினை நன்கறிந்து அவரவர் சடங்கிற்கேற்ப செய்து தரும் பண்பாட்டு அறிவாளர்களாகக் கிராமத்துக் குயவர்கள் இருந்து வருகின்றனர்.

**பொங்கல் பானை**

'பொங்கல் வைக்கும் சடங்கிற்குப் பயன்படுத்தப்படும் பொருள் பொங்கல் பானை'. 'பொங்கலிட்டுப் படையலிடும்' சடங்கென்பது தெய்வ வழிபாட்டில் தவிர்க்க முடியாத இடத்தினைப் பிடித்திருக்கின்றது. நாட்டார் தெய்வங்களுக்கான வழிபாட்டிற்கான இச்சடங்குமுறை தற்போது நிறுவனமயப்படுத்தப்பட்ட தெய்வங்களுக்கும் செய்யப்படுகின்றது.

காலச்சூழலால் சடங்குகள் பல்வேறு விதமான மாற்றங்களை அடைந்த போதிலும் சில வகையான சடங்குகள் எவ்விதமான மாற்றத்தையும் உள்வாங்காமல் இந்நாள் வரைக்கும் பின்பற்றப்படுகின்றன. அவற்றுள் முதன்மையானதாக 'பொங்கல் வைத்தல்' சடங்கினைக் குறிப்பிடலாம். வளமையின் குறியீடான இச்சடங்குமுறை எல்லாவிதத் தெய்வங்களுக்கும் செய்யப்படுகின்றது. அவ்வாறு இச்சடங்கு செய்வதற்கான முக்கியப் பொருளாக இருப்பது மட்கலன்கள்.

வளமையைக் கொண்டாடும் விதமாகச் செய்யப்படும் இச்சடங்கில் அந்த ஆண்டு விளைந்த புது நெல்லில் இருந்து பெறப்பட்ட புது அரிசி, இதற்கு முன் பயன்படுத்தப்படாத புதுப்பானை முதலானவை பயன்படுத்தப்படுகின்றன. நாட்டார் தெய்வங்கள் துடியானவை என்பதால் அதற்குச் செய்யப்படும் சடங்கில் தீட்டுத் துடக்கு ஏற்படக்கூடாது என்பதில் வெகுமக்கள் மிக்க கவனத்துடன் இருக்கின்றனர். ஆகையால் எல்லாவிதமான சடங்குப் பொருள்களையும் புதிதாகப் பயன்படுத்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். எனவே ஆண்டுதோறும் செய்யப்படும் இவ்விதச் சடங்கிற்கும் இடையிடையே வேண்டுதலின் பேரில் செய்யப்படுவதற்கும் தேவையான புது மண்பாண்டங்களைச் செய்து தருபவர்களாகக் குயவர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இதனடிப்படையில் உருவானதாகக் குடிஊழிய முறையை அனுமானிக்கலாம்.

தமிழர் திருநாளாகிய தைப்பொங்கலுக்கான மண்பாண்டங்கள், உள்ளூர் திருவிழாவிற்குத் தேவையான மண்பாண்டங்கள் மற்றும் தத்தம அவரவர் குடும்பச் சடங்கிற்குத் தேவையான மண்பாண்டங்கள் முதலானவற்றை ஊர்குடிகளுக்குக் குயவர்கள் ஒப்பந்த அடிப்படையில் செய்து தரும் முறையே 'குடிஊழியம்'

எனப்பட்டிருக்கின்றது. இதற்குப் பண்டமாற்றாக வேளாண்குடிகள் தங்கள் நிலத்தில் விளையும் விளைபொருளையும், ஊழிய முறையைப் பின்பற்றும் வண்ணார், அம்பட்டர் முதலான பிற குடிகள் தத்தம் தங்களின் தொழிலையும் பரிமாறிக் கொண்டிருக்கின்றனர். இது தவிர்த்து வீட்டிற்குத் தேவையான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களான நீர்க்கலன்கள், தானியக் கலன்கள், சமையல் கலன்கள் முதலானவற்றைத் தனிப்பட்ட பரிவர்த்தனையின்கீழ் பெற்று பயன்படுத்தியிருக்கின்றனர். இவ்விதமான பொருள்களின் தேவை மிகுந்திருப்பினும் சடங்குப்பொருள்களான பொங்கல் பானைகளே குயவர்களைக் குடிமக்களுடன் பெருமளவில் இணைப்பதாயிருக்கின்றது.

**அகல்**

அகலச்செய்வது என்ற பொருள்பொதிந்த சொல்லாக இதைக் கொள்ளலாம். வெளிச்சம், இருள் என்ற இருள்மையில் வெளிச்சம் என்பது நம்பிக்கைக்குரியதாகவும் இருள் என்பது அவநம்பிக்கைக்குரியதாகவும் கொள்ளப்பட்டிருக்கிறது. அந்தவகையில் இருளை வெளிச்சமாக்கிக் கொள்வதையே மனித இனம் விரும்பியிருக்கிறது. அதன் விளைவால் உருவான அறிவின் வெளிப்பாட்டு வடிவமே அகல். அதாவது இருளை அகலச்செய்வது என்ற பொருண்மையின் அடிப்படையிலேயே இச்சொல் உருவாகியிருக்க வேண்டும். இது நனிநாகரிகத் தோற்றத்தின் தொடக்ககாலச் செயல்பாடு. இக்காலத்தே தனக்கு வேண்டிய நெருப்போடும் நீரோடும் தொடர்புடைய பாண்டங்களை மண்ணால் செய்து பயன்படுத்தும் வழக்கம் தோன்றியிருக்க வேண்டும். அவ்வாறானவற்றுள் அகல் குறிப்பிடத்தக்கது.

அகல் என்பது மண்ணாலான விளக்குகளின் பொதுவடிவம். ஆகையால் பயன்பாட்டை அடிப்படையாகக் கொண்டு இதனை அன்றாடப் பயன்பாட்டிற்கானது என்றும் சடங்கிற்கானது என்றும் வகைபிரித்து அறிய இயலும். பின்னான காலகட்டத்தில் அகல் அன்றாட பயன்பாட்டு வழக்கொழிந்து சடங்குப் பயன்பாட்டிற்கு மட்டுமேயானதாகக் காட்சியளிக்கிறது. ஆகவே பயன்பாடு குறைந்த இப்பொருளை அலங்கார நோக்குடன் உற்பத்தி செய்வதில் தற்காலக் குயவர்கள் முனைப்புடையவர்களாக இருக்கின்றனர். அந்த வகையில் உருவான சிறப்பு வனைவுகளாக பஞ்சமுகவிளக்கு, தேங்காய் விளக்கு, காமாட்சியம்மன் விளக்கு, குத்துவிளக்கு முதலானவற்றைக் கொள்ளலாம்.

மிகுதியானப் பயன்பாட்டிலிருக்கும் சடங்குப்பொருள்களுள் 'அகல் விளக்கும்' ஒன்று. இது வாழ்க்கை வட்டச் சடங்கில், சாவுச் சடங்கின்போது 'தலை விளக்காகவும்', வாழ்வுச் சடங்கில் 'நல்விளக்காகவும்' பயன்படுத்தப்படுகின்றது. தவிரவும், இது குழந்தைகளின் விளையாட்டுப் பொருளாகவும் பரிமாணம் பெற்றிருக்கின்றது. ஆகவே அகல் என்பதற்கான தனி மதிப்பீடு ஏதும் வழக்கில் இருந்திருக்கவில்லை. அது பயன்படுத்தப்படும் சூழலை மையமிட்டே அதற்கான மதிப்பீடுகள் தோற்றம் பெற்றிருக்கின்றன.

**தூபக்கலசம்**

'தீபக்கலசம்' என்பது வழக்காற்றில் மருவி 'தூபக்கலசம்' என்றாயிற்று. 'தூபக்கால்' என்ற பெயரும் வாய்மொழி வழக்கில் இருக்கிறது. மனிதரின் வாழ்வுச் சடங்குகள் பெரும்பாலும் தெய்வத்தோடு தொடர்புடையதாகவே இருப்பதால் அவ்விதமான சடங்குகளில் தெய்வங்களை வழிபட கற்பூர தீபம் ஏற்றும் வழக்கம் தற்போதும் நீட்சிபெற்று வழக்கில் இருக்கிறது. அவ்வாறு கற்பூரம் ஏற்றுவதற்குப் பயன்படுத்தப்பட்ட மண்ணாலான சடங்குப்பொருளை வெகுமக்கள் தூபக்கலசம் எனக் குறிப்பிடுகின்றனர். இது கற்பூர தீபாராதனை செய்வதற்கும் நறுமணப் புகை (சாம்பிராணி) இடவும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது.

**அக்கினிச்சட்டி**

வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட குடியினர் செய்யும் சடங்குகளில் மிக முக்கியமானது 'மழைச் சடங்கு'. நிலவளம் பெற வேண்டி மனிதன் செய்யும் வளமைச் சடங்கில் இதுவும் ஒன்று. வேளாண்மைத் தொழில் செய்ய நீர் முக்கியம். அதில் தட்டுப்பாடு ஏற்படும்போது அதுகேட்டு தெய்வத்திடம் முறையிடும் விதத்தில் செய்யப்படும் சடங்கு 'மழைச்சடங்கு'. இது பலவகைப்பட்டது. அதில் ஒன்று 'அக்கினிச் சட்டி' எடுத்தல். இதில் அக்னி அதாவது நெருப்பு என்பது ஆக்ரோசம், கோபம். தெய்வம் கோபம் கொண்டிருப்பதால்தான் மழைபெய்யச் செய்யவில்லை என்ற நம்பிக்கையில் அந்த ஆக்ரோஷத்தைத் தணித்தால் தெய்வம் மனம்குளிர்ந்து மழைபெய்யச் செய்யும். ஆகவே, மழைவேண்டி தெய்வத்தின் ஆக்ரோஷத்தினைத் தணித்து சாந்தப்படுத்தச் செய்யப்படும் ஒரு வகையான சடங்காக இதை வெகுமக்கள் குறிப்பிடுகின்றனர். இவர்கள் இச்சடங்கு நிகழ்த்துவதற்கு மண்ணாலான 'சட்டி' வகையையே பயன்படுத்துகின்றனர். அவ்வாறு பயன்படுத்தப்படும் இச்சட்டி வகைகளை மண்பாண்ட உற்பத்தியைத் தொழிலாகச் செய்யும் குயவர்களே செய்து தருகின்றனர். ஒட்டுமொத்த ஊர் மக்களும் சேர்ந்து செய்யும் இச்சடங்கில் இதற்கான சடங்குப் பொருளான 'அக்னிச் சட்டி' செய்து தருதல் குயவர்களுக்கான கடமையாகக் குறிப்பிடப்படுகின்றது. குயவர்களும் இதைத் தங்களுக்கான உரிமையாக நினைத்துச் செய்கின்றனர். ஒரு ஊரில் பல குடும்பம் இருப்பின் ஆண்டிற்கு ஒரு குடும்பம் என்ற ஒப்பந்த அடிப்படையில் இதைச் செய்கின்றனர்.

**விளக்குக்கூண்டு**

கோயில் வழிபாட்டிற்குக் குயவர்களால் செய்து தரப்படும் மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்களுள் விளக்குக் கூண்டும் ஒன்று. தெய்வத்திற்குத் தீபம் ஏற்றுவது சமூக வழமையாகத் தற்போதும் பின்பற்றப்பட்டு வருகிறது. இது தெய்வத்தின் இருப்பினை அடையாளப்படுத்துவதற்குச் செய்யப்படுவதாகக் கொள்ளலாம். ஆகையால் தெய்வத் துணையை எப்போதும் தேவையெனக் கருதிய மனநிலையின் வெளிப்பாடாகத் 'தூங்கா விளக்கினை'க் கொள்ள முடிகிறது.

நாட்டார் தெய்வங்களுக்கான கோயில்கள் பெரும்பாலும் ஊர்புறத்தே உள்ள மரத்தடியில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இயற்கையான சூழலில் அமைக்கப்பட்ட இவ்வகையான கோயிலில் உள்ள தெய்வத்திற்கும் அதன் இருப்பினைப் பிரதிபலிக்கும் விதமாக விளக்குப் பொருத்தும் வழக்கம் கிராமத்து வெகுமக்களிடம் இன்றளவும் இருந்து வருகிறது. அவ்வாறு பொருத்தப்படும் விளக்கு காற்றலைவில் அணையாதிருக்க குயவர்களால் அதற்கு ஏற்றவாறு 'விளக்குக்கூண்டு' செய்தளிக்கப்படுகின்றது. பயன்பாட்டினை முதன்மைப்படுத்தும் இவ்விளக்குக்கூண்டிற்கான வடிவ அமைப்பு வெவ்வேறுபட்டன. அது அந்தந்த கோயிலில் உள்ள முதன்மை தெய்வத்தைப் பொருத்தது. இதில் பெரும்பாலான 'விளக்குக்கூண்டுகள்' மனிதத் தலையைப் போன்றிருக்கின்றன. அதில் உள்ள வாய் சற்று அகன்று அதனுள் விளக்கிட்டு ஒளியேற்றுவது போன்ற அமைப்பிலான கூண்டுகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. இவ்வகைப்பட்ட விளக்குக்கூண்டுகளை செய்தளிக்கும் பயன்பாட்டுக் கலைஅறிவு மிக்கவர்களாகக் குயவர்களாக இருந்திருக்கின்றனர்; தற்போதும் இருக்கின்றனர்.

### உருவப் பொம்மைகள்

தமிழ்ச் சமூக மரபில் கால்நடைகள் செல்வங்களாகக் கருதப்பட்டிருக்கின்றன. அவ்வாறு செல்வமாகக் கருதப்பட்ட கால்நடைகள் நோய்வாய்ப்பட்டு கொத்துக் கொத்தாக இறக்கும்போது, அந்நோயிலிருந்து தங்களது கால்நடைகளைக் காக்க தெய்வத்திடம் நேர்ந்து கொள்ளும் / நேர்ந்து விடும் மரபு இருந்திருக்கிறது. இதில் நேர்ந்து கொள்ளும் வழக்கமே பெருவாரியாக இருந்திருக்கிறது. அதற்கான நேர்த்திக் கடனாக கால்நடைகளின் உருவத்தினை மண்ணால் செய்தளிக்கும் வழக்கமும் இருந்திருக்கின்றது. அதற்கான உருவப் பொம்மைகளை அவர்களுக்குக் குயவர் சமூகத்தினரே உற்பத்தி செய்து தந்திருக்கின்றனர்.

### மாடு

கால்நடைச் செல்வங்களுள் மிக முக்கியமானதாகக் கருதப்படும் 'மாடு' நோய்வாய்ப்பட்டால் அதைப்போலவே உருவபொம்மை செய்து ஊர்க்கோயிலில் நேர்த்திக்கடன் செலுத்தும் வழக்கத்திற்குத் தேவையான 'மாடு' போன்ற மண்ணாலான உருவப் பொம்மைகளை ஊர்க் குடிமக்களுக்கு அவ்வூர் குயவர்கள் செய்திருக்கின்றனர். இவ்விதமான நம்பிக்கையை திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள வந்தவாசி வட்டாரத்திலும், விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள சேத்துபட்டு, செஞ்சி வட்டாரங்களிலும் பரவலாகக் காணமுடிகின்றது.

### ஆடு

கால்நடை வளர்ப்பில் மிகுதியான மெனக்கிடல் அற்ற ஒனறாக 'ஆடு வளர்ப்பு' இருப்பதால் பெரும்பாலான கிராமக்குடிகள் இதைத் தொழிலாகச் செய்கின்றனர். இதில், இடையர் சமூகத்தைச் சார்ந்தவர்கள் இதை மந்தையாக வளர்த்து 'கிடை' கட்டும் பழக்கமுடையவர்கள். இதுவே அவர்களுக்கான

முதன்மைத் தொழில். அவ்வாறு வளர்க்கப்பட்ட ஆடுகள் இயற்கை மாற்றத்தால் நோய்வாய்ப்படும்போது அதிலிருந்து காத்துக்கொள்ள அதனைத் தெய்வத்திடம் நேர்ந்து கொள்கின்றனர். அதற்கான நேர்த்திக் கடனாக மண்ணாலான 'ஆடு' பொம்மை செலுத்தப்படுகின்றது. அச்சடங்கு செய்வதற்கான அந்த உருவப் பொம்மையைக் 'குயவர்' சமூகத்தினர் செய்து தருகின்றனர்.

இவ்வாறு பெரும்பாலான சடங்கிற்குத் தேவையான பொருள்களை மண்ணால் செய்தளிக்கும் தொழிலைச் செய்து வந்த குயவர்கள் சமூக அசைவியக்கத்தில் மிக முக்கியமானவர்களாகக் கருதப்பட்டிருக்கின்றனர். இவர்களின்றி இவ்விதமான சடங்குமுறைகள் நிகழ்த்தப்பட்டிருக்க இயலாது எனும் அளவிற்கு இவர்களே இவ்விதமான செயல்பாடுகளுக்கான உயிர் நாடியாக விளங்கியிருக்கின்றனர். தற்போது மருத்துவத்துறை வளர்ச்சி பெற்றுவிட்டதால் பெரும்பாலான கால்நடைகள் இறப்பிலிருந்து காப்பாற்றப்படுகின்றன. ஆதலால் தெய்வத்திடம் முறையிடும் வழக்கம் குறைந்து காணப்படுவதுடன் இவ்வகையான சடங்குமுறைகள் வழக்கொழிந்து வருகின்றன. ஆகையால் குயவர்களுக்கும் ஊர் குடிகளுக்குமான உறவுநிலை அவ்வளவு பலமானதாக இல்லை. மேலும், பண பரிவர்த்தனை இவ்வுறவு நிலையைச் செயலிழக்கச் செய்துவிட்டது என்றால் அது மிகையானதல்ல.

**நாய்**

கிராமக் காவல் தெய்வங்களான அய்யனாரப்பன், வேடியப்பன் முதலானவை இருக்குமிடத்தில் நாய் உருவ பொம்மையும் உடனிருக்கின்றது. காவல் தொழிலைச் செய்யும் தெய்வத்திற்கு உதவியாயிருப்பது என்பதன் அடையாளமாய் இப்பொம்மை அத்தெய்வச் சிலைகளுக்கு அருகில் வைக்கப்பட்டிருக்கின்றது.

ஒன்றரை அடி உயரம் முதல் இரண்டடி உயரம் வரையிலான இப்பொம்மை இரண்டடியிலிருந்து மூன்றடி அளவு நீளமுடையதாயிருக்கிறது. இதை மண்பாண்ட உற்பத்தித் தொழில் செய்யும் குயவர்களே மண்ணால் செய்து தருகின்றனர். அவர்களால் மண்ணால் உற்பத்தி செய்து தரப்படுகின்ற பல்வேறுபட்ட உருக்களுள் இதுவும் ஒன்று. இவர்கள் மட்டுமே இவ்வுருவப் பொம்மை உற்பத்தியை மேற்கொள்கின்றனர். ஆதலால் இவ்வித நேர்த்திக்கடன்கள் செய்ய கிராமக்குடிகள் குயவர்களையே நாடுகின்றனர். இவர்களைச் சார்ந்திருக்கும் இவ்வழக்கம் தற்போது குக்கிராமப் பகுதிகளில் காணப்படுகின்றது. தற்போது இவ்விதமான உருக்களைச் சிமெண்ட் சிலைகளாகச் செய்து வைத்தலை வழக்கமாக மேற்கொண்டிருக்கின்றனர். அவ்வாறு சிமெண்டாலான உருக்களைச் செய்பவர்களுக்கு 'ஸ்தபதி' என்ற பட்டம் வழங்கப்பட்டிருகின்றது. இந்த 'ஸ்தபதி' தொழிலைச் செய்பவர்களில் பெரும்பாலோனோர் குயவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

### சிப்பாய்

காவல் தெய்வத்திற்குத் துணையாயிருப்பது சிப்பாய்கள். இவர்கள் காவல் தெய்வத்தைத் தலைமையாகக் கொண்டு ஊர்க்காவல் தொழில் புரிந்தவர்கள் என்பதற்கான அடையாளமாகக் காவல் தெய்வத்தினை முதன்மையாகக் கொண்டு அமைக்கப்பட்ட கோயிலில் அத்தெய்வத்தினைச் சுற்றி இவர்களின் சிலைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. நாட்டார் தெய்வக் கோயிலின் இவ்வமைப்பாக்கத்தில் உள்ள அனைத்துச் சிலைகளும் அவ்வூர்க் குயவர்களால் உற்பத்தி செய்யப்பட்ட மண்ணாலான சிலைகளாகவே இருக்கின்றன. இதில் முதன்மைத் தெய்வத்தின் சிலைகள் தவிர்த்த மற்ற சிலைகளை ஆண்டுதோறும் புதிது புதிதாகச் செய்து வைக்கும் வழக்கம் கிராமப்புறங்களில் இருந்து வருகிறது. தென் தொண்டை மண்டல வட்டாரங்களில் மிகுதியாகக் காணப்படும் இவ்வழக்கம் ஊர்க்குடிகளுக்கும் அவ்வூர்க் குயவர்களுக்குமான உறவினைப் புலப்படுத்தும் விதமாக அமைந்திருக்கின்றது.

### மதலம்பிள்ளை

பிள்ளை உருவிலான மண்பொம்மை. மருத்துவத்துறை பெரிய அளவில் வளர்ச்சி அடையாத காலகட்டத்தில் நோய்கள் அனைத்தையும் தெய்வமே குணப்படுத்த வல்லது என்ற நம்பிக்கை வெகுமக்களிடம் பரவலாக இருந்திருக்கின்றது. அதனடிப்படையில் அவர்கள் தெய்வத்திடம் முறையிட்டு அதற்கான சடங்குகளைச் செய்திருக்கின்றனர். அவ்வாறானவற்றில், 'மதலம்பிள்ளை' வைத்தல் சடங்கும் ஒன்று.

குடும்பத்தில் உள்ள குழந்தைகள் நோய்வாய்ப்படும்போது அது குணமாகத் தெய்வத்திடம் நேர்ந்து கொள்ளும் வழக்கம் வெகுமக்களிடம் இருந்திருக்கிறது. அதாவது குழந்தை குணமானால் அந்த குழந்தையைப் போன்றதொரு உருவை மண்ணால் செய்து தெய்வத்திடம் ஒப்படைப்பு செய்வதே அவ்வாறு நேர்ந்து கொண்டதற்கான சடங்குமுறை. இச்சடங்குமுறை முற்காலத்தில் மிகுதியாகச் செய்யப்பட்டிருக்கின்றது. தற்போது மிகுதியான அளவு செய்யப்படுவதில்லை. இதற்குக் கிராமப்புறக் கோயிலில் சிதைந்து கிடக்கும் மதலம்பிள்ளைகளைச் சான்றாகக் கொள்ளலாம். மனித வாழ்வியலோடு நெருங்கிய தொடர்புடைய இச்சடங்கிற்குத் தேவையான மதலம்பிள்ளைகளைக் குயவர்களே செய்தளித்திருக்கின்றனர். இவர்களே மண்ணை மருந்தாக்கி மருத்துவமும் செய்திருக்கின்றனர். அந்தவகையில் குயவர்கள் மனித வாழ்வியலோடு தொடர்புடையவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர்.

### தெய்வ உருக்கள்

நிறுவனமயப்படுத்தப்படாத நாட்டார் தெய்வங்களுக்கு அதாவது ஊர்த்தெய்வங்களுக்கு அக்கிராமத்துக் குடியானவர்களே 'பூசாரிகளாக' இருக்கின்றனர். ஆதலால் அவர்களின் அறிவுறுத்தலுக்கிணங்க அவ்வாறான கிராமத்து தெய்வங்களை ஆண்டுதோறும் புதிதாகச் செய்து அதைப் பிரதிஷ்டை

செய்யும் வழக்கம் கிராமப்புறங்களில் இன்றளவும் காணப்படுகின்றது. பெரும்பாலான கிராமங்களில் அதைக் குயவர் சமூகத்தினர் செய்கின்றனர். சிலபோது வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட குடிகள் வழிபடும் தெய்வங்களுக்குக் குயவர்களே 'பூசாரிகளாக'வும் இருந்திருக்கின்றனர். இதை மெய்ப்பிக்கும் விதமாக "பிராமணரை அரசர்கள் சடங்கு செய்ய பணித்தது போலவே வேளாளர்கள் குயவரைச் சடங்குச் செய்ய பணித்தனர்" (2003:51) என்ற தர்மதீர்த்த அடிகளாரின் கருத்து அமைந்திருக்கின்றது.

வேளாளர்கள் வழிபடும் தெய்வங்களோடு மிகவும் நெருங்கிய தொடர்புடையவர்களாகக் குயவர்கள் இருக்கின்றனர். ஆண்டுதோறும் அவர்கள் செய்யும் திருவிழாவிற்குத் தேவையான தெய்வ உருக்களையும் இவர்களே செய்தளிக்கின்றனர். அவ்வாறு அவர்கள் மண்ணால் உருவாக்கும் அந்தத் தெய்வ உருவுக்குக் 'கண்' திறக்கும் சடங்கு செய்யப்படும்போது குயவர்கள் பெருமதிப்புடையவர்களாக மதிக்கப்படுகின்றனர். சமூக மதிப்பீட்டில் அவர்களுக்கான இந்நிலை சில மணிநேரமோ அல்லது சில நாட்களோ நீடிக்கிறது. பின்னாளில் அவர்கள் எப்போதும்போல் ஊழியக்குடிகளாகவே உருமாறி விடுகின்றனர். ஒரு ஊரில் ஒன்றுக்கு மேற்பட்ட குயவர் குடும்பங்கள் இருந்தால் ஆண்டுக்கு ஒரு குடும்பத்தினர் இச்சடங்குமுறையை ஏற்கின்றனர்.

**குலதெய்வ உருக்கள்**

சமூகம் என்பது பல குலப்பிரிவினர்களை உள்ளடக்கிய ஒரு தொகுதி. அதில் ஒவ்வொரு குலத்தினரும் ஒவ்வொரு தெய்வத்தினை வழிபட்டு வருகின்றனர். அதுவே அவர்களுக்கான குலதெய்வம். இது மரபான ஒன்று. அவ்வாறு அவர்கள் தத்தம் தெய்வத்திற்குச் செய்யும் வழிபாட்டுச் சடங்கின் அடிப்படையில் வேறுபட்டு நிற்கின்றனர்.

குலமரபு அடிப்படையில் வெவ்வேறான தெய்வ வழிபாட்டினைக் கொண்டவர்கள் ஒரே ஊரில் இருப்பினும் அவர்கள் அனைவருக்கும் அவரவர் சடங்கு முறைப்படியான தெய்வஉருக்களைச் செய்து தருபவர்களாக 'குயவர் சமூகத்தினர்' திகழ்கின்றனர். ஒட்டுமொத்த மண்ணாலான பொருள் உற்பத்திகளும் இவர்களைச் சார்ந்தது என்பதன் அடிப்படையில் பணிக்கப்பட்டிருக்கும் இக்குயவர்கள் அனைத்து குலமரபினருக்குமான தெய்வ உருக்களைச் செய்து தருவதுடன் அவற்றை உயிர்ப்பித்தலுக்கான தொடக்கநிலைச் சடங்குகளைச் செய்பவர்களாகவும் இருக்கின்றனர். ஆண்டுதோறும் புதிது புதிதாகத் தெய்வஉருக்களைச் செய்து தரும்போதெல்லாம் இவ்விதமான மதிப்பு மிக்க நிலையை இவர்கள் அடைகின்றனர். மேலும் இவ்விதத் தெய்வ உருக்களை உற்பத்தி செய்யுங்காலத்து பயபக்தியுடனான விரதங்களை மேற்கொள்வதாகவும் குறிப்பிடுகின்றனர் (நீலகண்ட உடையார்; பி.இ.4:72). இவர்களால் உற்பத்தி செய்யப்படும் நாட்டார் தெய்வங்கள் அனைத்தும் துடியானவை. அவற்றில் 1. அய்யானரப்பன், 2. வேடியப்பன், 3. முனீஸ்வரன், 4. காளி முதலான தெய்வங்கள்

முதன்மையானவை. இவை சில கிராமங்களில் ஒட்டுமொத்த ஊருக்கான காவல் தெய்வங்களாகவும் கொண்டாடப்பட்டிருக்கின்றன.

**அய்யனாரப்பன்**

இத்தெய்வம் ஊர் எல்லைப்புறத்தில் உள்ள பெரியதொரு மரத்தடியில் வைத்து வழிபடப்படுகின்றது. இது காவல் தெய்வம் ஆகையால் குதிரையை இதற்கான வாகனமாக அமைப்பது வழக்கமாயிருக்கின்றது. பின்னாளில் இக்குதிரையே அத்தெய்வத்திற்கென மிகப்பெரிய அடையாளமாக மாறிப் போயிருக்கிறது. ஆண்டுதோறும் திருவிழாவின்போது அத்தெய்வத்திற்குப் புதிது புதிதான குதிரை செய்து வைப்பதைப் பெரும்பாலான கிராமக் குடிகள் வழக்கமாக வைத்திருக்கின்றனர். அவ்வாறு கேட்டு நிற்கும் அவர்களுக்குத் தேவையான மண் குதிரைகளை உற்பத்தி செய்து தரும் பணியைக் குயவர் சமூகத்தினரே மேற்கொள்கின்றனர்.

மிகவும் பயபக்தியுடன் உருவாக்கப்படும் இக்குதிரை குறித்து சு. இரவிக்குமார் கூறுகையில்,

> தெய்வ உருவங்களை கீழிருந்து வளர்த்துக் கொண்டு போவார்கள். ஆனால் குதிரைக்கு அப்படிச் செய்யாமல் ஒவ்வொரு பகுதியையும் தனித்தனியாக செய்து பின்னர் இணைப்பார்கள். குதிரையின் உருவத்தில் கால்கள் உடலுடன் சேர்ந்த பகுதி ஒரு பெரும்பிரிவாகவும், கழுத்துக்கு மேல் முன்வாய் வரையுள்ள பகுதி ஒரு பெரும் பிரிவாகவும் பிரித்து உருவாக்கப்படும். குதிரையின் மொத்த உயரம் ஐந்து முதல் ஐந்தரை அடி வரை இருக்கும். நேர்த்திக்கடன் குதிரைகள் பெரும்பாலும் இந்த உயரத்தில் இருக்கும். கிராமத்துக் குதிரைகள் மட்டும் சிறிது உயரமாகச் செய்யப்படும். இது கிராமத்தின் தனிமனிதர்களை விட கிராமம் என்கிற அமைப்பு உயர்ந்தது என்பதைக் குறிப்பதாக உள்ளது *(1991:110)*

என்று குறிப்பிடுவார். இது தென்தமிழக மாவட்டங்களில் தற்போதும் நடைமுறையில் இருக்கும் வழக்கமாகும். இவ்வழக்கம் தமிழகத்தின் வட மாவட்டங்களில் சற்று வேறுபட்டதாயிருக்கின்றது. அதாவது திருவிழாவின்போது மக்களால் செய்து வைக்கப்படும் குதிரை மட்டுமே ஆளுயர அளவுடையது. மற்றபடி நேர்த்திக் கடனுக்கு வைக்கப்படுவனவெல்லாம் மூன்றடி உயரத்திலேயே செய்யப்பட்டிருக்கின்றன. அதேபோல் இக்கோயில் தெய்வத்திடம் நேர்ந்து கொள்பவர்கள் நேர்த்திக்கடனாக குதிரை செய்து வைத்தலையே வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இது தவிர்த்து மண்ணாலான யானை, சிப்பாய், நாய், மாடு, மதலம்பிள்ளை, மரியாதைக்காரர்கள் முதலான உருவ பொம்மைகளும் இக்கோயிலில் இடம் பெற்றிருக்கின்றன. இவ்வாறு இக்கோயில் முழுக்க நிரப்பப்பட்டிருக்கும் மண்ணாலான பொம்மைகள் அனைத்தையும் மண்பாண்ட உற்பத்தித் தொழிலை முதன்மைத் தொழிலாகக் கொண்ட குயவர் சமூகத்தினரே செய்தளிக்கின்றனர்.

அவ்வாறு குயவர்களால் செய்தளிக்கப்படும் மண் குதிரைகள் அளவால் வேறுபட்டன. இதில் ஆண்டிற்கு ஒருமுறை நடக்கும் திருவிழாவிற்கு ஊரார் செய்து வைக்கும் மண்ணாலான குதிரையே அளவில் பெரியது. இது செய்ய குயவர்களுக்கு முன்கூட்டியே முறையான அறிவிப்புச்செய்து முன்பணம் தரும் வழக்கம் கிராமங்களில் தற்போதும் இருக்கிறது. அவ்வாறு முன்பணம் பெற்ற பிறகே குயவர்கள் குதிரையைச் செய்யத் தொடங்குகின்றனர். அக்குதிரை தெய்வத்தன்மை மிகுந்ததென எண்ணி அதற்கான விரதங்களை மேற்கொள்ளும் குயவர்களும் இருக்கின்றனர்.

அவ்வாறு குயவர்களால் உருவாக்கப்படும் குதிரை தெய்வாம்சம் பொருந்தியதாகக் கருதப்படுகின்றது. ஆதலால் அதற்கான பூசை புனஸ்காரங்களைச் செய்யும் தகுதியும் குயவர்களுக்கானதாகிறது. அந்த வகையில் அப்போது சில நாள்கள் மட்டும் குயவர்கள் சமூகத்தளத்தின் மேல்தட்டில் வைத்து மதிக்கப்படுகின்றனர். இதைக் குயவர்கள் ஆண்டுதோறும் தங்களுக்குச் செய்யப்படும் ஊர் மரியாதையாகக் கருதுகின்றனர். இது குறித்து சு. இரவிக்குமார் கூறுகையில்,

> குயவர்கள் இத்தருணத்தில் தங்களைப் பிராமணர்கள் போல அலங்காரம் செய்து கொள்கின்றனர். இப்போது பூணூல் அணிந்து இடுப்பில் கட்டிய துண்டுடன், சட்டையில்லாமல் முழுமையான பூசாரியாகத் தோற்றம் கொண்டு வருவார்கள், பெரிய பூசாரி அல்லது விழா நடைபெறும் கிராமம் பார்க்கும் பூசாரி கோவணம் போல் மடித்துக் கட்டிய வெள்ளை வேட்டி, இடுப்பில் காவி அல்லது சிவப்புப் பட்டுத்துண்டு கழுத்தில் உருத்திராட்சம், பூணூல், பாசிமணிமாலை, நெற்றியில் விபூதி, சந்தனம், குங்குமம், உடலெங்கும் விபூதிப்பட்டைகள் அணிந்த தோற்றத்துடன் காணப்படுவார் (மேற்படி:140)

என்று மதுரை வட்டார வழக்கிலிருக்கும் குயவர்களுக்கான நிலைப்பாட்டினை இவ்வகையில் எடுத்துரைப்பர். இந்நிலை தமிழகத்தின் வட மாவட்டங்களில் சற்று தளர்ந்து காணப்படுகின்றது. ஆனால் ஊராரின் வேண்டுதலுக்கு இணங்க அதற்கான தாம்பூலம் பெற்று குதிரையைச் செய்யத் தொடங்கும் குயவர்கள் பின்னர் அதற்கு 'உயிர்கலை' (உயிர்தருதல்) தரும் முதன்மைச் சடங்கு செய்யும் உரிமையைப் பெற்றிருக்கின்றனர். இவ்வழக்கம் விழுப்புரம், திருவண்ணாமலை, வேலூர், திருவள்ளூர் மாவட்டங்களில் பரவலாக இருந்துவருகிறது. தவிர்த்து சென்னை மற்றும் காஞ்சிபுரம் வட்டாரங்களில் அரிதாகவே வழக்கிலிருக்கின்றது.

### சாவுச்சடங்கிற்கான பொருள்கள்

மனிதரின் இறப்புச் சடங்கின்போது குடம், கொள்ளிச்சட்டி, பால்குடம், அஸ்திக்கலசம், கொடவிளக்கு, விளக்குக்கூண்டு முதலான மண்ணாலான பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன. வாழ்வுச் சடங்கிற்கான மண்ணாலான பொருள்கள் பல வழக்கொழிந்து போயினும் சாவுச்சடங்கிற்குப் பயன்படுத்தப்படும் மண்ணாலான சடங்குப் பொருள்கள் தற்போதும் வழக்கில்

இருக்கின்றன. மாறாக, காலங்காலமாக இருந்து வரும் மரபான முறையிலேயே சாவுச்சடங்கிற்கான பொருள்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இதற்கு அப்பொருளின் மீதான மக்களின் மதிப்பீடே காரணமாகிறது. சாவுச்சடங்கு என்பது மீட்டெடுக்க இயலாத வாழ்வின் இறுதிக்கட்டச் செயல்பாடு ஆகையால் அச்சடங்கில் பயன்படுத்தப்படும் சடங்குப்பொருள்களுக்கும் இறுதி நிலையைத் தருவது என்பது மீட்டெடுக்க இயலாதது உயிர் என்பதன் குறியீடு. இதனைக் கடுவெளிச்சித்தர்,

*நந்த வனத்தில் ஓர் ஆண்டி - அவன்*
*நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்*
*கொண்டு வந்தானொரு தோண்டி - அதைக்*
*கூத்தாடி கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி*

*(த. கோவிந்தன்; 1979:224)*

என்பதாகப் பாடிச் செல்வார். எனவேதான் உடல் நிலையாமையை உணர்த்தும் வகையில் நிலையற்ற மண்ணாலான பொருள்களைச் சாவுச்சடங்கில் பயன்படுத்தும் வழக்கம் மேற்கொள்ளப்பட்டிருக்கலாம். அவ்வாறு சாவுச்சடங்கில் பயன்படுத்தப்படும் சடங்குப் பொருள்களை மறுபயன்பாட்டிற்கு உரியதாக கொள்ளாதற்கும் இதுவே காரணமாக இருக்கலாம். அதுமட்டுமல்லாமல் இறந்த மனித உடலைச் சுடுகாட்டில் அல்லது இடுகாட்டில் வைத்து, அதற்கான சடங்குகள் செய்து, அதில் பயன்படுத்தப்பட்ட மண்ணாலான சடங்குப்பொருளின் நிலைத்தன்மையைக் குலைக்கும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். அதாவது உயிருள்ள வரை உடல் நிலைத்தன்மை உள்ளதாயிருந்தது. ஆனால் உயிரற்றதும் அது தன் நிலைத்தன்மையை இழந்துவிட்டது என்பதை உணர்த்தும் விதமாக அச்சடங்கில் பயன்படுத்தப்படும் பொருள்கள் உடைபடுவதே சடங்கின் இறுதிக்கட்ட நிகழ்வாக நிகழ்த்தப்படுகின்றது.

**சாவுச்சடங்கில் குடம்**

சாவுச்சடங்கு நிகழ்த்தலில் குடம் உடைத்தல் மிக முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. தொண்டை மண்டல வட்டாரத்தில் உள்ள தாழ்த்தப்பட்ட மற்றும் இடைநிலைச் சாதியினரிடையே இச்சடங்கு முறை பெரிதளவில் வழக்கிலிருக்கின்றது. அவ்வாறான பழக்கமுடைய இவர்களனைவரும் அதற்கான சடங்குப்பொருள்களைத் தங்கள் ஊரில் பொருளுற்பத்தி செய்யும் குயவர்களிடம் மண்ணால் செய்து பெறுகின்றனர். மிகுதியான நெருக்கடிகள் ஏற்படினும் மிகவும் கண்டிப்பாக மண்ணாலான பொருள்களை மட்டுமே சடங்கு செய்யப் பயன்படுத்துகின்றனர். தற்காலத்தில் தொழில்நுட்பம் பெரியளவில் வளர்ச்சியடைந்திருந்த போதிலும் பிற வேறு வகையான மூலப்பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை இச்சட ங்கிற்குப் பயன்படுத்தும் பழக்கத்தினைக் கொண்டிருக்கவில்லை. மாறாக மண்ணாலேயே செய்து பெறுகின்றனர். ஏனெனில் இச்சாவுச்சடங்கு முறைக்கும் மண்பாண்டத்திற்குமான

உறவுமுறை பண்டைக் காலந்தொட்டே பிணைக்கப்பட்ட ஒன்றாயிருந்திருக்கிறது. அவர்கள் இவ்வித மண்பாண்டப்பொருள்களைப் பயன்படுத்துவதிலிருந்தே அச்சடங்கிற்கான அர்த்தப்பாடுகளை அவர்கள் கொண்டிருக்க வேண்டும். ஆதலாலேயே அவ்வர்த்தப்பாடுகளைத் தன்னுள் செறித்திருக்கும் மண்பாண்டப் பொருள்களைக் கொண்டு அச்சடங்கு நிகழ்த்துவதை அவர்களால் தவிர்க்க இயலவில்லை. அவ்வாறு மாற்றிச் செய்தால் அவ்விதச் சடங்கிற்கான அர்த்தப்பாடுகள் அனைத்தும் சிதைந்துவிடும் என்பதான நடைமுறை சிக்கலை மனதில் கொண்டு சாவுச்சடங்கு செய்வதற்கு மண்பாண்டத்தையே பயன்படுத்துகின்றனர் எனலாம்.

மண்பாண்டம் என்பது மனித உடலோடு ஒப்பிடப்படும் ஒன்றாகும். மனித உடலுக்கு வாய், உதடு, கழுத்து, வயிறு, அடி முதலானவை இருப்பது போன்று மண்பானைக்கும் வாய், உதடு, கழுத்து, வயிறு, அடி முதலான பாகங்கள் குறிப்பிடப்படுகின்றன. இவ்வாறான ஒப்புமைகள் உடைய மண்பானைகளை உற்பத்தி செய்வதால் 'தாங்கள் படைத்தல் தொழிலோடு தொடர்புடைய பிரம்ம குலத்தைச் சார்ந்தவர்கள்' (நீலகண்ட உடையார்; பி.இ.4:72) என்று குயவர்கள் தங்களைக் கூறிக்கொள்கின்றனர். அந்த வகையில் மனித உடலாகப் பாவித்து உற்பத்தி செய்யப்படுகின்ற மண் பானையைக் கொண்டு மனித உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பினைப் புலப்படுத்துவதாக இச்சடங்கு முறை அமைந்திருக்கின்றது.

இச்சடங்குமுறை பிணத்தைப் புதைப்பதற்கு அல்லது எரிப்பதற்குச் சில நிமிட நேரத்திற்கு முன்பாகச் செய்யப்படுகிறது. அவ்வாறு செய்யப்படும் இச்சடங்கு செய்முறையில் குயவரிடமிருந்து வாங்கி வரப்பட்ட புதுப்பானையில் எந்தவிதமான கலப்படமும் அற்ற நீர் நிரப்பப்படுகிறது. அவ்வாறு நீர் நிரப்பப்பட்ட அந்தக் குடத்தினை 'சாவுக்குடம்' என்றழைக்கின்றனர். முன்னியலில் கூறியதுபோல் அதை இறந்தவர்களின் மகன்களில் ஒருவர் (தாய்க்குத் தலைப்பிள்ளை தகப்பனுக்கு கடைப்பிள்ளை என்ற முறையில் தத்தம் சடங்கு செய்யும் முறை பின்பற்றப்பட்டு வருகிறது. இது மரபாகச் சாவுச்சடங்கு செய்முறையில் கடைபிடிக்கப்பட்டு வரும் முறை. இது தற்போதும் வழக்கத்திலிருக்கின்றது.) தனது தோளில் சுமந்தபடி பிணத்தைச் சுற்றிவரச் செய்வர். அவ்வாறு அவர் அப்பிணத்தைச் சுற்றிவரும்போது ஒவ்வொரு சுற்றிற்கும் ஒரு ஓட்டையிடுவதன் மூலம் அப்பானையில் (தொண்டை மண்டல வட்டாரங்களில் இச்சடங்கு செய்முறையைப் பெரும்பாலும் 'வண்ணார்' சமூகத்தினரே செய்கின்றனர்.) உள்ள நீர் வெளியேற்றப்படுகின்றது. இம்முறையில் அடுத்தடுத்து இரண்டு ஓட்டைகளிடப்படுகின்றன. ஆக மொத்தம் மூன்று முறை ஓட்டைகளிடப்படுகின்றன. அவ்வாறு ஓட்டைகளிட்டு வெளியேற்றப்பட்ட நீரானது உயிராகவும் மண்ணால் உற்பத்தி செய்யப்பட்ட பானை உடலாகவும் கொள்ளப்படும்போது உடலைவிட்டு உயிர் வெளியேறிவிட்ட செய்தியை வெளிப்படுத்துவதாக அச்சடங்கு முறை அமைக்கப்பட்டுள்ளது. அவ்வாறு

ஓட்டையின் வழியே நீர் வெளியேறுதல் என்பது மனித உடலிலுள்ள ஒன்பது ஓட்டையின் வழியே உயிர் வெளியேறுகிறது என்பதன் குறியீடு. அவ்வாறு உயிர் வெளியேறிய உடலின் நிலையாமையை உணர்த்தும் விதமாக அக்குடம் பிணத்தின் தலை வைக்கப்பட்ட திசைப்பக்கம் நிறுத்தி உடைக்கப்படுகின்றது. இவ்வாறு மனித வாழ்வியலோடு ஒன்றிய வகையில் நிகழ்த்தப்படும் இச்சடங்கு முறையில் மண்பாண்டப் பொருளே முதன்மையானதாக இருக்கிறது. தவிர்த்து அவ்விடத்தை வேறு எந்தப் பொருளாலும் இட்டு நிரப்ப இயலவில்லை. எனவேதான் சாவுச்சடங்கிற்குத் தேவையான அவ்விதமான சடங்குப் பொருள்களை மண்ணால் செய்து பெறும் வழக்கம் இன்றும் மாற்றமடையாமல் இருக்கிறது எனலாம்.

**சாவுச்சடங்கு - உடலடக்கம் - கொல்லிச்சட்டி**

வேளாண்மைத் தொழிலில் விதையைப் புதைப்பது போன்று இறந்த உடலை மண்ணில் புதைத்து உடலடக்கம் செய்வது மரபான திராவிடப் பண்பாடு. மற்றது இறந்த உடலைத் தீயிட்டு எரியூட்டுவது என்பதான ஆரியப்பண்பாடு. அவ்வாறு எரியூட்டுவதற்கு அடிப்படையாயிருப்பது மக்களின் ஆவி குறித்த தீய நம்பிக்கை. இந்நம்பிக்கை வேதப் பண்பாட்டிலிருந்து உருப்பெற்றெழுந்தது என்பர். தற்போது இது பரவலாக எல்லோராலும் நம்பப்படுகின்றது. தவிர்த்து இதற்கு முந்தைய காலகட்டங்களிலும் தற்போதைய கிராமப்புறங்களிலும் புதைத்தல், எரித்தல் என்ற இருவேறான பழக்கமும் வழக்கத்திலிருக்கின்றன. அதாவது தற்கொலை செய்து கொள்பவர்கள், விபத்தில் இறப்பவர்கள், ஒரு தாய் வயிற்றில் பிறந்த தலைப்பிள்ளைகள் இறந்தால் அவர்களின் உடலைத் தீயிட்டு எரிக்கும் வழக்கம் தற்போதும் நடைமுறையில் இருக்கிறது. ஏனெனில் மேற்கூறிய மூவகைப்பட்டவர்களில் முதல் இரு வகைத்தானவர்கள் நிறைவேறாத ஆசைகளைக் கொண்டவர்கள். ஆதலால் அவர்களின் ஆசை நிறைவேறும்வரை பூமியிலேயே கெட்ட ஆவியாகச் சுற்றித் திரிவர் என்று நம்பப்படுகிறது. மேலும் மூன்றாவது வகை இறப்பிற்குரியவர்கள் 'தலைப்பிள்ளை' என்பதால் அவர்களைப் புதைத்தால் அவ்வுடலைத் தோண்டி எடுத்து அவர்களுடைய உறுப்புகளைப் பயன்படுத்தி துர்தேவதைகளைத் துணையாகக் கொண்ட சூனியக்காரர்கள் 'பில்லி சூனியம்' செய்வதற்குத் தேவையான சக்தி மிகுந்த 'மை' தயாரிக்கப் பயன்படுத்திக் கொள்வர். அவ்வாறு 'தலைப்பிள்ளை'யின் உடல் தவறான செயல்பாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டால் அதற்குப்பின் அத்தாயின் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகள் யாவரும் வளத்துடன் இருக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை மக்களிடையே திடமாக இருக்கின்றது. ஆகையால் இவ்வகையானவர்கள் இறந்ததும் அவர்களின் உடலை 'எரித்து விடுவதை' வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இது இளவயதுகாரர்களுக்கு மட்டுமே. தலைப்பிள்ளை முதியவராகி இறந்தால் இவ்வாறு எரியூட்டும் வழக்கம் இல்லை. ஏனெனில் இளவயதுடையவர்கள் வாழும் வேட்கையுடையவர்கள்; ஆதலால் ஆவியாகத் திரிவர். ஆனால் முதுமையில் வாழ்ந்து முடித்ததற்கான திருப்தியை மனிதமனம் பெற்றுவிடும்.

ஆகையால் உயிர் சாந்தி அடைந்துவிடும் என்ற நம்பிக்கை. இவ்வழக்கம் தற்போதைய நெருக்கடிமிகுந்த நவீனக் கலாச்சாரச்சூழலில் முற்றும் மாறியிருக்கிறது. இறந்த மனித உடலைப் புதைக்கப் போதுமான இடவசதியில்லாததால் அவ்வுடலை எரித்துவிடுகின்ற வழக்கம் தற்போது பெரும்பான்மையாக இருக்கிறது.

காலங்காலமாகவே இறந்த மனித உடலைத் தீயிட்டு எரிப்பதற்குத் தனியாக இடம் ஒதுக்கப்பட்டிருந்திருக்கின்றது. அவ்வாறு ஒதுக்கப்பட்ட இடத்தைச் 'சுடுகாடு' எனக் குறிப்பிட்டிருக்கின்றனர். இவ்வழக்கம் தற்போதும் இருக்கின்றது. இறந்த உடலைத் தீயிட்டு சுடும் ஊர் ஒதுக்குப்புறத்திலுள்ள திருத்தப்படாத காட்டுப்பகுதி 'சுடுகாடு' எனப்படுகிறது. அவ்வாறு தீப்பெட்டி அறிமுகமாவதற்கு முன்னான காலகட்டத்தில் ஊரின் ஒதுக்குப்புறத்தே அமைந்த சுடுகாட்டில் சுடுவதற்காக இறந்த உடலைக் கொண்டு செல்லும்போது கூடவே சுடுவதற்குத் தேவையான நெருப்பையும் கொண்டு செல்லும் வழக்கம் இருந்திருக்கிறது. அவ்வாறு நெருப்பினைக் கொண்டு செல்ல பயன்படுத்தப்பட்ட மண்ணாலான சடங்குப் பயன்பாட்டுப் பொருளே 'கொல்லிச்சட்டி'. 'கொல்லி' என்ற சொல்லுக்கு 'நெருப்பு' என்று பொருள். 'கொல்லி' என்ற சொல்லுக்கு கழகத் தமிழ் அகராதி 'நெருப்பு' என்று பொருள் தருகிறது. நெருப்பினை வாயால் கக்கி துன்பத்தினை ஏற்படுத்தும் தீய சக்தியை 'கொள்ளிவாய்ப்பிசாசு' என்பதிலிருந்தும் இறந்த உடலுக்குத் தீயிடுவதை 'கொள்ளிவைத்தல்' என்பதிலிருந்தும் உய்த்துணர முடிகிறது.

சாவுச்சடங்கிற்குப் பயன்படுத்தப்படும் மண்ணாலான இவ்வகைக் கொல்லிச் சட்டியை மண்ணாலான புழங்குபொருள் உற்பத்தியைக் குடி ஊழியமாகச் செய்த குயவர்களே உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். இயற்கை மூலப்பொருளிலிருந்து மிகவும் எளிமையான முறையில் உற்பத்தி செய்யப்பட்ட மண்பாண்டப் பொருள்கள் நெருப்பு மற்றும் நீர் என்ற இருவகையான பொருள்களையும் எடுத்தாளுவதற்கான நிலைத்தன்மை உடையதாக அமைந்திருக்கிறது. ஆகவே அதனை இவ்வாறு நெருப்பினை எடுத்தாளுவதற்குப் பயன்படுத்தியிருக்கலாம். முன்னர்க் குறிப்பிட்டது போன்று 'கும்மிடிச்சட்டி' என்ற சொல்லுருவாக்கமும் இதே தன்மையில் உருவானதென இனவரைவியலாளர் எட்கர் தர்ட்ஸன் குறிப்பிடுவர். ஆக அந்த வகையில் நெருப்பினைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் உடைய மரபில், அதனை முன்வைத்துச் செய்யப்படும் வாழ்க்கை வட்டச் சடங்குகள் ஏராளம். அச்சடங்குகளில் அதனை எடுத்தாளுவதற்கான மண்ணாலான சடங்குப் பயன்பாட்டுப்பொருள்களைக் குயவர்களே செய்தளித்திருக்கின்றனர். அவற்றுள் சாவுச்சடங்கில் பயன்படுத்தப்படும் கொள்ளிச்சட்டியும் ஒன்று.

**தலைவிளக்கு**

மனித உடலைவிட்டு உயிர் பிரிந்ததும் அவ்வுடலைக் கிடத்தி அதற்குச் சடங்குகள் செய்யப்படுகின்றன. அவ்வாறு செய்யப்படும் சடங்குகள் குலம், கோத்திரத்தின் அடிப்படையில் வேறுபட்டன என்றாலும் அச்சடங்கு முறைகளில் எல்லாவற்றிற்கும் பொதுவான சில முறைமைகள் எல்லோராலும் பின்பற்றப்படுகின்றது. அவற்றில் 'தலைவிளக்கு' வைத்தல் என்பதும் ஒன்று. இது குறித்து முதுகுயவர் ஒருவர் குறிப்பிடுகையில்,

> தலைவிளக்கு வைத்தல் என்பது உயிர்பிரிந்த மனிதஉடலைக் கிடத்தி அதற்குச் செய்யப்படும் முதல் சடங்கு. இது அவ்வுடலுக்கான மண்ணுலகத் தொடர்பினைத் துண்டித்து அது மாற்றுலகிற்கானதெனக் குறிப்பிடும் விதமாக நிகழ்த்தப்படுவது (களாய்வு; ராஜகிளி (80): துறிஞ்சிக்குப்பம், 10.04.2009).

என்கிறார். இது இறந்தவர்களைத் தெய்வமாக வழிபடும் மரபிற்கான எச்சக்கூறு. தெய்வத்திற்கு விளக்குப் பொருத்தி வழிபடுதலைப் போன்று இறந்த உடலுக்கும் விளக்குப் பொருத்தி வைக்கப்படுகின்றது. அவ்வாறு பொருத்தப்படும் விளக்கு பிணத்தின் தலைப்பக்கம் அமைக்கப்படுவதால் அதை 'தலைவிளக்கு' எனக் குறிக்கும் வழக்கம் வந்திருக்க வேண்டும்.

இத்'தலைவிளக்கு' பெரும்பாலும் மண்ணாலான பொருளாகவே இருந்திருக்கிறது. அகல்விளக்கு வடிவினை ஒத்த இது குவிந்த இருகை அளவிற்கு மிகப்பெரியதாக இருக்கின்றது. இதை இவ்விறப்புச் சடங்கு செய்வதற்காக வேண்டி குயவர்களிடம் கேட்டுப்பெறும் வழக்கத்தினை வெகுமக்கள் கொண்டிருக்கின்றனர். இச்சடங்கு இறந்தவரின் வீட்டில் செய்யப்படுகிறது. இறந்தவர் அவ்வீட்டிற்கான தெய்வமாகக் கருதப்படுவதால் அங்குச் செய்யப்படும் சடங்குப் பொருள்கள் அனைத்தும் ஒற்றைப் பயன்பாட்டிற்கு உரியதாகக் கொள்ளப்படவில்லை. அப்பொருள்களை வீட்டில் வைத்து வழிபடும் வழக்கமும் இருக்கிறது. ஆதலால் அங்குப் பயன்படுத்தப்படும் சடங்குப் பொருள்களில் சில காலமாற்றத்தை உள்வாங்கியிருக்கின்றன. அதில் 'தலைவிளக்கு' முதன்மையானது. முற்காலங்களில் இச்சடங்கிற்குப் பயன்படுத்தப்பட்ட மண்ணாலான விளக்கிற்கான இடத்தினைத் தற்போதைய 'காமாட்சியம்மன் விளக்கு' என்ற உலோக விளக்குகள் ஆக்கிரமித்திருக்கின்றன.

**கலசம்**

இறந்தோருக்கான 'நீத்தார் இறுதி வழிபாடு' இறந்த நாளுக்கு அடுத்த பதினெட்டாம் நாள் செய்யப்படுகின்றது. அவ்வாறு செய்யப்படும் இவ்வழிபாட்டுச் சடங்கிற்கு 'கரும காரியம்' என்ற வழக்காற்றுப் பெயரும் இருக்கிறது. இச்சடங்கு இறந்தவரின் வீட்டிற்கு அருகாமையில் உள்ள நீர்நிலைகளில் செய்யப்படுகின்றது. பெரும்பாலும் கடற்கரை, ஆற்றங்கரை, குளத்தங்கரையாகவே இருக்கிறது. இறந்தோரைத் தெய்வமாக்குவதே அங்குச்

செய்யப்படும் சடங்கின் சாரமாக இருக்கின்றது. அவ்வாறு தெய்வமாக்கப்பட்ட இறந்தோரை ஐம்பூதங்களில் ஒன்றான நீராகக் கொண்டு அதை மண்கலத்தில் சேகரித்து வீட்டிற்குக் கொண்டு வருகின்றனர்.

முன்னர்க் குறிப்பிட்டதுபோல் உயிர்ப்பான ஒன்றினை உள்ளிட்டு வைக்கும் ஒன்றாகவே மண்சார்ந்த சடங்குப்பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன. அதனாலேயே அவ்வித மண்கலங்களை மனித உடலோடு பொருத்திப் பார்க்கும் தன்மை இயல்பாகவே இருந்திருக்கிறது. மண்கலங்கள் பயன்படுத்தப்படும் இச்சடங்கில் அதற்கான இடத்தினைத் தற்போதைய உலோகக் கலன்கள் ஆக்கிரமித்திருக்கின்றன. ஆனாலும் இவை சடங்கிற்கான அர்த்தப்பாடுகளுடன் ஒன்றியதாக இல்லை.

**பால்குடம்**

இறந்த மனித உடலை ஐம்பூதங்களில் ஒன்றுடன் அடக்கம் செய்யப்பட்டதன் இறுதிச் சடங்காகச் செய்யப்படுவது 'பாலூற்றுதல்'. இச்சடங்கிற்குத் தேவையான பாலை, குயவர்களிடமிருந்து அன்று பெறப்பட்ட புதுப்பானையிலிட்டு இடுகாடு / சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்வதைத் தொண்டை மண்டல வட்டார வெகுமக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இன்றளவும் கிராமப்புறங்களில் இச்சடங்கிற்கு மண்ணாலான கலன்களையே பயன்படுத்தும் வழக்கம் இருந்துவருகிறது. இது காடுநோக்கி எடுத்துச் செல்லப்படும் சடங்குப்பொருள் என்பதாலும், ஒற்றைப் பயன்பாட்டிற்கு உரியதென்பதாலும் இதற்கு மண்ணாலான கலனைப் பயன்படுத்தும் இவ்வழக்கம் இன்றளவும் நீடித்து வருகிறதெனவும் கொள்ளலாம்.

**அஸ்திக்கலசம்**

தேவைக்கேற்பப் பொருளை மண்ணால் உற்பத்தி செய்து தருவதே குயவர்களுக்கான தனித்தன்மை. அதிலேயே அவர்களுக்கான அறிவார்த்தமும் அடங்கியிருக்கிறது என்பது முன்னியலில் கூறப்பட்டிருக்கின்றது. அந்த வகையில் சாவுச்சடங்கில் இறந்த உடலை எரியூட்டி அதிலிருந்து கிடைக்கும் சாம்பலை அதாவது அஸ்தியைக் கடலிலோ ஆற்றிலோ அல்லது மற்ற பிற நீர்நிலைகளிலோ கரைத்து பஞ்ச பூதங்களில் ஒன்றாக அவ்வுடலை மாற்றிவிடுவது என்பது சடங்கு முறை. இத்தகு சடங்கில் அஸ்தியைச் சேகரித்து வைக்க மண்ணாலான கலன் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அதைக் 'கலசம்' என்று குறிப்பிடும் வழக்கமும் இருந்திருக்கிறது. தற்போதும் இருக் கிறது.

கலசம், 'கலயம்' என்ற பெயரிலும் குறிப்பிடப்படும் வழக்கம் இருக்கிறது. இதற்கு இருகையடக்க அளவிலான கொள்கலன் எனப் பொருள் கொள்ளலாம். 'கலசம்' என்று குறிப்பிடப்படுவது பெரும்பாலும் சடங்குப் பயன்பாட்டிற்கு உரித்தானதாக இருக்கிறது. அதேபோல் 'கலயம்' எனக் குறிப்பிடப்படுவது பெரும்பாலும் அன்றாடப் பயன்பாட்டுப் பொருளாக இருக்கிறது. 'கஞ்சிக்கலயம்',

'கள்ளுக்கலயம்' முதலானவற்றை இதற்கு சான்றாகக் கொள்ளலாம். தற்போது இவை மிகவும் அரிதாகவே வழக்கில் இருக்கின்றன.

நெருக்கடியான நவீன நகரக்கலாச்சாரச் சூழலில் புழங்குபொருள்களை அதற்கு ஏற்றாற்போல் உற்பத்தி செய்து தரும் வழக்கத்தினை நகர்சார் குயவர்கள் தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். இதற்கு முன்னான காலகட்டங்களிலும் தற்போதைய கிராமச் சூழலிலும் இத்தகு 'அஸ்திக்கலசமாக' சுட்டு திடப்படுத்தப்பட்ட மண்கலனே பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. 'அஸ்திகலச'ப் பயன்பாடு மிகவும் அரிதாக இருந்ததே இதற்கான காரணமாக இருக்கலாம். ஆனால் நகரக் கலாச்சாரச் சூழலில் முற்ற முழுக்க இறந்த மனித உடலை எரியூட்டுவதையே வழக்கமாகக் கொண்ட இச்சடங்கு முறைக்கு அஸ்தியைச் சேகரிக்கத் தேவையான அவசியச் சடங்குப் பொருளாக இம்மண்கலம் கொள்ளப்படுகிறது. ஆதலால் இம்மண் கலசத்திற்கான பயன்பாட்டின் தன்மையை உணர்ந்து அதற்கேற்றாற்போல் 'கலசம்' உற்பத்தி செய்து தரும் முறையை நகர்சார் குயவர்கள் மேற்கொண்டு வருகின்றனர். அதாவது நீர் நிலைகளில் கரைக்கப்படும் அஸ்தியோடு அஸ்தியைக் கொண்டு சென்ற கலசமும் கரைந்துவிடுவதற்கு ஏதுவான வகையில் இச்சடங்கிற்கு 'சுட்டு திடப்படுத்தப்படாத' பச்சை மண்கலசத்தை உற்பத்தி செய்து தருகின்றனர். குறிப்பாக இவ்வழக்கம் நகர்வாழ் குயவர்களிடம் மிகுதியாக இருக்கிறது. இம்முறையை மக்களின் தேவையுணர்ந்து அவர்கள் பயன்படுத்துவதற்கு ஏதுவான வகையில் பொருள்களை மண்ணால் உற்பத்தி செய்து தரும் நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டு தொழில் செய்த குயவர்களின் காலப்போக்கிலான அடுத்தகட்ட வளர்ச்சியாகக் கொள்ளலாம்.

**சாணகை**

இறந்த உடலை இடுகாட்டிற்கு / சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லும் வழியில் அமைக்கப்பட்டிருக்கும் அரிச்சந்திரன் கோயிலில் கற்பூர தீப ஆராதனை செய்வதற்காகப் பயன்படுத்தப்படும் மண்ணாலான தட்டு வகை. இறப்புச் சடங்கு செய்வதற்கெனக் குயவர்களிடமிருந்து பெறப்படும் மண்ணாலான பொருள்களுள் இதுவும் ஒன்று.

**தீபக்கலசம்**

'தீபக்கலசம்' ஏற்றும் இச்சடங்கானது இறந்த உடலைக் கிடத்தி முதன்முதலாகச் செய்யப்படுவதாகும். நறுமணப் புகை உருவாகிடும் இச்சடங்கு முறையைச் செய்வதற்கு மண்ணாலான 'தீபக்கலசம்' பயன்படுத்தப்படுகின்றது. இதை வழக்காற்று மொழியில் 'தூபக்கால்', 'தூபக்கலசம்' என்பர். இம்மண் கலனில் நெருப்பை நிரப்பி அதில் 'சாம்பிராணி பொடி' தூவி நறுமணப்புகை எழுப்பும் வழக்கம் முன்னாளில் இருந்திருக்கிறது. ஆனால் தற்போது மண்ணாலான இச்சடங்குப் பொருள் வழக்கொழிந்து அவ்விடத்தினை ஊதுபத்திகள் ஆக்கிரமித்திருக்கின்றன. ஆக, சாவுச்சடங்கு செய்தலில் குயவர்களின் பங்களிப்பு தவிர்க்க முடியாத ஒன்றாக இன்றளவும் இருந்து வருகிறது.

இதற்கு அவர்களிடமிருந்து இச்சடங்கு செய்வதற்குப் பால்குடம், கொள்ளிச்சட்டி, தண்ணீர்க்குடம், தலை விளக்கு, தீபக்கலசம், சாணகை, கலசம் முதலான பொருள்களைப் பெறுவதே ஆதாரமாகும். ஆகையால் இவ்விதச் சடங்குகள் இன்றளவும் தொடர்வதற்கு அதற்கான சடங்குப்பொருள்களை உற்பத்தி செய்து தரும் குயவர்களே முக்கியக் காரணமானவர்களாகக் கருதப்படுகின்றனர். இச்சடங்கு முறையே மக்களுடனான குயவர்களின் உறவை உணர்த்தும் சரடாகத் திகழ்கின்றது.

## மண்ணாலான புழங்குபொருள்களின் மாற்றுப் பரிணாமம்

ஒன்று பிறிதொன்றாக மாறுவதைப் பரிணாம வளர்ச்சி என்கிறோம். அதனடிப்படையில் மனிதனை அடுத்தடுத்தகட்ட வளர்ச்சிக்கு முன்னகர்த்தப் பயன்படும் மண்சார் புழங்குபொருள்கள் இத்தலைப்பின்கீழ் விவரிக்கப்படுகின்றன.

தன்னைச் சுற்றியுள்ள இயற்கைப் பொருள்களைப் பயன்படுத்தி தனது வாழ்முறையை மேம்படுத்திக் கொள்ள முயன்ற மனிதனின் தொடக்ககால அறிவு வெளிப்பாடாக ஒட்டுமொத்த கைவினைப்பொருள்களையும் குறிப்பிடலாம். அதில் மண்ணை மூலப்பொருளாகக் கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்களும் ஒரு வகைத்தானது. மண் மட்டுமே தன் எண்ணத்திற்கு ஏற்ப எது ஒன்றையும் உருவாக்கிக் கொள்ளக்கூடிய அளவிலான இலகுத் தன்மையைக் கொண்டிருக்கிறது. ஆகையால் இயற்கையோடு தன்னை நெருக்கமாகத் தகவமைத்துக் கொள்ள மனிதர்கள் அதிக அளவு மண்ணையே துணையாகக் கொண்டிருக்கின்றனர். இதனைக் கொண்டு தன்னையும் தனக்கு மேலான சக்திகளையும் திருப்திப்படுத்திக் கொள்ள நினைத்ததின் விளைவால் உருவானதே 'மண்பாண்டக் கலை'. இதிலிருந்து தங்களின் அன்றாட வாழ்வியற் தேவைக்கான பயன்பாட்டுப் பொருள்களையும் தனக்கு மேலான சக்திகளைத் திருப்திப்படுத்த செய்யப்படும் சடங்கிற்குத் தேவையான பொருள்களையும் உற்பத்தி செய்து கொண்டிருக்கின்றனர். இக்கருத்திற்குப் பொருத்தமானதாக இவ்விதக் கலை குறித்த,

> நாட்டுப்புறச் சமுதாயத்தில் கைவினைக் கலைகள் மிகவும் சமூகவயப்பட்டதாகும். இவை பண்பாட்டு வாழ்வின் அங்கங்கள் ஆகும். அன்றாட வாழ்வோடு மிகவும் ஒன்றிக் காணப்படுவதாகும். இந்தச் சமூக வயத்தன்மை என்பது ஒரு சமூகத்திற்குத் தேவையான கலைப்பொருள்கள் உற்பத்தி செய்யப்படுவதற்கும் அதன் மூலம் அம்மக்களின் தேவைகள் நிறைவு பெறுவதற்கும் உள்ள உறவாகும். அதனுடன் கைவினைப் பொருள்கள் வாயிலாக அச்சமூகம் வெளிப்படுத்தும் கருத்துகள், விழுமியங்கள், நெறிமுறைகள், பிற கற்பிதங்கள் யாவும் கலையின் சமூக வயப்பட்ட தன்மையை உணர்த்துவனவாகும் (2000:6)

என்று பக்தவத்சலபாரதி தன் கட்டுரையில் குறிப்பிடும் அறிஞர் பிர்தின் (Firth) கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கதாய் இருக்கிறது.

இம்மண்பாண்ட உற்பத்தித்தொழிலின் வழி அன்றாட வாழ்வியற் தேவைகளை நிறைவுசெய்ய இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்களும், சடங்குப்பொருள்களும் ஒருசேர உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. இவை இரண்டும் சமூக அசைவியக்கத்திற்கு மிக முக்கியமானதாகக் கருதப்பட்டிருக்கின்றன. ஆகையால் மண்ணாலான இப்பொருள் உற்பத்திக்கு மிகுந்த வரவேற்பு இருந்திருக்கிறது. ஆனால் இந்நிலை தற்போது தலைகீழ் மாற்றத்தினைப் பெற்றிருக்கின்றது. நவீனத் தொழில்நுட்பத்தின் தலையீட்டினை இதற்குக் காரணமாகக் கொள்ளலாம்.

***அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களின் மாற்றுப் பரிணாமம்***

தமிழக வரலாற்றில் ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னான காலகட்டத்தில் நவீனத் தொழில்நுட்ப நிறுவனங்கள், மண்ணாலான இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்களுக்குப் பதிலாக, பீங்கான், அலுமினியம், ஸ்டீல், பிளாஸ்டிக் முதலான பிற செயற்கை மூலப்பொருள்களால் பயன்பாட்டுப் பொருள்களை உற்பத்திசெய்து வெகுமக்களிடம் சேர்த்தன. அவ்வாறு உருவாக்கம் பெற்ற அச்சில் வார்த்த நிலைத்தன்மையுடைய இப்பொருள்கள் மக்களிடம் பெரும்வரவேற்பைப் பெற்றிருக்கின்றன. அறிவியல் முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட இவ்வகையான பொருள்களைப் பயன்படுத்துவதால் சமூகத்தில் தங்களுக்கான மதிப்பு கூடும் என்ற உளவியல் ஒவ்வொருவரின் மனதிலும் உருவாகத் தொடங்கியதன் விளைவாக வெகு விரைவிலேயே மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்களின் இடத்தை இவ்விதமான நவீனப் புழங்குபொருள்கள் ஆக்கிரமிப்பு செய்திருக்கின்றன. இதன்வழி இக்காலக்கட்டத்தில் நிலவுடைமையாளர்களிடம் இருந்த அதிகாரம் நிறுவன முதலாளிகளின் கைக்கு மாறியதும் மக்களுடனான குயவர்களின் சமூக உறவு மெல்ல மெல்ல வலுவிழக்கத் தொடங்கியது எனலாம். ஆனால் மரபார்ந்த சடங்குமுறைக்குத் தேவையான (பயன்பாட்டுப் பொருள் சடங்கு பொருளாதால் முறையிலான) சடங்குப்பொருள்களை நவீன முறையில் உற்பத்தி செய்து பயன்படுத்த யாரும் பெரும்பாலும் முயற்சி செய்திருக்கவில்லை. ஆதலால் குயவர்களுடனான சமூக உறவு இச்சரடின் வழி தற்போதும் தொடர்ந்து வருகிறது. இந்நிலைப்பாடு குறித்து இ. முத்தையா,

> நவீனத்துவ உற்பத்தி முறையின் தாக்கத்தினால் கிராமங்களிலும் தொழில்முறையில் எந்திரங்கள் புகுந்ததன் விளைவாக அங்கு கூட்டுழைப்பு முறையும் கூட்டுணர்வும் சிதையத் தொடங்கின. இதனால் கிராமங்களில் கூட்டாகச் செய்யப்படும் சடங்குகளும் விழாக்களும் குறையத் தொடங்கின. இத்தகைய சூழலினால் கைவினைக் கலைப்பொருள்களுக்கும் சடங்குகளுக்கும் இடையிலான உறவு மங்கத் தொடங்கியது. இதனால் கைவினைக் கலைஞர்கள் தங்களுடைய கைவினை நுட்பங்களையும் கலைப்பொருள்களை

> உருவாக்குவதற்குரிய நோக்கங்களையும் மாற்றிக் கொள்ள முற்பட்டனர் *(மேற்படி:138).*

என்று தன் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

### *கிராமச்சூழல்*

கிராமச் சூழலில் மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்கள் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதைக் கிராமத்துக் குயவர்களிடம் பெற்ற தகவலின் வழி அறிய முடிகிறது. இது குறித்து அவர்களிடமிருந்து பெற்ற மேலான தகவலின்படி மண்ணாலான பொருள்களைப் பயன்படுத்தும் வழக்கம் தற்போது அருகிவிட்டது என்பதையும், அதற்கான இடத்தைச் செயற்கை மூலப்பொருள்களால் உருவாக்கப்பட்ட நவீனப் புழங்குபொருள்கள் கைப்பற்றியிருக்கின்றன என்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது. நவீன தொழில்நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டு இவ்விதமான பொருள் உற்பத்தியில் ஈடுபடும் நிறுவனங்கள் வெகுமக்களின் தேவையைக் கவர்ச்சிகரமான விதத்தில் நிறைவு செய்யவல்லதாகச் செயல்படுகின்றன. அதாவது மண்ணாலான தண்ணீர் குடம் சற்று கனமானதாகவும், தவறி கீழே விழுந்தால் உடைந்துவிடும் தன்மையுடையதாகவும் இருப்பதால் அதைப் பயன்படுத்துவதை வெகுமக்கள் அசௌகரியமாக நினைக்கின்றனர். அவ்வாறான இவர்களின் சிரமப்பாட்டினைக் கருத்தில் கொண்ட நவீன தொழில்நுட்ப நிறுவனங்கள் வெகுமக்களின் தேவைக்கேற்ப லேசான எளிதில் உடையாத தன்மையுடைய வழவழப்பான பல அளவு மற்றும் வடிவங்களிலான பயன்பாட்டுப் பொருள்களை மண்ணிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட உலோகம், பீங்கான் மற்றும் இன்ன பிற மூலப்பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்து தருகின்றன. இதற்கான மூலப்பொருள்களைப் புதிது புதிதாகத் தயாரிக்க வேண்டிய அவசியம் இந்நிறுவனங்களுக்கு ஏற்பட்டிருக்கவில்லை. மாறாக, வெகுமக்களிடம் உள்ள தங்களின் தொழில்நுட்பத்தால் தரப்பட்ட பயன்பாடொழிந்த, பழைய புழங்குபொருள்களைப் பெற்று வளர்ந்த அறிவியல் தொழில்நுட்ப எந்திரங்களின் உதவியால் அவற்றை மறுசுழற்சி முறையில் (Recycle) புதுப்பொருளாக மாற்றித் திரும்ப அவர்களிடமே விற்பனைச் செய்யும் இடைப்பட்ட தொழிலையே இந்நிறுவனங்கள் செய்து வருகின்றன. இவ்வாறு உற்பத்தி செய்யப்படும் நவீனப் புழங்குபொருள்களுக்கான மூலப்பொருள்கள் செயற்கையானவை என்றாலும் அதற்கான வடிவங்கள் மரபானவை. மரபான மண்பாண்ட வகைகளின் வடிவங்களையே இந்நவீனப் புழங்குபொருள்கள் கொண்டுள்ளன.

### *நகரச்சூழல்*

நெருக்கடியான நகரமயச் சூழலில் எந்த ஒரு மண்ணாலான அன்றாடப் பயன்பாட்டுப் பொருளும் பயன்படுத்தப்படவில்லை எனலாம். தற்போது இவையனைத்தும் காட்சிப்படுத்தப்பட்ட அழகுப் பொருள்களாக மாறிப் போயிருக்கின்றன. ஆதலால் நகர்சார் குயவர்கள் தங்களின் தொழில்வழி

அலங்காரப் பொருள்கள் மட்டுமே செய்து தருபவர்களாக மாறிப்போயிருக்கின்றனர். தவிர்த்து கோடைக்காலங்களில் அரிதாக மிகச் சிலரே பயன்படுத்தும் குழாய் பொருத்தப்பட்ட குடிநீர் பானையை (Tap Pot) கிராமத்துக் குயவர்களிடமிருந்தே செய்து பெறுகின்றனர். இவர்கள் அவ்வாறான அன்றாட பயன்பாட்டுப் பொருள்களைப் பெரும்பாலும் செய்வதில்லை. மாறாக இவர்கள் நகர்சார் நவீன மேட்டுக்குடி மக்களுக்குத் தேவையான அலங்காரப் பொருள்களை உற்பத்தி செய்து தருவதையே தங்களுக்கான தொழிலாகக் கொண்டிருக்கின்றனர்.

காலத்திற்கேற்ற தொழில்நுட்பத்தைத் தங்களது தொழிலில் உட்செறித்து செயல்படத் தொடங்கிய இக்குயவர்கள் மண்ணாலான புழங்குபொருள்களின் பின்னடைவிற்குக் காரணமான அதன் நிலையற்ற தன்மையை மாற்றி அவற்றை நிலைத்தன்மை உடையதாகத் தர முற்பட்டனர். அதற்கேற்ப அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கான மூலப்பொருளை மாற்றி அமைத்துக் கொண்டனர். படிநிலை வளர்ச்சியாக அவற்றைக் கொண்டு வரிசைப்படுத்தினால் முதலாவதாகக் கல்நார் (Plast of Paris) மாவில் பொம்மை செய்தல், இரண்டாவதாகப் பீங்கான் மாவில் அகல் விளக்கு முதலான சடங்குப் பொருள்கள் செய்தல், மூன்றாவதாகச் செயற்கை இழைதனைக் (Fibre) கொண்டு அழகுப் பொருள்களைச் செய்து தருதல் என வரிசைப்படுத்தலாம். இவ்வாறு தங்களின் தொழில் தடத்தை மாற்றிக் கொண்ட நகர்சார் குயவர்கள் தங்களது கைத்திறனை முதல் மூலமாகக் கொண்டு பல பிரதி உருக்களை உற்பத்தி செய்யும் நவீனத் தொழில்நுட்பத்தாலான அச்சுமுறையையே பெரும்பாலும் பின்பற்றுகின்றனர். அவ்வித மூலப்பொருள்களை அச்சில் மட்டுமே பயன்படுத்த இயலும். ஆகையால் இவர்கள் தங்களின் கைவினைத் திறனை அச்சு வார்ப்பதற்காகத் தாங்கள் செய்யும் முதல் உருவிலேயே நிறுத்திக் கொள்கின்றனர். இது குறித்து இ. முத்தையா குறிப்பிடுகையில்,

> நவீனத்துவ சமூக மேட்டுக்குடி மக்களால் உருவாக்கப்படும் அழகு நேர்த்தி, சீர்மை, ஒழுங்கமைப்பு போன்ற அழகியல் கருத்துகள் கைவினைக் கலைஞர்களிடம் தாக்கத்தை ஏற்படுத்தியதன் விளைவாக கைத்திறன்களால் செய்யப்படும் கலைப்பொருள்கள் சீர்மையின்றி ஒழுங்கமைவு இன்றி காணப்படுவதாகக் கருதிப் புதிய அச்சுகளைப் (Moulds) பயன்படுத்தி கலைப்பொருள்களை உருவாக்கத் தொடங்கினர். இதனால் சூழலுக்கேற்ற கலைஞர்களின் நிகழ்கால உணர்வு மாற்றங்களுக்கேற்பச் சில நுட்பமான வேறுபாடுகளுடன் உருவாக்கப்படும் முறை மறைந்து அச்சுகளின் மூலம் ஒரே மாதிரியான வடிவங்கள் உருவாக்கப்படும் நிலை தோன்றியது (மேற்படி:*138*)

என்பார். இதற்குக் கைவினைக் கலைப்பொருள்கள் கலைப்பொருள்களாக மாறிப் போனதே காரணம் எனக் கொள்ளலாம்.

ஒருவாறாகச் சமூகவயப்பட்டிருந்த மண்பாண்டக்கலை முதலாளித்துவ ஈர்ப்பு விசைச் சுற்றில் சிக்கியதால் அதனைத் தொழிலாகச் செய்த கைவினைக்

கலைஞர்களுக்கும் மக்களுக்கும் இடையே இருந்த சமூக உறவில் விரிசல் ஏற்படத் தொடங்கியது என்ற இக்கருத்தினை மெய்ப்பிக்கும் வகையில்,

> ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சேர்ந்த மரபுவழி கைவினைக் கலைஞர்கள் அப்பகுதி மக்களின் பண்பாட்டுத் தேவையை நிறைவேற்றுவதைத் தங்களுடைய சமூக பொறுப்பாகக் கருதி வந்தார்கள். ஆனால் முதலாளித்துவ ஈர்ப்பு விசைச் சுற்றில் கைவினைக் கலைகளும் சிக்கிவிட்டதால் கலைஞர்களின் சமூகப் பொறுப்பு என்பது சந்தைப் பொறுப்பாக மாறிப்போனது. ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழ்கின்ற சக மக்களுக்காகக் கலைப்பொருள்களை உருவாக்குதல் என்ற நிலைமாறி, சந்தையைச் சார்ந்திருக்கும் பரந்துபட்ட நுகர்வோருக்காக உருவாக்குதல் என்ற நிலை ஏற்பட்டது. எங்கோ இருக்கின்ற நட்சத்திர விடுதிகளுக்காகவும் மேட்டுக்குடி மக்களின் இல்லங்களுக்காகவும் அரசு அலுவலகங்களுக்காகவும் கலைப்பொருள்களைக் கலைஞர்கள் உருவாக்கியதால் அவர்கள் சக மக்களிடமிருந்து அந்நியப்பட்டுப் போயினர்; அக்கலைஞர்கள் உருவாக்கிய கலைப்பொருள்களும் அந்நியப்பட்டுப் போயின. இதனால் கைவினைக் கலைஞர்களின் இன்ப துன்பங்களில் கைவினைக் கலைஞர்களும் பங்கேற்கும் உறவுநிலைகளில் இடைவெளி தோன்றத் தொடங்கியது. (மேற்படி:137)

என்ற கருத்து அமைந்திருக்கின்றது.

### *சடங்குப்பொருள்களின் மாற்றுப் பரிணாமம்*

மானிடவியல் அறிஞர் அந்தோணி வாலஸின் கூற்றுப்படி சடங்குகளை முன்னர்க் குறிப்பிட்டுள்ளபடி இரண்டு வகையாகப் பகுத்துக் கொள்ளலாம். மரபார்ந்த இவ்விருவேறுபட்ட சடங்கு முறைகளில் தொழில்நுட்பச் சடங்கு நிகழ்த்துதலுக்குத் தேவையான சடங்குப்பொருள்கள் பெரும்பாலும் கால மாற்றத்தை உள்வாங்கியனவாகக் காணப்படுகின்றன. ஆனால் 'கருத்தியல் சடங்குகள்' வரிசையிலான சடங்கு நிகழ்த்தலுக்குத் தேவையான சடங்குப்பொருள்களை நவீன முறையில் உற்பத்தி செய்து பயன்படுத்தும் பழக்கம் பெரிதளவில் வழக்கத்தில் இல்லை. தவிர்த்து மிக முக்கியமான வாழ்க்கை வட்டச் சடங்குகளில் பயன்படுத்துவதற்கான சடங்குப்பொருள்கள் அனைத்தும் மரபான முறையில் உற்பத்தி செய்து பெறுதலையே இன்றளவும் வெகுமக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். ஆதலால் அவர்களுடனான குயவர்களின் சமூக உறவு என்பது இச்சரடின்வழித் தற்போதும் தொடர்ந்து வருகிறது.

### *கிராமச்சூழல்*

இயற்கையோடு இயைந்த தொழில்களை முதன்மைத் தொழிலாகச் செய்யும் கிராமத்து வெகுமக்கள் 'கருத்தியல் சடங்குகள்' நிகழ்த்துவதில் பெரிதளவில் மாற்றமேதும் செய்திருக்கவில்லை. சான்றாக, திருமணச் சடங்கிற்குத் தேவையான 'சாலுகரகம்'. சாவுச்சடங்கிற்குத் தேவையான கலசம், தோண்டி, பானை,

நெருப்புச்சட்டி, சாணகை, நேர்த்திக்கடன் செலுத்துவதற்குத் தேவையான மதலம்பிள்ளை முதலான மிக முக்கியச் சடங்குப்பொருள்களைக் குயவர்களிடமிருந்து மண்ணால் செய்து பெறுவதையே தற்போதும் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். அதேபோல் தொழில்நுட்பச் சடங்குகள் வரிசையிலான சடங்குகள் சிலவற்றையும் பின்பற்றுகின்றனர். சான்றாக, வீடு குடி புகுவதற்கான சடங்கு செய்யத் தேவைப்படும் 'கலசங்களைக்' குயவர்களிடமிருந்து மண்ணால் செய்து பெறுவதையே தற்போது வரையிலான வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். ஆனால் வீட்டில் வைக்கப்படும் 'கண் திருஷ்டி' பொம்மை பயன்படுத்துவதில் மாற்றம் செய்திருக்கின்றனர். அச்சில் வார்த்து பல வண்ணங்கள் பூசப்பட்ட காகித பொம்மைகளைப் பயன்படுத்தும் வழக்கம் தற்போது மிகுதியாக இருக்கின்றது. அதேபோல் கருத்தியல் சடங்குகள் வரிசையிலான சடங்குகளில் ஒன்றான திருவிழாவில் தெய்வத்திற்குப் பொங்கலிடும் சடங்கில் பயன்படுத்தப்படும் மண்ணாலான சடங்குப் பொருளான 'பொங்கல் பல்லா' தற்போது பெரும்பான்மை இழந்து அதற்குப் பதிலாக 'எவர்சில்வர்' பாத்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. மண்ணாலான அப்பொங்கல் பல்லா மரபினை அடையாளப்படுத்துவதற்கான ஆவணப் பொருளை அழகியலுக்கானதாக வீட்டிலும், விடுதிகளிலும், கடைகளிலும் காட்சிப்படுத்தப்பட்டிருக்கின்றன. தங்களின் பயன்பாட்டிலிருந்த இப்பொருளை இதுவரை கண்ணால் காணாது தற்போதுதான் அதைக் கண்ணுறுவதுபோல கண்டு வியக்கும் கலாச்சாரச்சூழல் தற்போது மெல்ல வளர்ந்து வருகிறது.

### நகர்ச்சூழல்

இயந்திரங்களோடு ஒன்றிப்போன மற்றும் இயந்திரங்களுக்கான வேலையைச் செய்கின்ற, இயந்திரமாக வேலை செய்கின்ற நகர்வாழ் மக்களிடையே அவர்களின் மனிதத் தன்மையை (Human Being) நினைவூட்டும் விதமாகச் சில சடங்கு முறைகள் மட்டுமே வழக்கில் இருக்கின்றன. முற்றிலும் வேறொரு கலாச்சாரத்தினைத் தழுவி வாழ முயன்று கொண்டிருக்கும் இவர்களிடம் இது ஒட்டியிருப்பதே வியப்பிற்குரிய ஒன்றாக இருக்கிறது. மானிடவியல் ஆய்வாளர் ரோத்தன் பூலர் கருத்தினை வழிமொழியும் பக்தவத்சலபாரதியின் கூற்றுப்படி,

> சடங்கென்பது சிரத்தைக்குரிய வாழ்வில் குறியீட்டளவில் உந்துதலைப் பெற அல்லது நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள, பொருத்தமான நடத்தை முறைகளுடன் தன்னார்வமாக நிகழ்த்தும் ஒரு நிகழ்வு (2008:272)

என்பதை அறியமுடிகிறது. இதை நகர்வாழ் வெகுமக்கள் பெரும்பாலும் அதன் தன்மையறிந்து பின்பற்றுவதில்லை. சடங்கு பகுத்தறிவுக்கானதற்கு இல்லை எனக் கருதுகின்றனர். ஆதலால் சடங்கின் பிடியிலிருந்து மெல்ல மெல்ல அவர்கள் வெளியேறி கொண்டிருக்கின்றனர் என்றால் அது மிகையாகாது. இவ்விடத்தில் இது குறித்த லெவிஸ்ட்ரஸின் (Levi - Strauss) கருத்தினைப் பதிவுசெய்யும் பக்தவத்சலபாரதியின்,

*சடங்குகளில் பகுத்தறிவு வாதம் இல்லை என்ற விவாதம் முடிவு பெறவில்லை. சடங்கு நிகழ்வுக்குள் இடம்பெறும் தர்க்க உறவு, குறியீடுகள் புலப்படுத்தும் பொருண்மைகள், அவை உணர்த்தும் அற - ஒழுக்க நெறிகள் இவையனைத்தும் காரண - காரிய அடிப்படையிலான பகுத்தறிவு வாதத்தினின்று முற்றிலும் மாறுபட்டவை என்பதை முதலில் உணர வேண்டும் (மேற்படி:187)*

என்ற கருத்து ஒப்புநோக்கத்தக்கதாய் இருக்கின்றது.

வளர்ந்து கொண்டிருக்கும் அறிவியல் தொழில்நுட்பத்திற்கு மத்தியில் வாழும் நகர்வாழ் வெகுமக்கள் தொழில்நுட்பச் சடங்கு வரிசையிலான சடங்கு செய்வதில் மண்சார்ந்த சடங்குப்பொருளைப் பயன்படுத்தும் வழக்கம் பெரும்பாலும் இருந்திருக்கவில்லை. இதை நகர்சார் குயவர்களின் பொருளுற்பத்தியை அடிப்படையாகக் கொண்டும் மண்பாண்டக் கடைகளில் விற்கக்கூடிய பொருள்களை அடிப்படையாகக் கொண்டும் அறிய முடிகின்றது. ஆனால் கருத்தியல் சடங்குகளில் ஒன்றான 'வாழ்க்கைவட்டச்சடங்குகள்' செய்வதற்கு மண்ணாலான சடங்குப்பொருள்கள் பயன்படுத்தும் வழக்கம் தற்போதும் இவர்களின் மத்தியில் இருக்கிறது. இதற்கான சடங்குப்பொருள்கள் அனைத்தும் பயன்பாட்டுப்பொருள் சடங்குப்பொருளாதல் முறையிலானவை. ஆகையால் இவற்றை உற்பத்தி செய்வதற்கான இடப் போதாமையால் நகர்சார் குயவர்கள் இவற்றை உற்பத்தி செய்யும் வழக்கத்தினைக் கொண்டிருக்கவில்லை. மாறாக, கிராமப்புறக் குயவர்களிடமிருந்து உற்பத்தி செய்து பெறுகின்றனர். இவற்றில் இதற்கு விதிவிலக்கானது 'பச்சைக் கலசம்' அதாவது அஸ்திக்கலசம் மட்டுமேயாகும். இதை இவர்களின் உற்பத்தி அறிவிற்கான அடுத்தகட்ட வளர்ச்சியாகக் கொள்ளலாம்.

சாவுச்சடங்கின் இறுதியில் இறந்த உடலின் சாம்பலை ஐம்பூதங்களுடன் ஒன்றுசேர்க்கப் பயன்படுத்தப்படும் மண்ணாலான சடங்குப்பொருளாக 'பச்சைக்கலசம்' இருக்கிறது. நெருக்கடி மிகுந்த நகரச்சூழலில் பயன்படுத்தும் சடங்குப் பொருளான 'சுட்ட மண் கலயங்கள்' சுற்றுச்சூழலை மாசுபடுத்தும் என்ற பயன்பாட்டறிவை மனதில் கொண்ட நகர்சார் குயவர்கள் அதற்கு ஏதுவான வகையில் மண்கலயங்களை உற்பத்தி செய்து அவற்றைச் சுடாமல் தரலாயினர். இதை இவர்களால் செய்யப்படும் மண்ணாலான சடங்குப்பொருள்களின் அடுத்த கட்ட பரிணாம வளர்ச்சியாகக் கொள்ளலாம்.

மேலும், மண்ணாலான தெய்வ உருக்களைச் சடங்குப்பொருள்களாகக் கொண்ட நிலையில் தற்போது மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. மண்ணாலான பொம்மைகள் நிலைத்தன்மை குறைந்தவை. ஆதலால் அவற்றிற்கான மூலப்பொருள்களை மாற்றி அவற்றைக் காகித மாவாலும், கல்நார் மாவினாலும், போன்ற செயற்கை மூலப்பொருள்களாலும் குயவர் சமூகத்தினர் செய்து வருகின்றனர். மண்ணாலான பொருள் உற்பத்தியை விட இவ்விதமான பொருள் உற்பத்தி எளிமையானது. இதற்கான மூலப்பொருள்கள் பெறுவதிலும் உற்பத்தி

செய்வதிலும் இடநெருக்கடி சம்பந்தமான சிக்கல்கள் ஏதும் ஏற்படுவதில்லை என்பதையே இம்மாற்றத்திற்கான காரணமாகக் குறிப்பிடுகின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்குச் சென்னை கொசப்பேட்டையைச் சேர்ந்த தகவலாளி ஜோதிலிங்கம் குறிப்பிடுகையில்,

கொலுவில் மண் பொம்மைகள் வைக்கறதுங்கறது மரபானது. கொலு வக்கிறது எப்படி காலங்காலமாக இருந்து வருகிறதோ அதுமாதிரி அதுல மண்பொம்மைகளைப் பயன்படுத்துற பழக்கமும் தொடர்ந்து வருகிறது. இந்த நவீன உலகத்துல அழகழகான பொம்மைகள் அதிகமா வந்தாலும் மண் பொம்மைகளதான் அதிகமா வாங்குறாங்க. அதைச் செய்யனும்னா அதுக்கு நாம நெனக்கிற மாதிரியான தரத்துல களிமண் கெடைக்கிறதில்லை. சென்னையில் நாமத் தேடிப்போயி எடுக்கும்படியான இட வசதியும் இல்ல. அதனால வண்டிக்காரர் கொண்டு வந்து தர்ற மண்ணை நாம சிலை செய்வதற்கு ஏற்ற மாதிரி கலவை செய்ஞ்சி பயன்படுத்திக்க வேண்டியதாயிருக்கிறது. அதே மாதிரி சென்னையில மண்பாண்டப் பொருள் உற்பத்தி செய்தா அதைச் 'சூளை' போடுவதற்கான இடமும் இல்லை. நெருக்கடியான நகரத்துல அதுக்கான வாய்ப்பு இல்லை. அதுவுமில்லாம மாநகராட்சி மாசுக்கட்டுப்பாட்டு வாரியமும் சென்னை நகரத்துக்குள்ள சூளை போடக்கூடாதுன்னு ஆணை பிறப்பிச்சிருக்கு. இந்த நிலையில மண்ணாலான பொருள் செய்றது ரொம்ப கஷ்டம். அதனால களிமண்ணுல பண்ற சிலைகளை அப்படியே Plast of Paris மாவுல பண்றது. அடுத்து காகிதத்துல பண்றது, Fibre -ல பண்றது அப்படின்னு தொழில்நுட்பம் எவ்வளவோ வளர்ந்து வந்துடிச்சி. இதற்கான மூலப்பொருள்கள் அத்தனையும் சென்னையில இருக்குற Hardwares கடைகளிலேயே கெடைக்கிறது. பெரியளவு இட வசதியும் வேண்டாம். நாம இருக்குற வீட்டுக்குள்ளேயே செய்துக்கலாம். இதுல நான் களிமண் சிலை செய்து அதைக்கொண்டு Plast of Paris மாவாலான Die செய்து கொடுப்பேன். இதுமட்டுமில்லாம செம்பு, வெண்கலம், பித்தளை உள்ளிட்ட உலோகத்தாலான சிலைகள் செய்வதற்கு மாதிரி வடிவங்களை கணிமண்ணால செய்து குடுப்பேன் என்கிறார். (ஜோதிலிங்கம்; பி.இ.*4:119*) .

இதிலிருந்து நகர்சார் குயவர்களால் உற்பத்தி செய்யப்பட்ட மண்ணாலான புழங்குபொருள்களின் அடுத்தடுத்த கட்ட பரிணாம வளர்ச்சியினை அறிந்து கொள்ள இயலும். உதாரணமாக விளக்கேற்றப் பயன்படுத்தப்படும் மண்ணாலான 'அகல் விளக்கினைக்' கொள்ளலாம். தெய்வத்தோடு தொடர்புடைய கோயில் உள்ளிட்ட இடங்களில் விளக்கேற்றுவதற்கும், கார்த்திகை தீபத்திருநாளில் வீட்டில் அதிகப்படியான விளக்குகள் ஏற்றுவதற்குமே மண்ணாலான அகல்விளக்குகள் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. மற்றபடி குறைந்த அளவே வீட்டின் அன்றாடப் பயன்பாட்டிற்குரியதாக இருந்திருக்கிறது. அந்த அளவிற்கு மிக முக்கியச் சடங்குப் பொருளாஃஇருந்த மண்ணாலான இந்த அகல் விளக்குகள் தற்போது பீங்கான் மாவால் செய்யப்படுகின்றன. இதைக் குயவர் சமூகத்தினர் உள்ளிட்ட பிற சமூகத்தினரும் குடித்தொழிலாகச் செய்து வருகின்றனர்.

இத்தொழில் செய்ய கைவினைத் திறம் பெரிதளவில் தேவைப்படவில்லை. ஏனெனில் இதனை வார்த்து எடுக்கும்படியான அச்சுகளை நவீனத் தொழிற்கருவிகளைக் கொண்டு செய்து அதன்வழிப் பல பிரதி உருக்களை உற்பத்தி செய்கின்றனர். இதுமட்டுமல்லாது பல விளக்கு உருக்களுக்கான அச்சினை அவ்வாறான தொழில் நிறுவனத்திடமிருந்து பெற்று அதன்வழிப் பல வகையான விளக்குகளை உற்பத்தி செய்கின்றனர். இதற்கு களிமண்ணை மூலப்பொருளாகக் பயன்படுத்திய வழக்கம் ஒழிந்திருக்கிறது. இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு சென்னை, பாடி பகுதியைச் சேர்ந்த சரோஜா அவர்கள் பதில் கூறுகையில்,

> களிமண்ணால் செய்யிற அகல் விளக்குகள் அதிகமாக எண்ணெய் உறிஞ்சும். அதனால அதை யாரும் அதிகமாக வாங்க மாட்டார்கள். ஆகையால் அவர்களின் அந்தக் கஷ்டத்தைப் புரிஞ்சி அதுக்கேத்தா மாதிரி பீங்கான் மாவுல செய்து குடுக்குறோம். இதனால அகல் செய்யிறதும் ஈஸி, எண்ணையும் உறிஞ்சாது. அழகா பளபளன்னும் இருக்கும் அப்படிங்கறதால வியாபாரம் அதிகமா ஆகும். அதனால இத பீங்கான் மாவுல செய்யிறோம் (களாய்வு; சரோஜா **(54)**: பாடி, ***06.06.2009)***

என்கிறார். இவ்வாறு ஒரு பயன்பாட்டுப் பொருள் மண்ணால் உற்பத்தி செய்யப்படும் வரை குறிப்பிட்ட ஒரு சமூகத்திற்குரியதாகவும், அதே பொருளைப் பிற மூலப்பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்யும்போது பிற சமூகத்தினரும் அதில் கலந்து கொள்ளும் நிலையையும் இந்த 'அகல்' உற்பத்தித் தொழிலில் காணமுடிகிறது. இது மண்ணால் செய்யப்பட்ட அகல் விளக்கின் அடுத்தகட்ட பரிணாமம் என்றாலும் அதை மண்ணால் செய்யும் அந்த எல்லை வரை அது குயவர் சமூகத்தினருக்கானதாக இருந்திருக்கிறது. அகல் விளக்கு தேவைப்படுவோர் குயவர்களை நாடி அதனைப் பெற்றிருக்கின்றனர். சமூகத்தில் குயவர்களுக்கும் குடிமக்களுக்குமான உறவு இதுபோன்ற தேவை/நிறைவின்வழி தொடர்ந்திருக்கிறது. ஆனால் தற்போது பிற மூலப்பொருள்களால் பிற சமூகத்தினராலும் செய்து 'பொதுச் சந்தைக்கு' விற்கப்படுவதால் அதை உற்பத்தி செய்பவருக்கும் பயன்படுத்துபவருக்கும் எந்தவிதமான உறவுநிலையும் ஏற்படுவதற்கான சாத்தியப்பாடுகள் இல்லாமல் போயிருக்கின்றன. அதுமட்டுமின்றி பொதுச்சந்தையில் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்கிறோம் என்ற மனநிலை தொலைந்து பணம் முதன்மைப்படுத்தப்பட்டிருப்பதையும் இவ்வித நிகழ்வின்வழிக் காணமுடிகிறது.

### *அன்றாடப் பயன்பாட்டுப்பொருள் சடங்குப்பொருளாதல்*

வெகுமக்கள் வாழ்வியல் தேவையை முன்னிறுத்தி மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அவையே தெய்வத்திற்கான சடங்குப்பொருளாக மாற்றமடையும்போது அதற்கான புனிதத் தன்மைகளை அவ்வப்போது இயல்பாகவே பெறுகின்றன. இதை மனிதனிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் ஓர் உயர்ந்த பண்புநிலையாகக் கொள்ளலாம்.

> தீங்கு விளைவிக்கக் கூடிய உயர்ந்த சக்திகளினால் ஏற்படும் ஒடுக்குதல் குறித்த அச்சம், சமாளிக்க முடியாத அளவு திணறடிக்கக் கூடிய தெய்வ வலிமை, எல்லாமறிந்து நன்மையளிக்கும் தன்மை வாய்ந்த உயர்ந்த வல்லமை கொண்ட ஒருவரின் மீது சார்ந்திருக்கும் உணர்வு, இணங்கிப் போவதன் மூலம் பாதுகாப்புக் கிடைக்குமென்ற மறுஉறுதிப்பாட்டு உணர்ச்சி, நேர்மையின் மீது கொள்ளும் நம்பிக்கை, குற்றவுணர்வின் அழுத்தத்தில் இருந்து நன்றியோடு விடைபெறுதல், தன்னையே மறுதலித்தலினால் ஏற்பட்ட கடுமையான தலைகுனிவு, உள்ளொடுங்கியிருந்த சக்தியை அருள்வந்து வெளிப்படுத்துதல், தெய்வத்தோடு தன்னையே அடையாளப்படுத்திக் கொள்ளும் அல்லது ஒன்றிணைத்துக் கொள்ளும் வெறியாட்டு மீயுணர்வு, வழிபாட்டுக் கலைகள், இசை அல்லது ஆசாரச் சடங்குகளின் மீது கொண்ட அழகியல் ஈடுபாடு ஆகியவற்றிலும் இப்புனிதப் பண்பு ஊட்டப்படும் *(2008:334)*.

என்பார் தே. லூர்து. இப்புனிதப் பண்பு ஊட்டப்படுவதால் இவை சடங்குப்பொருள்களாக மாற்றமடைகின்றன. அவ்வாறு மாற்றமடையும் இவை பெரும்பாலும் ஒற்றைப் பயன்பாட்டு முறைக்கானதாகக் கொள்ளப்படுகின்றன. ஆனால் சிறப்பு நிலையில் சடங்கிற்கென உற்பத்தி செய்யப்படும் மண்பாண்ட வகைகள் இவ்வாறு கொள்ளப்படுவதில்லை.

புனிதம் சாராத மண்பாண்டப் பொருள்கள் புனிதச் சடங்கிற்குப் பயன்படுத்துவதன் மூலம் புனிதத் தன்மையைப் பெறுகின்றன. இதற்குச் சான்றாகக் கலசம், சலாச்சட்டி, பானை, சாணகை, பல்லா, சட்டி, மண்பொம்மைகள் முதலானவற்றைக் கொள்ளலாம்.

### கலசம்

'கலசம்' என்ற கலன் அன்றாடப் பயன்பாட்டில் 'கலயம்' என்றழைக்கப்படுகின்றது. இதை 'கள்ளுக்கலயம்', 'கஞ்சிக் கலயம்' என்ற வழக்காற்றுச் சொற்களைக் கொண்டு அறிந்து கொள்ள இயலும். மிகக் குறைந்த கொள்ளளவு உடைய பானை வடிவினை ஒத்த இம்மாண்பாண்டப் பொருள் சடங்குப்பொருளாகவும் பயன்படுத்தப்படுகின்றது. அப்போது அது 'கலசம்' என்றழைக்கப்படுகின்றது.

புதுமனைப் புகுவிழாவின்போது செய்யப்படும் சடங்கில் நவகிரக சடங்கிற்கு ஒன்பது கலசங்கள் பயன்படுத்தப்படுகின்றன. இக்கலசங்கள் இதற்கெனப் சிறப்பான முறையில் உருவாக்கப்படுவதில்லை. மாறாகப் பயன்பாட்டுக் கலயங்களே இச்சடங்கிற்கான 'கலசங்களாக' மாற்றப்படுகின்றன. மேலும் கோயிலில் செய்யப்படும் புனிதச் சடங்கிலும் இவ்விதத்திலேயே கலசங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

சாவுச்சடங்கின் ஒருபகுதியான கருமகாரியச் சடங்கில் இவ்விதக் கலசங்கள் பயன்படுத்தப்படுகின்றன. ஒவ்வொரு ஊரிலும் நீர்நிலைகளுக்கு அருகில் நடக்கும் இச்சடங்கில் அல்புனிதத் தன்மை அத்தனையையும் அங்கே தொலைத்துவிட்டு

இறந்தவரின் புனித ஆன்மாவை மட்டும் சாந்தப்படுத்தித் தண்ணீராகக் கொண்டு அதை இவ்வித மண்கலங்களில் இட்டு நிரப்புகின்றனர். அதன் பிறகு அவ்வாறு இட்டு நிரப்பப்பட்ட கலசங்கள் புனிதத் தன்மையைப் பெற்றுவிடுகின்றன. ஆதலால் அவற்றைப் 'பூவால்' அலங்காரம் செய்து தங்களின் வீட்டிற்குக் கொண்டு வரும் வழக்கத்தை வெகுமக்கள் இன்றளவும் கடைப்பிடித்து வருகின்றனர். அத்தருணங்களில் மண்ணாலான இக்கலசங்கள் பெருமதிப்புப் பெறுகின்றன.

***சலாச்சட்டி***

சமையல் செய்வதற்குத் தேவையான ஒரு பயன்பாட்டுப் பொருள். இதைப் 'போனி சட்டி' என்றழைக்கும் வழக்கம் விழுப்புரம் மற்றும் திருவண்ணாமலை வட்டாரங்களில் இருக்கிறது. வாயகன்ற வடிவினை உடைய இம்மண்பாண்டப் பொருள் 'பண்டம்' வைப்பதற்குப் பயன்படுத்தப்படுகின்றது.

'கேதாரி அம்மன்' நோன்புச் சடங்கினை ஆண்டுக்கு ஒருமுறை செய்யும் வழக்கமுடைய மேற்கூறிய வட்டார வெகுமக்கள் இதைத் தெய்வத்திற்கு 'பண்டம்' வைத்துப் படையலிடுவதற்குப் பயன்படுத்துகின்றனர். இப்பயன்பாட்டிற்குப் பிறகான இம்மண்பாண்டப் பொருளை வேறெதற்கும் பயன்படுத்துவதில்லை. அவ்வாறு பயன்படுத்தினால் அது தெய்வக் குற்றமாகும் என நம்புகின்றனர். அந்த வகையில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருளான இவ்வகைச் 'சலாச்சட்டி' புனிதத் தன்மை பெறுகிறது.

மழை வேண்டிச் செய்யும் வளமைச் சடங்கின் ஒரு பகுதியாக 'மாவுச்சட்டி' விடுதல் என்ற சடங்கு தென் தொண்டை மண்டல வட்டாரங்களில் செய்யப்படுகிறது. மழைபெய்து நீர்நிலைகள் நிரம்பியதும் அதற்கு நன்றி தெரிவிக்கும் விதமாக இச்சலாசட்டியில் மாவுவிளக்கு இட்டு ஆறு, ஏரி முதலான நீர்நிலைகளில் நீந்த விடுகின்றனர். இதற்குப் பெரும்பாலும் சலாச்சட்டியே பயன்படுத்தப்படுகின்றது. இதை மண்ணாலான பொருள் உற்பத்தித் தொழிலை ஊழியமாகச் செய்யும் குயவர் குடியினர் ஊர்குடிகளுக்கு இனாமாகக் கொடுக்கப் பணிக்கப்பட்டிருக்கின்றனர்.

***சாணகை***

சமையல் கலன்களின் மேல் மூடியாகப் பயன்படுத்தப்படும் மண்பாண்ட வகை. தட்டையான வடிவில் உள்ள இதனைச் சுற்றிலும் ஒரு விரற்கிடை அளவு விளிம்பு இருக்கிறது. மையப்பகுதி குழிந்து இருக்கிறது.

இதைச் சாவுச்சடங்கில் அரிச்சந்திரனுக்குக் கற்பூர தீப ஆராதனை செய்யும் தட்டாகப் பயன்படுத்தும் வழக்கம் இருக்கின்றது. இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்படும் எந்த ஒன்றும் மறுபயன்பாட்டிற்கானது அல்ல என்பதால் இவ்விதச் சடங்கு செய்ய மண்ணாலான சாணகையைப் பயன்படுத்துகின்றனர்.

***சட்டி***

இது ஒரு சமையல் கலன். குழம்பு சமைக்கப் பயன்படுத்தப்படுவது. இதன் வயிறு சற்று பெருத்தும் அதற்கேற்ப வாய் சற்று அகன்றும் காணப்படும் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள். இந்த அடுகலனில் காய்கறிகளிட்டு வதக்கி சமைப்பதற்கு ஏதுவானபடி பயன்பாட்டு அறிவுடைய குயவர்கள் இதனை உற்பத்தி செய்திருக்கின்றனர். இவ்வமைப்புடைய இம்மண்கலன் சாவுச்சடங்கில் நெருப்பு எடுத்துச் செல்வதற்கான நெருப்புச் சட்டியாகவும் பயன்படுத்தப்படுகின்றது. நெருப்பு கனன்று கொண்டிருக்க மிதமான காற்றுத் தேவையென்பதால் அதற்கேற்ப வாயுடைய இப்பாண்டத்தை அதற்குப் பயன்படுத்தி இருக்கலாம். மேலும் ஒற்றைப் பயன்பாட்டிற்கான இச்சடங்குப் பொருளைப் புதிதானதாகப் பயன்படுத்த வேண்டும் என்பதால் அவ்வப்போது புதிது புதிதாக உற்பத்தி செய்து தரவல்ல குயவர்களை ஊழியக்குடிகளாகக் கொண்ட வெகுமக்கள் இவ்விதச் சடங்கிற்கு இவ்வகையான மண்ணாலான பொருள்களையே பயன்படுத்துகின்றனர். ஆகையால் இவ்விதச் சடங்கிற்கு மண்ணாலான பொருள் உற்பத்தியில் ஈடுபடும் குயவர்களே அடிப்படையாக விளங்குகின்றனர்.

***பல்லா***

நீர் நிறைத்து வைக்கப் பயன்படும் மண்ணாலான மிகச்சிறிய கலன். இது இப்பயன்பாட்டிற்காக உற்பத்தி செய்யப்பட்டாலும் பெரும்பாலானோர் இதைப் 'பொங்கலிடவே' பயன்படுத்துகின்றனர். தெய்வத்திடம் நேர்ந்து கொள்ளும் போதெல்லாம் 'தெய்வத்தைச் சாந்தப்படுத்த' பொங்கலிட்டுப் படையலிடும் சடங்கில் இக்கலனே மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது. இதனாலேயே இது இதற்கான இயல்பிலிருந்து மாறி 'பொங்கல் பல்லா' என்றழைக்கப்படுகின்றது. புதுப்பாண்டத்தில் தெய்வச்சடங்கு செய்ய வேண்டும் என்ற முறைமையின் (ஐதீகம்) கீழ் இதற்கு மண்ணாலான இக்கலன் பயன்படுத்தப்படுவதாகக் கொள்ளலாம்.

***பானை***

நீர் மற்றும் தானியம் நிறைத்து வைககப் பயன்படுத்தப்படும் கலன். இது பயன்பாட்டு நோக்கில் உருவாக்கப்பட்ட ஒரு மண்பாண்டப் பொருள். ஆனால் இவை அளவு அடிப்படையில் பலவாகப் பிரிந்து சடங்கு தளத்தில் வெவ்வேறான மதிப்பீட்டினைப் பெறுகின்றன. இதை,

> சடங்குப்பொருள்கள் ஒரு குறியீட்டு ஒழுங்கை ஏற்படுத்துகின்றன. கரகம், அரசாணிப்பானை, பொங்கல் பானை போன்ற எல்லாமே அடிப்படையில் பானை தான். ஆனால் இப்பானைகள் சடங்கியல் களத்தில் பானையாகப் பொருண்மை பெறுவதில்லை. பானைக்கும் அப்பாற்பட்ட குறியீடுகளின் உறவால் புதிய பொருண்மைகளை உருவாக்குகின்றன. ஒரு ஜடப்பொருளாக, இயக்கமில்லாத ஒரு பனிக்கட்டியைப் போன்று உறைந்து நிற்கும்

*இக்கைவினைப் பொருள்கள் சடங்கு நிகழ்வின் இயக்கத்தில் மக்களின் கூட்டு நனவிலியில் பண்பாட்டின் அர்த்தப்பாடுகளை மீள நினைத்துப் புதுப்பிப்பவை (பக்தவத்சலபாரதி (க.ஆ.); 2000:17)*

என்ற கருத்து வலுப்படுத்துகின்றது. இதனடிப்படையில் 'பானைகள்' சடங்கு தளத்தில் வெவ்வேறு பரிமாணங்களைப் பெறுகின்றன.

தைப்பொங்கல் திருநாளில் 'பெரிய பானைகள்' வைத்துப் பொங்கலிட்டுச் சூரியனுக்குப் படையலிட்டப் பிறகு அதை ஊராருக்கு வழங்கும் வழக்கம் கிராம வேளாண் குடிகளிடம் இன்றளவும் இருந்து வருகிறது. இதை 'பெரும் பொங்கல்' எனக் குறிப்பிடுகின்றனர். தெய்வத்தை முன்னிறுத்தி நிகழ்த்தப்படும் இச்சடங்கு நிகழ்விற்குப் புதுப்பானை, புது மகசூலில் கிடைத்த அரிசி முதலானவற்றையே பயன்படுத்துகின்றனர். அத்தருணத்தில் அவர்களுக்கான புது மண்பாண்டங்களை அவ்வூர் குயவர் சமூகத்தினர் உற்பத்தி செய்து தருகின்றனர்.

### மண் பொம்மைகள்

மரபான பொருள்உற்பத்தி என்பது குறிப்பிட்ட சில இயற்கை மூலப்பொருள்களைக் கொண்டே செய்யப்பட்டிருக்கின்றது. ஆதலால், "மரபுவழி கைவினைப் பொருள்கள் பயன்படுத்தும் சூழலுக்கு ஏற்ப பல்வேறு பொருண்மைத் தளங்களைப் பெற்றிருந்தன. மண்ணால் செய்யப்படும் ஒரு பொம்மை சடங்குச்சாராச் சூழலில் விளையாட்டுப் பொருளாகவும் அழகுப் பொருளாகவும் இருக்க, சடங்குச் சூழலில் குழந்தைப்பேறு தருகிற நம்பிக்கைச் சார்ந்த பொருளாகச் செயல்படும். இத்தகைய பன்மைப் பொருண்மைகளை நவீனத்துவக் கைவினைக் கலைப்பொருள்கள் இழக்கத் தொடங்கின" (மேற்படி:37). இதற்கு அவை வெவ்வேறான மூலப்பொருள்களில் செய்யப்படுவதே காரணம் எனக் கொள்ளலாம்.

மண்ணாலான பொம்மைகள் எளிதில் உடைந்துவிடும் தன்மையுடையதாகையால் அவை உடையாதிருக்க நவீனத் தொழில்நுட்ப நிறுவனங்கள் மாற்று மூலப்பொருள்களைக் கொண்டு பொம்மைகள் தயாரித்தன. அவ்வாறு மாற்று மூலப்பொருள்களால் செய்யப்படும் இப்பொம்மைகளை விளையாட்டுப் பொருளாகவும், அழகுப் பொருளாகவும் பயன்படுத்துவதால் எவ்விதமான பண்பாட்டுச் சிக்கலும் ஏற்படுவதில்லை. நனவிலி மனநிலையில் கூட இவற்றைச் சடங்குப் பொருளாகப் பயன்படுத்த வெகுமக்கள் நினைக்கவில்லை. இவை நவீனத் தொழில்நுட்பம் வளர்ச்சியடைந்த இன்றைய நகர்மயச் சூழலில் தெய்வ நம்பிக்கையோடு தொடர்புடைய 'கொலு வைத்தல்' சடங்கிற்குப் பெரும்பாலும் மண்ணாலான பொம்மைகளையே பயன்படுத்துகின்றனர். இதனை உற்பத்தி செய்து தருவதே நகர்வாழ் குயவர்களுக்கான தற்போதைய முதன்மைத் தொழில். ஆனால் முன்னாளில் இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்களான சட்டி, பானை செய்வதையே முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்திருக்கின்றனர். அவை யாவும் தற்போது

நவீனத் தொழில்நுட்ப நிறுவனங்களால் ஆக்கிரமிப்பு செய்யப்பட்டுவிட்டபோது மிச்சமிருப்பது மண்ணாலான மரபான இவ்விதச் சடங்குப்பொருள்களே ஆகும். ஆனால் நம்பிக்கையோடு தொடர்புடைய சடங்கிற்குப் பயன்படுத்தப்படும் பொம்மைகள் மரபான மூலப்பொருள்களால் மரபான தொழில்நுட்ப வினைஞர்கள் செய்து தருவதில்தான் அந்நம்பிக்கைக்கான சடங்கு நிறைவடைகின்றது. தவிரவும் இவ்விதச் சடங்கினை வேறெந்த நவீனத் பொருள்களும் நிறைவு செய்வதில்லை. மாறாக நவீனயுக வளர்ச்சியால் சடங்குகள் ஒட்டுமொத்தமாக வேண்டுமானால் கைவிடப்படலாம். ஆனால் அதன் தன்னிலை திரிபடைவதற்கில்லை. இவையே தற்போது மண்ணுக்கும் மனிதர்க்கும் உள்ள தொடர்பினை அடையாளப்படுத்திக் கொண்டிருக்கிறது. அதற்குக் குயவர்களே அடிப்படை ஆதாரமாக விளங்குகின்றனர்.

### *சடங்குப்பொருள் அன்றாடப் பயன்பாட்டுப்பொருளாதல்*

சடங்கு என்பது மக்களின் கூட்டு உணர்வால் உருவானது. மேலும், "சடங்கு என்பது மனிதர்களின் வாழ்க்கைப் பயணத்திற்கான உளவியல் பாதை. அறிவுப்பூர்வமான பயணமாக இருந்தாலும் உணர்ச்சிப்பூர்வமான பயணமாக இருந்தாலும் அது அந்த உளவியல் பாதையில்தான் நகர்கிறது. உளவியல் அவரவர் வாழ்வியல் அனுபவங்களிலிருந்து உருவாக்கம் பெறுகிறது. அதாவது தொழில்முறை சார்ந்த அனுபவம், மனிதர்களின் இயங்கும் சூழல் சார்ந்த அனுபவம் ஆகியவற்றிலிருந்து உருவாக்கம் பெறுகிறது. இப்படி அனுபவங்கள் வேறுபடுவதால் மன அமைப்பின் தன்மையும் அதனைத் தொடர்ந்து சடங்கின் தன்மையும் வேறுபடுகின்றது" (இ. முத்தையா; 2010:V). அவ்வாறு வெவ்வேறான வகையில் செய்யப்படும் சடங்குகளுக்கான விழுமியங்களும் வேறுபடுகின்றன. இதை அச்சடங்குகள் செய்யப் பயன்படுத்தப்படும் பொருள்களைக் கொண்டு அறிய இயலும். சில சடங்குப் பொருள்கள் ஒற்றைப் பயன்பாட்டிற்கு உரியன. அவற்றைச் சடங்கின்போது மட்டும் பயன்படுத்துவர். ஆனால், சிலவிதமான சடங்குப் பொருள்களை மறுபயன்பாட்டிற்கு உரியதாகக் கொள்கின்றனர். அவை பெரும்பாலும் மனித வளமைச் சடங்கிற்குப் பயன்படுத்தப்படும் பொருளாகவே இருக்கிறது. அது சடங்கின் நீட்சி, அச்சடங்கிற்கான பயன் அப்பொருளின் மறுபயன்பாட்டிலும் தொடர்வதாக நம்புவதன் வெளிப்பாடு. ஆகையால் சில வகையான சடங்குப் பொருள்கள் பின்னாளில் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. இதற்கான சிறந்த சான்றாக 'திருமணச் சடங்குப் பொருளான' சாலுகரகத்தினைக் கொள்ளலாம்.

தமிழர் வாழ்வில் திருமணம் என்னும் நிகழ்வானது ஒரு மனிதனுக்குச் சமூகத் தகுதியையும் சடங்கியல் வாழ்வில் பங்கேற்கும் உரிமையையும் கொடுக்கிறது. திருமணத்தால் அமையும் வாழ்வே முழுமை பெற்ற வாழ்வு எனவும் திருமணமாகா வாழ்வு முழுமை பெறா வாழ்வு எனவும் கருத்தாக்கம் செய்யப்பட்டுள்ளது. இது மனிதனை ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு உயர்த்தும் சடங்கு என்பதால் இதில் வளமைக்கான செயல்பாடுகளே முதன்மைப்படுத்தப்படுகின்றன. ஆதலால்

அச்சடங்கின் சக்தியை அச்சடங்கிற்குப் பயன்படுத்தப்பட்ட பொருள்கள் பெற்றிருப்பதாக வெகுமக்கள் நம்பிக்கை கொண்டிருக்கின்றனர். அவர்களின் பார்வையில் அச்சடங்குப் பொருள் வளமையின் குறியீடாகவே தெரிகிறது என்பதற்குச் 'சாலுகரகம்' சாலப்பொருத்தமுடையதாகும்.

திருமணச் சடங்கின்போது 'மஞ்சள் நீரால்' நிரப்பப்பட்டிருக்கும் 'சாலுகரகம்' குல விருத்தியின் குறியீடாகக் கொள்ளப்படுகின்றது. அச்சடங்கு முடிந்தபின்னும் அச்சடங்குப்பொருள் விருத்திக்குரியதாகக் கருதி அதனைத் தானியக் கலனாகப் பயன்படுத்துகின்றனர். அவ்வாறு செய்தால் தானிய விருத்தி உண்டாகும் என்பது அவர்களின் நம்பிக்கையாக இருக்கிறது. இதனடிப்படையில் புனிதம் சார்ந்த ஒரு சடங்குப்பொருள் அதே தன்மை உடையதாகக் கருதி புனிதம் சாராத செயல்பாட்டில் பயன்படுத்தப்படுகின்றது.

## குயவர்களின் குடிஊழிய உறவு

நகரமயமான சென்னை வட்டாரத்தில் 'குடிஊழியம்' என்பது முற்றிலும் வழக்கொழிந்த ஒன்றாகவே இருக்கிறது. இது தவிர்த்து உள்ள பிற தொண்டை மண்டல வட்டாரங்களில் குடிஊழியம் வழக்கொழிந்து போயிருப்பினும் அதற்கான அடிச்சுவடுகளை அவ்வூர்க் குயவர்களிடமும் குடி மக்களிடமும் காண முடிகின்றது. தென் தொண்டை மண்டல வட்டாரங்களான விழுப்புரம் மற்றும் திருவண்ணாமலை மாவட்ட குக்கிராமங்களில் தற்போதும் குடிஊழியமுறை வழக்கிலிருக்கிறது என்பதும் குறிப்பிடத்தக்கது.

விழுப்புரம் மாவட்டக் குயவர்களின் குடிஊழிய முறை குறித்து மானிடவியல் அறிஞர் பக்தவத்சலபாரதி தன் கட்டுரையில்,

> பத்தர்கள் சாதிய அடுக்கில் தாழ்ந்த நிலையில் இருந்தாலும் பிராமணர் உள்ளிட்ட எல்லாச் சாதியினரின் வாழ்க்கை வட்டச் சடங்குகள், கோயில் திருவிழாக்கள் போன்றவற்றில் முதன்மையான உறவு கொள்கின்றனர். திருமணச் சடங்கில் முக்கியக் கூறுகளாக விளங்கும் சாலுகரகம், குடவிளக்கு, கலஓடு, கொப்பரை, அகல், பாலிகைப்பானை (பலதானியம் முளைக்கப் பயன்படுத்தும் பானை) என இருபதுக்கும் மேற்பட்ட உருப்படிகளை வளமைக் குறியீடுகளுடன் வண்ணந்தீட்டிக் கொடுப்பது பத்தர்களின் பாரம்பரிய குடி ஊழியமாகும். இதுபோலவே சாவுக்குக் கொள்ளிக்குடம், தீச்சட்டி, வாய்க்கரிசிச் சட்டி ஆகிய மூன்று உருப்படிகளையும் கருமாதிக்கு கலசத்தோண்டி-1, கலச உழக்கு-4, மடக்கு-1, சோறு பொங்கும் பானை-1 என ஏழு உருப்படிகளையும், கார்த்திகை தீபத்திற்கு அகல் விளக்குகளையும், விநாயகர் சதுர்த்திக்குப் பிள்ளையார் பொம்மைகளையும், பிரார்த்தனைக்காரர்களுக்கு அய்யனார் குதிரை, ஆலுங்குதிரை, காவலாளி, காளி செரசு, மாரி செரசு (தலை), உட்பட பத்தர்களின் நேர்த்திக் கடனுக்கான பொம்மைகளை மண்ணாலும் சிமெண்டாலும் செய்து தருகின்றனர். இது தவிர திரௌபதியம்மன் திருவிழாவிற்கு அரவான் சிரசு செய்து

> தருவதும் தை பொங்கலுக்கும் அம்மன் திருவிழாக்களில் பொங்கலிடுவோர்க்கும் சட்டி பானை செய்து தருவதும் பத்தர்களின் தலையாய குடிஊழியமாக உள்ளது (2000:14)

என்கிறார். தற்போது இவ்வாறான 'குடிஊழிய' முறைமைக்கான புறக்கட்டுமான அமைப்பு சிதைந்து காணப்படினும் சாதிய அடிப்படையில் உருவான அகக்கட்டுமான அமைப்புகள் சென்னை நகரம் தவிர்த்த பிற தொண்டை மண்டல வட்டாரங்களில் வழக்கில் இருக்கின்றன. இதனடிப்படையிலேயே அவரவர்களுக்கான சடங்குப்பொருள்களைச் செய்து தரும் வழக்கத்தினை அந்தந்த வட்டாரக் குயவர்கள் மேற்கொண்டு வருகின்றனர். இதற்கு வெளிப்படையான சான்றாகத் திருமணச் சடங்கில் பயன்படுத்தப்படும் 'சாலுகரகத்தினைக்' கொள்ளலாம்.

தொழிலை அடிப்படையாகக் கொண்டு உருவானதே சாதியும் சடங்கும். எனவேதான் ஒவ்வொரு சாதியினரும் தாங்கள் செய்யும் தொழிலை அடிப்படையாக வைத்து சடங்கு செய்திருக்கின்றனர். முற்காலத்திய இன்ன சாதியினருக்கு இன்ன தொழில் என்ற வரைமுறை இருந்திருக்கிறது. ஆனால் தொழில் அடையாளம் தொலைந்த இக்கால கட்டத்தில் தொழிலை அடிப்படையாக வைத்துச் செய்யப்பட்ட சடங்குகளைச் சாதியை முன்வைத்துச் செய்யும் வழக்கம் தற்போது இருந்து வருகிறது. அவ்வாறான சில சடங்குமுறைகளுள் திருமணச் சடங்கில் பயன்படுத்தப்படும் சாலுகரகமும் ஒன்று.

***சாலுகரகம்***

திருமணச் சடங்கில் பயன்படுத்தப்படும் சடங்குப்பொருளான இவ்வகை 'சாலுகரகத்' தொகுதியினைக் குயவர்கள் மண்ணால் உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். இச்சடங்கிற்கென இவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்கள் அனைத்தும் பொதுவானவை. ஆனால் அவை பயன்படுத்தப்படும் விதத்தில் சாதிக்குரிய தனித்தனி அடையாளத்தைப் பெறுகின்றன. அதாவது ஒவ்வொரு சாதிக்குமான சாலுகரக தொகுதிகளும் எண்ணிக்கை மற்றும் வண்ணப்பூச்சின் அடிப்படையில் வேறுபடுகின்றன. இவ்வேறுபாடே அந்தந்த சாதியினருக்கான அடையாளம். அதனை அறிந்து அவர்களுக்கான 'சாலுகரக' தொகுதியினைத் தயார் செய்துதரும் தொழிலைக் குயவர் சமூகத்தினர் காலங்காலமாகச் செய்து வருகின்றனர்.

சாதிய அடிப்படையிலான சாலுகரக சடங்குமுறைகள் வட்டாரத்திற்கு வட்டாரம் மாறுபட்டிருக்கின்றன. ஒவ்வொரு வட்டாரத்திலுமுள்ள ஒரு குறிப்பிட்ட சாதியினருக்கே அவ்வட்டாரக் குயவர்கள் மண்ணாலான சாலுகரகப் பொருள்களை உற்பத்தி செய்து தருகின்றனர். இவ்வாறு விழுப்புரம் மாவட்ட குயவர்கள் (இவர்களுக்குப் பத்தர் என்ற பட்டப்பெயர் உண்டு) சாலுகரகம் செய்து தரும் பணியில் ஈடுபடுவது குறித்துப் பக்தவத்சலபாரதி குறிப்பிடுகையில்,

*பத்தர்கள், கவுண்டர்களின் திருமணத்தன்று சாலுகரகம் செய்ய வேண்டும். ரெட்டியார் திருமணத்தன்று நாகவல்லி திருமணத்திற்கான அரசாணிப் பானைகள் செய்ய வேண்டும். முதலியார்களுக்கு வண்ணந் தீட்டப்படாத மணவறைப் பானைகள் செய்ய வேண்டும். ஆக இங்கு பத்தர்கள் ஒவ்வொரு சாதியாரும் அவரவர் திருமணத்திற்கான சடங்குப் பானைகள் எப்படி இருக்க வேண்டும் என எதிர்பார்க்கிறார்களோ அதனை நிறைவேற்றும் வகையில் செய்ய வேண்டும். மரபுக்கு மீறிய எந்த ஒன்றையும் செய்யக்கூடாது (மேற்படி:17)*

என்ற கருத்தினை முன்வைக்கிறார்.

தென்தொண்டை மண்டல வட்டாரமான விழுப்புரம் மற்றும் திருவண்ணாமலை மாவட்டங்களில் உள்ள குயவர்சமூகத்தினர் இவ்விரு மாவட்டத்திலும் பெரும்பான்மையாக இருக்கின்ற வன்னியர், பறையர், இடையர், நயினார், ரெட்டியார், முதலியார், நாயுடு, வண்ணார், அம்பட்டர், ஆசாரி (தச்சர்), கருமார் முதலான சாதியினருக்குத் திருமணச் சடங்குப்பொருள்களாக 'சாலுகரகப்' பொருள்களை மண்ணால் உற்பத்தி செய்து தருவதனை ஊழிய உறவாகக் கொண்டிருக்கின்றனர். அதேபோல் இவ்விரு மாவட்டங்களையும் ஒட்டி காணப்படும் வேலூர் மாவட்டக் குயவர் சமூகத்தினர் அம்மாவட்டத்தில் பெரும்பான்மையாக இருக்கின்ற வன்னியர், பறையர், இடையர், மூப்பனார், அகமுடைய முதலியார், ரெட்டியார், நாயுடு, வண்ணார், அம்பட்டர், ஆசாரி, கருமார் (கருங்கொல்லர்) முதலான சாதியினருக்குத் திருமணச் சடங்குப் பொருள்களான 'சாலுகரகப்' பொருள்களை உற்பத்தி செய்து தருவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

கலாச்சாரக் களமாக விளங்கிய காஞ்சிபுரம் மாவட்டத்தில் பெரும்பான்மையாக இருக்கின்ற நாயக்கர், இடையர், நாயுடு, செங்குந்த முதலியார், பறையர், ரெட்டியார், சக்கிலியர், தொம்பர், வண்ணார், அம்பட்டர், ஆசாரி, கருமார் முதலான சாதியினருக்குத் திருமணச் சடங்குப்பொருள்களான சாலுகரகப் பொருள்களை உற்பத்தி செய்து தருவதை அவ்வட்டாரக் குயவர்கள் ஊழிய உறவாகக் கொணடிருக்கின்றனர்.

சென்னை மாநகர வட்டாரத்தில் சடங்குப்பொருள்கள் அனைத்தும் பொதுச் சந்தைக்குக் கொண்டுவரப்பட்டுவிட்டதால் அதை உற்பத்தி செய்வோர் மற்றும் நுகர்வோரின் முகங்கள் அறிய இயலவில்லை. ஆதலால் சடங்குப்பொருள்கள் பயன்படுத்துவதில் எந்தவிதமான ஒழுங்கு முறைகளும் பின்பற்றப்படுவதாகத் தெரியவில்லை. தவிரவும் அவ்வகையான சடங்குப்பொருள்களை நகர்வாழ் குயவர்கள் உற்பத்தி செய்வதில்லை. மாறாகக் கிராமப்புறக் குயவர்களிடமிருந்து வாங்கி வந்து கடையிட்டு விற்கின்றனர். ஆதலால் அவர்களுக்கு அச்சடங்குப் பொருளின் தன்மை குறித்த அறிதல் பெரும்பான்மையாக இல்லை. அதேபோல் நகர்வாழ் நுகர்வோருக்கும் அது குறித்த அறிதல் போதுமானதாக இல்லாதபோது

அவர்கள் தட்டையாக ஒரே மாதிரியான சாலுகரகப் பொருள்களையே சடங்குப் பொருளாகப் பயன்படுத்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

சென்னை மாநகரத்தை ஒட்டிய மாவட்டமான திருவள்ளூர் வட்டாரத்தில் சாலுகரகச் சடங்குப்பொருள்கள் குறித்த அறிதலென்பது, மண்ணாலான பொருள் உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் தற்போதுள்ள தலைமுறைக் குயவர்களுக்கும் நுகர்வோரான பிற சமூகத்தினருக்கும் இல்லை. ஆனால் இவ்வட்டார முது குயவர்களுக்கும், குக்கிராமக் குயவர்களுக்கும் இது குறித்த அறிதல் இருக்கவே செய்கிறது. அவர்களின் தகவல்படி இவ்வட்டாரத்தில் உள்ள நாயக்கர், ரெட்டியார், அகமுடைய முதலியார், இடையர், சாலியர், பேரிச்செட்டியார், பறையர், கருணீகர், நாயுடு, மீனவர், வண்ணார், வன்னியர், அம்பட்டர், ஆசாரி, கருமார் முதலான சாதியினருக்குத் திருமணச் சடங்குப்பொருள்களான சாலுகரகப் பொருள்களை மண்ணால் உற்பத்தி செய்வதைக் குயவர் சமூகத்தினர் பிற சமூகத்தினருடனான ஊழிய உறவாகக் கொண்டிருக்கின்றனர்.

இவ்வாறு மாவட்டந்தோறும் இச்சடங்கின்வழி அறியப்படும் சாதியினைத் தொகுத்து தொண்டை மண்டல வட்டார சாதிகளாகக் கொள்ளலாம். அப்படிச் செய்யும்போது ஒரே சாதியினர் வெவ்வேறு மாவட்டங்களில் வெவ்வேறு பட்டப் பெயர்களால் அழைக்கப்படுவது காணலாகின்றது. அவ்வாறானவர்களை அவர்களுடைய ஒருமித்த சாதி உறவுக்கான சடங்கு முறையை அடிப்படையாக வைத்து அடையாளங்காண முடிகிறது. அதனடிப்படையில் நாயுடு, முதலியார் (அகமுடையார் / துளுவ வேளாளர், செங்குந்தர்), ரெட்டியார், பறையர், இடையர் (கோனார், யாதவர்), வன்னியர் (நாயகர்), வண்ணார், அம்பட்டர் (நாவிதர்), தொம்பர் (வேட்டைக்காரர்), மீனவர், அருந்ததியினர் (சக்கிலியர்), தச்சர் (ஆசாரி), தட்டார் (பொற்கொல்லர்), கருமார் (கருங்கொல்லர்), செட்டியார் (வாணியர்), மூப்பனார் முதலான சாதியினர் தங்களது தனித்த அடையாளத்துடன் சாலுகரகச் சடங்குப்பொருள்களைக் குயவர் சமூகத்தினரிடமிருந்து மண்ணால் செய்து பெறும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். இத்தகவலை இவ்விதப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் குயவர் சமூகத்தினரிடமிருந்து அறிய முடிகின்றது.

இவற்றுள் தொண்டை மண்டல வட்டாரத்தில் உள்ள வெவ்வேறு மாவட்டங்களில் வசிக்கும் ஒரே சாதியினர் தங்களது சடங்கு முறைக்கான சாலுகரகப் பொருள்களை வெவ்வேறு எண்ணிக்கையில் பயன்படுத்துகின்றனர். இதனை அவரவர் விருப்பத்தின் விளைவால் ஏற்பட்ட வேறுபாடாகக் கருத வாய்ப்பிருக்கிறது. ஆனால் தச்சர், தட்டார், கருமார் முதலான சாதியினர் பயன்படுத்தும் சாலுகரகப் பொருள்களின் எண்ணிக்கையில் இவ்விதமான ஏற்றத்தாழ்வுகளைப் பெரியளவில் காண முடியவில்லை. இதை அடிப்படையாகக் கொண்டு இவர்களுக்கான சடங்குமுறையை ஒருவகைத்தானதாகவும் பிற சாதியினருக்கான சடங்குமுறையை மற்றொரு வகைத்தானதாகவும் பிரித்துப் பார்க்க இயலும்.

தச்சர், தட்டார், கருமார் என்ற இம்முச்சாதியினரும் தங்களை விஸ்வ பிராமணர்கள் என்ற அடையாளத்திற்குள் நிலைநிறுத்தித் தங்களுக்கான சடங்குகளைத் தாங்களே செய்து கொள்ளும் தகுதி படைத்தவர்களாக இருக்கின்றனர். இவர்கள் தங்களின் திருமணச் சடங்கினை நாகவள்ளி முகூர்த்தம் எனக் குறிப்பிடுகின்றனர். இதற்கான சடங்குப் பொருள்களாக 130-க்கு மேற்பட்டனவற்றைப் பயன்படுத்துகின்றனர். இதற்கான அளவுமுறைப்படி இதனை 1 ஜவுளி உருப்படிகள் எனக் குறிப்பிடுகின்றனர். அவைகளாவன,

| | |
|---|---|
| மொந்தை | - 32 |
| அகல் | - 2 |
| பானை | - 2 |
| கலசம் | - 4 |
| மொடா | - 1 |
| பானகத் தோண்டி | - 2 |
| குடவிளக்கு | - 1 |
| குடவிளக்கு பல்லா | - 1 |
| கை கரகம் | - 3 |
| பொங்கல் பல்லா | - 1 |
| ஹோம குண்டச்சட்டி | - 1 |
| பாலிகை | - 5 |
| சாணகை | - 1 |
| தூபக்கால் | - 1 |
| மூடி | - 4 |
| கலவோடு | - 39 |
| மொத்தம் | 130 |

மேலும், இவர்களைத் தவிர்த்த பிற சாதியினர் பயன்படுத்தும் சாலுகரகச் சடங்குப்பொருள்களின் எண்ணிக்கை ஏற்றத்தாழ்வுடனே காணப்படுகின்றன. இதை அடிப்படையாக வைத்து இவ்வகைப்பட்ட சாதியினரை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று கால் (¼) ஜவுளி எண்ணிக்கையிலான சாலுகரகப் பொருள்களைப் பயன்படுத்துவோர். மற்றொன்று கால் (¼) ஜவுளிக்கும் குறைவான சாலுகரகப் பொருள்களைப் பயன்படுத்துவோர். இதில் முதலாவதானவர்களாக நாயுடு, பறையர், வண்ணார், நாவிதர், செட்டியார், முப்பனார் முதலான சாதியினரைக் குறிப்பிடலாம். அடுத்தவர்களாக முதலியார், ரெட்டியார், இடையர், வன்னியர், தொம்பர், அருந்ததியர், மீனவர், குயவர், பார்ப்பனர் உள்ளிட்டச் சாதியினர்களைக் குறிப்பிடலாம்.

## சாலுகரகம் - சாதிவாரியான வகைப்பாடு

| பொருட்கள் / சாதி | கூரசால் | பானகத் தோண்டி | பல்லா / கை கரகம் | பொங்கல் பல்லா | ஹோம குண்டச் சட்டி | குட விளக்கு | அகல் | பாலிகை | சாணகை | தூபக் கலசம் | மூடி | கலவோடு | மொத்த உருக்கள் | வண்ணம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அருந்ததியினர் | பெ.பா. - 1<br>சி.பா. - 1 | 2 | 1 | 1 | - | 1 | 12 | 5 | 1 | 1 | 2 | - | 28 | ✓ |
| தட்டார், தச்சர், கருமார். (நாகவள்ளி முகூர்த்தம்) | மொந்தை -32<br>பானை - 2<br>கலசம் - 4<br>மொடா - 1 | 2 | 4 | 1 | 1 | 1 | 32 | 5 | 1 | 1 | 4 | 39 | 131 | ×<br>சுண்ணாம்பு மட்டும் |
| மீனவர் | சால் - 1<br>கரகம் - 1 | 2 | 1 | 1 | - | 1 | 9 | 5 | 2 | - | 2 | - | 25 | ✓ |
| வாணிய செட்டியார் | கலசம் - 9<br>பானை - 1<br>சாலு - 3 | 2 | மூக்கு மொந்தை - 1 | - | 1 | 1 | 9 | 5 | 2 | - | 3 | 3 | 40 | மூ.மொந்தை, ஹோம குண்டச்சட்டி, சுண்ணாம்பு அடித்தல் / சாலு கரகம் ✓ |
| குயவர் | - | 2 | - | - | 1 | 1 | 9 | 5 | - | - | - | - | 18 | - |
| மூப்பனார் | பெ.பா. - 1<br>சால் - 1 | 2 | 1 | 1 | - | 1 | 25 | 5 | 1 | 1 | 2 | - | 40 | ✓ |
| பார்ப்பனர் | - | - | - | - | 1 | 1 | - | - | - | 1 | - | - | 3 | - |
| நாயுடு | பெ.பா. - 2<br>ந.பா. - 2<br>குடம் - 2 | 3 | பெ.ப - 2<br>சி.ப - 2 | 1 | 1 | 1 | 8 | 5 | 5 | 1 | 2 | - | 36 | ✓ |
| முதலியார் | பெ.பா. - 1<br>சி.பா. - 1 | 2 | 1 | - | 1 | 1 | 9 | 5 | 1 | 1 | 2 | - | 25 | × |
| ரெட்டியார் | பெ.பா. - 1<br>சி.பா. - 1 | 2 | 1 | - | 1 | 1 | 9 | 5 | 2 | 1 | 2 | - | 26 | தெலுங்கு ×<br>தமிழ் ✓ |
| பறையர் | பெ.பா. - 2<br>சி.பா. - 2<br>குழ. ச. - 1<br>அடுப்பு - 1 | 2 | 1 | 2 | - | 1 | 11 | 5 | 8 | 1 | 2 | - | 40 | ✓ |
| யாதவர் (இடையர்) | சால் - 1<br>கரகம் - 1<br>மூடா - 1 | 2 | 1 | - | - | 1 | 9 | 5 | 1 | 1 | 2 | - | 27 | ×<br>மஞ்சள் மட்டும் |
| வன்னியர் | சாலு - 1<br>கரகம் - 1<br>முடா - 1 | 2 | 1 | 2 | - | 1 | 12 | 5 | 1 | 1 | 2 | - | 27 | ✓ |
| வண்ணார் (ஏகாலி) | பெ.பா. - 2<br>ந. பா. - ?<br>குடம் - 2 | 2 | பெ.ப - 2<br>சி.ப - 2 | 1 | 1 | 1 | 8 | 5 | 5 | 1 | 2 | - | 36 | ✓ |
| நாவிதர் | பெ.பா. - 2<br>ந.பா. - 2<br>குடம் - 2 | 2 | பெ.ப - 2<br>சி.ப - 2 | 1 | 1 | 1 | 8 | 5 | 5 | 1 | 2 | - | 36 | ✓ |
| தொம்பர் (வேட்டை) | பெ.பா. - 1<br>சி.பா. - 1 | 2 | 1 | 1 | - | 1 | 9 | 5 | 1 | 1 | 2 | - | 25 | ✓ |

- தொண்டை மண்டல வட்டாரத்தில் உள்ள ஒவ்வொரு சாதியினரும் பெரும்பான்மையாகப் பயன்படுத்தும் எண்ணிக்கையே இங்குக் குறிக்கப்பட்டுள்ளது.
- பெ.பா.-பெரிய பானை; ந.பா. - நடுபானை; சி.பா. - சின்னபானை; குழ.ச. - குழம்புச்சட்டி; மூ.மொ. - மூக்கு மொந்தை.

### *ஹோமகுண்டச்சட்டிப் பயன்பாடு*

திருமணச் சடங்கிற்கான சாலுகரகப் பொருள்களுள் ஹோமகுண்டச்சட்டியையும் சேர்த்துப் பயன்படுத்தும் வழக்கத்தினைத் தச்சர், கருமார் (கருங்கொல்லர்), தட்டார் (பொற்கொல்லர்), குயவர், நாவிதர், வண்ணார், நாயுடு, முதலியார், ரெட்டியார், செட்டியார் முதலான சாதியினர் கொண்டிருக்கின்றனர். தச்சர், கருமார், தட்டார் என்ற மூவரும் தங்களை விஸ்வ பிராமணர்களென்று குறித்துக் கொள்ளும் வழக்கமுடையவர்களாக இருக்கின்றனர். ஆதலால் அதற்கான அடையாளமாக அவர்கள் இவ்வித ஹோமகுண்டச்சட்டியைப் பயன்படுத்துவதாகவும் குறிப்பிடுகின்றனர். அதேபோல் நாட்டார் மரபில் தெய்வாம்சம் பொருந்தியவர்களாகக் கருதப்படும் குயவர், நாவிதர், வண்ணார் முதலான சாதியினரிடமும் இவ்விதமான 'ஹோமகுண்டச்சட்டி' பயன்பாடு இருந்து வருகிறது. இதில் குயவர்கள் 'ஹோமகுண்டச்சட்டி' தவிர்த்த பிற முதன்மையான சாலுகரகப் பொருள்களைப் பயன்படுத்துவதில்லை (இதற்கான காரணக் கதை முன்னியலில் பேசப்பட்டுள்ளது). நாயுடு, முதலியார், ரெட்டியார், செட்டியார் உள்ளிட்டச் சாதியினரும் தங்களது திருமணச் சடங்குப் பொருள்களான சாலுகரகப் பொருள்களுடன் ஹோமகுண்டச்சட்டியையும் சேர்த்துப் பயன்படுத்தும் வழக்கத்தினை மேற்கொள்பவர்களாக இருக்கின்றனர். இதற்குக் காரணம் 'ஹோமகுண்டச்சட்டி'யைப் பயன்படுத்தி யாகம் வளர்த்து சடங்குகளைச் செய்யும் மேற்குறிப்பிட்ட சாதியினர் அனைவரும் சமூகத் தளத்தில் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதுவதே ஆகும்.

### *வளமைக் குறியீடு*

திருமண வளமைச் சடங்கில் பயன்படுத்தப்படும் சாலுகரகச் சடங்குப் பொருள்களில் தங்களின் குல வளமைக் குறியீடாகப் பல வண்ணங்களைத் தீட்டி பயன்படுத்தும் வழக்கமுடையவர்களாக நாயுடு, ரெட்டியார், பறையர், வண்ணார், வன்னியர், நாவிதர், தொம்பர், அருந்ததியினர், மீனவர், மூப்பனார் முதலான சாதியினர் இருந்து வருகின்றனர். தவிர்த்து முதலியார் சாதிப்பிரிவினில் ஒரு பகுதியினர் வண்ணந்தீட்டி பயன்படுத்துகின்றனர். ஒரு பகுதியினர் வண்ணந் தீட்டாமல் பயன்படுத்துகின்றனர். 'யாதவர்' என்றழைக்கப்படும் இடையர் சாதியினர் தாங்கள் பயன்படுத்தும் சாலுகரகச் சடங்குப்பொருள்களின் மீது தங்களின் வளமைக் குறியீடாக மஞ்சள் பூசி பயன்படுத்தும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். தச்சர், கொல்லர், தட்டார் உள்ளிட்டச் சாதிப்பிரிவினர்கள் தங்களுக்கான சடங்குப் பொருள்களின் மீது வெள்ளை நிற சுண்ணாம்பினை மட்டும் தீட்டிப் பயன்படுத்தும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர்.

பிரம்மனின் தலையிலிருந்து பிறந்தவர்களாகத் தங்களைச் சொல்லிக் கொள்ளும் பார்ப்பனர்களும், மண்ணாலான பொருளுற்பத்தியில் ஈடுபட்டு படைக்கும் தொழிலைச் செய்யும் தாங்கள் பிரம்ம குலத்தைச் சார்ந்தவர்கள் எனச்

சொல்லிக் கொள்ளும் குயவர்களும் சாலுகரகச் சடங்குப்பொருள்களைப் பயன்படுத்தாதவர்களாக இருக்கின்றனர்.

## சடங்குப்பொருள்கள் - நுகர்வு

நுகர்வுக் கலாச்சாரம் என்பது அதிகாரத்தோடு தொடர்புடையது. உற்பத்திக் கலாச்சாரம் என்பது அதற்கெனப் பணிக்கப்பட்டது என்பதான சூழலே தமிழ்ச் சமூக மரபில் வெகுவாக நிலவி வந்திருக்கின்றது. இதனடிப்படையிலேயே குயவர்களுக்கும் குடிமக்களுக்குமான உறவுநிலையை மதிப்பிட வேண்டியிருக்கின்றது.

நிலவுடைமையாளர்களுக்குத் தேவையான மண்சார்ந்த புழங்குபொருள்களைச் செய்து தருபவர்களாகக் குயவர் சமூகத்தினர் பணிக்கப்பட்டிருக்கின்றனர். இதன் நீட்சியாக நிலவும் 'குடிஊழிய' முறையினை இதற்கான சான்றாகக் கொள்ளலாம். இதனடிப்படையிலேயே குயவர்கள் குடிமக்களின் இன்ப, துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்ளும் உரிமையைப் பெற்றிருக்கின்றனர். ஆனாலும் இதற்கான எல்லை நிலவுடைமையாளர்களால் மிகவும் கறாராக வரையறுக்கப்பட்டிருந்திருக்கிறது. இதனைக் குயவர்கள் பங்கேற்கும் குடிமக்களுக்கான வாழ்க்கை வட்டச் சடங்குகள் பிரதிபலிக்கின்றன. அவற்றில் திருமணச் சடங்கும் ஒன்று.

திருமணச் சடங்கிற்கான 'சாலுகரக' பொருள்களை உற்பத்தி செய்து தருவதில் குயவர்களுக்கும் குடிமக்களுக்கும் இடையேயான உறவு அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் 'குடிமக்கள் தங்கள் வீட்டுத் திருமணத்திற்குத் தேவையான சடங்குப்பொருள்களைச் செய்து தரும்படி அவர்களுக்கு ஊழியம் செய்யும் குயவர் சமூகத்தினரிடம் முறைப்படி கேட்கும் வழக்கம் இருக்கிறது. அவர்களும் அதை ஏற்றுத் திருமண நாளன்று திருமண நிகழ்விடத்திற்கு 'சாலுகரகப்' பொருள்களை எடுத்துச்சென்று கொடுத்துவிட்டு அதற்கான ஊதியத்தைப் பெற்று வருகின்றனர். அவ்வூதியத்துடன் 'ஊழியக்குடி' என்பதன் நிமித்தமாக அவர்களுக்கு அரிசி, பருப்பு, உப்பு, புளி, மிளகாய், காய்கறி முதலானவற்றைத் தரும் வழக்கம் குடிமக்களிடம் இன்றளவும் இருந்து வருகிறது' (கெம்பு உடையார்; பி.இ.*4:38*).

குயவர் சமூகத்தில் உள்ள பெண்களே பெரும்பாலும் இவ்வூழிய வேலையைச் செய்கின்றனர். இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்குக் குயவர் சமூகத்துப் பெண் தகவலாளி விஜயா அவர்களின்,

> நாங்க எல்லாருக்கும் ஒரே மாதிரிதான் பொருள் தருவோம். ஆனால் சாதிவாரியா பிரிச்சி ஒவ்வொருத்தருக்கும் ஒரு மாதிரி தர்ற பொருள் கல்யாண பானைகள் தான். கல்யாணம் பண்றவங்க முன் கூட்டியே எங்களுக்குத் தாம்பூலம் வைப்பாங்க. அப்படி தாம்பூலம் வச்சாங்கன்னா நாங்க கல்யாணம் நடக்குற இடத்துக்கே கல்யாணப் பானைகளைக் கொண்டு போயி கொடுக்கிறது வழக்கம். அப்படியான வேலைகளையெல்லாம் நான் தான் செய்வேன். கல்யாண மண்டபத்துக்கு கல்யாணபானைகள கொண்டு போயி வச்சேன்னா, அவங்க

*அதுக்கான காசு தருவாங்க. கூடவே அரிசி, பருப்பு, புளி, உப்பு, மிளகா, காய்கறி முதலான மளிகைச் சாமான்களும் தருவாங்க. நான் தான் வாங்கிட்டு வருவேன் (விஜயா; பி.இ.4:95)*

என்ற பதில் மனங்கொள்ளத்தக்கதாய் அமைந்திருக்கின்றது. இதே போல்,

*சாலுகரத்தைக் கூடையில அடுக்கி எடுத்துச் சென்று கல்யாண மண்டபத்துல கொடுத்துட்டு வந்தா 'கூடை நிறைய தானியம் கொடுப்பாங்க (பூங்காவனம்; பி.இ.4:102)*

என்ற தகவலும் கவனிக்கத்தக்கதாய் அமைந்திருக்கிறது.

மேற்கூறிய இவ்வழக்கம் தவிர்த்து குடிமக்களே குயவர்களின் வீட்டிற்குச் சென்று சாலுகரகப் பொருள்களை வாங்கிவரும் வழக்கம் தற்போது பரவலாகக் காணப்படுகின்றது. ஆனால் சில சாதியினரே இவ்வழக்கத்தை மரபாகக் கொண்டிருக்கின்றனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கவர்களாகப் பறையர், அருந்ததியினர் சாதியினரைக் கொள்ளலாம். இவ்விரு சாதிப்பிரிவினரும் திருமணத்திற்கு முதல்நாள் குயவர் வீட்டிற்கு மேளதாளத்துடன் வந்து தாங்களே சாலுகரகச் சடங்குப் பொருள்களை வாங்கிச் செல்லும் முறைமையை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். அப்போது அதற்குரிய பணம் மற்றும் பச்சைக் காய்கறிகள், அரிசி, பருப்பு, புளி, உப்பு, மிளகாய் போன்ற பொருள்களை குயவர்களிடம் கொடுக்கின்றனர். இவர்கள் இதையும் ஒரு சடங்காக நிகழ்த்துகின்றனர்.

அதாவது, மேற்கூறிய இம்முறைப்படி மணமக்கள் மேளதாள முழக்கங்களுடன் குயவர் வீட்டுக்கு அழைத்து வரப்படுகின்றனர். பின்பு ஒரு துணியின் இரு முனையிலும் 'சும்மாடு' சுற்றி அதில் ஒன்றினை மணமகள் தலையிலும், மற்றொரு முனையை மணமகன் தலையிலும் வைத்து அவற்றின் மீது சாலு கரகத்தினை ஆளுக்கொன்றாகத் தூக்கி வைத்துக்கொண்டு போகும் வழக்கத்தினைப் பறையர் மற்றும் அருந்ததியினச் சாதியினர் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இவர்களின் இவ்வழக்கமே கடந்த தலைமுறையில் ஒட்டுமொத்த சமூகத்திற்குமான வழக்கமாக இருந்தது. அப்போதெல்லாம் 'திருமணம்' உள்ளூரிலேயே அதாவது மணமகன் வீட்டிலேயே பெரும்பாலும் நடக்கும். அவ்வாறானபோது "எல்லாச் சாதியினரும் உள்ளூர் குயவர்களின் வீட்டிற்கு மேளதாளத்துடன் வந்து 'சாலுகரக' சடங்குப் பொருள்களை வாங்கிச் செல்லும் வழக்கம் கொண்டிருந்தனர். திருமணச் சடங்கில் இதுவும் ஒன்று. ஆகவே குயவர்களும் அப்பொருள்களுக்கான பூசை புனஸ்காரங்கள் செய்து கொடுத்தனுப்புவர். அதற்கான ஊதியம் உள்ளிட்ட முறைப்பொருள்களை அவர்களிடமிருந்து குயவர்கள் அப்போதே பெற்றுக் கொள்வர்" (களாய்வு; திருப்பதி (65): திருப்பத்தூர், 08.06.2009).

ஆனால் திருமண நிகழ்ச்சிகளை நகரத்தில் உள்ள திருமண மண்டபங்களில் நடத்தத் தொடங்கிய காலத்திற்குப் பிறகு இவ்வழக்கம் முற்றிலும் மாற்றமடைந்திருக்கின்றது. தற்போதும் மரபான இவ்வழக்கத்தினை

'பறையர் மற்றும் அருந்ததியினச்' சமூகத்தினர் மட்டுமே மேற்கொண்டு வருகின்றனர். அதிலேயும், நகர்வாழ் பறையர் மற்றும் அருந்ததியினச் சமூகத்தினரிடம் இவ்வழக்கம் மெல்ல உருமாறி வருகின்றது. இவ்வழக்கத்தினை அடிப்படையாக வைத்து நோக்கும்போது மணமக்களுக்கு மண்பாண்டப் பொருள்களைச் சீர்வரிசையாகத் தரும் வழக்கத்தின் எச்சமாக இவ்வித 'சாலுகரக' சடங்கு பயன்பாட்டினைக் கொள்ளலாம்.

## மண்பாண்டப் பொருள் - சீர்வரிசை

திருமணம் செய்துகொள்ளும் மணமக்களுக்கான சீர்வரிசைப் பொருள்களாக மண்பாண்டப் பொருள்கள் தரப்பட்டிருக்கின்றன. திருமணம் என்பது ஒரு நிலைமாற்றுச் சடங்கு. இச்சடங்கின்வழித் தனியொரு குடும்பம் என்ற கட்டமைப்பு உருவாக்கப்படுகின்றது. அவ்வுருவாக்கக் கூறுகளின் உதிரிகளில் ஒன்றாகத் திருமணத்தின் போதான 'சீர் செய்தல்' என்ற செயல்பாட்டினைக் கொள்ளலாம். அதாவது திருமண மக்கள் இருவரும் சேர்ந்து தனியொரு குடும்பமாக வாழ்வதற்கான வழிவகைகளைச் செய்தல், அதற்கான பொருள்களைக் கொடுத்தல், என்பதனடிப்படையில் கொடுக்கப்பட்ட பொருள்கள் சீர்வரிசைப் பொருள்கள். நவீனத் தொழில்நுட்பத்தின் வருகைக்கு முன்னான காலகட்டங்களில் மண்சார்ந்த புழங்குபொருள்களே இன்றியமையாதப் பயன்பாட்டுப் பொருள்களாக இருந்திருக்கின்றன. ஆதலால் அவற்றைத் திருமணத்திற்கான சீர்வரிசைப் பொருளாகத் தந்திருக்கின்றனர். இதை,

> அதுக்கு முன்னாடியெல்லாம் மண்பாண்டப் பொருள்களைக் கல்யாண சீர்வரிசைக்கு ஜவுளி கணக்குல எடுத்து வைப்பாங்க. இப்பத்தான் அலுமினியம், பித்தளை, எவர்சில்வர்னு எல்லாமே மாறிப்போச்சு (ஸ்ரீரங்கம்; பி.இ.*4:46*)

என்ற மண்பாண்ட உற்பத்தியாளரின் கூற்று மெய்ப்பிப்பதாய் அமைகிறது. இவ்வழக்கத்தைத் தற்போதைய நவீனப் புழங்குபொருள்கள் முழுமையாக இட்டு நிரப்பியிருக்கின்றன என்பது கவனிக்கத்தக்கதாய் இருக்கிறது.

மேலும், மேற்குறிப்பிட்ட குயவரின் கூற்று வழி 'ஜவுளி' என்ற எண்ணிக்கையளவு முறை பின்பற்றப்பட்டிருப்பதை அறிய முடிகிறது. மண் சார்ந்த புழங்குபொருள்களைச் சீர்வரிசைப் பொருள்களாகத் தரும்முறை தற்போது முற்றிலும் வழக்கொழிந்துவிட்ட நிலையில் இவ்வெண்ணிக்கை முறை மண்ணாலான உருப்படிகளை மிகுதியாகப் பயன்படுத்தும் 'சாலுகரக' சடங்கு முறையில் இருப்பதை அறிய முடிகிறது.

எண்ணிக்கை அளவை ஜவுளி எனக் குறிக்கும் வழக்கம் சாலுகரக உற்பத்தியாளர்களான குயவர்களிடமும் அதனை நுகர்பவர்களான குடிமக்களிடமும் பரவலாக இருந்து வருகிறது. அதாவது "சாலுகரகச் சடங்குப் பொருள்களின் எண்ணிக்கையில்,

*1 ஜவுளி என்பது - 133 உருப்படிகள்*

*½ ஜவுளி என்பது - 66 உருப்படிகள்*

*¼ ஜவுளி என்பது - 33 உருப்படிகள்*

என்ற அளவீட்டு முறை பின்பற்றப்படுகின்றது (களாய்வு; பூபாலன் (78): தெள்ளூர், 29.03.2009).

இம்முறை மரபான நில அளவீட்டு முறையுடன் ஒப்புநோக்கத்தக்கதாய் இருக்கின்றது. தென்தொண்டை மண்டல வட்டாரமான விழுப்புரம் மற்றும் திருவண்ணாமலை மாவட்டங்களில் நில அளவீட்டினை 'காணி' என்ற மரபான அளவீட்டு முறையைக் கொண்டு கணக்கிடும் முறை தற்போதும் வழக்கில் இருக்கிறது. அதில்,

*1 காணி என்பது - 133 சென்ட்*

*½ காணி என்பது - 66 சென்ட்*

*¼ காணி என்பது - 33 சென்ட்*

என்ற எண்ணிக்கை அளவு பின்பற்றப்படுகிறது. ஆக, இவ்வெண்ணிக்கை முறை மரபானது இவ்விடத்து இவ்வெண்ணிக்கை முறையும் சாலுகரகச் சடங்குப்பொருள்களின் எண்ணிக்கை முறையும் பொருந்திவரும் நிலை கவனிக்கத்தக்கதாக இருக்கிறது. மேலும், மரபான இவ்வெண்ணிக்கை முறை வழக்கத்திலிருப்பதை அடிப்படையாகக் கொண்டு மேற்கூறிய மண்பாண்டப் பொருள்களைச் சீர்வரிசையாகத் தரும் வழக்கம் இருந்திருப்பதை அனுமானிக்க முடிகிறது.

## பொருள் உற்பத்தி - நுகர்வு - ஊதியம்

ஒரு குறிப்பிட்ட பொருள்களின் மீது மிகுதியான மதிப்பீட்டினைக் குவித்து வைக்கும் வழக்கம் பின்னாளில் வந்திருக்க வேண்டும். இது பணம் என்ற பரிவர்த்தனைப் பொருள் உருவானதற்குப் பின்னான காலகட்டத்திய நிலைப்பாடு அதற்கு முன்னான காலகட்டத்தில் பண்டமாற்று முறையே மேலோங்கி இருந்திருக்கிறது. இதைக் குயவர்களுக்கும் குடிமக்களுக்கும் இடையே இருந்த 'ஊழிய முறை' உறுதிப்படுத்துகிறது. நிலவுடைமையாளர்களே இவ்வூழிய முறையை உருவாக்கியிருக்க வேண்டும். ஆதலால்தான் ஊழியத்திற்குக் கூலியாக அவர்கள் தங்களது நில விளைப்பொருளைத் தந்திருக்கின்றனர். இவ்வூழியத் தொழிலுக்கு 'குடிமைத் தொழில்' என்ற பெயரும் இருந்திருக்கிறது. இதைச் செய்யும் குயவர் சமூகத்தினர் தாங்கள் ஊழியம் செய்யும் வீட்டிற்குச்சென்று காலை, மாலை இருவேளையும் உணவு வாங்கி வந்து உண்ணும் வழக்கத்தைக் கொண்டவர்களாக இருந்திருக்கின்றனர். இது அவர்கள் ஊழியம் செய்வதற்கான அடையாளமாகவும் வாழ்வாதாரமாகவும் இருந்திருக்கின்றது. இதை,

இப்ப அதுமாதிரியான குடித்தொழில் முறையெல்லாம் செய்யறதில்ல. ஆனால் ஒரு பதினஞ்சு இருபது வருஷத்துக்கு முன்னாடி செய்திருக்கிறேன். ஒரு

*காலகட்டத்துல வண்ணான், அம்பட்டன் சோறு எடுக்கற மாதிரி குசவர்களும் வீடு வீடாகச் சென்று சோறு வாங்கினதா எங்கப்பா சொல்லியிருக்கார். நானும் சின்ன வயசுல பார்த்திருக்கேன் (கெம்பு உடையார்; பி.இ.4:38)*

என்ற தகவலின்வழி அறியமுடிகின்றது.

நிலவுடைமைச் சமூகத்தினை மையமிட்ட குடிஊழியத்தில் குயவர் சமூகத்தினர் உற்பத்தி செய்துதரும் மண்பாண்டப் பொருள்களுக்குக் கூலியாக அதாவது மாற்றாக நிலவிளைபொருள்களே தரப்பட்டிருக்கின்றன. ஆண்டிற்கு ஒருமுறை அளிக்கப்படும் இத்தானியத்திற்கு ஈடாகத் தமிழர் திருநாளாகிய தைப்பொங்கல், கார்த்திகை முதலான பண்டிகைகளுக்குத் தேவையான மண்பாண்டப் பொருள்களையும், உள்ளூர் திருவிழாவில் பொங்கல் வைப்பதற்கான மண்பாண்ட வகைகளையும் கொடுத்திருக்கின்றனர். நிலமற்றவர்கள் தங்களின் உழைப்பிற்குக் கூலியாகக் கிடைத்த தானியங்களைக் கொடுத்து அவ்வப்போது அவர்களுக்கு வேண்டிய மண்பாண்டப் பொருள்களை வாங்கிச் சென்றிருக்கின்றனர்.

இத்தகு ஊழிய முறைக்குத் தென்தொண்டை மண்டல வட்டாரங்களில் 'மேரை' என்ற பெயர் வழக்கத்திலிருக்கிறது. இவ்விதமான 'மேரை' செய்யும் முறையானது பின்னாளில் கறாரான முறையில் பின்பற்றப்பட்டு வந்திருக்கிறது. அதாவது குடிமக்கள் தங்களுக்குத் தேவையான பொருளுக்கேற்ப தானியங்கொடுத்தலும், குயவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்படும் தானியத்திற்கு ஏற்ப மண்பாண்டப் பொருள்கள் தருவதுமான வழக்கம் உருவாகியிருந்திருக்கிறது. குயவர்கள் இவ்வித ஊழிய முறையை எல்லாச் சாதியினருக்கும் செய்திருக்கின்றனர். இதை,

*எல்லா வெவசாய குடிகளுக்கும் மேரை செய்திருக்கிறேன். சாதி வித்தியாசம் கெடையாது. ஆனால் மேரையில வேற ஒரு வகையுண்டு. நாலு மரக்கா, ஆறு மரக்கா, கலம் நெல்லு அப்படின்னு நெல் அளவுக்குத் தகுந்த மாதிரி உருப்படிகளைக் கொடுப்போம். உதாரணமா பதக்கு நெல்லுக்கு (12 மரக்கால்) மேரை கேக்கற ஒரு குடும்பத்தாருக்கு இருபது அல்லது இருபத்தஞ்சி உருப்படிகள் கொடுப்போம். அதுவும் பொங்கல் காலத்துலதான் இந்தக்கணக்கு. மத்தபடி தனித்தனியான கொடுக்கல் வாங்கல்தான் (கெம்பு உடையார்; பி.இ.4:38)*

என்ற தகவலின்வழி அறியமுடிகின்றது.

இதேபோல் விழுப்புரம் வட்டாரத்தைச் சார்ந்த குயவர் ஒருவரின் தகவலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாய் அமைந்திருக்கிறது. அதாவது,

*தைப்பொங்கலுக்கு கொடுக்கற பானை, சட்டிகளுக்கும், கார்த்திகை தீபத்துக்கு கொடுக்கற அகல்விளக்கு, ஊர் பொங்க வைக்க கொடுக்கற பல்லாவுக்குந்தான் மேரையே தவிர மத்த நாள்ல வாங்குற பொருள்களுக்கு இல்லை. குடும்பத்துக்கு தகுந்தஅளவுதான் மேரையும். நிலபுலம் அதிகமாக இருக்குற குடும்பம் பெரிய*

குடும்பமாத்தான் இருக்கும். அவங்க பொங்கலுக்கு பதினஞ்சுக்கும் மேற்பட்ட பெரிய உருப்படிகளை எடுப்பாங்க. அதுக்குத் தகுந்த மாதிரி கலம் நெல் மெராசியா தருவாங்க. சின்ன குடும்பத்தாரா இருந்தா ஏழு அல்லது எட்டு பெரிய உருப்படிகளை எடுப்பாங்க. அவங்க அதுக்கு குருணி நெல்லு குடுப்பாங்க. இது இல்லாம நெல்லுக்கட்டு ஒன்னு தனியா குடுப்பாங்க. இப்படி அவங்க எடுக்கற பொருளுக்குத் தகுந்த மாதிரிதான் மெராசி கொடுப்பாங்க. இது இல்லாம நிலம் இல்லாதவங்க காசு குடுத்துப் பொருள் வாங்கிப் போவாங்க. இல்லேன்னா அவங்க கூலிக்கு செய்து வாங்கின தானியத்தைக் கொண்டு வந்து கொடுத்துட்டுப் பொருள் வாங்கிப் போவாங்க. வண்ணார், தச்சர், அம்பட்டர் முதலானவர்களுடன் மாத்தி மாத்தி குடிவேலை செய்துப்போம் (முனுசாமி; பி.இ.*4:31*).

இவ்விரு தகவலில் கூறப்பட்டுள்ள இம்முறைமையே ஒட்டுமொத்த தொண்டை மண்டல வட்டாரத்திலும் நிலவியிருக்கிறது. இவ்வழக்கம் பின்னாளில் மெல்ல மறைந்து தற்போது தானியத்திற்குப் பதிலாக 'பணம்' கொடுத்துப் பொருள் பெறும் வழக்கம் வெகுமக்களிடம் மேலோங்கி இருக்கிறது. மிக முக்கியத் தொழில் நகரமான சென்னையை மையமாகக் கொண்ட தொண்டை மண்டல வட்டாரம் முழுவதிலும் இவ்வழக்கம் பரவலாக இருந்து வருகிறது. தவிர்த்து, பெரும்பாலான இடங்களில் மண்சார் புழங்குபொருள்கள் பொதுச் சந்தைப் பொருளாகிப் போயிருக்கின்றன. இதில் பணமே பரிவர்த்தனைப் பொருள். ஆகையால் உற்பத்தியாளரும் நுகர்வோரும் தங்களுக்கான தனித்துவ முகம் சிதைந்தவர்களாகக் காணப்படுகின்றனர்.

பொதுச்சந்தைக்குக் கொண்டு வரப்பட்ட மண்சார் புழங்குபொருள்களின் விலை நிலையானதாக இல்லை. நவீனப் புழங்குபொருளோடு இவற்றை ஒப்புநோக்கும் வெகுமக்கள் இதனைப் பேரம் பேசி வாங்கிச் செல்கின்றனர். இதை,

நாம சொல்ற காசு குடுத்து வாங்குற பழக்கம் ஊர்ல ஒருத்தருக்கும் இல்ல. மண் பொருளுதான, உடையிற பொருளுக்கு என்ன இந்த வெல சொல்ற? அப்படின்னு சொல்லி பேரம் பேசித்தான் வாங்குவாங்க (மணி; பி.இ.*4:53*).

பெரும்பாலும் பேரம் பேசித்தான் வாங்குவாங்க. கண்ணுக்கு எதிரில் இருக்குற, செய்யிற எந்தப் பொருளையும் யாரும் பெருசா மதிக்கறதில்ல. குறைச்சு தான் மதிப்பிடறாங்க (விஜயா; பி.இ.*4:95*)

என்ற மண்சார் புழங்குபொருள் உற்பத்தியாளர்களின் ஆதங்க வார்த்தைகளிலிருந்து அறிய முடிகின்றது.

### சாதிசாரா ஊழிய உறவு

நவீனப் புழங்குபொருள்களின் வருகைக்கு முன்னான காலகட்டம் வரை பொருளாதார வளமிக்க நிலவுடைமையாளர்களே மண்சார்ந்த புழங்குபொருள்களைக்

குயவர்களிடமிருந்து மிகுதியாகப் பெற்றுப் பயன்படுத்தியிருக்கின்றனர். ஆனால் தற்போது பொருளாதார வளம் குறைந்த நகர்நோக்கி இடம் பெயராத அடிதட்டு மக்களே இவ்விதப் பயன்பாட்டுப் பொருள்களைக் குயவர்களிடமிருந்து மிகுதியாகப் பெறுபவர்களாக இருக்கின்றனர். மண்ணாலான பொருள்களின் தன்மையறிந்தோர் சிலரும் மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். இதில் இஸ்லாமியர்களுக்கு மிகுதியான பங்கிருக்கிறது.

வேலூர் வட்டார இஸ்லாமியர்கள் தங்களுக்கான பாரம்பரிய உணவுக்கலமான 'கட்ரா'வைக் குயவர்களிடம் தனிப்பட்ட முறையில் கேட்டுப் பெறுகின்றனர். அதேபோல் அவர்கள் வெளிநாடு செல்லும்போதும், சென்று திரும்பி வந்த பின்னரும் ஏழைகளுக்குச் சோறு பொங்கி தானம் செய்யும் வழக்கத்தினைக் கொண்டிருக்கின்றனர். இதனை 'அல்லாவுக்குச் சோறு போடுதல்' என்கின்றனர். இதற்குத் தேவையான சாணகைத் தட்டுகளைக் குயவர்களிடமிருந்து **51, 101, 301** என்ற எண்ணிக்கையில் பெறுகின்றனர். இவ்விதப் பயன்பாட்டிற்கு எப்போதும் இவர்கள் மண்ணாலான பொருள்களையே பயன்படுத்துவதாக அவ்வட்டாரக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். தொண்டை மண்டல வட்டாரத்தின் பெரும்பகுதிகளில் இதே நிலை காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

**ஊர்ச்சடங்கில் குயவர்கள்**

ஒவ்வொரு ஊரிலும் அவ்வூர் இயக்கம் பெறுவதற்கான பணிகளை ஒரு சில சமூகத்தினரே செய்திருக்கின்றனர். அந்த வகையில் பொருளுற்பத்தியின் அடிப்படையில் குடிகளுக்குச் செய்யும் ஊழியம் தவிர்த்து ஒட்டுமொத்தமான ஊர்ச்சடங்குகளிலும் தங்களுக்கான ஊழியப் பணியைச் செய்தவர்களாகக் குயவர்கள் இருந்திருக்கின்றனர். மரபான இவ்வழமையைத் தொண்டை மண்டல வட்டார கிராமப்பகுதிகளில் காணமுடிகின்றது.

நிறுவனமயப்படுத்தப்படாத நாட்டார் தெய்வங்களுக்கான சிலைகள் பெரும்பாலும் மண்ணாலேயே உற்பத்தி செய்யப்படுகின்றன. இவை புனிதம் கருதி ஆண்டுதோறும் புதிதாக உருவாக்கப்பட்டு, அதை உருவாக்குபவர்களாலேயே அத்தெய்வத்திற்கான உயிர்ப்பும் தரப்படுகின்றது. வழக்கமாக, இவ்வேலையை மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாகக் கொண்ட குயவர்களே செய்கின்றனர். இதற்கு சான்றாக, அய்யனார் தெய்வத்திற்கான 'குதிரையெடுப்பு' சடங்கினைக் கொள்ளலாம். இச்சடங்கில் அய்யனார் தெய்வத்தின் வாகனமான, குதிரையை உற்பத்தி செய்து அதற்கு உயிர்ப்பு தந்து அதற்கான பூசை புனஸ்காரங்கள் செய்து, ஊர்ச்சுற்றி வந்தபிறகு, அதை ஊர் எல்லைக் கோயிலில் கொண்டுபோய் சேர்ப்பிக்கும் வரையிலான நிகழ்வில் குயவர்களுக்கான பங்கு முதன்மையானது. இம்மாதிரியான தருணங்களில் மட்டும் உயர்வாக மதிக்கப்படும் குயவர்கள் இவ்வித நிகழ்வுகளுக்குப் பிறகான காலகட்டங்களில் இவ்வித மதிப்பினைத் தொடர்ச்சியாகப் பெற்றிருப்பதில்லை.

இதேபோல் ஊர்த் தெய்வமான 'மாரியாத்தாளுக்குக் கூழ் வார்க்கும்' திருவிழா பெரும்பாலான தென்தொண்டை மண்டல வட்டாரக் கிராமங்களில் நடைபெறுகின்றது. ஆண்டுதோறும் 'மழை வேண்டி' ஊர்ப் பொதுமக்களால் செய்யப்படும் இத்திருவிழாவிற்குத் தேவையான மாரியம்மன் சிலையைக் குயவர் சமூகத்தினரே மண்ணால் உற்பத்தி செய்து தருகின்றனர். இதைக் காஞ்சிபுர வட்டாரத்தில் 'மாதாங்கி அம்மன்' என்றழைக்கும் வழக்கம் இருந்து வருகிறது.

குயவர்களால் உற்பத்தி செய்யப்படும் இத்தெய்வத்திற்குப் பெரும்பாலும் குயவர்களே பூசாரிகளாகவும் இருக்கின்றனர். சிலமணிநேர மதிப்புறு நிலையை மையமாகக் கொண்ட இப்பணியை இவர்கள் தங்களுக்கான உரிமையாகக் கருதுகின்றனர். ஒரு ஊரில் பல குயவர் குடும்பங்கள் இருப்பின் சுழற்சி முறையில் ஆண்டுக்கு ஒரு குடும்பம் என முறைப்படுத்தி இதற்கான உரிமைகோரும் வழக்கத்தினைத் தென் தொண்டை மண்டல வட்டாரக் குயவர்களிடம் காண முடிகின்றது.

திரௌபதியம்மன் திருவிழாவில் 'அரவான் களபலி' செய்வதற்குத் தேவையான துரியோதனன் மற்றும் அரவான் உருவைச் செய்து தருபவர்களாகவும், ரத்த வேட்கையோடு களத்தில் நிற்கும் அரவான் துடியான தெய்வமென்பதால் அதைப் பராமரித்து அதற்கான பூசை புனஸ்காரங்கள் செய்பவர்களாகவும் குயவர் சமூகத்தினர் இருக்கின்றனர். இதை வந்தவாசி வட்டாரக் குயவர் ஒருவரின்,

> திரௌபதியம்மன் திருவிழாவின்போது அரவான் செலை செய்யிற வேலை நமக்கானது. அப்படி செய்யிற அரவான் செலையை மூணு ஊர் தாண்டாமல் அதுக்குள்ளாகவே ஊர்வலம் நடத்தி வந்து திருவிழா செய்யணும். அப்படி அந்த எல்லையைத் தாண்டி சாமி போச்சுன்னா ஆபத்து நடக்கும் என்பது ஐதீகம். ஆதலால் செல செய்யிறது தொடங்கி ஊர்வலம் நடந்து முடியறவரைக்கும் அது நம்ம பார்வையிலதான் இருக்கும் (ஸ்ரீரங்கம்; பி.இ.*4:46*)

என்ற கூற்றிலிருந்து அறியமுடிகின்றது.

மேற்கூறிய இவை யாவும் வேளாண்குடி மக்களால் செய்யப்படும் வளமைச் சடங்குகள். இதில் ஊழியக்குடிகளான குயவர்கள் ஓர் அங்கமாகவே செயல்படுகின்றனர். ஆனால் முற்றமுழுக்க பொதுமக்களுக்கு ஊழியம் செய்யும் ஊழியக் குடிகளான வண்ணார், அம்பட்டர் (நாவிதர்), பறையர் உள்ளிட்ட மூன்று சமூகத்தினரும் இணைந்து 'ஜாத்திரை' என்ற வளமைச் சடங்கு செய்யும் வழக்கமும் திருவள்ளூர் மற்றும் வேலூர் வட்டாரங்களில் இருந்து வருகிறது. இவர்கள் செய்யும் இச்சடங்கிற்குத் தெய்வ உருக்கள் பயன்படுத்தப்படவில்லை. மாறாகக் குடிஊழியம் செய்யும் குயவர் சமூகத்தினரிடமிருந்து இரண்டு குடத்தினைப் பெற்று, அதைச் சிங்காரித்து அதற்கான வழிபாட்டுச் சடங்குகள் செய்யப்படுகின்றன. அவ்வாறு ஊழியக் குடிகளால் மட்டுமே செய்யப்படும் இவ்வளமைச் சடங்கிற்குத் தேவையான பானையைச் செய்து தருவதன் மூலம் குயவர்கள் தங்களுடைய பங்களிப்பைச் செய்கின்றனர்.

### சமூக உறவுத்தளம் - திருவிழா

மண்ணாலான புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபடும் குயவர்கள் மனித குலத்தின் மரபார்ந்த பொருளறிவுத் தொகுதியைத் தலைமுறை தலைமுறையாகக் கடத்தி வருபவர்கள். இது மண்ணோடு இயைந்த மனித வாழ்வியல் முறை. இதைப் பிற்காலத்தில் வந்த மண்ணோடும் மரபோடும் சற்றும் தொடர்பில்லாத இயற்கைக்கு எதிரான செயற்கை மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்கள் இட்டு நிரப்பும்போது மரபான பொருள் உற்பத்தியில் தேக்கம் ஏற்படுகின்றது. இத்தேக்க நிலையை நெகிழ்விற்குள்ளாக்கும் இடமாக திருவிழாக்களைக் கொள்ளலாம்.

திருவிழா என்பது ஒருவிதமான மரபுவழிப்பட்ட பண்பாட்டுச் சடங்கு. இதற்கு மாற்றாக வேறுபல பொழுதுபோக்கு நிகழ்வுகள் கொண்டாடப்படினும் முற்றிலும் மரபிலிருந்து மீற இயலாத மக்கள் திருவிழாவில் கலந்து கொள்வதன் மூலம் மனதிருப்தி அடைகின்றனர். அதுபோலவே செயற்கையான மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்கள் பலவற்றை அவர்கள் பயன்படுத்தினாலும் மரபான புழங்குபொருள்களின் மீதான ஈர்ப்பு அவர்களுக்கு இயல்பாகவே இருக்கிறது. ஆதலாலேயே அவர்கள் அதனை அன்றாடப் பயன்பாட்டிற்கானதாகக் கொள்ளாவிட்டாலும் அலங்காரப் பொருளாகக் கொள்ள முற்படுகின்றனர். மக்களின் இவ்விதமான மனோநிலையை கிளர்ந்தெழச் செய்யும் இடமாகத் திருவிழாக்கள் திகழ்கின்றன.

### மண்ணை மருந்தாக்கும் கலை

மருத்துவம் மண்ணோடு தொடர்புடைய ஒன்று. இதை மண்ணையும் மண்ணின் விளைபொருள்களான செடி கொடிகளையும் மருந்தாகக் கொண்ட நமக்கான மருத்துவ மரபிலிருந்து அறிய முடிகின்றது. மருத்துவக் குணமுள்ள மண் மற்றும் மண்ணின் விளைபொருள்கள் குறித்த அனுபவ அறிவினைப் பெற்றவர்கள் மருத்துவர்கள் என்ற நிலை இருந்திருக்கிறது. பல நோய்களைப் பற்றிய இப்பொதுஅனுபவம் ஊருக்குப் பொதுவான ஊழியக்குடிகளிடையே சாத்தியப்பட்டிருந்திருக்கிறது. ஆகையால் தொடக்க காலத்தில் குயவர்களே மருத்துவர்களாக இருந்திருக்கின்றனர்.

மண்ணைக் களிம்பாக்கி (Oinment) மருத்துவம் செய்யும் பணியை மண்ணோடு தொடர்புடைய தொழிலைச்செய்யும் குயவர் சமூகத்தினரும் அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய நோய்களுக்கா ன மருத்துவத்தைக் கத்தியோடு தொடர்புடைய தொழிலைச்செய்த நாவிதச் சமூகத்தினரும் (அம்பட்டர்), சோர்வு, காய்ச்சல் உள்ளிட்ட நோய்களுக்குத் துணிப்பாடம் (துணியால் மந்திரித்தல்) அடிக்கும் பணியைச் சலவைத் தொழிலோடு தொடர்புடைய வண்ணார் சமூகத்தினரும் செய்திருக்கின்றனர்.

நோய்கள் அனைத்தும் தெய்வம் மற்றும் தீய ஆவிகளின் நிந்திப்பு. ஆகையால் தெய்வத்தைச் சாந்தப்படுத்தியும் தெய்வத்தைத் துணையாகக் கொண்டும் மட்டுமே இந்நோய்களைக் குணப்படுத்த முடியும் என்ற வெகுமக்களின் நம்பிக்கையின் அடிப்படையில் அதற்கு மருத்துவம் பார்க்கும் இவ்வூழியக்குடியினர் அத்தருணத்தில் தெய்வாம்சம் பொருந்தியவர்களாகக் கொள்ளப்படுகின்றனர். அந்நோய் குணமடைந்து இயல்புநிலைக்கு மாறும்போது இவர்கள் சாதியடுக்கின் கீழ் உள்ள சாதாரணக் குடிகளாகவே நடத்தப்படுகின்றனர். இதற்கு வலு சேர்க்கும் விதமாக,

> *பத்தர்கள் தங்கள் கைவினைப் பொருள்களுடன் குடிகளுக்கு ஊழியம் செய்தல் முதன்மைப் பணியாக அமைய, மருத்துவம் சார்ந்த நிலையிலும் ஊழியம் செய்கின்றனர். கோடைக்காலத்தில் உடலில் கொப்புளங்கள் எழும்போது பத்தர்கள் 'அக்கி எழுதுதல்' மூலம் குணமாக்குகின்றனர். அதோடு காய்ச்சல், பயந்த குறி ஏற்படும் குழந்தைகளுக்கு வேப்பிலை பாடமும் (108 மந்திரம் சொல்லி வேப்பிலை அடித்தல்) மந்தம் தட்டுதலால் பாலை வாந்தி எடுக்கும் குழந்தைகளுக்குத் துணிப்பாடமும் (தோளில் போட்டுள்ள துண்டில் மூன்று முடிச்சி போட்டு 108 முறை மந்திரம் சொல்லி அந்தத் துண்டால் மந்திரித்தல்) மூட்டுவலியால் அவதிப்படும் முதியவர்களுக்கு 'கைப்பாடமும்' (மந்திரம் சொல்லி கையால் தடவிவிடுதல்) செய்கின்றனர். பத்தர்கள் செய்யும் இவ்வாறான மந்திரப் பாடங்களை பரியாரியும் (அம்பட்டர்) ஏகாலியும் (வண்ணார்) கூடச் செய்கின்றனர். ஆனால் அக்கி எழுதுதல் பத்தர்களுக்கே உரிய பாரம்பரியக் கலையாக உள்ளது" (பக்தவத்சலபாரதி (க.ஆ.); 2000:15)*

என்ற கருத்தின்வழி புரிந்து கொள்ளலாம். இதனை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, குடிஊழியம் செய்யும் மற்ற இரண்டு சமூகத்தினரை விட குயவர்களே மிகுதியான நோய்களுக்கு மருத்துவம் பார்த்திருக்கின்றனர். 'அக்கி நோய்க்கு மண்ணை மருத்துவக்குணம் மிக்க களிம்பாக்கித் தடவுதல்' (முன்னியலில் அக்கி எழுதுதல் என்ற தலைப்பின் கீழ் இது பற்றி விரிவாகப் பேசப்பட்டுள்ளது) என்ற மருத்துவ முறையினைத் தவிர்த்து எலும்பு முறிவிற்கான சிகிச்சை அளிக்கும் பணியையும் செய்திருக்கின்றனர். இதைக் குயவர்கள் குறித்த எட்கர் தர்ஸ்டனின் பின்வரும் பதிவிலிருந்து அறிந்துகொள்ள முடிகின்றது.

> *எலும்பு முறிவைச் சரி செய்வதில் குசவர்கள் கைதேர்ந்தவர்கள் எனக் கருதப்படுகின்றது. சென்னை மாநில ஆளுநரான லார்ட் எல்பின்ஸ்டன் கையில் ஏற்பட்ட முறிவினை மேல்நாட்டு வைத்தியர்கள் ஏதும் செய்ய இயலாது எனக் கைவிட்ட பின் ஒரு குசவன் எவ்வாறு தப்பை வைத்துக்கட்டிச் சரி செய்தான் என்பதனை இன்றும் பலர் பேசி வருகின்றனர்.*
>
> *எங்கள் கிராமத்தில் பல திறத்தனவான எலும்பு முறிவுகளையும் அவை எத்தகைய சிக்கலுடையனவாயிருப்பினும் குயவர்களான எலும்பு முறிவுக்கு சிகிச்சை செய்பவர்களே கவனித்துச் சரி செய்கின்றனர். கிராமத்து நாவிதனும் குயவனுமே நமது அறுவை சிகிச்சை மருத்துவர்கள். நாவிதன் கட்டிகள்,*

காயங்கள், கொப்புளங்கள் ஆகியவற்றிற்கு மருத்துவம் பார்க்கிறான். குயவன் எலும்பு முறிவு, மூட்டு விலகல் ஆகியவற்றிற்கு மருத்துவம் பார்க்கிறான் எனச் சென்னை மெயில் நாளிதழில் ஒருவர் எழுதியுள்ளார். பயிற்சி பெறாத குயவர்கள் செய்யும் வைத்தியத்தினால் சில சமயங்களில் தசையழுகல் வியாதியும் ஏற்படுகின்றது (எட்கர் தர்ஸ்டன்; 1993:240).

இக்குறிப்பில் உள்ளபடி குயவர்கள் எலும்பு முறிவுக்குச் சிகிச்சையளிக்கும் வழக்கம் தற்போது தொண்டை மண்டல வட்டாரத்தில் இல்லை. குயவர்களின் இச்சிகிச்சை முறை மக்களைப் பெரிதும் திருப்திப்படுத்தாததால் வழக்கொழிந்து போயிருக்கலாம். ஆனால்,

> *மூட்டுவிலகலைச் சரிசெய்யும் மருத்துவத்தினைத் தற்போதும் சில குயவர்கள் செய்துவருகின்றனர். இவ்வழக்கம் தற்போது மிகவும் அரிதாகிப் போய்விட்டது (களாய்வு; தண்டபாணி (61): தேவதானம்பேட்டை,09.05.2009)*

என்ற தகவலும் இங்குக் கவனிக்கத்தக்கதாய் இருக்கிறது. மண்ணால் மனிதனுக்குத் தேவையான புழங்குபொருள்களை உற்பத்தி செய்துதரும் கலைஞர்களான குயவர்களின் மற்றொரு பரிமாணமாக மண்ணை மருந்தாக்கும் இக்கலையைக் குறிப்பிடலாம். மண் சார்ந்த இவ்விரு கலையே குயவர்களுக்கும் குடிமக்களுக்குமான சமூக உறவினைப் பலப்படுத்தியிருக்கின்றன.

## குயவர்களின் வாழிடம்

வளர்ந்த வேளாண் சமூகத்தால் உருவான ஊர், நாடு முதலானவைகள் யாவும் அதிகாரங்களின் மையமாக இருந்திருக்கிறது. அதிகார வர்க்கத்தினர் ஊரின் மையப்பகுதியிலும் அவர்களின் தேவையை நிறைவுசெய்பவர்கள் முறையே அவர்களின் வசிப்பிடத்தைச் சுற்றி அடுத்தடுத்த நிலையிலும் வசித்திருந்திருக்கின்றனர். இவ்வமைப்புமுறை மரபு சார்ந்து வழங்கி வந்து சோழர்களின் ஆட்சிக் காலத்தில் நிலைப்படுத்தப்பட்டுள்ளது. இதை வலு சேர்க்கும் விதமாக,

> *சோழர் காலத்தில் நகரங்கள் பெரியவை. இன்ன இடத்தில் இன்னவர்கள் இத்தனை மாடிகளுடன்தான் வீடுகள் கட்ட வேண்டும் என்று விதிமுறைகள் இருந்தன. நகரத்தின் மையப்பகுதியில் (வள்ளாலையில்) வாழ்வோர் உயர்ந்தோராகவும், ஓரப்பகுதியில் (புறம்பாடியில்) வாழ்வோர் முன்னையோரைவிடத் தாழ்ந்தோராகவும் நகர எல்லைக்கு வெளியே (புலைப்பாடியில்) வாழ்வோர் எல்லோரையும் விட தாழ்ந்தோராகவும் கருதப்பட்டனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது (2010:48)*

என்ற இ. முத்தையாவின் கருத்து அமைந்திருக்கிறது. செய்தொழிலே சாதியையும் வர்க்கத்தையும் உருவாக்கியிருக்க வேண்டும். அதனடிப்படையிலேயே அரசுருவாக்கம் அமைந்திருக்க வேண்டும் என்பதை இவ்வித வசிப்பிட அமைப்பு முறையை அடிப்படையாக வைத்து அறிந்து கொள்ள முடிகிறது. இத்தகைய

குடியிருப்பு அமைப்பு முறையை தொண்டை மண்டல வட்டாரக் கிராமங்களில் வெளிப்படையாகக் காணமுடிகின்றது.

தொண்டை மண்டல வட்டாரத்தில் ஆய்வாளரால் களஆய்வு மேற்கொள்ளப்பட்ட கிராமங்களில் பெரும்பாலானவை மேற்குறித்த இதே அமைப்பு முறையைக் கொண்டிருக்கின்றன. அதாவது குடியானவர்கள் ஊரின் மையப்பகுதியிலும் அவர்களுக்கு ஊழியம் செய்யும் குடியினர் ஊரின் ஓரப்பகுதியிலும் வசித்து வரும் நிலையைக் காணமுடிகின்றது. இதை அதிகாரத்தின் மையமாயிருப்பவர்கள் ஊரின் மையப்பகுதியிலும் அதிகாரமற்றவர்கள், அதிகார வர்க்கத்தினருக்கு ஊழியம் செய்பவர்கள் அவர்களுக்கு அண்டையிலும் வாழ்ந்ததற்கான தொடர்ச்சியாகக் கொள்ளலாம். அந்த வகையில் மண்ணாலான பொருள் உற்பத்தியைத் தொழிலாகக் கொண்டு ஊர்மக்களுக்கு ஊழியம் செய்த குயவர்களின் வசிப்பிடம் ஊரின் ஓரத்திலேயே அமைந்திருக்கின்றது. இதைப் போலவே பறையர், வண்ணார், அம்பட்டர் உள்ளிட்ட குடிகளின் வசிப்பிடமும் ஊரின் புறத்தே அமைந்திருக்கிறது. (சான்று : தேவதானம்பேட்டை கிராமம், செஞ்சி வட்டம், விழுப்புரம் மாவட்டம்).

மண், அசுத்தம், அழுக்கோடு தொடர்புடைய தொழிலைச் செய்யும் இவ்வூழியக் குடிகள் சமூக மதிப்பீட்டில் இறக்கங்கண்டவர்களாகவே இருக்கின்றனர். ஆனால் தொண்டை மண்டல வட்டார குயவர்கள் அவர்களின் இந்நிலையை அவ்வாறானதாகக் கொள்ளவில்லை. மாறாக அவர்களின் சாதி உயர்நிலையாக்கக் கருத்தினை முன்னிறுத்தி இந்நிலையை ஏற்க மறுக்கின்றனர். மேலும், தாங்கள் தங்கள் தொழில் செய்வதற்கு அதிகப் பரப்பளவுள்ள இடம் தேவை என்றும், 'சூளை'யிட்டால் பெரியளவில் புகை எழும்பும். அவை அண்டையில் உள்ளவர்களைப் பாதிக்கக் கூடும் என்றும் சுற்றுச்சூழல் குறித்த காரணங்களைக் குறிப்பிட்டு அதனாலேயே வசதி கருதி ஊர் ஓரத்தில் தங்களின் வசிப்பிடத்தை அமைத்துக் கொண்டதாகக் குறிப்பிடுகின்றனர் (களாய்வு; சண்முகம் (54): தெள்ளூர், 30.03.2009).

## தொழில்சார் பழமொழிகள்

'பழமொழி என்பது ஓர் அனுபவ மொழி'. உலக இயல்புகளை மதிப்பீடு செய்து சொல்லப்பட்ட மானுடத் தத்துவம். வாழ்ந்தவர்கள் வாழ்பவர்களுக்குச் சொல்லித்தந்த பட்டறிவுப் பாட்டு என்று இதன் தன்மையைப் பலவிதமாக உரைப்பது போலவே அதற்கான பெயரும் பலவிதமானதாக உள்ளது. இது குறித்துத் தே. லூர்து குறிப்பிடுகையில்,

> தமிழ் மொழியில் முதுசொல், முதுமொழி, மூத்தோர் வாக்கு, பழமொழி, பழஞ்சொல், சொலவடை, சொலவாந்தரம், ஓவக்கதை, ஒப்புத்தட்டம் போன்ற பல சொற்கள் பழமொழியைக் குறிக்க வழங்கி வருகின்றன (2007:87)

என்பார். இதை, 'நீண்ட அனுபவத்திலிருந்து பிறந்த குறுகிய வாக்கியங்களே

பழமொழிகள்' என்கிறார் செர்வாண்ட்டஸ் (Cervantes). 'பலரின் அறிவு ஒருவரின் குரல்' என்கிறார் ஜான் ரஸ்ஸல் (John Russell). பழமொழியை வரையறுக்க முடியாது என்று கூறிய ஆர்ச்சர் டேலர் (Archer Taylor) 'மக்களின் பேச்சு வழக்கில் கலந்து பழகி வரும் செறிவுமிக்க அறிவு வாக்கியமே பழமொழி' என்கிறார் (மேற்படி:89).

வாழ்வை ஊன்றிக் கவனித்து உணர்ந்த உண்மைகளின் துணுக்குகளே பழமொழிகள் என்கிறது ஆங்கிலப் பழமொழிகளின் ஆக்ஸ்போர்ட் அகராதி. இவற்றையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது இவ்வகையான வாழ்வியற் உற்றுநோக்கல் என்பது மனித வாழ்வின் எல்லா முனைகளிலும் நடந்தேறியிருக்கின்றது எனக்கொள்ளலாம். அந்த வகையில் தொழில்சார்ந்த அனுபவ மொழிகளை ஆராய்ந்தால் அத்தொழிலினடிப்படை குறித்த புரிதலை வெகுஎளிதில் அறிந்துகொள்ள இயலும். எனவே சமூகத்தில் மேல் கீழ்க் கட்டுமானங்களை உருவாக்கிய தொழிலை அடிப்படையாகக் கொண்ட பழமொழிகளால் அத்தொழிலின் இயல்பினை அறிந்துகொள்ள முனைவதை ஏற்புடைய முயற்சியாகக் கொள்ளலாம்.

தொழில் முறைகளை அடிப்படையாகக் கொண்டு உருவான பழமொழிகள் அனைத்தும் அத்தொழிலின் காலந்தோறுமான சமூக நிலைப்பாடுகளைப் புலப்படுத்துவனவாக அமைந்திருக்கின்றன. இவை அவ்வக்காலத்தில் அத்தொழிலைச் செய்தவர்களுக்கான சமூக மதிப்பீட்டினையும் அவர்களுக்குள்ளான மன உளவியலையும் உள்ளடக்கியதாகக் கொள்ளலாம். அந்த வகையில் மண்பாண்டத் தொழில் செய்யும் குயவர்களுடைய வழக்காற்று மொழிகளை அவ்வகைத்தானதாகக் கருத வாய்ப்பிருக்கின்றது. இத்தொழில் சார்ந்த பழமொழிகளை இரண்டு வகையாகப் பகுக்கலாம். முதலாவது குயவர்களின் வாய்மொழி, இரண்டாவது குயவர்களைப் பற்றிய பிற சமூகத்தாரின் வாய்மொழி. இதில் முதல் வகைத்தாவது குயவர்களின் தன்னுணர்வு வெளிப்பாட்டினை மையமாகக் கொண்டவை. இதில் அவர்களுடைய தொழில் நுணுக்கம், நெருக்கடி, மற்றும் அத்தொழிலால் அவர்களுக்குக் கிடைக்கும் சமூக மதிப்பீடு முதலானவற்றை அடையாளங்காணலாம். இதில் குயவர்களின் தொழில் நுணுக்கத்தினைக் குறிக்கும் விதமாக,

*அழுதுகொண்டே மண்ணு மெறிச்சா*
*சிரித்துக் கொண்டே சூளை பிரிக்கலாம்*
*(களாய்வு; மண்ணாங்கட்டி (66): தேவதானம்பேட்டை, 06.05.2009)*

என்ற பழமொழி குயவர்களின் வழக்கத்தில் இருந்து வருகின்றது. இது மண்பாண்ட உற்பத்திக்குத் தேவையான மூலப்பொருளைப் பதப்படுத்தி அதை பொருள் வனைவதற்கேற்பத் தயார்படுத்தும் தொழில்நுணுக்கத்தினை வலியுறுத்துவதாக அமைந்திருக்கின்றது. அதாவது, மண்பாண்டப்பொருள் வனைவதற்குத் தேவையான களிமண்ணை மிருதுவான தன்மையுடையதாக, இலகுவானதாக மாற்றிக் கொண்டால் பொருள் வனைவதற்கு ஏதுவாகவும், வனையப்படும் பொருள் திடமானதாகவும் இருக்கும். ஆதலால் களிமண்ணை நன்கு காயவைத்து அதை

நீண்ட நேரம் தண்ணீரில் ஊறவைத்து பிறகு அதை நன்றாக மிதிக்க வேண்டும். எந்த அளவிற்கு அதிகமாக மிதிபடுகிறதோ அந்தளவிற்கு வனையப்படும் பொருள் வழவழப்பானதாகவும் திடமானதாகவும் இருக்கும். அவ்வாறு செய்வதில் சுணக்கம் ஏற்படுமாயின் அதற்கேற்ப பொருளின் தரமும் குறைந்து திடமற்றதாக, வழவழப்பற்றதாக இருக்கும். ஆகவே களிமண்ணை மிருதுவாக மிதித்துப் பயன்படுத்த வேண்டியது அவசியமாகிறது. இத்தொழிலின் அடிப்படையாயிருக்கும் இந்நுணுக்கத்தினை மேற்கூறிய இப்பழமொழி குறிப்பிடுகிறது. இது மிகுந்த அக்கறையுடன் தொழில் செய்பவர்களிடையே புழக்கத்தில் இருக்கிறது. தொழில்மீது இருக்கும் இவர்களுக்கான இந்த அக்கறை சீரானதாக இருந்திருக்கவில்லை. சமூக மதிப்பீட்டில் இவர்கள் இறக்கங்கண்ட போதெல்லாம் இவர்கள் செய்யும் தொழில் மீது இவர்களுக்கு இருக்கும் அக்கறையும் குறைந்து போயிருக்கின்றது. இதை அவர்களுடைய விரக்தியான மனநிலையில் உருவான வழக்காற்றிலிருந்து அறிந்துகொள்ள முடிகின்றது. இதை,

*மலை போல மண்ணு மெறிச்சாலும்*
*குண்டுமணி பொன்னு வாங்க முடியாது*

*(டி. லோகநாதன்; பி.இ.ப.80)*

என்ற வழக்காற்று மொழிகள் புலப்படுத்துகின்றன. மேலும் இதையே வந்தவாசி வட்டாரத்தில்,

*தொம்பைக் கூண்டு அளவு மண்ணு மெறிச்சாலும்*
*குண்டுமணி பொன்னு வாங்க முடியாது*

*(மணி; பி.இ.4:53)*

என்பதாகச் சொல்லும் வழக்கம் இருக்கின்றது. இவை, உழைப்பிற்கேற்ற ஊதியமும், சமூகத்தில் அதற்கான மதிப்பும் கிடைக்காத நிலையினைச் சுட்டிக்காட்டுவதாய் இருக்கின்றன.

மண்பாண்ட உற்பத்தியில் ஈடுபடும் குயவர்களுக்கு இதுவே முதன்மைத் தொழிலாக இருக்கின்றது. அவர்கள் இதையே வாழ்வாதாரமாகக் கொண்டிருப்பதால் பொதுமக்களின் தேவையை அறிந்து அதற்கேற்றாற்போல் பொருள் உற்பத்தி செய்து தருவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். அவ்வாறு செய்வதன் மூலம் தங்களைப் பொருளாதார நெருக்கடியிலிருந்து விடுவித்துக் கொள்ள முயல்கின்றனர். ஆகையால் மண்பாண்டப்பொருள் உற்பத்தி செய்வதற்கு ஏதுவான காலத்தில் மிகுதியான பொருள் உற்பத்தி செய்து அதை மழைக்காலத்தில் விற்பனை செய்து வாழ்க்கை நடத்துவதாக காஞ்சிபுர வட்டாரக் குயவர்கள் குறிப்பிடுகின்றனர். தொழிலோடு தொடர்புடைய இவர்களின் இந்த வாழ்க்கை நிலையை,

*"ஆறுமாசம் விடாம வேலை செய்யணும்*
*ஆறுமாசம் உட்கார்ந்து சாப்பிடணும்*

*(டி. லோகநாதன்; பி.இ.ப.80)*

*ஆறுமாசம் மிச்ச சோறு*
*ஆறுமாசம் பிச்ச சோறு*

*(நீலகண்ட உடையார்; பி.இ.4:72)*

என்ற இவர்களின் வாய்மொழி வழக்காற்றுச் சொற்களின் வழி அறிந்து கொள்ள இயலும். காலச் சூழல் அறிந்து அதற்கேற்றாற்போல துரித கதியில் தொழில் செய்வதில் ஈடுபடுவதைக் குயவர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தாலும், அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களின் தேவை என்பது எக்காலத்திற்கும் உரியது. ஆதலால் அதை மக்கள் எக்காலத்தும் நுகர்வர். ஆதலால் இத்தொழிலை வாழ்வின் மூலதாராமாகக் கொண்ட குயவர்கள் தாங்கள் செய்யும் இத்தொழிலின் மீது அபார நம்பிக்கை உடையவர்களாக இருக்கின்றனர். இதற்கு,

*கோயில் பட்டினி இருந்தாலும் இருக்கும்*
*குசவன் பட்டினி இருக்க மாட்டான்*

*(டி. லோகநாதன்; பி.இ.ப.80)*

என்ற பழமொழியைச் சிறந்த உதாரணமாகக் கொள்ளலாம்.

பொருளறிவை முதன்மைப்படுத்தாத காலகட்டத்தில் பொருளுக்கான மதிப்பும், அப்பொருளை உற்பத்தி செய்பவர்களுக்கான மதிப்பும் சிறப்பானதாக இருந்திருக்கவில்லை. ஆதலால் அவ்விதப் பொருள் உற்பத்திக் குறித்த குறிப்புகள் நேரடியாகப் பதிவு செய்யப்பட்டிருக்கவில்லை. மாறாகத் தற்காலம் வரையிருக்கும் அத்தொழிலுக்கான மரபு நீட்சியைக் கொண்டும், அத்தொழில் குறித்துப் பிற வகையில் எழுந்த வாய்மொழி வழக்காறுகளைக் கொண்டும் இதை உய்த்துணரலாம். சான்றாக,

*கொழுத்து கொசவன்கிட்ட போனாள் அவன்*
*இழுத்து சூளை மேல போட்டான்*

*(களாய்வு; பூபாலன் (78): தெள்ளூர், 29.03.2009)*

என்ற வழக்காற்று மொழியைக் கொள்ளலாம். இதன் நேரடிப் பொருள் பெண்ணைப் பழிப்பதற்காகக் குறிக்கப்பட்டதுபோல் இருந்தாலும், இப்பழமொழிக்கான பின்னணிக் கதை மண்பாண்டத் தொழில் நுணுக்கத்தினைக் குறிப்பிடுவதாயிருக்கின்றது (இதற்கான கதையைப் பின்வரும் '*கதை-3*' தலைப்பில் *காண்க*). இதைப் போலவே,

*கொசப்புத்தி மடப்புத்தி*

*(களாய்வு; அரிபரந்தாமன் (65): தேவதானம்பேட்டை, 07.05.2009)*

என்ற பழமொழியும் மேம்போக்கான பார்வையில் ஒரு பொருளையும் உள்ளார்ந்து ஒரு பொருளையும் கொண்டிருக்கின்றது. வழக்கிலிருக்கும் இப்பழமொழி "மண் தொழில் செய்யும் குயவன் அறிவற்றவன்" என்ற பொருள்படும்படியாகப் பயன்படுத்தப்படுகிறது. இதை "கூட்டி கூட்டி மண்ணு பெசயடா கூறுகெட்ட கொசவா" என்ற பழமொழியோடு ஒத்தாகக் குறிக்கும் வழக்கம் தற்போது

நடைமுறையிலிருக்கின்றது. ஆனால் மேலே குறிப்பிட்ட "கொசபுத்தி மடபுத்தி" என்ற பழமொழிக்கான நேரடிப் பொருள் இதுவாக வழக்கில் இருப்பினும் அதன் மறைபொருளை இதற்கு நேர்மாறானதாகக் கொள்ளலாம். அதாவது "மடபுத்தி என்பது மடையன்" என்ற சொல்லோடு தொடர்புடையதாகக் கொள்ளலாம். மடையன் என்ற சொல் நாளடைவில், 'முட்டாள்' என்று பொருள்படும் சொல்லாக மாற்றமடைந்திருக்கின்றது. ஆனால் 'மடை' என்ற சொல் சமையல் கலையோடு தொடர்புடைய ஒரு சொல்லாகும். சமையல் கலையில் தேர்ந்த கலைஞன் 'மடையன்' எனச் சுட்டப்பட்டிருக்கின்றான். மடை, மடைப்பள்ளி, மடம் என்ற சொல்லுக்கு உணவு சமைக்கும் கூடம் என்று பொருள் கொள்ளப்பட்டிருக்கின்றது. அதில் பணிபுரியும் கலைஞர்களை 'அடுமடையன்' என்று குறிக்கும் வழக்கமும் இருந்திருக்கின்றது. ஆக, 'மடையன்' என்ற சொல் 'சமையல் கலை' அறிவு கொண்டவர்களைக் குறிக்கும் சொல்லாக அதாவது அறிவு குறியீடாகக் குறிக்கப்பட்டிருக்கின்றது. சமையல் செய்தவற்குப் பயன்படும் கலன்கள் மடைக்கலம், அடுகலம் எனப்பட்டிருக்கின்றன. இவ்விதமான இக்கலன்களை அதன் பயன்பாடு கருதி விதவிதமாகச் செய்தளிக்கும் அறிவினை உடையவர்களாகக் குயவர்கள் இருந்ததனால் 'கொசபுத்தி மடபுத்தி' எனப்பட்டிருக்கலாம்.

நாளடைவில் 'மடையன்' என்ற சொல்லுக்கான பொருள் 'அறிவற்றவன்' என மாற்றமடைந்திருப்பதும் தனியே ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய ஒன்றாகும். இருப்பினும் இக்கலையறிவு சமூகத்தில் பெருமதிப்புப் பெறாததே இதற்குக் காரணம் எனக் கொள்ளலாம். இதைப் போலவே மண்பாண்ட உற்பத்தியறிவு பெரிய அளவில் மதிக்கப் பெறாததால் அத்தொழில் செய்யும் குயவர்களும் அவ்வாறே மதிப்பிடப்பட்டிருக்கலாம்.

மண்பாண்டத் தொழில்முறையை மையமாகக் கொண்ட சில பழமொழிகளும் தற்போது புழக்கத்திலிருக்கின்றன. இவை நேரடியாக பொருள்படும்படியாகச் சொல்லப்படவில்லை. ஆதலால் இவற்றை ஆய்வு நோக்கில் அணுக வேண்டிய அவசியம் இருக்கிறது. அதாவது,

*அறியாத வயசுல என்னை அடியடினு அடிச்ச*
*ஆம்பளையா இருந்தா என்னை*
*இப்ப அடியேன் பார்ப்போம் என்றதாம் பானை*

*(பூங்காவனம்; பி.இ.4:102)*

என்ற பழமொழி நகைச்சுவை தொனியுடன் மண்பாண்டப் பொருள் பேசுவதாக அமைந்திருக்கிறது. மண்பாண்ட உற்பத்தியின் ஒரு பகுதியான 'தட்டுதல்' என்ற தொழில் முறையை உணர்த்துகிறது. அதாவது குயவர்கள் மண்பாண்ட உற்பத்தியின் தொடக்க நிலையில் சக்கரத்தில் வனைந்த பச்சை உருப்படிகளைத் தட்டுக்கல், தட்டுக்கட்டைக் கொண்டு தட்டி ஒழுங்குபடுத்துவர். அவ்வாறு அழுத்தமாகத் தட்டத்தட்ட மெல்லிய கனத்துடன் கூடிய திடமான பாண்டம் கிடைக்கும். அதனால் வேகமாகத் தட்டி ஒழுங்குபடுத்துவர். அப்படி

எவ்வளவுதான் தட்டினாலும் நெகிழ்வுத்தன்மையுடைய ஈரபாண்டம் உடையாது. ஆனால் சூளையிட்டு திடப்படுத்தப்பட்டதற்குப் பின்பு அதைத் தட்டினால் உடைந்துவிடும். மண்பாண்டப் பொருளின் இருவேறுபட்ட நிலைத்தன்மையை புலப்படுத்தும்படியாக இப்பழமொழி அமைந்திருக்கின்றது. இதையொத்த

*குயவரில் தாதனில்லை*
*ஆயரில் ஆண்டியில்லை*

*(கி.வ. ஜகந்நாதன்; 1989:383)*

என்ற பழமொழியும் வழக்கிலிருக்கின்றது. 'தாதன்' என்பவர் 'தப்பு' என்ற இசைக்கருவியை வாழ்வியற் சடங்கில் வாசிப்பவர். இவர் வாசிக்கும் தப்புக்கருவி 'தப்பு . . . தப்பு' என்ற ஒலியை வெளிப்படுத்தும். ஆதலாலேயே அப்பெயர் பெற்றிருக்கக் கூடும். அதைப்போலவே மண்பாண்ட உற்பத்தியில் சக்கரத்தில் வனைந்த பொருளைத் 'தட்டி ஒழுங்குபடுத்தும்போதும்' 'தப். . . தப்' என்ற ஒலி வெளிப்படும். ஆகையால் மண்பாண்டத் தொழில் செய்யும் அனைவரும் 'தப் . . . தப் . . .' ஒலியை எழுப்பும் தாதர்களே என்பதைக் குறிக்கும் விதமாக மேற்குறிப்பிட்ட பழமொழியின் முதலடி அமைந்திருக்கிறது. அதேபோல் 'ஆண்டி' யாசிப்பதற்கான குரலையும் ஓசையையும் கொண்டவன். அதைப் போலவே ஆடு, மாடு மேய்த்திடும் ஆயர்களும் ஆடு, மாடுகளிடம் யாசிப்பதற்கான குரலிலேயே பேசுவர். ஆதலால் ஆயர்கள் அனைவருமே ஆண்டியை ஒத்தவர்கள். எனவே அவர்களுக்குள் 'ஆண்டிக்கான' யாசகத் தொனியிருப்பதால் அவர்கள் அனைவரும் ஆண்டியை ஒத்தவர்கள் என்று குறிப்பிடும்படியாக இப்பழமொழியின் இரண்டாவது அடி அமைந்திருக்கின்றது.

'பானை' என்பது பயன்பாட்டு நோக்கில் உருவாக்கப்பட்ட பொருள். அவ்வாறான அதைப் பயன்பாட்டிற்காக நுகர்வது இயல்பு. அதேபோல் பெண் என்பவள் மறுஉற்பத்திக்கான வளமை. ஆதலால் அவளை வாழ்க்கைத் துணையாகக் கொள்ள விழைவது இயல்பு. இவ்விரண்டில் முதலாவது நாளை நகர்த்துவதற்கானது அதாவது மனிதன் தனக்கான அடிப்படை தேவையை நிறைவு செய்து வாழ்வதற்கு அவசியமானது. மற்றொன்று தலைமுறையை நகர்த்துவதற்கானது எனக் கொள்ளலாம். ஆக இவ்விரண்டும் மனித வாழ்வியலுக்கு அடிப்படையானதாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. குடும்ப அமைப்பின் தொடக்கமாயிருக்கும் திருமணத்தில் தலைமுறையை நகர்த்த பெண்ணையும், அவளோடு வாழ்க்கை நடத்தத் தேவையான பண்ட பாத்திரங்களையும் தரும் வழக்கம் இருந்திருக்கிறது. அது 'பின்னாளில் சடங்கு சம்பிரதாயத்திற்குள் அகப்பட்டு 'சாலுகரகம்' என்று சடங்குப்பொருளாக மாற்றப்பட்டிருக்கலாம். பின்னாளில் சடங்காக மாற்றப்பட்ட இவ்விரு முக்கியத்துவத்தையும் பிரதிபலிப்பதாக,

*குயவன் வீட்டில் பானை இருந்தால் வரமாட்டார்களா?*
*குடியானவன் வீட்டில் பெண் இருந்தால் கேட்க மாட்டார்களா?*

*(கெம்பு உடையார்; பி.இ.4:38)*

என்ற பழமொழி திகழ்கின்றது. இதில் மண்பாண்ட உற்பத்தி என்பது பரிவர்த்தனையை நோக்கமாகக் கொண்டு உருவாக்கப்பட்டிருக்கிறது. அதுவே அவர்களுக்கான வாழ்வாதாரமானதால் அதற்கான விலையை அவர்கள் கேட்டுப் பெற வேண்டிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. இதை,

*குசத்தி நாக்கை அறுத்தாலும் குண்டு சட்டி*
*ரெண்டு காசுதான் என்பாள்*

*குசத்தி நாக்கை குட்டம் போட்டாலும்*
*குடம் மூன்று காசுதான் என்பாள்*

*(கி.வா. ஜகந்நாதன்; 1989:383)*

என்ற பழமொழிகள் உணர்த்துகின்றன. மண்பாண்ட உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் குயவர்களில் ஆண்கள் முதன்மையான வேலையைச் செய்கிறார்கள் (முன்னது இயலில் குறிக்கப்பட்டிருக்கிறது). அதேபோல் இத்தொழிலில் பெண்களும் சில வேலைகளைச் செய்கின்றனர். அதில் ஒன்று மண்பாண்டங்களைத் தெருத்தெருவாக எடுத்துச் சென்று விற்பனை செய்து வருதல். ஆகையால், விற்பனையின்போது விடாப்பிடியாக விலைகூறும் குயத்தியைப் பழிக்கும் முகமாக இப்பழமொழி கூறப்பட்டிருக்க வேண்டும்.

மேலும் இதிலிருந்து மண்பாண்டங்களுக்கு மக்கள் பெருமதிப்பு தராத நிலையையும் அறிந்துகொள்ள முடிகிறது. அதாவது, மண்பாண்டத் தொழில் மூலதனம் அற்றது என்ற மனோபாவம் மக்களிடையே ஊறிக்கிடக்கின்றது. மண்பாண்ட உற்பத்திக்குத் தேவையான மூலப்பொருள்கள் அனைத்தும் விலை கொடுத்து வாங்க வேண்டியதில்லை. அவை அனைத்தும் இயல்பான இயற்கை விளைப்பொருள்கள். ஆதலால் இதற்கு உடலுழைப்பு மட்டுமே முக்கிய மூலதனமாகிறது. எனவே பொருள் மூலதனமற்ற இத்தொழில் வழி உற்பத்தி செய்யப்படுகின்ற மண்பாண்டப் பொருள்களைக் குறைவாக மதிப்பிட்டுக் குறைவான விலைக்கு வாங்க நினைக்கும் மக்களின் மனநிலையையும் பிரதிபலிப்பதாக இப்பழமொழி அமைந்திருக்கின்றது. இம்மண்பாண்டப் பொருள்கள் எக்காலத்தும் தேவைப்படுவதற்கு இதன் நிலைத்தன்மையின்மையைக் காரணமாகக் கொள்ளலாம். ஆதலால்தான் இப்பொருள் சுழற்சி முறையில் மக்களுக்கான தேவையை ஏற்படுத்துகிறது. இதன் உற்பத்தியும் தொடர்ச்சியானதாய் இருக்கிறது என்பதால் இதற்கான மதிப்பும் மற்ற உலோகப் பாண்டங்களுக்கு இணையானதாக இல்லை. இதை,

*குயவனுக்கு ஆறுமாதம், தடிகாரனுக்கு அரை நாழிகை*

*(கி.வா. ஜகந்நாதன்; 1989:383)*

என்ற பழமொழி குறிப்பிடுகிறது. இதை விழுப்புரம் வட்டாரத்தினர்,

*குயவனுக்கு பலநாள் வேலை*
*தடிகாரனுக்கு ஒருநாள் வேலை*

*(களாய்வு; அரிபரந்தாமன் (65): தேவதானம்பேட்டை, 07.05.2009)*

என்று குறிப்பிடுகின்றனர். மேலும்,

*மாமியார் உடைச்சா மண்குடம்*
*மருமகள் உடைச்சா பொன்குடம்*
*(களாய்வு; மணிமேகலை (61): தேவதானம்பேட்டை, 07.05.2009)*

என்பதும் இதனை ஒத்த வழக்காற்று மொழியே ஆகும். இவ்வாறு இத்தொழிலைக் கடமையாக, ஊழியமாக, வாழ்வதாரமாக மேற்கொள்ளும் குயவர்களால் உற்பத்தி செய்யப்பட்ட இம்மண்பாண்டப் பொருள்கள் தக்க தருணத்தில் அவர்களுக்குப் பயன்படாத நிலையும் ஏற்படும் என்பதை,

*வண்ணானுக்கு துணி கருப்பு*
*அம்பட்டனுக்கு முடி கருப்பு*
*குயவனுக்கு பானை கருப்பு*

*(பூங்காவனம்; பி.இ.4:38)*

என்ற பழமொழிவழி அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும் இதில் தன்னலம் கருதாது பிறருக்காக ஊழியம் செய்ய கடமைப்பட்டவர்களாகக் குயவர்கள் இருந்திருக்கின்றனர் என்ற செய்தியும் அடங்கியிருப்பதாகக் கொள்ளலாம். இது குறித்த கதையொன்றும் வழக்கில் இருப்பது குறிப்பிடத்தக்கது. இது தவிர்த்து இதுபோலவே சில பழமொழிகள் முன்னமே ஆய்ந்தறியப்பட்டிருக்கின்றன. அவை குறித்தப் பதிவு பின்வருமாறு:

திராவிடர்கள் அனைவரும் ஏதோ ஒரு காலத்தில் சாதி, மத சாயங்களைப் பூசிக்கொண்டவர்கள் என்றால் அது மிகையாகாது. அவர்கள் தன்னியல்பின் மீதான மதிப்புதனைப் பொருட்படுத்தாததே இதற்குக் காரணம் எனலாம். இவ்வகைப்பட்ட சூழலில் வாழ்ந்த ஊழியக் குடிகளே குயவர்கள். இவர்கள் மண்ணாலான பொருள் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகக் கொண்டவர்கள். இதுவே அவர்களுக்கான பிழைப்பு. இவர்களிடம் "இது என் குலாச்சாரம். இது என் வயிற்றாச்சாரம்" என்ற பழமொழி வழக்கிலிருக்கின்றது. இது குறித்து ஆய்வு செய்த ஐரோப்பிய அறிஞர் ஜெ. ஜான்சன் பின்வருமாறு எழுதுகின்றார்.

> குசவர்கள் வைணவர்கள் அல்லர். சீரங்கத்தில் உள்ள குயவர்களை வைணவப் பிராமணர்கள் நெற்றியில் வைணவச் சமயச் சின்னம் தரித்துக் கொள்ளும்படி வற்புறுத்தினர். இல்லையானால் அவர்களிடமிருந்து அந்தப் பிராமணர்கள் கோயிலுக்காகப் பானைகள் வாங்க மாட்டார்கள். ஒரு புத்திசாலி குயவன் இந்த இக்கட்டிலிருந்து தப்பிக்க நெற்றியில் விபூதி இட்டவனாக வயிற்றில் பெரிய நாமம் போட்டவனாக காட்சி தந்தான். வயிற்றுப் பிழைப்பிற்காக வயிற்றில் நாமம் போட்டுக் கொண்ட குயவரை ஒரு பிராமணன் கண்டித்தபோது "நெற்றியில் விபூதி எனது குலாச்சாரம், வயிற்றில் போட்டிருக்கும் நாமம் எனது வயிற்றுப் பிழைப்பிற்காகப் போட்டுக் கொண்டது. இது என் வயிற்றாச்சாரம் என்பதை மேற்கூறிய பழமொழியாக அக்குயவர் கூறினார் **(1993:242)**

இதை எட்கர் தர்ஸ்டன் தன்னுடைய தென்னிந்திய குலங்களும் குடிகளும் நூலில் பதிவுசெய்கிறார். மண்பாண்ட உற்பத்தி என்பது மிகவும் கவனமாகச் செய்யக்கூடிய தொழில். அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் பொருள்களை அதன் மதிப்பறியாது பொறுப்பற்று உடைப்பவர்களைக் குயவர்கள் வன்மையாக ஏசியிருக்கின்றனர். இதைப் பிரதிபலிப்பதாக,

*சட்டியை உடைக்கிற நாய்க்கு அதனை*
*அடுக்குவது எவ்வளவு கடினம் என்று தெரியுமா?*
*(களாய்வு; சரோஜா (54): பாடி, 06.06.2009)*

என்ற சொலவடை அமைந்திருக்கின்றது. இதில் அவர்கள் ஊழியம் செய்யப் பணிக்கப்பட்டிருத்தலுக்கான எரிச்சலும் மேலோங்கி நிற்பது தெளிவாகிறது.

## வாய்மொழி வழக்காற்றுக் கதைகள்

கதை என்ற சொல் 'கதைத்தல்' என்ற சொல்லோடு தொடர்புடையது. கதைத்தல் என்ற சொல்லுக்கு 'சொல்லுதல்' என்பது பொருள். ஆதிமனிதன் காட்டில் வேட்டையாடிச் சென்று திரும்பியவுடன் தன் அனுபவங்களை மற்றவர்களுக்குச் சொன்னதிலேயே கதையின் தொடக்கத்தைக் காணலாம். ஆகக் கதையென்பது ஓர் அனுபவப் பகிர்வு. இது நாளடைவில் புனைவாக உருவாகிப் பின்பு நிலைபெற்றது எனலாம். என்றாலும் இதற்கான அடிப்படைக் கரு சமூக யதார்த்தத்திலிருந்தே பெறப்பட்டிருக்கின்றது. ஆகவேதான் கதைகளைத் தொழில், நீதி, பாலியல், மந்திரம், புராணம் என வகைமைப்படுத்த இயலுகின்றது. இவ்வகைமைப்படுத்தல் என்பது இயல்பு மீறிய முன்திட்டமிடலைக் கொண்டு எழுந்த கதைகளால் உருவானதாகும். பின்னாளில் இந்நிலை பொழுது போக்கிற்கானதாக அமைந்தாலும் இவ்விதத் தாக்கத்திற்கு முன்னான காலகட்டத்தில் உண்மையான அனுபவ நிகழ்வுகளையே கதையாகச் சொல்லியிருக்க வேண்டும். இதைத் தொழில் சார்ந்த கதைகளில் பொதிந்திருக்கும் அனுபவ அறிவினைக் கொண்டு அறியலாம்.

### *தொழில் சார்ந்த கதைகள்*

கதைகள் மக்கள் வாழ்ந்த வரலாற்றையும் வாழும் வாழ்க்கையையும் புரிந்து கொள்ள துணைபுரியும் அகராதிகள். ஆதலால் அதனைக் கொண்டு ஒட்டுமொத்த மனித நடத்தைகளையும் அறிந்து கொள்ளலாம். இதன் முதற்படியாக, மனித தேவைகளையும் குணாதிசயங்களையும் மையமிட்டுப் பிரிக்கப்பட்ட கதை வகைமைகளைக் கொள்ளலாம். அதில் ஒரு குறிப்பிட்ட தொழிலைச் செய்யக் கூடியவர்களின் தொழில், பழக்கவழக்கம், பண்புநலன்களை மையமிட்டு வகைப்படுத்தப்பட்ட தொழில்சார்ந்த கதைகளே நமக்குத் தேவையான மிக முக்கியமான தரவுகளாகும். அதனடிப்படையில் தொண்டை மண்டல வட்டாரக் களஆய்வு பகுதியில் ஆய்வாளரால் சேகரிக்கப்பட்ட கதைகள் மட்டும் இங்குத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

***கதை 1***

ஒரு ஊர்ல ஒரு கொசவன் இருந்தான். அவன் நிலத்துல விவசாயம் செய்ஞ்சி சாப்பிடனுன்னு ஆசைப்பட்டான். அதுக்கான பலனை தெரிஞ்சிக்க வேண்டி அந்த ஊர்ல இருக்குற புரோகிதன்கிட்ட போனான். புரோகிதன் கிட்டப்போயி 'சாமி, சாமி நான் நிலத்துல விவசாயம் செய்ஞ்சி சாப்பிடப்போறேன். அதுக்கு பலாபலன் பார்த்துச் சொல்லுங்கள்' அப்படின்னு கேட்டான். புரோகிதனும் பொஸ்தகத்தை பெரட்டிப் பார்த்துட்டு, 'நீ விவசாயம் செய்யலாம் தப்பில்லை; நல்லா அமோகமா விளையும்; ஆனால் அது உனக்கு புண்ணியப்படாது' அப்படின்னு சொல்லிட்டான். கொசவன் எதுவும் பேசாம அன்னிக்கு வீடு திரும்பிட்டான்.

கொஞ்ச நாள் போச்சி. புது மழை பெய்ஞ்சிச்சி. ஆச அடங்காத கொசவன் அப்பபோயி அதே புரோகிதங்கிட்ட பலன் கேட்டான். அதுக்கும் அதே பதிலைச் சொன்னான் புரோகிதன். இதயெல்லாம் கண்டு கவலைப்படாத கொசவன் நிலத்துல ஏர் ஓட்டி எள்ளு வெதச்சான். எள்ளு செடியும் நல்லா தமதமன்னு தழைச்சி வளர்ந்துச்சி. அப்பவும் போயி புரோகிதன் கிட்ட பலன் கேட்டான். 'நல்லா அமோகமா வெளையும். ஆனால் அது உனக்குப் புண்ணியப்படாது' அப்படின்னு அதே பதிலைச் சொன்னான் அந்தப் புரோகிதன். திரும்பி வந்துட்டான் அந்த கொசவன்.

எள்ளு வெளஞ்சி மகசூல் அமோகமா வந்துச்சி. அதையெல்லா அடிச்சி சீர்செய்து வீட்ல கொண்டு வந்து வச்சிட்டுத் திரும்பவும் அதே புரோகிதன்கிட்ட போயி பலன் கேட்டான் கொசவன். அப்பவும் அதே பதிலைச் சொன்னான் அந்தப் புரோகிதன். கொசவனுக்கு ஒண்ணும் புரியல. 'என்னடா இது, நல்ல விதமா இவ்ளோ வேலையை நாம செஞ்சி முடிச்சிட்டோம். இப்பவும் இந்த புரோகிதன் இப்படி சொல்றானே' அப்படின்னு நெனச்சி மனசுக்குள்ள பொருமினான்.

கொஞ்சநாள் கழிஞ்சது. கொசவன் தன்னிடமிருந்த எல்லா எள்ளையும் கொண்டுபோயி வாணியங்கிட்டக் கொடுத்து எண்ணெய் ஆடினான். பிறகு வாணியனுக்கு கொடுக்க வேண்டிய கூலியைக் குடுத்துட்டு இருக்குற எல்லா எண்ணையையும் ஒரு பெரிய எண்ணைய் குடத்துல ஊத்தி அதை தன்னோட பொண்டாட்டித் தலையிலத் தூக்கிவச்சிட்டு, புண்ணாக்க மூட்ட கட்டி தன் தலையிலே தூக்கிக் கொண்டு ரெண்டுபேரும் வீட்டுக்கு வந்தாங்க. ரெண்டு பேரு தலையிலையும் சுமை. சுமையை தூக்கிக்கிட்டு முன்னாடி வந்த கொசத்தி நேரே களிமண் பெசயற பட்டறைக்கு கொண்டுபோயி களிமண் கொண்டு வந்து கொட்ற பழக்கதோசத்துல 'எண்ணெய் குடத்தையும்' 'தொப்' என்று போட்டுடைத்தாள். உடனே கொசவன் தலையில கையவச்சிகினு உட்கார்ந்துட்டான். புரோகிதன் சொன்ன வார்த்தை அவனுக்கு அப்பதான் புரிஞ்சது. அதனாலதான் 'மதிகெட்ட கொசவா' அப்படின்னு சொல்றது *(களாய்வு; மண்ணாங்கட்டி (66): தேவதானம்பேட்டை, 06.05.2009).*

*கதை 2*

*ஆனானப்பட்ட வெள்ளைக்காரனே*
*இந்தத் தொழில் செய்ய முடியாமல் விட்டுட்டான்*

*(ஸ்ரீரங்கம்; பி.இ.4:46)*

என்ற சொலவடை ஆற்காடு மற்றும் வந்தவாசி வட்டாரக் குயவர்களிடம் வழக்கிலிருக்கின்றது. இது ஆங்கிலேயர்களின் ஆளுமையின்மீதான நம் நாட்டவரின் வியப்பு. இந்நாட்டவரின்மீது ஆட்சியதிகாரம் செலுத்திய ஆங்கிலேயர்கள் இந்நாட்டின் அனைத்து நடைமுறை வழக்கங்களையும் உள்வாங்கி அதை நவீனப்படுத்தினர். அவ்வாறு செய்தபோது சமூக அசைவியக்கத்திற்கான பொருள் உற்பத்தி செய்யும் தொழில்கள்மீது அவர்கள் அதிக நாட்டம் காட்டியவர்களாக இருந்திருக்கின்றனர். ஏனெனில் தங்கள் அரசுக்குத் தேவையான பொருள் வருவாயினை ஈட்டுவதற்கான வரிவகைகளில் 'தொழில்வரி' மிக முக்கியமானது. அந்தவகையில் எல்லா வகையான உற்பத்தித் தொழிலின் மீதும் ஆங்கிலேயர் வரி விதித்திருக்கின்றனர். ஆனால் மண்பாண்ட உற்பத்தித் தொழில்மீது வரி விதிக்கப்படவில்லை. அவ்வாறு வரி விதிக்கப்படாததற்கான காரணத்தைக் கதையாகக் கொண்டதே மேற்கூறிய 'சொலவடை'. அவ்வட்டார குயவர்கள் இது குறித்த கதையைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றனர்.

அதாவது, 'வெள்ளைக்காரன் நம்ம நாட்டை புடிக்கறதுக்கு முன்னாடியெல்லாம் நாங்க வரி கட்டியிருக்கின்றோம். ஆனால் வெள்ளைக்காரன் ஆட்சி வந்தபிறகு நாங்க எங்க தொழிலுக்கு வரி கட்டினதில்லை. ஏன்னா வெள்ளைக்காரன் ஆட்சிக்குவந்து புதுசா தொழில்வரி போடுறப்போ இந்த மண்பாண்டத் தொழிலோட பலாபலனைக் கண்ட பிறகு வரிவிதிக்கலாம்னு சொல்லிட்டு வெள்ளைக்கார தொரை உடையார் வீட்டுக்குப் போனாராம். உடையாருங்களும் இந்தத் தொழில்ல லாபம் ஏதும் கிடைக்கறது இல்ல. பெரியளவுல நஷ்டந்தான் ஏற்படுது. ஊர்மக்களுக்காக இந்தத் தொழிலை நாங்க செய்திட்ருக்கோம். அப்படி இப்படின்னு ஏதேதோ சொன்னாங்களாம். இதை நம்பாத வெள்ளைக்கார தொரை மண்பாண்டத் தொழிலை நாளொரு மேனியா நோட்டமிட்டுட்டு இருந்தாராம்.

உடையாருங்க அவங்க பாட்டுக்கு அவங்க தொழிலை செய்துட்டிருந்தாங்களாம். ஒரு நாள் மண்பாண்ட சூளை வச்சாங்களாம். அப்படி அவங்க சூளை வக்கிற அன்னிக்கு தொரை நேருல வந்து கண்காணிக்க ஆரம்பிச்சுட்டாராம். நம்மாளும் சூளையை கடகடன்னு அடுக்கினான். கொளுத்தினான். பிறகு பிரிச்சிப் பார்த்தா சூளையில முக்கால்வாசி பானை, சட்டிங்க உடைஞ்சி போயிருந்துச்சாம். வெள்ளைக்கார தொரை அத பார்த்துட்டு இந்தத் தொழில்ல லாபம் ஏதும் கிடைக்காது. ஆகவே இந்தத் தொழிலுக்கு வரி விதிக்கத் தேவையில்லன்னு மேலிடத்துக்கு எழுதிட்டானாம். அன்னையில இருந்து இன்னைக்கு வரைக்கும் இந்தத் தொழிலுக்கு வரி கெடயாது.

இப்படி நடந்ததுல பெரிய சூசகம் இருக்குது. அது அந்த உடையாருக்கு மட்டுந்தான் தெரியும். அது என்னன்னா மண்பாண்டப் பொருள்களை செய்யிறதுக்கோ சூளைபோட்டு எடுக்கறதுக்கோ பக்குவம் வேணும். அந்தப் பக்குவமெல்லாம் சொல்லித் தெரியறதில்லை. தொழில் செய்யறதால வர்ற அனுபவப் பாடம். அப்படி பக்குவப்படுத்தறதுல ஒரு சின்னப் பிழை ஏற்பட்டாலும் பொருள் பொழைக்காது. அதனால பொருளைச் சுட்டு எடுக்கற வரைக்கும் கண்ணுங்கருத்துமா இருக்கணும். அப்படியிருக்கும்போது, அந்த சூளையைத் தயார் பண்ணும்போது ஒரு சின்ன பக்குவப்பாட்டை வேணும்னே செய்யாம விட்டுட்டாரு அந்த உடையாரு. அது என்னன்னா சூளை வக்கிற பொருள்கள வெயில்ல காயவச்சி மிதமான சூடுஏறின பிறகுதான் அத சூளை வக்கணும். அப்படியில்லாம ஈரந்தட்டியிருக்குற மண்பாண்டத்தை சூளையில அடுக்கினா பொருள் பொழைக்காம கருப்பா பொகையடிச்சி ஒடைஞ்சிடும். இதைத்தான் அந்த சமயத்துல அந்த உடையாரு செய்ஞ்சார். அதாவது பொருள்கள காயவச்சி மிதமான சூடேத்தாம அப்படியே சூளையில அடுக்கிட்டாரு. ஆகவேதான் அந்த சூளை அப்படியாயிடிச்சி. இது இந்தத் தொழிலுக்கான நுணுக்கம். இதெல்லாம் படிச்சி வர்றதில்ல. அனுபவத்தால வர்றது. அதனாலதான் வெள்ளைக்காரனால அதைக் கண்டுபிடிக்க முடியல. அவனும் போயிட்டான்.' (ஸ்ரீரங்கம்; பி.இ.*4:46*)

***கதை 3***

*கொழுத்து கொசவங்கிட்ட போனா*
*அவன் இழுத்து சூளைமேல போட்டானாம்*

என்ற சொலவடைக்குப் பின்புலக்கதையொன்று தொண்டை மண்டல வட்டாரங்களில் பரவலாக இருந்துவருகிறது. இதனைத் தொழிலோடு தொடர்புடைய செய்திகளைக் கொண்டு யதார்த்தத்தில் நடந்ததுபோலவே உரைக்கும் திறனுடையவர்களாக இவ்வட்டாரக் குயவர்கள் இருக்கின்றனர். அதாவது,

'முன்னாடி ஒரு காலத்துல எல்லாம், மண்பாண்டப் பொருள்கள் ஏராளமா செய்தாங்க. அதுவும் பொங்கல் பண்டிகை நெருங்கிச்சின்னா இன்னும் மும்முரமா தொழில் செய்வாங்க. ராத்திரி பகலா தொழில் செய்வாங்க. பொருள் செய்யிறது எப்ப வேணாலும் செய்யலாம். ஆனால் அதை சூளை போடுறது பகல் நேரத்துலதான் செய்ய முடியும். அதுவும் மதியானம் உச்சி வெயில்லதான் செய்ய முடியும். அப்படியிருக்கும்போது ஒரு நாள் ஒரு கொசவன் மத்தியான வேளையில சூளை போட்டான். சூளை போடும்போது தொடக்கத்திலிருந்து கடைசி வரைக்கும் மிகப் பொறுமையா நிதானமா கவனமாக பாத்து எடுத்தாதான் பொருள் உருப்படியா கைக்குக் கிடைக்கும். இல்லேன்னா வீணா போயிடும். சேறு பூசி சூளை போடுறப்போ சூளையில் இடி விழும். அதாவது கனமா சேறு பூசாத சூளையின் மேல்பகுதி தீ தாங்காம கருகிடும். அப்படிக் கருகிடுச்சின்னா அந்த

வழியா ஒட்டுமொத்த தீயும் வெளிவந்துவிடும். ஆகையால சூளை வக்கிறப்போ சூளைக்குப் பக்கத்திலேயே இருந்து, அவ்வாறு இடிவிழுற இடத்துல மறுபடியும் செத்தல்போட்டு சேறுபூசி, சூளையைவிட்டு தீ வெளியே வராத அளவுக்கு கவனமா பார்த்து செய்யணும். கொஞ்சம் அசந்தா பொழப்பு வீணாபோயிடும். அப்படியிருக்கும்போது சூளை போட்டுட்டு இருந்த ஒரு கொசவன் கிட்ட அவன் மேல ரொம்பநாளா ஆசை வச்சிருந்த ஒருத்தி அடுப்புக்கு நெருப்பு கேட்கற சாக்குல அவன்கிட்ட போனாள். அவன் ரொம்ப கவனமா ஓடியாடி வேலை பார்த்திட்டு இருந்தான். அவன்கிட்டே போயி இவள் மயங்கி நின்னாள். அவன் இவ்வளவு நாளா செய்ஞ்ச உழைப்பு வீணா போயிடுமேன்னு நெனச்சி அவசர கதியில வேகவேகமா வேலை செய்ஞ்சி கண்ணுங் கருத்துமா இருந்தப்போ இவளோட பேச்சி அவனுக்கு எரிச்சலா இருந்துச்சி. அதனால் அவளை இழுத்து எரியிற சூளைமேல தூக்கி போட்டுட்டான். இந்தக் கதையத்தான், இப்படிப் பழமொழியா சொல்வாங்க (களாய்வு; பூபாலன் (78): தெள்ளூர், 29.03.2009).

***கதை 4***

குயவர்கள் வாழ்க்கைத் தரத்தில் உயராமல் இருப்பதற்கு அவர்கள் செய்யும் தொழிலே காரணம் என்கிற பொதுப்படையான கருத்து சமூகத் தளத்தில் இருந்து வருகின்றது. இதற்கு வெகுமக்கள் தரும் விளக்கங்கள் தற்போதும் வழக்காற்றில் இருந்து வருகிறது. அதாவது,

> குயவர்கள் வாழ்க்கையில முன்னுக்கு வராமல் போனதற்குக் காரணம் அவர்கள் பூமி மாதாவை ஓங்கி ஓங்கி மிதிப்பதேயாகும் (ஏழுமலை உடையார்; பி.இ.4:108).

என்கின்றனர்.

இது குறித்த ஆய்வாளரின் உரையாடலின்போது இதற்கு அவர்கள் பின்வருமாறு விளக்கம் தருகின்றனர். அதாவது 'மண்பாண்ட உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் குயவர்கள் மண்பாண்டம் வனைவதற்கு மிகவும் மிருதுவான களிமண் தேவையென்பதால் களிமண்ணை ஊறவைத்து நன்றாக மிதிப்பர். குறைந்தபட்சம் ஆறு அல்லது ஏழு முறையாவது மிதித்தால்தான் களிமண் மிருதுவான தன்மையில் கிடைக்கும். ஆதலால் மிகுதியானமுறை களிமண்ணைக் களத்தில் ஊறவைத்து மிதிப்பர். இத்தொழிலில் மிகுதியான உடலுழைப்பு இவ்வாறு மண் மிதிப்பதற்கே செலவிடப்படுகின்றது. அவ்வாறு களிமண்ணை மிதிக்கும்போது பூமியை ஓங்கி ஓங்கி காலால் உதைப்பதால் குயவர்கள் வாழ்க்கைத் தரத்தில் உயரவில்லை' என்கின்றனர். இத்தொழில் குறித்த மேம்போக்கான பார்வையில் 'மண் மிதித்தல்' எனும் இவ்வேலை அப்பட்டமாகத் தெரிகின்றது. ஆகையால் மேற்கூறிய இச்சொல்லாடல் உருவாகியிருக்கலாம். ஆனால் சமூகத்தளத்தில் இத்தொழில் பெருமதிப்பு பெறாததே இதற்கு அடிப்படைக் காரணம் எனலாம். அதாவது மண்ணோடு தொடர்புடைய சுத்தமற்ற அழுக்கான தொழில். பெரியளவிலான

பொருளாதார முதலீடு இல்லாமல் உடல் உழைப்பினை மட்டுமே முதலீடாகக் கொண்ட தொழில். ஆகையால், உடலுழைப்பிற்குப் பெருமதிப்பற்ற காலகட்டங்களில் இம்மாதிரியான வழக்காறுகள் தோன்றியிருக்கலாம்.

***கதை 5***

குயவர்கள் கோத்திர வகையில் சிவகோத்திரம், விஷ்ணு கோத்திரம் என இருவகைப்படுவர். இதில் முறையே சிவனை வழிபடு கடவுளாகக் கொண்டவர்கள் சிவகோத்திரத்தினராகவும், விஷ்ணுவை வழிபடு கடவுளாகக் கொண்டவர்கள் விஷ்ணு கோத்திரத்தினராகவும் வழக்கப்படுத்தப்பட்டிருக்கின்றனர். இதில் பண்டைய வட தமிழகத்தைச் சார்ந்த குயவர்கள் பெரும்பாலானோர் விஷ்ணு கோத்திரத்தினராகவும் தென் தமிழகத்தினைச் சார்ந்த குயவர்கள் பெரும்பாலானோர் சிவ கோத்திரத்தினராகவும் இருக்கின்றனர். இது தொண்டை மண்டல வட்டார வரையறையின்கீழ் வரும்போது இவ்வட்டாரத்தில் இரு கோத்திரத்தாரும் இருக்கின்றனர். இதில் சிவ கோத்திரத்தினர் அதிகம். இவர்கள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர். அதேபோல் வைணவக் கோத்திரத்தினர் குறைவு. இவர்களில் மிகுதியானோர் தெலுங்கினைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர்.

சைவ, வைணவத் தாக்கத்திற்கு ஆட்பட்ட குயவர்கள் முறையே அவர்களின் வழிபடு கடவுளைப் பற்றிய புராணக் கதைகளை அறிந்து வைத்திருக்கின்றனர். சைவர்கள் திருநீலகண்ட நாயனார் கதையினையும், வைணவர்கள் கோரகும்பர் கதையினையும் பரவலாகத் தெரிந்திருக்கின்றனர்.

சிவ கோத்திரத்தைச் சார்ந்த குயவர்கள் திருநீலகண்ட நாயனாரை வழிபடு குருவாகக் குறிப்பிடுகின்றனர். அவரைப் பற்றிய புராணப் பின்புலக் கதையைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றனர்.

"திருநீலகண்டர் என்றொரு சிறந்த சிவபக்தர் இருந்தார். இவர் சிவபெருமானை வணங்கும்போது திருநீலகண்ட நாயனார், திருநீலகண்டம்! திருநீலகண்டம்!! என்று சொல்லி வணங்குவார். இதனால் இவர் திருநீலகண்டர் என்று பெயர் பெற்றார். மண்பாண்டம் செய்வது அவரது குலத்தொழில். அதனையே செய்தும், செய்த மண்பாண்டங்களை விற்றும், சிவனடியார்களுக்கு தானமாக திருஓடு செய்து கொடுத்தும் வாழ்க்கை நடத்தினார். இளமை வளர்ந்து அவர் ஒரு மங்கையைத் திருமணம் செய்து கொண்டு இல்லறம் நடத்தி வந்தார். அந்த அம்மையார் இவரைவிடப் பன்மடங்கு சிறப்புடையவர். அருந்ததிக் கற்பின் மிக்கார். திருமணமாகி இருவரும் கருத்தொருமித்து வாழ்ந்தனர்.

ஒரு நாள் திருநீலகண்டர் நடராஜரை வணங்கிவிட்டு திரும்பி வந்துகொண்டிருந்தார். வழியில் பொதுமகள் ஒருத்தி எச்சில் பாத்திரம் கழுவி ஊற்றினார். எச்சில் நீர் சுவாமிகளின் மீது விழுந்தது. அதைக் கண்ட பொதுமகள் அவரை உள்ளே அழைத்துச் சென்று சந்தனம் பூசி, நல்லாடை அணிவித்து அனுப்பினார்.

இன்பத்துறையில் எளியவரான திருநீலகண்டரின் உள்ளம் உண்மையாகவே ஒரே ஒருமுறை தவறிவிட்டது என்று கூறுகிறது பெரிய புராணம். அதனால் பரத்தைபால் அணைந்தார். இன்பம் துய்த்த இச்செய்தி மனைவிக்குத் தெரிந்து விட்டது. உடனே மனைவியை அழைத்து நான் தவறு செய்துவிட்டேன். பொறுக்க வேண்டும் என்றார். அந்த அம்மையார் ஒன்றும் சொல்லவில்லை. தம் மனைவி "ஊடல் தீர்ந்தாள்" எனக் கருதி அவரை அணுகினார் திருநீலகண்டர். மற்ற பெண்களைத் தொட மனதில் நினைத்த நீங்கள் இனி என்னைத் தொடக்கூடாது என்று சொல்லிவிட்டார் அன்பு மனைவி. மனைவி விளையாட்டாகக் கூறுகிறார் என்று எண்ணி மீண்டும் தொட்டார். மனைவியிருக்க பிற பெண்ணைத் தொடுபவன், மனைவியைத் தொட அருகதை அற்றவன். எனவே, உங்கள் திருநீலகண்டத்தின் மீது நீங்கள் வைத்த பக்தி உண்மையால் என்னை வாழ்நாள் முழுவதும் தொடக்கூடாது என்று கடுமையான உத்தரவு போட்டார்.

அதிர்ச்சியுற்ற திருநீலகண்டர் மனம் வருந்தினார். சிவத்தொண்டைத் தவிர வேறெதிலும் ஈடுபடாமல் காலம் கழித்தார். மனைவியின் உத்தரவுக்குக் கட்டுப்பட்டார். தம்பதிகள் ஒரே வீட்டில் இருந்தாலும் அவர்களுக்குள் தாம்பத்யம் இல்லாமல் போயிற்று. அப்பொழுது திருநீலகண்டருக்கு வயது இருபத்தைந்து. காளைப்பருவம், இந்த மாதிரி வரலாறு வேறு எங்கும் இருக்க முடியாது. இருப்பினும் அந்தம்மா தன் கணவருக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைத் தவறாது செய்து வந்தார். இவ்வாறு பல ஆண்டுகள் ஓடின. முதுமையும் அவர்களைத் தேடி வந்தது. தம்பதிகள் 60 வயதையும் கடந்து விட்டனர். சிவபெருமான் சும்மா இருப்பாரா? உண்மை பக்தனுக்கு நல்லருள் புரிய விரும்பினார். சோதனையைத் தொடங்கிவிட்டார். சாமியார் வேடம் பூண்டு திருவோடு ஏந்தி, திருநீலகண்டரின் வீட்டில் பிச்சை கேட்டார். தம்பதியர் அவரை உள்ளே அழைத்துப் பாத பூசை செய்து உணவளித்தனர்.

தான் கொண்டு வந்த திருஓட்டை திருநீலகண்டரிடம் ஒப்படைத்த சிவன், நீலகண்டா! இந்த ஓடு பொன்னைவிட மதிப்பு வாய்ந்தது. இதில் கை வைத்தால் தங்கமும் இரத்தினங்களும் வரும். இதைப் பத்திரமாக வைத்திரு. நான் தீர்த்த யாத்திரை செல்லுகிறேன். யாத்திரை முடிந்து திரும்ப வந்து பெற்றுக் கொள்கிறேன் என்றார் சாமியார். திருநீலகண்டர் அதை மிகவும் பத்திரப்படுத்தி ஓரிடத்தில் மறைத்து வைத்தார். பின்னர் தம் இருப்பிட தில்லையம்பலத்தில் மறைந்து கொண்டார் சிவபெருமான். ஆண்டுகள் பல கழிந்தன. நாயனாரின் தூய நிலையை உலகுக்கு உணர்த்தி உய்யும் பொருட்டு திருஓட்டினை வைத்த இடத்தில் இல்லாமல் மறைத்தருளினார் இறைவர்.

சிறிது காலம் கழித்து மீண்டும் துறவி வடிவில் திருநீலகண்டர் வீட்டிற்குச் சென்று திருஓட்டினைத் திருப்பிக் கேட்டார். அதை வைத்திருந்த பெட்டியை திருநீலகண்டர் திறந்து பார்த்தார். ஓடு அங்கு இல்லை. தம்பதியர் அதிர்ச்சியுற்றனர். அதனால் துறவியிடம் மன்னிப்பு கேட்டுக் கதறினர். துறவியோ விடவில்லை. இவ்விஷயத்தைத் தில்லைவாழ் அந்தணர்களிடம் சபையில் வைத்து

தீர்ப்பு வழங்கக் கேட்டார். பொன்னும் இரத்தினமும் கொட்டும் இத்திருவோட்டின் மீது ஆசை வைத்து திருஓட்டினை வேண்டுமென்றே மறைத்துவிட்டார் என்று திருநீலகண்டர் மீது குற்றம் சாட்டினார். தவறு செய்யும் பழக்கம் எனக்கு இல்லை என்று கெஞ்சினார் திருநீலகண்டர். துறவி விடவில்லை. நீ திருடனல்ல என்பது உண்மையானால், உனது மனைவியின் கையில் சத்தியம் செய்து கொடு. அப்படிச் செய்தால் நீ திருடவில்லை என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன் என்றார் துறவி.

தன்னுடைய மனைவியின் கடுமையான உத்தரவினால் தன்னைத் தொடக்கூடாது என்று சபதமிட்டதை நாயனார் வெளியில் சொல்ல முடியவில்லை. அதனால் மனைவியின் கையைத் தொடமாட்டேன் என்றார். திருநீலகண்டர் மீது சந்தேகம் வலுத்தது. வேறு வழியில்லாமல் தம் மனைவியை அழைத்தார். ஒரு கோலை எடுத்து கோலின் ஒரு முனையைக் கற்பின் மிக்க அவரது மனைவியாரும் மறுமுனையைத் தானும் பிடித்து சத்தியம் செய்கிறோம் என்றார் திருநீலகண்டர். இதனைச் சபையோர் ஏற்கவில்லை. வேறு வழியில்லாமல் தங்களுக்குள் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டின் காரணத்தையும் கூறினார். உடனே தில்லையம்பலத்தில் உள்ள திருப்புலீச்வரத்து குளத்தில் இவர்கள் இருவரும் ஒரே நேரத்தில் மூழ்கி எழுந்து ஒருவருக்கொருவர் தொடாமல் சத்தியம் செய்யட்டும் என்றார் முதியவரான இறைவன்.

இவ்விருவரும் இக்கட்டளையைச் சிரமேற்கொண்டு குளத்தில் மூழ்கி எழுந்தனர். என்ன ஆச்சரியம்! இருவரும் இளமை நிலையை அடைந்தனர். குளக்கரையில் நின்ற முதியவர் வானில் பறந்து பார்வதி சமேதராக ரிஷப வாகனத்தில் காட்சி தந்தார். மீண்டும் தம்பதியர் சேர்ந்து வாழ இறைவன் வாழ்த்தினார் (கர்னல் குப்புசாமி (க.ஆ.); *2010:133*).

***கதை 6***

விஷ்ணு கோத்திரத்தைச் சார்ந்த குயவர்கள் விஷ்ணுவை மையமிட்டு ஒருங்கிணைதலில் தங்களுக்கான குல முன்னோடியாக 'கோரகும்பரை'க் கொண்டிருக்கின்றனர். இதைப் பின்வரும் கதையின்வழி அறியமுடிகிறது. அதாவது,

கோரகும்பர் ஒரு தீவிர பெருமாள் பக்தர். எந்நேரமும் பெருமாளை நெனச்சி பஜனைப் பாட்டு பாடிட்டே இருப்பாரு. இவரோட குலத்தொழில் பானை, சட்டி செய்யிற மண்ணுவேலை. இவரு பெருமாளு மேல அதிக ஈடுபாட்டோட இருந்ததால இவருக்குக் காலாகாலத்துல கல்யாணம் ஆகலை. தாமதமாதான் ஆயிச்சு. கல்யாணம் முடிஞ்சி ஒரு ஆம்பளபுள்ளயும் பொறந்து வாழ்க்கை சுமூகமா ஓடிட்டு இருந்துச்சி. அப்பவும் கோரகும்பர் தன்னோட குடும்பத்தக் காட்டிலும் பெருமாளையே அதிகமா நேசிச்சார். பெருமாளைப் பத்தி பஜனை பாடறத அவர் விடலை. பஜனைப் பாட்டு பாடிக்கொண்டே வேலை எல்லாத்தையும் செய்வார். அப்படித்தான் ஒருநாள் மண்பாண்டம் செய்யிறதுக்கு மண்ணு மெறிச்சாரு.

பெருமாளை நெனச்சி பஜனைப் பாட்டை வேகமா பாடிக்கொண்டே அந்த ஆவேசத்துல மண்ணு மெறிச்சிட்டிருக்காரு. அந்நேரத்துல அவரோட வீட்டம்மா தண்ணி எடுத்துவர ஆத்துக்குப் போக கௌம்பினாங்க. கௌம்பும்போது 'புள்ளைய பாத்துக்கோங்க. நான் போயி தண்ணி எடுத்துட்டு வந்துடறேன்' அப்படின்னு சொல்லிட்டு போயிட்டாங்க. பரவசமா பஜனைப்பாட்டு பாடிட்டிருந்த கோரகும்பர் இதைக் கவனிக்கல. அவரு தன்னை மீறி அளவு கடந்த பரவசத்துல பெருமாளை பாடிட்டிருந்தார். அந்தம்மா தண்ணி எடுத்து வர ஆத்துக்கு போயிட்டாங்க. இவர் மெய்மறந்து மண் மெறிச்சிட்டிருக்கார். அப்ப பார்த்து வீட்ல இருந்த அந்தச் சின்னக் கொழந்த முட்டி போட்டு தவழ்ந்து தவழ்ந்து கோரகும்பர் மெறிச்சிட்டிருந்த களிமண் பட்டறைக்கு வந்துடிச்சி. இதைக் கவனிக்கல கோரகும்பர். மண்ணைக் கூட்டி மெறிக்கிற பழக்கத்துல கொழந்தையையும் காலால கூட்டி மெறிச்சிட்டார்.

அதுக்கப்புறம் கொஞ்சம் நேரம் கழிச்சி வந்த அவங்க வீட்டம்மா, வீடு முழுக்க கொழந்தையைத் தேடியும் கெடைக்கல. அப்பவும் கோரகும்பர் பஜனைப் பாடலையே பாடிட்டிருந்தார். இந்தம்மாவுக்குக் கோவம் தலைக்கேறி கோரகும்பர கேட்கறதுக்கு மண் மெறிக்கிற பட்டறையாண்ட போனாங்க. அங்க பாத்தா கோரகும்பர் குழந்தையை மண்ணுல போட்டு மெறிச்சிட்டிருக்காரு. இந்தம்மாவுக்கு வந்துச்சி கோவம். கோரகும்பர கண்ணாபின்னானு கேழி (திட்டுதல்) கேட்க ஆரம்பிச்சுட்டாங்க. கோரகும்பர் அப்பதான் சுயநினைவுக்கு வந்தாரு. வந்தவரு கொழந்தைய மெறிச்சிட்டமேன்னு உட்கார்ந்து 'ஓ'ன்னு அழ ஆரம்பிச்சிட்டாரு. அவரு பொண்டாட்டி அவர கேழியா கேட்டுட்டிருந்தாங்க. பெத்தவளாச்சே மனசு தாங்கல. கோரகும்பர திட்றதில்லாம அவரு கும்பிடற பெருமாளையும் சேர்த்து திட்டினாங்க. பெருமாளை திட்டினதும் கோரகும்பருக்குக் கோவம் பொத்துகிட்டு வந்துடிச்சி. ஆத்திரத்த அடக்க முடியாம அடிக்க ஓடிவந்தாரு. அவர் அடிக்க வர்றத பார்த்து அந்தம்மா பயந்து பெருமாளு மேல சத்தியமா என்னைத் தொடாதீங்க அப்படின்னு வாய்தவறி சொல்லிட்டாங்க. இப்படி சத்தியம் பண்ணிட்டதும் அடிக்க வந்த கோரகும்பர் அப்படியே நின்னுட்டாரு. அதுல இருந்து அவரு அந்தம்மாவைத் தொடக்கூடாதுன்னு முடிவு பண்ணிட்டாரு. ஏன்னா! பெருமாளு மேல அவரு வச்சிருக்கற பக்தி அவ்ளோத்தரம். அதனால அவரு அன்றையில இருந்து அந்தம்மாவ தொடறதில்லை. பேருக்கு புருஷன் பொண்டாட்டியா வாழ்ந்துட்டு வந்தாங்க. அதனால அதுக்கப்புறம் அவர்களுக்கு கொழந்தையே பொறக்கல.

இந்த விஷயம் கொஞ்சங் கொஞ்சமா மத்தவங்களுக்குத் தெரிய ஆரம்பிச்சுது. அப்படி அது கோரகும்பரோட மாமனாரு காதுக்கும் போச்சி. அவரு ரொம்ப வருத்தப்பட்டாரு. இத இப்படியே விடக்கூடாதுன்னு நெனச்சி அவரோட சின்னப் பொண்ணை ரெண்டாவது கல்யாணம் பண்ணிக் குடுக்க முடிவு பண்ணிட்டாரு. கோரகும்பர் வேணாம்னு சொல்லிட்டார். ஆனா அத மத்தவங்க ஒத்துக்கல. இப்படியே போனா குடும்ப வாரிசு இல்லாம போயிடும்னு சொல்லி

சம்மதிக்க வச்சிட்டாங்க. இவரும் சரின்னு சொல்லி ஒத்துக்கிட்டாரு. அவரோட் மாமனாரு தன்னோட ரெண்டாவது பொண்ண கோரகும்பருக்கு கல்யாணம் செய்ஞ்சி வச்சி 'என் மூத்த பொண்ண வச்சிருந்தது போலவே இவளையும் வச்சி வாழு' அப்படின்னு நாப்பிழறி சொல்லிட்டாரு. அன்னியிலிருந்து அந்த ரெண்டாவது பொண்டாட்டியையும் தொடறதில்லைன்னு முடிவு பண்ணிட்டாரு. ஏன்னா அது பெருமாள் மேல செய்த சத்தியம். அவரால அத மீற முடியல. அவ்ளோ பக்திமான்.

காலம் இப்படியே ஓடிச்சி. ஒருநாள் தன்னோட கை தவறி பொண்டாட்டி மேல பட்டுடிச்சி. உடனே கோரகும்பர் 'தான் பெருமாள் மீதான ஆணைய மீறிட்டதா நெனச்சி தன்னோட ரெண்டு கையையும் வெட்டிக்கினாரு. கை போன பிறகு மண்பாண்ட தொழிலும் செய்ய முடியல. குடும்பம் ரொம்ப வறுமையில வாடிச்சி. ஒருநாள் ராத்திரி கோரகும்பர் கனவுல பெருமாளே வந்து 'குடும்பத்தோட பண்டரிபுரம் வந்து தன்னை தரிசிக்குமாறு சொல்லி மறைஞ்சிட்டாரு'. பெருமாள் சொல்லைத் தட்டாத கோரகும்பர் தன்னோட ரெண்டு பொண்டாட்டியையும் கூட்டிக்கிட்டு பண்டரிபுரம் போறாரு. பண்டரிபுரம் பெருமாள் கோயில நோக்கி இவரு நடக்க நடக்க இவரோட ரெண்டு கையும் தானா வளர ஆரம்பிச்சிடிச்சி. கோயிலுக்கு போயி கொளத்துல மூழ்கி எழுந்ததும் ரெண்டு கையும் முழுசா வளர்ந்து பழைய மாதிரி ஆயிடுச்சி. உடனே 'பெருமாளோட மகிமையை நெனச்சி உருகி பஜனை பாட ஆரம்பிச்சிட்டாரு. இவரோட பக்திய மெச்சி பெருமாள் நேரில் வந்து இவருக்கு இவரோட வந்த ரெண்டு பொண்டாட்டிகளுக்கும் ஆசி புரிந்தார். கூடவே அன்றைக்கு மண்ணுல மெறிச்ச அந்த கொழந்தைய உயிர்ப்பிச்சு தந்து, இனி தன்னை நெனச்சி குடும்பத்தோட சந்தோஷமா வாழச் சொல்லிட்டு மறைஞ்சிட்டாரு. வீடு திரும்பின கோரகும்பர் அதுக்கப்புறம் குடும்பத்தோட சந்தோசமா வாழ்ந்தாரு' அப்படிங்கறது கதை (சுப்ரமணிய உடையார்; பி.இ.ப.66).

### கதை 7

'கோரகும்பர்' கதையைப் போன்று 'குபா கும்பர்' என்பவரைப் பற்றிய கதையொன்றும் வழக்கத்தில் இருந்திருக்கிறது.

குபாகும்பர் ஒரு குயவர். இவர் மார்வாட தேசத்தில் வாழ்ந்து வந்தார். அரிபக்தி மிகுந்தவர். இவர் நாடோரும் ஒவ்வொரு பாண்டஞ் செய்து முப்பது நாட்களுக்கும் முப்பது பாண்டஞ் செய்து சூளையிட்டு வெந்தபின் விற்றுப் பாகவதற்கு அன்னமளித்து வருவார். ஒருநாள் பெருமாள் இவரிடத்தில் இருநூறு சாதுக்களுடன் விருந்தாக வரக் கும்பார் எதிர் சென்று உபசரித்துக் கையில் பொருளிலாமையால் ஒரு வணிகனை அடைந்து பொருள் கேட்க அவன் நீர் ஏழை ஆதலால் பொருள்தர வல்லீரல்லீர் ஆதனால் ஓர் கிணறு தோண்டித் தருவதாக வாக்கப்பளிப்பீரானால் தருவேன் என்று கூற, இவரும் அவ்வாறே உடன்பட்டு பொருள் பெற்றுப் பாகவதற்கு அன்னமளித்தார். பின் சொல்லியபடி

கிணறெடுக்கச் சென்று நீரூற்றுந் தருணத்தில் மண்ணிடிய கும்பார் பூமிக்குள் அகப்பட்டுக் கொண்டார். கும்பார் இறந்தார் என அனைவரும் சென்றனர். அவரது மனைவியும் வீடு சென்று சேர்ந்தாள். பின் ஒரு வருடம் பொறுத்து அவ்வழியிற் செல்லும் பாட்டைசாரிகள், ஆங்கு இரவில் தாள மிருதங்க ஓசை கேட்டு அதை அரசனிடம் அறிவிக்க அரசன் அவ்விடத்தில் பூமியைத் தோண்டக் கட்டளையிட்டான். அங்கே பஞ்சாயுதங்களுடன் பெருமாள் முன்பு கும்பார் பஜனை செய்திருந்ததைக் கண்டு, பெருமாளை அங்கிருந்தெடுத்து பிரதிஷ்டை செய்து கும்பாருக்கு மடமொன்று சமைத்து இனிதிருக்கச் செய்தான் அரசன் (அ. சிங்காரவேலு முதலியார்; 1981:472).

## உற்பத்திக் குறைந்த புழங்குபொருள்கள்

நகர்சார் சமூகச் சூழலில் மண்சார்ந்த இன்றியமையாத பயன்பாட்டுக் கலன்கள் மிகவும் அரிதாகவே பயன்படுத்தப்படுகின்றன. பதிலாக அவ்விடத்தை எவர்சில்வர், பிளாஸ்டிக், பீங்கான், கண்ணாடி உள்ளிட்ட மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்கள் கையப்படுத்தியுள்ளன என்றாலும் மரபார்ந்த சில உணவு முறைகளைச் சமைக்க மண்பாண்டத்தினைப் பயன்படுத்தும் வழக்கம் தற்போதும் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்து வருவதைக் காணமுடிகிறது. சான்றாக பருப்புச் சட்டி, கருவாட்டுக் குழம்புச் சட்டி முதலானவற்றைக் கொள்ளலாம். நகர்சார் குயவர்கள் மண்சார்ந்த இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்கள் உற்பத்தியில் இவ்விரு உருக்களை மட்டுமே மிகுதியாக உற்பத்தி செய்கின்றனர். இதை வேறுவிதமாகக் கூற வேண்டுமென்றால் இவ்விரு பொருள் உற்பத்தி மட்டுமே இவர்கள் இம்மரபான தொழில் செய்வதற்கான அடையாளமாக விளங்குகிறது. இது தவிர்த்து இதன் அடுத்தகட்ட வளர்ச்சிப்படியில் உற்பத்தி செய்யப்படும் மண்சார்ந்த பயன்பாட்டுப் பொருள்கள் அனைத்தும் அலங்காரத்தன்மை கொண்டன. ஆகையால் அவ்வகையான பொருள் உற்பத்தியில் குயவர்கள் அல்லாத பிற சமூகத்தினரும் ஈடுபட்டு வருகின்றனர். ஆக மண்சார்ந்த இன்றியமையாத புழங்குபொருள் உற்பத்தியே குயவர்களுக்கான அடையாளம் என்றிருந்த நிலை தற்போது நீர்த்துப்போனதால் அதன்வழிப்பட்ட குயவர்கள் தங்களுக்கான அடையாளங்களை இழந்துவருகின்றனர். மேலும் இது தொடர்பான பிற பொருள் உற்பத்தியில் தங்களை ஈடுபடுத்திக் கொள்வதில் நாட்டம் உடையவர்களாகவும் காணப்படுகின்றனர்.

அலங்காரப்பொருள்கள் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வரும் நகர்ச்சூழலில் அவற்றை உற்பத்தி அடிப்படையில் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முதலாவது கையால் வனையப்படுவது. அடுத்து அச்சில் வார்க்கப்படுவது. கையால் வனையப்படும் அலங்காரப்பொருள் உற்பத்தியைக் குயவர் சமூகத்தினர் மட்டுமே செய்துவருகின்றனர். பயன்பாட்டுப்பொருள் உற்பத்தியில் இரண்டாந்தரப்படுத்தப்பட்டிருந்த அவர்களின் அலங்கார அறிவு தற்போது முதன்மைப்படுத்தப்பட்டு பயன்பாட்டு அறிவு இரண்டாம் தரப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால் அவர்களுடைய பயன்பாட்டுப்பொருள்

உற்பத்தியிலான அனுபவஅறிவு மடைமாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. இதைப் பயன்பாட்டுப்பொருளை அலங்காரப்பொருளாகக் கொள்ளும் நகர்வாழ் மக்களின் மனநிலையைக் கொண்டு அறிய இயலும்.

இரண்டாவதாக அச்சில் வார்த்து உற்பத்தி செய்யும் மண்ணாலான அலங்காரப் பொருள்களைக் குயவர்கள் அல்லாத பிற சமூகத்தினரும் உற்பத்தி செய்கின்றனர். அவ்வாறு அவர்கள் செய்வதற்கு மிகுதியான தொழில் நுணுக்கங்கள் ஏதும் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை என்பதையே இதற்கான காரணமாகக் கொள்ளலாம். இவ்வாறு செய்யும் இயந்திரத்தனமான இவ்வித உற்பத்தி முறைக்குத் தேவையான அச்சுகளை இவர்கள் மரபான குயவர்களிடமிருந்தே பெறுகின்றனர். அலங்காரப் பொருள் உற்பத்திமுறை பெருகிப்போன சமகாலச் சமூகச் சூழலில் பெரும்பாலும் மரபான குயவர்களே இவ்விதமான அச்சுகளைச் செய்வதற்கான முதன்மை உருக்களைச் செய்து தருகின்றனர். இதனை அடிப்படையாகக் கொண்டு காசு பார்க்கும் நோக்கோடு பிற சமூகத்தினரும் இத்தொழிலைச் செய்ய முனைப்பு காட்டுகின்றனர். அவர்கள் அவ்வாறு செய்வதனால் சமூக மதிப்பீட்டில் எவ்விதமான இழிவு நிலையும் பெற்றிருக்கவில்லை. இதை முன்னாளில் அழுக்குத் தொடர்பான மண்ணாலான தொழிலைச் செய்த குயவர்கள் சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெறாது இருந்த அந்நிலையோடு ஒப்புநோக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

## அலங்காரப்பொருள்கள் - உற்பத்தி மிகுதி

குடிஊழியம், சந்தை விற்பனை என்று வட்டார அளவில் இருந்த மண்சார்ந்த புழங்குபொருள்களின் பரிவர்த்தனை தற்போது மாவட்டங்கள், மாநிலங்கள் அளவில் கொண்டு செல்லப்படுவதால் அவற்றின் தேவை அதிகரிக்கிறது. ஆதலால் அதற்கேற்றாற்போல் உற்பத்தியைப் பெருக்க வேண்டிய அவசியமும் ஏற்படுகின்றது. ஆகையால் இச்சூழலில் நவீனத் தொழில்நுட்பத்தின் உதவியுடன் மேற்கூறிய அச்சு வார்ப்பு முறை நடைமுறைப்படுத்தப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு முறையும் உற்பத்தி செய்யப்படாமல் அச்சில் வார்க்கப்படும் ஒரே மாதிரியான உற்பத்திப் பொருள்களில் அச்சு வார்ப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட குயவர்களின் முதன்மை உருவின் உணர்வே பிரதிபலிக்கின்றது. ஆக, நவீனத் தொழில்நுட்ப வளர்ச்சியானது பொருள் உற்பத்தியில் உபரியை ஏற்படுத்த உதவியதே தவிர, அதுகுறித்த அழகியல் உணர்வை வளர்த்தெடுக்க வழிவகை செய்யவில்லை எனலாம்.

## பொதுமைப்படுத்தப்பட்ட மண்சார் பொருள் உற்பத்தி

மண்ணாலான புழங்குபொருள்கள் அனைத்தையும் குயவர் சமூகத்தினரே உற்பத்தி செய்துதர வேண்டும் என்று இருந்த வேளாண் சமூக சட்டதிட்டங்களைப் பின் காலனிய முதலாளித்துவச் சமூகச் சூழல் முற்றிலுமான மாற்றியமைத்துவிட்டது எனலாம். ஊழியக் குடிகளாக இருந்த குயவர்கள் கிராமக்

குடிகளனைத்திற்கும் தேவையான இருப்பிடம் சார்ந்த அனைத்து மண்சார் பயன்பாட்டுப் பொருள்களையும் உற்பத்தி செய்துதருவதை வழக்கமாகக் கொண்டிருந்திருக்கின்றனர். இது பணிக்கப்பட்ட ஒன்றாக இருந்திருக்கிறது. யாரால் எப்போது பணிக்கப்பட்டது என்ற வேர் அறிய இயலாவிடினும் அதை அப்படியே வாழையடி வாழையாக நிலைநிறுத்திக் கொள்வதில் சமூகத்தின் மேல்மட்டக் குடிகள் தவறியிருக்கவில்லை. தற்போதும் குக்கிராமப்புறங்களில் இந்நிலையைக் காணமுடிகின்றது. ஆனால் தொழில்நுட்ப வளர்ச்சி மேம்பட்ட தொழில் நகரங்களில் வசிக்கும் வெகுமக்களுக்கான தேவைகளை அவ்வாறான இவர்களைக் கொண்டு நிறைவு செய்யவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டிருக்கவில்லை. மேலும் நகர நெருக்கடிகளுக்குள் வந்து குவியும் வெகுமக்களுக்கான பயன்பாட்டுப் பொருள்களின் தேவையும் வழக்கமானதாக இருப்பதற்கில்லை. ஆகையால் அவர்களுக்கான பயன்பாட்டுப் பொருள்களை உலோகம், பிளாஸ்டிக் உள்ளிட்ட நவீன மூலபொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்து தரும் வேலையைப் பெருமுதலாளித்துவத் தொழில் நிறுவனங்கள் கையிலெடுத்து அவற்றைக் காசாக்கும் முயற்சியில் வெற்றி பெற்றிருக்கின்றன. அதன் விளைவாக நகர்வாழ் மக்களின் பெரும்பாலான பயன்பாட்டுப் பொருள்கள் அனைத்தும் எவர்சில்வர், பிளாஸ்டிக், பீங்கான் உள்ளிட்ட இயற்கைக்கு எதிரான செயற்கை மூலப்பொருள்களில் இருந்து உற்பத்தி செய்யப்பட்டவையாக மாறியுள்ளன.

அவசர வாழ்க்கையை வெகுமக்களின் கையில் கொடுத்த இவ்வாறான தொழில் நகரங்கள் அவர்களின் ஆரோக்கியத்தைப் பற்றி அக்கறைகொள்ளத் தவறியிருக்கின்றன. மாறாக அவர்களின் வாழிட நெருக்கடிக்கேற்ற அடக்கமான நிலைத்தன்மையுடைய பயன்பாட்டுப் பொருள்களைத் தயாரித்து அவர்களிடம் தர தவறவில்லை. இவ்வாறு பயன்பாட்டு அடிப்படையில் பல்வேறு வகையான பயன்பாட்டுப் பொருள்களை வெவ்வேறான மாற்று மூலப்பொருள்களால் தயாரித்துத் தர முற்பட்ட முதலாளித்துவ நிறுவனங்கள் மரபான மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்களை மக்களின் பயன்பாட்டிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக விலக்கச் செய்தன. இதற்கடுத்தபடியாக மண்ணால் மட்டுமே செய்து பயன்படுத்த இயலும் சில பயன்பாட்டுப் பொருள்களின் தேவை அதிகரித்ததால் அவற்றைக் குயவர்களிடமிருந்து மட்டுமே பெறவேண்டிய நிர்பந்தம் தகர்ந்து அவற்றைப் பிற சமூகத்தினரும் தொழில்நிறுவனங்களும் உற்பத்தி செய்தளிக்கின்றன. ஆனால் முற்காலத்தில் அதிக உடல் உழைப்பு, குறைவான கூலி என்பதனடிப்படையில் இம்மாதிரியான மண்ணாலான பயன்பாட்டுப் பொருள்களைச் சமூகப்படிநிலையில் கீழிருந்த குயவர்கள் மட்டுமே செய்துதர பணிக்கப்பட்டிருந்திருக்கின்றனர். அக்காலத்தில் இம்மாதிரியான பொருள்களின் தேவை மிதமானதாக இருந்திருக்கிறது. மேலும் உழைப்பையும் உழைப்பால் விளையும் பொருள்களையும் பரிவர்த்தனை செய்து கொள்வதன் மூலம் ஒவ்வொரு சமூகத்தினருக்கும் இடையேயான உறவுநிலைக்கான முக்கியத்துவம் உணரப்பட்டிருக்கிறது. ஆகையால் குயவர் உள்ளிட்ட ஊழியக் குடிகளைக்

கொண்டுவந்து குடியமர்த்தியிருக்கின்றனர். ஆனால் மேற்கூறிய இந்நிலை தற்போது முற்றிலும் மாறி உழைப்பின் மதிப்பைச் சமூக ஒட்டுறவற்ற பணமாகப் பார்க்கும் வழக்கம் மேலோங்கி இருக்கிறது.

பணம் எல்லாவற்றையும் மாற்றிவிடும் என்று சிண்டிலோப்பர் (Cyndilauper) கூறுவதை நம் மொழியில் கூறினால் பணம் பத்தும் செய்யும். எளிய சமூகங்களில் காணப்படும் தங்களுக்குள்ளான பரிமாற்றங்கள் அனைத்தும் ஒரு விதத்தில் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட செயல்பாடுகள். ஆனாலும் அப்பரிமாற்றங்களால் ஏற்படும் சமூகஉறவு பரிமாற்றத்தின் பொருளாதாரத் தன்மையைக் குறைத்துச் சமூகஉறவை மேலோங்கச் செய்துவிடுகிறது. இதை இன்னும் சற்று கவனமாக நோக்கினால் சமூகத்தில் ஒவ்வொரு பரிவர்த்தனையும் தனித்தன்மை வாய்ந்ததாக இருப்பதை அறிய இயலும். அவை ஒவ்வொன்றிலும் தனிமனிதர்கள் தங்களது பரிவர்த்தனையின் மூலம் சமூகஉறவை வளர்த்துக் கொள்கின்றனர். இப்பரிவர்த்தனையின் தன்மை சுற்றுப்பாதையில் வளையம்போல் அமைவதால் இது குலா வளையம் (Kula ring) எனப்படுகிறது. இத்தகு பரிவர்த்தனை முறைக்கு நேர்மாறானதாகப் பணம் சார்ந்த சந்தைப் பொருளாதாரமுறை காணப்படுகின்றது. இதுவே நவீனப் பொருளாதாரமுறையின் அடித்தளம். பொருள்களின் மதிப்பைப் பொதுமைப்படுத்தி, தரப்படுத்தி இன்னொன்றாக (பணமாக) மாற்றிவிடுவதன் மூலம் இப்பொருள்களுடைய பரிவர்த்தனையின் அளவும் வேகமும் அதிகரிக்கின்றன. அடுத்து அப்பொருள் பரிவர்த்தனையின்போது பெறுகின்ற அடையாள மதிப்பு பணத்தாளாக மற்றும்போது அது அதற்கான முழுமையைப் பெறுகிறது.

> பணம் என்பது அந்தோணி இட்டன்ஸ் சொல்வது போல ஒருவகையில் அது ஒரு 'விடுவிக்கும் செயல்பாடு'. இதுவே நவீனத்துவ வாழ்வின் இயக்கமாக அமைகிறது. பொருள்களின் மதிப்பைப் பணம் என்ற குறியீடாக மாற்றி இப்பணத்தை ஒரு சிறந்த முறை மூலம் உற்பத்தி செய்து நிர்வகிப்பது என்பது அந்தந்த வட்டாரப் பொருள்களின் தனித்தன்மைகளை மழுங்கடித்துவிடுவதாகும். (ஜான் மோனகன்; **2005:168**)

இந்நிலையில் இவையனைத்தும் ஒருவிதப் பொதுத்தன்மைக்கு உருமாற்றம் செய்யப்பட்டிருக்கின்றன.

உற்பத்திப் பெருக்கத்தின் தேவையை மையமிட்ட இச்சமூகச் சூழலில் அதற்கான தனித்தன்மை பெரிதளவில் பொருட்படுத்தப்பட்டிருக்கவில்லை. ஆதலால் அச்சுவார்ப்புகளின் உதவியால் ஒரே மாதிரியான ஆயிரக்கணக்கான உருக்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அவ்வாறு உற்பத்தி செய்யப்படுகின்ற இவ்வித உருக்களில் எவ்விதமான உயிர்ப்பும் இல்லாது போவது அவை இயந்திரத்தனமாகிப் போனதற்கான அடையாளமாகக் கொள்ளலாம். அவ்வாறு இயந்திரத்தனமாகிப் பணப் பரிமாற்றத்திற்குள் பயணம் செய்கின்ற இவ்வுற்பத்தித் தொழிலைப் பிற சமூகத்தினருக்கும் செய்கின்றனர். அவ்வாறு இவர்கள் உற்பத்தி செய்கின்ற அலங்காரப் பொருள்களுக்கான சந்தையில் இவர்களுக்கான

சமூகமதிப்பீடு எந்தவிதமான ஏற்றத்தாழ்வினையும் உண்டாக்குவதில்லை என்பதால் உழைப்பைப் பணமாக்கும் எண்ணத்துடன் பொருளாதார அடித்தட்டிலிருக்கும் பிற சமூகத்தினரும் இவ்விதமான மண்சார்ந்த பொருள் உற்பத்தியில் ஈடுபடுகின்றனர்.

மாற்றுக்களால் முழுமைசெய்ய இயலாத சில மண்சார்ந்த பயன்பாட்டுப் பொருள்களின் தேவை அதிகரிக்கும்போது சமூகத்தில் அவற்றிற்கான மதிப்பும் அதிகரிக்கின்றது. ஆதலால் அதன் பொருட்டு மதிப்புமிக்கதாக மாறிப்போன இத்தொழிலைத் தற்போது குயவர் சமூகம் தவிர்த்த பிற சமூகத்தினரும் செய்ய முன்வருகின்றனர். அவ்வாறானபோது ஏற்கனவே சமூகத்தில் நலிந்த நிலையிருக்கும் குயவர்கள் அத்தொழிலிலிருந்து அந்நியப்படுத்தப்படுகின்றனர். இதற்கு சான்றாக செங்கல் உற்பத்தியைக் கொள்ளலாம். மண்சார்ந்த பொருள் உற்பத்தியில் இதுவும் ஒன்று. இதைக் காலங்காலமாகக் குயவர் சமூகத்தினரே உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். மண்ணால் உருவாக்கப்பட்ட கல்லைச் சுட்டுத் திடப்படுத்தும் தொழில்நுட்பம் இவர்கள் மரபுவழி அறிந்தது. ஆதலால் அதனை இவர்களே உற்பத்தி செய்திருக்கின்றனர். இந்நிலை இயந்திரமயமாக்கத்திற்குப் பிறகான காலகட்டத்தில் பெருத்த மாற்றத்தை உள்வாங்கியிருக்கிறது. இயந்திரங்களின் வருகையால் தொழில் நகரங்கள் உருவானபோதும் இருப்பிடத்திற்கான நிலைத்தன்மை உயர்த்தப்பட்டபோதும் அதற்குத் தேவையான மூலப்பொருள்களான செங்கற்களின் தேவை மிகுதியாயிருக்கின்றன. ஆதலால் செங்கல் உற்பத்தித் தொழிலில் பிற சமூகத்தினர் குயவர் சமூகத்தினருக்குப் போட்டியாக மாறிப்போன நிலை உருவாகியிருக்கிறது. இவ்விடத்தில் மண்சார்ந்த உற்பத்தித் தொழில் மீது கொள்ளப்பட்டிருந்த சமூக இழிநிலை கண்டுகொள்ளப்பட்டிருக்கவில்லை. மாறாக ‘பணம் என்றால் பிணமும் வாய்திறக்கும்’ என்ற பழமொழிக்கிணங்க பணப்பரிமாற்றப் பொருளாக மாறிப்போன செங்கல் உற்பத்தியைச் சமூக அந்தஸ்துகளைக் கட்டிக்காத்த பிற மேல்மட்ட சமூகத்தினரும் செய்கின்றனர். இதை மதிப்புமிக்கதாக மாறிப்போன மண்சார்ந்த உற்பத்தியை அபகரிப்பதற்கான முயற்சியாகக் கொள்ளலாம்.

குயவர் சமூகத்தினரைப் புறந்தள்ளி இத்தொழிலைப் பிற சமூகத்தினர் மேற்கொள்ளும் நிலை தற்போது திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள வந்தவாசி உள்ளிட்ட வட்டாரங்களில் இருந்துவருகிறது. இவ்வட்டாரத்தில் செங்கல் உற்பத்திக்குத் தேவையான களிமண் எடுப்பதில் கடும் போட்டி நிலவுகிறது. இந்தப் போட்டியில் காலங்காலமாக இத்தொழிலைச் செய்துவந்த குயவர்கள் அதிகாரவர்க்கத்தினரால் பின்னுக்குத் தள்ளப்படுகின்றனர். அவ்வூர் ஏரிகளிலிருந்து களிமண் எடுத்துவந்து பொருள் உற்பத்தியை மேற்கொண்ட அவர்களின் வழக்கமான உரிமை பறிக்கப்பட்டிருக்கிறது. இது குறித்த ஆய்வாளரின் கேள்விக்கு வந்தவாசி வட்டாரத்தைச் சார்ந்த குயவர் சமூகம் அல்லாத பிற சமூகத்தினர் பதில் கூறுகையில்,

ஊருக்கு ஊழியம் செய்யறதுக்கு ஏரியில மண்ணெடுக்க நாங்க எப்பவும் தடை சொல்றதில்ல. ஆனால் அதையே சாக்கா வச்சி அவங்க செங்கல் உற்பத்தியை முழுமூச்சா செய்ஞ்சி சென்னைக்கு ஏற்றுமதி செய்யிறாங்க. அதனால ஊர் மக்களுக்கு எந்தவிதமான லாபமும் இல்லை. அப்படியிருக்க அவங்கள மாதிரியே நாங்களும் ஏரியில மண்ணெடுத்து செங்கல் உற்பத்தி செய்ஞ்சி சென்னைக்கு அனுப்பினா அதைப் போட்டின்னு சொல்றாங்க. நீ ஊருக்காக ஒழைச்சா நாங்க ஒண்ணும் சொல்ல போறதில்லை. அத விட்டுட்டு காசு பாக்கறத நோக்கமாவச்சி தொழில் செய்ஞ்சா. அதனால ஊருக்கென்ன லாபம். நாங்க எப்படி சும்மா இருப்போம். நாங்களும் அதையே செய்யிறோம். எனக்கு நீயில்லை. ஒனக்கு நானில்லை. நீ யாரு? நாயாரு? அப்படிங்கறதுதானே தவிர வேற காரணமில்ல (களாய்வு; முருகன் (52): ஆராசூர், 01.04.2009)

என்பதைப் பதிலாக உரைக்கின்றனர். இவர்களின் இவ்விதப் பதிலில் இருந்து சமூக உறவு சிதைந்து போவதற்கான அடிப்படையை அடையாளங்காண முடிகிறது. இது தவிர்த்து மண்பாண்ட பொருளுற்பத்தியில் அதாவது சட்டி, பானை செய்வதில் இவ்வித நெருக்கடி ஏற்பட்டிருந்தால் இவ்விதமான தொழிற்பங்கீடு நடந்தேறியிருக்குமா? என்ற கேள்வி இயல்பாகவே இவ்விடத்தில் எழுகிறது. அவ்வாறு மண்பாண்ட உற்பத்தியில் இவ்வித நெருக்கடி ஏற்படாததும் குயவர்களின் இவ்வித மடைமாற்ற நிலைக்குக் காரணமாகக் கொள்ளலாம்.

மிகுந்த உழைப்பு, குறைந்த கூலி என்ற முறையிலேயே குயவர்களின் மரபான இத்தொழில்நுட்பமுறை காலங்காலமாக அங்கீகரிக்கப்பட்டு வந்திருக்க வேண்டும் என்பதனைக் குயவர்களுக்கான சமூக மதிப்பீட்டிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது. தவிர்த்து குயவர்களின் தொழில்நுட்பம் மற்றும் அவர்களுடைய உற்பத்திப் பொருள்களின் மதிப்பினைப் பொருட்படுத்தாத சமூக இயங்கு தளத்தில் அவற்றின் பயன்பாடு குறையும்போது அவர்களுக்கான சமூகஉறவும் வலுவிழக்கிறது. இதில் தவிர்க்க இயலாத செங்கல் முதலான மண்சார்ந்த பயன்பாட்டுப் பொருள்களின் தேவை அதிகரிக்கும்போதும் மதிப்பு கூடும்போதும் அதைத் தொழில்நுட்பத் திறன்கருதியோ அல்லது அதைக் குயவர்களுக்கான உரிமையாக எண்ணியோ அவை விடுக்கப்படவில்லை. மாறாக மற்ற சமூகத்தினர் அவ்விதமான செங்கல் உற்பத்தியில் ஈடுபட்டுப் பொருளீட்ட விழைகின்றனர். அதற்கேற்ற தொழில்நுட்பஅறிவு அவர்களுக்குக் கைவரப் பெறாதபோது அவ்விதத் தொழில்நுட்ப அறிவுடைய குயவர்களைக் கூலிகளாக அமர்த்தி அவ்விதப் பொருள் உற்பத்தியைத் தொடர்ந்து செய்கின்றனர். வணிகமாகிப் போன இந்நிலையில் குயவர்களின் தொழில்நுட்பத் திறனும் மிகுதியான உடல் உழைப்பும் குறைந்த விலைக்குச் சுரண்டப்படுகின்றன.

பொதுப்படையான உடலுழைப்பினைக் கொண்டு செய்யப்படும் பொருள் உற்பத்தியை யாரொருவரும் மேற்கொள்ளலாம். ஆனால் தொழில்நுட்பத் திறனோடு ஒன்றிய பொருள் உற்பத்தியை அவ்விதமான அறிவற்ற பிறரால் மிகச்சரியாக உற்பத்தி செய்வதென்பது சாத்தியமற்றதாகிறது. ஆகையால்

அவர்களுக்கு மரபான முறையில் அத்தொழிலைச் செய்து வந்தவர்களின் தொழில்நுட்ப அறிவு அவசியமாகிறது. ஆக எந்தவொரு பொருள் உற்பத்திக்கும் உடலுழைப்போடு கூடிய தொழில்நுட்ப அறிவு மிக முக்கியமானதாகிறது. எழுத்தறிவோடு தொடர்பில்லாத இத்தொழில்நுட்ப அறிவு ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரால் தலைமுறை தலைமுறையாகக் கையளிக்கப்பட்டு வந்திருக்கிறது. அவ்வகைப்பட்டவர்களே குயவர்கள். அவ்வாறு இவ்விரண்டிலும் கைதேர்ந்தவர்கள் என்பதாலேயே இவ்விதமான பொருளுற்பத்தியை முதன்மைத் தொழிலாக உடையவர்களை ஊழியக்குடிகளாகப் பண்டைச் சமூகமரபில் நிர்ணயிக்கப்பட்டிருக்கலாம். அப்படியிருக்க உடலுழைப்பினை மட்டுமே மூலதனமாகக் கொண்டு செங்கல் உற்பத்தித் தொழிலில் ஈடுபடும் பிற சமூகத்தாருக்கு அது குறித்த தொழில்நுட்ப அறிவு தேவைப்படும்போது அவ்வறிவுமிக்க குயவர்களைத் தினக்கூலிகளாக அமர்த்தி அப்பொருள் உற்பத்தியை மேற்கொள்கின்றனர். இந்நிலை தொண்டை மண்டல வட்டாரத்தில் பரவலாகக் காணப்படுகின்றது. இதை வந்தவாசி வட்டாரக் குயவரின்,

> மண் வேலையில ஈடுபடறவங்க வேற தொழில்ல ஈடுபட முடியாது. அதேபோல வேற தொழில் செய்யிறவங்க மண்தொழில்ல ஈடுபட முடியாது. மண்தொழில் செய்ஞ்சா அதே தொழில்தான் செய்யமுடியம். அவ்ளோ வேலை இந்தத் தொழில்ல இருக்கு. (கெம்பு உடையார்; பி.இ.*4:38*)

> ஆனால் ஊர்ல செங்கல் சூளை வக்கிற வேலையை உடையார் தவிர்த்த மற்ற சாதியினரும் செய்யிறாங்க. என்னதான் எங்க தொழிலை அவங்க செய்தாலும் எங்கள மாதிரி செய்யமுடியாது. அதனால சூளை வக்கிறதுக்கு எங்களத்தான் கூப்பிடுவாங்க. நானும் தினக் கூலியா போயி சூளைபோட்டு குடுத்துட்டு வருவேன் (மணி; பி.இ.*4:53*)

என்பன போன்ற தகவல்களிலிருந்து அறிய முடிகின்றது.

குறிப்பிட்ட சில வகையான மண்சார்ந்த பயன்பாட்டுப் பொருள்கள் சந்தையை முன்னிலைப்படுத்தி உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆகையால் கூடுதல் மதிப்பினைப் பெற்ற அவ்வித மண்பாண்டப் பொருள்களை உற்பத்தி செய்ய குயவர் அல்லாத பிற சமூகத்தினர் இயந்திரங்களின் உதவியுடன் அவற்றை உற்பத்தி செய்ய விழைகின்றனர். அவ்வாறு நவீனமுறையில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தும் சீமைப் பொருள்கள் என்ற அடைமொழியால் குறிப்பிடும் வழக்கம் தற்போதும் புழக்கத்திலிருக்கிறது. மரபான தொழில்முறையில் குயவர்களால் உற்பத்தி செய்யப்படும் மண்ணாலான செங்கல்லினை 'நாட்டுக்கல்' என்றும் கூரை வேய்வதற்கான ஓடினை 'நாட்டு ஓடு' என்றும் அழைக்கும் வழக்கம் தற்போதும் நடைமுறை வழக்கில் பரவலாக இருந்து வருகிறது. இதற்கு மாற்றாக அல்லது இதையே நவீன முறையில் உற்பத்தி செய்தளிக்கப்படும்போது அவை 'சீமை ஓடு', 'சீமைக்கல்' என்றழைக்கப்படுகின்றன. இது தவிர்த்து இந்த நாடு/சீமை என்ற இவ்வெதிர்மை சமூக இயங்குதளத்தில் பரவலாகக் காணப்படுகின்றது. கால்நடை வகைகளில்

மரபான இன மாடுகளை 'நாட்டுமாடு' என்பதும் மரபான நில விளைபொருளான கரும்பினை 'நாட்டுக் கரும்பு' என்பதும் மரபான மருத்துவ முறையில் பயன்படுத்தப்படும் மருந்துகள் விற்கும் கடையை 'நாட்டு மருந்துக்கடை' என்பதும் மரபான முறையில் உற்பத்தி செய்யப்படும் சர்க்கரையை 'நாட்டுச் சர்க்கரை' என்பதையும் இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். இதற்கு மாற்றாக நவீன முறையில் உற்பத்தி செய்யப்பட்ட சர்க்கரையை 'சீமைச் சக்கரை' என்பதும் நவீன அறிவியல் முறையில் உருவாக்கப்பட்ட கலப்பின வகை மாடுகளை 'சீமை மாடு' என்பதும் கலப்பின வகை கரும்பினை 'சீமைக்கரும்பு' என்பதும் இவ்வேறுபாட்டினைப் பிரித்துக்காட்டும் வழக்காற்றுச் சான்றுகளாகும். இதனடிப்படையில் மண்சார்ந்த மரபான எதுவொன்றையும் நமக்கான தனித்தன்மையாகக் கொள்ளும் மனோபாவம் வெகுமக்களின் நனவிலி மனநிலையில் தற்போதும் இருக்கிறது என்பதை இவ்வகைப்பட்ட உதாரணங்களைக் கொண்டு அறியமுடிகிறது. மேலும், மேற்கூறியனபோன்று எல்லாத்தளங்களிலும் நுழைந்த முதலாளித்துவ எந்திரங்கள் மிகுதியான தொழில்துறைகளை ஆக்கிரமிப்பு செய்து செயல்பட்டுக் கொண்டிருக்கும் இக்காலகட்டத்தில் மரபான தொழில்கள் அனைத்தும் மழுங்கடிக்கப்பட்டதோடு அவை காட்சிப்பொருளாக மாறிப்போன அவலநிலையும் நடந்தேறியிருக்கிறது. ஆதலால் அத்தொழிலைச் செய்துவந்த சமூகத்தினரும் அதிலிருந்து விலகி நடைமுறைத் தேவைக்கேற்ப அது சார்ந்து பொருள் உற்பத்தி செய்வதில் முனைப்புக் காட்டி வருகின்றனர்.

## தொகுப்புரை

- வெகுமக்களிடையே வட்டார அளவிலான ஒருங்கிணைப்பினைப் புழங்குபொருள்கள் ஏற்படுத்தியிருக்கின்றன. புழங்குபொருள்களை பயன்பாட்டடிப்படையில் நோக்கும்போது அவை வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றன. அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள், சடங்குப்பொருள்கள் என்ற இருவகைப்பட்ட நிலையில் பயன்படுத்தப்படும் மண்ணாலான புழங்குபொருள்களை மையமிட்டு வெகுமக்களிடையே உருவாகும் இவ்விதக் கூட்டு மனநிலையினையும், அதன்வழி அவர்கள் நிலைநிறுத்திக் கொள்ளும் அடையாளங்களும் விளக்கப்பட்டிருக்கின்றன.
- நிலம், நில விளைபொருள்களைக்கொண்டு வாழ முற்படுவோர்க்கு அவற்றைத் தங்களுக்கேற்றவாறு மாற்றிக்கொள்ள புழங்குபொருள்கள் தேவைப்படுகின்றன. ஆகையால் இத்தேவையை நிவர்த்திக்கும் பொருளோடும் அதனை உற்பத்திசெய்யும் உற்பத்தியாளர்களோடும் மிகுந்த இணக்கம் கொண்டிருந்திருக்கின்றனர். தேவை கருதிய தொடர்ச்சியான இந்நிலை அதற்கான குடிகள் உருவாகக் காரணமாயிருந்திருக்கிறது. அவ்வாறு உருவாக்கப்பட்ட குடிகள் ஊழியம் செய்யும்படி பணிக்கப்பட்டிருக்கின்றன. மேம்போக்கான பார்வையில் இது அதிகாரமாகப் பட்டாலும், நுணுகி நோக்கும்போது அவர்கள்

வெகுமக்களுடைய அன்றாட வாழ்க்கையின் அங்கமாக மாறியிருப்பதை அறியமுடிகிறது. எனவேதான் அவர்களின்றி இயங்க இயலாத நிலையினை உணர்ந்தவர்களால் இவ்வித ஊழியமுறை நடைமுறைப்படுத்தப்பட்டிருக்க வேண்டும். ஆகவே இதனை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது இவ்வித சமூகத்தளத்தில் குயவர்கள் மிக முக்கியப் பங்கு வகித்தவர்களாக இருந்திருக்கின்றனர்.

- குடிமக்கள் தங்களுக்குத் தேவையான பயன்பாட்டுப் பொருள்களைக் குயவர்களிடம் கேட்டுப் பெற்றிருக்கின்றனர். தேவையை மட்டும் சொல்லி நிற்கும் குடிமக்களுக்குத் தேவையான பொருள்களை மண்ணால் வனைந்துதரும் திறம் குயவர்களுடையது. அந்தவகையில் மண்ணால் உற்பத்தி செய்தளிக்கப்பட்ட பொருள்கள் அனைத்தும் அவற்றிற்கான தனித்தன்மையுடன் காணப்படுகின்றன. அவ்விதமான தனித்தன்மைக் கூறுகள் அவை இன்ன பயன்பாட்டிற்குரியவை என அடையாளங் கண்டுகொள்ளும் வகையில் அமைந்திருக்கின்றன. அதனடிப்படையிலேயே அவையனைத்தும் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன. ஆதலால் அந்தளவில் குயவர்களை மதிக்கும் நிலை ஒவ்வொரு காலகட்டத்திலும் இருந்திருக்கிறது. அந்தவகையில் குடிமக்களின் அன்றாட வாழ்வியல் நகர்விற்கான பயன்பாட்டுப் பொருள்களைச் செய்து தருவதுடன் அவர்களுக்கான நம்பிக்கைச் சார்ந்த சடங்குப்பொருள்களையும் குயவர்களே உற்பத்தி செய்தளித்திருக்கின்றனர். சடங்குப்பொருள்கள் அவரவரின் தொழில், தொழில் சார்ந்த நம்பிக்கைதனைப் பிரதிபலிக்கும்விதமாக அமைந்திருக்கின்றது. இத்தொழில்முறை வழிபட்ட அடையாளத்தை அடிப்படையாகக் கொண்டே ஒன்றுக்கும் மேற்பட்ட சாதிகள் உருவாகியிருக்க வேண்டும். அவ்வாறானபின் அவை நிலைநிறுத்தப்பட்டு பழக்கமாகி, பின்பு வழக்கமாகிப் பின்பற்றப்பட்டிருக்க வேண்டும். அவ்விதப் பின்பற்றுதலில் அவரவர்களுக்கான தனித்த அடையாளத்தைக் கடைபிடிப்பதற்கேற்ப அதற்கான சடங்குமுறைகள் நிகழ்த்தப்பட்டிருக்கின்றன. அப்போது அதற்குத் தேவையான சடங்குப்பொருள்கள் குயவர்களிடம் கேட்டுப் பெறப்பட்டிருக்கின்றன. இவ்வித அடையாளச் சடங்குமுறை நாளடைவில் தொடருவதற்குச் சடங்குப்பொருள்களும் அவற்றை மண்ணால் உற்பத்தி செய்தளிக்கும் குயவர்களும் அவசியப்பட்டிருக்கின்றனர். அந்தவகையில் பிரிந்து நிற்கும் ஒவ்வொரு பிரிவினருக்குமான சடங்குப்பொருள்களையும் அவர்களுக்கான அடையாளங்களையும் அறிந்தவர்களாகக் குயவர்கள் இருந்து வருகின்றனர். இதுவே குயவர்களை மற்ற சமூகத்தினருடன் இணைப்பதாகிறது.

- சாதியடிப்படையில் தனித்தனியேயான பல்வேறுபட்ட சடங்குமுறைகளை நிகழ்த்தும் திறனைத் தன்னகத்தே கொண்டிருக்கும் குயவர்கள் அவ்வப்போது சமூகமதிப்பீட்டில் மதிப்பிற்குரியவர்களாகக் கருதப்பட்டிருக்கின்றனர்.

மேலும் இதனை அடிப்படையாகக் கொண்டு ஒட்டுமொத்தமான ஊர்ச்சடங்கினையும் செய்வதற்கான தகுதி படைத்தவர்களாக இவர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். ஆண்டுக்கு ஒருமுறை அளிக்கப்பெறும் இம்மதிப்பு, மரியாதை ஆண்டு முழுக்க அன்றாடப் பயன்பாட்டுப்பொருள் உற்பத்தியின் வழி ஊழியம் செய்த குயவர்களுக்கு அங்கீகாரமாகவும் ஆறுதலாகவும் இருக்கின்றது. ஆக, குயவர்களால் கடத்தப்பட்டு வரும் சடங்குமுறை ஒவ்வொன்றும் காலப்போக்கில் அதன் பொருளறிந்து (Meaning) நிகழ்த்தப்படாமல் போனாலும் அதற்குப் பயன்படுத்தப்படும் சடங்குப் பொருள்கள் அதற்கான தொன்மத்தைத் தாங்கி நிற்பதைத் தற்போதும் காணமுடிகின்றது. இதற்குத் தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்பட்டு வந்த குயவர்களின் பொருளறிவே அடிப்படை. இதற்குச் சான்றாக மண்ணாலான சாலுகரகம், ஹோமகுண்டச்சட்டி உள்ளிட்ட சடங்குப்பொருள்களைக் கொள்ளலாம். இதனைக் கொண்டு ஆராயும்போது தங்களின் அடையாளத்தை நினைவுகூர நினைக்கும் ஒவ்வொரு சமூகத்தினரும் அதற்கான சடங்கு, சடங்குப்பொருள்கள், அவற்றை உற்பத்தி செய்பவர்கள் ஆகியவற்றுடன் உறவுடையவர்களாகவே திகழ்கின்றனர். இத்னைத் தொடர்ந்து சடங்கிற்கான பொருண்மைகள் நீர்த்துப்போன பிற்காலத்தில், சில பயன்பாட்டுப் பொருள்கள் சடங்கிற்கும், அதேபோல் சடங்கின் மீது கொண்ட அளவற்ற நம்பிக்கையின் காரணத்தால் வளமைச் சடங்கிற்குப் பயன்படுத்தப்பட்ட சில சடங்குப்பொருள்களை அன்றாடப் பயன்பாட்டிற்குமானதாகக் கொள்ளும் வழக்கம் இருந்திருக்கின்றது. இது நடைமுறை வாழ்க்கையோடு சடங்குகள் கொண்டிருக்கும் உறவு நிலையைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

- நம்பிக்கை, சடங்கு, தெய்வம் என்ற பின்னணியோடு தொடர்புடைய குயவர்கள் தெய்வாம்சம் மிக்கவர்களாகக் கருதப்பட்டிருக்கின்றனர். ஆதலால் குடிமக்கள் தங்களால் காரணம் அறிய இயலாத உடல்வாதைகளை நீக்குபவர்களாகக் குயவர்களைக் கொண்டிருக்கின்றனர். இதன்வழி அக்கி எழுதுதல், துண்டு மந்திரம் முதலான சடங்கு வழிப்பட்ட மருத்துவ முறைகள் அவர்களுக்கானதாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

- இவ்வாறு அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள், சடங்குப் பொருள்கள் முதலானவற்றின்வழி குடிமக்களுடன் நெருங்கிய தொடர்புடையவர்களாகத் திகழ்ந்த குயவர்களின் சமூக மதிப்பீட்டினை வாய்மொழி வழக்காற்றுத் தரவுகளை அடிப்படையாகக் கொண்டு இவ்வியல் ஆராய்ந்துள்ளது. மேலும் நவீனத் தொழில்நுட்ப வளர்ச்சிக்குப் பின்னான காலகட்டத்தில் பொதுமைப்படுத்தப்பட்ட இவ்வித மண்சார் பொருள் உற்பத்தி அதற்கான பொருண்மைகளை இழந்து நிற்கும் நிலையையும் இவ்வியல் விவரித்துள்ளது.

தனது அறிவால் தன்னைத்தானே செதுக்கிக் கொள்வதன்வழி தன்னை வளர்த்துக் கொள்ள முனைவது மனித இனம். இவ்வறிவென்பது காலங்காலமாகக் கையளிக்கப்பட்டு வருவது, காலத்திற்கேற்ப உருவாக்கப்படுவது என்ற இரண்டு வகையில் பகுத்துப் பார்க்கலாம். இதில் தேவை கருதி ஒரு காலச்சூழலில் உருவான அறிவுத்தொகுதியானது காலந்தோறும் தொடர்ச்சியாக மனிதகுல வாழ்விற்குப் பயன்படும் வகையில் தலைமுறைதோறும் கடத்தப்பட்டு வருதல்; அதாவது இயற்கைக்கேற்ப தம்மைத் தகவமைத்துக் கொள்ளுதல்; இது முதல்வகை. இரண்டாவது வகையானது பல்வேறுபட்ட நிலவாழ் மக்களுடனான தொலைத்தொடர்பின்வழி உருவான கூட்டுச் சிந்தனையை அடிப்படையாகக் கொண்டு இயற்கையைத் தமக்கேற்றவாறு தகவமைத்துக் கொள்ளும் அறிவு வளர்ச்சி. இதில் முதல்வகையானது பெரும்பாலும் இயற்கையோடு தொடர்புடைய வாழ்முறையை மையமாகக் கொண்டது. ஆனால் இரண்டாவது வகையானது அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. ஆனாலும் இரண்டாம் வகைப்பட்ட அறிவு வளர்ச்சிக்கு முதல் வகைப்பட்ட அறிவே அடிப்படை. அந்த வகையில் மனிதகுல நாகரிகத்தின் தொடக்ககால அறிவானது காலந்தோறும் எவ்விதத்தில் வளர்த்தெடுக்கப்பட்டிருக்கின்றது என்பதையும் அவை இடையிடையே எவ்வகையான மாற்றங்களை உள்வாங்கி வந்திருக்கின்றன என்பதையும் அறிந்துகொள்ள வேண்டிய அவசியமிருக்கிறது. ஏனெனில் அவையே அவரவருக்கான அடையாளம். எனவே ஒவ்வொருவரும் தமது அடையாளத்தைத் தேடி பின்னோக்கிச் செல்வதும் நனவிலியாகத் தனக்குள் புதைந்து கிடக்கும் தமது அடையாளத்தை வெளிக்கொணர வேண்டியதும் காலத்தின் கட்டாயமாயிருக்கின்றது. அந்த வகையில் காலந்தோறும் கடத்தப்பட்டு வந்த அறிவுத் தொடர்ச்சிதனை 'மரபு' என்பதாகக் கருதி அதனை, அதன் தன்மையை அடிப்படையாகக் கொண்டு இரண்டு வகையாகப் பகுக்கப்பட்டது. அவை ஒன்று பொருள்சார் மரபு மற்றொன்று பொருள்சாரா மரபு.

இதில் பொருள்சார் மரபெனப்படுவது இயற்கையைத் தன்வயப்படுத்தி அதனைத் தனக்கான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களாக மாற்றிக் கொள்ளும் மனிதனின் அறிவுத்தொடர்ச்சி. அதேபோல் பொருள் சாரா மரபெனப்படுவது மனிதனின் வாழ்வியல் சார்ந்த மொழியையும் செயலையும் மையமிட்ட அறிவுத் தொடர்ச்சி. இதை மிகவும் சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால் பொருள்சார் மரபெனப்படுவது பயன்பாட்டுப் பொருளின் உருவை மையமிட்டது. பொருள்சாரா மரபெனப்படுவது செய்யும் செயலை மையமிட்டது. இவ்விருவேறுபட்ட தன்மையில் குறிக்கப்படுகின்ற இவையிரண்டும் சமூக இயங்கு தளத்தில் ஒன்றையொன்று சார்ந்து இருப்பவை. இவையே மனித இயங்கியலுக்கான அடிப்படை.

பொருள்சார் அறிவுத் தொடர்ச்சி, பொருள் சாரா அறிவுத் தொடர்ச்சி என்ற இவையிரண்டும் ஒன்றுக்கொன்று நிகரானது. பொருள்சார் அறிவுத் தொடர்ச்சி எனப்படுவது மனித வாழ்வியலுக்கான மிக இன்றியமையாத தேவையை அடிப்படையாகக் கொண்டது. இதனை ஒப்புநோக்கும்போது பொருள்சாரா அறிவுத் தொடர்ச்சிதனை இதற்கடுத்த நிலையிலேயே வைத்துப் பார்க்க இயலும். தொடக்க காலந்தொட்டே இவ்விதப் பொருள்சார் முக்கியத்துவத்தை உணர்ந்தவர்களாக வெகுமக்கள் இருந்திருக்கின்றனர். ஆகவேதான் உடலுழைப்போடும் காலச்சூழலோடும் தொடர்புடைய இவ்விதப் பொருள் உற்பத்திக் கலைதனில் வல்லவர்களை ஊருக்குப் பொதுவானவர்களாகப் பொருள் உற்பத்தி செய்துதர வேண்டி நியமித்திருக்கின்றனர். வேண்டுகோளாகத் தோன்றிய இந்நியமனமுறை நாளடைவில் அதிகாரத்தின் கையில் சிக்கி ஊழியமுறையாகப் பணிக்கப்பட்டிருக்கின்றது. அந்தவகையில் இவ்வகையான பொருள் உற்பத்தி குறிப்பிட்ட சில குடிகளுக்குள்ளாகவே முடங்கிப் போனதால் இதற்கான அடுத்தடுத்தகட்ட வளர்ச்சி குறித்த சிந்தனை பிறருக்கல்லாது இவர்களுக்கு மட்டுமேயானதெனக் கொள்ளப்பட்டது. ஆகையால் இவ்வித அறிவுத் தொடர்ச்சி சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெறாது போயிருக்கின்றது. ஆனால் இவ்வித அறிவுத் தொடர்ச்சியால் தனக்கான அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்துகொண்ட வெகுமக்கள் அதற்கடுத்தகட்ட வளர்ச்சிக்கான பொருள்சாராத அறிவினை வளர்த்துக் கொள்வதில் முனைப்புக் காட்டியிருக்கின்றனர். அவ்வாறு உருவான இவ்வித அறிவானது உடல் உழைப்போடும் காலச்சூழலோடும் பெரிதும் தொடர்பு இல்லாதது. ஆகையால் இதனைக் குறிப்பிட்ட சிலர், சிலகாலச் சூழலில் மட்டுமே செய்யவேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டிருக்கவில்லை. எனவே இவ்வித அறிவுத்தொடர்ச்சி வெகு எளிதில் பரவலாக்கம் பெற்றதுடன் மிகுந்த வளர்ச்சியும் பெற்றிருக்கிறது. மேலும் இவ்வறிவுத் தொடர்ச்சி பலரோடு தொடர்புடையதாக இருந்திருப்பதால் சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றது.

பொருள்சார் அறிவெனப்படுவது சமூக மதிப்பீட்டில் பெருமதிப்பு பெறாது போனதாலும் அவை ஆவணப்படுத்தி வைப்பதற்கு ஏதுவானதாக இல்லாததாலும் அவற்றிற்கான மரபை அறிவதற்கான சான்றுகள் மிகவும் அரிதாகவே கிடைக்கின்றன. ஆனால் பொருள்சாரா அறிவெனப்படுவது சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெற்றிருந்த காரணத்தாலும் அவற்றை எளிதில் ஆவணப்படுத்தி வைக்க இயலும்; அதுவும் தனியுடைமையாகப் பாதுகாக்க இயலும் என்பதாலும் அவற்றிற்கான மரபு மட்டுமே மனிதர்களுக்கான அடையாளம் எனச் சொல்லிக்கொள்ளும் அளவிற்கு வளர்ச்சியடைந்திருக்கின்றது. இதன் உருவாக்கமானது தனிமனிதர் சார்ந்தது என்பதால் இதில் பரிமாற்றத்தின் போதான எதிர்பார்ப்புகள், நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால் பொருள்சார் அறிவெனப்படுவது ஒட்டுமொத்த சமூகத்தோடும் தொடர்புடையது. ஆகையால் காலந்தோறும் அதன் தேவை வலியுறுத்தப்பட்டு பெரியளவில் நெருக்கடிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சமூகத் தேவையை நிவர்த்திக்கும் இவ்விதப் பொருள்

உற்பத்தி எல்லையற்றது, ஆகையால் பெரிய அளவில் இதில் வளர்ச்சி மாற்றம் ஏற்பட்டிருக்கவில்லை. அவ்வாறு மாற்றம் ஏற்பட வேண்டுமாயின் அது ஒட்டுமொத்த சமூகத்தின் ஏற்புடனே நிகழவேண்டிய சூழல் இருந்திருக்கிறது. அதிலும் சடங்குப் பொருள் உற்பத்தியில் வளர்ச்சி மாற்றம் ஏற்படுதலை ஏற்கும் மனநிலை வெகுமக்களிடம் எப்போதும் ஏற்பட்டிருக்கவில்லை. ஏனென்றால் காலந்தோறும் சடங்குமுறை கடத்தப்பட்டு வந்ததைப்போன்று அதற்கான புரிதல்கள் கடத்தப்பட்டிருக்கப்படவில்லை. அவ்வாறு கடத்தப்படாததற்கு அவை அதிகாரமயமாக்கப்பட்டிருந்ததே காரணம் எனலாம். அவ்வாறு அவை அதிகாரப் புனிதத்தோடு தொடர்புபடுத்தப்பட்டிருந்ததால் அவற்றை மாற்றியமைப்பதை மரபு மீறலாகக் கருதி அப்படியே பின்பற்றியிருக்கின்றனர். ஆனால் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் வெகுமக்களின் அன்றாட இயங்கியலை மையமிட்டிருந்தன. அவை அவ்வாறான புனிதத்துடன் தொடர்புபடுத்தப்படாததால், வாழ்வியற் தேவைக்கேற்பச் சிற்சில மாற்றங்களை அவ்வப்போது உள்வாங்கியிருக்கின்றன.

மதிப்புமிக்கதாகக் கருதி திட்டமிடலுடன் ஆவணப்படுத்தி வைக்கப்படாத இவ்விதப் பொருள்சார் மரபுக்கான மிக இன்றியமையாத சான்றுகளில் ஒன்றாக மண்சார் புழங்குபொருள்களைக் கொள்ள முடிகின்றது.

இயற்கையை நேரடி மூலப்பொருளாகக் கொண்டு அதில் தனது பொருளறிவைப் பாய்ச்சிய மனிதனுக்கு மண், அதில் விளையும் மரம், கல் முதலானவையே முதன்மையானதாக இருந்திருக்கின்றது. இம்மூன்றினை அடிப்படையாகக் கொண்டு உருவான புழங்குபொருள் உற்பத்தியில் மனிதனுக்கான தேவைகள் மண்ணைக் கொண்டே மிகுதியான அளவு நிறைவு செய்யப்பட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் அவற்றைத் தனது எண்ணம்போல் எளிதில் வடிவமைத்துக் கொள்ளலாம் என்பதாயிருக்கிறது. இதற்கானச் சான்றுகளை வரலாற்றுத் தரவுகளான இலக்கியங்கள், கல்வெட்டுகள் மற்றும் தொல்லகழ்வாய்வில் கிடைத்த தொல்பொருள்கள் முதலானவற்றிலிருந்து பெறமுடிகின்றது. பொருள்சாரா மரபினைப் பதிவாகக் கொண்ட இவையனைத்திலும் பொருள்சார் மரபுக்கான தரவுகள் இரண்டாந்தரப் பதிவுகளாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

இலக்கியம் என்பது மக்களுடைய விழுமியக் கருத்துகளைச் செவ்விய சொற்களால் விளக்கும் கருவி என்பர் ஆய்வாளர்கள். ஆகவே அவற்றைப் பல புலங்கள் சார்ந்த ஆய்வுக்கான எழுத்தாவணமாகக் கொள்வர். அவ்வாறு இலக்கியங்களை மரபுக்கான / வரலாற்றுக்கான தரவுகளாகக் கொள்ளும்போது அவற்றைக் காலச்சூழலோடு பொருத்தி ஆயவேண்டிய அவசியமிருக்கின்றது. ஆக இலக்கியத்தைத் தரவாகக் கொண்டு அக்காலச் சூழலை அறிதல் என்பது அதன் மரபு அறிவதற்கான அடிப்படை. இதுவரைக்குமான தமிழிலக்கியச் சூழலில் வெகுமக்களின் அக, புற வாழ்க்கை சார்ந்த மரபை அறிவதற்கான ஆய்வுகளே மிகுதியாகச் செய்யப்பட்டிருப்பினும் இவையனைத்தும்

பொருள்சாராத (Non - Material) கருத்துநிலைத் தேடலிலேயே பயணப்பட்டு இருக்கின்றன. இதை ஒருவிதத்தில் இலக்கியம் குறித்த ஒருமுகப்பார்வை என்று கூற முடியும். ஏனெனில் இவை பொருள்சாராத கருத்துநிலையை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டவை. ஆதலால் இவற்றில் அவை மேலோங்கி இருப்பதில் வியப்பேதுமில்லை. ஆயினும் பொருள்சார் கருத்துநிலையை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் இவ்விதப் பொருள்சாரா கருத்துநிலையின் உள்ளிருக்கும் உயிர்நாடியாகப் பொருள்சார் கருத்துகளைக் குறிப்பிட முடியும். இவை வெளிச்சமிட்டுக் காட்டப்பட வேண்டும் என்ற நோக்கத்தில் பதிவு செய்யப்பட்டிருக்காவிட்டாலும், மக்களின் சராசரியான இயக்கத்திற்கு உறுதுணையாயிருக்கும் அவ்வித பொருள்சார் அறிவென்பது அவர்களின் நனவிலி மனதிலிருந்து இயல்பாகவே வெளிப்பட்டிருக்கின்றது. அவ்வாறு வெளிப்பட்ட அவ்வித அறிவினை ஆய்விற்குட்படுத்துவதன் வழி அவற்றினை மீட்டெடுக்க இயலும். அந்தவகையில் இலக்கியங்களில் பதிவாகியிருக்கும் பொருள்சார் மரபிற்கான செய்திகளை நமக்கான அறிவு மரபினைப் பறைசாற்றும் அடையாளக் குறியீடுகளாகக் கொள்ளலாம்.

இலக்கிய வகைப்படுத்தலிலும் காலவரிசைப்படுத்தலிலும் அவற்றின் உள்ளோட்டமாய் இருக்கும் பொருள்சார் அறிவினை அடிப்படையாகக் கொண்டு நிறுவுதல் என்பது எதிர்கேள்வி அற்றதாய் இருக்கும். இதற்குச் சான்றாக சங்கஇலக்கியத் திணைப்பகுப்பினைக் கொள்ளலாம். அதில் உரிப்பொருள் முதன்மைப்படுத்தப்பட்டு முதற்பொருளும் கருப்பொருளும் அதற்குத் துணையாய் நிற்பது என்ற நிலைமாறி முதற்பொருளின் ஒரு பகுதியாகக் குறிக்கப்பெறும் நில விளைபொருளை மையமிட்டு உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்களையும் உரிப்பொருளுக்கு நிகராகக் கொண்டு ஆய்வோமாயின் திணை மரபுக்கான உறுதிப்பாடுகளை அதன்வழி பெறமுடியும் என்பது தக்க சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளது. இது அகத்திணைப் பாடல்களைப் பகுத்துப் பார்ப்பதற்கான உத்திமுறைகளுள் ஒன்று.

'சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார்' என்ற இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்ட அகத்திணைப் பாடல்களில் எந்த ஒன்று நேரடியாகச் சொல்லப்பட்டிருக்கவில்லை. மாறாக ஒன்றை மற்றவற்றுடன் உவமித்து, உருவகப்படுத்திச் சொல்வது வழக்கமாக இருந்திருக்கின்றது. ஆதலால் தனிமனித அக உணர்வைப் பாடவந்த புலவர்கள் அவற்றை நேரடியாகப் பாடாது நிலம், தொழில், புழங்கு (பயன்பாட்டுப்) பொருள்கள் முதலானவற்றின் தன்மையுடன் பொருத்தி உவமித்தும், உருவகப்படுத்தியும் பாடியிருக்கின்றனர். இதனை சுருக்கமாகச் சொன்னால் மக்களையும் அவர்களுக்கான உரிப்பொருளையும் பாடவந்த புலவர்கள் அதனை நேரடியாகப் பாடாமல் அதனை ஒத்த, நிகர்த்தன்மையுடைய முதற்பொருளையும் கருப்பொருளையும் இட்டுக்கட்டிப் பாடியிருக்கின்றனர். இதனைச் சங்க இலக்கிய அகப்பாடல்களின்வழி அறிய முடிகின்றது. ஆகவே இத்தன்மையுடைய அகப்பாடல்களை 'உரிப்பொருளை

மட்டும் முதன்மையாய் வைத்துப் பாகுபடுத்துதல் என்பதுடன் முதற்பொருள், கருப்பொருள்களையும் அதிலும் முக்கியமாகப் (அந்தந்த நிலத்தின் விளைபொருளிலிருந்து அந்தந்த நிலமக்களால் உருவாக்கப்பட்ட முதன்மை அடையாளம் என்பதைக் கருத்தில் கொண்டு) புழங்குபொருள்களுக்கு முக்கியத்துவம் அளித்துத் திணைப்பாகுபாடு செய்தல் என்பது மக்களின் தன்மையை அறிவதற்கு ஏதுவாயிருக்கும். ஏனெனில் புழங்குபொருள் என்பது இயற்கையும் மனிதத் தன்மையும் இரண்டறக் கலந்ததொரு கூட்டுக்கலவை. ஆகவே இரண்டையும் தனித்தனியே பிரித்துப் பார்க்க இயலாது. ஏனெனில், இவை இரண்டும் ஒன்றையொன்று உள்வாங்கியே காணப்படுகின்றன.

சங்க இலக்கியப் புறப்பாடல்களில் இவ்வித நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கவில்லை. குறிப்பிட்ட ஒரு தலைவனின் ஒழுகலாறுகளைப் பாடுவது என்பதன் அடிப்படையில் அமைந்த இவ்விதப் பாடல்களில் அவனது புறச்சூழலான நிலமும் மக்களும் மக்களின் வாழ்க்கைமுறையும் நேரடிப் புலப்பாட்டுத் தன்மை உடையதாய் இருக்கின்றது. ஆதலால், அதில் மக்களின் அன்றாட இயங்கியலைக் குறிக்கும் விதத்தில் வெகு இயல்பாக அவர்கள் பயன்படுத்திய புழங்குபொருள்களையும் அதனில் மிக்கிருக்கும் மண்சார் புழங்குபொருள்களையும் அவற்றை உற்பத்தி செய்து தந்தவர்களையும் பற்றி விரிவாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

ஆக இவ்வாறான புரிதலுடன் சங்க இலக்கியப் பாடல்களைத் தற்கால ஆய்வுச்சூழலை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்த வகையில் தாழி, குதிர், குடம், செங்கல், கலம், சாடி, குழிசி, மஞ்ஞிகை, மண்டை, பானை, தசும்பு முதலான மண்சார் புழங்குபொருள்களையும் அவற்றை உற்பத்தி செய்தளித்தவர்கள் குயவர், வேட்கோவர், மட்பகைஞர் முதலான பெயர்களால் வழங்கப்பட்டிருக்கும் நிலையையும் அறியமுடிகின்றது. இதேபோல், கல்வெட்டுத் தரவுகளிலும் மண்சார் புழங்குபொருள் உற்பத்தியாளர்களைக் குயவர், வேட்கோவர் என்ற இருவேறுபட்ட பெயர்களால் குறிக்கப்பட்ட செய்தி இடம்பெற்றுள்ளது. பெயரளவிலான இவ்வேறுபாட்டிற்குரிய அடிப்படை குறித்து ஆராய்ந்ததன்வழி இவர்கள் சமூக மதிப்பீட்டில் வெவ்வேறான நிலைப்பாட்டினைக் கொண்டிருந்திருக்கின்றனர் என்பதை அவர்களுக்கான ஊழியமுறை வேறுபாட்டினையும், அவர்களிடம் வசூலிக்கப்பட்ட வரி வகைகளையும், அடிப்படையாக வைத்து அனுமானிக்க முடிகின்றது.

கல்வெட்டு என்பது ஒரு பொதுமைப் படுத்தப்பட்ட வரலாற்று ஆவணம். ஆயினும் குறிப்பிட்ட சில அதிகார வர்க்கத்தினரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட செய்திகள் மட்டுமே அதில் வெட்டப்பட்டிருக்கின்றன. மேலும் இவ்வித கல்வெட்டுத் தரவுகளில் பொதுப்பயன்பாட்டுப் பொருள்களாகிய புழங்கு பொருள்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படடிருக்கவில்லை. இதற்குக் காரணம் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களாகிய புழங்குபொருள்களால் மக்களுக்கு நெருக்கடி ஏற்படக்கூடாது என்பதன் அடிப்படையில் அவற்றை

உற்பத்தி செய்துதர அதற்கெனத் தனித்த குடிகள் அமர்த்தப்பட்டதே ஆகும். அவ்வாறு அமர்த்தப்பட்ட குடிகள் தொடர்ச்சியாகப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டதன் விளைவால் வெகுமக்களுக்குப் புழங்குபொருள் சம்பந்தப்பட்ட நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கவில்லை. ஆதலால் அவை சமூகத்தில் பெருமதிப்பீடு பெற்றிருக்கவில்லை. எனினும் இவ்விதத் தரவுகள் பொதுமைப்படுத்தப்பட்டவை என்பதால் இவற்றுள் கலன், குடுவை, குடம், மிடா, பானை, சால், சட்டுவம், சட்டி, கறிச்சட்டி, ஓட்டுட்டி, ஓலோமி, தட்டம், தாலம், மூக்கு வட்டகை, பாலிகை, தூப பாத்திரம், கடாரம் முதலான மண்சார் புழங்குபொருள்கள் குறித்த செய்திகள் மிகுதியானஅளவு பதிவாகியிருக்கின்றன. மேலும் இவ்விதப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்ட தொழிற்குடிகளாகிய குயவர்கள் மீது விதிக்கப்பட்ட வரிவகைகள், குயவர்கள் ஊர்க்குடிகளுக்கும் கோயிலுக்கும் செய்த ஊழியம், அதற்காக அதிகார வர்க்கத்தினரால் அவர்களுக்கு அளிக்கப்பட்ட கொடைகள் முதலானவை குறித்தப் பதிவுகளையும் கொண்டிருக்கின்றன. தொல்தரவுகள் என்பதன் அடிப்படையில் இவற்றையும் மேற்கூறிய இலக்கியத் தரவுகளையும் ஒருங்கே சேர்த்து ஆராயும்போது மண்சார் புழங்குபொருள் உற்பத்தியாளர்களுக்கும் அதன் பயன்பாட்டாளர்களுக்குமான உறவுநிலையில் உருவாகியிருக்கும் மேல்-கீழ் சமூக மதிப்பீட்டினை விளங்கிக் கொள்ள முடிகின்றது.

இதனைத் தொடர்ந்து இவ்வகைப்பட்ட மண்சார் புழங்குபொருள்களுக்கான மரபு குறித்தும் சமகால மதிப்பீடு குறித்தும் தொண்டை மண்டல வட்டாரத்தை ஆய்வுக்களமாகக் கொண்டு ஆராயும்போது தலைமுறை தலைமுறையாகப் பழக்கப்படுத்தலின்வழி கடத்தப்பட்டுவரும் ஆவணப்படுத்தப்படாத இவ்வித அறிவிற்கான நீட்சி பரவலாக்கம் பெற்றிருப்பதை அறிய முடிகின்றது. இவ்வட்டாரத்தில் வாழையடி வாழையாக மண்ணாலான பொருள் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகச் செய்துவருபவர்கள் குயவர், குலாலர் என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றனர். இவ்விருவேறுபட்ட பெயர்களை அடிப்படையாகக் கொண்டு தொண்டை மண்டல வட்டாரத்தில் இருக்கும் மண்பாண்ட உற்பத்தியாளர்கள் இருவேறு வகையாக அடையாளப்படுத்தப்பட்டிருக்கின்றனர். இதில் குயவர் எனப்படுபவர்கள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர். குயவர் என்ற இச்சொல் தொல்தரவுகளின் வழி அறியப்பட்ட குயவர், வேட்கோவர், மட்பகைஞர் என்ற தமிழ்ப்பெயர்களுள் ஒன்றாயிருப்பது இக்கருத்திற்கு வலுசேர்க்கிறது. மேலும் குலாலர் எனப்படுபவர்கள் 'தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர்'. இவர்களுக்கான இப்பெயர் சாதிய / சமஸ்கிருத மயமாக்கலைப் பிரதிபலிப்பதாகிறது. சாதியச் சமூகத்திற்கு ஊழியம்செய்யும் பெரும்பாலான குயவர்கள் தங்களைக் குயவர் என்று சொல்லிக்கொள்வதைக் காட்டிலும் 'குலாலர்' என்று சொல்லிக்கொள்ளவே விரும்புகின்றனர். மேலும் இவர்கள் வெவ்வேறு வட்டாரங்களில் உடையார், வேளார், செட்டியார், பக்த்தர் முதலான வெவ்வேறு வகைப்பட்ட பட்டப் பெயர்களால் (மரியாதைப் பெயர்கள்)

அழைக்கப்படுகின்றனர். மேலும் இவர்கள் தொழில்முறையாலும் சடங்கு முறையாலும் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றனர். அவ்வாறானவற்றில் சடங்குமுறை வேறுபாட்டிற்கு அவர்களின் கோத்திரப் பாகுபாடு அடிப்படையாயிருக்கின்றது.

சமூக அசைவியக்கத்திற்கான மறுக்க முடியாத பங்களிப்பைச் செலுத்தும் குயவர்கள் மண்ணாலான புழங்குபொருள் உற்பத்தியைத் தங்களுடைய முதன்மைத் தொழிலாகச் செய்வதுடன் சடங்கு நிகழ்த்துனர்களாகவும் விளங்குகின்றனர். ஏனெனில் சடங்கு நிகழ்த்தலில் சடங்கிற்கான அத்தனை அர்த்தப்பாடுகளும் பொதிந்திருக்கும்படியான சடங்குப் பொருள்களை உற்பத்தி செய்து தருபவர்களாதலால் அவர்களே அதை நிகழ்த்துவதற்கான தகுதி படைத்தவர்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றனர். தங்களுக்குத் தாங்களே சடங்கு செய்து கொள்பவர்ககளாகவும் தாங்கள் பிற சமூகத்தினர்க்குச் சடங்கு செய்பவர்களாகவும் இருக்கும் இவர்கள் முறையே இதனடிப்படையில் தங்களுக்குள் சிற்சில வேறுபாடுகளைக் கொண்டிருக்கின்றனர். அதேபோல் இவர்கள் தொழில்முறை வேறுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு தள்ளு குசவர்கள், திரிகோல் குசவர்கள் என்றும் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றனர். இப்பாகுபாடு செய்முறையை மையமிட்டதே தவிர செய்பொருளை மையமிட்டதல்ல. ஆதலால் இருதரப்பட்டவர்களுக்கும் ஊசி, தட்டுக்கல், தட்டுக்கட்டை, மூங்கில் பத்தை, தெரசில் துணி முதலான உற்பத்திக் கருவிகள் பொதுவானதாயிருக்கிறது. ஆனால் சக்கரம் மட்டும் செய்முறையை அடிப்படையாகக் கொண்டு துளையிடப்பட்ட சக்கரம், துளையிடப்படாத சக்கரம் என இருவேறுபட்டதாயிருக்கிறது. இவற்றுள் துளையிடப்பட்ட சக்கரத்தைப் பயன்படுத்துபவர்கள் கூடுதல் கருவியாக 'திரிகோல்' எனப்படும் 'திகிரிக்கோலைப்' பயன்படுத்துபவர்களாக இருக்கின்றனர்.

நவீனமயமாக்கப்பட்ட சமூகச் சூழலில் மரபான மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்திக்குத் தேவையான மண்வளம் உள்ளிட்ட முதன்மை மூலப்பொருள்களின் தன்மை குன்றியபோதிலும் அவற்றைத் தரப்படுத்திப் பயன்படுத்தும் திறன்படைத்தவர்களாகத் தற்காலக் குயவர்கள் இருக்கின்றனர். இதை அவர்களுக்கான தொழில்முறை உத்தியின் அடுத்தகட்ட வளர்ச்சியாகக் கொள்ள வேண்டியுள்ளது. மேலும் நவீனயுக வெகுமக்களின் தேவையைக் கருத்தில் கொண்டு அதற்கேற்ப மண்ணாலான பொருள்களை உற்பத்தி செய்து தருபவர்களாகவும் இருக்கின்றனர்.

தொல்தரவுகளின் வழி அறியப்படாத மண்சார்ந்த புழங்குபொருள்கள் பலவற்றை நடைமுறைப் பயன்பாட்டில் காணமுடிகின்றது. வெகுமக்களின் தேவையை நிறைவுசெய்யும் பெரும்பாலான பயன்பாட்டுப் பொருள்கள் மண்ணால் உற்பத்தி செய்யப்பட்டவை. ஆகையால் அவற்றை அன்றாடப் பயன்பாட்டிற்கானவை, சடங்கிற்கானவை என இருவகையாகப் பாகுபடுத்திப் பார்க்க முடிகின்றது. இவற்றுள் அடுகலன்கள், நீர்க்கலன்கள், தானியக்கலன்கள்

முதலானவற்றை முதல்வகைப்பட்டதாகவும் கலசம், கல்யாணப்பானை (சாலுகரகம்), அக்னிச்சட்டி, கொலு பொம்மைகள், மதலம்பிள்ளைகள் முதலானவற்றை இரண்டாம் வகைப்பட்டதாகவும் கொள்ள இயலும். இவை முறையே அந்தந்தப் பயன்பாட்டிற்கு உரியவையாகும்.

தொடக்க காலத்தில் ஒட்டுமொத்த சமூகமும் அசைவியக்கம் பெறவேண்டி பணிக்கப்பட்ட குயவர்களை வெகுமக்கள் எல்லாவிதமான பொருள்தேவைக்கும் எதிர்பார்த்து இருந்திருக்கின்றனர். ஆனால் நவீனமயமான தற்போதைய சமூகச் சூழலில் பானை, சட்டி, குடம் முதலான குறிப்பிட்ட சில அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களுக்காகவும், சடங்குப் பொருள்களுக்காகவும் மட்டுமே வெகுமக்கள் குயவர்களை நாடுகின்றனர். இதுவே இன்றளவில், மண்ணோடும் மரபோடும் தொடர்புடைய மக்களையும் குயவர்களையும் ஒன்றிணைக்கும் இழையாய் இருக்கின்றது. இதில் மண்ணாலான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களின் இடத்தை நவீனப் புழங்குபொருள்கள் இட்டு நிரப்பியதால் அவற்றிற்கான தேவை வெகுவாகச் சுருங்கிப் போனது எனலாம். ஆனால் மரபான முறையில் பின்பற்றப்படும் நம்பிக்கைச் சார்ந்த சடங்குப்பொருள்களை இவ்வித நவீனப் புழங்குபொருள்களால் இட்டு நிரப்ப இயலவில்லை. ஆதலால் இன்றளவும் வாழ்வு / சாவுச் சடங்கிற்குத் தேவையான பொருள்களைக் குயவர்களிடமிருந்து மண்ணால் உற்பத்திசெய்து பெறுவதை வெகுமக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். வெகுமக்களால் நிகழ்த்தப்படும் பெரும்பாலான சடங்குகளின் இயல்புத் தன்மையினை அறிந்தவர்களாகக் குயவர்கள் இருப்பதால் இவ்விதமான சடங்குப்பொருள்களைக் குயவர்களிடமிருந்து பெறுவதை தொண்டை மண்டல வட்டாரத்தில் வசிக்கும் கிராம வெகுமக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இதுதவிர்த்து நகர்ச்சூழலில் இவ்விதமான அர்த்தப்பாடுகள் அற்றுப்போன தட்டையான தன்மையுடைய சடங்குப்பொருள்கள் விற்போரையும் நுகர்வோரையும் காணமுடிகின்றது.

மேலும், இதனைத் தொடர்ந்து சில அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் சடங்குப் பொருள்களாக உருமாற்றம் கொள்வதையும், சில சடங்குப்பொருள்கள் பின்னாளில் அன்றாடப் பயன்பாட்டிற்கானதாக உருமாற்றமடைவதையும் தற்போதைய நடைமுறைச் சூழலில் காண முடிகின்றது. இவற்றை முறையே அவைகளுக்கான மாற்றுப் பரிமாணமாகக் குறிப்பிடலாம். இதற்கு மண்சார் புழங்குபொருள்களுக்கான தேவை குறைந்து போனதே முழுமுதற் காரணம். இவ்வாறு மண்ணாலான புழங்குபொருள்களுக்கான தேவை நீர்த்துப் போனதால் தற்போதைய நடைமுறைச் சூழலில் குயவர்களுக்கும் வெகுமக்களுக்கும் இடையேயான உறவுநிலையில் சுணக்கம் ஏற்படலாயிற்று. ஆதலால், அவ்வித பொருள் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்த பெரும்பாலான குயவர்கள் அத்தொழிலை விடுத்துப் பிறவகை செயற்கை மூலப்பொருள்களைக் கொண்டு அலங்கார பொம்மைகள் உற்பத்தி செய்வதை முதன்மைத் தொழிலாகச் செய்யத் தொடங்கியிருக்கின்றனர். இத்தொழிலை வேற்றுச் சமூகத்தைச் சார்ந்த

சிலரும் செய்கின்றனர். எனவே, தற்போது வெகுவேகமாக உருமாறி வரும் மண்ணாலான புழங்குபொருள்களை உற்பத்தி செய்யும் சில கிராம / நகரக் குயவர்களை வெகுமக்களுடன் இணைக்கும் உறவுத்தளமாகத் திருவிழாக்களும் நகரப் பொதுச்சந்தைகளும் திகழ்கின்றன. தற்போது நமது மரபான பொருளறிவின் சுருங்கிய நிலையை இதுபோன்ற சில இடங்களிலேயே காணமுடிகின்றது.

## *மேலாய்வுக் களங்கள்*

- நவீன அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியால் ஆவணப்படுத்துதல் எளிமையாகியிருக்கிறது. ஆகையால் சமகாலத்தில் எல்லாவிதமான அறிவு வெளிப்பாடுகளும் ஆவணப்படுத்தப்படுகின்றன. இச்சூழலில் ஆவணப்படுத்தப்படாத, ஆவணப்படுத்த இயலாத, ஆவணப்படுத்தி வைக்கும் அளவிற்குச் சமூகமதிப்புப் பெறாத புழங்குபொருள்கள் வெகு வேகமாக மறைந்து வருகின்றன. அதே சமயத்தில் அவ்வித பொருள் உற்பத்தியில் ஈடுபட்டவர்களும் கலாச்சார மற்றும் பொருளாதார நெருக்கடியால் அத்தொழிலை விட்டொழிக்க முனைகின்றனர். அதுமட்டுமின்றி மற்ற புலங்களில் கோலோச்சியிருக்கும் அளவிற்கு எந்தவிதமான நவீன அறிவியல் தொழில்நுட்பங்களும் மரபான அத்தொழிலை அப்படியே கையிலெடுத்துக் கொள்ளும் அளவிற்கு முயற்சி எடுத்திருக்கவில்லை. ஆகவே வெகுவிரைவாக மறைந்து வரும் அல்லது உருமாறி வரும் நமக்கான பொருள் அறிவினை ஆராய்ந்து ஆவணப்படுத்தப்பட வேண்டிய தேவை இருக்கிறது. ஏனெனில் அவை நமக்கான அடையாளம். ஆகையால் அவை குறித்த ஆய்வுகளைத் விரைவாகச் செய்ய வேண்டிய தேவையிருக்கின்றது. இதனடிப்படையில் சமகால வாழ்வில் மதிப்பளிக்கப்படாமல் மறைந்து கொண்டிருக்கும் கல், மரம் முதலான மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்படும் புழங்குபொருள்களை ஆவணப்படுத்தி. அதன் மரபு குறித்து விரிவாக ஆராயலாம்.
- புழங்குபொருள்கள், அவற்றை உற்பத்தி செய்பவர்கள், அவர்களுக்கான சமூக மதிப்பீடு என்பதன் அடிப்படையில் அமைந்துள்ள இந்த ஆய்வினை அடியொற்றி இவற்றை வர்க்க அடிப்படையிலும் ஆராய வேண்டிய அவசியம் இருக்கின்றது.
- இதேபோல் நம்முடைய மரபான தொழில்நுட்ப அறிவின் வேரினை அடையாளங்காணும் பொருட்டுத் தொல்பொருள் அகழ்வாய்வுகளில் கிடைக்கப்பெற்ற புழங்குபொருள்களின் தன்மைகளோடு சமகாலத்தில் உற்பத்தி செய்யப்படுகின்ற புழங்குபொருள்களின் தன்மைகளை ஒப்பிட்டு ஆராயலாம்.
- புழங்குபொருள் உற்பத்தித் தொழிலைப் போன்றிருக்கும் இன்னபிற மரபான குடித்தொழில்களை இதனடிப்படையில் ஆராயலாம்.

இதுபோன்ற தொடர்ச்சியான ஆய்வுகளின் வழி மரபான நமது பொருளறிவின் அடையாளத்தை மீட்டெடுக்க இயலும்.

# முதன்மைத்தரவுகள்

***சங்க இலக்கியம்***


| | | | |
|---|---|---|---|
| *1.* | சாமிநாதையர், உ.வே., | - | புறநானூறு மூலமும் உரையும், கபீர் அச்சுக்கூடம், சென்னை, *1956.* |
| *2.* | சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.) | - | ஐங்குறுநூறு கழக வெளியீடு, சென்னை, *2002.* |
| *3.* | " | - | குறுந்தொகை, கழக வெளியீடு, சென்னை, *2007.* |
| *4.* | " | - | பத்துப்பாட்டு I & II, கழக வெளியீடு, சென்னை, *2007.* |
| *5.* | " | - | பரிபாடல், கழக வெளியீடு, சென்னை, *2007.* |
| *6.* | துரைசாமிப் பிள்ளை, ஔவை., (உ.ஆ.) | - | பதிற்றுப்பத்து, கழக வெளியீடு, சென்னை, *2007.* |
| *7.* | " | - | புறநானூறு, I & II. கழக வெளியீடு, சென்னை, *2002.* |
| *8.* | நச்சினார்க்கினியர் (உ.ஆ.) | - | கலித்தொகை, கழக வெளியீடு, சென்னை, *2007.* |
| *9.* | நாராயணசாமி ஐயர், பின்னத்தூர் (உ.ஆ.) | - | நற்றிணை, கழக வெளியிடு, சென்னை, *2007.* |
| *10.* | வேங்கடசாமி நாட்டார், ந.மு., (உ.ஆ.) | - | அகநானூறு, *1, 2 & 3.* கழக வெளியீடு, சென்னை, *2009.* |

*கல்வெட்டுகள்*

### *தமிழகத் தொல்லியல்துறை வெளியீடுகள்*

1. ஈரோடு மாவட்டக் கல்வெட்டுகள் (தொகுதி I & II ), *2007, 2010.*
2. கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள் (தொகுதி VI), *2008.*
3. காஞ்சிபுரம் மாவட்டக் கல்வெட்டுகள் (தொகுதி I & II), *2006, 2011.*
4. கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள் (தொகுதி I), *2006.*
5. கோவை மாவட்டக் கல்வெட்டுகள் (தொகுதி II), *2007.*
6. சென்னை மாநாகர்க் கல்வெட்டுகள், *2009.*
7. தஞ்சாவூர் வட்டக் கல்வெட்டுகள், *2005.*
8. திருநெல்வேலி மாவட்டக் கல்வெட்டுகள் (தொகுதி I), *2009.*
9. திருவீழிமிழலைக் கல்வெட்டுகள், *1994.*
10. நன்னிலம் கல்வெட்டுகள் (தொகுதி I & II), *1977, 1980, 1980.*
11. பாபநாசம் கல்வெட்டுகள் (தொகுதி I & II), *2004.*

### *இந்தியத் தொல்லியல்துறை வெளியீடு (ASI)*

1. SOUTH INDIAN INSCRIPTIONS (Vol. III, IV, V, VII, VIII, XIII, XIV, XVII, XIX) 1890-2001.

*களஆய்வு*

களஆய்வுத் தரவுகள் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன. (பி.இ.4,5)

## துணைமைத் தரவுகள்

*தமிழ் நூல்கள்*

1. அபிட் ஹுசைன், எஸ்., - இந்தியாவின் தேசியப் பண்பாடு, தட்சிணாமூர்த்தி, க., (மொ.பெ.) நேஷனல் புக் ட்ரஸ்ட், புது தில்லி, *1995.*
2. அம்மன்கிளி முருகதாஸ் - சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், குமரன் புத்தக இல்லம், சென்னை, *2006.*
3. அரசு, வீ., (ப.ஆ.) - வாய்மொழி வரலாறு, தன்னனானே பதிப்பகம், பெங்களூர், *2001.*
4. அருணாச்சலம், மு., - தமிழ் இலக்கிய வரலாறு, தி பார்க்கர் வெளியீடு, சென்னை, *2005.*

5. அருள்ராசு, வே.சா., - பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2002.

6. அழகேசன், ஆர்.கே., - கல்வெட்டுகள் காட்டும் கலைச்சொற்கள், தி பார்க்கர், இராயப்பேட்டை, சென்னை, 2004.

7. ஆறுமுக நாவலர் - நன்னூல் காண்டிகையுரை, தி. இராசநாயகம் அவர்களால் வெளியிடப்பட்டது, சென்னை, 1958.

8. ஆனந்தபாரதி சுவாமிகள், கா.ஆ.,- சாதிபேதத் திறவு, காசி ஸ்வாமி மடம், குன்றக்குடி, 1933.

9. இரவிக்குமார், சு., - குதிரையெடுப்பு, பாலாஜி பதிப்பகம், மதுரை, 1991.

10. இரவிச்சந்திரன், சி.மா., (ப.ஆ.) - கொங்கு நாட்டுப்புற வாழ்வியலும் புழங்குபொருள் பண்பாடும், பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர், 2011.

11. இராசமாணிக்கனார். மா., - பல்லவர் வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2009.

12. இராசவேலு, சு., - தமிழ்நாட்டுத் தொல்லியல் அகழ்வாய்வுகள், பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை, 1995.

13. இராசு பவுன்துரை - தமிழக நாட்டுப்புறக் கட்டடக்கலை மரபு, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2004.

14. இராமசாமி, துளசி., - நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

15. இராமநாதன், ஆறு., - வரலாற்று நிலவியல் ஆய்வுமுறை அறிமுகமும் ஆய்வுகளும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1988.

16. இராமநாதன், ஆறு., - வாழும் மரபுகள், தன்னனானே பதிப்பகம், பெங்களூர், 2001.

17. " - தமிழர் கலை இலக்கிய மரபுகள், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2007.

18. ஈசுவரப்பிள்ளை, தா., - பத்தொன்பதாம் நூற்றாண்டின் சமுதாய மாற்றங்களும் தமிழ் இலக்கியப் போக்குகளும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2006.

19. உலகநாத பண்டிதர் - சாதிபேத விளக்கம், யாழ், சி. செல்லையாப்பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டது, சென்னை, 1909.

20. எட்கர் தர்ஸ்டன் - தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், (ஏழு தொகுதிகள்) ரத்னம், க., (மொ.பெ.) தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2004.

21. கடிகாசலம், ந., (ப.ஆ.) - சங்கப்புலவரின் பல்துறை அறிவு, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2004.

22. கந்தசாமி, செ. இல., - தமிழர் வேளாண்மை மரபுகள், கலைச் செல்வம் பதிப்பகம், கோயமுத்தூர், 1987.

23. காசிநாதன், நடன., - தமிழர் நாகரிகம், தமிழகத் தொல்லியல்துறை வெளியீடு, சென்னை, 1994.

24. கார்த்திகேசு சிவத்தம்பி - சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009.

25. கார்த்திகேசு சிவத்தம்பி - தமிழ்ச் சமூகமும் பண்பாட்டின் மீள் கண்டுபிடிப்பும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1994.

26. " - தமிழின் கவிதையியல், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2007.

27. " - தொல்காப்பியமும் கவிதையும், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2007.

28. " - பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

29. காஞ்சா ஐலைய்யா - பானை செய்வோம் பயிர் செய்வோம், அருணா ரத்னம் (மொ.பெ.) துளிகா வெளியீடு, சென்னை, 2009.

30. காளியப்பன், சே.பெ., (தொ.ஆ.) - குலாலக் களஞ்சியம் திருநீலகண்டன் வெளியீடு, சேலம், 1983.

31. கிரபிவின், வி., - இயக்கவியல் பொருள் முதல் வாதம் என்றால் என்ன? முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1987.

32. கிருஷ்ணமூர்த்தி, வெ., - சோழர் காலத்திய உற்பத்தி முறை, ஆய்வு வட்ட வெளியீடு, சென்னை, 1985.

33. கிருஷ்ணராஜா, சோ., - பண்பாடு - சமூக மெய்யியல் நோக்கு, குமரன் புத்தக இல்லம், சென்னை, 2010.

34. குழந்தை வேலன், க., - தமிழிய வாழ்வில் கல்லும் சொல்லும், பைந்தமிழ்ப் பாசறை, சென்னை, 2000.

35. கைலாசபதி, க., - அடியும் முடியும், பாரி நிலையம், சென்னை, 1970.

36. " - தமிழ் வீரநிலைக் கவிதை, பாலசுப்பிரமணியன், கு.வெ., (மொ.பெ) குமரன் புத்தக இல்லம், சென்னை, 2006.

37. சசிவல்லி, வி.சி., - பண்டைத் தமிழர் தொழில்கள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1989.

38. சஞ்சீவி, ந., - சங்க இலக்கிய ஆராய்ச்சி
அட்டவணைகள்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1973.

39. சண்முகசுந்தரம், சு., - நாட்டுப்புற இலக்கிய வரலாறு,
மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1980.

40. சண்முகசுந்தரம், சு., - நாட்டுப்புறவியல்,
காவ்யா பதிப்பகம், சென்னை, 2007.

41. " - நாட்டுப்புறவியல் : ஆய்வுக்
கோட்பாடுகள்,
தன்னனானே பதிப்பகம்,
பெங்களூர், 2000.

42. சரஸ்வதி வேணுகோபால் (ப.ஆ.) - தமிழக நாட்டுப்புறக் கைவினைக்
கலைகள்,
நாட்டுப்புறவியல் ஆய்வு மையம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2000.

43. சாந்தி, க., (ப.ஆ.) - நாட்டுப்புறவியல் ஆய்வுத்தளங்கள்,
அகல் வெளியீடு, சென்னை, 2005.

44. சிங்காரவேலு முதலியார், ஆ.,- அபிதான சிந்தாமணி,
ஆசியவியல் கல்வி நிறுவனம்,
சென்னை, 1981.

45. சிந்தியா ஃபிரீலேண்ட் - கலைக்கோட்பாடு,
பாபு ராஜேந்திரன், செ., (மொ.பெ.)
அடையாளம் வெளியீடு, சென்னை, 2005.

46. சிவசுப்பிரமணியன், ஆ., - நாட்டார் வழக்காற்றியல் அரசியல்,
கங்கு வெளியீடு, சென்னை, 2005.

47. " - வரலாற்றுப் பொருள்முதல்வாதம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2009.

48. சுப்பிரமணியப்பிள்ளை, கா., - இலக்கிய வரலாறு,
காவ்யா பதிப்பகம், சென்னை, 2007.

49. சுப்பிரமணியன், ச.வே., - பன்னிரு திருமுறை,
மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2007.

50. சுப்பிரமணியன், பெ., - தமிழக நாட்டுப்புறவியல்,
காவ்யா பதிப்பகம், சென்னை, 2009.

51. செல்வராஜ், கா.ஆ., - தமிழர் கைவினைப் பொருள்கள்,
அகரம் வெளியீடு, தஞ்சாவூர், 2006.

52. சௌந்தர பாண்டியன், சு., (ப.ஆ.) - தொண்டை மண்டல வரலாறுகள்,
அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம்,
சென்னை, 1997.

53. தங்கராசு, மு., - சங்க இலக்கியத்தில் நிலவியல்,
தமிழ்மலர் பதிப்பகம், சென்னை, 2000.

54. தமிழண்ணல் - சங்க இலக்கிய ஒப்பீடு,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1975.

55. தர்மதீர்த்த அடிகளார், தவத்திரு - இந்துமதக் கொடுங்கோன்மையின் வரலாறு,
சாளரம் வெளியீடு, சென்னை, 2003.

56. தனஞ்செயன், ஆ., - சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

57. தனஞ்செயன், ஆ., - விளிம்புநிலை மக்கள் வழக்காறுகள்,
வல்லினம் வெளியீடு, புதுச்சேரி, 2006.

58. தனிநாயகம் அடிகள், எஸ்., - தமிழர் பண்பாடும் அதன் தனிச்சிறப்புகளும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

59. தாமஸ் ட்ரவுட்மன், - திராவிடச் சான்று,
ராமசுந்தரம் (தமிழில்),
காலச்சுவடு பதிப்பகம், சென்னை, 2007.

60. திருஞானசம்பந்தன், ஆ.பா., - காஞ்சிபுர மாவட்ட வரலாறு,
தேன்மொழி பதிப்பகம், சென்னை, 2002.

61. தொல்காப்பியர் - தொல்காப்பியம், எழுத்ததிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், (கணேசய்யர் பதிப்பு), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2007.

62. " - தொல்காப்பியம், சொல்லதிகார மூலமும் சேனாவரையர் உரையும், (கணேசய்யர் பதிப்பு), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2007.

63. " - தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும், I & II. (கணேசய்யர் பதிப்பு), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2007.

64. பக்தவத்சல பாரதி - தமிழகப் பழங்குடிகள், அடையாளம் வெளியீடு, சென்னை, 2007.

65. " - தமிழர் மானிடவியல், அடையாளம் வெளியீடு, சென்னை, 2008.

66. " - பண்பாட்டு மானிடவியல், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2003.

67. " - மானிடவியல் கோட்பாடுகள், வல்லினம் வெளியீடு, புதுச்சேரி, 2005.

68. பஞ்சாங்கம், க., - சங்க இலக்கியம், காவ்யா வெளியீடு, சென்னை, 2007.

69. பரமசிவன், தொ., - தெய்வங்களும் சமூக மரபுகளும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2006.

70. பவுல்பான் - தொல்லியல், சுந்தர், கோ., (மொ.பெ.) அடையாளம் வெளியீடு, சென்னை, 2007.

71. பார்த்திபராஜா, கி., - தமிழ்மொழி அரசியல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

72. பெர்பேஷ்கினா, ஸி., - வரலாற்று பொருள் முதல்வாதம் என்றால் என்ன?
முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ, 1987.

73. மனோன்மணி, தி., - தொல்லியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

74. மாணிக்கம், வ.சுப., - தமிழ்க்காதல்,
மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2005.

75. மீனாட்சி சுந்தரனார், தெ.பொ., - தமிழும் பிற பண்பாடும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1973.

76. முத்தையா, இ., - அடித்தள மக்களின் குறியீட்டுப் பயண வெளிகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

77. " - அடித்தள மக்கள் தொடர்பான பண்பாட்டுச் சொல்லாடல்கள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

78. முருகையன். மு., அரங்க. - காலந்தோறும் சாதி,
கரனேஷன் பதிப்பகம், புதுச்சேரி, 1999.

79. ராகவன், அ., சாத்தன்குளம் - ஆதித்த நல்லூரும் பொருநைவெளி நாகரிகமும்,
அமிழ்தம் பதிப்பகம், சென்னை, 2007.

80. " - தமிழ்நாட்டுத் திருவிளக்குகள்,
அமிழ்தம் பதிப்பகம், சென்னை, 2007.

81. ராகவையங்கார். மு., (தொ.ஆ.) - பெருந்தொகை,
செந்தமிழ் பிரசுரம், மதுரை, 1935.

82. ராஜ்கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்,
தமிழினி பதிப்பகம், சென்னை, 2006.

83. ராஜன், கா., - தொல்லியல் நோக்கில் சங்ககாலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 2004.

84. லூர்து, தே., - சூழலியம்,
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை, 2008.

85. " - தமிழ்ப் பழமொழிகள்: அமைப்பு,
பொருண்மை, செயல்பாடு,
யுனைடெட் ரைட்டர்ஸ், சென்னை, 2007.

86. " - நாட்டார் வழக்காற்றியல்
கோட்பாடுகள்,
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை, 2000.

87. " - நாட்டார் வழக்காற்றியல் : சில
அடிப்படைகள்
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை, 2008.

88. வசந்தாள், த., - தமிழிலக்கியத்தில் அகப்பொருள்
மரபுகள்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1990.

89. வரதராசன், மு, - பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,
பாரி நிலையம், சென்னை, 1979.

90. வள்ளலார் - திருஅருட்பா வியாக்கியானப் பகுதி,
பாலகிருஷ்ணப்பிள்ளை, ஆ., (ப.ஆ.)
நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2010.

91. வானமாமலை, நா., - தமிழர் வரலாறும் பண்பாடும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1966.

92. வீரமணி, கி., (ஆ.உ.) - அசல் மனுதரும சாஸ்திரம்,
திராவிடர் கழக வெளியீடு,
சென்னை, 2009.

93. வேங்கடசாமி, சீனி., மயிலை., - தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2005.

94. வேலுப்பிள்ளை, ஆ., - தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2004.

95. வைத்தியலிங்கம், செ., - தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, (தொகுதி-5) அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, சிதம்பரம், 2008.

96. வையாபுரிப்பிள்ளை, எஸ்., - தமிழர் பண்பாடு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1962.

97. ஜகந்நாதன், கி.வா., - தமிழ்ப் பழமொழிகள், காந்தமலை வெளியீடு, சென்னை, 1989.

98. ஜான் மோனகன் - சமூக - பண்பாட்டு மானிடவியல், பக்தவத்சல பாரதி (மொ.பெ.), அடையாளம் வெளியீடு, சென்னை, 2005.

99. ஜானதன் கல்லர் - இலக்கியக் கோட்பாடு, சிவக்குமார், ஆர்., (மொ.பெ.) அடையாளம் வெளியீடு, சென்னை, 2005.

100. ஜெகதீசன், ஆ., - தமிழ் இலக்கியத்தில் கல்வெட்டியல் கூறுகள், ராமையா பதிப்பகம், சென்னை, 2008.

101. கச்சபாலய ஐயர், வித்வான். - தனிப்பாடல் திரட்டு, வித்யா ரத்நாகரம் பிரஸ், சென்னை, 1940.

112. கோவேந்தன், த., - சித்தர் பாடல்கள், பூம்புகார் பிரசுரம், சென்னை, 1979.

### ஆங்கில நூல்கள்

113. DORSON, M., RICHARD, (Editor) - Folklore and Folk Life, The Univerisity of Chicago Press, Chicago, 1983.

114. GURUMURTHY, S., - Ceramil Traditions in South India, University of Madras, Chennai, 1981.

115. HENDRY GLASSIC - Material Culture, Indiana University Press, Bloomington, 1999.

116. SCHLERETH, J. THOMAS - Material Culture, University Press of Kansas, Pennsylvania, 1985.

117. SCHOEMAKER, H., (Editor) - The Emergence of Folklore in Everyday Life, Trickster Press, Bloomington, 1990.

118. STEPHEN ENGLIS - A Village Art of South India, Madurai Kamarajar University, Madurai, 1980.

119. MAHALINGAM. T.V. - South India Polity, University of Madras, Chennai, 1967.

120. VAITHILINGAM. S., - Fine Arts and Crafts in Pattu-P-Pattu and Ettu-T-Tokai, Annamalai University, 1977.

***கட்டுரைகள்***

1. இராசேந்திரன், அ., (க.ஆ.) - சிறுதெய்வ நம்பிக்கைகள், *(நாட்டுப்புறவியல் ஆய்வுத்தளங்கள்)*, சாந்தி, க., (ப.ஆ.) அகல் வெளியீடு, சென்னை, 2005.

2. குப்புசாமி, கர்னல்., (க.ஆ.) - திருநீலகண்டர், *(குலாலர் மாநாட்டு சிறப்பு மலர் - 2010)*, தமிழ்நாடு மண்பாண்டத் தொழிலாளர்கள் (குலாலர்) சங்கம், சென்னை.

3. பக்தவத்சலபாரதி (க.ஆ.) - நாட்டுப்புறக் கைவினைக் கலைகளும், சமயமும்,

முத்தையா, இ., (க.ஆ.) - மரபுவழி, நவீனத்துவ, பின்நவீனத்துவக் கைவினைக் கலைகள், *(தமிழக நாட்டுப்புறக் கைவினைக் கலைகள்)* நாட்டுப்புறவியல் ஆய்வு மையம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2000.

***ஆய்வேடுகள்***

***தமிழ்***

1. சாந்தலிங்கம். சோ. - தொண்டை மண்டலம் - நாடும் ஊரும், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, மதுரை, 2005.

2. முத்துவேல். ச., - திண்டுக்கல் மாவட்ட மண்பாண்டக் கலை - ஓர் ஆய்வு, தமிழ்த்துறை, நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி, 2008.

***ஆங்கிலம்***

2. THIRUGNANASAMBANDHAM. B.- Territoriol Division's and Economic Trends of Tondamandalam, Dept. of History, Directorate of Distance Education, University of Madras, 2008.

***சுவடி***

1. மெக்கன்சி, காலின்., - தொண்டை மண்டல வரலாறு (தாள் சுவடி) அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

***அகராதிகள்***

***தமிழ்***

1. ஆசிரியர் குழு - கழகத் தமிழ் அகராதி, கழக வெளியீடு, சென்னை, 1979.

2. " - செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்டஇயக்கக வெளியீடு, சென்னை, 2005.

3. " - தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதி, சாந்தி சாதனா, சென்னை, 2003.

4. " - தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.

5. " - வரலாற்றுமுறைத் தமிழ் இலக்கிய பேரகராதி, சாந்தி சாதனா வெளியீடு, சென்னை, 2001.

6. கதிரைவேற்பிள்ளை, நா., - தமிழ்மொழி அகராதி, கௌமாரீஸ்வரி, எஸ்,, (ப.ஆ.) சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

7. சுப்பிரமணியன், ச.வே., - கல்வெட்டுச் சொல்லகராதி, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை, 2011.

8. ராஜன், எ.மு., - புதுச்சேரி கிராமியத் தமிழ் அகராதி, புதுச்சேரி கூட்டுறவு புத்தகச் சங்கம், புதுச்சேரி, 2002.

**ஆங்கிலம்**

9. JOHANN PHILLIP FABRICIUS - Tranquebar Tamil - English Dictionary, Asian Educational Services, Chennai, 2006.

10. WINSLOW. R., - A Comprehensive Tamil - English Dictionary, Asian Educational Services, Chennai - 2006.

***நிகண்டு***

1. ஆசிரியர் குழு - சேந்தன் திவாகரம், பிங்கலம், சூடாமணி, சாந்தி சாதனா வெளியீடு, சென்னை, 2004.

***களஞ்சியம்***

1. ஆசிரியர் குழு - வாழ்வியற் களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

# தகவலாளிகள் பட்டியல்

| வரிசை எண். | தகவலாளியின் பெயர் | வயது | பாலினம் | கல்வித் தகுதி | தாய் மொழி | சாதி | கோத்திரம் | தொழில் | களஆய்வு நாள் | முகவரி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | முனுசாமி | 70 | ஆண் | இல்லை | தமிழ் | குயவர் | சிவகோத்திரம் | மண்பாண்டம் செய்தல் | 12.04.2009 | கீழ்மாம்பட்டு, செஞ்சிவட்டம், விழுப்புரம் மாவட்டம் |
| 2. | மண்ணாங்கட்டி | 66 | ஆண் | 3-ஆம் வகுப்பு | " | " | " | " | 06.05.2009 | தேவதானம்பேட்டை, செஞ்சி வட்டம், விழுப்புரம் மாவட்டம். |
| 3. | அரிபரந்தாமன் | 65 | ஆண் | 5-ஆம் வகுப்பு | " | வன்னியர் | விஷ்ணு கோத்திரம் | விவசாயம் | 07.05.2009 | " |
| 4. | மணிமேகலை | 61 | பெண் | 10-ஆம் வகுப்பு | " | " | " | " | 07.05.2009 | " |
| 5. | தண்டபாணி | 61 | ஆண் | 10-ஆம் வகுப்பு | " | " | " | அஞ்சல்காரர் | 09.05.2009 | " |
| 6. | பாலகிருஷ்ணன் | 78 | ஆண் | 5-ஆம் வகுப்பு | " | " | " | கொத்தனார் | 10.05.2009 | " |
| 7. | கெம்பு உடையார் | 82 | ஆண் | இல்லை | " | குயவர் | சிவகோத்திரம் | மண்பாண்டம் செய்தல் | 27.03.2007 | வெண்கலம், வந்தவாசி வட்டம், திருவண்ணாமலை மாவட்டம் |
| 8. | ஸ்ரீரங்கம் | 52 | ஆண் | இல்லை | " | " | " | " | 29.03.2009 | தெள்ளூர், வந்தவாசி வட்டம் திருவண்ணாமலை மாவட்டம். |
| 9. | மணி | 48 | ஆண் | 10-ஆம் வகுப்பு | " | " | " | " | 29.03.2009 | ஆராசூர், வந்தவாசி வட்டம், திருவண்ணாமலை மாவட்டம் |
| 10. | சண்முகம் | 54 | ஆண் | 10-ஆம் வகுப்பு | " | " | " | " | 30.03.2009 | தெள்ளூர், வந்தவாசி வட்டம். திருவண்ணாமலை மாவட்டம். |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 11. | பூபாலன் | 78 | ஆண் | இல்லை | தமிழ் | குயவர் | சிவகோத்திரம் | மண்பாண்டம் செய்தல் | 29.03.2009 | தெள்ளூர், வந்தவாசி வட்டம், திருவண்ணாமலை மாவட்டம். |
| 12. | முருகன் | 52 | ஆண் | 12-ஆம் வகுப்பு | " | ரெட்டியார் | விஷ்ணு கோத்திரம் | விவசாயம் | 01.04.2009 | ஆராசூர், வந்தவாசி வட்டம், திருவண்ணாமலை மாவட்டம் |
| 13. | சங்கர் | 53 | ஆண் | 9-ஆம் வகுப்பு | தெலுங்கு | குலாலர் | " | பொம்மை செய்தல் | 03.04.2010 | அஸ்தகிரி தெரு, சின்னக் காஞ்சிபுரம், காஞ்சிபுரம் மாவட்டம். |
| 14. | சுப்ரமணிய உடையார். சு. | 55 | ஆண் | 8-ஆம் வகுப்பு | " | " | " | மண்பாண்டம் செய்தல் | 18.05.2010 | மழுவன்கரணை, செய்யூர் வட்டம், காஞ்சிபுரம் மாவட்டம். |
| 15. | நீலகண்ட உடையார் | 72 | ஆண் | 5-ஆம் வகுப்பு | தமிழ் | குயவர் | சிவகோத்திரம் | " | 14.04.2009 | வேடபாளையம் உத்திரமேரூர் வட்டம், காஞ்சிபுரம் மாவட்டம். |
| 16. | லோகநாதன். டி | 60 | ஆண் | 8-ஆம் வகுப்பு | " | " | " | " | 22.04.2009 | ஊத்துக்காடு, வாலாஜாபாத் வட்டம், காஞ்சிபுரம் மாவட்டம். |
| 17. | கண்ணன் | 52 | ஆண் | 5-ஆம் வகுப்பு | " | " | " | " | 18.03.2009 | சென்னசமுத்திரம், ஆற்காடு வட்டம், வேலூர் மாவட்டம். |
| 18. | விஜயா | 45 | பெண் | 7-ஆம் வகுப்பு | " | " | " | " | 20.03.2009 | எசயனூர், ஆற்காடு வட்டம், வேலூர் மாவட்டம். |
| 19. | பூங்காவனம் | 80 | ஆண் | 3-ஆம் வகுப்பு | " | " | " | " | 05.05.2009 | லப்பை பேட்டை, ஆற்காடு வட்டம், வேலூர் மாவட்டம். |
| 20. | ராஜகிளி | 80 | ஆண் | 11-ஆம் வகுப்பு | தமிழ் | குயவர் | சிவகோத்திரம் | ஆசிரியர் | 10.04.2009 | துறிஞ்சிக்குப்பம், ஆற்காடு வட்டம், வேலூர் மாவட்டம். |
| 21. | திருப்பதி | 65 | ஆண் | பி.ஏ., | " | " | " | தணிக்கையர் | 08.06.2009 | காந்தி நகர், திருப்பத்தூர், வேலூர் மாவட்டம். |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 22. | தங்கவேலு | 59 | ஆண் | 5-ஆம் வகுப்பு | தமிழ் | குயவர் | சிவகோத்திரம் | அடுப்பு செய்தல் | 12.06.2009 | சோளிங்கர், வேலூர் மாவட்டம். |
| 23. | ஏழுமலை உடையார் | 84 | ஆண் | 4-ஆம் வகுப்பு | " | " | " | மண்பாண்டம் செய்தல் | 27.04.2010 | வைகுண்டபுரம், சென்னை-34. |
| 24. | விநாயகம் | 67 | ஆண் | 8-ஆம் வகுப்பு | தெலுங்கு | குலாலர் | விஷ்ணு கோத்திரம் | பொம்மை செய்தல் | 04.06.2009 | சச்சிதானந்தன் தெரு, கொசப்பேட்டை, சென்னை. |
| 25. | ஜோதிலிங்கம் | 61 | ஆண் | பி.எஸ்.சி., | " | " | " | " | 09.05.2010 | கந்தசாமிகோயில்தெரு, கொசப்பேட்டை, சென்னை. |
| 26. | லோகநாதன். சி. | 38 | ஆண் | 8-ஆம் வகுப்பு | " | " | " | மண்பாண்டம் செய்தல் | 06.06.2009 | தெற்கு மாடவீதி, கொளத்தூர், சென்னை. |
| 27. | கதிர்வேல் உடையார் | 78 | ஆண் | இல்லை | தமிழ் | குயவர் | சிவகோத்திரம் | " | 04.06.2009 | லாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14. |
| 28. | சரோஜா | 54 | பெண் | 8-ஆம் வகுப்பு | தமிழ் | குயவர் | " | " | 06.06.2009 | கலெக்டர் நகர், பாடி, சென்னை. |
| 39. | ஜெயராமன் உடையார் | 65 | ஆண் | 6-ஆம் வகுப்பு | தெலுங்கு | உடையார் | விஷ்ணு கோத்திரம் | " | 02.06.2010 | சாலியர்பேட்டை, பொன்னேரி, திருவள்ளூர். |
| 30. | சுதாகர் | 31 | ஆண் | 10-ஆம் வகுப்பு | தமிழ் | குலாலர் | " | " | 03.06.2009 | அகரம், திருவள்ளூர் மாவட்டம். |
| 31. | சுப்பிரமணிய உடையார் | 70 | ஆண் | இல்லை | " | குயவர் | சிவகோத்திரம் | " | 29.05.2010 | வடக்கநூர், திருவள்ளூர் மாவட்டம். |
| 32. | மோகன் | 48 | ஆண் | 8-ஆம் வகுப்பு | " | " | " | " | 15.03.2009 | வெங்கடேஸ்வரா நகர், ராமாபுரம், திருவள்ளூர் மாவட்டம். |
| 33. | நீலாவதி | 69 | பெண் | இல்லை | தெலுங்கு | குலாலர் | விஷ்ணு கோத்திரம் | " | 18.06.2010 | காணியம்பாக்கம், திருவள்ளூர் மாவட்டம். |

# பின்னிணைப்புகள்

1. சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ள மண்சார்ந்த புழங்குபொருள் தரவுகள்.
2. இந்தியத் தொல்லியல்துறை வெளியிட்ட தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் மற்றும் தமிழகத் தொல்லியல்துறை வெளியிட்ட கல்வெட்டுத் தொகுதிகள் ஆகியவற்றில் உள்ள கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து சேகரிக்கப்பட்ட மண்சார்ந்த புழங்குபொருள் பதிவுகள்.
3. தொண்டைமண்டலம் - வரைபடங்கள்.
4. தொண்டைமண்டலம் சார்ந்த தகவலாளிகளின் நேர்காணல்கள்.
5. மண்சார்ந்த புழங்குபொருள்களின் நிழற்படங்கள்.

*இத்தரவுகளில் மண்சார்ந்த புழங்குபொருட்கள் அனைத்தும் அகரவரிசையில் தனித்தனியாகக் கலம், குடம், குழிசி, மண்டை, வட்டில், வள்ளம், சாடி, பிழா, தசும்பு, தாழி, ஈமத்தாழி, குதிர், கூடு (நெற்கூடு), மஞ்ஞிகை என வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. இறுதியில் குயவர் குறித்த பதிவுகளும் உள்ளன. அதனுள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு தொகுப்பினைப் பற்றிய பழம்பாடலில் குறிப்பிட்டுள்ள நூல்வரிசை முறைப்படி பதிவுகள் அமைக்கப்பட்டுள்ளன.*

## 1. கலன்கள்

. . . . . . . நல்வினைப்
பொறியழி பாவையிற் கலங்கி நெடிது நினைந்து
ஆகம் அடைந்தோளே அதுகண்டு
ஈர்மண் செய்கை நீர்படு பசுங்**கலம்**
பெருமழைப் பெயற்கேற் றாங்காம்
பொருண்மலி நெஞ்சம் புணர்ந்து வந்தன்றே

(நற். *308:6-11*)

கன்றும் உண்ணாது **கலத்**தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துஉக் காஅங்

(குறு. *27:1-2*)

நல்லுரை யிகந்து, புல்லிரை தாஅய்ப்,
பெயல்நீர்க் கேற்ற பசுங்**கலம்** போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி,
அரிதவா உற்றனை நெஞ்சே . . .

(குறு. *29:1-4*)

**புதுக்கலத்** தன்ன கனிய வாலம்

(ஐங். *303:1*)

தீம்பால் கறந்த **கலமா**ற்றி கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த

(கலி. *111:1-2*)

மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
**கலத்**தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையான் நாணிலி நீ

(கலி. *116:15-17*)

இலங்குமலை புதைய வெண்மழை கவைஇக்
**கலஞ்**சுடு புகையிற் றோன்றும் நாட

(அகம். *308:5-6*)

புது**கலத்** தன்ன செவ்வாய்ச் சிற்றில்
புனையிருங் கதுப்பினின் மனையோ ளயரப்
பாலுடை அடிசில் தொடீஇய

(அகம். *394:9-11*)

கூழும் சோறும் கடைஇ ஊழின்
உள்ளில் **வறுங்கலம்** திறந்து . . . .

(புறம். *160:20, 21*)

இருடிணிந் தன்ன குரூஉத்திரட் பரூஉப்புகை
அகலிரு விசும்ப னூன்றுஞ் சூளை
நனந்தலை மூதூர்க் **கலஞ்**செய் கோவே . . .

(புறம். *228:2-4*)

. . . . . . . . . . . . . . . . . நார் அரி
சிறு**கலத்து** உகுப்பவும் கொள்வன் கொல்லோ

(புறம். *232:4-5*)

புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்**கல னு**டைய
மன்றிந் பாயும் வன்புலத்துதுவே . . . . .

(புறம். *322:4-6*)

வனை**கலத்** திகிரியிற் குமிழி சுழலும்
துனைசெலந் தலைவாய் ஓவிறந்து வரிக்கும்
காணுநர் வயாஅங் கட்கின் . . . . . . . .

(மலைபடு. *474-476*)

## 2. அடுகலன்கள்

### *2.1.* குடம்

பல்பூங் கானல் முள்ளிலைத் தாழை
சோறுசொரி **குடவ**யின் கூம்புமுகை அவிழ
வளிபரந்து ஊட்டும் வளிவில் நாற்றமொடு

(நற். *335:4-6*)

தொழிற் செருக் கனந்தர் வீட எழிற்றகை
வளியொடு சினைஇய வண்டளிர் மாஅத்துக்
கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்
புளிப்பதன் அமைத்த **புதுக்குட** மலிர்நிறை

வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடைக்
கயமண்டு பகட்டிற் பருகிக் காண்வரக்

(அகம். 37:5-11)

உச்சிக் **குட**த்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று

(அகம். 86:8-11)

பிணரழி பெருங்கை புரண்ட கூவல்
தெண்கண் உவரிக் குறைக்**குட** முகவை
அறனிலாளன் தோண்ட வெய்துயிர்த்துப்
பிறைநுதல் வெயர்ப்ப உண்டனள் கொல்லோ

(அகம். 207:10-13)

நாளிரை தரீஇய எழுந்த நீர்நாய்
வாளையோ டுழப்பத் துறைகலுழ்ந் தமையின்
தெண்கட் டேறல் மாந்தி மகளிர்
நுண்செயல் அங்**குடம்** இரீஇப் பண்பின்
மகிழ்நன் பரத்தமை பாடி யவிழிணர்க்
காஞ்சி நீழற் குரவை யயருந்

(அகம். 336:4-9)

மடப்பால் ஆய்மகள் வள்உகிர்த் தெரித்த
**குட**ப்பால் சில்லுறை போல

(புறம். 276:4)

## 2.2. குழிசி

விளம்பழங் கமழுங் கமஞ்சூற் **குழிசி**ப்
பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளில்முதன் முழங்கும்
வைகு புலர் விடியல் . . . . . . . . . . . . . .

(நற். 12:1-4)

கயிறுபிணிக் **குழிசி** ஓலைக் கொண்மார்
பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்

(அகம். 77:7-8)

இதைச்சுவற் கலித்த ஈரிலை நெடுந்தோட்டுக்
கவைக்கதிர் வரகின் கால்தொரு பொங்கழி
கவட்டடிப் பொருத பல்சினை உதிர்வை
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ஆங்கன் இருஞ்சுனை நீரொடு முகவாக்
களிபடு **குழிசிக்** கல்லடுப் பேற்றி
இணர்த்தை கடுக்கை ஈண்டிய தாதிற்
குடவர் புழுக்கிய பொங்கவிழ் புன்கம்
மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி
தென்றூங்கு உயர் வரை . . . . . . . . .

(அகம். *393:4-19)*

மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப
இருங்கட் **குழிசி** கவிழ்ந்திழுது மறப்பச்
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப
உழவ ரோதை மறப்ப விழவும் . . . .

(புறம். *65:1-4)*

மான்றடி புழுக்கிய புலவுநாறு **குழிசி**
வான்கே ழிரும்புடை கழாஅ தேற்றிச்
சாந்த விறகி னுவித்த புன்கம் . . . . .

(புறம். *168:9-11)*

பொய்த்த லறியா வுரவோன் செவிமுதல்
வித்திய பனுவல் விளைந்தன்று நன்றென
நச்சியிருந்த நசைபழு தாக
அட்ட **குழிசி** யழற்பயந்தா அங்கு
அளியர் தாமே யார்க வென்னா

(புறம். *237:4-8)*

. . . . . . . . . என்னாம் எனைத்தும்
வெண்கோள் தோன்றாக் **குழிசி**யோடு
நானுறை மத்தொலி கோளதோனே

(புறம். *257:11-13)*

போதவி ழலரி நாரிற் றொடுத்துத்
தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப்
பறையொடு தகைத்த கலப்பையென் முடிவுவாய்
அடுறு **குழிசி** பாடின்று தூக்கி
மன்ற வேம்பி னொண்பூ வுறைப்பக்
குறை செயல் வேண்டா நசைய விருக்கையேன்

(புறம். *371:3-8)*

பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கை
குறுநெடுந் துணையொடு கூர்மை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி

அடனசை மறந்தவெங் **குழிசி** மலர்க்கும்
கடனறியாளர் பிற நாட்டின்மையின்

(புறம். 393:1-5)

முரவுவாய்ச் **குழிசி** மரியடுப் பேற்றி
வாரா தட்ட வாடூன் புழுக்கல்

(பெரும். 99, 100)

உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய் **குழிசி** பூஞ் சுமடு இரீஇ
நாண்மோர் மாறு நன்மா மேனிச்
சிறுகுழை துயல்தரும் காதிற் பணைத்தோட்

(பெரும். 158-161)

ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரச்
சோறடு **குழிசி** யிளக விழூஉம்
வியா யாணர் வளங்கெழு பாக்கத்து

(பெரும். 365-367)

## 2.3. மண்டை / வட்டில் / வள்ளம்

. . . . . . . . . . . . . . . . . . யாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே
பாணர் பசுமீன் சொரிந்த **மண்டை**போல
எமக்கும் பெரும்புலவு ஆகி . . . . . . .

(குறு. 169:4-6)

கழூவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
இமிழிசை **மண்டை** யுறியொடு தூக்கி
யொழுகிய கொன்றைத் தீங்குழல் முரற்சியர்
உழூஉச் சொற் கோவலர் . . . . . . . . .

(கலி. 106:1-4)

நறவுண் **மண்டை** நுடக்கலின் இறவுகலித்துப்
பூட்டறு வில்லில் கூட்டுமுதல் தெறிக்கும்
பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்
அரவாய் . . . . . . . . . . . . . . . . . . . .

(அகம். 96:1-4)

தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூங்கித்
கவிழ்ந்த **மண்டை** மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
செல்வை யாயிற் . . . . . . . . . . . . .

(புறம். 103:2-5)

நெடுநீர நிறையத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறை முகக்கவும்
சூடு கிழித்து வாடு ஊண் மிசையவும்
ஊண் கொண்ட வெண் **மண்டை**
ஆன்பயத்தான் முற்றழிப்பவும் . . . .

(புறம். *386:1-6*)

கானுறை வாழ்க்கைக் கதநோய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த **வட்டியு** மாய்மகள்

(புறம். *33:1-3*)

கொடுங்கான் மாடத்து நெடுங்கடைத் துவன்றி
விருந்துண்டானாப் பெருஞ்சோறு **வட்டில்**

(பட்டி. *261-62*)

பகன்றை வான்மலர் பநிநிறைந்தது போல்
பால்பெய் **வள்ளஞ்** சால்கை பற்றி
என்பா டுண்டனை யாயின் . . . . .

(அகம். *219:4-6*)

## 3. நீர்க்கலன்கள்

### *3.1.* சாடி / பிழா

வேறுபல் நாட்டிந் கால்தர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்
கலிமடைக் கள்ளின் **சாடி** . . .

(நற். *295:5-7*)

. . . . துணையிதழ் வாய்த்தொட்டி
முற்றா நறாநறா மொய்புன லட்டிக்
காரிகை நீர் ஏர்வயற் காமக் களிநெஞ்சில்
மூரி தவிர முடுக்கு **முதுசாடி**
மடமாதர் உண்கண் கயிறாக . . . .

(பரி. *20:51-55*)

நல்மரங் குழீஇய நனைமுதிர் **சாடி**
பல்நாள் அரித்த கோஒய் உடைப்பின்
மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும்
பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்

(அகம். *166:1-4*)

ஊர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்கும்
தொடுத லோம்புமதி முதுகட் **சாடி**
ஆதரக் கழுமிய துகளன் . . . .

(புறம். *258:8-10)*

கன்றுடை மரையாத் துஞ்சுஞ் சீறூர்க்
கோளிவண் வேண்டேம் புரவ நாரரி
நனைமுதிர் **சாடி** நறவின் வாழ்த்தித்
துறை நணி கெழிஇக் கம்புளீனும்
தண்ணடை பெறுதலும் உரித்தே . . .

(புறம். *297:4-8)*

பூவற் படுவிற் கூவற் றொடீஇய
செங்கட் சின்னீர் பெய்த சீறில்
முன்றி லிருந்த முதுவாய்ச் **சாடி**
யாங்கஃது உண்டென வறிது . . . .

(புறம். *319:1-4)*

கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்
அவையா வரிசி யங்களித் துழவை
மலர்வாய்ப் **பிழா**விற் புலர ஊற்றிப்
பாம்புறை புற்றிற் குறும்பி யேய்க்கும்
பூம்புற நல்லடை யாளைஇத் தேம்பட
எல்லையு மிரவு மிருமுறை கழிப்பி
வல்வாய்ச் **சாடி**யின் வழைச்சற விளைந்த
வெந்நீர் அரியல் விரலலை நறும்பிழி

(பெரும். *274-281)*

### 3.2. தசும்பு

சுடுமண் **தசும்பின்** மத்தந் தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பிடத் தன்ன

(நற். *84:6, 7)*

நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறிய வேறா வேணி
நிறைந்து நெடி திராத் **தசும்பின்** வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தேநின் கலிமகிழானே

(பதி. *5:3; 32-36)*

இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த **தசும்பு**துளங் இருக்கை
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்

*(பதிற்று. 42:10-12)*

கானுறை வாழ்க்கைக் கதநோய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த **வட்டியு** மாய்மகள்
தயிர்கொடுவந்த **தசும்பு** நிறைய

*(புறம். 33:1-3)*

அருப்பம் பேணா தமர்கடந் ததூஉம்
துணைபுண ராயமொடு **தசும்பு**டன் றொலைச்சி
இரும்மா ணொக்கற் கடும்பு புரந்த தூஉம்

*(புறம். 224:1-3)*

நெடுந்தெருவிற் நேர் வழங்கினன்
ஓங்கிலல களிறூர்ந்தனன்
தீஞ்செறி **தசும்பு** தொலைச்சினன்
பாணுவப்பப் பசிதீர்த்தனன் . . . .

*(புறம். 239:14-17)*

கடல் பயந்த கதிர்முத்தமும்
வேறுபட்ட விடையுஞ் சேறுபட்ட **தசும்பும்**

*(புறம். 377:17, 18)*

. . . . . போர்முதற் றொலைஇ
வளஞ்செய் வினைஞர் வல்சி நல்கத்
துளங்கு **தசும்பு** வாக்கிய பசும்பொதித் தேறல்
இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும் பெறுகுவிர்

*(மலை. 461-464)*

### *3.3. தாழி / ஈமத்தாழி*

கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத்
**தாழி**முதல் கலித்த கோழிலைப் பருத்தி

*(அகம். 129:6, 7)*

**தாழிக்** குவளை வாடுமலர் சூட்டி

*(அகம். 165:11)*

ஓங்குநிலைத் **தாழி** மல்கச் சார்த்திக்
குடையடை நீரின் மடையினள்

*(அகம். 275:1, 2)*

**தாழி**யும் மலர்பல அணியா கேழ்கொள
காழ்புனைந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப்
பாவையும் . . . . . . . . . . . . . . . . . . .

*(அகம். 369:6-8)*

கவிசெந் **தாழிக்** குவிபுறத் திருந்த
செவிச்செஞ் சேவலும் பொகுவலும் வெருவா

*(புறம். 238:1, 2)*

மாலைவிரி நிலவிற் பெயர்புறங் காண்டற்கு
மாயிருந் **தாழி** கவிப்பத்
தாவின்று கழிகளற் கொள்ளாக் கூற்றே

*(நற். 271:10-12)*

துளங்குநீர் வியலக மாண்டினிது கழிந்த
மன்னர் மறைத்த **தாழி**
வன்னி மன்றத்து விளங்கிய காடே

*(பதிற். 5:4; 21-23)*

கலஞ்செய் கோவே . . . . . . . . . . . .
கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்
தேவருலக மெய்தின னாதலின்
அன்னோற் கவிக்குங் கண்ணகன்ற **தாழி**
வனைதல் வேட்டனை யாயி னெனையதூஉம்
இருநிலந் திகிரியாம் பெருமலை
மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே

*(புறம். 228)*

கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் தன்னொடு
சுரம்பல வந்த வெமக்கு மருளி
வியன்பல ரகன்பொழில் **ஈமத்தாழி**
அகலிதாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே

*(புறம். 256)*

முதுமரப் பொந்திற் கதுமென வியம்பும்
கூகைக் கோழி யானாத்
**தாழி**ய பெருங்கா டெய்திய ஞான்றே

*(புறம். 364:11-13)*

## 4. தானியக்கலன்கள்

### *4.1.* குதிர்

கதிர்க்கா எம்பிணை உணீஇய புகலேறு
**குதிர்க்கால்** இருப்பை வெண்பூ உண்ணாது

*(அகம். 321:4, 5)*

எழுகா டோக்கிய தொழுவுடை வரைப்பிற்
பிடிக்கண தன்ன **குதிருடை** முன்றிற்
களிற்றுத்தாள் புரையுந் திரமரப் பந்தர்
குறுஞ்சாட் குருளையொடு கலப்பை சார்த்தி
நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்

*(பெரும். 189)*

கொழும்பதில குடிதேம்பச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரி**குதிர்** . . .

*(மதுரை. 167-169)*

### *4.2,* கூடு (நெற்கூடு)

செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை **நெடுங்கூட்டுப்**
பிண்ட **நெல்லின் தாய்மனை** . . . .

*(நற். 26:2-4)*

கறங்குமிசை யருவிப் பிறங்குமலை நள்ளிநின்
அசைவி னோன்றா ணசைவள னேத்தி
நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
**கூடுவிளங்கு** வியனகர்ப் பரிசின்முந் தளிப்பப்
பீடின் மன்னர் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறி கிளத்தல்
எய்யா தாகின்றெந் சிறுசெந்நாவே

*(புறம். 148)*

ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் **கூட்டு** முதற் புரளும்
தண்ணடை பெறுதல் யாவது படினே

*(புறம். 287:7-10)*

சிறுநனி யிறந்த பின்றைச் செறிபிணிச்
சிதாஅர் வள்பினென் றெடாரி தழீஇப்

பாண ராரு மளவை யான்றன்
யாணர் நன்மனைக் **கூட்டு** முதனின்றனென்
இமைத்தோர் விழித்த மாத்திரை . . .

(புறம். *376:3-7)*

ஏணி யெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரி மூத்த **கூடொங்கு** நல்லில்

(பெரும். *245-247)*

காய்ச் செந்நெற் கதிரருந்தி
மோட்டெருமை முழுக்குழவி
**கூட்டு** நிழல் துயில் வதியும்
கோட்டெங்கிற் . . . . . . . .

(பட். *13-16)*

### *4.3.* மஞ்ஞிகை

உருகெழு கரும்பின் ஒண்பூப் போலக்
கூழுடை கொழு **மஞ்ஞிகை**

(பட். *162, 163)*

## 5. சுடுமண் கல்

**நெடுஞ்சுவர்** நல்இல் மருண்ட
இடும்பை உறுவி நின் கடுஞ்சூன் மகளே

(ஐங். *386:3, 4)*

ஓவத் தன்ன வினைபுனை **நல்லில்**

(அகம். *98:11)*

. . . . . . . . . . . . . . . . . . உரிஞ்ச ஒல்கி
இட்டிகை **நெடுஞ்சுவர்** விட்டம் வீழ்ந்தென

(அகம். *167:12,13)*

**கல்லருத்து** இயற்றிய வல்லுவர்க் **கூவல்**
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவளி
நனிநல் கூர்ந்தன னாயினும் . . .

(புறம். *331:1-3)*

நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொருட்டிற் காண்வரத் தோன்றிச்
**சுடுமண்** ஓங்கிய நெடு நகர் வரைப்பின்

(பெரும். *403)*

பாவை விளக்கிற் பரூஉச்சுடர் அழல
இடம் சிறந்து உயரிய **எழுநிலை மாடத்து**

*(முல்லை. 85, 86)*

## 6. குயவர் / வேட்கோவர்

ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி
யாறு கிடந்தன்ன அகல் நெடும் தெருவில்
'சாறு' என நுவலும் முதுவாய் **குயவ**

*(நற். 200:2-4)*

மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்
பலிகள் ஆர்கைப் பார்முது **குயவன்**
இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து
விழவுதலைக் கொண்ட பழவிறல் மூதூர்

*(நற். 293:1-4)*

**கலஞ்செய் கோவே** . . . . . . . . . . . .
கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
இருநிலந் திகிரியாம் பெருமலை
மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே

*(புறம். 228)*

**கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே**
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
நனந்தலை மூதூர்க் **கலஞ்செய் கோவே**

*(புறம். 256)*

# எட்டுத்தொகை - புழங்குபொருட்கள் பட்டியல்

| நூல்கள் / புழங்கு பொருள் | நற்றிணை | குறுந்தொகை | ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து | பரிபாடல் | கலித்தொகை | அகநானூறு | புறநானூறு |
|---|---|---|---|---|---|---|---|---|
| கலம் | 308:8 | 27:1<br>29:2 | 303:1 | - | - | 116:16 | 308:6<br>394:9 | 160:21<br>228:1<br>228:4<br>232:5<br>256:1<br>322:5 |
| குடம் | 335:5 | - | - | - | - | - | 37:8<br>86:8<br>207:11<br>336:7 | 276:4 |
| குழிசி | 12:1 | - | - | - | - | - | 77:7<br>393:14 | 65:2<br>168:9<br>237:7<br>257:11<br>371:6<br>393:4 |
| மண்டை | - | 169:5 | - | - | - | 96:1<br>106:2 | - | 103:3<br>386:5 |
| சாடி | 295:7 | - | - | - | 20:54 | - | 166:1 | 258:9<br>297:6<br>319:3 |
| தசும்பு | 84:6 | - | - | 5;2:11<br>5;3:34 | - | - | - | 33:3<br>224:2<br>239:16<br>377:18 |
| தாழி / ஈமத்தாழி | 271:11 | - | - | 5;4:21 | - | - | 129:7<br>165:11<br>275:1<br>369:6 | 228:12<br>238:1<br>256:05<br>364:13 |
| குதிர் | 321:5 | - | - | - | - | - | - | - |
| கூடு / நெற்கூடு | 26:4 | - | - | - | - | - | - | 148:4<br>287:9<br>376:6 |
| மஞ்ஞிகை | - | - | - | - | - | - | - | - |

# பத்துப்பாட்டு - புழங்குபொருட்கள் பட்டியல்

| நூல்கள் / புழங்கு பொருள் | திருமுருகாற்றுப் படை | பொருநராற்றுப் படை | சிறுபாணாற்றுப் படை | பெரும்பாணாற்றுப் படை | முல்லைப் பாட்டு | மதுரைக் காஞ்சி | நெடுநல் வாடை | குறிஞ்சிப் பாட்டு | பட்டினப் பாலை | மலைபடு கடாம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கலம் | - | - | - | - | - | - | - | - | - | 474 |
| குடம் | - | - | - | - | - | - | - | - | - | - |
| குழிசி | - | - | - | 99<br>159<br>365 | - | - | - | - | - | - |
| மண்டை | - | - | - | - | - | - | - | - | - | - |
| சாடி | - | - | - | 280 | - | - | - | - | - | - |
| தசும்பு | - | - | - | - | - | - | - | - | - | 463 |
| தாழி / ஈமத்தாழி | - | | - | - | - | - | - | - | - | - |
| குதிர் | - | - | - | 186 | - | 169 | - | - | - | - |
| கூடு / நெற்கூடு | - | - | - | 247 | - | - | - | - | 15 | - |
| மஞ்ஞிகை | - | - | - | - | - | - | - | - | 163 | - |

# பின்னிணைப்பு - 2

*இந்தியத் தொல்லியல்துறை வெளியிட்ட*
*தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் மற்றும் தமிழகத்*
*தொல்லியல்துறை வெளியிட்ட கல்வெட்டுத் தொகுதிகள்*
*ஆகியவற்றில் உள்ள கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து*
*சேகரிக்கப்பட்ட மண்சார்ந்த புழங்குபொருள் பதிவுகள்*

*கல்வெட்டுத் தரவுகளில் உள்ள புழங்குபொருட்கள், புழங்குபொருள் உற்பத்தியாளர்கள், அவர்கள் மீதான வரிவசூல், சமூக மதிப்பீடு முதலானவை இங்குப் பதிவுசெய்யப்பட்டுள்ளன. அவை முறையே இந்தியத் தொல்லியல்துறை வெளியிட்ட தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் உள்ள பதிவுகளை தொகுதிகளின் அடிப்படையிலும் தமிழகத் தொல்லியல்துறை வெளியிட்ட மாவட்டவாரியான கல்வெட்டுத் தொகுதிகளில் உள்ள பதிவுகளைப் பதிவுசெய்யப்பட்ட ஆண்டு அடிப்படையிலும் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.*

. . . . காலியூர்க் கோட்டத்துத்தன் கூற்று சிவசூளாமணி மங்கலமாகிய . . . ஹணமுமற்று யவநத்த திருமஞ்ஞணங்களுமற்று எப்பெர்ப்பட்ட **குசக்கலம்** எப்பெர்ப்பட்ட **குசக்கறை** வறுப்பதற்கு வைத்த பூமி இத்தேவர் ஊரான சோதியம்பாக்கத்து மெலை புதுத்திருத்தில் அரையும் . . .

(SII, Vol.III, No.11)

. . . . ஜயங்கொண்ட சோழ மண்டலத்து எயிற்கோட்டத்து எயில்நாட்டு திருவத்தியூராழ்வாரை பாடியருளிந ஸ்ரீ பூதத்தாழ்வாரும் ஸ்ரீ பொய்கையாழ்வாரும் பிறந்த திருக்கெட்டை நாள் அருளாளப் பெருமாள் புறப்பட்டருளி திருமஞ்சனமும் பெரு திருவமுதம் செய்தருளத் திருமஞ்சநத்து திருமுனைச் சார்ந்த **திருமுளைப்பாலிகை** முப்பத்தாறு பாலிகை . . . திருமஞ்சணத்துக் கலசம் எண்பத்தொன்றுக்கு . . . கும்பம் நாலுக்கு நாநாழியும் திருச்சுண்ண **கலசமொன்றுக்கு** அடிகீழரிசி இருநாழியும் கலசஞ்சூழ புடவை பதின்மூன்றுங் . . .விறகு கட்டு மூன்றும் **குசக்கல** உருவுக்கு நெல்லு கலமும் . . .

(SII, Vol.III, No.80)

. . . . தயிர் தூணியும் கண்டசற்கரை முக்கசும் . . . **குச்கலஉருவுக்கு** நெல்லுக்கலமும் . . . தண்ணிரமுதுக்கெல மொரு செவிடரையும்

(SII, Vol.III, No.80)

. . . . சிங்கபுர நாட்டுக் கிழ்வழி நெற்குன்றத்து எரிக்கு நிருபதொங்க மங்கலப் பெறையர் மகனார் நம்பியமல்லனார் செய்த எரிப்பட்டி மருதசெருவுங் கொடுமாடியும் கழுவலூரம் இம்மூன்றும் எரிபட்டி செய்து கொடுத்தேன் இது இறங்க ஊரொமுங் **குடிமை** செய்யில் எழா நகரத்து கிழா நகரம்

(SII, Vol.III, No.93)

. . . . . ஸ்ரீ கோயில் வாரியம் செய்யும் கரணத்தான் **குசவன்னொருவனுக்கு** நிசதம் பதக்காக ஒராட்டைக்கு நெல்லறுபதின் கலசத்துக்கு பூங்குடியிலொன்பதுமாவரைக்காணி . . . . . . . . . . .

திங்கள் முட்பட கலமிடும் **குசவனுக்கு** நிசதம் அறுநாழியாக ஒராட்டைக்கு நெல்லு இருபத்திருகலனெ தூணிபதக்கு . . . இந்நிலங்களால் வந்த திருவாசலிற் போந்த குடிமையும் ஊடுவரி பல . . . வெட்டி. . . நாங்களே இறுக்கக் கடவோமாக . . .

(SII, Vol.III, No.151A)

. . . . திருச்சிற்றம்பலமுடையார் திருவானித்திருநாளில உடையா முந்தருளும் அற்றைக்கு வெண்டும் அழிவுக்கும் உடையார்க்கு அமுத படிக்கும் அமுது செய்தருளும்பொழுது ஸ்ரீமஹாதேவரற்குச் **சட்டிச்சொறு** ஆயிரங் குடுக்கவும் திருவிழாவுக்கு வெண்டும் எண்ணைக்கும் உடையார் வழங்கி, அருளும் . . . சாலை மடையன் ஒருவனுக்கு நெல்லு அறுநாழியும் மேற்படியானுக்கு . . . நெல்லு எண்கலமும் **குசவன்** ஒருவனுக்கு நெல்லு நானாழியும் வாழ்வாச்சி **தண்ணீர் கலம்** கொண்டு வருவானுக்கு நெல்லு நானாழியும் பணி செய்ய பெண்டுகளுக்கு நெல்லு குறுனியும் . . .

(SII, Vol.IV, No.223)

. . . . வெற்றிலைப் பற்று இரண்டரைக்கும் பாக்கு நூற்றுக்கு நெல்லு குறுணிஐஞ்ஞாழியும் விறகு கட்டு ஒன்றுக்கு நெல்லு முக்குறுணி நானாழியும் சனி ஒன்றுக்கு எண்ணை உரி ஆழாக்குக்கு நெல்லு ஐங்குறுணியும் சாலை மடையன் ஒருவனுக்கு நெல்லு அறுநாழியும் மெற்படியானுக்குப் புடவை . . . நெல்லு எண்கலமும் **குசவன்** ஒருவனுக்கு நெல்லு நானாழியும் வாழ்வாச்சி . . . .

(SII, Vol.IV, No.223)

இன்னான்கெல்லைக்குட்பட்ட நிலத்தில் எறும் உழவுகுடி கைவினைக்குடி காசாயக் குடியில் கொள்ளும் சிற்றாயம் காணிக்கை கட்டாயம் சுங்கம் பட்டைவரி வண்மை நாட்டு விநியோகம் வெட்டி வெகாரி உலுப்பை **ஊழியம்** மற்றும் எப்பேற்பட்ட உபாதியும் . . . இறையிலியாக இன்னாயிறார்க்குச் செம்பிலும் சிலையிலும் வெட்டிக் குடுத்தமைக்கு . . . .

(SII, Vol.V, No.257)

. . . . ஸ்ரீ அரைமலை ஆழ்வார்க்கு நித்தர் அபிஷேகத்திற்கு நாச்சுற திருஅமுதுக்கு **கலமிட** சிலன் காவி தியானை தென்னவன் திருநெற்சுறத்துப் **பெருங்கொவெள்ளானுக்கு** கடுஞ்செய் . . . சந்திராதித்தவற்கு நிற்க செத்து . . . .

(SII, Vol.V, No.361)

. . . . பொய்கை நாட்டு திருவையாற்றுப்பால் நாம் எடுப்பித்த திருக்கற்றளி ஒலோகமா தேவி ஈஸ்வரம் உடைய தேவர்க்கும் ஒலோகவிடங்க தேவர் உள்ளிட்ட திருமேநிகளுக்கும் செய்வித்த பொற்கொள்கை . . . வையொன்று உடுக்கை வாசிக்கிற பாவையொன்று பிடமொன்று . . . . . . . . . . . . . . . . . . . . . சங்குக்கால் நாற்பலம் வெண்தரச் சங்குக்கால் ஐம்பலவரையும் தராச் சங்குக்கால் ஐம்பலமும் **தராச் சட்டிக்கால்** ஒன்று நிறை நாற்ப்பத்தைம் பலமும் மெற்படியொன்று நிறை . . .

(SII, Vol.V, No.521)

. . . . ஐஞ்ஞூற்று பலம் மெற்படி விளக்கு மெற்படி உள்பட நிறை . . . . மெற்படி விளக்கு ஒன்று னிறைய னூற்றுபத்துபலம் **ஆக்குபானைக்கா லொன்று** னிறைய எண்பத்தெ, பலம் மெற்படி **பானைக்கால்** ஒன்று நிறை நூற்று ஒருபதின் பலம் தரா **சருவம்** அறுபத்து ஐம்பலம் மெற்படி ஒன்றின் . . .

(SII, Vol.V, No.521)

. . . . ஆக இப்படி இந்நிவந்தங்கள் யாண்டு முதல் சந்திராதித்த தேவற்கு செலுத்துவதானோம் . . . இந்நிலத்திற்கு திருவாசலில் பொங்க **குடிமையும்** ஊர்கழஞ்சு **குமரகச்சாணமும்** வெள்ளாந் வெட்டியும் உள்ளிட்டு எப்பேப்பட்ட இறையும் இவன் தந்த காசு ஐம்பதும் இட்டு செல்லுக . . .

(SII, Vol.V, No.638)

. . . . இன்னிலங்களால் வரும் நெல்கடமை காசுகடமை . . . பஞ்சபீலி சந்துவிக்கிரகம் வாசல் வினயோகம் காணிக்கை, காத்திகைபச்சை ஆடிப்பூரப் பச்சை பிள்ளையார் நொன்புத்தெவை ஆனைச்சா . . . லை குதிரைப்பந்தி கரு ஆழ்த்தாழ்வு **தச்சுத்தாழ்வு** தறிஇறை செக்கிறை தட்டொலி **தட்டார்பாட்டம் பாசிப்பாட்டம்** ஒழுக்கு **நீர்மின்பாட்டம்** தொலொட்டு (எர்) வரி **இலவரி வாசல்வரி** ஆள்வரி நல்லெருது நல்பசு காணம் உள்ப்பட்ட இவையும் வரியில கணக்கிலும் கழிக்கும்படி சொல்லிவிட்டோம் . . .

(SII, Vol.VII, No.22)

. . . . செலவினுக்கு அமச்ச 'பூமி புதுவால் முக்கலம் பாடும் புதுமண்ணிற் **கலப்பாடு குசமண்ணாலியால்** பதின் தூனிப்பா டும். . . யிஞ்ஞா மண்ணில் பதினெழுதூணி யரைப்பாடு துடாஉ ழியால் அந்தூணிப்பாடு கையணைக்கல்மிளியில் எழுதூணிய . . . .

(SII, Vol.VII, No.172)

. . . . திருமலையில் நாலு திருவிதியும் முப்பது அடிக்கு முப்பது அடி கட்டையும் முள்ளும் பறித்து பொகட்டு ஆறு மடமும் கட்டி காவணமும் இட்டு மணலும் பரப்பி திருமெற்கட்டியும் கட்டி மடங்கள்தொறும் **அமுது பானைசட்டி திருமஞ்சனக்குடம் சால்கரகம்** எரிகரும்பு இவையும் வெண்டுவன குறைவறுத்து இந்த உபையத்துக்கு அமுதுபடி கறிஅமுது . . .

(SII, Vol.VII, No.470)

. . . . இராசநாராயணன் சம்புவராயர்க்கு யாண் பதினெட்டாவது பங்குனிமாதம் பன்னிரண்டாந் தியதி கிடங்கிலான இராசெந்திரசொழநல்லூர் திருகெவுரிஸரமுடைய நாயனார்க்குத் திருப்பணிக்குத் தம்பிரானார் குடுத்தருளின திருமுகப்படிக்கு இவ்வூர் கை கொளர்பெரால் நூலாயம் **செட்டிகள் வாணிகர் செனையங்காடிகள்** இவர்கள் பெரால் ஆயமும் சந்திராதித் வரையும் . . . .இப்படிக்கு சிலாலெகை பண்ணிக்குடுத்தென் . . .

(SII, Vol.VII, No.855)

. . . . வரி காசாயம் காத்திகைப்பச்சை மாதிருசாந் ஊசிவாசி நல்லெருது நற்பசு உள்ளிட்ட அனைத்தாயங்களும் ஆளமஞ்சி தெவையும் தைச்சும் கொல்லும் **குசமும்** தொலொட்டும் வெறுதண்டும் செக்கிறை மனையிறை பாட்ட முள்ளிட்டனவும் . . . . . . . பண்ணி திருக்கற்றிளியிலெ கல்லும் வெட்டிக் கொள்ளக் கடவதாகவும் சொன்னொம் இப்படி கணக்கில் . . .

(SII, Vol.VIII, No.79)

. . . திருவெங்கட கோட்டத்து ஆற்றூர் நாட்டு ஸ்ரீகோதண்டராம ஸ்வாமிக்கு . . . திருஉற்சவஞ் செய்வதற்கு . . . நெல்லு எழுகாடியும் நீராட்டுவானுக்கு நெல்லுப் பதின்காடியும் கலமிடுங் குசவனு நெல் முப்பதின் காடியும் சாலைசூக் கறிசூ கொள்ளு நிசதி . . .

(SII, Vol.VIII, No.529)

. . . . இந்நிலம் வெலிச்செய்யிலும் இவம்பலத்து கொடைமாத் தண்ணீர் அட்டுவானுக்கு நிலம் எட்டுமாவும் அம்பலம் மெழுகுவார்க்கு நிலம் அரைக்காலும் விளக்கெண்ணை அட்டுவா நுங்கு காலும் கலம் இட்டும் **குசவனுக்கு** ஒருமாவரை புதுக்குபுற முந்றுமாவும் . . .

(SII, Vol.XIII, No.187)

. . . . தென்கைலாயத்து மகாதேவர்க்கு திருவரங்க தேவரடியாள் செந்தன் செய்யவாய் மணிவிளக்கு ஒன்றுக்கும் ஆற்றுத்தண்ணிரமுது தூணி **கொள்ளிக்குடத்தாய்** நிசதி ஒரு **குடத்துக்கும்** ஆக வெத்த

பொன் பதின்கழைஞ்சு திருக்கோயிலுடையார் கொண்டு சந்திராத்தவற்கு இப்படி செய்யக்கடவோமாக. . .

(SII, Vol.XIII No.88)

. . . . பாண்டி நாட்டு உத்தம சோழ வளநாட்டு குடநாட்டு . . . தேயம் ராஜாதிராஜ சருபேதி மங்கலத்து ஆற்றூர் ஸ்ரீ சோமநாத தேவர் . . . இத்தேவர் கோயிலில் செய்த நிவந்தஞ் செலுத்துகைக்கு இத்தேவர் பண்டாரத்து . . . பக்கல் கொண்ட நிலம் திருநாராயண வயக்கல் உள்ளிட்ட நிலம் இவன் திருத்தறத் திருத்தித் தந்தமையில் இந்நிலம் நாங்களேய் கைக்கொண்டு பயிரேற்றியும் பயிரேற்றுவிச்சும் ஆண்டுதோறும் சோமனாதன் மாக்காலால் அளக்கக்கடவ . . . அடைக்காய முதுக்கு நெல்லு நானாழியும் **குசக்கலத்துக்கும்** விறருக்கும் நெல் எழு நாழியும் . . . இத்தேவர் கோயிலில் நாங்களும் எங்கள் வர்க்கத்தாரும் சந்திராதித்தவர்க்கு செலுத்தக் கடவோமாக இசைந்து இந்நிலமும் இக்காவும் கைக்கொண்டோம்.

(SII, Vol.XIV, No.191)

. . . . பாண்டி நாட்டு ஆற்றூர் ஸ்ரீ சோமநாத தேவரான தென் திருப்புவனமுடையார்க்கு அமாவாஸிதோறும் திருவாராதனைப் பண்ண . . . பால் நாழிக்கு நெல் இருநாழியும் தயிர் உரிக்கு நெல் நாழியும் நெய் உழக்கு நெல் அஞ்ஞாழியும் **கலசம்** ஒன்பதுக்கும் பூர்ண **கும்பம்** ஒன்றுக்கு விலைநெல் அறுநாழியும் . . . இந்நிவந்தம் சந்திராதித்தவற்கு. . .

(SII, Vol.XIV, No.192)

. . . . பிராமணருண்ண ஒரொத்தற்கு ஒரு பிடி தயிர் . . . செவையர் பட்டம்படாரியான பாண்டியதியரசி வைத்த துளைப்பொன் . . . தற்கு நாடுரி யரிசி, தயிர் முவாழாக்கு கறி ஒன்று **வெள்கொவர்க்கு** நாடுரி அடுவாற்கு முந்நாழி விறகுக்கு நாழி ஆக . . .

(SII, Vol.XVII, No.377)

. . . . மெற்படி கொல்லால் ஆயிரங்குழி கொண்டு ஆறான் முன்று வங்கயும் திருப்பள்ளி எழுச்சி கொட்டுவதாகவும் ஒற்றைச் சங்கு ஒன்றாதுவதாகவும் பழங்கொளுர் முன்னுள்ள திருவிழா விரதம் மெற்படி கொல்லால் ஆயிரத்தஞ் சாறு குழியுங் கொண்டு மண்ணுடையான் நிசதம் ஒரு திருவமுது **பானையும் கறிச்சட்டியும் குடமும்** கடாம் **கலசமும்** குலதாச ஆட இனொபெத பள்ளம் கொண்டு பொது அமுதுக்கு . . . .

(SII, Vol.XIX, No.169)

. . . . பழவெட்டரயர் மறவன் கண்டநார் விலைக்குக் கொண்டு குடுத்த செம்புதற்குடியான திருவாலந்துறை நல்லூர் நிவந்தம் செய்த

படியாவது பழுவூர் வேட்கொவன் பசுவதி நகரத்தானான கருவிடை **பெருங்குசவனுக்கும்** ஊரானாச்சனுக்கும் முண்டன் நகரத்தானுக்கும் நிலன் கல்லறைக்கும் நிசதம் மூன்று குடுவை யும் நிசதம் மூன்று **சட்டியும்** மற்றும் வேண்டும கலமும் இட குடத்த பங்கொன்றும் . . .

(SII, Vol.XIX, No.238)

. . . . இருங்கொளப்பாடி பருவூர்க் கூற்றத்து நெற்குப்பையுடையான் காவிதிக் குடிக் குலமானன் கூத்தந் திருமுது குன்றத்து தேவர்க்கு . . . இவனெ குலமானன் குத்தன் வைத்த அன்தொளகத் தண்டும் பிடாயும் கடிகையூம் இது கொடுபொயெறினார் நிச்சம் உழக்கு நெய் யட்டுவதாகவும் செப்பு **கலசப்பானை** நிறை ஐம்பதின்ம் பலம் அழிவுசொல புன்செய் ஒருமா நிலம் . . . .

(SII, Vol.XIX, No.303)

. . . . செம்பியன் மஹாதேவி சதுவேதி மங்கலத்து ஸ்ரீ கைலாயமுடைய மகாதேவர்க்கு திங்கள் ஸங்கராந்திதொறும் ஸ்நாநஞ் செய்வதற்கு . . . வய்த்த நிபந்தப்படி திட்டியது அதிவாஸனைக்கு **பாலிகைக்கு** கிழட்ட . . . முளைப்பயிறு கடுகும் எள்ளும் முதலாக வெண்டுவன எல்லாத்துக்கும் . . . அதிவாஸினைக்கு **பாலிகையும்** பெருந்திருவமுதுக்கு வேண்டும் **கலசமும்** இடுங்குசவனுக்கு . . . கலசத்தின் கீழட்ட அரிசி .. . கலசத்தின் கிழட்ட எள்ளு . . . கலசஞ் சுற்று நூல் . . . ஜலபவித்ரம் வடிக்க புடவை . . . உரிய்க் குழம்புக்கு சந்தநம்பலத்துக்கு அற்றைய்னாளால் பள்ளித்தாமமிடுவான் . . . .

(SII, Vol.XIX, No.380)

. . . . சென்னப் பட்டணத்திலிருக்குந் துளுவ வெள்ளாளரில் கண்ட மகரிஷி கோத்திரம் ஸ்ரீபெரும்தூர் திருமணஞ் **செங்கற் சூளை முத்து** முதலியார் குமாரன் அருணாசல முதலியார் செய்விச்ச தற்மம். . . . .

*(செ.மா.கல்.தொ.எ.1967/170)*

. . . . அருளிசைகை புறத்தானாட்டு தென்வாசி வாரண நன்னாட்டு அகத்தீச்சுரமான உதைய மாத்தாண்ட சதுவேதிமங்கலத்து பட்டர்களுக்கு பரணி நம்மாட்டைப் பிறந்த நாளிலே இவ்வகரம் வைக்க கற்ப்பிக்கயில் சதுவேதி பட்டர்கள் பேரிருபத்து நாலுக்கு . . . . அறுபத்து அஞ்சு மாக்காணியும் ரிக் வேத விருத்தி நிலம் ஒரு மாவும் யஜர் வேத விருத்தி நிலம் ஒரு மாவும் . . . . **குலால விருத்தி** நிலம் முக்காணியும் காருவிருத்தி நிலம் முக்காணியும் . .. சதுர்வேதி மூத்தவர்கள் கையாளுமாறு மடப்பிறமாக விட்ட நிலம் அஞ்சு மாவும்.

*(கன்.மா.கல்.தொ.எ.1968/22)*

. . . . தென்வாசிவாரண நன்னாட்டு அகத்தீச்சுவரமான உதைய மாத்தண்டச் சதுர்வேதி மங்கலத்து பட்டர்களுக்கு பரணி நம் ஆட்டை பிறந்த நாளில் இவ்வகரம் வைக்க கற்பிக்கையில் சதுர்வேதி பட்டர்கள் பேரிருபத்து நாலுக்கு மனை இருபத்து நாலு . . . மடங்கெட்ட உள்ளதுக்கும் சல்லிய விருத்தி **குலால விருத்தி** காருவிருத்தி கைய்யாளும் பேற்குக் குடியிருப்புக்கும் புறத்தாயாக இருக்கும் பேற்குக் குடியிருப்புக்கும் கூட விட்ட நத்தத்துக்கும் இவ்வகைக்கு விடுமாறு கற்பித்த நிலம் நூற்று இருபத்து இரண்டு மா . . . .

(கன்.மா.கல்.தொ.எ.1968/23)

. . . . பாண்டி நாட்டு உத்தமச்சோழ வளநாட்டுப் புறத்தாய நாட்டுக் குமரியான கங்கைகொண்ட சோழபுரத்து கன்னியா படாரியார் தேவதானமான ஊர்கள் கடவ ஊர்க்கழஞ்சு **குமரக்கச்சாணமும்** . . . பேர் முதலாயமும் கூலியும் உள்ளிட்ட அந்தராயங்கள் கரைக்குடலாய் வருகின்றபடி யாண்டு நாலாவது முதல் தவிர்ந்து இத்தேவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு இலுப்பதாகவும் இவ்வூர் ராஜராஜன் சாலைக்கு சாலாபோகமான ஊர்கள் கடவ ஊர்க்கழஞ்சு குமரக்கச் சாணமும் மீன்பாட்டமும் . . . . இச்சாலைக்கு வேண்டும் நிவந்தங்களுக்கு இறுப்பதாக . . . .

(கன்.மா.கல்.தொ.எ.1968/56)

. . . . ஆரல்வாய்மொழியில்க் குடி ஏறுகிற நாஞ்சி நாட்டார் மதகு சிந்தாமணி உதரமா . . . ஆசாரி, னாசாரி . . . செட்டியள் ஆள பணக்காரர் சாலியர் கைக்கோளர் ஈழுவர். சாணார் வாணியர் சளக்காறர் தோலியர் இது முதலான குடியளெல்லாம் வந்து குடி ஏறக் கட்டளையிட்டபடி.

(கன்.மா.கல்.தொ.எ.1969/33)

. . . . தந்தபடிக்கு எண்ணையும் ஷெ யூர் வேளாமர் பட்டையம் தந்தபடிக்கு **குசக்கலம்** உரு **உயி** ம் எடுத்துக் கையாண்டு நந்தவநமும். பயிற்செய்து நெல் வகைக்கு சிட்டிக்கு தன்மபத்தர் முன்னெழுத்தும் பின்னெழுத்தும் ஊர்க்கு எழுத்துமிட்டு . . . . இவ்வகைப்படி மடதன்மம் நடத்தும்படிக்கும் கணக்கு நல்ல நயினான் பரியேறும் பெருமாள் எழுத்து நன்றாக. . . .

(கன்.மா.கல்.தொ.எ.1969/57)

. . . . நன்தா விளக்கு மூன்றும் எங்கள் மக்கள் **குடங் கொண்டு** கோயில் புகுவான். இந்த விளக்கு மூன்றும் சந்திராதித்த வரை செலுத்தி போதக் கடவோம்மாக கல்வெட்டிக் குடுத்தோம். . . .

(கோ.மா.கல்.II.தொ.எண்.1974/794)

. . . . அம்பர் நாட்டுத் தேவர் தானம் திருமிய்ச்சூர் **வெழ்ட்கோவன்** புகழன் முன்னூற்றுவன் இவ்வூர் . . . தேவர்க்கு நொந்தா விளக்கு நிசதம் உரிய் நெய் கொண்டு விளக்கு இரண்டுக்கு . . . விலை கொண்டு இறை இழிச்சின நிலம். . . .

(நன்.கல். I.தொ.எ.*1977/3*)

. . . . திருபிய்ச் சூருடைய தேவர்க்கு இவ்வூர் வியாபாரி **தாழி மாணிக்கன்** நொன்தா விளக்கி நுக்கு வைத்த நிலம் தென்குடி நான் மா(யி) நிலம் கொண்டு நால்வாயுழக்கு நெய் கொண்டு சந்திராதித்தவற் நொந்தா விளக்கு எரிப்போ(ம்) ஆநோம் . . . .

(நன்.கல். I.தொ.எண்.*1977/6*)

. . . . அம்பர் நாட்டுத் தேவதானம் திருமெய்ச்சூர் **வேட்க்கோவன்.** புகழன் முன்னூற்றுவன் ஆள்வார்க்கு நொந்தா விளக்கினுக்கு கொடுத்த ஆடு தொண்ணூறு . . . .

(நன்.கல். I.தொ.எ.*1977/11*)

. . . . **சூலவரி** காணிக்கை திசைக்காணிக்கை பத்துக்கு இரண்டு காணிக்கை தல . . . . காப்பாத்தபடியாலே முன் எழுதின வகைப்படி வரிகளி(று)க்கவும் இன்தனியந்யை படியிலே அனுபவித்து கொள்ளவும் . . . .

(நன்.கல். I.தொ.எ.*1977/80*)

. . . . யாண்டு **யிஎ** வது ஆனி மாஸத்து **வேட்கோவன்** நிலம் மா . . . சிற்றம்பலமுடையான் பஞ்சநெதிவாணன் சிவபிராமணர் பொதுமையிலான இருபத்தைஞ்சும் குடுத்த . . . எரிய வைத்த திருநுந்தா விளக்கு ஒன்றும் திருவிடை மருதில் **வேட்கோவன்** . . . . வசம் நாலு காசு குடுத்து உபையமாக சந்திராதித்தவர் எரிய வைத்த சந்தி விளக்கு ஒன்றும் . . . .

(நன்.கல். I.தொ.எ.*1977/126*)

. . . . சோழ தேவர்க்கு நாலாவது உய்யக் கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் நகரத்தே மகளூர் துவராபதி பேரிளமை (ஏரி) சென்று போர் நடத்தி நன்றி செய்துபட்ட வியாபாரி கோனல் தில்லை அழகனுக்கும் ஐய்யாறன் அமுதனுக்கும் நாரணந் சேந்தன் வீரணுக்க **தாழிச் செட்டிகளுக்கும்** . . . சந்திராதித்தவர் இறையிலி செய்து கொடுத்த பரிசாவது . . . .

(நன்.கல். I.தொ.எ.*1977/174*)

. . . . நெல் பதஂகு **சரகும்பம்** சூழ்ந்த புடவை ஒந்றுக்கு நெல் . . . . மும் **சோமகும்பத்துக்கு** திருவமுது அரிசி நாநாழிக்கு நெல்லு குறுணியும் . . . பிரசாதம் . . . இருநூறு வெற்றிலைப் பற்றும் இதுக்கு

நெல் குறுணி இருநாழி ஆக நெல் தூணி நாநாழியும் ஸ்நாநம் ஆடியருள **கலசம்** நூற்றெட்டின் கீழ் அட்டும் நெல் தூணிப்பதக்கும் . . . .

(திருவீழி.கல்.தொ.எ.1977/515)

. . . . ஜெயங்கொண்ட சோழந் உயர்ந்த பெரும்புகழ் கோவிராஜகேசரி . . . . . . . . . தேவர்க்கு யாண்டு முப்பத்தொன்றாவது நாட்கீழ் நாட்டோருக்குத் திருமுகம் ப்ரஸாதஞ் செய்தருளி . . . எல்லைக் காட்டப் பிடி சூழ்ந்து . . . இவ்வூர் நிலத்துக்கு நீர்பாயும் வாய்க்கால் குளமே (நடை) நீர் பாயவும் வாரவும் பெறுவதகாவும் இவ்வூர் இட்டதெங்கும் பனையும் (ஈழவர்) ஏற்ப பெறாதிதாகவும் தங்கள் குடிகளேறு வண்ணம் மரசும் மூவதாரணமும் நாட்டப் பெறுவதாகவும் இப்படி பெற்றதற்கு பெற்ற பரியாரம் நாடாட்சியும் ஊராட்சியும் வட்டி நாழியும் பிதா நாழியும் கண்ணாலக் காணமும் வண்ணாரக் காணமும். குசக்காணமும் நீர்க்கூலியும் ஓடக்கூலியும் . . . தரகும் தட்டார் பாட்டமும் . . . விற்றுக்குடுத்த உய்யக் கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு திருமிழலை நிந்றும் பிறிந்த இந்நாட்டு சயங்கொண்ட சோழ நல்லூர் பிடி சூழ்ந்து பிடாகை நடந்து கல்லுங் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து குடுத்தேந் திருமழலை ஊர்க்கரணத்தாந் **வேட்கோவந்** வெண்காடத் தேவர் கண்டநேந் இவை எந்நெழுத்தெந்றும் இப்பரிசு பிடி சூழ்ந்து பிடாகை நடந்து கல்லுங் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து குடுத்தோம்.

(திருவீழி.கல்.தொ.எ.1977/528)

. . . . உய்ய கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுப் பெருமானார். இவ்வூர் தேவநாத திருமிழலை . . . சபையோம் இவ்வூர் **குசவர்** ஆழ்வார் பண்டாரத்தே இரண்டு காசு கொண்டு இக்காசின் பலிசையால் இவ்வேழு நாளைக்கும் வேண்டும் அடுகலமும் நீர் கலமும் இட . . .

(திருவீழி.கல்.தொ.எ.1977/536.

. . . . பக்கல் விலை கொண்டு கிழவன் பத்தூரன் பொது நிலத்து விசத்தலைப் பரிவத்தனை பண்ணின குழிக்கு ஊர்க்கணக்கு **வேட்கோவன்** திருவீழிமிழலை உடையாந் பிரான் மிழலை . . . .

(திருவீழி.கல்.தொ.எ.1977/602)

. . . . திருக்கோட்டாறு . . . குசவன் குணி கண்டெழுதபடி இரண்டினால் . . . தியாக விநோத வயக்கல் . . . . . . . . . . . . . . . **குசவன்** குழி ҧы இதன் மேற்கு கீழ் சிறகில் மனைகுழி . . . மனைக்கு தெற்குப் படுகை உட்பட நத்தம் குழி . . .

(நன்.கல். II.தொ.எ.1978/386)

. . . . இவ்விசைத்த பெரு நான்கெல்லையுள் நடுவுட்பட்ட இன்னில முக்காலே நாலு மாக்காணியும் சந்திராதித்தவற் செல்வதாக இறையூழிச்சி இறையிலி செய்து குடுத்தோம் . . . எண் உலகமுண்டானெழுத்து இப்படிக்கு இவை **காஸ்யப திருநீலகண்டன்** சீருடைக்கழ லெழுத்து இப்படிக்கு இவை காஸ்யப வெண்காடுடையான் ஆடவல்லானெழுத்து . . . .

(நன்.கல். II .தொ.எ.*1978/390)*

. . . . புதுக்குளம் விட்டு ஏனங்குடையான் என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு மேற்கும் மேற்பாற்கெல்லை இந்த கடம்பங்குடையான் நிலத்துக்கு கிழக்கும் தென்பாற்கெல்லை **குசவன் வாய்க்காலுக்கு** வடக்கும் வடபாற்கெல்லை அத்திபாக்கத்துக்கிழார் ஆலால சுந்தர பெருமாள் காணியான கரந்தைக்கால் என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்குத் தெற்கும் ஆக இந் நான்கெல்லைக்குள் நடுவுபட்ட மிகுதிக் குறைவு உட்பட. . . இந்நிலம் நாலு மாக்காணிக்கும் எம்மிலிசைந்த இற்றை நாளால் விற்றுக் குடுத்துக் கொள்வதான . . .

(நன்.கல். II .தொ.எ.*1978/469)*

. . . . வதஸ்ரீ வழியும் பெரிய நிலை உண்ண மூன்று வழியும் **சட்டி** அஞ்சு நிறை இருநூற்று ஐம்பலத்து எழுபலம் . . . . கறிக்கால் இரண்ட நிறை நூற்றொருபத்து முப்பலம் சங்கு மூக்கு ஒன்று இருபதின் பலம் . . .

(தஞ்.வ.கல்.தொ.எ.*1979/29)*

. . . . நித்த வினோத வளநாட்டு நல்லூர் நாட்டு . . . . ஸ்ரீராஜகேஸரி சதுர்வேதி மங்கலத்து மஹாசபையோம் விற்று நிலவிலை யாவணம். நம்மையுடைய . . . பிராமண ஊர்களில் பிராமணர்க்கு கீழ்ப்பட்ட ஜாதிகளில் காணிகளில் பணி செய்மக்கள் பணிசெய் காணியொழிய நின்றார் காணி வென்றருளிச் செய்ய . . . மஹாசபையோம் பணியால் இவ்வூர் ஸ்ரீ வேங்கடவன் ஆயர் கொழுந்தினென் இவை யென்னெழுத்து இப்படி அறிவேன் இவ்வூர் வைகானஸன் . . . இவ்வூர் **வேட்கோவன்** புறம்பியன் எச்சில் மண்டையென் எழுத்து இப்படி பணியால் . . . இவ்வூர் **வேட்கோவன்** பொய்யிலி தேவன்னெழுத்து இப்படி பணியால் இவ்வூர் **வேட்கோவன்** நக்கன் முத்தரையன் எழுத்து . . .

(தஞ்.வ.கல்.தொ.எ.*1981/6)*

. . . . வேளான் எழுத்து இப்படி அறிவேன் இவூர் **வேழ்க்கோவன்** மாறன் சூற்றியேன் எழுத்து இப்படி அறிவேன் பாயற்றூர் கிழவன் அரைய . . . .

(தஞ்.வ.கல்.தொ.எ.*1981/45*A)

. . . . கொல்லன் தச்சன் தட்டான் இவர்கள் பேர்க்கு கொத்துக் கீற்று அச்சு . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . உட்படப்பேர் ஒன்றுக்குப் பணம் அஞ்சும் **குசவன்பேற்கு** திருக்கை ஆயம் உட்பட்ட முதல் பேர் ஒன்றுக்குப் பணம் அஞ்சும் . . . ஆக இவ்வகைப்படி நீக்கக் கடவது ஆகவும் சார்வலைக்காரர் பேர்க்கு கண்டு இறுக்கக்கடவது . . .

*(தஞ்.வ.கல்.தொ.எ.1986/64)*

. . . . சிவயோக கண்டரர் பட்டர்க்கு புழுக்கறி, அரிசி பூத உண்டாய் மிளகுக்கும் நெய் அஞ்சு . . . க்கும் நிசதம் **குசக்கலமும்** உட்பட . . . ற்றுட்டன பரிசுக்கு வேண் . . . நெல்லுக்குறுணி ஆக . . . நிசதம் நெல்லு ஐய்ங்குறுணி . . . டுவார்க்கு நிசதம் நெல்லு நானாழியும் . . . இவ்வகழி மங்கல . . . . ஸபையர் கணி காணியோரும் செலுத்த குறையச் செலுத்தப் இவ்வழி மங்கலத்து . . . . ஸபையாரும் பந்மாஹேஸ்வரரும் தண்டிச்சு செலுவித்துக் கொள்ள . . . .

*(தஞ்.வ.கல்.தொ.எ.1986/77)*

. . . . மண்ணிப்பாக்கத்து **தடிக்குழி** (சா) **சயி** சூளமது தடிக்குழி உள அயன . . . தவளை . . . தடிக்குழி . . . **செங்கல் சூளை** தடிக்குழி . . . வடக்கு குற்றேற்றம் பௌப்படி தடிக்குழி . . . மருத்த வல்லிப் பெருஞ்செறு தடிக்குழி . . . ஆகக் கழனியில் பூறுவ மான்னியம் குழி . . . உட்பட மூன்று சந்தியும் திருவிளக்கும் திருகார்த்திகைக்கு அமுது செய்து செய்தருளத் தக்கதாக.

*(கா.மா.கல்.I.தொ.எ.1990/52)*

. . . . வடகரை பாப்பூர் நாட்டு தேவதானம் திருக்குடமூக்கிப்பால் திருக்கருகாவூர் . . . நிலமுங் காளப்பிடாரியார் நிலமும் . . . நல்லூர் மகபட்டன் அட்டின கிடக்குத செய் அறுமா முக்காணியும் புதுக்குளத்தின் வடவாய் **குசக்குடார்** அட்டின . . . ஆராதிப்பார்க்கு தேவர் இரண்டு மாவும் . . . பள்ளிசயில் நான்மாவும் **குசக்குடி நங்கைக்கு** விளக்கினுக்கு . . . **குசக்குடான்** விளக்கினுக்கு அட்டின கடுவாயின் மீய்கண் . . .

*(பா.வ.கல்.தொ.எ.1992/5)*

. . . . வீர நாராயண விக்கிரமச் சோழ பட்டந் உள்ளிட் _ாரும் யிவனைவோம் இவர் பக்கல் கொண்ட பழஞ்சலாகை அச்சு பத்துக்கு செம்பால் நாழி அரிசிச்சோறு ந . . . றுதிபத்து தேசாந்திரிகளுக்குச் **சட்டி**யிட்டு வருவோமா நோம் இது . . . .

*(கோ.மா.கல்.I.தொ.எ.2003/818)*

. . . . இம்மூவருள்ளிட்டார் **குடங்கொண்டு** கோயில் புகுவார் சந்திராதித்தவரை செலுத்துவார்களாக . . .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2003/933)*

. . . . வத ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவற்குத் திரு . . . னூரில் காணியுடைய **வேட்கோவ** . . . புரட்டாசி மாத முதல் வடபரிசார . . .மாளுக்கு நான் வைத்த சந்தியா தீப விளக் . . . தனியானையேன் மேற்படி . . . நான் வைச்ச சந்தியா தீபம் விளக்கு . . . திருநட்டான சித்திரமேழிப்பட்டன் இப்பணம் பத்தும் கைக்கொண்டோம். . . .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2003/939)*

. . . . விக்கிரமசோழ வளநாட்டு நல்லூர் மருதவனப் பெருமாள் கோயிற் - தேவர்கள்மிகளுக்கு நாங்கள் தீட்டுக் . . . . **வேட்கோவரில் செயபாலன்** வயிரதேவரான வழித்துணைப் பெருமாள் . . . இப்பணம் நூற்றுக்கும் உபையமாக . . .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2003/940)*

வீரபாண்டிய தேவற்கு யாண்டு நாலாவது குறுப்பு நாட்டில் செங்கற் பள்ளியான (அற்புதக்கூத்த) நல்லூரில் இருக்கும் பிராமணர். கவுசிய கோத்திரத்தில் இயாந் கரிய பிள்ளையாந வீரராசேந்திர பிரம்மராயன் கிழத்தி . . . திருவிளக்கு சந்தியா தீபம் விளக்கு ஒன்றுக்கு குடுத்த அச்சு பழச்சலாகை . . .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2003/965)*

. . . . இந்நிலத்தால் வந்த நீர் . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வேலிக்காசு ஊர் கழஞ்சு **குமரக் கச்சாணம்** எச்சோற்றுக் கூற்று நெல் கோயில் . . . . குடிமை எப்பேற்பட்டதும் நாங்களே இறுத்து . . . பண்ணிக்குடுத்தோம் . . . .

*(கா.மா.கல்.I.தொ.எ.2004/25)*

. . . . ஊரும் ஊராளிகளுங் குடிமக்களும் நாயினார் வில்லீஸ்வர முடையார்க்கு அமுதுபடிக்கு பணம் குடாத குடிகளை வெண்கல முடைத்து **மண்கலந்தகந்துங்** கொள்ளக் கடவராகவும் பன்மாஹே . . . .

*(கோ.மா.கல்.I.தொ.எ.2004/143)*

. . . . **வேட்கோவரில்** மூர்க்கந் குருடநான நடைகொண்ட **நாட்டுச் செட்டி** மநை கிழத்தியேன் ஆளுடையார் காலகாலத் தேவர் கோயிலில் பெரிய திருமண்டபத்தில் யிந்த நாயகத்தூண் மூர்க்கந் அரசியேந் தற்மம் . . . .

*(கோ.மா.கல்.I.தொ.எ.2004/163)*

. . . . ஆழ்வாறான சந்திர சேணபட்டந் உள்ளிட்டார் வசம் குடுத்த பொற்கழஞ்சே ஆறுமஞ்சாடியுங் கைக்கொண்டோம் இவ்விளக்கு மூந்றும் **குடமும் குச்சியும்** கைக்கொண்டு புக்கார் சந்தி.

*(கோ.மா.கல்.I.தொ.எ.2004/178)*

. . . . வீர கேரள வளநாட்டு நன்னனூர் ஆளுடையார் ஆனகீஸ்வரமுடைய நாயனார்க்கு பாண்டி மண்டலத்து இருஞ்சோனாட்டு மண்ணையார் கோட்டையில் . . . திருக்காமக்கோட்ட நாச்சியார் பெற்ற நாச்சியார்க்கு வீரகேரள வளநாட்டு வீரக்கழல் அழகிய சோழச் சதுர்வேதி மங்கலத்து திருவாதவூர் ஸ்ரீ நாராயண பட்ட குமரன் தம்பி வேந்தஸ்வாமி பட்டரும் இவன் தம்பி அனந்த நாராயண பட்டரும் . . . இந்நாச்சியார்க்கு அமுதுபடிக்கு நாளொன்றுக்கு நெல்லு குறுணியா ஆண்டொன்றுக்கு நெல்லு முப்பதின் கலனே . . . ஈரவாசி நீக்கி கோயிற் காலாலே திருமடைப்பள்ளி வாசலிலே ஆண்டுதோறும் சந்திராதித்தவரை அளந்து குடுப்போமாகவும் குடா தொழியில் வீரபத்ரகள் **மண்கலம்** தகத்தும் உண்கலம் எடுத்தும் மற்றும் வயிராக்கியஞ் செய்து அளப்ப. .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2004/182)*

. . . . பாண்டி மண்டலத்து இருஞ்சோனாட்டு மண்ணையார் பெருமாள் கோட்டையில் உடையார் ஸர்வேரமுடைய நாயனார் திருமடைவிளாகத்து சுந்தர பாண்டிய . . . நாராயணப் பல்லவராயர் மாதாக்கள் பேராலே ஏறியருளப் பண்ணின திருக்காமக் கோட்ட நாச்சியார் பெற்ற நாச்சியார் வீரகேரள வளநாட்டு வடக்கிலூரான . . . இந்நாச்சியாற்கு அமுது படிக்கு .. . காலாலே ஆண்டுதோறும் இந்நெல்லு முப்பதின் கலமும் சந்திராதித்தவரை . . . அளந்து குடாதொழியில் வீரபத்திரகள் **மண்கலம்** தகர்த்தும் வெண்கலம் எடுத்தும் மற்றும் வைராக்கியம் செய்து அளப்பித்துக் கொள்வாராகவும். . . .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2004/184)*

. . . . ஸ்ரீ கொடுவாயில் நாகீசுவர சுவாமியார் சன்னிதி மகாமண்டபம் முன்னிருந்த பெரியோர்கள் மரத்தினாலேயும் **செங்கல்லாலேயும்** உண்டு பண்ணியிருந்தார்கள் அந்த மண்டபம்ம சிலமாய்ச் சிதைந்து போச்சுது . . . .

*(கோ.மா.கல்.II.தொ.எ.2004/208)*

. . . . காங்கய நாட்டுச் சுங்கம் நடத்துகையில் கீரனூரில் வீர நாராயண பெருமாளுக்கு நம்மிட உபையமாக ஒரு திருவிளக்கு நடக்கிறதுக்கு இதுக்கு **குசவன் திருகைச்சுங்கம்** பெருமாள் கோயில்

பிராமணந் . . . சந்திராதித்தர் வரைக்கு சறுவ மாநியமாக நடத்தி வரக்கடவராக . . . .

(ஈ.மா.கல்.தொ.எ.2004/285)

. . . . **குடமும் குச்சியும்** கொடுபுகுவார் சந்திராதித்தவரை செலுத்துவதாகவும் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

வியாபாரி சடையச் செட்டியான மாணிக்க வரதன் சந்தியா தீபம் ஒந்றுக்கு அச்சு ஒன்று குடுக் (கைக்கொண்டு இக்கோயி)லில் காணி உடைய பிராமணந் காசுவந் பட்டந் உடையானாந குலதீப பட்டநந் எந்மக்கள் மக்கள் இவ்விளக்கு ஒந்றும் . . . குடமும் குச்சியும் கொடுபுகுவார் சந்திராதித்தவரை செலுத்துவதாகவும்.

(ஈ.மா.கல்.தொ.எ.2004/297)

. . . . காங்கய நாட்டு முத்தூர் **வேட்கோவக் காணி** உடைய **வேட்கோவந்** சேவிடை பெரியானு நடுவிற் பெரியானு சிறிய பெரியானும். . . நாங்கள் இவ்வச் சொற்றரையு . . .

(ஈ.மா.கல்.தொ.எ.2004/301)

. . . . மாத்தாண்டன் வழிபாடாக கற்பித்த நாச்சியார் அங்கயற் கண்ணாச்சியாற்கும் மாத பூசைக் கற்பித்த அமுதுபடி . . . குடுக்க கற்பித்த சோறு **தாழியும்** திருப்பணியாரம் ம் இதுவும் அதிகனூர் பனையன் சிவராத்திரி பூசைக்குக் குடுத்த நிலமும் ஆக இவ்வகைப்படியே பூசை நடக்க கற்பித்தவை . . .

(திருநெல்.மா.கல்.தொ.எ.2005/78)

. . . . திருவோடையும் திருநந்தவனமும் செயும் பேர் அஞ்சுக்கும் கோலற்றக்கு மேல் வெம்ப நாட்டுச் சுத்த வல்லியான வீரவினோதச் சதுப்பேதி மங்கலத்து **குசவாசி** தேவமாயந்திறந்த நிலத்திலே இப்படி அஞ்சு மாநிலம் எட்டாவது சித்திரை மாதம் முதல் இறையிலியாகத் தந்து . . .

(திருநெல்.மா.கல்.தொ.எ.2005/131)

# தொண்டைமண்டலம்

(பிற்காலச் சோழர் காலம்)



# தொண்டை மண்டலம்

## (களஆய்வுப் பகுதிகள்)






1. கீழ்மாம்பட்டு
2. தேவதானம்பேட்டை
3. சோளிங்கர்
4. எசயனூர்
5. லப்பைபேட்டை
6. சென்ன சமுத்திரம்
7. தெள்ளூர்
8. ஆராசூர்
9. வெண்கலம்
10. சாலியர்பேட்டை
11. செவ்வாய்ப்பேட்டை
12. ராமாபுரம்
13. வடக்களூர்
14. ராயப்பேட்டை
15. கொசப்பேட்டை
16. கோடம்பாக்கம்
17. கொளுத்துவாஞ்சேரி
18. ஊத்துக்காடு
19. மழவன்கரணை
20. சின்ன காஞ்சிபுரம்

*தொண்டைமண்டலப் பகுதியில் ஆய்வாளர் மேற்கொண்ட களஆய்வில் நேர்காணலின் வழி தகவலாளர்களிடம் இருந்து திரட்டப்பட்டத் தரவுகளில் ஆய்வோடு நெருங்கியத் தொடர்புடைய நேர்காணல்கள் இங்கு பதிவுசெய்யப்பட்டுள்ளன. அவை விழுப்புரம், திருவண்ணாமலை, காஞ்சிபுரம், வேலூர், சென்னை, திருவள்ளூர் என்ற மாவட்ட வைப்பு முறைப்படி வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.*

**1**

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : | முனுசாமி |
| | வயது & பாலினம் | : | 70, ஆண் |
| | கல்வித்தகுதி | : | இல்லை |
| | ஊர் | : | கீழ்மாம்பட்டு, செஞ்சி வட்டம், விழுப்புரம் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 12.04.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

நான் பொறந்து வளர்ந்ததெல்லாம் இந்த கீழ்மாம்பட்டு ஊர்லதான். ஆனா எங்கப்பா ஏழுசெம்பொன் ஊர்ல இருந்து இந்த ஊருக்கு வந்துட்டதா சொல்வாங்க. அந்த காலத்தல இது மாதிரி குசவர் இல்லாத ஊர்ல போயி தொழில் செய்து பொழக்கிறது வழக்கம். அப்படிதான் எங்கப்பாவும் இந்த ஊருக்கு வந்தாராம்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் கடந்த 50 வருஷமா இந்தத் தொழிலைச் செய்து வர்றேன். இந்த 50 வருஷத்துக்கு முன்னாடி அஞ்சாறு வருஷமா இந்தத் தொழிலை கத்துகிட்டேன். அதுக்கப்புறம் நல்லா தொழில் தெரிஞ்சி செய்ததுதான் இந்த 50 வருஷமும்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு இந்தத் தொழில்தான் தெரியும். எங்களுக்குப் பூர்வீகமா விவசாய நிலம் ஏதும் கிடையாது. அதனால இந்தத் தொழில்தான் எங்களுக்கு ஜீவிதம். வேற தொழில் கத்துக்கறதுக்கோ செய்யறதுக்கோ வாய்ப்பில்லை.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட அப்பாவிடமிருந்து இந்தத் தொழிலைக் கத்துக்கிட்டேன். 54 (அ) 55 வருஷத்துக்கு முன்னாடி.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

என் மூத்த பையன் மட்டும் இந்தத் தொழில் கத்துக்கிட்டான். அவனுக்குதான் நான் கத்து குடுத்தேன். வேற யாரும் இதை கத்துக்க வரலை. நானும் மெனக்கிட்டு யாருக்கும் கத்துக்குடுக்கல. நானாச்சி எந்தொழிலாச்சி.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், சவுடு மணல், தண்ணீர், விறகு, எருமுட்டை (வறட்டி), வேலிகாத்தான் முள்ளு, பதரு, கூளம், கல்யாண பானைகளுக்கு கலர் அடிக்கத் தேவையான சுண்ணாம்பு மற்றும் வர்ணப்பொடி, பெவிக்கால் (Fevicol).

**8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

சக்கரத்துல செய்யிற பொருளுக்கு மண்ணைப் பதப்படுத்துறதுதான் கஷ்டமான வேலை. களிமண்ணை கரைச்சி ஊத்தி தண்ணீர் இறுகும்போது அதை எடுத்து அதுங்கூட சவுடு மணல் சேர்த்து பெசஞ்சி பொருள் செய்ய ஆரம்பிக்கணும். ஆனால் கையால செய்யிற பொருள்களுக்கு களிமண்ணை அப்படியே ஊரவச்சி அதுங்கூட பதரு, கூளம் சேர்த்து பெசஞ்சி பொருள் செய்ய ஆரம்பிச்சுடலாம். இதில் முன்னாடி சொன்னதுக்கு களிமண் கொறச்சலா தேவைப்படும். அடுத்து சொன்னதுக்கு களிமண் அதிகமாக தேவைப்படும்.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

காலங்காலமா பக்கத்து ஊர் புதுப்பட்டு ஏரியிலதான் களிமண் எடுக்கறது வழக்கம். அப்போவெல்லாம் தரமான களிமண் குழம்படி கிடைக்கும். அப்படியே எடுத்துவந்து எதுவும் சேர்மானம் செய்யாம பொருள் செய்வோம். ஆனால் இப்ப அதுமாதிரியெல்லாம் கெடைக்கிறதில்லை. அதனால கிடைக்கிற மண்ணைக் கொண்டு வந்து கரைச்சி ஊத்தி, அப்புறம் அத எடுத்து அதுங்கூட மணல் சேர்த்து பொருள் செய்யிறோம்.

**10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

தை மாசத்துக்குப் பின்னான ஆறுமாசம் இந்தத் தொழில் செய்ய ஏதுவான காலம். அதுக்கு முன்னாடி இருக்குற ஆறுமாசம் கொஞ்ச கஷ்டம்.

**11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

இந்தத் தொழிலுக்கு முக்கியமானது சக்கரம், தட்டுகட்டை, கல்லு இது மூணும்தான். மத்தபடி களிமண் கொண்டார மண்வெட்டி, கடப்பரை, கூடை, அப்புறம் சக்கரத்துல பொருள் செய்யத் தேவையான சின்னச் சின்ன பொருளுங்க. அதாவது, தெரசில்துணி, வலசல், கம்பி. இது இல்லாம அலங்காரம் பண்றதுக்குக் கொந்துகோல். செம்மண் பூசறதுக்குத் துணி, தேய்க்கறதுக்கு சாக்கு பட்டை. மணல் சலிக்கிற சல்லாடை. இவை இருந்தா போதும்.

**12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

தைப்பொங்கல் பண்டிகை வந்துச்சின்னாதான் அதிகமா பொருள் வாங்குவாங்க. அப்போ பெரியபானை, சூரியபல்லா, பூசணிக்காய்ச்சட்டி, புல்லபல்லா, சருவச்சட்டி, தடச்சிப்பி முதலான பொருள்கள் செய்வோம். இது இல்லாமல் குடம், சொப்புக்குடம், தோண்டி, கூழ்ச்சட்டி, கல்சட்டி, சலாச்சட்டி, பல்லா, உலைமூடி, குழம்புச்சட்டி முதலான பொருள்கள் செய்வோம். கார்த்திகைதீபத்துக்கு அகல் செய்வோம். கூளம் போட்டு செய்யிறதுல தொட்டி, உறை, குதிர், அடுப்பு, திருஷ்டி பொம்மை, குழந்தை பொம்மை முதலானவையும் செய்வோம்.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

பெரும்பாலான பொருள்களுக்குச் சக்கரத்துல செய்யும் போதே வலசலால கோடு போடுவோம். அதுவுமில்லேன்னா கட்டை விரல் நகத்தால் கோடுபோடுவோம். இது தவிர்த்து சொப்புக்கொடத்துக்குதான் விசேஷமா அலங்காரம் பண்ணுவோம். அதுக்கு ரூபாய்நாணயம் வச்சி கீறல் போடுவோம். அப்படியில்லேன்னா தட்டுக்கட்டையோட நுனியிலே சிறுகயிறை மடக்கிப்பிடிச்சி குடத்தோட கழுத்துப்பகுதியிலே சுழட்டிச் சுழட்டித் தட்டுவோம். பிறகு செம்மண் பூசி சாக்குப் பட்டையாலயோ அல்லது தூக்கணாங்குருவி கூட்டாலயோ தேய்ச்சி பளபளன்னு ஆக்கிடுவோம்.

**14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு முழுநேரத்தொழில் இதுதான். வேற தொழில் தெரியாது.

***15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?***

நானும், என் பொண்டாட்டியும் செய்வோம். என் பையன் தனிக்குடித்தனம் போயி அவன் தனியா பொருள் செய்ஞ்சி சூளை போடுறான். நான் என்னால் முடிஞ்ச அளவு கொஞ்சமா செய்ஞ்சி ஜீவிதம் பண்ணிட்டிருக்கேன்.

***16. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?***

நான் மண்ணு மெறிச்சி சக்கரத்துல போட்டு பொருள் செய்வேன். அதைத் தட்டிப்போடுவேன். முள்ளு, செத்தல், வெறகு முதலான பொருள்களை சூளை வக்கிறதுக்காக சம்பாதிச்சி வருவேன். சூளை அடுக்கி சூளை போடுவேன். ஏரிக்கிபோயி களிமண்ணு அடிச்சிட்டு வருவேன்.

எங்க வீட்டம்மா களிமண் காய வைப்பாங்க. அதை பொடியா நறுக்குவாங்க. கல் இல்லாத களிப்பு மண்ணா இருந்தால் அதை அப்படியே களத்துல கொட்டி பட்டரையாக்கித் தண்ணி ஊத்தி ஊறவைப்பாங்க. களிப்பு இல்லாமல் சோறல் மண்ணா இருந்தா அதை காயவச்சி கரைச்சி சல்லடையால வடிகட்டி ஊத்துவாங்க. அப்புறம் பொருள் செய்யிறதுக்காக திரிவல் சுத்தி விடுவாங்க. செய்ஞ்சப் பொருளை எடுத்து பதமா காயவச்சி அதுக்கு செம்மண் பூசி தேய்ப்பாங்க. அப்புறம் சூளை போடுறப்போ ஆம்பளை சூளை அடுக்கும்போது அவங்க கைக்குப் பொருள்களை எடுத்துக் குடுப்பாங்க. பிறகு பொருள்களைத் தலைமேல எடுத்தும் போயி தெருத்தெருவா விப்பாங்க.

***17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்கு போதுமானதாக இருக்கின்றதா?***

போதுமானதா இல்லேன்னாலும் வேற வழியில்லை. எங்களுக்கு இதுதான் ஜீவிதம். வர்ற வருமானத்தை வச்சி குடும்பத்தை ஓட்றதால போதும், போதலைனு சொல்றதுக்கில்ல.

***18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?***

இல்லை. பழைய முறைப்படிதான் இந்தத் தொழிலைச் செய்ஞ்சிட்டு இருக்கேன். புதுசா எதுவும் மாற்றஞ்செய்யல. ஆனால் மத்தவங்க எல்லோரும் பேரிங் (Bearing) சக்கரம் மாத்திட்டாங்க.

***19. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?***

அந்தக் காலத்திலிருந்து இப்ப வரைக்கும் எங்க நெலம ஒரே மாதிரிதான் இருக்கு. பொருள் செய்யிறதுல, விக்கிறது, வாங்குறதுல மாற்றம் ஏற்பட்டாலும் எங்களோட குடும்ப நெலம ஒரேமாதிரிதான் இருக்கு. 20 அல்லது 30 வருஷத்துக்கு முன்னாடி அதிகமா பொருள் செய்வேன். அப்போ

மண்ணெல்லாம் தரமா கெடச்சிது. சுலபமா கெடைச்சிது. அதனால பொருளுக்கான விலை குறைச்சல். இப்போ பொருள குறைச்சலாத்தான் கேக்கறாங்க. நாங்களும் அதை மட்டுமே செய்யிறோம். ஆனால் பொருளுக்கான விலை அதிகம். அதனால அப்பவும் சரி இப்பவும் நாங்க ஒரே மாதிரிதான் இருக்கின்றோம். தொழில் செய்யிறதுலதான் கொஞ்சம் சுணக்கம் ஏற்பட்டிருக்கு. மற்றபடி வசதிவாய்ப்புல எந்தவிதமான முன்னேற்றமும் இல்லை.

***20. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?***

ஊரில் உள்ள எல்லா ஜாதிக்காரங்களும் வந்து மண்பாண்டப் பொருள்களை வாங்குவாங்க.

***21. விற்பனைக்கான இடங்களை எப்படி தேர்ந்தெடுக்கிறீர்கள்?***

ஒரு பத்து வருஷத்துக்கு முன்னாடியெல்லாம் தலையில சட்டி பானையை கட்டி தூக்கிம்போய் பத்து ஊர்ல வித்திட்டு வருவது வழக்கம். அதுக்கும் பின்னாடி கட்டைவண்டி கட்டி அதுல பொருளை ஏத்திம்போயி ஊர் ஊரா வித்துட்டு வருவோம். இப்ப அப்படியெல்லாம் இல்லை. வீட்ல ஏதாவது நல்லநாள் கெட்டநாளுன்ன ஊர்க்காரங்களா வந்து வாங்கிட்டுப் போறதோடு சரி. மத்தபடி நாங்க வெளியில எடுத்தும்போயி விக்கிறது இல்லை.

***22. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?***

நான் சில்லறை விற்பனைதான் செய்யிறேன். மொத்தத்துல யாரும் வந்து கேட்கறதில்லை.

***23. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?***

மண்பாண்டத் தொழில் முதலீடு இல்லாத தொழிலாம். அதனால பொருள் வாங்க வர்ற எல்லோரும் பேரம் பேசித்தான் பொருள் கேட்பாங்க. சொல்ற காசுக்கு பொருள் வாங்கிம்போற அளவுக்கு ஒருத்தரும் கெடையாது.

***24. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)***

இப்ப குடித்தொழில் செய்யிறதில்லை. ஆனா பத்து வருஷத்துக்கு முன்னாடி செய்திருக்கிறேன்.

தைப்பொங்கலுக்கு கொடுக்குற பானை, சட்டிகளுக்கும், கார்த்திகை தீபத்துக்குக் கொடுக்கிற அகல்விளக்கு, ஊர்ப் பொங்க வைக்கக் குடுக்குற பல்லாவுக்குத்தான் மேரையே தவிர மத்த நாள்ல வாங்குற பொருள்களுக்கு இல்லை.

குடும்பத்துக்குத் தகுந்த அளவுதான் மேரையும். நெலபுலம் அதிகமாக இருக்குற குடும்பம் பெரிய குடும்பமாதான் இருக்கும். அவங்க பொங்கலுக்கு 15-க்கும் மேற்பட்ட பெரிய உருப்படிகளை எடுப்பாங்க. அதுக்குத் தகுந்தமாதிரி கலம் நெல் மெராசியா தருவாங்க. சின்னக் குடும்பத்தாராக இருந்தால் 7 அல்லது எட்டு பெரிய பொருள் எடுப்பாங்க. அவங்க அதுக்கு குறுணி நெல்லு குடுப்பாங்க. இது இல்லாம நெல்லுக் கட்டு ஒன்னு தனியா குடுப்பாங்க.

இப்படி அவங்க எடுக்குற பொருளுக்குத் தகுந்த மாதிரிதான் மெராசி கொடுப்பாங்க. இது இல்லாம நிலம் இல்லாதவங்க காசு குடுத்துப் பொருள் வாங்கிப்போவாங்க. இல்லேன்னா அவங்க கூலிக்கு வேலை செய்து வாங்கின தானியத்தைக் கொண்டுவந்து கொடுத்திட்டு பொருள் வாங்கிம்போவாங்க. வண்ணார், அம்பட்டர், தச்சர் முதலானவர்களுடனெல்லாம் மாத்தி மாத்தி குடிவேலை செய்ஞ்சிப்போம்.

கருமாதி செய்யிறதுக்குத் தேவையான ஏழெட்டுப் பொருள்களை நாங்க குடுப்போம். இது ஊர்ல இருக்குற எல்லா குடும்பத்துக்கும் குடுப்போம். அப்படி குடுத்துட்டு அன்னைக்கு அவங்க விசேஷத்திற்குப் போனோம்னா அதுக்கான காசு கொடுத்து கூடவே அரிசி, பருப்பு, உப்பு, மிளகா முதலான பொருள்களையும் குடுப்பாங்க. நாங்களும் வாங்கிட்டு வருவோம்.

**25. நீங்கள் எந்தெந்தச் சாதியினருக்குக் குடிஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

இந்த ஊர்ல கவுண்டர், பறையர், வண்ணார், அம்பட்டர், சக்கிலி, தச்சர், இடையர் முதலான சாதிக்காரர்கள் இருக்குறாங்க. இந்த சாதிக்காரர்கள் எல்லோருக்கும் நான் மெராசி செய்திருக்கிறேன். இதுல எநதவிதமான பாரபட்சமும் இல்லை. நமக்குத் தேவை வருஷத்துல ஒரு முறை அவங்கவங்க நெலத்துல வெளையிற தானியம் அவ்ளோதான். அவங்க யாராயிருந்தா நமக்கென்ன.

**26. எந்தச் சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பறையர், கவுண்டர் (வன்னியர்) சாதிக்காரங்கதான் பத்து வருஷத்துக்கு முன்னாடியெல்லாம் அதிகப்படியான மண்பாண்டப் பொருளை வாங்கிட்டிருந்தாங்க. ஆனா இப்போவெல்லாம் யாரும் அதிகமா வாங்குறதில்லை. அவசியமான ஒன்னிரண்டு பொருள்களை மட்டுந்தான் வாங்குறாங்க.

**27. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ல இருக்குற எல்லா குடும்பத்துக்கும் மெராசி செய்யிறதில்லை. ஆனால் தொழிலாளி என்கிற முறையில் ஊரில் உள்ள எல்லா குடும்பத்தார்

வீட்டு நல்லது கெட்டதுக்கும் பொருள் கொடுக்கிற வழக்கம் உண்டு. அதுமட்டுமல்லாமல் ஊர்த்திருவிழாவில் குடிவேலை செய்கின்ற தொழிலாளிகள் என்ற முறையில் கண்டிப்பா கலந்து கொள்ள வேண்டும். அங்கிருக்கும் கோயில் வேலைகளைச் செய்யணும். அப்படி செய்தா திருவிழா முடிந்ததும் கோயில் நிர்வாகத்திலிருந்து தொழிலாளிகளுக்கு முறை செய்வாங்க. அதாவது 200 (அ) 300 ரூபாய் காசு கொடுப்பாங்க. சிலபோது துணிமணியெடுத்துக் கொடுப்பாங்க.

***28. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?***

உண்டு. சாதிவாரியா பிரிச்சிப் பார்த்துக் கொடுக்குற சடங்குப் பொருளில் கல்யாணப் பானை மிக முக்கியமானது. அதைத்தான் கவனமா பார்த்து செய்ஞ்சி தரணும். இல்லேன்னா பிரச்சனைதான்.

***29. உங்களுடைய திருமண உறவை எந்தெந்தச் சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?***

எங்க குயவர் சாதிக்குள்ளவேதான் பொண்ணு குடுக்கறதும், பொண்ணு எடுக்கறதும் வச்சிப்போம். அதுலயும் தெலுங்கு பேசறவங்க கூட சம்பந்தம் வச்சிக்க மாட்டோம். ஏனெனில் அவங்க சடங்கு சம்பிரதாயம் வேற, எங்க சடங்கு சம்பிரதாயம் வேற. அவங்க பொட்டு தாலி கட்டறவங்க. அதனால அவங்களோட நாங்க சம்பந்தம் வெச்சிக்கிறதில்லை.

***30. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?***

பூங்காவனத்தம்மாள். மேல்மலையனூரில் கோயில் இருக்கிறது.

***31. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப்பொருள் என்னென்ன?***

வருஷத்துக்கு ஒருமுறை கண்டிப்பா வழிபாடு செய்வோம். இது இல்லாமல் பிரதி அமாவாசை தோறும் கோயிலுக்குப் போய்வர்றதும் உண்டு. சாதாரணமா சாமிகும்பிட்டா பொங்கவச்சி படைச்சிட்டு வந்துடுவோம். வீட்ல பிள்ளைகளுக்குக் காதுகுத்தறதா இருந்தா ஆடு, கோழி அறுத்துப் பூசைபோடுவோம்.

***32. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

உடையார்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | கெம்பு உடையார் த/பெ. வெள்ளை உடையார் **2** |
| | வயது & பாலினம் | : | *82, ஆண்* |
| | கல்வித்தகுதி | : | இல்லை |
| | ஊர் | : | வெண்கலம், வந்தவாசி வட்டம், திருவண்ணாமலை மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | *27.03.2009* |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னுடைய பூர்வீகமான ஊர் இதுதான் (வெண்கலம்). இதே ஊர்லதான் நாங்க பரம்பரை பரம்பரையா இருந்து வர்றோம்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் அறுபது வருஷமா இந்தத் தொழில் செய்திட்டிருக்கேன். இப்ப அதிகமா தொழில் செய்ய முடியறதில்லை.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு இந்தத் தொழிலைத்தான் எங்கப்பா கத்துக் குடுத்தார். எனக்கு இந்தத் தொழில்தான் தெரியும். வேற தொழில் தெரியாது. அதனால இந்தத் தொழில செய்யிறன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

நான் எங்கப்பாகிட்ட கத்துக்கிட்டேன், சின்ன வயசுல.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

என் பையனுக்குக் கத்துக்குடுத்தேன். ஆனா அவன் என்னெய மாதிரி சட்டிபானையெல்லாம் செய்யிறதில்லை. பொம்மைவேலை செய்யிறான். கோயில்வேலை செய்யிறதும் உண்டு.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, செம்மண்ணு, நொய் மணல், வைக்கோல், வெறகுக் கட்டைகள், நெல் பதறு, வைக்கோல் கூளம், சாம்பல், வேலிகாத்தான் முள்ளு, கல்யாணப் பானைக்கு அடிக்க சுண்ணாம்பு, வர்ணம் மூணு வகை.

**8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

ரெண்டு வகையா சொல்லலாம். ஒண்ணு தொழுவேத்தி பொருள் செய்யிறது. இரண்டாவது புளிக்க வச்சி பொருள் செய்யிறது. பானை, சட்டி அப்படின்னு தகுலான பொருளுங்களெல்லாம் தொழுவேத்தி செய்யிறது. அதாவது சக்கரத்துல செய்யிற உருப்படிகள். மாட்டுத்தொட்டி, ரஞ்சகம், அடுப்பு, உறை முதலான பொருளெல்லாம் கூளம் போட்டு ஊறவச்சி கையால செய்யிற பொருளுங்க. இதுல தொழுவேத்தி செய்யிறதுக்கு நல்ல களிப்பான களிமண்ணோட மணல் சேர்த்து பெசயணும். ஆனால் புளிக்கவச்சி செய்யிற பொருளுக்கு சோறல் களிமண் இருந்தாலும் பரவாயில்லை. அதுங்கூட நெல் பதறு, வைக்கோல் கூளம் சேர்த்து பெசஞ்சி பட்டரையிலேயே அமுக்கி வச்சிட்டம்னா ரெண்டு நாள் புளிச்ச பிறகு எடுத்துப் பொருள் செய்யலாம். அப்பதான் கைக்கு லெகுவா வலவலன்னு இருக்கும். அதனால் அப்படி செய்யிறது.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

அப்போவெல்லாம் 20 வருஷத்துக்கு முன்னாடி அதிகமான உருக்கள் செய்வோம். அதனால பாத்துப் பாத்து நுணுக்கமாயெல்லாம் செய்யிறதில்லை. எல்லாப் பொருளையும் ஒரே மாதிரிதான் செய்வோம். விசேஷமான எந்த அலங்காரமும் பகட்டும் செய்யத் தேவையில்லை. ஏனென்றால் அப்போ மண் பொருளு அதிகமா தேவைப்பட்டிச்சி. அதிகமா வாங்குனாங்க. அப்போ அவங்களுக்குத் தெரிஞ்சதெல்லாம் உபயோகந்தான். பகட்டா இருக்கணும்னு கேக்கமாட்டாங்க. அதே மாதிரி பகட்டுக்காக காசு குடுக்க மாட்டாங்க. அப்போவெல்லாம் அலங்காரம் பெருசாபடலை. ஆனாலும் அலங்காரம் அதிகமா இருந்திச்சி. ஆகையால பொருளுக்குப் பூசுற செம்மண் ரொம்ப நிறமா இருக்கணும்னு மெனக்கிடமாட்டோம். இங்க பக்கமா எங்கயாவது செம்மண் கிடைச்சா அதை கொண்டு வந்து பூசுவோம். நல்ல நிறம் கெடைக்கலனாலும் கவலைப்படறது இல்லை. ஆனால் இப்போ அப்படி இல்லை. பானைங்க நல்ல நெறமா பளபளன்னு இருக்கணும்னு நெனக்கிறாங்க. அதனால இப்போவெல்லாம் புதுச்சேரி போயி செம்மண் எடுத்து வர்றோம்.

அங்கத்தான் நல்ல நெறமான செம்மண் கெடைக்குது. அதே மாதிரி மண்பாண்டம் ரொம்ப சுலபமா இருக்கணும்னு நெனக்கிறாங்க. அதனால அதுக்குத் தகுந்த மாதிரி மண் தேட வேண்டியிருக்குது. ஆனால் முன்ன மாதிரி தரமான மண் வகைங்க இப்ப கெடைக்க மாட்டேங்குது. அதனால ரொம்ப தூரமா போயி மண் எடுத்து வர்றது. இல்லேன்னா உள்ளூர் ஏரியிலேயே ஆழமா பள்ளந்தோண்டி நல்ல மண்ண தேடி எடுக்கறது முதலான சிரமங்களெல்லாம் இப்ப இந்தத் தொழில்ல இருக்கு.

**10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

இந்தத் தொழிலுக்கு ஏத்தகாலம்னா அது வெயில்காலம்தான். அப்பதான் நாம செய்யிற பொருளை சரியா பக்குவப்படுத்த வசதியா இருக்கும். ஆனாலும் நாங்க எல்லாக் காலங்களிலும் இந்தத் தொழிலைச் செய்வோம். அதாவது எப்ப அதிகமாக பொருள் விற்பனையாவுமோ அந்த நேரத்துலதான் அதிகமா செய்வோம். குறிப்பா சொல்லனும்னா பொங்கல், தீபம் வர்ற மாசங்களில் அதிகமா பொருள் செய்வோம்.

ஆடி, புரட்டாசி, மார்கழி மாசங்களில் அதிகமா பொருள் செய்வோம். அதிகமா சூளை போடுவோம். என்ன விஷயம்னா சூளை போடறதுக்கு நல்லா தரை காய்ஞ்சி இருக்கணும். தரை ஈரமா இருந்துச்சின்னா சூளை போடுறப்போ அந்த ஈரப்பொகை பொருள்மேல அடிச்சி பொருளெல்லாம் கருப்பா போயிடும். அதனால நல்லா வெயில் காயிற நாள்லதான் சூளை போடுவோம்.

**11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

இந்த தொழிலுக்கு முக்கியமானது சக்கரம், தட்டுகட்டை, கல்லு இது மூணும்தான். மத்தபடி களிமண் கொண்டார மண்வெட்டி, கடப்பரை, கூடை, அப்புறம் சக்கரத்துல பொருள்செய்யத் தேவையான சின்னச்சின்ன பொருளுங்க. அதாவது, தெரசில்துணி, வலசல், கம்பி. இது இல்லாமல் அலங்காரம் பண்றதுக்குக் கொந்துகோல், செம்மண் பூசறதுக்குத் துணி, தேய்க்கறதுக்குச் சாக்கு பட்டை. மணல் சலிக்கிற சல்லாடை.

**12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

மண் கடாய், குழிபணியாரச்சட்டி, குட பல்லா (எண்ணைப் பல்லா - வாய்ச் சிறியதாய் இருக்கும் ஒரு வகைப் பானை), சின்னது பெருசா அஞ்சாறு தினுசுல சோத்துப்பானை, கூழ்சட்டியும் அதேமாதிரி, குழம்புச்சட்டியும் அஞ்சாறு வகையில செய்வேன். தானியம் கொட்டி வைக்கப் பெரிய பெரிய பானைகள், சாலு வகைகள் எல்லாம் செய்வேன். இது தவிர்த்து குதிர், அடுப்பு, மாட்டுத்தொட்டி, சாடி (தண்ணீர் நிரப்பி வைக்கும் பாத்திரம்) எல்லாம் செய்வேன். இந்தப் பொருளெல்லாம் நான் செய்து பழக்கப்பட்ட பொருள்களா இருந்தாலும் வெறுமனே செய்யிறதில்லை. யாராவது கேட்டா செய்வேன். இல்லேன்னா இல்லை.

நாலுகாசு பார்க்கணும்னு நெனக்கிறதுதான் இந்த பொருள்கள் செய்யிறதுக்கான நோக்கம்.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

தலைப்பு பிளக்கிறது, கீத்துப் போடறது, பூப்போடறது, கொந்து போடறது முதலான வகையில பானைகளை அழகுபடுத்துவதுண்டு. இது

சக்கரத்திலிருக்கும் போதும் தட்டும் போதும் ஆம்பளைங்க போடுற அலங்கார வேலைகள். இதுல தலைப்பு பிளக்கிறது என்பது சக்கரத்துல பானை செய்யும் போது கடைசியா பானையோட உதடு செய்வோம். அந்த உதட்டுப் பகுதிய கையால் உருவி எடுத்தப் பிறகு அந்த உதட்டோட மையப்பகுதியில் நம்மோட விரல் நகத்தை வச்சி அழுத்தினோம்னா அந்த உதடு ரெண்டா பிளந்தபடி அழகா இருக்கும். இதைத்தான் தலைப்பு பிளக்கறதுன்னு சொல்வாங்க. அதே மாதிரி பானை செய்யிறப்போ மண் வழிக்கிற வலசல் வச்சி பானையோட கழுத்துப் பகுதிக்குக் கோடுபோடுவோம். இதை கீத்துபோடறதுன்னு சொல்வாங்க. இது தவிர்த்து பூப்போடறதும் உண்டு. அச்சால் பூவுக்கான முத்திரையைச் செய்ஞ்சி வாங்கிவந்து அதைக்கொண்டு பானையில் பூ முத்திரைப் போடுவதுண்டு. இதுக்கு அச்சுப்பானை என்ற பேருமுண்டு. இந்த வேலை சக்கரத்துல செய்த பொருளை காய வச்சித் தட்டும்போது செய்யிறது. இதே மாதிரிதான் கொந்து போடறதும். இரும்புத் தகரத்தை வச்சி கீறல் போடறதும். இது பொம்பளங்க செய்யிற வேலை. இதுக்கெல்லாம் பிறகு எல்லாப் பொருளுக்கும் செம்மண் பூசி அலங்காரப்படுத்துவதும் அவங்களோட வேலைதான். இப்படிச் செய்யிற எல்லா வேலையும் வெறும் அலங்காரத்துக்காக மட்டும் செய்யிறதில்லை. அதுல வேற வேற உபயோகமும் இருக்குது. குறிப்பா சொல்லணும்னா தலைப்பு பொளக்கிறது. அதாவது பானையின் உதட்டுப் பகுதியின் வெளிப்புறத்துல கோடு போடுறது. இந்தக் கோடு பார்க்க அழகா இருக்கும். அதே சமயத்துல பானையை தூக்கும்போது கைப்பிடிமானத்தைத் தரும் அதுக்காக செய்யிற வேலைதான் தலைப்பு பொளக்கிறது.

**14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழுநேரத் தொழில்தான். மண் வேலையில் ஈடுபடுறவங்க வேற தொழில்ல ஈடுபட முடியாது. அதே மாதிரி வேறவேலை செய்யறவங்க மண் தொழில்ல இறங்க முடியாது. மண் தொழில் செய்ஞ்சா அதே தொழில்தான் செய்ய முடியும். அவ்ளோ வேலை இந்தத் தொழில்ல இருக்கு.

**15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

இந்தத் தொழிலைப் பொருத்த வரைக்கும் தனியா யாரும் எதுவும் செய்ய முடியாது. எல்லாமே இரண்டு மூணு பேர் சேர்ந்துதான் செய்ய முடியும். அப்படின்னா ஒரு குடும்பத்துல இருக்குற எல்லாருக்கும் வேலை இருக்கும். இந்தத் தொழிலைப் பொறுத்த வரைக்கும் குடும்பத்தோட செய்யனும்.

**16. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

இந்தத் தொழில்ல எல்லாருக்கும் எல்லா வேலையும் இருக்கும். குறிப்பா ஆம்பளைங்களுக்கு சக்கரத்துல பொருள் செய்ஞ்சி தட்டிப் போடுறதுதான் வேலை. ஆனால் பொம்பளைங்க, இது மாதிரி ஆம்பளைங்க செய்யிற ஒட்டுமொத்த வேலைகளுக்கும் உறுதுணையாயிருந்து வேலை செய்வாங்க.

**17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

போதுமானதாக இருக்கிறது.

**18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

இல்லை. பேரிங் சங்கரம் உபயோகப்படுத்துவதோடு சரி. மத்தபடி வேறெந்த மாற்றமும் இல்லை.

**19. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

அலுமினியம், சில்வர் பண்ட பாத்திரங்களை உபயோகப்படுத்துற பழக்கம் அதிகமாயிடுச்சி. அதனால் மண்ணு பொருளை யாரும் அதிகமா வாங்குறதில்லை. கொழம்பு சட்டி, கல்சட்டி, தண்ணீர்ப் பானை அப்படின்னு சில பொருள்களைத்தான் வாங்குறாங்க.

**20. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

ஊர்ல இருக்குற குடியானவங்க எல்லோரும் மண்பொருளை வாங்குவாங்க.

**21. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

வீட்டோட விற்போம். பிறகு மிக முக்கிய விசேஷ நாள்ல தெருத்தெருவா எடுத்தும்போயி விற்பதுண்டு. பெரும்பாலும் பொம்பளைங்கதான் இந்த வேலையைச் செய்வார்கள்.

**22. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனை.

**23. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

பொருளுக்கான விலை என்பது பேரம் பேசுறதாகவே இருக்கிறது. நாம எந்த வெலையைச் சொன்னாலும் வாங்கறவங்க அந்த வெலையைப் பேரம் பேசித்தான் வாங்குவாங்க. அதனாலேயே நாங்க வெலையைக் கூடுதலா சொல்றதும் உண்டு.

**24. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இப்ப அதுமாதிரியான குடித்தொழில் செய்யறதில்லை. ஆனால் ஒரு பதினஞ்சு இருபது வருஷத்துக்கு முன்னாடி செய்திருக்கிறேன். ஒரு கால கட்டத்துல வண்ணான், அம்பட்டன் சோறு எடுக்கறது மாதிரி குசவர்களும் வீடு வீடாகச் சென்று சோறு வாங்கியிருந்ததாக எங்க அப்பா சொல்லியிருக்கார். நானும் சின்ன வயசுல பார்த்திருக்கேன்.

**25. நீங்கள் எந்தெந்த சாதியினருக்கு குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

சாதி பேதமெல்லாம் இதுல கெடயாது. எல்லா வெவசாயக் குடிகளுக்கும் மேரை செய்திருக்கேன். சாதி வித்தியாசம் கெடையாது. ஆனால் மேரையில வேற ஒரு வகை உண்டு. நாலுமரக்கா நெல், ஆறுமரக்கா நெல்லு, கலம்நெல்லு அப்படின்னு நெல் அளவுக்குத் தகுந்தமாதிரி உருப்படிகளைக் கொடுப்போம். உதாரணமா, கலம் நெல்லுக்கு மேரை கேக்கற ஒருத்தருக்கு இருபது அல்லது இருபத்தஞ்சி உருப்படி கொடுப்போம். அதுவும் பொங்கல் காலத்துல வந்து கேட்டு வாங்கிம்போறதோட சரி. மத்தபடி எந்த விதமான ஒட்டும் உறவும் அவங்களுக்கும் நமக்கும் கெடையாது.

**26. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

லப்பைதுலுக்கர்தான் அதிகமான மண் பொருளை வாங்குறாங்க. (இஸ்லாமிய மதத்தில் இருக்கும் ஒருவகை உட்பிரிவு லப்பை). கட்ரா, கல்ச்சட்டி மாதிரியான பொருளத்தான் அவங்களும் வாங்குவாங்க. இருந்தாலும் மத்தவங்க வாங்குறதவிட இவங்க அதிகமா வாங்குவாங்க.

**27. ஊர்ச்சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ல இருக்குற எல்லோருக்கும் கல்யாணப்பானை எடுத்தும் போயி வக்கிறதோட சரி. வேற எதுவும் செய்யிறதில்லை. அப்படிக் கல்யாணப் பானைகளைக் கொண்டும்போயி கல்யாணம் நடக்குற எடத்துல வச்சிட்டு வந்தம்னா அதுக்கான பணமும் கூடவே அரிசி, பருப்பு, உப்பு, புளி, மிளகா, காய்கறி முதலானதெல்லாம் தந்தனுப்புவாங்க. இந்த ஒரு விதத்துல மட்டுந்தான் ஊர்க்காரங்களுக்கும் எங்களுக்குமான ஒட்டுறவு.

**28. சடங்குப்பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

செய்வோம். சாலுகரகம் செய்து கொடுக்கறதெல்லாம் சாதிவாரியாத்தான் செய்து கொடுப்போம். எல்லாருக்குமான பொருள் ஒண்ணுதான். ஆனால் எண்ணிக்கையிலயும் எழுதிக் கொடுக்கும் விதத்திலேயும் ஒவ்வொருத்தரும் வேறுபடுவாங்க. அது அவங்களுக்குத் தெரியிதோ இல்லையோ நமக்குத்

தெரியும். ஆனால் இப்ப இருக்குற உடையார்ங்களுக்கு அதுவும் தெரியாது. கேட்டா, கேட்ட மாதிரி தரத்தான் தெரியும்.

பண்டாரம், இடையர் - எழுதுவதில்லை.

கவுண்டர் உள்ளிட்ட எல்லா சாதிகள் - எழுதுவது உண்டு.

மேற்கூறிய இவர்கள் அனைவருக்கும் கொடுக்கறது ஒரே மாதிரியான உருப்படிகள் தான், ஆனால் எழுதுறதுல மட்டுந்தான் வித்தியாசம். இதுல அதிகமான எண்ணிக்கையில சாலுகரகப் பொருள் எடுக்கறவங்க ஆசாரிகள் மட்டுந்தான்.

**29. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

பொண்ணு குடுக்கறது எடுக்கறது எல்லாம் எங்க சாதிக்குள்ளாகவே தான் வச்சிப்போம். வெளிச்சாதிக்குள்ள இந்த மாதிரியான உறவு முறையை வச்சிக்கிறதில்லை.

**30. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

முனீஸ்வரன்.

**31. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப்பொருள் என்னென்ன?**

ஆடி மாசம் ஏதாவது ஒரு ஞாயித்துக் கெழமையில செய்வோம். வருஷா வருஷம் பொங்கல் வச்சி பூசை போடுவதுண்டு. இது தவிர்த்து வீட்ல விசேஷம்னா அதாவது கல்யாணம் கச்சேரின்னா குலதெய்வமான முனீஸ்வரனுக்குப் பொங்கவச்சி, அவல் பொரி கடலை, சுருட்டு, சாராயம் வச்சி படைப்போம். ஆனா நாங்க இது வரைக்கும் முனீஸ்வரனுக்கு தனியான கோயில் வச்சிக்கல. சாமி கும்பிட நெனைக்கிறப்போ மூணு செங்கல்லைக் கழுவி வீட்டு வாசல்ல நட்டு வச்சி சாமி கும்பிடுவோம். வாயுமுனி, செம்முனி, கருமுனி அப்படி மூணு முனீஸ்வரனைக் கும்பிடுவோம். முனீஸ்வர சாமியப் பெரும்பாலும் பச்சையம்மன் சாமிக்கு எதிர் உடையானா வச்சிருப்பாங்க. அதனால அந்த கோயில்ல முனீஸ்வரனுக்குச் சிலை இருக்கும். ஆகையால அந்த கோயிலுக்குப் போயி முனீஸ்வரனைக் கும்பிடுவோம். கூடவே பச்சையம்மாவையும் கும்பிடுவோம். பச்சையம்மாவுக்கு எதிர் உடையான்தான் முனீஸ்வரன். அப்போ முனீஸ்வரனை அடக்கி ஆளுற சாமி பச்சையம்மாதான். அதனால பச்சையம்மாவையும் கும்பிடுவோம்.

**32. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

உடையார்னு கூப்பிடுவாங்க.

நாங்க தொம்பை கூண்டு அளவு மண்ணு மெறிச்சாலும் குண்டு மணி பொன்னு வாங்க முடியாது. அப்படின்னு எங்க சாதி பெரியவங்க சொல்வாங்க. என்னதான் உழைச்சாலும் உழைப்புக்கேத்த பலன் இல்லாத தொழிலு இந்த தொழிலுதான்.

**இந்நேர்காணலைக் கேட்டுக் கொண்டிருந்தபோது தகவலாளியின் பக்கத்து வீட்டுக் குயவர் பூபாலன் குறிப்பிட்ட பழமொழிக்கதையாவது:-**

முன்னாடி ஒரு காலத்துல எல்லாம் மண்பாண்டப் பொருள்கள் ஏராளமா செய்தாங்க. அதுவும் பொங்கல் பண்டிகை நெருங்கிச்சின்னா இன்னும் மும்முரமா செய்ய ஆரம்பிப்பாங்க. ராத்திரி பகலா தொழில் செய்வாங்க. பொருள் செய்யிறது எப்ப வேணாலும் செய்யலாம். ஆனால் அதை சூளை போடுறது பகல் நேரத்துலதான். அதுவும் மதியானம் உச்சி வெயில்ல தான் செய்ய முடியும். அப்படியிருக்கும் போது ஒரு நாள் ஒரு கொசவன் மத்தியான வேளையில சூளை போட்டான். சூளை போட்டா, முதல்ல இருந்து கடைசி வரைக்கும் மிகப் பொறுமையா நிதானமா கவனமாப் பாத்து எடுத்தாதான் பொருள் உருப்படியா கைக்குக் கிடைக்கும். இல்லேன்னா வீணா போயிடும், சேறு பூசி சூளை போடுறப்போ சூளையில் இடி விழும். அதாவது கனமா சேறு பூசாத சூளையின் மேல்பகுதி தீ தாங்காம கருகிடும். அப்படிக் கருகிடுச்சின்னா அந்த வழியா ஒட்டுமொத்த தீயும் வெளிவந்துவிடும். ஆகையால் சூளை வக்கிறப்போ சூளைக்கு பக்கத்திலேயே இருந்து, அவ்வாறு இடிவிழுற இடத்துல மறுபடியும் செத்தப்போட்டு சேறுபூசி சூளையை விட்டு தீ வெளியே வராத அளவுக்குக் கவனமா பார்த்து செய்யணும். கொஞ்சம் அசந்தா பொழப்பு வீணாப் போயிடும். அப்படியிருக்கும் போது சூளை போட்டுக் கொண்டிருந்த ஒரு கொசவன் கிட்ட அவன்மேல ரொம்ப நாளா ஆசை வச்சிருந்த ஒருத்தி அடுப்புக்கு நெருப்பு கேட்கற சாக்குல சூளை போட்டிட்டிருந்த கொசவன் கிட்ட போனாள். அவன் ரொம்ப கவனமா ஓடியாடி வேலை பார்த்திட்டு இருந்தான். அவன்கிட்டே போயி இவள் மயங்கி நின்னாள். அவன் இவ்வளவு நாளா செய்த உழைப்பு வீணா போயிடுமேன்னு நெனச்சி கவலைப்பட்டுட்டு இருந்தப்போ இவளோட பேச்சி அவனுக்கு எரிச்சலா இருந்துச்சி. அதனால் அவளை இழுத்து எரியிற சூளைமேல தூக்கி போட்டுட்டான். இந்தக் கதையத்தான் **"கொழுத்து கொசவன்கிட்ட போனா; அவன் இழுத்து சூளைமேலப் போட்டான்"** அப்படிங்கிற பழமொழியா வந்துச்சி.

**3**

| | | |
|---|---|---|
| **1.** பெயர் | : | ஸ்ரீரங்கம் |
| வயது & பாலினம் | : | 52, ஆண் |
| கல்வித்தகுதி | : | இல்லை |
| ஊர் | : | தெள்ளூர், வந்தவாசி வட்டம் |
| தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| களஆய்வு நாள் | : | 29.03.2009 |

**2. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் காலங்காலமாக இதே தொழிலைத்தான் செய்து வர்றேன். எனக்கு நெலபுலம் ஏதுமில்லை. இந்தத் தொழிலை விட்டா வேற வழியும் இல்லை. ஆனாலும் இந்த தலைமுறையோடு இந்தத் தொழில் ஒழியுது. இந்த தொழிலை யாரும் கத்துக்கவுமாட்டாங்க செய்யவும் மாட்டாங்க. உதாரணமா இப்ப எங்க வீட்டயே எடுத்துக்கலாம். எனக்கு ரெண்டு ஆம்பள பசங்க. ஒருத்தன் டெய்லர். ஒருத்தன் மெக்கானிக். ரெண்டு பேரும் இந்தத் தொழிலைச் செய்யலை. இந்தத் தொழில் செய்றதை அவனுங்கெல்லாம் கேவலமா நெனக்கிறானுங்க. நான் சின்னப் புள்ளையா இருந்தப்பெல்லாம் சட்டி பானை செய்யத் தெரிந்தால்தான் பொண்ணு குடுப்பாங்க. ஆனால் இப்ப அப்படியே தலைகீழா நடக்குது. சட்டி பானை ஒருத்தன் செய்ஞ்சான்னா அவனுக்குப் பொண்ணு கெடைக்கறது கஷ்டம்.

**3. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

நான் இந்தத் தொழிலை எங்கப்பாவிடமிருந்து கத்துக்கிட்டேன். எனக்கு எட்டு அல்லது ஒன்பது வயசிருக்கும்போது.

**4. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

என்னோட அக்கா பையனுக்குக் கத்துக்குடுத்திருக்கேன். அவன் பேரு பாலகிருஷ்ணன்.

**5. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், வெறகு, வேலிக்காத்தான் முள்ளு, எருமுட்டை, தண்ணீர் இவையெல்லாம் இந்தத் தொழிலுக்கு மிகவும் முக்கியமான பொருளுங்க.

**6. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

எல்லாப் பொருளுக்கும் களிமண்தான் அடிப்படை. ஆனால் அதை இரண்டு விதமா பதப்படுத்தி பொருள் செய்வோம். ஒன்னு பெருங்கல்லு இல்லாது நல்ல களிப்பா இருக்குற களிமண்ணைக் கொண்டு வந்து வெயில்ல நல்லா காயவச்சி அதை நொறுக்கி, பின்பு அதுல சாயந்தரமான நேரத்துல தண்ணீர் ஊத்தி ஊற வச்சி காலையில் அதை மெறிச்சி சக்கரத்துல போட்டு பொருள் செய்யிறது.

ரெண்டாவது, கொஞ்சம் சோறல் களிமண்ணை எடுத்து வந்து காயவச்சி அதுங்கூட வைக்கோல் கூளம், நெல்பதறு சேர்த்து தண்ணீர் ஊத்தி சாயந்திர வேளையில ஊற வச்சிடனும். பிறகு காலையில அதெ மெறிச்சி அமுத்தி வைத்திடனும். அந்த மண்ணை இரண்டு நாளைக்கு புளிக்க வைக்கணும். மூணாவது நாள் எடுத்து அடுப்பு, தொட்டி மாதிரியான பொருள் செய்யலாம். அப்பதான் மண்ணு கைக்கு இலகுவாக ரப்பர் மாதிரி இருக்கும்.

எது எப்படி இருந்தாலும் பழம்பாடுபட்டமண்ணு வேலை செய்யிறதுக்கு நல்லாயிருக்கும்.

**7. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

தரமான களிமண்ணைத் தேடித் தேடிதான் எடுக்க வேண்டியிருக்கு. அவ்வளவு சுலபத்துல கெடைக்காது.

**8. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

வெய்யில் காலந்தான்.

**9. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

தொழில் முறைப்படி தொடக்கத்துல இருந்து சொல்லனும்னா, முதல்ல மண் எடுத்துவர கடப்பாரை, மண்வெட்டி, கூடை முதலான பொருள்களும், அப்புறம் பொருள் செய்வதற்குச் சக்கரம், வலசல், துணி, தட்டுப்பலகை, தட்டுக்கல் முதலானவையும், மாட்டுக் கொம்பால் செய்யப்பட்ட முத்திரை. (இதன் மூலம் மண்பாண்டத்தில் அலங்காரம் செய்வோம்.) மேலும் சூளை போட வேண்டிய முள், மௌாரு எடுத்துவர கவைக்கொம்பு, கொடுவாள் முதலான பொருள்களும் தேவைப்படும்.

மண்ணெடுக்கப் பயன்படுத்தும் பொருள்களனைத்தும் இயல்பாக எல்லா வீட்லயும் இருப்பது. சக்கரம் செய்யும் கொசவர்களிடமிருந்து சக்கரம் செய்ஞ்சி வாங்கிப்போம். தட்டுப்பலகையை ஆசாரியைச் செய்து தரச்சொல்லி வாங்கிப்போம். தட்டுக்கல்லு ஒட்டரிடம் அடிச்சித் தரச்சொல்லி வாங்கிப்போம்.

**10. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

1/4, 1/2 படி பல்லா, சாணகை, சொப்புகொடம், கல்சட்டி, கொழம்பு சட்டி, அடுப்பு, தொட்டி, உறை, ரஞ்சகம், அரவான் பொம்மை, குதிரை பொம்மை, திருஷ்டி பொம்மை முதலான பொருள்கள் செய்வதுண்டு. இவ்வகையான பொருள்கள் அதிகப்படியாக விற்பனையாவதால் இவற்றையே பெரும்பாலும் செய்வோம். பெரிய பெரிய பானையெல்லாம் செய்யத் தெரியும். ஆனால் அதை யாரும் கேட்கறதில்லை. அதனால் நானும் செய்யறதில்லை.

சாலு, ரஞ்சகம் இந்த இரண்டு பொருளும் தானியங்கொட்டி வைப்பதற்காகச் செய்யும் பொருள்கள். சாலுவுக்கும் ரஞ்சகத்திற்கும் அவைகளோட வாய்தான் வித்தியாசப்படும். சாலுவுக்கு சற்று வாய் அகன்று இருக்கும். ரஞ்சகத்திற்கு வாய் சற்றுக் குறுகலாக வயிறு பெருத்துக் காணப்படும். இதுல 'சால்' என்பது சக்கரத்தில் செய்யக்கூடிய பொருள். ஆகையால் மத்த மண்பாண்ட வகைகளுக்கு மண் பதப்படுத்துவது போன்று இதுக்கும் பதப்படுத்தனும். ஆனால் ரஞ்சகத்திற்குக் கூளம் போட்டு பதப்படுத்தும் முறையில செய்யனும். ஏனென்றால் 'ரஞ்சகம்' என்பது அளவில் பெரியதாகவும் உயரமாகவும் கையால் செய்யப்படும் பொருள்.

**11. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

மண்பாண்டங்களை அழகுபடுத்துவதுண்டு. பெரும்பாலும் சக்கரத்தில் பொருள் செய்யும் போதே சில கோடுகளைக் கையால் போட்டு விடுவதுண்டு. அதுவல்லாமல் தனித்தனியான அலங்கார கோடுகளை வரைவதற்கேற்றவாறு உருவாக்கப்பட்ட சில கருவிகளைக் கொண்டும் மண்பாண்டப் பொருள்களை அழகுபடுத்துவதுண்டு. இம்முறை பொருளுக்கேற்ப வித்தியாசப்பட்டிருக்கும். இவ்வாறு எவ்விதமான வித்தியாசமுமின்றி எல்லாப் பொருளுக்கும் செய்யிற அலங்காரம் செம்மண் பூசுவதுதான்.

**12. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழுநேரமும் இதே தொழிலைத்தான் செய்து வருகிறேன்.

**13. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

நான், எம்பொண்டாட்டி ரெண்டு பேரும் சேர்ந்துதான் இந்தத் தொழிலைச் செய்யிறோம்.

**14. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

களிமண் காய வக்கிறது, அதைப் பொடியாக நறுக்கி மண்ணடியில் கொண்டு வந்து சேர்த்துத் தண்ணீர் ஊத்தி ஊறவைப்பது (மண்ணடி என்பது மண் மிதிக்குமிடம்), பொருள் செய்ஞ்சி வச்சா அதை எடுத்தும்போயி காய வக்கிறது, அதுக்கு செம்மண் பூசி தேய்க்கிறது முதலான வேலைகளை என் பொண்டாட்டி செய்வாள். மத்தபடி இருக்குற எல்லா வேலையும் நான்தான் செய்வேன்.

**15. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

இல்லை.

**16. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

செய்திருக்கிறேன். அதுக்கு முன்னாடி கூர்மனை போட்டு இருக்குற மண் சக்கரத்துல வேலை செய்துட்டிருந்தேன். இப்ப பேரிங்கி போட்ட சிமெண்ட் சக்கரத்தை உபயோகப்படுத்திட்டு இருக்கேன். சிமெண்ட் சக்கரம் மழை வந்தாலும், வெயிலடிச்சா வெளியவே கெடக்கலாம். அதை அடிக்கடி பாதுகாக்க வேண்டியதில்லை. நீண்ட நாள் உழைக்கும். சுலபமா சுழலும் என்பதால்தான் நான் சிமெண்ட் சக்கரத்திற்கு மாறினேன்.

**17. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

அலுமினிய பாத்திரத்துல சமைச்சி சாப்பிட்டா T.B. நோய் வருதாம். அதனால் மண்பாண்டப் பொருள் கேட்டு மீண்டும் எங்க பக்கம் திரும்பி வர்றாங்க. பட்டாதான் எல்லாருக்கும் தெரியுது.

**18. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

மண்பாண்ட பொருள்களை வாங்கி விற்பனை செய்யும் கடைக்காரர்கள், அப்புறம் வீட்லயே வந்து பொருள் வாங்கிக் கொண்டு போற ஊர் சனங்கள். இதுல 'நயினார்' சாதியினர் அதிகப்படியான மண்பாண்டப் பொருள்களை வாங்குற பழக்கமுடையவர்கள்.

**19. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

நாங்க தனியாக்கடைபோட்டு விற்பனை செய்வதில்லை. கடைக்காரர்களுக்கு வேண்டிய பொருள்களை மொத்தமாக விற்பனை செய்துடுவோம். இதுமாதிரி மொத்தமா வாங்கி விற்பனை செய்யிற வேலையைக் குலாளர்கள் தவிர்த்து முஸ்லிம், சக்கிலி முதலான சாதியினரும் செய்கின்றனர். இவர்கள் பெரும்பாலும் ராணிப்பேட்டை மார்க்கட்லதான் கடை போடுவாங்க. நாங்க அங்கெல்லாம் போயி கடைபோடுவதில்லை. ஆனால் எங்களுக்கு வந்தவாசியில் காந்தி சிலை பக்கத்துல கடை போடுற

உரிமை உண்டு. இங்கு ஒரு நாளைக்கு ஒரு குயவர் கடைபோடணும்னு முறைபோட்டு விற்பனை செய்துட்டு வர்றோம். மற்றபடி வீட்டிலேயே சில்லறை விற்பனை செய்வதும் உண்டு.

**20. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனையும் உண்டு. மொத்த விற்பனையும் உண்டு.

**21. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

தானியத்துக்கெல்லாம் ஒரு இருபது வருஷத்துக்கு முன்னாடி கொடுத்துட்டிந்தேன். இப்போ தானியத்திற்குக் கொடுப்பதில்லை. யாரும் தானியங்கொடுத்து வாங்குவதுமில்லை. எல்லாருமே காசு கொடுத்துதான் வாங்குவாங்க. காசிருந்துச்சுன்னா எல்லாத்தையும் வாங்கலாம். அப்படியிருக்கும் போது சில்லறையிலே வாங்கறவங்களும் மொத்தத்துல வாங்கறவங்களும் பேரம் பேசாம வாங்குறது இல்லை.

**22. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

ஒரு காலத்துல அதாவது இருபது வருஷத்துக்கு முன்னாடி 'மேரை' செய்ஞ்சிருக்கேன். இப்போ செய்றதில்லை. பொங்கல் பண்டிகைக்குக் கொடுக்குற பொருள்கள் மட்டுமே மேரையில வரும். மத்த நாள்ல கொடுக்குற பொருள் எல்லாம் தனிப்பட்ட முறையில காசுக்கோ அல்லது தானியத்துக்கோதான் தருவோம்.

**23. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மொராசி) செய்திருக்கிறீர்கள்?**

எல்லா சாதியினருக்கும் மேரை செய்திருக்கிறேன். இப்போ யாருக்கும் செய்யறதில்லை. அப்போதெல்லாம் எல்லா சாதியினரும் வந்து மண்பாண்டப் பொருள் எடுப்பாங்க. அப்படி எடுக்கறப்போ காலனிகாரங்களுக்கு (பறையர்) வேண்டிய பொருள்களை நாங்க வாசல்ல எடுத்து வச்சிடுவோம். மற்ற சாதிக்காரங்க எல்லாம் கொட்டாயிக்கு உள்ள வந்தோ, வீட்டுக்குள்ள வந்தோ அவங்கவங்களுக்கான பொருள்களை எடுத்துட்டுப் போவாங்க.

**24. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

'நயினார்' சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியா வாங்குவார்கள்.

**25. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

திரௌபதியம்மன் திருவிழாவின்போது அரவான் சிலை செய்யிற வேலை நமக்கானது. அப்படிச் செய்யிற அரவான் செலையை மூணு ஊர் தாண்டாமல்

அதுக்குள்ளாகவே ஊர்வலம் நடத்தி எடுத்து வந்து திருவிழா செய்யணும். அப்படி அந்த எல்லையைத் தாண்டி சாமி போச்சுன்னா ஆபத்து நடக்கும் என்பது ஐதீகம். ஆகையால் செலை செய்யிறது தொடங்கி ஊர்வலம் நடந்து முடியிற வரைக்கும் அது நம்ம பார்வையிலதான் இருக்கும். மத்தபடி தனிப்பட்ட முறையில் யாருடைய சடங்குலேயும் பங்கெடுத்துக் கொள்றதில்லை.

***26. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?***

சாதிவாரியா பிரிச்சு செய்யிற சடங்குப் பொருள்னா அது 'கல்யாணப் பானை' மட்டுந்தான்.

| சாதி | கலர் | பானை | பாலிகை | அகல் | மடக்கு | கொட பல்லா | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|
| நயினார்<br>கவுண்டர்<br>பறையர் | ✓ | 1 சாலு<br>1 கரகம்<br>2 மூடி<br>2 பொங்கல் பல்லா<br>2 பானக தோண்டி | 5 | 9 | 1 | 2 | 25 |
| இடையர் | × | " | " | " | " | " | 25 |

பெரும்பாலும் பரவலா எல்லா சாதிக்காரர்களுக்கும் இதே மாதிரி தான் நாங்க கொடுப்போம். அதையும் மீறி அவங்களுக்கு வேற பொருள்கள் அதிகமாகத் தேவைப்பட்டுச்சின்னா அவங்களே கேட்டு வாங்கிட்டுப் போவாங்க. அது அவங்களோட தனிப்பட்ட இஷ்டம். அதையெல்லாம் நாங்க கணக்குல வச்சிக்கிறதில்லை.

மத்தபடி வர்ற சாவு முதலான எல்லா சடங்குக்கும் தர்ற பொருள் என்பது எல்லா சாதியினருக்கும் ஒரே மாதிரியானதுதான். அதுக்கு முன்னாடியெல்லாம் மண்பாண்ட பொருள்களைக் கல்யாண சீர்வரிசைக்கு ஜவுளி கணக்குல எடுத்து வைப்பாங்க. இப்பதான் அலுமினியம், பித்தளை, எவர்சில்வர்னு மாறிப்போச்சு.

***27. உங்களுடைய திருமணஉறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?***

உடையார்களுக்கு உள்ளேயே பெண் கொடுக்கறது, எடுக்கறது என்பது தான் இதுவரைக்கும் எங்களுக்குள் இருக்கும் வழக்கம். அதுக்கு முன்னாடி தமிழ் உடையார், தெலுங்கு உடையார் என்கிற பிரிவினை இருந்துச்சி. இப்போ அதெல்லாம் கிடையாது. மண்தொழில செய்வதுதான் எங்களுக்கான அடையாளம். அதை வச்சிதான் பொண்ணு கொடுக்கறதும் பொண்ணு எடுக்கறதும்.

***28. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?***

முனீஸ்வரன்.

**29. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

முனீஸ்வரனுக்கு உருவச்சிலை ஏதும் கிடையாது. இந்த வருஷம்தான் கல்லால் செய்ஞ்சி வச்சி கோயில் கட்டிட்டு வர்றோம். இதுக்கு முன்னாடியெல்லாம் வீட்டு வாசலிலேயே தற்காலிகமான முனீஸ்வரன் செய்து சாமி கும்பிடுவோம். அதாவது காட்டுக்குப் போயி காலடிபடாத இடத்திலிருந்து மண் எடுத்து வந்து அதுல தண்ணீர் ஊத்திப் பெசஞ்சி அதை வச்சி வாசலோட நடு மையத்துல கூம்பு மாதிரி ஒரு உருவம் செய்வோம். அதுதான் முனீஸ்வரன். அதைத்தான் கும்பிடுவோம். காது குத்தல், கல்யாணம் முதலான விசேஷம் செய்யும் போது இதுமாதிரியான வழிபாடு செய்வதுண்டு. தனிக்குடும்பத்தார் மட்டும் செய்தால் பால்பூசை செய்து சாமி கும்பிடுவோம். அதாவது கொழுக்கட்டை, அவல், பொரி, கடலை, பொங்கல் வச்சி பூசை பண்ணுவோம். பொதுவில் இரண்டு மூணு குடும்பமாக செய்வதாக இருந்தால் காவு பூசை செய்வோம். அதாவது வெள்ளாடு வெட்டுவோம். அப்புறம் அம்மி, குழவி, விளக்கு மாதிரியான உருக்களில் பெரிய பெரிய கொழுக்கட்டை செய்து அதனுடன் அவல், பொறி, கடலை, பொங்கல், சுருட்டு, சாராயம் முதலானவற்றை வச்சி படைப்போம்.

**30. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

பெரும்பாலும் 'உடையார்' என்று கூப்பிடுவாங்க. ஒரு சிலர் செட்டியார் என்றும் கூப்பிடுவார்கள்.

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : மணி | **4** |
| | வயது & பாலினம் | : *48*, ஆண் | |
| | கல்வித்தகுதி | : பத்தாம் வகுப்பு | |
| | ஊர் | : ஆராசூர், வந்தவாசி வட்டம், திருவண்ணாமலை மாவட்டம் | |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : தமிழ் | |
| | சாதி & கிளைச்சாதி | : குயவர், சிவகோத்திரம் | |
| | தொழில் | : மண்பாண்டம் செய்தல் | |
| | களஆய்வு நாள் | : *29.03.2009* | |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

எங்களோட பூர்வீகமான ஊர் கப்ளாம்பாடி. எங்கப்பா காலத்துலயே இந்த ஊருக்கு வந்துட்டோம். பொழப்பு தேடித்தான் இந்த ஊருக்கு வந்தோம். இங்கேயே தங்கிட்டோம்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

காலங்காலமாக நாங்க இதே தொழிலைத்தான் செய்து வருகிறோம். எங்க தாத்தா, அப்பா செய்த இதே தொழிலத்தான் நானும் செய்து வர்றேன். கிட்டத்தட்ட *34* வருஷமா இந்தத் தொழிலைச் செய்யிறேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

என்னோட தாத்தா, அப்பா இந்தத் தொழில்தான் செய்தார்கள். அவங்க இந்தத் தொழிலைத்தான் எனக்குக் கத்துக்குடுத்தாங்க. எனக்கு வேற தொழில் தெரியாது. அதனாலதான் இதே தொழில் செய்துட்டு வர்றேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக்கொண்டீர்கள்? எப்போது?**

எங்கப்பாவிடமிருந்து இந்தத் தொழிலைக் கத்துகிட்டேன். என்னோட *15* வயசுல தொழில் கத்துக்கத் தொடங்கினேன். அப்போயிருந்து இதே தொழிலைத்தான் செய்திட்டிருக்கேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

நான் என்னோட தம்பிக்கு இந்தத் தொழிலைக் கற்றுக்கொடுத்தேன். வேற யாருக்கும் இந்தத் தொழிலைக் கற்றுத் தரலை.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, மணலு, செம்மண்ணு, சாம்பல், விறகு, முள்ளு, எருமுட்டை, வைக்கோல், வைக்கோல் கூளம், நெல்பதரு முதலான பொருள்கள் தேவைப்படும்.

***8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?***

மண்பொருள் செய்யிறதுல ரெண்டு வகையிருக்கு. ஒன்னு, கூளம் சேர்த்து செய்யிறது. ரெண்டாவது, களிமண்ணுடன் மணல் சேர்த்து செய்யிறது. முதலாவது வகையான பொருள் செய்யிறதுக்குக் களிமண் எப்படியிருந்தாலும் பரவாயில்லை. அதுங்கூட கூளம் சேர்த்துப் பெசஞ்சி அடுப்பு, மாட்டுத்தொட்டி, மாடுபொம்மை, ஆடுபொம்மை முதலான பொருள்களைச் செய்திடலாம். ஏனென்றால் இவ்வகையான பொருள்கள் சற்று கனமாகத் தடித்து இருக்க வேண்டும். அப்படியிருந்தாதான் உறுதியாக இருக்கும். ஆனால் இரண்டாவது சொன்ன பொருள்கள் அனைத்தும் சுத்தமான களிமண்ணைக் கொண்டுவந்து பெருங்கல்லு இல்லாமல் பொறுக்கிட்டு அதைச் சின்னச் சின்னதா நறுக்கி தண்ணீர் ஊத்தி ஊறவச்சி மறுநாள் பெசஞ்சி சக்கரத்துல போட்டு தெகுலா (மெல்லிதா) பொருள் செய்யணும். அப்பதான் இந்த வகையான பொருள்கள் தெடமா நல்லா இருக்கும்.

***9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?***

பெரிய பெரிய இடர்பாடெல்லாம் இருக்குது. அதுக்கு முன்னாடியெல்லாம் தொழிலுக்குத் தேவையான களிமண்ணை இந்த ஊர் ஏரியிலேயே எடுத்துக்குவேன். ஆனா இப்ப உள்ளவங்க விடமாட்டேன்கிறாங்க. அவங்களும் ஏரியில மண்ணெடுத்து செங்கல் சூளை போடறதால என்னை மண்ணெடுக்க விடமாட்டேன்கிறாங்க. அதனால வெங்காரம் ஊர் ஏரியிலபோயி மண்ணெடுத்து வர வேண்டியிருக்கு.

***10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?***

மார்கழி மாசத்துலதான் அதிகமான பொருள்களைச் செய்வோம். ஏனென்றால் தை மாசத்துல பொங்கல் பண்டிகைக்கு 'மண் பொருள்களை அதிகமான ஊர் மக்கள் கேட்பாங்க. அதனால அதுக்கு முன்னேற்பாடா மார்கழி மாசத்துல மும்முரமா பொருள் செய்யத் தொடங்கிடுவோம். ஆனாலும் இந்தத் தொழில் செய்ய உகந்த பருவகாலம் வெய்யகாலம்தான்.

**11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

இந்தத் தொழிலுக்கு மிக முக்கியமான கருவி சக்கரம்தான். சக்கரம் இல்லேன்னா இந்தத் தொழிலே இல்லை. அப்புறம் களிமண் எடுத்துவர மண்வெட்டி, கடப்பாரை, கூடை, சக்கரத்துல செய்யிற பொருளை தட்டுவதற்குத் தட்டுக்கல்லு, தட்டுப்பலகை, வலசல், திரிசல் துணி முதலானது வேணும். செம்மண் பூசி தேய்க்கச் சாக்குப்பட்டை, சூளை வைக்க வெறகு, அத நறுக்கிபோட கொடுவா ஒண்ணு முதலானவை வேணும். இதுல சக்கரம் மட்டுந்தான் யாராவது தொழில் நுணுக்கம் தெரிந்த குயவர்கிட்ட சொல்லி செய்து வாங்கிக்கணும். மற்றபடி தட்டு பலகை ஆசாரிகிட்ட சொல்லி செய்து வாங்கிக்குவேன். தட்டுக்கல்ல கல்தச்சர்கிட்ட சொல்லி செய்து வாங்கிப்பேன். மற்றபடி உள்ள எல்லாப் பொருளும் சாதாரணமா கெடைக்கும். அதுக்குன்னு மெனக்கிடத் தேவையில்லை.

**12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

சிப்பி அதிகமா செய்வேன். கல்சட்டி, கொழம்புச் சட்டி, கல்யாணப் பானைக்குத் தேவையான அத்தனை உருப்படிகளும் செய்வேன். குடம், சாணகை, அடுப்பு, மாட்டுத்தொட்டி, மாடுபொம்மை, ஆடுபொம்மை, திருஷ்டிபொம்மை, குழந்தை பொம்மை முதலான எல்லா பொருளும் செய்வேன்.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

பொதுவா எல்லா பொருளுக்கும் செம்மண் அடிச்சி பளபளப்பாக்கி அழகுபடுத்துவோம். இது இல்லாமல் கல்யாண பானைகளுக்குச் சுண்ணாம்பு அடிச்சி அதுக்கும் மேல பெயிண்ட் எழுதி அழகுபடுத்தித் தருவேன். இதுல பெயிண்ட் எழுதுறதுதான் என் வேலை. மற்றபடி செம்மண் பூசுறது, சுண்ணாம்பு பூசுறது எல்லாம் எங்க வீட்டம்மாதான் செய்வாங்க.

**14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழுநேரமும் எனக்கு இதே தொழில்தான். ஆனால் ஊர்ல செங்கல் சூளை வைக்கிற வேலையை உடையார் தவிர்த்த மற்ற சமூகத்தினரும் செய்யிறாங்க. என்னதான் எங்க தொழிலை அவங்க செய்தாலும் எங்கள மாதிரி அவங்களால செய்யமுடியாது. அதனால சூளை வக்கிறதுக்கு எங்களத்தான் கூப்பிடுவாங்க. நானும் தினக்கூலியா போயி சூளை போட்டுக்குடுத்துட்டு வருவேன்.

சூளை வைக்கணும்னா முதல்ல வேலிக்காத்தான் முள்ளெடுத்து வந்து சூளை அடுக்குற அகலத்துக்கு பரவலா முள்ளு பரப்பி, அதை உலக்கையால் இடிச்சி சமப்படுத்தணும். அதுக்குமேல வெறகு அடுக்கணும். பிறகு அதுக்கு மேல பொருளை அடுக்கணும். பொருள் அடுக்கி முடிச்சதும் அதைச் சுற்றி அந்தப் பொருள் சரியாம இருக்கறதுக்கு சுத்து பல்லா அடுக்கணும். பிறகு அதைச் சுத்தி வெறகு அடுக்கணும். அதுக்கு மேல வைக்கோலை சீராகப் பரப்பி குச்சியால தட்டி ஒழுங்குபடுத்தணும். ஒழுங்கா படிஞ்சதும் களிமண் சேறு கொழப்பி அதுக்கு மேலே பூசிடணும். அவ்வாறு பூசும்போது உச்சியில மட்டும் பூசாம கொஞ்சம் தெறப்பு விட்டு வைக்கணும். இவ்வளவும் செய்ஞ்ச பிறகுதான் சூளை கொளுத்தணும். இந்த நுணுக்கமெல்லாம் குசவர்களைத் தவிர வேற யாருக்கும் தெரிய வாய்ப்பில்ல. அதனாலதான் செங்கல் சூளைவைக்க எங்களக் கூப்பிடறது.

**15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

என் குடும்பத்துல நான், என் மனைவி ரெண்டே பேருதான் இந்த தொழில் செய்யிற ஆட்கள். எங்கப் பசங்க யாரும் இந்த வேலையச் செய்ய மாட்டானுங்க.

**16. இத்தொழிலில் யார்யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

அடுப்பு போடறது, பானை, சட்டிக்கெல்லாம் செம்மண் பூசுறது, அதைக் காயவச்சி சாக்குப் பட்டையால் தேய்க்கிறது முதலான வேலைகளை என் மனைவி செய்வாங்க. மத்த வேலையெல்லாம் நான்தான் செய்வேன். அதுக்கும் உதவியா எடுபுடி வேலைகளை என் மனைவி செய்து தருவாங்க.

**17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

பரவாயில்லை. கஷ்டப்பட்டு குடும்பத்த ஓட்டிக்கலாம்.

**18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

காலத்துக்கு ஏத்தமாதிரி எல்லாரும் எல்லா கருவிகளையும் மாத்திக்கிறாங்க. ஆனால் நான் இன்னும் எந்தவிதமான கருவி மாற்றத்தையும் செய்யல. இன்னும் பழைய கூர் சக்கரந்தான் உபயோகப்படுத்திட்டிருக்கேன்.

**19. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்துத் தங்களின் கருத்து என்ன?**

மண்பொருளுக்கு மதிப்பில்லை. அதனால மண்பொருள் செய்யிறவங்களுக்கும் மதிப்பில்லை. எல்லாம் பிளாஸ்டிக், அலுமினியம், எவர்சில்வர் அப்படின்னு மாறிடிச்சி.

**20. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

இன்னாருன்னு குறிப்பிட்டு யாரையும் சொல்ல முடியாது. ஊரில் இருக்குற எல்லாரும் வந்து வாங்குவாங்க.

**21. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

வீட்டோட வச்சிருந்து விற்போம். சிலபோது தெருவுல கொண்டு போயி விற்போம். மத்தபடி ஏதாவது திருவிழா வந்தா அங்கபோயி கடைபோடுவோம்.

**22. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனைதான். மொத்த விற்பனை ஏதும் செய்யிறது இல்லை. சிலபோது செங்கல்சூளைவச்சா செங்கல்லை மொத்தமா விற்பனை செய்யிறதோட சரி. மத்தபடி பொருளெல்லாம் மொத்தத்துல இதுவரைக்கும் கொடுத்ததில்லை.

**23. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

நாம சொல்ற அளவு காசு குடுத்து வாங்குற பழக்கம் ஊர்ல ஒருத்தருக்கும் இல்லை. மண் பொருளுதான ஒடையிற பொருளுக்கு என்ன இந்த வெலையைச் சொல்ற அப்படின்னு சொல்லி பேரம் பேசித்தான் வாங்குவாங்க.

**24. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

ஒரு பத்து வருஷத்துக்கு முன்னாடி வரை இந்த ஊர்லயே மேரை செய்தேன். ஆனால் இப்ப செய்யல. மேரை செய்யிறப்போ பொங்கல் பண்டிகைக்காக ராத்திரி பகலா கண் முழிச்சி பொருள் செய்ஞ்சி வைப்பேன். ஊர் ஜனம் வந்து ஒரே நாள்ல வாரிக்கொண்டு போயிடுவாங்க. ஆனா அவங்ககிட்ட நெல்லு வாங்க நாம நடையா நடக்கணும். அப்பதான் அந்த மேரையைத் தருவாங்க. இது சரிப்பட்டு வரல. அதுக்கப்புறம் நான் மேரை செய்யிறத விட்டுட்டேன். எதுவாயிருந்தாலும் காசு குடுத்து வாங்கிட்டுப் போங்கன்னேன். இப்பவெல்லாம் எதுவாயிருந்தாலும் காசுதான். தானியமே கெடையாது. அவங்களும் தானியம் கொடுக்கறதில்லை. நானும் தானியம் கேட்கறதில்லை.

**25. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடிஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

எல்லா ஜாதிக்காரங்களுக்கும் செய்வேன். இதுல எந்த வித்தியாசமும் கெடையாது.

**26. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பறையர், கவுண்டர். இந்த ரெண்டு சாதிக்காரங்கதான் அதிகமா எடுப்பாங்க. ரெட்டியார், வெள்ளாளர் முதலான சாதிக்காரங்க அதிகமா எடுக்க மாட்டாங்க. எங்க ஊர்ல இந்த நாலுசாதிதான் இருக்கு.

**27. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

நல்ல விசேஷமான கல்யாணத்துக்கு சாலு கரகம் செய்து கொடுக்கறது. கெட்ட காரியமான சாவுக்குக் கொல்லி சட்டி, கொல்லிப் பானை தர்றது. ஊராருக்கு நான் செய்யிற வேல இதுதான்.

**28. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

பொருள் செய்யிற முறை எல்லாம் ஒண்ணுதான். ஆனால் அதுக்கு பெயிண்ட் எழுதறதுல சாதிக்கு சாதி வேறுபடும். அதே மாதிரி ஒவ்வொரு சாதிக்காரரும் ஒவ்வொரு எண்ணிக்கையில உருப்படிகள் எடுத்தும் போவாங்க. இதுல ஆசாரிங்கதான் அதிகமான உருப்படியைக் கல்யாணத்துக்கு எடுத்தும் போவாங்க. வெளியூர்ல இருந்தும் வந்து எடுத்தும்போவாங்க.

| சாதி | சாலு -கரகம் | வண்ணம் | மடக்கு | குடவிளக்கு பல்லா | தோண்டி (பானகம்) | பாலி | அகல் | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|
| பெரும் பாலான சாதிக்கு | 1 - சாலு கரகம்<br>2 - மூடி | ✓ | 1 | 1- பல்லா<br>1-பெரிய<br>5-அகல் | 2 | 5 | 9 | 28 |
| ஆசாரி | 32 - சொப்பு<br>32 - கலவோடு<br>4 - கலசம்<br>4-மூடி<br>4 - கலவோடு<br>1 - ஹோம குண்டசட்டி<br>2 - பெரிய பானை<br>2 - கலவோடு | ✓ | 1 | 1 | 2 | 5 | 32 | 122 |
| உடையார் | ஹோம குண்ட சட்டி-1 | - | 1 | - | - | 5 | - | 7 |

**29. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

உடையார் சாதிக்குள்ளவேதான் பொண்ணு கொடுக்கறதும் எடுக்கறதும். அதுக்கு முன்னாடியெல்லாம் உடையாருக்குள்ளேகூட தெலுங்கு உடையாரும், தமிழ் உடையாரும் சம்பந்தம் கலந்துக்க மாட்டாங்க. ஆனால் இப்ப எல்லாம் ஒண்ணா கலந்து போச்சி.

***30. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?***

முனீஸ்வரன். அவலூர்பேட்டைக்குப் பக்கத்துல இருக்குற பூதமங்கலத்துல முனீஸ்வரனுக்குக் கோயிலிருக்கு.

***31. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

வருஷத்துக்கு ஒருமுறை ஆடி மாசத்துல ஏதாவது ஒரு ஞாயிற்றுக் கிழமை படையல் போட்டுட்டு வருவோம். மத்தபடி காதுகுத்தறதுக்குப் போவோம். காது குத்தும்போது முக்காவு கொடுப்போம். அதாவது ஆடு, கோழி, பன்றி என முக்காவு கொடுப்போம். சுருட்டு, சாராயம் வச்சி படைப்போம். இது இல்லாம வீட்ல காட்டேரி கும்பிடுற வழக்கமும் உண்டு. காட்டேரியை பொம்பளைங்கதான் கும்பிடுவாங்க. அதுவும் ராத்திரியிலதான் கும்பிடுவாங்க. கருப்புக்கோழி அறுப்பாங்க. கருப்பு புடவை, ஜாக்கெட் வச்சி படைப்பாங்க. கருப்புக்கோழி முட்டையிடற கோழியா இருக்கணும். அதை அறுத்து சமைச்சி, கொளத்தங்கரையில சின்னதா வீடுகட்டி 7 புள்ளையார் புடிச்சி வச்சி அதுக்குக் கருப்புக்கோழி கறியைப் படைப்பாங்க. இதைச் செய்யிறதுக்கு ஒத்தபடை எண்ணிக்கையிலதான் பொம்பளைங்க போவாங்க. அங்கேயே அந்த படையலை அவங்க சாப்டுட்டு வந்துடுவாங்க. ஏன்னா மீதிய வீட்டுக்கு எடுத்து வரக்கூடாது.

***32. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

ஊரில் எல்லாரும் என்னை உடையார்னுதான் கூப்பிடுவாங்க.

5

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : | டி.என். சங்கர்<br>த/பெ. நடராஜ பக்தர் |
| | வயது & பாலினம் | : | 53, ஆண் |
| | கல்வித்தகுதி | : | ஒன்பதாம் வகுப்பு |
| | ஊர் | : | அஸ்தகிரி தெரு,<br>சின்னக் காஞ்சிபுரம்,<br>காஞ்சிபுரம் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தெலுங்கு & தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குலாலர், விஷ்ணு கோத்திரம் |
| | தொழில் | : | பொம்மைத் தொழில் |
| | களஆய்வு நாள் | : | 03.04.2010 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

தண்டரை கிராமம், மனாமதுரைக்குப் பக்கத்துல இருக்குங்க. எங்க அப்பா, தாத்தா எல்லாம் அங்கதான் பொறந்து வளர்ந்தாங்க. அந்தக் கிராமத்துல வருவாய் அதிகமா இல்லாததால் பொம்மைத்தொழில் செய்ய புறப்பட்டு இங்கு வந்தாங்க. இங்கேயே தங்கிப் பொழப்பப் பார்க்க ஆரம்பிச்சுட்டாங்க. அதனாலதான் எங்கப்பா பேரு தண்டரை நடராஜன். நானும் T. N. சங்கர் அப்படின்னு போடுறேன்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் 35 வருஷமா இந்தத் தொழிலச் செய்து வர்றேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

பரம்பரைத் தொழில். வேற காரணமில்லை.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

இந்தத் தொழிலைப் பொறுத்தவரையில் யாரும் கற்றுத்தந்து கத்துக்கணும்னு இல்லை. கண் பார்த்தா கை வேலை செய்யும். அப்படி செய்ய·ச் செய்யத்தான் அந்த வேலையில இருக்குற நுணுக்கம் கைவரும். மத்தபடி எல்லாரும் இந்தத் தொழிலைச் செய்துவிட முடியாது.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

எவ்வளவோ பேர்க்குச் சொல்லிக் கொடுத்திருக்கேன். TRICEM நிறுவனத்தின் மூலம் பல நூறு பேர்க்கு இந்தத் தொழிலச் சொல்லிக் கொடுத்திருக்கேன். ஊரக வளர்ச்சித் திட்டத்துல வாலாஜாபாத், காஞ்சிபுரம்,

பூந்தமல்லி முதலான இடங்களில் பொம்மை செய்தலைப் பற்றிப் பயிற்சி கொடுத்திருக்கேன். இதன் மூலம் நாய்க்கர், முஸ்லீம் உள்ளிட்ட இன்னபிற சமூகத்திலிருக்கும் மக்களுக்கும் இந்தத் தொழிலைக் கத்துக் கொடுத்திருக்கேன்.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

Plast of Paris, மாவு, காகித மாவு (பேப்பர் ஜல்லி என்று சொல்வோம்), மைதா மாவு இது மூன்றையும் சேர்த்துப் பெசஞ்சி அதுங்கூட மயில்துத்தம் சேர்த்துப் பொம்மைச் செய்வோம். அதாவது மயில்துத்தம் சேர்த்து செய்ஞ்சா பொம்மையை எலி கடிக்காது. எனவேதான் அதைச் சேர்ப்போம். அப்புறம் மோல்டுல ஒட்டாம இருக்கறதுக்காகத் தூவுற பிரெஞ்ச் சாக் பவுடர், பொம்மையோட இரு பகுதியையும் ஒட்டுவதற்கு வேண்டிய பாம்பே சாக் Bombay Chalk Powder (சுக்கான்), பொம்மைகளை அழகுபடுத்த Asian Paints வேண்டும்.

**8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

எல்லா வகையான பொம்மைக்கும் ஒரே மாதிரியான செய்முறைதான். அதாவது மொதல்ல மைதா மாவு வாங்கி வந்து பசை காய்ச்சுவோம். 10 கிலோ மைதாவுக்கு 25 அல்லது 30 லிட்டர் தண்ணீர் ஊத்தி அதுங்கூட மைல்துத்தம் சேர்த்து பசை காய்ச்சுவோம். 10 கிலோ Plast of Paris மாவுக்கு 1 கிலோ Paper ஜல்லி என்ற விகிதத்துல சேர்மானம் செய்த அந்தக் கலவையில் தேவையான அளவு மைதா மாவுல காய்ச்சிய பசையைச் சேர்த்துப் பெசைவோம். அவ்வாறு பெசையப் பெசைய அந்தக் கலவையானது பரோட்டா மாவு மாதிரி ஆயிடும். அதுக்கப்புறம் அதை எடுத்து, மோல்டுல இருக்குற உருவத்துமேல மெல்லிதா அழுத்திப் பதியணும். அதுக்குமேல, மீண்டும் பசை தடவி பேப்பர் ஒட்டணும். இது மாதிரி 3 அல்லது நாலு பேப்பர் ஒட்டணும். பிறகு வெயில்ல காய வச்சி மோல்டுல இருந்து பொம்மையைத் தனியா பிரிச்சி எடுத்துடலாம். இதுமாதிரி பொம்மையோட வெவ்வேறு பாகங்களைச் செய்து சேர்த்து ஒட்டினால் பொம்மையோட முழு உருவம் கெடைக்கும். அவ்வாறு கிடைத்த பொம்மையைப் பட்டசீல வச்சி வழவழப்பா தேய்ச்சி அதுக்கு மேல பெயிண்ட் அடிச்சிடுவோம்.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

எல்லாப் பொருளும் காசு கொடுத்தா கடையில சுலபமா கிடைக்கும்.

***10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?***

வெயில்காலம் உகந்தது. அதனாலதான் நாங்க வெயில் காலத்துல அதிகமா இந்தத் தொழிலைச் செய்வோம். ஆனா விற்பனை மட்டும் நவராத்திரி வர்ற அந்த ஒரு மாத காலத்தில் மட்டுந்தான் இருக்கும்.

***11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?***

பொம்மை செய்வதற்கான மோல்ட் (Mold), மைதா காய்ச்சுவதற்கான பாத்திரங்கள், பொம்மையோட உதிரி பாகங்களை ஒட்டும்போது பிசிருகளை வெட்டியெடுக்கத் தேவையான கத்தி, Bombay Chalk Powder வச்சிப் பூசி எடுக்கக் குதிரை முடி Brush, தேவையான மூங்கில் சிவரை மற்றும் பொம்மையை வழவழப்பானதாக மாற்ற 'பட்டசீல்' வச்சி தேய்க்கணும். வழவழப்பான பிறகு பெயிண்ட் அடிக்க *0.1, 0.2, 0.5* inch brush, Spray Gun Machine முதலானக் கருவிகள் தேவைப்படும். இம்மாதிரியான எல்லாக் கருவிகளையும் அதுஅதுக்கான கடையில தனித்தனியா வாங்கிக்கலாம். அதுல சிரமமேதுமில்லை.

***12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?***

கொலு வைப்பதற்கான பொம்மைகள் நூத்துக்கணக்குல செய்வோம். கருட சேவை, பள்ளிக்கூடம், தசாவதாரம், அஷ்டலட்சுமி, பூங்கா, கிரிக்கெட், ஆழ்வார்கள், துளசி மாடம், கோயில் பூஜை, ரேஸ்கோர்ஸ், கதை சொல்வது மாதிரியான செட்டிங் (பாட்டி வடை சுட்ட கதை), இண்டியன் லேடிஸ், ராமானுஜர், பிள்ளையார் மியூசிக்கல் முதலான எல்லா வகையான பொம்மைகளும் Set ஆக செய்து தருவோம்.

இது தவிர்த்து சாமி பொம்மைகள், வீட்டுக்கு முன்னாடி வக்கிற மாதிரியான பாவை விளக்கு பொம்மைகள், கல்யாண மண்டபத்துக்குத் தேவையான வரவேற்பு பொம்மைகள் முதலானதெல்லாம் செய்து தருவோம். ஆக ஒட்டு மொத்தத்துல சாமி பொம்மைகள் தான் அதிகமா செய்வோம். ஏன்னா அதுதான் அதிகமான Order வரும்.

***13. பொம்மைகளை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?***

பொம்மையோட உறுப்புகளுக்கும் ஆடை அணிகலன்களுக்கும் தேவையான கலரை அடிச்சி அலங்காரம் செய்வோம்.

***14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?***

இதுதான் முழுநேரத் தொழில். வேற தொழிலேதும் கிடையாது.

**15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

குழுவாகத்தான் செய்வோம். நானும் என் மனைவியும்தான் இந்தத் தொழிலைச் செய்வோம். எப்போதாவது சில சமயம் என்னோட பசங்களும் வந்து செய்வாங்க. அதுவும் தொடர்ந்து செய்ய மாட்டாங்க. விளையாட்டா செய்வாங்க. செய்யணும்னு நெனச்சி செய்ய மாட்டாங்க. சிலபோது வேலையாள் வச்சி வேலை செய்வதும் உண்டு.

**16. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

மாவு பெசயறது கஷ்டமான வேலை என்கிறதால அத நான் செய்வேன். பொம்மைகளுக்குக் கண்விழி மாதிரி நுணுக்கமா இருக்குற உறுப்புகளுக்கு நான் பெயிண்டிங் பண்ணுவேன். மத்தபடி மொத்தமா பெயிண்ட் அடிக்க வேண்டிய பகுதிகளையும், சேலை, ஜாக்கெட் மாதிரியான ஆடை அணிகலன்களுக்கு எல்லாம் என்னோட மனைவி பெயிண்ட் பண்ணுவாங்க. மற்றபடி இருக்குற வேலை அனைத்தும் இருவரும் செய்யும்படியானது. அதனால சேர்ந்தே செய்வோம்.

**17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

பரவாயில்லை. போதுமானதா இருக்கு.

**18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

தற்காலத்துக்குத் தகுந்தா மாதிரி "மாவு பெசயறதுக்கு" தனியா Machine வந்திருக்கு. ஆனா நாங்க அதை வாங்கி உபயோகிக்கவில்லை. மற்ற கருவிகளில் ஏதும் மாற்று வரவில்லை. ஆதலால் நாங்க பயன்படுத்துற கருவிகள்தான் இந்தத் தொழிலுக்குப் பழசு மற்றும் புதுசு எல்லாமே.

**19. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

காதி கிராப்ட், சர்வோதயா சங்கம் முதலான விற்பனைக் கடைகளுக்கு மொத்தமா வாங்குபவர்களும், வீடு தேடி வந்து சில்லறையாக வாங்கிப் போவோரும் உண்டு.

**20. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

விற்பனைக்கான இடமும் உற்பத்திக்கான இடமும் என்னோட வீடு தான்.

**21. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

மொத்த விற்பனையும் உண்டு. சில்லறை விற்பனையும் உண்டு.

**22. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

காதி கிராப்ட், சர்வோதயா சங்கம் முதலான கடைகளுக்குக் கொடுக்கும் பொருள்களுக்கு விலை நிலையானதாக இருக்கும். ஆனால் சில்லரையில் வீட்டில் வந்து பொம்மை வாங்குபவர்கள் பேரம் பேசித்தான் பொம்மை வாங்குவார்கள்.

**23. எந்தச் சாதியினர் பொம்மை பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பிராமணர்கள் அதிகமான கொலு பொம்மைகளை வாங்குவார்கள். கல்யாண மண்டபத்துக்கான மற்றும் வீட்டுக்குத் தேவையான பொருள்களை எல்லா சாதியினரும் வந்து வாங்குவாங்க. ஏனென்றால் பொம்மைகளை அலங்காரத்திற்காகவே இவர்கள் வாங்குகிறார்கள்.

**24. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

அக்கி எழுதுவேன். அதுக்கு மருந்து செய்து தருவேன். அது எப்படின்னா? Water Paint வாங்கி அக்கி புண்ணைச் சுத்தி வட்டமா எழுதுவேன். எழுதி முடிச்சதும் துவரம்பருப்பு, உப்பு, புளி, மிளகா, புளி முதலான ஐந்து வகைப் பொருள்களைக் கொண்டு சுத்தி போடுவேன். இதுக்கே சரியாயிடும். அப்படிச் சரியாகலேன்னா அதுக்கு மருந்து செய்து தருவேன். அந்த மருந்து பத்தி சொல்லக்கூடாது. சொன்னா பலிக்காது.

**25. சடங்குப் பொருளை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

இல்லை.

**26. உங்களுடைய திருமண உறவை எந்தெந்தச் சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

மண் வேலை செய்யும் குலால சாதிக்குள்ளாக வைத்துக் கொள்வோம். அதுக்குள்ள எந்த பேதமும் இல்லை. தமிழ் குலாலர், தெலுங்கு குலாலர் என்ற பிரிவினைகள் இப்போ இல்லை. ஒன்றாக கலந்துட்டோம். பொண்ணு குடுத்து எடுத்துக் கொள்கிறோம். ஆனா அதுக்கு முன்னாடியெல்லாம் நாங்கள் எங்கள் சாதிக்குள்ளாகவே அதாவது தெலுங்கு குலாலர்களுக்குள்ளாகவே திருமண உறவை வைத்துக் கொள்வோம். இப்போதான் மாறியிருக்கிறோம்.

**27. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

பிள்ளையார். எங்கள் பூர்வீகமான தண்டரை கிராமத்தில் கோயில் இருக்கிறது.

***28. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

எங்களோட குலதெய்வமான தண்டரை பிள்ளையாருக்கு வழிபாடு செய்வதுண்டு. வீட்ல விசேஷம் ஏதாவது நடக்கும்போது தண்டரைக்குப் போயி சாமி கும்பிட்டுட்டு வருவோம். சாமி கும்பிடும்போது, பொங்கல், சுண்டல், பஞ்சாமிர்தம், அவல், பொறி, கடலை வச்சி படைப்போம். காவு பூசை செய்வது கிடையாது. அது எங்களோட வழக்கத்துல இல்லை.

***29. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

பக்த்தர். இந்த பேர் மட்டுந்தான் தெரியும். அது பத்தின வரலாறெல்லாம் எனக்குத் தெரியாது.

| | | | |
|---|---|---|---|
| *1.* | பெயர் | : | சு. சுப்பிரமணிய உடையார் **6** |
| | வயது & பாலினம் | : | 55, ஆண் |
| | கல்வித்தகுதி | : | எட்டாம் வகுப்பு |
| | ஊர் | : | மழவன் கரனை,<br>செய்யூர் வட்டம்,<br>காஞ்சிபுரம் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தெலுங்கு, தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குலாலர், விஷ்ணு கோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 18.05.2010 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னுடைய பூர்வீகம் இதே ஊர்தான். என்னோட அப்பா, தாத்தா எல்லோரும் இதே ஊர்ல இருந்தவங்கதான்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் கடந்த இருபது வருஷமா இந்தத் தொழில் செய்துட்டிருக்கேன். அதுக்கு முன்னாடி ஒரு பத்து வருஷம் Forest Watcher ஆக இருந்தேன். அதுக்கு முன்னாடி ஒரு பத்து வருஷம் Telephone Exchange-ல வேல பார்த்தேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

இது என்னோட பரம்பரைத் தொழில். யாரிடமும் கைகட்டி வேலை பார்க்க வேண்டிய அவசியமில்ல. அதனாலதான் இந்தத் தொழிலுக்கு வந்துட்டேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட அப்பாவிடமிருந்து இந்தத் தொழிலைக் கத்துகிட்டேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்தச் சமூகம்?**

நான் யாருக்கும் இந்தத் தொழில கத்துத் தரல. அவ்ளோ ஏன்? எங்க பசங்களுக்கே நான் கத்துத் தரல.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், சவுடு மணல், செம்மண், கூளம், வைக்கோல், விறகு, சாம்பல், பனம்பூ, வறட்டி, தண்ணீர்.

களிமண்ணையும் சவுடு மணலையும் அளவா சேர்த்துப் பெசஞ்சி சக்கரத்துல போட்டு பொருள் செய்வோம். அந்தப் பொருளுங்களுக்கு பொம்பளங்க செம்மண் பூசி தேய்ச்சி பளபளன்னு ஆக்கிக் காய வச்சி வைப்பாங்க. அந்தக் காயவச்ச பொருளுக்கு உள்ள தேவையான அளவு பனம்பூப் போட்டு சூளை அடுக்குவோம். அப்போ விறகு, வறட்டி தேவைப்படும். அதெல்லாவற்றையும் வச்சி வைக்கோல் போட்டு மூடி அதுமேல சேறு கரைச்சி பூசி, பிறகு நெருப்பு வச்சி சுட்டு எடுப்போம்.

***8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?***

சக்கரத்துல செய்யற தெகுலான (மெல்லிதான) பொருளுங்களுக்கு களிமண்ணையும், சவுடு மணலையும் அளவா சேர்த்து பெசஞ்சி எடுத்துக்குவோம். அப்படி கலந்து பெசஞ்சாதான் பொருள் விரிசல் விடாது. ஆனால் கைகளால் செய்யிற உருப்படிகளைக் கூளம், பதரு சேர்த்துப் பெசஞ்சி செய்வோம். அப்படிச் செய்ஞ்சாதான் அது பளு குறைவாகவும் விரிசல் விடாமலும் இருக்கும்.

***9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படி சமாளிக்கிறீர்கள்?***

களிமண்தான் பிரதானம். பக்கத்து ஊரான பெரியகரணைல போயி எடுத்துட்டு வருவோம். நாம வண்டிக்காரனை கூட்டிட்டுப் போயி நல்ல மண்ணா பார்த்து எடுத்துட்டு வர்றதுக்குள்ள போதும்போதும்னு ஆயிடும்.

***10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?***

வெய்யில் காலந்தான் உகந்தது. வெய்யில் காலத்துலதான் மண்பாண்டத்தோட அருமை மக்களுக்கு அதிகமா தெரியுது. அதனால அதிகமா வாங்குறாங்க.

***11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?***

சக்கரம், திம்மகட்டி; திம்மகட்டி மேலதான் சக்கரம் சுழலும். சுழலுற சக்கரத்தின் மேலதான் பொருள் செய்வோம். செய்ததை திரிசல் துணியும், மூங்கில் பத்தையும் வச்சி ஒழுங்குக்குக் கொண்டு வருவோம். அப்புறம் அதை முள்ளால (இரும்புக்கம்பி) அறுத்து எடுத்து வைப்போம். அந்த பொருள்ல புள்ளி இடுவோம். சக்கரத்தைச் சுழற்றி விடுறதுக்குக் கைக்கோல் (சக்கரக்கோல்) வேணும். தண்ணீர் சட்டி வேண்டும். பிறகு செய்த பொருளைத் தட்டுறதுக்குப் பலகை, கல்லு வேண்டும். மண் கொண்டுவர மம்பட்டி, கடப்பாரை, கூடை முதலானதும் வேண்டும்.

**12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

முன்னாடி சொன்ன மாதிரி பொருள்கள ரெண்டு வகையாகச் செய்யிறோம். 1. சக்கரத்துல செய்யிற பொருள்கள், 2. கைகளால் செய்யும் பொருள்கள். இதுல அகல், சாணகை, கூரசாலு, தண்ணிப்பானை, (தண்ணிப் பானையில் இரண்டு வகை. 1. பானை, 2. குடம். பானை என்பது வாயகன்று இருக்கும். குடம் என்பது குறுகலான வாயுடையதாக இருக்கும்), கொழம்புச் சட்டி, கல்ச்சட்டி (பருப்பு சட்டி), மொந்தை (கலசம்), பாலிகை, சட்டி, குமுட்டி அடுப்பு முதலானவை அனைத்தும் முதல் வகைப்பட்ட முறையில செய்யிறது. தவிர்த்து ரெண்டாவது வகைப்பட்ட முறையில மாட்டுத்தொட்டி, தொட்டிஎம்பிள்ளை (மதலம்பிள்ளை), பொம்மைகள், குதிரைபொம்மை, யானைபொம்மை, திருஷ்டிபொம்மை, மாடுபொம்மை, கோழிக்கூண்டு, தொம்பை கூண்டு (உறை) முதலான எல்லாமும் கைகளால் செய்யிறது.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

உண்டு. புள்ளிக்கோலால புள்ளி போடுவோம். அப்புறம் எல்லாப் பொருளுக்கும் செம்மண் பூசுவோம்.

**14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

ஆமாம்; இதுதான் எனக்கு முழுநேரத் தொழில்.

**15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

எங்க வீட்ல நானும் என்னோட பொண்டாட்டியுந்தான் இந்த வேலையைச் செய்வோம். எங்க பசங்க யாரும் இந்த வேலையைச் செய்ய மாட்டாங்க. அப்புறம் கூலிக்கு வேலையாள் வச்சி செய்யிறதுண்டு.

**16. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

மண்ணு காய வக்கிறது. அதைப் பெசயறது, பொருள் செய்யறது, அதை தட்டிப் போடுவது வரைக்கும் ஆம்பளங்க வேலை. அதுக்கப்புறம் அதை எடுத்துப் புள்ளிபோட்டு, செம்மண் பூசி காயவச்சி எடுத்து வக்கிறது பொம்பளங்க வேலை. அப்புறம் இரண்டு பேருமா சேர்ந்துதான் அவற்றையெல்லாம் சூளை போடுவோம்.

**17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

போதுமானதாக இல்லை.

**18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

இல்லை. இன்னும் பழைய கூர் சக்கரத்துலதான் தொழில் செய்துட்டிருக்கேன். மாற்றமேதும் செய்யல. தேவைப்படல. இதுவே எனக்குப் போதுமானதா இருந்துடிச்சி.

**19. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

ஊர்மக்கள் எல்லோரும் வந்து வாங்குவாங்க. சாதி வாரியாச் சொல்லணும்னா நாயிடு, ரெட்டியார், அருந்ததியர், கவுண்டர் (வன்னியர்), பறையர், யாதவாள், வண்ணார், தச்சர் இப்படி எல்லாரும் வந்து பொருள் வாங்கிட்டுப் போவாங்க.

**20. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

பெரும்பாலும் வீட்லயே வச்சிதான் விற்பனை செய்வோம். ஏதாவது விசேஷ நாள் வர்றப்போ நானும் எம்பொண்டாட்டியும் தலைமேல எடுத்தும் போயி தெருத்தெருவா விற்போம்.

**21. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனைதான்.

**22. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

எல்லோரும் பேரம்பேசித்தான் வாங்கிப் போவாங்க. ஒருத்தரும் சொன்ன காசு கொடுத்தவங்க கெடையாது.

**23. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இல்லை.

**24. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

நான் 'வரும்படி' செய்தது கிடையாது. எங்க அப்பா இருக்கும்போது செய்திருக்கிறார்.

**25. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பறையர், நாயிடு, கவுண்டர் (வன்னியர்) இந்த மூணு சாதிக்கார்கள் தான் அதிகமா அடிக்கடி பொருள் வாங்குவாங்க. மத்தவங்க எல்லாம் ஏதாவது விசேஷம்னாதான் வருவாங்க.

### *26. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?*

மாரியம்மன் கோயில்ல கூழ் ஊத்தும்போது கரகம் சோடிக்கப் பானை கேப்பாங்க. நானும் தருவேன். அதே மாதிரி திரௌபதி அம்மன் திருவிழாவுல அரவான் சிலை செய்யறதுக்கு, துரியோதனன் படுகளம் செய்யறதுக்கு என்னைக் கூப்பிடுவாங்க, நானும் போவேன். இப்படி எல்லாத்தையும் செய்ஞ்சி குடுத்து முடிச்சா திருவிழா முடிந்து காசு குடுப்பாங்க. தனிப்பட்ட முறையில செய்யும்போதும் இப்படித்தான். வீட்டுக் கிரகப்பிரவேசத்துக்குக் கரகம் கொடுத்தாலும், சாவுக்கு நெருப்புச் சட்டி, பால்குடம் கொடுத்தாலும் வீட்டு விசேஷம் முடிஞ்ச பிறகுதான் அதுக்கான காசு குடுப்பாங்க. ஆனால் கல்யாணப் பானை கொண்டு போயி மண்டபத்துல குடுத்துட்டு வந்தோம்னா உடனே கையில காசு குடுத்துடுவாங்க.

### *27. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?*

ஆம், செய்வதுண்டு. அதாவது,

| சாதி | கூர சால் | கலர் | பல்லா | சாணகை | குடவிளக்கு | பாலிகை | ஹோம சட்டி | அகல் | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாயுடு | பெ.பா - 2<br>நடு.பா - 2<br>குடம் - 2 | ✓ | பெரிய பல்லா - 2<br>சின்ன பல்லா - 2 | 5 | 1 | 5 | - | 8 | 29 |
| ஏகாலி (வண்ணார்) | " | ✓ | " | 5 | 1 | 5 | - | 8 | 29 |
| அருந்ததியர் | " | ✓ | " | 5 | 1 | 5 | - | 8 | 29 |
| யாதவாள் | கூரசால் - 2<br>மேல்மூடி - 2 | ✗ | 1 | 1 | பல்லா - 1<br>விளக்கு - 1 | 5 | - | 8 | 21 |
| ஆச்சாரி (நாகவள்ளி முகூர்த்தம்) | மூடி - 1<br>கலவோடு - 32<br>மொந்தை - 32<br>அகல் - 32 | ✓ | 4+1 | 1 | 1 | 5 | 1 | 8 | 88 |
| ரெட்டியார் | பெ.பா. - 2<br>மூடி - 2 | ✓ | 1 | 1 | 1 | 5 | 1 | 8 | 21 |
| தெலுங்கு உடையார் | " | ✓ | 1 | 1 | 1 | 5 | 1 | 8 | 21 |
| வன்னியர் | பானை - 2<br>மூடி - 2 | ✓ | 1 | 1 | 1 | 5 | - | 8 | 20 |
| பறையர் | " | ✓ | 1 | 1 | 1 | 5 | - | 8 | 20 |

### *28. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?*

தெலுங்கு குயவர்களுக்குள்ளேயேதான் திருமண உறவை வச்சிப்போம். ஏனென்றால் அவங்களுக்கான சடங்கு சம்பிரதாயம் வேற. எங்க சடங்கு சம்பிரதாயம் வேற. அதனால கொடுக்கல் வாங்கல் அப்போதிலிருந்தே இல்லை.

கல்யாணம் பண்றப்போ நாங்க பொட்டு தாலி கட்டுவோம். தமிழ் உடையாருங்க தொப்ப தாலி கட்டுவாங்க. நாங்க கூரசால் பாலிகை அப்படின்னு கல்யாண பானைகள் வச்சி சடங்கு செய்வோம்.

தமிழ்க் குயவர்கள் ஒரு ஹோம குண்ட சட்டி, ஒரு குடபல்லா, விளக்கு வச்சி கல்யாணத்த முடிச்சிடுவாங்க. அதே மாதிரி செத்துட்டா அவங்க உட்கார வச்சிப் பொதைப்பாங்க. நாங்க படுக்க வச்சிதான் பொதைப்போம். இதுபோல சடங்கு சடம்பிரதாயத்துல நெறய வித்தியாசம் இருக்கு. அதனால கொடுக்கல் வாங்கல் வச்சிக்கறதில்லை.

**29. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

பெரியாண்டவன்.

**30. உங்களுடைய குலதெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

உண்டு. வருஷா வருஷம் சாமி கும்பிடுவோம். அது இல்லாம கல்யாணம் செய்யணும்னா கரகம் ஜோடிச்சி சாமி கும்பிடுறதும் குழந்தைகளுக்குக் காது குத்தும்போது சாமி கும்பிடுவதும் உண்டு. சாமி கும்பிடணும்னா ஏரிக்குப் போயி 108 மண் பிள்ளையார் புடிச்சி வச்சி அதுக்குப் பூசை புனஸ்காரங்களெல்லாம் செய்ஞ்சி, 108 படையல் போட்டு, 108 தேங்காய் உடைச்சி, 108 பழம் வச்சி சாமி கும்பிடுவோம். மத்தபடி காவு எல்லாம் குடுக்கறதில்லை. எல்லாம் பால்பூஜைதான்.

**31. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

தெலுங்கு குயவர்கள் பெரும்பாலானோர் தங்களோட பட்டப் பெயரை 'பத்தர்' அப்படின்னுதான் சொல்றாங்க. சிலர் 'பத்தடு' அப்படின்னும் சொல்றாங்க. 'பத்தர்' அப்படிங்கற வார்த்தை தட்டாரை (பொற்கொல்லார்) குறிக்கும்படியா இருக்கறதால அந்த வார்த்தையை எங்களோட பட்டப்பேரா சொல்லிக்கிறது இல்லை. நாங்க எங்கள 'உடையார்' அப்படின்னுதான் சொல்லிக்குவோம். ஊர்லயும் அப்படிதான் கூப்பிடுவாங்க. கதை, பழமொழியெல்லாம் யாருக்குத் தெரியும். பேரு தெரியறதே பெரிய விஷயம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | ஜி. நீலகண்ட உடையார் **7** |
| | வயது & பாலினம் | : | 72, ஆண் |
| | கல்வித்தகுதி | : | ஐந்தாம் வகுப்பு |
| | ஊர் | : | வேடப்பாளையம்,<br>உத்திரமேரூர் (வட்டம்),<br>காஞ்சிபுரம் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 14.04.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

இதே வேடப்பாளையந்தான் எனக்குப் பூர்வீகமான ஊர்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

கிட்டத்தட்ட 57 வருஷமா இந்தத் தொழில் செய்துட்டு வர்றேன். என்னோட பதினைஞ்சாவது வயசுல இந்தத் தொழில் கத்துக்க ஆரம்பிச்சேன். அதிலிருந்து இன்னிக்கி வரைக்கும் இந்தத் தொழில்தான் செய்துட்டு வர்றேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

பரம்பரைத் தொழில். ஆகையால் இதே தொழில் செய்துட்டு வர்றேன். எனக்கு வேறெந்தத் தொழிலும் தெரியாது. நான் வேற தொழில் கத்துக்கவும் முனைப்புக் காட்டலை. இந்தத் தொழிலே பிடித்தமானதாக இருந்துச்சி. அதனால் இதேத் தொழில் செய்துட்டு வர்றேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

இந்த தொழில்ல கத்துக் குடுக்கறதுன்னு ஒன்னுமில்ல. ஏன்னா அப்படி கத்துக்கணும்னு கங்கணம் கட்டி கத்துக்கற அளவுக்கு இந்தத் தொழிலுக்குப் பெருசா மதிப்புமில்ல. அதுவுமில்லாம இந்தத் தொழில் கத்துகுடுத்து வர்றதில்ல. தானா செய்யிறவங்களப் பார்த்து'ப் பார்த்துத் தப்பும் தவறுமா செய்ஞ்சி செய்ஞ்சி கத்துக்கற வேலை.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

நான் யாருக்கும் இந்தத் தொழிலைக் கத்துத் தரல. என்னைப் பார்த்து என்னோட நடுப்பையன் இந்தத் தொழிலைக் கத்துக்கிட்டான். வேற யாரும் கத்துக்கவுமில்லை. கத்துக்க முன்வரவுமில்லை.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

மண்ணு, எரிகரும்பு இது ரெண்டுதான் முக்கியம். இது ரெண்டும் இந்தக் காலத்துல காசு குடுத்தா கெடைக்கும். அதனால ஒரு பத்தாயிரம் ரூபாய் மூலதனமா போட்டா இந்தத் தொழில் செய்யலாம். வறட்டி காசுக்கு வாங்கி வர்றதுண்டு. வைக்கோல், வெறகு முதலானதும் காசுக்கு வாங்குகிற பொருள்கள்தான். வறட்டியை 100 கை 50 ரூபாய்னு வாங்குவோம். ஒருகை என்பது நாலு வறட்டி. இடது கையில இரண்டு வறட்டி, வலது கையில இரண்டு வறட்டி எடுத்துப் போட்டாங்கன்னா அது ஒருகை என்று கணக்கு. அப்படி 100 கை வறட்டியினை 50 ரூபாய் விலை குடுத்து வாங்குவோம். இதே மாதிரி வைக்கோல் ஒரு சுமை கட்டு 100 ரூபாய் குடுத்து வாங்கறோம். வெறகும் அப்படித்தான்.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, மணல் (ஆத்து மணல்), கூளம், நெல் பதரு, செம்மண், வைக்கோல், விறகு கட்டை, வறட்டி, தண்ணீர்.

**9. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

களிமண் தரமானதா கெடைக்காததனால் அதைக் கரைச்சு ஊத்தி வீழ்படிவாக்கி அதுக்கப்புறந்தான் பயன்படுத்த முடியும். இதுக்காகப் பெரிய தொட்டி ரெண்டு கட்டி வச்சிருக்கேன். ஒரு தொட்டி தரைக்கு மேல சிமெண்டால கட்டி வச்சிருக்கேன். இன்னொரு தொட்டி தரை மட்டத்துல கட்டியிருக்கேன். அது அடிப்பகுதியில் மட்டும் சிமெண்ட் பூசாம மத்த நாலு பக்கத்துக்கும் சிமெண்ட் பூசி கட்டியிருக்கேன். இதுல தரைக்கு மேல கட்டியிருக்குற சிமெண்ட் தொட்டியில களிமண்ணைக் கொட்டி தண்ணீர் ஊத்தி ஒரு ஆள் அதுக்குள் இறங்கி களிமண்ணைக் காலால் கரைச்சி நல்லா கலக்கணும். அவ்வாறு கலக்குறப்போ வர்ற மண்குழம்பினை ஒரு பாத்திரத்தால் மொண்டு தரைமட்டம் இருக்குற பள்ளத்துல ஊத்தணும். இவ்வாறு கலக்கி எடுக்கும் போது களிமண்ணெல்லாம் தண்ணியோட சேர்ந்து வெளி வந்துடும். அதுல கலந்து இருக்குற கல்லுங்க எல்லாம் அப்படியே அடியில தங்கிடும். தரைமட்டத்துல இருக்குற தொட்டியில் ஊற்றிய களிமண் குழம்பு சிமெண்ட் பூசாமல் இருச் நற தொட்டியோட அடிப்பகுதியால தண்ணீர் உறிஞ்சப்பட்ட பிறகு கெட்டியான களிமண்ணா கெடைக்கும். அவ்வாறு கெடைக்கிற அந்தக் களிமண்ண எடுத்து அதுங்கூட தேவையான அளவு மிருதுவான மணல் சேர்த்துப் பெசஞ்சி சக்கரத்துலப் போட்டு பொருள் செய்ய வேண்டியதுதான். மணல் சேர்க்காம வெறும் களிமண்ணுல பொருள் செய்ஞ்சா சூளை வக்கிறப்போ அந்தப் பொருளெல்லாம் வெடிச்சிடும். பொழைக்காது. அதனாலதான் மணல் சேர்க்கிறது. மணல் சேர்த்தா வெடிக்காது. சூளைல பொருள் பொழைக்கும்.

மற்றபடி அடுப்பு, மாட்டுத்தொட்டி, தண்ணீர் ஊத்தி வைக்கும் சாடி, உறை, மாடு பொம்மை, குதிரை பொம்மை, குழந்தை பொம்மை, திருஷ்டி பொம்மையெல்லாம் செய்யறதுக்கு களிமண்ணை கரைக்கத் தேவையில்லை. ஏன்னா அந்தப் பொருளெல்லாம் கொஞ்சம் மோட்டாவா செய்ய வேண்டிய பொருள்கள் என்பதனால களிமண்ணுல இருக்குற பெருங்கல்லப் பொறுக்கி எடுத்துட்டு நல்லா காயவச்சி அதுங்கூட நெல் கூளம், பதரு சேர்த்து தண்ணி ஊத்தி பெசஞ்சி 2 நாள் அப்படியே பட்டறையில புளிக்கப் போட்டு அதுக்கப்புறம் எடுத்து அடுப்பு முதலான வகைப்பட்ட பொருளுங்கள செய்யணும்.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

இடர்பாடு இருக்கிறது. தொழிலுக்குத் தேவையான களிமண்ணு இந்த ஊர்ல கெடைக்கறதில்ல. அதனால பக்கத்து ஊரான பூந்தண்டலத்துக்குப் போயி எடுத்துட்டு வருவோம். ஒரு மாட்டு வண்டியளவு மண்ணோட வெல முந்நூறு ரூபாய். மத்த இடத்துல இருக்குற மண்ணு ஒதவுறதில்ல. செம்மண்ணு நம்ம ஊர்லயே எடுத்துக்குவோம். அதுக்கு நாட்டு செம்மண்ணுனு பேர். அது அவ்வளவா நெறம் தராது. அதனால பாண்டிச்சேரி போயி செம்மண் கொண்டு வருவோம். ஒரு கோணியளவு செம்மண் கொண்டு வந்தா ஒரு வருஷத்துக்கு வச்சிக்குனு பூசிக்குவோம். மணல் உள்ளூர்ல எங்கயாவது பார்த்து எடுப்போம். இல்லன்னா அதுவும் காசு குடுத்து (ஆத்துமணல்) வாங்கிப்போம்.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

வெய்யக்காலந்தான் உகந்தது. இருந்தாலும் தைப்பொங்கலுக்கு 500 உருப்படியாவது செய்ஞ்சாதான் எல்லோருக்கும் பொருள் குடுக்க முடியும் என்கிறதால கார்த்திகை, மார்கழி இந்த இரண்டு மாசமும் வேல ரொம்ப மும்முரமா செய்வோம். இது அவ்வளவா வெய்யில் காலம் கெடையாது, இருந்தும் செய்வோம்.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

எல்லாத்தையும் சொல்லனும்னா. மொதல்ல களிமண் வெட்டி எடுக்க கடப்பாரை, மண்வெட்டி, கூடை, அதை கரைச்சி ஊற்றுவதற்குச் சல்லடை, பொருள்செய்ய சக்கரம், உட்கார்ந்து பொருள்செய்ய முக்காலி, சக்கரத்துல இருக்குறப்போ அந்தப் பொருளத் தெகுலா வழிச்சி எடுக்க மூங்கில்பத்தை, அந்தப் பொருள மழுமழுனு உருவாக்க திரைசீல்துணி, சக்கரத்திலிருந்து பொருளை அறுத்தெடுக்க ஊசி, அப்புறம் பொருள் காய்ஞ்சதும் அதை தட்டறதுக்குப் பலகை, கல்லு, செம்மண் பூச துணி, அதைத் தேய்க்க அதுக்கு முன்னாடியெல்லாம் காராமணிக்காய் மாலை வச்சிருப்பாங்க. அதெல்லாம்

இப்போ இல்ல. இப்போ சாக்குப் பட்டைய வச்சிதான் தேய்க்கிறோம். அப்புறம் சூளை வக்கிறப்போ விறகு, சுள்ளி வெட்டி வைக்கக் 'கொடுவாள் கத்தி'.

சக்கரம், பலகை, கல்லு தவிர மற்ற எல்லாப் பொருளும் பொதுவாக எல்லோருக்கும் கிடைக்கிற மாதிரி எங்களுக்கும் கிடைக்குது. சக்கரம் மட்டும் மண்பாண்ட தொழிற்கூடம்னு சொல்ற எங்களோட சங்கத்துல இருந்து வாங்கிக்குவேன், ஆசாரியிடமிருந்து தட்டுப் பலகை வாங்கிக்குவேன். கல்தச்சர்ங்ககிட்டயிருந்து தட்டு கல்லு செய்ஞ்சி வாங்கிக்குவேன்.

**13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

பானை இதுல சின்னது பெருசா 7 வகையான பானை செய்வேன். அதே மாதிரி கூழ்சட்டியில அளவு வாரியா 7 வகை. தண்ணீர் புடிச்சி வைக்க சொப்பு குடம், மொடா, குட பல்லா செய்வேன். குழம்பு சட்டியில பட்ட கீத்து தடசீப்பு, பொடலங்கா சட்டி, கவுச்சி சட்டி, மரவை (அடுக்குசட்டி மாதிரி இருக்கும்), கலசம், உண்டி, கல்யாணத்துக்கு கூரசால், கரகம், அதுக்கு மூடி, பாலி, அகல், ஹோமகுண்டச்சட்டி, தோசைக்கல்லு, எண்ணெய்ச்சட்டி, பணியாரச்சட்டி, பருப்புச்சட்டி, தட்டானுக்கு குமுட்டி, சிப்பி, காலனிகாரங்களுக்கு மேளச்சட்டி, மேளவட்டம் இதெல்லாம் சக்கரத்துல செய்யிற பொருள்கள். இது இல்லாம நெல்லு உறை, மாட்டுத்தொட்டி, தண்ணீர் ஊத்தி வக்கிற குடுமா, மிரட்சல் தலை (திருஷ்டி பொம்மை), மாடு பொம்மை, குதிரை பொம்மை, ஒத்தைஅடுப்பு, இரட்டைஅடுப்பு முதலான பொருள்களெல்லாம் கையால செய்யிற பொருள்கள்.

சக்கரத்துல செய்து எடுத்தப் பிறகு பெரிய பானைகளை மூன்று நிலையில் தட்டணும். அந்த மூனு நிலைகளுக்கும் மூனு பேரு உண்டு. 1. மூதை, 2. நிரவுதல், 3. தட்டுப்பானை. சக்கரத்தில் செய்த பொருளை ஊசியால் அறுத்து எடுத்து வெயிலில் காயவைத்த பிறகு அதோட அடிப்பகுதியை இணைக்க ஒன்றுக்குப் பாதியா தட்டிப் போடுவதற்குப் பேரு மூதை. அவ்வாறு தட்டிய பொருளை இன்னும் சற்று காய்ஞ்சதும் அதை எடுத்துப் பானை வடிவுக்கு ஒழுங்குபடத் தட்டிவைத்தல் என்பதற்கு நிரவுதல் என்று பெயர். அவ்வாறு நிரவிய பானையை மழுமழுப்பாக்கிச் செம்மண் பூசும் நிலைக்குச் சுகுராக சுத்தம் செய்யும் நிலைதான் தட்டுப்பானை.

**14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

செம்மண் பூசி அழகுபடுத்துவது மற்றும் பொருள் செய்யும்போதே அழகா கையால சில வேலைப்பாடு செய்யிறதும் உண்டு.

**15. பொருள் உற்பத்தியில் உங்களுக்கான பாணி என்ன?**

அது பத்தித் தெரியில.

**16. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு ஆண்டு முழுக்க இதுதான் தொழில். வேற தொழில் ஏதும் எனக்குத் தெரியாது.

**17. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

எங்க வீட்ல இருக்குற எல்லாரும் இந்த வேலையச் செய்யிறோம். நான், என் நடு பையன் கருணாகரன், என் மருமகள் ஆகிய மூணு பேரும் இந்தத் தொழில் செய்வோம். மத்தபடி குழந்தைகளை இந்தத் தொழில்ல எறக்கறதில்லை.

**18. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

பொருள் செய்து வச்சா அத காயவக்கிறது, அதுக்கு செம்மண் பூசுறது, கடைபோட்டா பொருள் விக்கிறது இந்த மூணு வேலைதான் பொம்பளக்கானது. மத்த எல்லா வேலையும் ஆம்பளத்தான் செய்யணும்.

**19. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

பரவாயில்லை. போதுமானதாதான் இருக்கு.

**20. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

பால் பேரிங் சக்கரம் (Ball Barring) உபயோகப்படுத்தறேன். மத்தபடி மோட்டாரெல்லாம் வச்சி சக்கரம் வந்திருக்கு. ஆனா அதெல்லாம் நான் உபயோகப்படுத்தறதில்லை. கூர் சக்கரத்துல செய்யிற முறை என்பது பழையது. பேரிங் சக்கரம் அதுக்கு புதுசு. கரண்ட் மோட்டார் என்பது இப்போதைக்கான சக்கரம்.

**21. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

எல்லா மக்களும் எளிமைய எதிர்பார்க்கிறாங்களே தவிர, நல்லதை நெனைக்கலை. எளிமையானது என்பதற்காக பிளாஸ்டிக், அலுமினியம், சில்வர்னு எல்லா பொருளையும் அதலயே வாங்க ஆரம்பிச்சுட்டாங்க.

**22. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

கிராமத்துல இருக்குற எல்லா மக்களும் வந்து வாங்குவாங்க. இதுல அதிகமான பொருள்கள நாயுடு, பறையர், நாயக்கர் சாதிக்காரங்கதான் வாங்குவாங்க.

**23. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

வீட்டோட விற்பனை செய்யிறதுதான் அதிகம். அப்புறம் என்னோட நடு பையன் கருணாகரன் சைக்கிள்ல எடுத்தும் போயி பக்கத்து ஊர்ல வித்துட்டு வருவான். உத்திரமேரூர் சந்தை கூடுகிற போது அங்கு கடை போடுவதுண்டு. இங்கிருந்து பொருள சைக்கிள்ல வச்சி எடுத்தும்போயி ஆம்பளைங்க கடை போடுவாங்க. அங்கு கடையில் இருந்தபடியே பொருள்களையெல்லாம் பொம்பளைங்க விற்பனை செய்வாங்க. இதைத் தவிர வேற எங்கேயும் எடுத்தும்போயி விக்கறதில்லை.

**24. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனைதான். மொத்தமா யாரும் எங்கிட்ட வந்து கேட்கறதுமில்லை. நானும் அப்படி மொத்தமா செய்யறதுக்கு ஏற்பாடு பண்ணவும் இல்லை.

**25. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

எல்லாரும் பேரம் பேசித்தான் வாங்குவாங்க. யாரும் சொல்ற காசு குடுக்கறதில்லை.

**26. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

ஆம். அதுக்கு "குடிமை வீடு" என்று பெயர். அந்த முறை இப்போது இல்லை. இப்போது எல்லோருமே காசு கொடுத்துதான் பொருள் வாங்குகிறார்கள். தானியங்கள் யாரும் கொடுப்பதில்லை.

**27. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

நாய்க்கர், பறையர், முதலியார், நாயுடு, ஆசாரி, வண்ணார், இடையர், சக்கிலியர் முதலான சாதிகளுக்குக் "குடிமை வீடு" செய்திருக்கிறேன்.

**28. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

நாயக்கர்கள். தண்ணீர் பானை, கல்சட்டி (பருப்பு சட்டி), கொழம்பு சட்டி முதலான பொருள்கள்தான் அதிகமாக வாங்குவாங்க. மற்றபடி எல்லாரும் கல்யாணப் பானை வாங்குவாங்க.

**29. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

வருஷா வருஷம் ஊர்ல ஆடிமாசத்துல மாரியாத்தாளுக்குக் கூழ் ஊத்தற திருவிழா நடக்கும். அதுக்கு மண்ணால ஒரு சிலை செய்ஞ்சி தரணும். அந்தச் சிலைக்கு 'மாதாங்கி' அம்மன்னு பேரு. அந்தச் சிலைய குயவர்கள்தான் வருஷா வருஷம் புதுசா செய்து தரணும். அந்த வேலை மட்டுந்தான் நமக்குக் கிடைக்கும். ஊருக்குப் பொதுவுல அதுக்குக் காசு குடுத்துடுவாங்க. இந்தச் சிலையை நம்ம குயவர் குடும்பத்துல வருஷத்துக்கு ஒரு குடும்பம் அதை செய்ஞ்சி தரணும். இந்த வருஷம் என்னோட முறை. அடுத்த வருஷம் வேறொருத்தரோட முறை வரும். இப்படித்தான் மாறி மாறிச் செய்வோம்.

**30. சடங்குப் பொருளை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

சாவுச் சடங்குக்குக் கொல்லி சட்டி, பால்கொடம், கலசம், தண்ணித் தோண்டி முதலான பொருள்கள் கொடுப்பதுண்டு. எல்லா சாதியினருக்கும் ஒரே மாதிரிதான் பொருள் குடுப்போம். இதுல சாதி வேறுபாடு ஏதுமில்லை.

| சாதி | கலர் | பானை | பாலிகை | அகல் | கை கரகம் | ஹோம குண்ட சட்டி | மடக்கு | குட விளக்கு | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| கவுண்டர் (நாயக்கர்)<br>இடையர்<br>பறையர் | ✓ | சாலு - 1<br>கரகம் - 1<br>குட பல்லா - 1<br>மூடி - 2 | 5 | 12 | 1 | 1 | 1 | 1 | 26 |
| ஆசாரி | × | கலசம் - 32<br>கலவோடு - 32<br>பானை - 2<br>பல்லா - 4<br>முடா - 1<br>மூடி - 5 | 5 | 32 | 4 | 1 | 4 | 1 | 123 |
| நாயுடு<br>வண்ணார்<br>சக்கிலி | ✓ | பெரிய பானை - 1<br>சிறிய பானை - 2<br>சிறிய பானை - 2<br>சிறிய பானை - 2 | 5 | 5 | 4 | 1 | 4 | 1 | 27 |
| செங்குந்த முதலியார் | × | சாலு கரகம் - 2<br>குடபல்லா - 2<br>மூடி - 2 | 5 | 5 | 2 | 1 | 1 | 1 | 21 |

**31. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

உடையார் சாதிக்குள்ளாகவே திருமண உறவை வச்சிக்குவோம். வேற எந்த சாதியோடும் திருமண உறவை வச்சிக்கிறதில்ல. மண் வேலை செய்யும் உடையார் யாராயிருந்தாலும் தமிழ், தெலுங்கு என்று எந்த மொழி பேசுபவர்களாக இருந்தாலும் பரவாயில்லை. அவங்க கூட திருமண உறவை வச்சிப்போம்.

**32. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

பச்சையம்மன்.

***33. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

வழிபாடு செய்வோம். வருஷத்துக்கு ஒருமுறை தண்டரைக்குப் போய் சாமி கும்பிட்டுட்டு வருவோம். ஆடி மாதம் ஏதாவது ஒரு வெள்ளிக்கிழமையில பொங்கல், சுண்டல், தேங்காய், பழம் எல்லாம் சேர்த்து தலுவ போட்டு சாமி கும்பிடுவோம்.

***34. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

உடையார். இந்தத் தொழில் பற்றிய கதை, பழமொழி, விடுகதையெல்லாம் இருக்கு, அதெல்லாம் இப்போ எனக்கு ஞாபகமில்ல.

**8**

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : | டி. லோகநாதன் |
| | வயது & பாலினம் | : | 60, ஆண் |
| | கல்வித்தகுதி | : | எட்டாம் வகுப்பு |
| | ஊர் | : | ஊத்துக்காடு (கிராமம்), வாலாஜாபாத், காஞ்சிபுரம். |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 22.04.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

எனக்குத் தெரிஞ்சி எங்க அப்பா, தாத்தா, எல்லாரும் இதே ஊர்ல வாழ்ந்ததாதான் கேள்விப்பட்டிருக்கேன். ஆனால் எங்களுக்கான பூர்வீகம் பற்றி எங்க தாத்தா சொன்ன கதை எனக்கு இன்னும் ஞாபகம் இருக்குது. ஒரு ஏழெட்டு தலைமொறைக்கு முன்னாடி திருப்பெரும்பத்தூர் தாலுக்காவில் இருக்குற கடம்பத்தூருக்குப் பக்கத்து ஊரான வெண்மந்தூர்தான் எங்களுக்கான பூர்வீகம் என்று சொன்னார்.

அந்த ஊரிலிருந்து எங்க தாத்தாவை மண்பாண்டம் செய்ஞ்சி தர்றதுக்காக 'ராஜகுலம்' என்ற ஊருக்கு அழைச்சிட்டு வந்தாங்க. அப்படி 'ராஜகுலம்' கிராமத்துல தொழில் செய்துட்டு இருந்தபோது அந்த ஊர்ல தரமான களிமண்ணு கெடக்கலைன்னு பக்கத்து ஊரான 'பொற்பந்தலு'க்கு வந்து மண் எடுத்தும் போய் தொழில் செய்யறதை வழக்கமா கொண்டிருந்தாராம் எங்க தாத்தா.

எங்க தாத்தாவுக்குக் கை வைத்தியமும் தெரியும். அப்படியிருக்கும் போது அந்த ஊர் ஜமீன்தார் வீட்ல ஒருத்தருக்கு ஒடம்பு முடியாமப் போச்சி. அத எங்க தாத்தா குணப்படுத்தினார். அப்போது எங்க தாத்தாவை ஜமீன்தார் நலம் விசாரித்தார். எங்க தாத்தாவும் 'நான் பக்கத்து ஊர்ல மண்பாண்டம் தொழில் செய்திட்டிருக்கேன். அங்க தரமான மண்ணு கெடைக்காததால இந்த ஊருக்கு வந்து மண் எடுத்தும் போயி தொழில் செய்திட்டிருக்கேன். எனக்கு இங்கவே கொஞ்சம் இடங்கொடுத்தீங்கன்னா நான் இங்கவே தங்கி தொழில் செய்துப் பொழச்சிக்குவேன்' அப்படின்னு இருக்குற நெலவரத்த சொன்னாராம். உடனே அந்த ஜமீன்தார் 10 ஏக்கர் நெலத்தை எங்க தாத்தா பேருக்கு பட்டயம் எழுதிக் கொடுத்திட்டாராம். அந்த நிலம்தான் இப்ப நாங்க வீடு கட்டி வாழற இந்த இடம். அன்னைக்குப் 'பொற்பந்தல்' அப்படின்னு இருந்த அந்த ஊர் பேரு

நாளடைவில 'ஊத்துக்காடு' அப்படின்னு மாறிடிச்சு. அந்நாளிலிருந்து காலங்காலமாக நாங்க இங்கேயேதான் வாழ்ந்து வர்றோம்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் என்னோட பத்து வயசுல இந்தத் தொழிலக் கத்துக்கிட்டேன். அப்போதிலிருந்து இப்ப வரைக்கும் கிட்டத்தட்ட 50 வருஷமா இந்தத் தொழில் செய்திட்டிருக்கேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

இது எங்க பரம்பரைத்தொழில் அப்படிங்கறதுதான் காரணம். வேற ஏதும் காரணம் இல்லை.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட அப்பாவிடமிருந்து இந்தத் தொழிலைக் கற்றுக் கொண்டேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

நான் யாருக்கும் இந்தத் தொழிலைக் கத்துத்தரலை. இந்தத் தொழிலை மற்றவர்களுக்குக் கத்துத் தரணும்னு எனக்குத் தோணலை.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

மண்பாண்டம் செய்வதற்கான மண் வகைகள், அவற்றைச் சூளையிட்டு சுடுவதற்கான எரிபொருள்கள். இவை இரண்டும் மிக முக்கியமான முதலீடு.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், மணல், சாம்பல், விறகு, வறட்டி, வைக்கோல், தண்ணீர் இவையெல்லாம் ரொம்ப முக்கியம்.

**9. எந்தெந்த பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

நான் சக்கரத்துல செய்யிற பொருள்கள் மட்டும்தான் செய்வேன். கையால் செய்யிற அடுப்பு, தொட்டி முதலான வகைகள் செய்வதில்லை. சக்கரத்துல செய்யறதுக்கு ஒரே மாதிரிதான் மண் பயன்படுத்தறேன். களிமண் கொண்டு வந்து காய வச்சி, அதைச் சின்னச்சின்னதா நறுக்கி அதுல இருக்குற பெரிய பெரிய கல்லு, தூசு முதலானதைப் பொறுக்கி எடுத்துடுவோம். பிறகு அதை பட்டறையாகக் கூட்டி சாயந்திரம் ஐந்து மணி வாக்குல தண்ணி ஊத்தி ஊறவச்சிடுவோம். விடிய காலம் ஐந்து மணிக்கு எழுந்து அதை ஒண்ணுக்கு நாலுமுறையா மெறிச்சி நல்லா வெண்ணை மாதிரி ஆக்கிக்குவோம். அப்புறம் அத சக்கரத்துல போட்டு பொருள் செய்ய வேண்டியதுதான்.

பொருள்களைச் செய்து அவற்றினை நிழலில் காய வைக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் ஒரு பொருளின் எல்லா பக்கமும் சீரான முறையில் காய்ந்திருக்கும். மத்தபடி வெயிலில் காய வைத்தால் ஒரு பக்கம் அதிகமாக உலர்ந்தும், மறு பக்கம் குறைவாக உலர்ந்தும் காணப்படும். அப்படி இருந்தால் பொருளை தட்டுக் கட்டையால் தட்டி உருவங்கொண்டு வருவதில் சிக்கல் ஏற்படும். நன்கு உலர்ந்த பகுதி நிமிர்ந்து நிற்கும். சற்று ஈரமான பகுதி தொங்கலாகிப் பொருள் கோணலாத் தெரியும். எனவே பொருள்களைச் சீரான முறையில் உலர்த்த வேண்டும். ஆதலால் அவற்றை நிழலில் உலர்த்துவதே சிறந்தது.

அவ்வாறு உலர்த்திய பொருள்களை ஒவ்வொன்றாக எடுத்து வந்து கவுந்தியில் உட்கார்ந்தபடி தட்டுக்கட்டை, கல்லு வச்சித் தட்டிப் போடுவோம். அதற்குப் பிறகு அதை வெயிலில் கூட காய வைக்கலாம். இருந்தாலும் உச்சி வெய்யிலில் காய வைப்பது சாலச் சிறந்தது. அப்படிக் காய வச்ச பிறகு பொம்பளைங்க செம்மண் பூசுவாங்க. திரும்பவும் காயவச்சி எடுத்து அடுக்கி வைச்சிடுவோம். பொருள் அதிகமா சேர்ந்த பிறகு ஒருநாள் சூளை போடுவோம்.

சூளை போடுற அன்றைக்கு எல்லா பொருளையும் எடுத்து காலை முதல் மதியவரைக்கும் வெயிலில் காயவச்சிடுவோம். பிறகு மதியானம் 1 மணி அளவுல சூளை போட ஆரம்பிப்போம். முதல்ல எல்லா பொருளையும் அடுக்கிப் 'படுவு' போடுவோம். அப்புறம் அதுக்கு நடுவுல நடுவுல தீனி வச்சி எல்லாப் பொருளையும் அடுக்கிட்டு மேல வைக்கோல் தெளிச்சி மூடுவோம். பிறகு அதுக்கு மேல கெட்டியா சேறு கரைச்சி பூசுவோம். அவ்வாறு பூசும்போது சூளையோட உச்சிப்பகுதி மட்டும் பூசாம தெறந்து வச்சிருப்போம். சேறு பூசி முடிச்சதும் அடியில தீ வச்சிடுவோம். சூளை எரியும். எரிந்து கொண்டிருக்கும் போது சேறு பூசப்படாமல் விட்டிருக்கும் சூளையின் உச்சிப்பகுதியை நாங்கள் கவனித்துக் கொண்டே இருப்போம். உச்சி வெளுத்து வெண்புகை வந்தால் சூளையிட்ட பொருள்கள் பதமான தீயில் வெந்துவிட்டதென்று அர்த்தம். அவ்வாறன்றி தீ அதிகமாவது போலிருக்குமாயின் உச்சி கருப்பா கருகும். அவ்வாறு கருகுவதாகத் தெரிந்தால் சேறு பூசி வைத்திருக்கும் சூளையின் மற்ற பக்கங்களைப் பிரித்து சூளைத் தீயை வெளியேற்றி விடுவோம். அவ்வாறு செய்வதால் அதிகமான தீயால் பொருள்கள் உருக்குலைவதை, உருகுவதைத் தடுக்கலாம்.

### 10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?

தொழில் செய்யறதுக்கான தேர்ந்த களிமண் சாமானியமா கெடைக்கறது இல்லை. நமக்குத் தேவையான மண்ணை நாமே தேடித்தேடி எடுக்க வேண்டியிருக்கு. அப்பத்தான் பொருள் செய்ய நல்லா இருக்கும். ஆகையால

வண்டிக்காரரைக் கூட்டிக் கொண்டு நாங்களே ஏரிக்குப் போயி எடுத்து வருவோம். இப்போதைக்கு வாலாஜாபாத் ஏரிக்குப் போயி கடப்பாரையால குத்திக்குத்தி களிமண்ணைத் தேடுவோம். அப்படித் தேடித்தேடித்தான் களிமண் எடுக்க வேண்டியிருக்குதே தவிர அதுக்கு முன்னாடி இருந்த மாதிரி மண்வளம் இந்நாளுல இல்லை.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

எல்லா நாள்லயும் செய்யலாம். இருந்தாலும் வெய்ய காலத்துல வேகமா செய்யலாம்.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

கடப்பாரை, மண்வெட்டி, கூடை, சக்கரம், கவர்கோல் பத்தை, திரைசீல் துணி, குத்துஊசி, தட்டுப்பலகை, தட்டுக்கல், சாக்குப்பட்டை, அரிவாள், கவுந்தி (ஓலை, கோரை முதலான பொருள்களால் செய்யப்பட்ட பாய்).

கடப்பாரை, மண்வெட்டி, கூடை, அரிவாள் முதலானதெல்லாம் எல்லா கடையிலும் கெடைக்கும். இது எல்லாருக்கும் பொதுவானது. இதுவல்லாமல் சக்கரம் செய்யறதையே சில குலாலர்கள் தொழிலா வச்சிருக்காங்க. அவர்களிடமிருந்து அதை வாங்கிப்பேன். தட்டுப்பலகை ஆசாரிகிட்ட செய்ஞ்சி வாங்கிப்பேன். தட்டுக் கல்லு கல் தச்சர்கிட்ட இருந்து ஒரு காலத்துல வாங்கினது. மத்தபடி கவர்கோல் பத்தை திரைசீல் துணி, குத்து ஊசி, சாக்குப்பட்டை முதலான பொருள்களெல்லாம் நமே நம்மள சுத்தி இருக்குற பொருளில் இருந்து உருவாக்கிக் கொள்வதுதான்.

**13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

தீபம் ஏற்றுவதற்கு அகல், மடக்கு (சாணகை), சடங்கு செய்யிற கலசம், பொங்கல் வைக்க பொங்கல் பானை, புள்ள பல்லா (சின்ன பல்லா), 1/2, 3/4, 1, 2 படி அளவு கொண்ட பானைகள் செய்வதுண்டு.

(புள்ள பல்லா - பெரிய பானைகளை ஒப்பு நோக்கும் போது அளவில் சிறிய பானை. குடும்ப அமைப்பில் பெரியவர்கள், சிறியவர்கள் என்ற பிரிவில் சிறியவர்களைப் பிள்ளைகள் என்று அழைக்கும் வழக்கம் இன்று இருந்து வருகின்றது. அது தொட்டு 'புள்ள பல்லா' என்ற பெயர் வழங்கப்பட்டிருக்கலாம். ஒரு படி அளவுக்கு உள்ளான பானை பொருள்களைப் பல்லா என்றும் 1 படிக்கு மேலான அளவுடையதைப் பானை என்றும் குறிப்பிடும் வழக்கம் குயவர்களிடம் காணப்படுகின்றது.)

பெரிய பானை, தண்ணீர் வைக்க மொடா, சொப்புக்குடம், பருப்பு கடைவதற்கு கல்சட்டி, ஆப்பம் சுட ஆப்பச்சட்டி, எண்ணெய் பலகாரம்

சுடுவதற்கு எண்ணெய்ச் சட்டி (கடாய்), தோசைச் சுட தோசைக்கல், குழம்பு வைக்க குழம்புச் சட்டி. இதுலயும் அளவு வாரியா நாலஞ்சு வகை உண்டு. இந்த வகையில் இருக்கும் மிகச்சிறிய சட்டிக்கு 'பட்ட கீத்துச் சட்டி' என்று பெயர். தானியம் கொட்டி வைக்க சாலு (வாயகன்ற பாத்திரம்), பூந்தொட்டி, கல்யாண சடங்கு செய்யறதுக்கு கல்யாணப் பானைகள், பாலிகை, அகல் முதலானவைகளும் செய்வேன்.

பிறகு தொழிலாளிகளுக்குத் தேவையான மண்பொருள் சிலதும் செய்து கொடுப்பேன். அதாவது வெட்டியார்களுக்கு மேளம் அடிக்க மண் பலகை, தமுக்குச் சட்டி, தாசா சட்டி, கோயிலில் மேளம் அடிக்கும் அம்பட்டர்களுக்கு 'டமாய்' சட்டி, வண்ணார்களுக்குத் துணி வேக வைக்க வெள்ளாவிப் பானை, துணித் துவைச்சி எடுக்க சாலு, வில்லியர்கள் (காட்டுக்காரர்கள் (அ) இருளர் (அ) வேட்டுவர்கள்) கன்னி சாமி கும்பிடும்போது மேளம் கொட்டுவார்கள். அவ்வகையான மேளத்திற்கு 'மேளக்கட்டை' மண்ணால் செய்து தருவேன். அது பார்ப்பதற்கு மிருதங்கக் கட்ட மாதிரி இருக்கும். தட்டார்களுக்கு 'குமுட்டி' செய்து கொடுப்பேன். இது இல்லாம எல்லாருக்கும் திருஷ்டி பொம்மை செய்து கொடுப்பேன். ஊர் திருவிழா நடந்தா அதுக்குத் தேவையான துரியோதனன் சிலை, அரவான் சிலை முதலானதெல்லாம் செய்து குடுப்பேன்.

**14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

அழகுறுத்துவதுண்டு. மண்ணால செய்யிற எல்லாப் பொருள்களுக்கும் செம்மண் பூசி அழகுபடுத்துவோம். மத்தபடி வேற வகையில் ஏதும் செய்வதில்லை.

**15. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு இது மட்டுந்தான் தொழில். வேற தொழில் எதுவும் தெரியாது.

**16. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

எங்க குடும்பத்துல நான், என்னோட மனைவி இரண்டு பேர் மட்டுந்தான் இந்தத் தொழில் செய்வோம். மற்ற யாரும் இந்தத் தொழில்ல ஈடுபடறதில்லை.

**17. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

செம்மண் பூசுறது என் மனைவி தனியா செய்யிற வேலை. மற்றபடி எல்லா வேலையும் நான்தான் செய்வேன். அதுக்கு என் மனைவி ஒத்தாசையா இருப்பாள்.

**18. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

திருப்தி அடையுமளவுக்கு இல்லேன்னாலும், ஓரளவுக்கு வருமானம் போதுமானதாக இருக்கிறது.

**19. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

நான் வேலை செய்யச் தொடங்கினப்போ கூர் சக்கரத்துல வேலை செய்ஞ்சேன். அந்தக் கூர் கடுக்கா மரம், புளியமரம் முதலான அழுத்தமான மரத்துல வைரம் பாய்ஞ்ச மரத்தால செய்து பொறுத்துவாங்க. அப்படி செய்தாதான் அது சீக்கிரம் தேயாது. அந்த கூர் கருங்கல்லுல துளை போட்ட இடும்பக் கல்லுல வச்சி சுழட்டி அதுமேல மண் தொழு எழுப்பி பொருள் செய்யிறது வழக்கம். அந்தக் காலம் மாறி இப்ப பேரிங் (Ball Bearing) சக்கரத்துல தொழில் செய்துட்டு வர்றேன்.

**20. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

பெரும்பாலும் ஊரிலுள்ள எல்லோரும் ஏதாவது ஒரு பொருள் வாங்குவாங்க. நாயுடு, நாயக்கர், காலனியாட்கள் (பறையர்), யாதவர், வண்ணார், அம்பட்டர், வில்லியர் அப்படின்னு எல்லோரும் வந்து பொருள் வாங்குவாங்க.

**21. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

வீட்டிலேயே பொருள்களை வைத்துக் கொண்டு விற்பனை செய்வோம். மற்றபடி வெளியில் எடுத்தும் போயி விற்பதில்லை. ஆனால் 20 வருஷத்துக்கு முன்னாடியெல்லாம் 'சங்கராந்தி' வந்துச்சின்னா வண்டி கட்டி பொருள்களையெல்லாம் ஊர் ஊராக எடுத்துச் சென்று விற்போம். பொருள்களைக் கொடுத்து அதுக்குப் பதிலாகத் தானியம் வாங்கி வருவோம். இப்போ அப்படியெல்லாம் செய்றதில்லை. வீட்டோட விற்பனை செய்வோம். எப்பவாவது ஒரு முறை உள்ளூர் திருவிழாவுல கடை போடுவோம்.

**22. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனைதான்.

**23. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

பெரும்பாலும் பேரம் பேசித்தான் வாங்குவாங்க.

**24. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

எங்கப்பா இருந்த வரைக்கும் அவர் தலைமுறையில மேரை கொடுத்திருக்காரு. நான் தொழில் செய்ய ஏற்பட்ட பிறகு மேரையெல்லாம் செய்யறது இல்லை.

**25. எந்தச் சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

எல்லா சாதிக்காரர்களும் வந்து பொருள் வாங்குவாங்க. பொருள் வாங்குறாங்களோ இல்லையோ 'பூவாடைக்காரி' சாமி ஜோடிக்க எல்லா சாதியாரும் வந்து களிமண் வாங்கிம் போவாங்க. அப்படி ஒரு ஐதீகம். 'பூவாடைக்காரி' சாமி கும்பிடுற விசேஷத்த வீட்ல நல்ல விஷயம் நடக்குற அப்ப செய்வாங்க. ஒரு கல்யாணம், காது குத்தல் அப்படின்னா வீட்ல பூவாடைக்காரி ஜோடிச்சி வச்சி கும்பிடுவாங்க. அப்புறம் குலதெய்வம் இருக்குற எடத்துக்குப் போயி கரகம் ஜோடிச்சிட்டு வருவாங்க.

**26. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ச் சடங்கு என்று சொல்லும் போது தனிப்பட்ட முறையில யார் வீட்டுக்கும் போய் செய்யறதில்லை. ஆனால், கோயில் திருவிழா என்று ஊருக்குப் பொதுவான வேலைகளில் அரவான் சிலை செய்தல், துரியோதனன் சிலை செய்தல் முதலான வேலைகள் செய்வதுண்டு.

**27. சடங்குப்பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

செய்வேன். அதாவது,

| சாதி | பானை வகை | கலர் | அகல் | மடக்கு | பாலிகை | ஹோம குண்ட சட்டி | குட பல்லா | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|
| நாயுடு | பெரிய பானை - 2<br>சின்ன பானை - 2<br>மூடி - 4 | ✓ | 5 | 5 | 5 | 1 | 1 | 25 |
| பாளையக் காரர், வண்ணார் | " | ✓ | 5 | 5 | 5 | 1 | 1 | 25 |
| நாயக்கர் (கவுண்டர்) | கூரசால் - 1<br>கரகம் - 1<br>மண பொங்கல் பல்லா - 1 | ✓ | 5 | 2 | 5 | - | 1 | 16 |
| வேட்டைக் காரர் (தொம்பர்) | " | ✓ | 5 | 1 | 5 | - | 1 | 15 |
| யாதவர் பிராமின் கருணிகர் | " | × | 5 | 2 | 5 | 1 | 1 | 17 |
| குயவர் | - | - | 5 | 2 | - | 1 | 1 | 9 |

**28. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

உடையார் சாதிக்குள்ளாகவே திருமண உறவை வைத்துக் கொள்வோம். அதிலும் தமிழ் உடையார்களுக்கு உள்ளாகவேதான் திருமண உறவை வச்சிப்போம்.

**29. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

குலதெய்வம் மூணு இருக்கு. முனீஸ்வரன், காட்டேரி, பாப்பாத்தி (பூவாடைக்காரி) அப்படின்னு மூனு சாமி கும்பிடுவோம்.

**30. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

செய்வோம். வீட்ல விசேஷம்னா செய்வோம். அதாவது காதுகுத்தல், வீடு குடி போறது, கல்யாணம் செய்றது முதலான விசேஷங்களை முன்வைத்து சாமி கும்பிடுவோம்.

எங்க வீட்டு வாசலிலேயே சாமி கும்பிடுவோம். சாமி கும்பிடணும்னா அதுக்கான ஏற்பாடுகளையும் நாங்களே செய்வோம். அதாவது வீட்டு வாசலிலேயே கட்டங்கட்டமா களிமண்ணால் சின்ன புள்ளங்க விளையாடுற மாதிரி நாலு வீடு கட்டுவோம். அதுக்குள்ள மண்புடி சாமிகளைச் செய்து வைப்போம்.




இவ்வாறு ஒவ்வொரு வீட்டிலும் தலா 18 மண்புடி சாமி செய்து வைப்போம். மண்ணால செய்த அந்தச் சாமிகளுக்கெல்லாம் சந்தனம், குங்குமத்தால பொட்டு வச்சிடுவோம். இதுல முதல் வீடு முனீஸ்வரனுக்கானது. முனீஸ்வரன் சாமிக்கு உருளையான தடி கொழுக்கட்ட, அவல், பொறி, கடலை, பொங்கல் தளுவை, சாராயம், சுருட்டு முதலானதை வச்சிக் சேவல் அறுத்து சாமி கும்பிடுவோம். அடுத்து இரண்டாவது வீட்ல இருக்குற காட்டேரி சாமிக்கு வடிச்சசோறு வச்சி கீரைக் கொழம்பு ஊத்தி (முருங்கைக் கீரை), கருவாட்டுக் குழம்பு ஊத்திக் கோழி முட்டை வச்சி வீட்டு நடுவுல படையல் போடுவோம். அதுங்கூட கருப்புப் புடவை வைப்போம். கருப்புப் பொட்ட கோழி அறுத்து கும்பிடுவோம். வீட்ல இருக்கறவங்க யாராவது முழுகாம இருந்தால் அவங்கள அந்தக் கருப்புப் புடவையக் கட்டிக்கச் சொல்வோம். அப்படி இல்லனா வயசானவங்க கட்டலாம். அதாவது மாதவிடாய் இல்லாத

பெண்கள் யாராயிருந்தாலும் கட்டலாம். அந்தப் புடவைக் கட்டின பிறகு காட்டேரிக்கு போட்ட கருவாட்டுக் குழம்புப் படையலைச் சாப்பிடணும். அதுக்கப்புறம் அந்த புடவையக் கட்டக்கூடாது. ஒருமுறைக்கு மேல் அந்த புடவையைக் கட்டக்கூடாது. அடுத்து மூணாவது வீட்டில் இருக்குற பாப்பாத்தி அம்மாவுக்குப் பருப்புச் சோறு, மரக்கரிப் பொறியல், குழம்புன்னு வச்சி படையல் போடுவோம். அந்த சாமியை 'பூவாடைக்காரின்னு' சொல்லுவோம்.

இப்படி மூணு வீட்லயும் வச்சிருக்கிற மண்புடி சாமி எல்லாத்துக்கும் துண்டுத் துண்டா நூல் அறுத்து அந்தச் சாமி மேல போடுவோம். அப்படிப் போட்ட அந்த துண்டு நூல்களை சாமி கும்பிட்டு முடிஞ்சதும் எடுத்து கையிலக் கட்டிக்குவோம். அதே மாதிரி அந்தச் சாமி வீட்டுக்குள்ள சாமி கும்பிடுற அந்த குடும்பத்தார்களைத் தவிர வேறு யாரும் இருக்கக்கூடாது. இரு ஒரு ஐதீகம்.

***31.*** **ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

எங்களுக்கான சாதிப்பெயர் உடையார். பழமொழின்னு சொல்லணும்னா எனக்குத் தெரிஞ்சி,

- ❖ மலைபோல மண் மெறிச்சாலும் குண்டுமணி பொன் வாங்க முடியாது.
- ❖ அழுது கொண்டே மண் மெறிச்சா சிரிச்சு கொண்டே சூளை பிரிக்கலாம்.
- ❖ ஆறுமாசம் விடாம வேலை செய்யணும். ஆறுமாசம் உட்கார்ந்து சாப்பிடணும்.
- ❖ மாமியார் உடைச்சா மண் குடம். மருமக உடைச்சா பொன் குடம்.
- ❖ கோயில் பட்னியிருந்தாலும் இருக்கும். குசவன் பட்னியோட இருக்க மாட்டான்.

அப்படிங்கறதுதான். கதை, விடுகதையெல்லாம் தெரியாது.

**9**

| | | |
|---|---|---|
| *1.* பெயர் | : | வி.சி. கண்ணன் த/பெ. சின்னபையன் உடையார் |
| வயது & பாலினம் | : | 52, ஆண் |
| கல்வித்தகுதி | : | ஐந்தாம் வகுப்பு |
| ஊர் | : | சென்ன சமுத்திரம், ஆர்க்காடு வட்டம், வேலூர் மாவட்டம் |
| தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| களஆய்வு நாள் | : | 18.03.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை ஏதேனும் உண்டா?**

எங்களுடைய பூர்வீகம் வாழப்பந்தல் கிராமம். எங்கப்பாவும் அம்மாவும் அங்கிருந்து செங்கம்பூண்டி கிராமத்திற்குப் பொழைக்கப் போனாங்களாம். அங்கதான் நாங்கஎல்லாம் பொறந்து வளர்ந்தோம். எனக்கு மூணு வயசு இருக்குறப்போ எங்கப்பா இறந்துட்டாரு. எங்கம்மா எங்கள இந்த ஊருக்குக் கூட்டிட்டு வந்துட்டாங்க. அப்போதிலிருந்து நான் இதே ஊருலதான் இருக்கிறேன்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

முப்பத்தஞ்சு வருஷமா செய்துட்டு வர்றேன். அதாவது என்னோட 17ஆவது வயசுல இருந்து இந்தத் தொழிலைச் செய்யறேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

பரம்பரைத் தொழில். வேற தொழில் கத்துக்கறதில் ஆர்வமில்லை. அதனால செய்யிறேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட சித்தப்பாவிடம் இருந்து இந்தத் தொழிலைக் கற்றுக் கொண்டேன். அவர் பேரு சாம்பசிவ உடையார்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

நான் இந்தத் தொழிலைப் பலபேர்க்குக் கத்துக் குடுத்திருக்கிறேன். சீனிவாசபுரம் கிராமத்திலிருக்கிற கணேசன் என்கிற பையனுக்கு இந்தத்

தொழிலை முழுசா கத்துக் கொடுத்திருக்கிறேன். அவன் எனக்கு மச்சான் உறவுமுறை. அப்புறம் கொளத்தூர் அருணாச்சலத்துக்கும் நான்தான் கத்துக் குடுத்தேன்.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், மணல், வேலிகாத்தான் முள்ளு இல்லேன்னா ஏதாவது மௌாருங்க. வெறகு, எருமுட்டை இது போதும்.

***8. எந்தெந்த பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?***

எல்லா வகையான பொருள்கள் செய்வதற்கும் களிமண்தான் மூலப்பொருள். ஆனால் பொருளுக்குத் தகுந்தா மாதிரி அதைப் பதப்படுத்தும் முறைதான் வேறவேற. பொதுவாகவே நல்ல களிப்பான களிமண் இங்கு கெடைக்கிறதில்லை. பெருங்கல்லோட கெடைக்கும். அதனால களிமண்ணை நல்லாக் காய வச்சி நறுக்கி, அதை வாரி தொட்டியில கொட்டி அதுல தண்ணி ஊத்தி அதுக்குள்ள ஒரு ஆள் இறங்கி காலால் நல்லா மெறிச்சி கலக்கணும். அப்படி கலக்கி விடுற சேற்றுக் குழம்பை சல்லடையால சலிச்சி அதுக்கென தோண்டி வச்சிருக்கிற குட்டையில ஊத்தணும். இப்போ பெருங்கல்லெல்லாம் மண்ணு கரைச்ச தொட்டியிலும், தூசு தும்பெல்லாம் சல்லடையிலும் நின்னு போயிடும். சுத்தமான களிப்பான களிமண் கிடைக்கும். அதுங்கூட வேணும்கிற அளவு சவுடு மணல் சேர்த்துப் பெசைஞ்சி சக்கரத்துல போட்டு பொருள் செய்ய வேண்டியதுதான். மத்தபடி கூளம் போட்டு செய்யிற உருப்படிகளுக்குக் களிமண்ணைக் கரைக்க வேண்டாம். சோரல் களிமண்ணை அப்படியே அதுக்குப் பயன்படுத்திக்கலாம். ஏனென்றால் அந்தப் பொருளெல்லாம் கையால செய்யிறது என்பதால கையில கெடைக்கிற பெருங்கல்லை எடுத்துப் போட்டுடலாம். அதுவுமில்லாம அது கொஞ்சம் கனமா செய்ய வேண்டிய பொருள் என்பதால் அந்தக் கனத்துக்குள்ள கல்லு மறைஞ்சிடும். ஆக களிமண்ணைக் கரைச்சு ஊத்தத் தேவையில்லை. ஆனாலும் ஒரு விஷயத்துல கவனமா இருக்கணும். சுண்ணாம்பு கல்லு இருக்குற மண்ணை உபயோகப்படுத்தக் கூடாது. அது இருந்துச்சின்னா சூளை வக்கிறபோது டப் டப் என்று பொருள் வெடித்துடும். ஒரு பொருளும் பொழைக்காது.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைட்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படி சமாளிக்கிறீர்கள்?**

சராசரியா களிமண் உள்பட எல்லாப் பொருளும் கெடைக்குது. ஆனால் தரமானதா கெடைக்கறதில்லை. தரமானதா வேணும்னா தேடித்தேடிப் போவணும். அதுதான் கஷ்டம்.

**10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

இந்தத் தொழிலை வருஷத்துல ஆறுமாதம் செய்யலாம். ஆறுமாதம் செய்ய முடியாது.

**11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

கடப்பாரை, மண்வெட்டி, கூடை, சக்கரம், கவர்கோல்பத்தை, தெரசில் துணி, தொலுசட்டி, தண்ணீர், சாம்பல், தட்டுக்கட்டை, தட்டுக்கல்லு, ஊசி, தென்னங்குச்சி, சாக்குப்பட்ட, கொடுவாள்.

**12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

பானை, சட்டியில் பல வகையிருக்கு. பானையில் சின்னது பெரிசுமா தேவைக்கேற்றாற் போல ஒரு பத்து வகையிருக்கும். சட்டியிலயும் அதே மாதிரி, அது இல்லாம கல்யாணப்பானை செய்து தருவேன். அதுக்கான மடக்கு, பாலிகை எல்லாம் செய்வேன். அப்புறம் அடுப்பு, மாட்டுத்தொட்டி, குதிர், கண்திருஷ்டிபொம்மை, குதிரைபொம்மை, யானைபொம்மை, வீரன்பொம்மை, குழந்தைபொம்மை, அக்கினிச்சட்டி முதலான பொருள்களும் செய்வேன்.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

உண்டு. எல்லா பாண்டங்களுக்கும் செம்மண் பூசுவோம். அதுக்கப்புறம் கல்யாணப் பானை என்றால் சுண்ணாம்பு அடிச்சி அதுக்கும் மேல பெயிண்டால எழுதிக் கொடுப்போம்.

**14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

நான் இந்தத் தொழிலை மட்டுமே செய்துட்டு வர்றேன். வேற தொழில் தெரியாது.

**15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

நான் தனியாத்தான் செய்துட்டு வர்றேன். நான் கல்யாணம் பண்ணிக்கலை. தனியாத்தான் வாழுறேன். அப்படின்னும் போது உதவி செய்ய வேற யாரும் இல்லை. எல்லா வேலையையும் நானேதான் செய்வேன்.

**16. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

ஏதோ பரவாயில்லை.

**17. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

இப்ப பேரிங் (Bearing) சக்கரத்துல பொருள் செய்யிறேன். செய்யிறதுக்கு ஈஸியா இருக்கு. ஆனால் நான் தொழில் கத்துக் கொண்டதெல்லாம் கூர் சக்கரத்துலதான்.

**18. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

ஊர்க்காரங்கதான். சராசரியா எல்லாரும் வந்து வாங்குவாங்க.

**19. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

ஊர் ஊராக எடுத்தும் போயி வித்திருக்கேன். கூடையில் பாத்திரங்களை அடுக்கிக்கட்டி தலையில் வச்சிக் கொண்டு போயி பக்கத்து ஊரான கலவை, ராந்தம் முதலான ஊருக்கு எடுத்துட்டு போவேன்.

**20. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனைதான்.

**21. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

பேரம் பேசித்தான் வாங்கிம்போவாங்க.

**22. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

முன்னாடியெல்லாம் மேரை செய்திட்டிருந்தேன். இப்போ செய்யிறதில்லை.

**23. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

முன்னாடியெல்லாம் கவுண்டர், அகமுடைய முதலியார், யாதவாள், பறையர், ஆசாரி (தச்சர்), வண்ணார், அம்பட்டர் முதலான சாதிகளுக்கு மேரை செய்திருக்கிறேன்.

**24. எந்தச் சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

இப்பவெல்லாம் மண் பொருள் வாங்குறதே சொற்பமாயிப் போச்சி. அதனால் எல்லாரும் ஒரே மாதிரி பருப்புச்சட்டி, குழம்புச்சட்டி, தண்ணிப்பானை, அடுப்பு என்று அத்யாவசியப் பொருளைத்தான் வாங்குறாங்க. இது சராசரி. இதைவிட கூடுதலா யாரும் வாங்குறதும் இல்லை. நான் செய்யிறதுமில்லை.

**25. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

அங்காளம்மன் திருவிழா நடந்துச்சினா அக்கினிசட்டி செய்வோம். மத்தபடி குழந்தைகளுக்கு விளையாட்டுச் சாமான்கள் செய்து கொண்டுபோயி விற்போம். அதாவது ஒரு குடும்பத்துக்கு என்னென்ன பொருள்கள் தேவையோ அதையெல்லாம் அப்படியே சின்னச்சின்னதா செய்து விற்போம்.

**26. சடங்குப் பொருளை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

ஆம், செய்வேன்.

| சாதி | கலர் | பானை | பாலிகை | அகல் | கஞ்சிப் பானை | மூடி | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|
| அகமுடை முதலியார் | × | சாலு கரகம் - 1<br>மொட்ட கரகம் - 1<br>தோண்டி - 2<br>பொங்கல் பல்லா - 2 | 5 | 12 | 1 | 2 | 26 |
| இடையர் (யாதவாள்) | ✓ | 'தடசிப்பு' வீட்டில் உள்ளவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு கேட்பார்கள் | " | " | " | " | 26 |
| கவுண்டர், பறையர் | ✓ | " | " | " | " | " | 26 |
| குயவர் | × | ஹோம குண்ட சட்டி - 1 | 5 | 9 | - | - | 15 |
| ஆசாரி | × | சொப்பு - 32<br>கொய்யாலி - 32<br>பல்லா - 4<br>கலவோடு - 4 | - | 32 | 2 | 4 | 110 |

**27. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

மண் தொழில் செய்யிற வழியில் வந்த உடையார் சமூகத்திற்குள் மட்டுமே பொண்ணு கொடுக்கல் வாங்கல் எல்லாம் வச்சிக்குவோம்.

**28. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

பச்சையம்மன். வாழைப்பந்தல் கிராமத்துல இருக்கு.

**29. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

இது குயவர்களுக்கு மட்டுமேயான குல தெய்வம் கிடையாது. மத்த சாதியினரும் இந்த தெய்வத்தைக் குலதெய்வமா கும்பிட்டு வர்றாங்க. வருஷா வருஷம் ஆடி மாசத்துலத் திருவிழா செய்வாங்க. அதுல வெள்ளிக்கிழமைதான் உகந்த நாள். அந்த நாளில்தான் பச்சையம்மாளைக் கும்பிடுவோம். படையல் போடுவோம். மற்றபடி கல்யாணம், காதுகுத்துன்னு ஏதாவது விசேஷம்னா வாழப்பந்தல் போயி சாமி கும்பிட்டுட்டு வருவோம். அப்போ பிரார்த்தனை

இருக்குறவங்க யானை, குதிரை, குழந்தைங்க பொம்மையெல்லாம் வாங்கி வைப்பாங்க. ஆடு, கோழியெல்லாம் காவு கொடுத்து பொங்கல் வச்சி படைச்சிட்டு வருவோம்.

***30. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

*சாதிப்பெயர் குயவர், பட்டப்பெயர் உடையார். கதையெல்லாம் ரொம்ப வயசானவங்களக் கேட்டாத்தான் தெரியும்.*

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : | எம். விஜயா **10**<br>க/பெ. எஸ். மணி உடையார் |
| | வயது & பாலினம் | : | 45, பெண் |
| | கல்வித்தகுதி | : | ஏழாம் வகுப்பு |
| | ஊர் | : | எசயனூர், வேலூர் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 20.03.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னோட சொந்த ஊர் இதுதான். என்னை வடமாதி மங்கலத்துல கல்யாணம் செய்ஞ்சி கொடுத்தாங்க. அங்க தொழில் சரியா செய்ய முடியலேங்கறதால நானும் என்னோட வீட்டுக்காரரும் இந்த ஊருக்கே வந்துட்டோம்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் என்னோட 13 வயசுல இருந்து இந்தத் தொழில் செய்து வர்றேன். எனக்குக் கல்யாணம் ஆவதற்கு முன்னாடி எங்கப்பா தொழில் செய்யிறப்போ அவருக்கு உதவியா எங்கம்மா கூட இருந்து செம்மண் எல்லாம் பூசுவேன். இப்பவும் அந்தத் தொழில்தான். வேற தொழில் தெரியாது.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எங்கக் குடித்தொழில் மண்பாண்டம் செய்யறது. அதனால நானும் அப்படியே பழகிட்டேன். வேற வேலை ஏதும்தெரியாது.

**5. யாரிடமிருநது இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட அம்மா, அப்பாவிடமிருந்து.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

எனக்கு பொண்ணுங்க கெடையாது. ரெண்டு ஆம்பள பசங்கதான். அவனுங்களும் இந்தத் தொழில் கத்துக்க விரும்பலை. பெரியவன் ஐ.டி.ஐ. படிக்கறான். சின்னவன் கோயில் ஸ்தபதி வேலை செய்யறான்.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

மண்பாண்டம் செய்த பிறகு அதுக்குச் செம்மண் பூசுறதுதான் பெரும்பாலும் பொம்பளைங்க வேலை. அதுக்கு செம்மண் தேவை. அப்புறம் மாட்டுத்தொட்டி, ஒத்தை அடுப்பு, ரெட்டை அடுப்பு எல்லாம் போடுவேன். அதுக்குக் களிமண், வைக்கோல், கூளம், நெல்பதறு முதலான மூணு பொருளும் வேணும்.

அப்போவெல்லாம் அப்பா மண்பாண்டம் செய்வாரு. அதற்குக் களிமண், மணலு வேண்டும். அப்புறம் சூளை வைக்க வேலிகாத்தான் முள், வெறகு, வறட்டி. இந்த மூணு பொருளும் வேணும்.

**8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

அடுப்பு, மாட்டுத்தொட்டி முதலான பொருள்கள் செய்யணும்னா களிமண்ணுடன் வைக்கோல் கூளம், நெல் பதரு போன்றவற்றைச் சேர்த்து தண்ணீர் ஊத்தி ஊறவச்சி ஒருநாள் கழிச்சி அத மெறிச்சி எடுக்கணும். மெறிச்சி நல்ல உறவு சேர்ந்த பிறகு ரெண்டு நாளைக்கு அதை அப்படியே புளிக்க வைக்கணும். அப்புறம் மூணாவது நாள் எடுத்து பொருள் செய்ஞ்சா மண்ணு நல்லா வலவலன்னு ரப்பர் மாதிரி இருக்கும். அடுப்பு, மண்தொட்டி மாதிரியானப் பொருள்களை ஒரே முறையில செய்ய முடியாது. அடுப்பாயிருந்தா முதல்ல அடிப்படை போட்டு காய வைப்பேன். அப்புறம் பக்கத்துத் தடுப்பு போடுவேன். அது நல்லா காய்ஞ்ச பிறகுதான் கொம்ம வைப்பேன். இப்படி மூணு தரம் ஒரு பொருளைத் தனித்தனியா செய்யணும். அதே மாதிரிதான் தொட்டியும் செய்யணும். செய்ஞ்சி காயவச்சப் பிறகு அந்த பொருளுக்கெல்லாம் செம்மண் பூசுவோம். இதுவெல்லாம் தவிர்த்து எங்கப்பா செங்கல் அறுத்து சூளை போடுற வேலையெல்லாம் செய்தார். அதனால நான் செங்கல் அறுக்க கத்துக்கிட்டேன். இப்ப அந்த வேலையைச் செய்யறதில்லை. இது எல்லாம் பொம்பளைங்களோட தனிப்பட்ட வேலை. இது இல்லாமல் ஆம்பளைங்க செய்யிற எல்லாப் பொருளையும் பூர்த்தி பண்ணி வைக்கிறது பொம்பளைங்கதான். ஆம்பளைங்க சக்கரத்துல செய்யிற பானைகளுக்கு Design போடறது. கடாய் செய்ஞ்சா அதுக்கு காது வைக்கிறது என எல்லாவிதமான பொருளையும் பூர்த்தியாக்கிக் காயவச்சி, செம்மண் பூசி பதமா சூளைக்கு எடுத்துக் குடுக்கறது வரைக்கும் பொம்பளைங்களுக்கு வேலை இருக்கு. ஆனா அதெல்லாம் பெருசா தெரியாது. சின்னச் சின்ன வேலை மாதிரி தெரியும்.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

கல்யாணத்துக்கு முன்னாடி எங்கப்பாகூட களிமண் எடுக்க ஏரிக்குப் போவேன். ஏரியில் களிமண்ணத் தோண்டி எடுத்து கும்பலா கொட்டி

வைப்போம். அப்போவெல்லாம் களிமண் சுலபமா கெடைச்சிது. இப்ப அப்படி கெடைக்கிறதில்லைனு எங்கப்பா சொல்லுவாரு. கல்யாணம் ஆனப்பிறகு களிமண் எடுக்க நான் போறதில்லை. எங்க வீட்டுக்காரர் ஆள்வச்சி களிமண் எடுத்துட்டு வருவார். களிமண் எடுக்க எங்கள்ல அவர் மட்டுந்தான் போவார்.

### 10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?

வெய்ய நாள்லதான் கடகடன்னு வேலை செய்ய முடியும். இப்ப அடுப்பு, தொட்டியெல்லாம் போடனும்னா மூணு நாலு தவணையாதான் போட முடியும். அப்படி செய்யிறதுக்குச் சீக்கிரமா காயணும். காய்ஞ்சாதான் படபடன்னு வேலையாவும். இல்லைனா லேட்டாகும். பொருள் பொழச்சி கைக்கு கெடைக்காது. உதாரணமா வெயில் நாள்ல ஒரே நாள்ல பத்து அடுப்பு போடலாம். முதல் அடுப்புக்கு அடிப்படை போடத் தொடங்கி பத்தாவது அடுப்புக்கான அடிப்படையைப் போட்டு முடிக்கும்போது நல்ல வெயில் நாளாயிருந்தா முதல் அடுப்புக்கான அடிப்படை காய்ஞ்சி போயிடும். ஆதலால் அதனைத் தொடர்ந்து அடுத்த தவணைக்கான வேலையைச் செய்யலாம். அப்படி அந்தத் தவணை வேலை பத்தாவது அடுப்புல முடியும்போது முதல்ல போட்ட இரண்டாவது தவணை காய்ஞ்சிடும். அப்படி காய்ஞ்சிடுச்சின்னா மூணாவது தவணையைப் போட ஆரம்பிச்சிடுவேன்.

### 11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?

சக்கரம், மண்வெட்டி, கடப்பாரை, அன்னக்கூடை (அலுமினியம்), வலசல், கூர்க்கம்பி, தெரசல் துணி, செம்மண் பூசுவதற்குப் பழைய நாட்டுத்துணி (Cotton Cloths), சாக்குப் பட்டை , கொடுவாள்.

நாங்க பேரிங் (Bearing) சக்கரம் உபயோகப்படுத்தறோம். அதை வேலூர்ல இருக்குற எங்க சொசைட்டியில வாங்கிப்போம். மத்த பொருளெல்லாம் சாதாரணமா கெடைக்கிற பொருள்கள்தான்.

### 12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?

பெரிய பானையெல்லாம் கொஞ்ச காலத்துக்கு முன்னாடி எங்கப்பா செய்தாங்க. இப்ப அதெல்லாம் யாரும் செய்யிறதில்லை. வீட்டுக்குத் தேவைப்படுகின்ற அடுப்பு, கல்ச்சட்டி, கொழம்புச்சட்டி, உறை, கூழ்ச்சட்டி, தண்ணீர்க்குடம் முதலான பொருள்கள் செய்வோம். அப்புறம் வீட்ல விசேஷம் ஏதாவது நடந்துச்சின்னா அதுக்குத் தேவையான பொருளைக் கேட்பாங்க. அதையெல்லாம் செய்து தருவோம்.

கல்யாணம் பண்றப்போ கல்யாணப் பானை கேட்பாங்க. இது எல்லா சாதிக்காரர்களும் வாங்குறது. அப்புறம் கார்த்திகை தீபம் வந்துச்சின்னா அகல்,

பொங்கல் பண்டிகை வந்துச்சின்னா பொங்கல் பானைகள், கிரகப் பிரவேசத்துக்குச் சின்னச் சின்ன கலசம், சாவுச்சடங்கு செய்யறதுக்கான பொருள்கள் இதெல்லாம் ஊர்க்காரங்க கேட்பாங்க. நாங்களும் செய்து தருவோம்.

### 13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?

மண்பாண்டங்களில் ஒரு சிலவற்றை மட்டுமே அதிகப்படியாக அழகுபடுத்துவோம். மற்றபடி உள்ள எல்லாப் பொருள்களுக்கும் தொழில் முறைப்படி செய்யிற அழகுபடுத்துற வேலையைச் செய்வோம். அதாவது செம்மண் பூசுவது, பானை, சட்டிகளின் கழுத்தில் கோடு போடுவது போன்றனவெல்லாம் பொருள் செய்யும்போது செய்ய வேண்டிய அடிப்படையான வேலை. இதுவும் அழகுபடுத்துதலுக்கானதுதான். இது இல்லாமல் நான் முன்னாடி சொன்ன மாதிரி அதிகப்படியான அக்கறை எடுத்து சில பொருள்களுக்கு Design போடுவோம். அதுமாதிரியான வேலையெல்லாம் நான்தான் செய்வேன். ஒரு ரூபாய் நாணயம், சின்ன தகரம், தெண்ணங்குச்சி என்று வீட்டில் கெடைக்கிற சாதாரணமான பொருள்களை வச்சி பொருள் பச்சையா இருக்கும்போதே அதாவது சக்கரத்திலிருந்து எடுத்துத் தட்டின பிறகு அலங்காரம் போட ஆரம்பிப்பேன். அப்போதான் பதமா இருக்கும். பெரும்பாலும் சொப்புக் குடம், கலசம் மாதிரியான பொருள்களுக்குதான் இதுமாதிரி செய்வேன். அப்படி செய்யிற பொருள்களுக்கு ரெண்டு தடவை செம்மண் பூசி தேய்க்கறதும் உண்டு.

### 14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதி நேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?

நாள் முழுக்க, வருஷம் முழுக்க எங்களுக்கு இந்தத் தொழில்தான். வேற தொழில் ஏதும் தெரியாது.

### 15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?

எங்க வீட்ல எங்க வீட்டுக்காரரும் நானும் மட்டுந்தான் இந்தத் தொழில் செய்யிறோம். எங்க பசங்களச் செய்ய விடுறதில்லை. எங்க கஷ்டம் எங்களோட போகட்டும்.

### 16. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?

நான் முன்னாடி சொன்ன மாதிரி சக்கரத்துல பொருள் செய்யிறதைத் தவிர்த்து மற்ற எல்லா வேலைகளையும் பொம்பளைங்க செய்வோம். ஆனா சக்கரத்துல செய்யிற வேலைதான் பெருசாத் தெரியும். மத்த வேலையெல்லாம் கண்ணுக்குத் தெரியாது. அப்படி கண்ணுக்குத் தெரியாத வேலைகள்

அத்தனையும் இந்தத் தொழில்ல பொம்ளைங்க செய்யிற வேலைதான். ஒவ்வொன்றையும் பூர்த்தி பண்றது பொம்பளைங்களோட வேலை.

**17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்கு போதுமானதாக இருக்கின்றதா?**

பரவாயில்லை, போதுமானதா இருக்கிறது.

**18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்தி கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

பேரிங் சக்கரம் (Bearing) பயன்படுத்துறது மட்டுந்தான் புதுசு. மத்தபடி எல்லாம் பழைய தினுசுதான்.

**19. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

இப்போ மண்பொருளை அதிகப்படியா யாரும் வாங்குறதில்லை. இருந்தாலும் எங்களோட பொழப்பு அதுக்குத் தகுந்த மாதிரி ஓடிட்டுதான் இருக்கு. கொஞ்ச நாளுக்கு முன்னாடி அதிகமான பொருள்களைச் செய்ஞ்சி கொடுத்தோம். அப்பவும் எங்களுக்கு இதே நெலமைதான். அப்ப ஒரு கல்சட்டி 5 ரூபாய். இப்ப 25 ரூபாய். அவ்வளவுதான் வித்தியாசம். இப்ப வாங்கறவங்க எல்லாம் மண்பாத்திரத்தோட உண்மையான மதிப்புத் தெரிஞ்சவங்க. முன்னாடியெல்லாம் அப்படி கெடையாது.

**20. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

ஊர்ல இருக்குற எல்லாரும் வாங்குவாங்க. எல்லா சாதிக்காரர்களும் வந்து வாங்குவாங்க. உறை, மாட்டுத் தொட்டி மாதிரியான பொருள்களை விவசாயம் பண்றவங்க வாங்குவாங்க. மத்த பொருளையெல்லாம் எல்லாரும் வாங்குவாங்க.

**21. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

வீட்ல விக்கறதோட சரி. வெளியில எங்கயும் கொண்டு போறதில்லை. ஏதாவது திருவிழா வந்துச்சின்னா, அப்ப மட்டும் சின்ன பசங்களுக்குத் தேவையான உண்டி, சொப்பு, கல்ச்சட்டி, கொழம்புச்சட்டி மாதிரியான பொருள்களைச் செய்ஞ்சி கொண்டு போயி கடை போடுவோம். அதுவும் அந்த ஒருநாள் மட்டுந்தான். மத்தபடி இப்போவெல்லாம் வெளியூர் கொண்டுபோயி விக்கிறது, தெருத்தெருவா கொண்டு போயி விக்கறதெல்லாம் கெடையாது.

**22. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

எல்லாப் பொருளும் சில்லறை விற்பனைதான். மொத்த விற்பனை கெடையாது.

**23. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

பெரும்பாலும் பேரம் பேசித்தான் வாங்குவாங்க. கண்ணுக்கு எதிரில் இருக்குற செய்யிற எந்தப் பொருளையும் யாரும் பெரிசா மதிக்கறதில்லை. குறைச்சுதான் மதிப்பிடறாங்க.

**24. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

எங்கப்பா ஊர் வேல செய்திருக்காரு. இப்ப நாங்க செய்யறதில்லை.

**25. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

காலனிகாரங்க, கவுண்டருங்கதான் அதிகமா வாங்குவாங்க.

**26. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ல யாருக்காவது அக்கி வந்துச்சினா எங்கம்மா அக்கி எழுதுவாங்க. நான் எழுதுவதில்லை. அவ்ளோதான்.

**27. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

சாதிவாரியா பிரிச்சி ஒவ்வொருத்தருக்கும் ஒருமாதிரி தர்ற பொருள் 'கல்யாணப்பானைகள்தான்'. கல்யாணம் பண்றவங்க முன்கூட்டியே எங்களுக்குத் தாம்பூலம் வைப்பாங்க. அப்படித் தாம்புலம் வச்சாங்கன்னா நாங்க கல்யாணம் நடக்குற இடத்துக்கே கல்யாணப் பானையைக் கொண்டு போய் கொடுக்கிறது வழக்கம். அப்படிக் கல்யாணப் பானை கொண்டு போற வேலையெல்லாம் நான்தான் செய்வேன். கல்யாண மண்டபத்துக்கு கல்யாணப் பானை எடுத்தும்போயி வச்சோம்னா அவங்க அதுக்கான காசு தருவாங்க. கூடவே அரிசி, பருப்பு, காய்கறி எல்லாம் சேர்த்துத் தருவாங்க. நான்தான் வாங்கிட்டு வருவேன். கிரகப் பிரவேசத்துக்கும் இதே மாதிரிதான் கலசம் எடுத்தும்போயி வைப்போம். அதேமாதிரி அரிசி, பருப்பு, காய்கறி தருவாங்க. வாங்கிட்டு வருவேன்.

**28. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

மண்வேலை செய்யிற எங்க குலால சாதிக்குள்ளவேதான் வச்சிப்போம்.

**29. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

வாழப்பந்தல் கிராமத்துல இருக்குற 'பச்சையம்மன்'.

***30. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

வருஷத்துக்கு ஒருமுறை ஆடி மாசத்துல வழிபடறது வழக்கம். மத்தபடி வீட்ல ஏதாவது கல்யாணம், காதுகுத்தல் அப்படின்னா அப்போ போயி சாமிக்குப் பூஜை போட்டுட்டு வருவோம். நாங்க பொங்கல் வச்சி பால்பூஜைதான் பெரும்பாலும் செய்வோம். ஆனா கடாவெட்டி காவு பூஜை செய்யிற வழக்கமும் இருக்குது.

***31. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

உடையார். கதை, பழமொழியெல்லாம் எனக்குத் தெரியாது.

**11**

| | | |
|---|---|---|
| **1.** பெயர் | : | எம். பூங்காவனம்<br>த/பெ. முனுசாமி உடையார் |
| வயது & பாலினம் | : | 80, ஆண் |
| கல்வித்தகுதி | : | மூன்றாம் வகுப்பு |
| ஊர் | : | லப்பை பேட்டை,<br>ஆர்க்காடு வட்டம்,<br>வேலூர் மாவட்டம் |
| தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| களஆய்வு நாள் | : | 05.05.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னோட முப்பாட்டன் தலைமுறையில் இருந்து நாங்கள் இந்த ஊர்தான். ஊர்விட்டு ஊர் வந்திருந்தா அதுக்கு ஏதாவது காரணக் கதைகள் இருந்திருக்கும். நான் இதே ஊர்ல பூர்வீகமாக இருப்பதால் எனக்கு அதுபற்றி ஏதும் தெரியல.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் கிட்டத்தட்ட 65 வருஷமா இந்தத் தொழில் செய்து வர்றேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எங்கள் குலத்தொழில் இதுதான். வேற தொழில் கத்துக்கறதுக்கோ, செய்யிறதுக்கோ எந்தவிதமான முகாந்திரமும் இல்லை.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட தாய்மாமன் அண்ணாமலை உடையாரிடமிருந்து இந்தத் தொழிலை நான் கத்துக்கிட்டேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

என்னோட தாய்மாமன் பையனுக்கு நான் இதேத் தொழிலைக் கத்துத் தந்தேன். வேறு சமூகத்தைச் சார்ந்தவர்கள் யாரும் இந்தத் தொழில் செய்ய முன்வர்றதில்ல.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், மணல், விறகு, சவுக்க மிளாரு (அ) வேலிகாத்தான் முள்ளு, சாம்பல், தண்ணீர், வறட்டி முதலானப் பொருள்கள் மட்டுமிருந்தால் போதும்.

**8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

எல்லாப் பொருளுக்கும் களிமண் ஒண்ணுதான் மூலப்பொருள். ஆனால் அதைப் பயன்படுத்துற விதந்தான் வேறவேற. சக்கரத்துல பொருள் செய்யணும்னா அதுக்கு ஒரு தினுசா பதப்படுத்தனும். கையால உருவி பொருள் செய்யணும்னா அதுக்கு ஒரு தினுசா பதப்படுத்தனும். அதாவது சக்கரத்துல பொருள் செய்யிறதுக்கு நல்லா களிப்பான களிமண்ணு தேவை. அப்படிக் களிப்பா இருக்குற களிமண்ணை நல்லா காயவச்சி தண்ணீர் ஊத்தி ஒரு ராத்திரி முழுக்க ஊற வச்சி மறுநாள் காலையில பெசஞ்சி சக்கரத்துல போட்டு வேலை செய்ய வேண்டியதுதான். ஆனால் கையால் செய்யிற தொட்டி, அடுப்பு, பொம்மைகள் முதலான பொருள் செய்ய களிமண் களிப்பா இருக்க வேண்டிய அவசியமில்லை. கொஞ்சம் சோரலா இருந்தாலும் பரவாயில்லை. அந்தச் சோரல் மண்ணைக் கொண்டு வந்து நல்லா காயவச்சி பட்டரையாக் கூட்டி அதுல வைக்கோல் கூளம், நெல் பதரு முதலான பொருள்களைப் போட்டு ஊற வைக்கணும். மறுநாள் அதை மெறிச்சி கூட்டி அமுக்கி ரெண்டு நாளக்கி ஊறவச்ச பிறகு அதையெடுத்து பொருள் செய்ஞ்சா கைக்கு ஏத்தமாதிரி லாவகமா வரும்.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

கொஞ்ச காலத்துக்கு முன்னாடி மண்ணைக் கரைச்சி ஊத்திதான் பயன்படுத்த முடியும் என்கிற நெலமை இருந்திச்சி. இப்ப அப்படி இல்ல. நல்ல களிமண் பக்கத்து ஊர் ஏரியிலேயே கெடைக்குது. அதனால இப்ப கரைக்க வேண்டியதில்லை. அப்படியே நேரடியா பெசஞ்சி பயன்படுத்தலாம்.

**10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

இந்தத் தொழிலை பொறுத்த வரைச்கும் ஆறுமாசம் உழைக்கணும். ஆறுமாசம் உட்கார்ந்து சாப்பிடணும். வெய்ய காலத்துல உழைக்கணும். ஏன்னா, மழைக்காலத்துல தொழில் செய்ய முடியாது. அதனாலதான் அப்படி சொல்றது.

**11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

இந்தத் தொழிலுக்கு இன்னின்ன கருவிகள் மட்டுந்தான். அப்படின்னு குறிப்பிட்டு சொல்லிட முடியாது. அந்தத் தொழில் செய்யிற தொழில்காரன் வீட்ல இருக்குற ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு விதத்துல பயன்படும். அதுல மிக முக்கியமானது அப்படின்னா திரிவல், திரிவல் தடி, தட்டுக் கட்டை, தட்டுக்கல்லு, தெரைசீல் துணி, கவர்கோல் பத்தை, ஊசி, கொந்துகோல் முதலானவைகள் கடப்பாரை, மண்வெட்டி, அன்னக்கூடை, கொடுவாள், குடம் முதலான பொருள்களும் தேவைப்படும்.

**12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

நான் பழைய பாணியிலான சட்டி, பானை வேலையைத்தான் செய்வன். அதாவது பானை, குடம், சட்டி வகைகள், மடக்கு, சிப்பி, அடுப்பு, தொட்டி, திருஷ்டி பொம்மை, சாமி பொம்மை, குழந்தை பொம்மை முதலானவற்றைச் செய்வேன்.

ஆனால் தந்தூரி அடுப்பு, பூந்தொட்டி, Filter பானை, லவ்பேர்ட்ஸ் பானை முதலான பொருள்களைத் தற்காலத்துக்கு ஏற்றபடி என்னோட பையன் செய்து தர்றான்.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

மண்பாண்டத் தொழிலில் 'கை' தான் மிகப்பெரிய கருவி. கையால நாம நெனக்கிற மாதிரி எப்படி வேணும்னாலும் அலங்காரம் செய்யலாம். அதுக்கு மனசு நெனைக்கறத கை செய்யிற அளவுக்குப் பழகியிருக்கணும். இது இல்லாமல் சின்ன தென்னங்குச்சி, ரூபாய் நாணயம் முதலானவற்றை வச்சி அலங்காரம் பண்ணுவதும் உண்டு.

**14. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு முழுநேரமும் இதேத் தொழில்தான். வேறு எந்தத் தொழிலும் தெரியாது.

**15. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

இந்தத் தொழிலை தனியொரு ஆள் செய்யிறதுங்கறது முடியாத விஷயம். இது ஒட்டுமொத்தக் குடும்பமே செய்யக்கூடிய தொழில். நாங்க எங்க குடும்பத்துல இருக்குற பெரியவங்க எல்லாரும் இந்தத் தொழிலைத்தான் செய்யிறோம். மிக முக்கியமா நான், என் பையன், என் மருமகள் மூனு பேரும் செய்வோம்.

**16. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

சக்கரத்துல பொருள் செய்யிறவேலை, சூளை அடுக்குற வேலை என்னோடது. கையால் செய்யிற பொருளெல்லாம் என் பையன் செய்வான். பூந்தொட்டி மாதிரியான சுலபமான பொருள்களைச் சக்கரத்திலயும் செய்வான். மற்றபடி எல்லா வேலைக்கும் அவன்தான் மண் மெறிச்சிக் குடுப்பான். சூளைக்குத் தீனி சம்பாதிச்சி வருவான். என் மருமகள் செய்யிற பொருளைக் காயவச்சி செம்மண் அடிச்சி எடுத்து வைப்பாள்.

**17. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

பரவாயில்லை. இத்தொழில்வழி வருமானம் போதுமானதாயிருக்கிறது. எந்தளவுக்கு கஷ்டப்படுறமோ அந்தளவுக்குப் பலன் உண்டு.

**18. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

இந்தத் தொழிலில் சக்கரத்தை மட்டுந்தான் மாத்தலாம். மத்த எந்த கருவியையும் மாத்த முடியாது. அந்தளவுக்கு எந்த கருவியும் புதுசா வரல. களிமண் அரைக்கிற மெஷின் வந்ததா கேள்விப்பட்டேன். ஆனால் கண்ணால பார்க்கல. அப்படியே வந்தாலும் அதெல்லாம் கைவேலைக்கு ஈடாகாது.

**19. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

நம்ம நிலத்துல விளையிற தானியத்தை அலுமினிய, சில்வர் பாத்திரங்கள்ல சமைச்சி சாப்பிடுறோம். ஆனா வேற எங்கயோ வெளயிற பொருள மண்பாண்டத்துல சமைச்சி சாப்பிடறோம். உதாரணத்துக்கு தந்தூரி அடுப்பு. எந்த ஒரு பொருளும் பக்கத்துல இருந்தாலோ, சுலபமா கெடைச்சாலோ அதுக்கான மதிப்பு கொறச்சல்தான். அதுமாதிரிதான் மண்பாண்டப் பொருளும்.

**20. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?**

நான் உற்பத்தி செய்யிற மண்பாண்டப் பொருள் என்பது இயற்கையானது. இயற்கையான மண்ணிலிருந்து செய்யிறது. ஆனால் மற்ற பயன்பாட்டுப் பொருள்கள் அப்படியில்லை. இருந்தாலும் அதுக்குதான் ஏகப்பட்ட மரியாதை.

**21. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

ஊரில் உள்ள எல்லா குடும்பத்தாரும் வந்து சட்டி, பானை வாங்கிம்போவாங்க. ஏனென்றால் வீட்டு உபயோகத்துல கண்டிப்பா மண்பாண்டப் பொருள் தேவைப்படும். அதனால கண்டிப்பா வந்து வாங்கிம்

போவாங்க. இது சில்லறை விற்பனை. இது இல்லாம ஆற்காட்டுல கடை போடுறவங்க வந்து மொத்தத்துலயும் சட்டி, பானை வாங்கிம் போவாங்க.

**22. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

பெரும்பாலும் வீட்லயே சில்லறையா வித்துடுவோம். அதுக்கும் மிஞ்சினதை மொத்தத்துக்கு வித்துடுவோம். ஆனால் அதுக்கு முன்னாடி தலைமேல தூக்கிபோயி தெருத்தெருவா வித்தமாதிரியெல்லாம் இப்போ விக்கிறதில்லை. வீட்டோட இருந்து விக்கிறதுதான்.

**23. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

ரெண்டு விதமாகவும் விற்பனை செய்வதுண்டு. இதில் அதிகப்படியா மொத்த விற்பனை செய்யிறதுதான் எங்களுக்கு வசதியானது.

**24. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

மொத்த விற்பனையில நிலையானது. சில்லறை விற்பனையில பேரம் பேசித்தான் வாங்குவாங்க. இதுல எங்க லாபம்னு பார்த்தா சில்லறை விற்பனையிலதான் அதிகம். மொத்த விற்பனையில் குறைவுதான்.

**25. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

குடித்தொழிலெல்லாம் 20 வருஷத்துக்கு முன்னாடி செய்ஞ்சது. இப்ப செய்யிறதில்லை. அது என் தலைமுறையோட நின்னுபோச்சி.

**26. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மொராசி) செய்திருக்கிறீர்கள்?**

அப்ப எல்லா சாதிக்காரங்களுக்கும் செய்தேன். இப்ப யாருக்கும் செய்யிறதில்லை.

**27. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

முஸ்லிம் மதத்தவர்கள்தான் அதிகமா வந்து வாங்குறாங்க. அதுவும் சாப்பிட பயன்படுத்துற 'சிப்பிதான்' அதிகமா வாங்குவாங்க. அதை அவர்கள் 'கட்ரா'ன்னு சொல்லுவாங்க. மற்றபடி எல்லாரும் ஒரே மாதிரியான பொருளைத்தான் வாங்குவாங்க.

**28. ஊர்ச்சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ல இருக்குற எல்லாருக்கும் கல்யாணப்பானை செய்து தருவேன். அக்கி எழுதுவேன். சாவுக்குக் கொல்லிச்சட்டி தருவேன். சாவுல அம்போகம் பண்ணும்போது அதுக்குக் காசு தருவாங்க. இது தவிர கோயில் திருவிழாவுல

அரவான் சிலை, துரியோதனன் சிலை, பூவாடைக்காரி சிலை முதலான சிலையெல்லாம் செய்து கண் தெறக்குற வேலை உடையாரோடதுதான்.

**29. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

செய்வதுண்டு. விபரமா சொல்லனும்னா,

| சாதி | பானைகள் | கலர் | பாலிகை | அகல் | பானக தோண்டி | மடக்கு | தூப கலசம் | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|
| மூப்பனார் | பெரிய பானை - 1<br>கை கரகம் - 1<br>சாலு - 1 | ✓ | 5 | 25 | 2 | 1 | 1 | 37 |
| அருந்ததி | " | ✓ | 5 | 12 | 2 | 1 | 1 | 24 |
| நாயுடு | " | × | " | " | " | 1 | 1 | 24 |
| ஏகாலி | " | | " | " | " | | | |
| யாதவாள் | " | × | " | " | " | | | |
| ஆசாரி | நாகவள்ளி முகூர்த்தம் | × | - | - | - | - | - | - |
| ரெட்டியார் | யானை - 1<br>பெரிய அகல் - 1 | ✓ | 5 | 12 | 2 | 1 | 1 | 23 |
| கவுண்டர் | சாலு - 1<br>கரகம் - 1<br>மூடி - 1<br>கை கரகம் - 1<br>மணவரை பெரிய பல்லா - 2 | ✓ | 5 | 12 | 2 | 1 | 1 | 30 |

**30. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

குலாலர்களுக்கு உள்ளவேதான் சம்பந்தம் வச்சிப்போம். அதுலேயும் முன்னாடியெல்லாம் தெலுங்கு குலாலர்களுடன் சம்பந்தம் வச்சிக்க மாட்டோம். ஆனா இப்ப அப்படியெல்லாம் இல்லை. ரெண்டும் கலந்து போச்சி.

**31. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

முனியப்பன் மற்றும் காட்டேரி.

**32. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப்பொருள் என்னென்ன?**

வருஷத்துக்கு ஒருமுறை படையல் போடுவோம். அதுக்குப் பொங்கல் வச்சி அவல், பொறி, கடலை, சாராயம், சுருட்டு முதலான பொருள்களைப் படையல் போட்டுப் பூசை புனஸ்காரம் செய்வோம்.

**33. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

ஊர்ல எங்களை உடையார்னுதான் கூப்பிடுவாங்க.

அறியாத வயசுல என்னை அடியடினு அடிச்சே ஆம்பளயா இருந்தா இப்ப அடிச்சுப் பாருடா என்றதாம் பானை. அவ்ளோதான் இப்ப ஞாபகமிருக்கு.

**12**

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : | ஏழுமலை உடையார் |
| | வயது & பாலினம் | : | *84,* ஆண் |
| | கல்வித்தகுதி | : | நான்காம் வகுப்பு |
| | ஊர் | : | வைகுண்டபுரம், சென்னை-*34* |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர் (உடையார்), சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | *27.04.2010* |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னுடைய அப்பா விட்டலாவரத்திலிருந்து *1913*ல சென்னைக்கு வந்து இங்கயே நிரந்தரமா தங்கிட்டாரு. நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் இங்கதான். எங்கப்பா விட்டலாவரத்துல தனியாளா இருந்ததனால இங்க இருந்த தாத்தா வீட்டுக்கு வந்து சொந்தங்களோடவே இருந்துட்டாருன்னு சொல்லுவாங்க.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

அறுபது வருஷமா இந்தத் தொழில செய்துட்டிருக்கேன். *1942*-லிருந்து இன்னக்கி வரைக்கும் செய்துட்டு வர்றேன். இப்பல்லாம் அதிகமான வேல செய்ய முடியறதுல்ல.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்குத் தெரிஞ்ச தொழில் இதுதான். வேற தொழில் தெரியாது. படிப்பறிவுமில்ல. வீட்டுக்குப் போதுமான வருமானமும் இதுல கெடக்கிது.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட அப்பாவிடம் கத்துகிட்டேன். எங்க அப்பா பேரு கன்னியப்ப உடையார். *1946*ல் School of Arts-ல் *10* மாத பயிற்சிக்குப் போனேன். அங்கதான் அலங்காரப் பொருள் செய்யக் கத்துக்னேன். என்னோட *13*வது வயசுல கத்துக்கிட்டேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்தச் சமூகம்?**

நான் யாருக்கும் கத்துக் கொடுக்கல. எந்தம்பிக்குக் கத்துக்குடுத்தேன். அவன் இப்ப இல்ல. செத்துட்டான்.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

மூலதனம்னு ஒன்னுமில்ல. ஒரு முப்பது வருஷத்துக்கு முன்னாடியெல்லாம் போக்குவரத்து செலவு மட்டுந்தான். ஆனா இப்ப மண்ணு, கட்ட, எருமுட்ட முதல்கொண்டு எல்லாங் காசு ஆயிபோச்சி.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, மணலு, செம்மண்ணு, சாம்பல், தண்ணி, கட்ட, எருமுட்ட, வைக்கோல்.

**9. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

எல்லாப் பொருளுக்கும் களிமண்ணுதான் பயன்படுத்தறது. ஒவ்வொரு பொருளுக்கும் தகுந்த மாதிரி அதப் பதப்படுத்துற முறைதான் வேறவேற. களிமண்ண நல்லா காயவச்சி சின்னச் சின்னதா நறுக்கி, பிறகு மண்ணு பட்டறையில சலிச்ச மணலு கொட்டி அதுமேல காயவச்ச களிமண்ண கொட்டி தண்ணி ஊத்தி காலால மூணு நாலு மொற மெறிச்சி அதுக்கப்புறந்தான் சக்கரத்துல போடணும். நான் இங்க எல்லா பொருளும் சக்கரத்துலதான் செய்யிறேன். அதனால ஒரே மாதிரியான பதப்படுத்தற முறைதான்.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

காசு கொடுத்தா இப்பவெல்லாம் உடனே கிடைக்குது. அதுல ஒண்ணும் தப்பு கெடையாது.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

கார்த்தி, ஐப்பசி, புரட்டாசி மாசத்துல குறச்சலா செய்வேன். மத்தபடி மத்த நாள்ல சீரா செஞ்சிட்டிருப்பேன்.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

கடப்பாரை, மண்வெட்டிய வச்சி மண்ணு வெட்டறது. அப்புறம் மணல் சலிக்க சல்லடை, அப்பறம் பொருள் செய்யற சக்கரம். அது அறுத்தெடுக்க கம்பி, தட்டுவதற்குத் தட்டுக் கட்ட, தட்டுக் கல்லு, சின்ன துணி, சூளக்கி கட்ட, நறுக்க கத்தி அவ்ளோதான்.

**13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

கேக்கறதுக்குத் தகுந்தா மாதிரி செய்றதுதான். இதுல கணக்கெல்லாம் ஏதும் கெடையாது. சட்டிய ஒரு ரகமா எடுத்துட்டம்னா அதுல சின்னது பெருசா நாலஞ்சு ரகமிருக்கும். அதே போல பானை, சாடி எல்லாம்.

**14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

சென்னையப் பொறுத்த வரைக்கும் அழகுபடுத்தறதுதான் முக்கியம். நல்லா பளிச்சினு புடிக்கற செம்மண்ணா பாத்து எடுத்து வரச்சொல்லி அத வாங்கி பொருளுகளுக்கு அடிக்கணும். அப்பதான் அதிகமா விற்பனையாகும். மற்றபடி செய்யறப்பவே உதடு மடிக்கறதுல வேலப்பாடு செய்யறது. கழுத்துல கோடு போடுறது. கழுத்துக்குக் கீழே வெரலால கீறல் போடறதெல்லாம் உண்டு.

**15. பொருள் உற்பத்தியில் உங்களுக்கான பாணி என்ன?**

அதுபத்தி எனக்கு ஒண்ணுந் தெரியல.

**16. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழுநேரமும் இதே வேலதான். வேற தொழில் தெரியாது.

**17. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

நானும் என்னோட சம்சாரமும்தான் அதிகமா செய்வோம். என் பொண்ணு கல்யாணம் பண்ணிக்கினு போறதுக்கு முன்னாடி எடுக்க புடிக்க உதவி பண்ணுவா. மத்தபடி யாரும் கெடயாது. நாங்க மூணு பேரு மட்டுந்தான். என்னோட பையனுங்க கிட்டவே வரமாட்டானுங்க. அவனுங்க இப்பப் பொருள வெளிமாநிலத்துல இருந்து வாங்கி வந்து விக்கிறானுங்க.

**18. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

சக்கரத்துவேல, தட்டுவேல, சூளவேல மூணும் என்னுது. மண்ணு காய வக்கிறது, பெசயறது, பொருளுங்கள காய வக்கிறது, அதுக்குச்செம்மண்ணு பூசறது இதெல்லாம் எங்க வீட்டம்மா செய்வாங்க. எடுக்க புடிக்க எம்பொண்ணு அவ்ளோதான்.

**19. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

ம். போதுமானதா இருக்குது.

**20. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

பெருசா ஒண்ணுமில்ல. அப்போவெல்லாம் இடும்பத்துல சக்கரம் போட்டு வேல செய்வன். இப்ப பேரிங் சக்கரம் அவ்வளவுதான், மத்தபடி ஒண்ணுமில்ல.

**21. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

பிளாஸ்டிக், அலுமினியமுன்னு என்னதான் வந்தாலும் மண் பொருளுக்கான மவுசு என்னைக்கும் இருக்கும். அதோட மகத்துவம் அப்பப்ப தெரியும்போது வந்து வாங்குவாங்க. வெய்ய காலம்னா வந்து பானை வாங்கறாங்களே அதுமாதிரி.

**22. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?**

அது வந்து வாங்கிட்டுப் போற மாமுல் கஸ்டமர கேட்டாதான் தெரியும்.

**23. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

யாருன்னு எல்லாம் குறிப்பிட்டு சொல்ல முடியாது. தேவைப்பட்ற எல்லாரும் வந்து வாங்குவாங்க.

**24. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

வீட்டுக்கு எதிரிலேயே கடப்போட்ருக்கேன். வேற எங்கயும் எடுத்தும்போயி விக்கறது இல்ல. கடையில நான் செய்யிற அந்தப் பொருளுங்க கூடவே வெளிமாநிலத்தில இருந்து எம் பையன் எறக்குமதி பண்ற வீட்டு அலங்காரப் பொருள்களையும் சேத்து வைச்சி விப்பான்.

**25. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

நாங்க விக்கிறது சில்லறையாதான். ஆனால் நாங்க மொத்தத்துல வாங்கி வர்றதும் உண்டு.

**26. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

நிலையானது. காசுக்கு மட்டுந்தான் தருவோம். கிராமத்துல தானியம் தருவாங்க. இங்க எப்படி அத எதிர்பார்க்க முடியும்.

**27. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இல்லை.

**28. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

நான் குடி ஊழியம் செய்ததே கிடையாது.

**29. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பட்டணத்துல அதெல்லாம் பார்க்க முடியாது.

**30. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

நாலு பேருக்கு என்னவோ அதுமாதிரிதான் எங்களுக்கும். இங்க கிராமத்த மாதிரியெல்லாம் இல்ல. நாங்க யாருக்கும் எந்தச் சடங்கும் செய்யிறது இல்ல.

**31. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

உண்டு. சடங்குப் பொருள்னா கல்யாணப் பானை, அஸ்தி பானை, அக்கினி சட்டின்னு இந்த மூணுதான். இதுல கல்யாணப் பானைதான் வெவ்வேறு மாதிரியா இருக்கும்.

| சாதி | கலர் | பானை | பாலிகை | அகல் | கஞ்சிப் பானை | மூடி | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|
| அகமுடை முதலியார் | × | சாலு கரகம் - 1<br>மொட்ட கரகம் - 1<br>தோண்டி - 2<br>பொங்கல் பல்லா - 2 | 5 | 12 | 1 | 2 | 26 |
| இடையர் (யாதவாள்) | ✓ | 'தடசீப்பு' வீட்டில் உள்ளவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு கேட்பார்கள் | " | " | " | " | 26 |
| கவுண்டர், பறையர் | ✓ | " | " | " | " | " | 26 |
| குயவர் | × | ஹோம குண்ட சட்டி - 1 | 5 | 9 | - | - | 15 |
| ஆசாரி | × | சொப்பு - 32<br>கொய்யாலி - 32<br>பல்லா - 4<br>கலவோடு - 4 | - | 32 | 2 | 4 | 110 |

**32. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

தமிழ்மொழி பேசும் குயவர்களுக்கு உள்ளாகவே பெண் கொடுப்பதும் எடுப்பதும் உண்டு. அதுவே தெலுங்கு உடையாருக்குப் பெண் கொடுப்பதில்லை.

**33. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

வையேச்சியம்மன்.

**34. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

உண்டு. முழுக்க பால் பூசதான். சித்திரை மாசத்துலதான் திருவிழா செய்வோம். எல்லா சாமிக்கும் செய்யிறதுதான். புதுசா எதுவுமில்லை.

**35. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

உடையார்தான். கத, பழமொழி எல்லாம் தெரியாது.

**13**

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | பி. விநாயகம் |
| | வயது & பாலினம் | : | 67, ஆண் |
| | கல்வித்தகுதி | : | எட்டாம் வகுப்பு |
| | ஊர் | : | சச்சிதானந்தன் தெரு, கொசப்பேட்டை, சென்னை |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தெலுங்கு, தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குலாலர், விஷ்ணுகோத்திரம் |
| | தொழில் | : | பொம்மை செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 04.06.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னோட பூர்வீகம் திண்டிவனத்துக்குப் பக்கத்துல இருக்குற பூத்துறை கிராமத்திற்கு பக்கத்துல இருக்குற காசிப்பாளையம்ங்கற குக்கிராமம். அந்த ஊர்ல இருந்து எங்கப் பெரியப்பா சென்னைக்கு வந்து தொழில் செய்தார். அப்புறம் அவர்தான் எங்கப்பாவ சென்னைக்குக் கூட்டிட்டு வந்தார். இங்க போதுமான வருமானம் கெடச்சதனால இங்கயே குடும்பத்தோட செட்டிலாயிட்டோம்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

கிட்டடத்தட்ட ஐம்பது வருஷமா இந்தத் தொழில செய்துட்டு வர்றேன். அதாவது என்னோட பதினேழு அல்லது பதினெட்டு வயசுல இந்த தொழில கத்துக்கிட்டேன். அதுலேர்ந்து இப்ப வரைக்கும்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எங்கப்பா எனக்கு கத்துக் குடுத்தது இந்த தொழில்தான். இதிலிருந்து சம்பாதித்துதான் நான் ஜீவனம் பண்ணனும். வேற வழியில்ல.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

எங்கப்பாவிடமிருந்து இந்தத் தொழிலக் கத்துகிட்டேன். என்னோட பதினேழாவது வயசுல கத்துக்கிட்டேன். அப்பா பேரு பழனி பத்தர்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்தச் சமூகம்?**

பண்ருட்டியிலிருந்து வந்த 'பாலு'ங்கற பையனுக்கு இந்தத் தொழில நான் கத்துக் கொடுத்துருக்கேன். அவன் தெலுங்கு உடையார். அப்புறம் ஆதி திராவிடச் சாதிய சேர்ந்தவங்களுக்கும் கத்து கொடுத்திருக்கேன். அவங்க பேரெல்லாம் மறந்து போச்சு.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

மெஷின்ல அரைச்சி எடுத்த 'பேப்பர் மாவு', மைதா மாவு, பிரெஞ்ச் சாக் பவுடர், Plast of Paris மாவு, தேங்கா நாரு.

**8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

நான் செய்யறது காகித பொம்ம மட்டுந்தான். எம் பையன்தான் பைபர் வேல செய்யிறான். காகித பொம்ம செய்யிறதுக்குத் தேவையான பேப்பர் மாவினை நாங்களே மெஷின்ல கொடுத்து அரைச்சிட்டு வந்துடுவோம். அதுக்கு பிரஸ்ங்கள்ல விழுற கட்டிங் பேப்பர் தேவையான அளவு வாங்கிப்போம். அப்புறம் மளிகை கடையில மைதா மாவு வாங்கி அத கூழ் காய்ச்சுற மாதிரி தண்ணி ஊத்தி கொதிக்க வச்சி பசையாக்கிப்போம். பிரெஞ்ச் சாக் பவுடர் தனியா கெடைக்கும். அதையும் வாங்கிப்போம்.

பேப்பர் மாவு 1/4 கிலோ எடுத்துக்கணும். அதோடு 2 கிலோ சாக் பவுடர் சேர்த்து நல்லா கலந்துக்கணும். அதுக்குப் பிறகு அதனுடன் 1/2 கிலோ அளவுக்கு மைதா பசை சேர்த்துப் பெசையனும். நல்லா கெட்டியா பூரி மாவு மாதிரி பெசைஞ்சி பதமா எடுத்துக்க வேண்டியதுதான். அதற்குப் பிறகு பூரி கட்டையில வைச்சு பூரி தேய்க்கிற மாதிரி தேய்ச்சு அத 'டை' Plast of Paris Die ல போட்டுக் கையால அழுத்தி டையில இருக்கற உருவம் படியும்படி செய்யணும். பிறகு அதன்மேல மைதா கூழ் தடவி பேப்பர் ஒட்டிடணும். இதே போல பொம்மைக்குத் தேவையான முன்பக்கம் பின்பக்கம் இரண்டையும் செய்து காயவச்சி இரண்டையும் ஒன்னா ஒட்டி பொம்மையோட முழு உருவத்த உண்டு பண்ணுவோம்.

**9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

இடர்ப்பாடெல்லாம் ஏதுமில்ல. எல்லாப் பொருளும் 'Hardware' கடையில Readymade ஆ கிடைக்குது. விலை அதிகம்னு நாம நெனச்சா, நாமே இதையெல்லாம் தயார் பண்ணிக்கலாம். அப்படி செய்தாதான் கொஞ்சம் கஷ்டம்.

**10. இத்தொழிலுக்கு உகந்த பருவகாலங்கள் எவை?**

எல்லா நாட்களிலும் செய்யலாம். மழை நாள்ல பொம்மைங்க கொஞ்சம் காயாதுங்கறதால தொழில் கொஞ்சம் சுணக்கமா இருக்கும்.

**11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

Plast of Paris 'டை', பூரி மாவு உருட்ற கல்லு, கட்டை, மைதா காய்ச்ச பாத்திரம், பொம்மைக்கு பெயிண்ட் அடிக்க 4 வகை பிரஸ், இதெல்லாம்

பெரும்பாலும் 'Hardware' கடையிலேயே கெடைக்கும். Plast of Paris Die மட்டும் நாமே செய்ஞ்சிக்கலாம் அல்லது செய்ஞ்சி விக்கறவங்க கிட்ட வாங்கிக்கலாம். இது தனியாதான் கிடைக்கும்.

***12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?***

நான் அதிகப்படியா உருவாக்கறது சாமி பொம்மைங்கதான். அப்புறம் Happy man பொம்மை, தலைவர்ங்க பொம்மை, கல்யாண மண்டபத்துல வைக்கிற வரவேற்பு பொம்மைங்க, சிப்பாய் பொம்மைங்க.

'அம்மன்' சாமி பொம்மையில 10க்கும் மேற்பட்ட வகை இருக்கு. அதே மாதிரி விநாயகர் சிலையில் சித்தி முத்தி விநாயகர், பால விநாயகர், 8 கை விநாயகர், 16 கை விநாயகர் அப்படின்னு நெறய வகையிருக்கு. இப்படி பிரபலமா தெரிஞ்ச சாமிய பேர் சொல்லி செய்து தரச் சொல்லுவாங்க. புதுமாதிரியான சாமியா இருந்தா அதோட போட்டோ குடுத்து செய்யச் சொல்லுவாங்க. அந்த போட்டோவ பார்த்துக் களிமண்ணால சிற்பம் செய்ஞ்சி அதை Plast of Paris ல Die போட்டு அப்புறந்தான் அதுல அந்த பொம்மையைச் செய்து தருவோம். ஒரு பொம்மன்னா களிமண் சிற்பத்த அப்படியே தந்துடுவோம். அதே உருவுல அதிகமா கேட்டாங்கன்னா தான் 'டை' (Die) போடுவோம்.

***13. பொம்மைகளை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?***

உண்டு. பொம்மைகளுக்கு முதல்ல முழுக்க வெள்ளை சுண்ணாம்பு அடிச்சிட்டு அதுக்கு மேல இன்ன உறுப்புக்கு இன்ன நிறம்னு பெயிண்ட் வாங்கி வந்து அடிப்போம்.

***14. பொருள் உற்பத்தியில் உங்களுக்கான பாணி என்ன?***

இந்த மாதிரியான பொம்மைகள் செய்வதுக்கு அடிப்படை Plast of Paris Die தான். அத உருவாக்குறதுதான் கைக்கலை. அத வச்சுதான் பொம்மையோட நேர்த்தியினை வித்தியாசப்படுத்திப் பார்க்க முடியும்.

***15. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?***

முழுநேர உழைப்புதான்.

***16. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?***

மண்வேலை, காகித வேலை, பைபர் வேலை. இப்படி எந்த வேலையா இருந்தாலும் தனியா யாராலயும் செய்ய முடியாது. கூட்டு வேலைதான். வீட்ல

இருக்கற எல்லாரும் இந்த வேலையில ஈடுபடுவாங்க. நான் செய்யிற இந்த வேலையை நானும் எம்பொண்டாட்டியும் செய்வோம்.

**17. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

நான் பேப்பர் மாவு பெசையுவேன். அதை தேய்ச்சி Die ல போட்டு உருவம் செய்வேன். அத பொம்பளங்க எடுத்துக் காய வைப்பாங்க. அப்புறம் இரண்டு பகுதியா இருக்கற பொம்மைய ஒண்ணா ஒட்டுவேன். அதயும் எடுத்தும் போயி பொம்பளங்கதான் காய வைப்பாங்க. காயவச்சப்பெறகு அந்த பொம்மைங்களுக்கு வெள்ளையடிக்கிற வேலையையும் பொம்பளைங்கதான் செய்வாங்க. அப்புறம் அதுக்கு மேல பெயிண்ட் பண்றத நான் செய்வேன். பொம்பளங்க அதக் கொண்டு போயி திரும்ப காய வச்சி எடுத்துப் பத்திரப்படுத்துவாங்க.

**18. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

போதுமானதாக இருக்குது.

**19. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

அதுக்கு முன்னாடி பிரஸ் (Brush) வச்சி பொம்மைங்களுக்கு பெயிண்ட் பண்ணேன். இப்போ பெயிண்ட் அடிக்கற 'மெஷின் கன்' வச்சி பொம்மைங்களுக்கு பெயிண்ட் அடிக்கறேன். மத்த வேலையெல்லாம் வழக்கமா செய்யற மாதிரிதான் அப்படியே செஞ்சிட்டு வர்றேன்.

**20. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

பொம்மை வகையில இப்ப நாலஞ்சு வகை வந்துடிச்சி. அதுல களிமண் பொம்மை, சிமெண்ட் பொம்மை, காகித பொம்மை, பைபர் பொம்மை என்ற இந்த நாலுவகை பொருளும் கைவினைத் தொழிலால் செய்யப்படறது. கைவினைத் தொழில் என்கிறதால மக்கள் எங்களிடம் அவங்களுக்கு வேண்டியபடியான பொம்மைகளை எங்களிடம் நேரடியா கேட்டு வாங்கறாங்க. மத்தபடி பிளாஸ்டிக், கண்ணாடி பொம்மையெல்லாம் நெனக்கிற மாதிரி கிடைக்காது. இருக்குறதலதான் புடிச்சதை தேடி எடுத்துக்கணும். ஆனா எங்ககிட்ட அப்படியில்ல. அவங்க எப்படி கேக்கிறாங்களோ அதன்படி நாங்க செய்து தருவோம்.

**21. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?**

ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு மாதிரியான கைக்கலை இருக்கும். முதல்ல கையால சிற்பம் செஞ்சி அதை வச்சிதான் Die போட்டு பல பொம்மைகள் செய்ய முடியும். ஆக களிமண்ணால செய்யிற அந்த சிற்பந்தான்

ஒவ்வொருத்தருக்கான தனித்துவம், அடையாளம். அதுமாதிரி எம்பொம்மை ஏதாவது ஒரு வகையில தனியானதா, சிறப்பானதா இருக்கும்.

**22. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

கொலு வைக்கிறதுக்கு ஐயர்கள்தான் அதிகமாக பொம்மை வாங்குவாங்க. அதே மாதிரி கிறிஸ்துமஸ்க்கு கிறிஸ்டினுங்களும் பொம்மை வைப்பாங்க.

**23. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

காதி கிராமோத்யாபவன், காதி கிராப்ட், பூம்புகார் கைவினைக் கலையகம் முதலான கடைகள்ல மொத்தமா கொடுத்துடுவம்.

**24. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

மொத்த விற்பனைதான். வீட்ல வந்து கேட்கறவங்களுக்கு சில்லறையாவும் விற்போம்.

**25. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

மொத்தமா விற்கறப்போ அது நிலையான விலை. சில்லறையா விற்கும்போது பேரம் பேசித்தான் வாங்குவாங்க.

**26. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இதுல அதுக்கெல்லாம் வேலையில்ல.

**27. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

மண் வேலை செய்யற பத்தர்கள் யாராயிருந்தாலும் பொண்ணு கொடுத்து பொண்ணு எடுத்துப்போம். தமிழ் உடையாருடனும் சம்பந்தம் வச்சிக்கிறதுண்டு.

**28. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

விழுப்புரம் மாவட்டம் மைலத்துக்குப் பக்கத்துல இருக்குற கொளப்பாக்கத்து செங்கழுநீர் அம்மன்.

**29. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

வருஷத்துக்கு ஒரு முறை சாமி கும்பிடுவோம். அது இல்லாம காது குத்தல், கல்யாணம்னா போய் சாமி கும்பிடுவோம். பால் பூஜைதான் செய்வோம். அந்தக் கோயிலுக்குப் பக்கத்துல இருக்குற வேப்ப மரத்தடியில கட்டமா வீடு கட்டி அதுல 21 அல்லது 51 புடிமண் பிள்ளையார் செய்து

மேற்கு, வடக்கு, தெற்கு என்ற மூணு தெசயிலயும் வச்சிட்டு அந்த சாமியத்தனையையும் நூலால பிணைச்சிடுவோம். அப்புறம் மூணு பக்கமும் இருக்குற சாமிங்களுக்கு சக்கரை பொங்கல், அவல், பொறி, கடலை, சுண்டல், பழவகை வச்சிப் படையல் போடுவோம்.

***30. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

பத்தர். பழமொழி, விடுகதை என்பதெல்லாம் எனக்குத் தெரியாது.

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | எஸ். ஜோதிலிங்கம் **14** |
| | வயது & பாலினம் | : | *61, ஆண்* |
| | கல்வித்தகுதி | : | பி.எஸ்.சி., வேதியியல் |
| | ஊர் | : | கந்தசாமி தெரு, கொசப்பேட்டை, சென்னை-12 |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தெலுங்கு & தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குலாலர், விஷ்ணுகோத்திரம் |
| | தொழில் | : | பொம்மை செய்தல், சினிமா செட்டிங் போடுதல், Plast of Paris Die எடுக்கக் களிமண் சிலை செய்து தருதல் முதலானவை |
| | களஆய்வு நாள் | : | *09.05.2010* |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னோட அப்பா ஊர்தான் என்னோட பூர்வீகம்னு சொல்லனும். ஏன்னா நான் பொறந்து வளர்ந்ததெல்லாம் இதே ஊர்லதான். எங்கப்பா வெளியூர்ல இருந்து இங்க வந்தவரு. அவர் திண்டிவனம் பக்கத்துல இருக்குற கிளியனூருக்கு அடுத்த கிராமமான 'தேர்குணம்' கிராமத்தைச் சார்ந்தவர்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

என்னோட எட்டாவது வயசுல இருந்து இந்தத் தொழில்ல ஈடுபட்டிட்ருக்குறேன். இப்ப வரைக்கும் செய்திட்டிருக்கேன். இடையில் சில காலம் Part time work ஆக இதைச் செய்தேன். இப்ப ஒரு பத்து வருஷமா இதுதான் முழுநேரத் தொழில். இதுக்கு முன்னாடி *1990*களில் ஒரு பத்து வருஷம் Ashok Layland-ல வேலை செய்திருக்கேன். அதுவும் Auto Mobiles உதிரிபாகங்களுக்கு Die தயாரித்துக் கொடுக்கும் வேலைய செய்திருக்கேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

மண்பானைத் தொழிலை எங்க தாத்தா, அப்பா இருவருமே செய்தது கிடையாது. அவங்களும் இந்த பொம்மைத் தொழிலத்தான் செய்தாங்க. அதைத் தொடர்ந்து நானும் இந்தத் தொழில் செய்துட்டு வர்றேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

இதுக்கான அடிப்படைத் தொழில் எங்கப்பாகிட்டதான் கத்துக்கிட்டேன். அதை அப்படியே காலப்போக்கிற்கேற்ப மாத்தி இப்ப நான் இந்தத் தொழில் செய்திட்டிருக்கேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்தச் சமூகம்?**

நான் ஒரு நாலஞ்சு பேர்க்கு இந்தத் தொழில கத்துக் கொடுத்திருக்கேன். எல்லாரும் உடையார் சமூகத்தச் சேர்ந்தவங்கதான். சினிமாத் துறையில செய்யிற தொழில வேற சமூகத்தைச் சார்ந்தவங்களும் எங்கிட்ட வந்து கத்துட்டுப் போயிருக்காங்க. நானும் கத்துக் கொடுத்திருக்கேன்.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

களிமண், Plast of Paris மாவு, மைதா, பெயிண்ட் முதலான பொருள்கள் வாங்கறதுக்குத் தேவையான காசு.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

சிலை செய்யக் களிமண், அதை வச்சி 'டை' எடுக்கத் தேவையான Plast of Paris மாவு, மைதா மாவு, அவ்வாறு செய்யிற அந்த 'டை' பெரிய உருவமா இருக்கற அப்போ அதுக்குத் தெடங்கொடுக்க அதுங்கூட சேர்ப்பதற்குத் தேங்காய் நார், அப்புறம் அந்த பொருள்களைச் சூளை வைக்கத் தேவையான விறகு, வரட்டி, சுள்ளி, வெந்தபிறகு அழகுபடுத்தறதுக்கு அடிக்கற பெயிண்ட்.

**9. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

களிமண் சிலை செய்யக் களிமண்ணையும், மிருதுவான மணலையும் சேர்த்துத் தண்ணீர் விட்டு பிசைந்து அப்படியே கையால பொம்மை செய்ய வேண்டியதுதான். இதுவே Plast of Paris பொம்மை செய்யணும்னா Plast of Paris (கல்நார்) மாவு வாங்கி வந்து அதனுடன் மைதா மாவு பசையைச் சேர்த்துப் பெசஞ்சி அத களிமண் சிலையை மையமா வச்சி Dye போடுவோம். இது ரெண்டு வேலதான் இப்போதைக்கு நான் அதிகமா வீட்ல செய்யறது. Fibre Work எல்லாம் சினிமா கம்பெனியிலதான் அதிகமா செய்வேன்.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படி சமாளிக்கிறீர்கள்?**

நாம நெனக்கிற மாதிரியான தரத்துல களிமண் கெடக்கறதில்லை. சென்னையில நாமே போயி தேடி எடுக்கும்படியான வசதியும் இல்ல. அதனால வண்டிக்காரர் கொண்டு வந்து தர்ற மண்ண நாம சிலை செய்வதற்கு ஏற்ற மாதிரி கலவை செய்ஞ்சி பதப்படுத்திக்க வேண்டியதுதான்.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

மண்பொருள் திடப்படணும்னா அதக் காயவைக்கணும். சூளை போடனும். அதுக்கு வெயில் காலம்தான் நல்ல உகந்த காலம். மழை நாள்ல

வேலை மந்தமாத்தான் நடக்கும். எது எப்படியிருந்தாலும் கிருஷ்ண ஜெயந்தி, நவராத்திரி, விநாயகர் சதுர்த்தியில வேலை துரிதமா நடக்கும்.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

மூங்கில் குச்சியில செய்யும் பட்டைக்கருவிகள், 1, 2, 3 அங்குல பெயிண்ட் பிரஸ், திருகு உளி, மைதா மாவு, கூழ்பசைக் காய்ச்ச குண்டான், சூளை ஏற்பாடு செய்ய கத்தி, மண்வேலைச் செய்ய பாண்டில் (இரும்புச்சட்டி) மற்றும் கொலுரு.

**13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

கடவுள் சம்பந்தப்பட்ட பொம்மைகள், புராண வரலாற்றுப் பொம்மைகள், Novelty items (சாப்பிடுகின்ற மாதிரியான பொம்மைகள், கல்யாண பொம்மைகள், பொய்க்கால் குதிரை பொம்மைகள்) அப்படின்னு இந்த மூனு வகையிலயும் பொம்மை செய்யிறதுண்டு.

பொம்மைகள் காலத்துக்குத் தகுந்த மாதிரி செய்ய வேண்டியிருக்கின்றது. கொஞ்ச காலத்துக்கு முன்னாடி கல்யாண பொம்மைகள் தலைப்பாகை கட்டின மாதிரி இருக்கும். ஆனா இப்ப செய்யிற கல்யாண பொம்மைகளுக்குத் தலைப்பாகைக் கட்டுவதில்லை. பெண் பொம்மை உட்கார்ந்த நிலையில் இருக்கும்போது ஒரு கால் சம்மணம் போட்டும் ஒரு கால் குத்தங்காலாகவும் இருக்கும். அதுல பெண் தன்னோட மோவாய்க் கட்டைய வச்சிருக்கிற மாதிரியான பொம்மைகள் அந்த காலத்தது. இப்ப செய்யிற பெண் பொம்மைகள் இரண்டு காலும் சம்மணம் போட்டு உட்கார்ந்தபடி கையில் பூச்செண்டு வச்சிட்டு இருக்கிற மாதிரி செய்யிறேன். அதே போல அப்போதெல்லாம் ஆலிலை கிருஷ்ணன், பால விநாயகர், கண் திருஷ்டி விநாயகர் செய்திட்டிருந்தேன். இப்போ தலையனைத் திண்டுல ஒய்யாரமா படுத்திட்டிருக்கிற மாதிரி, பீரங்கி மேல படுத்துட்டு இருக்குற மாதிரி விநாயகர் சிலை செய்ய வேண்டியிருக்கு. ஏனென்றால் அப்படித்தான் மக்கள் விரும்பி கேக்கறாங்க. அதனால நாங்க அப்படியேச் செய்து தர்றோம்.

**14. பொம்மைகளை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

உண்டு. பெயிண்டிங் செய்'நாதான் பொம்மைகள் அழகாகத் தெரியும். அதனால கண்டிப்பா பெயிண்டிங் (வண்ணமூட்டுதல்) உண்டு. மற்றபடி பொம்மைகள் என்பது பெரும்பாலும் அலங்காரப் பொருள்கள்தான் அதனால் அதைச் செய்யும் போதே அழகாத்தான் செய்யணும். அதுக்கு கூடுதல் அழகு சேர்ப்பதுதான் இந்த பெயிண்டிங்.

***15. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?***

களிமண் பொம்மை செய்யறது எனக்குப் பகுதி நேரத் தொழில்தான். இது இல்லாம சினிமா கம்பெனிகளுக்கு செட்டிங் போடப் போயிடுவேன். அதுதான் எனக்குப் பிரதான வேல. அதுல வருமானம் அதிகம். முதலீடு கிடையாது. உடல் உழைப்பு மட்டுந்தான். எனவே அந்த வேலைக்குதான் நான் முன்னுரிமை கொடுப்பேன்.

***16. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?***

குழுவாகத்தான் செய்யிறோம்.

***17. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?***

எந்த பொம்மை செய்யப் போறோமோ அந்தப் பொம்மைக்கான மூல வடிவத்தை (Original Piece) நான் களிமண் சிலையா முதல்ல செய்வேன். அதுக்கப்புறம் அத Plast of Paris (கல்நார்) மாவுல வச்சி வார்ப்பு (Die) எடுத்துக் குடுப்பேன். அதை வைத்து வீட்டிலிருக்கும் பெண்கள் அதே மாதிரியான பல பொம்மைகளைச் செய்துடுவாங்க.

இதுல களிமண் சிலை செய்யறதுக்கு ஏதுவா களிமண்ண பக்குவமா எனக்குத் தேவையான மாதிரி நான் பெசைஞ்சுக்குவேன். ஏனென்றால் நான் அந்தக் களிமண் சிலையில நுணுக்கமான வேலைகளைச் செய்யனுங்கறதனால ரொம்ப மிருதுவா பக்குவமா பெசைஞ்சுக்குவேன். 'Die' ல போட்டு பொம்மை மாதிரிகளைச் செய்யறவங்க அந்த அளவுக்குப் பக்குவமாச் செய்யறதில்ல. இது ரெண்டுக்கும் சின்னதா வித்தியாசம் இருக்கும்.

***18. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?***

போதுமானது.

***19. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?***

நான் செய்யற இந்தத் தொழில் தற்காலத்துக்கானதுதான். சட்டி, பானை செய்யறதுதான் இதுக்கு அடிப்படை. அதிலிருந்துதான் தற்காலத்துத் தேவைக்கு ஏத்தமாதிரி இந்தத் தொழில நான் செய்திட்டு வர்றேன். இதுக்கு அடுத்தடுத்துப் பொருள் உற்பத்தியில வேணும்னா மாற்றம் நடந்திருக்கே தவிர உற்பத்திக் கருவியில் இன்னைக்கும் இந்த 'Plast of Paris' Die தான் அடிப்படை.

**20. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

நவீன தொழில்நுட்பத்தினை உள்வாங்கி தேவைக்கு ஏற்றபடி உருவாக்கிப் பொருள்களைப் பயன்படுத்துவது என்பது சந்தோஷமான விஷயமாக இருந்தாலும் அதுல நமக்குன்னு வழிவழியா இருந்து வர்ற சில அடிப்படை விஷயங்களை மறந்துடக்கூடாது.

**21. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள்கள் எவ்வகையில் மாறுபட்டது?**

மண் பொம்மைகள கொலுவில் வைக்கறதுங்கறது மரபானது. கொலு வைக்கறது எப்படிக் காலங்காலமாக இருந்து வருகிறதோ அதுமாதிரி அதுல மண்பொம்மைகள் வைப்பதும் தொடர்ந்து வருகிறது. நவீன உலகத்துல வேற பொருள்ல அழகழகான பொம்மைகள் அதிகமா வந்தாலும் மண் பொம்மையத்தான் கொலுவுக்கு அதிகமா வாங்குறாங்க.

**22. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

நான் செய்யிற பொம்மைகள் ரொம்பப் புடிச்சிபோயி அவங்களாகவே வீடுதேடி வந்து வாங்குவாங்க. அவங்கதான் எங்களுக்குத் தெரிஞ்ச வாடிக்கையாளர்கள். மத்தபடி மொத்தத்துல காதிகிராப்ட் மாதிரியான கடைகளுக்குக் குடுப்பதுமுண்டு.

**23. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

விற்பனை செய்யறதும் வீட்லயேதான். வீட்டுக்கு வந்து வாங்கிட்டுப் போற வழக்கமான வாடிக்கையாளர்களும் நெறய இருக்கறாங்க. அவங்களுக்குச் செய்து கொடுக்கறதே போதுமானதா இருக்குது. அதுமட்டுமில்லாம பெரிய அளவுள இதே தொழிலா எடுத்து செய்ஞ்சா கடை போடலாம். நான் அப்படிச் செய்யறதில்ல. ஓய்வு நேரங்கிடைக்கும் போதுதான் இதுமாதிரியான கொலு பொம்மைகளைச் செய்வேன்.

**24. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

ரெண்டு விதமான விற்பனையும் உண்டு.

**25. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

மொத்த விற்பனையில நிலையானது. சில்லறை விற்பனையில பேரம் பேசி வாங்கிட்டுப் போகும் வாடிக்கையாளர்களும் உண்டு. தானியம் கொடுத்து வாங்குறது அந்தக் காலம், இப்ப இல்ல.

**26. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இல்லை.

**27. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மொராசி) செய்திருக்கிறீர்கள்?**

யாருக்கும் செய்யல.

**28. எந்தச் சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

யார் யாரெல்லாம் கொலு வக்கிறாங்களோ அவங்களெல்லாம் வந்து வாங்குவாங்க. பிராமணர்கள் மட்டுந்தானில்ல. நடுத்தர குடும்பத்துல இருக்கும் எல்லாரும் வந்து வாங்குவதும் உண்டு.

**29. ஊர்ச்சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ச்சடங்கு செய்யும்போது தனியான மரியாதையோ, கட்டாயமோ நமக்குக் கிடையாது. மண்ணால சாமி சிலை ஏதாவது செய்யணும்னா மண்வேலை செய்யறவங்க என்பதால நம்மள நாடிவந்து செய்யச் சொல்லுவாங்க. நானும் செய்து குடுத்துட்டு அதுக்கான காச வாங்கிப்பேன். இது தொழில் ரீதியானதுதானே தவிர மற்றபடி ஏதுமில்லை.

**30. சடங்குப்பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

இல்லை.

**31. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

தெலுங்கு பத்தர்களுக்கு உள்ளேயே திருமண உறவை வச்சிக்குவோம்.

**32. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

மேல்மலையனூர் அங்காளம்மன்.

**33. உங்களுடைய குலதெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

வருஷத்துக்கு ஒரு முறை மேல்மலையனூர் கோயிலுக்குக் குடும்பத்தோடு போய் வருவதுண்டு. வீட்ல விசேஷம் செய்யனும்னாலும் குலதெய்வத்தக் கும்பிட்டுட்டுத்தான் செய்வோம்.

**34. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

பத்தர். நான் சென்னையிலயே வாழ்ந்துட்டதால கதை, விடுகதை எல்லாம் எனக்கு அவ்வளவா தெரியாது.

'பக்தர்' என்று சொல்வதுதான் சரியாக இருக்கும். ஏனென்றால் 'பத்தர்' என்ற சொல் பொற்கொல்லரைக் குறிக்கும் சொல்லாக இருக்கின்றது. ஆகவே குயவரைக் குறிக்கும் பட்டப் பெயரானது 'பக்தர்' என்றே வழங்கப்பட்டு

பின்னாளில் 'பத்தர்' என்று வேணால் மருவியிருக்கலாம். அதே மாதிரி சேலம் வட்டாரத்துல 'செட்டியார்' என்ற பட்டப்பெயரைக் குயவர்கள் பெற்றிருக்கிறார்கள்.

'கு' என்பதற்கு 'மண்' என்று பொருள் சொல்வர். தவிர்த்து சிவனும் சக்தியும் உலகத்தின் முதன்மை. அவர்களின் சிருஷ்டிப்பே உலக உயிரினங்கள் அனைத்தும். அதுபோல் மண்ணால் சிருஷ்டிப்புத் தொழிலைச் செய்பவன் குசவன். அதற்கான பக்க வேலைகள் செய்து பலம் சேர்ப்பவள் குசத்தி. மேற்கூறிய இரண்டும் படைத்தல் தொழிலை மையமிட்டது. ஆனாலும், 'வாணிபச் செட்டியார்', 'நாட்டுக்கோட்டைச் செட்டி' என்று தொழில் ரீதியான பிரிவினையில் உள்ளவர்களும் 'செட்டியார்' என்ற பெயரால்தான் அழைக்கப்படுகின்றார்கள். ஒரே மாதிரியான பட்டப்பெயர் பல தொழில் செய்பவர்களுக்கு இருந்திருக்கின்றது.

| | | | |
|---|---|---|---|
| **1.** | பெயர் | : | கதிர்வேல் உடையார் **15** |
| | வயது & பாலினம் | : | 78, ஆண் |
| | கல்வித்தகுதி | : | இல்லை |
| | ஊர் | : | லாயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14 |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 04.06.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

எனக்குச் சொந்த ஊர் வாச்சனூர். வந்தவாசி வட்டம். என்னோட சித்தப்பாவும் சின்னம்மாவும் 1945 வாக்குல சென்னையில இருந்தாங்க. அவங்களுக்குப் புள்ள குட்டி இல்ல. அதனால என்ன இங்கக் கூட்டிட்டு வந்துட்டாங்க. அதுலேர்ந்து நான் இங்கே வளர்ந்து இங்கேயே தங்கிட்டேன்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

கிட்டத்தட்ட அறுபது வருஷமா செய்துட்டு வர்றேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

பரம்பரைத் தொழில்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட சித்தப்பா பழனி உடையாரிடமிருந்து கற்றுக் கொண்டேன். எனக்கு அப்ப வயசு பதினஞ்சு.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

என் அண்ணன் மகன் கன்னியப்பன். என்னோட மச்சானுகள் பரமசிவம், கோவிந்தசாமி.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

உழைப்புதான் மூலதனம்.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, செம்மண்ணு, சவுடு மணலு, வைக்கோல், நெல்பதரு, தவிடு, சவுக்கு கட்ட, வறட்டி.

**9. எந்தெந்த பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

எல்லாத்துக்கும் அடிப்படை களிமண்தான். அந்தக் களிமண்ணோட தரத்தப் பொறுத்து அதுக்குத் தகுந்த மாதிரி மணல் சேர்த்துப் பெசியணும். அப்பதான் பொருள் சூளயிடும்போது பொழைக்கும். இல்லன்னா இல்ல. ரொம்ப களிப்பான வண்டல் மண்ணாயிருந்தா அதுங்கூட சவுடு மணல் சரிபாதி கலக்கணும். கொஞ்சம் மணல் கலந்த களிமண்ணாயிருந்தா அப்படியே உபயோகப்படுத்தலாம். பெருங்கல்லு இருக்கற களிமண்ணா இருந்தா அந்த கல்லுங்கள பொறுக்கிட்டு அப்புறம் ஊற வைக்கணும். இதெல்லாம் சக்கரத்துல செய்யற மெலிசான பொருளுக்குதான். மத்தபடி பூ தொட்டி, அடுப்பு, ரஞ்சிகம் மாதிரியான பொருளுக்கெல்லாம் களிமண்ணு கூட நெல்லு கூளம், பதரு, தவுடு இதெல்லாம் சேர்த்து பெசஞ்சி ஊறவச்சி அப்புறம் பயன்படுத்தலாம். இதுக்கு களிமண்ணு எந்தத் தரத்துல இருந்தாலும் பரவாயில்லை. ஆனா பெருங்கல்லு இருக்கக் கூடாது.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

அவ்ளோ லேசுல நாம நெனக்கிற மாதிரியான மண்ணு, தொழில் செய்யறதுக்கு ஏத்தமாதிரி கெடைக்காது. நாம மண்ண நேர்ல பார்த்தும் எடுக்க முடியாது. ஏன்னா மண்ணு எடுக்கற எடம் பக்கத்துல ஏதும் இல்ல. வண்டிக்காரங்கிட்ட சொல்லித்தான் வாங்கறம். அவன் எங்கிருந்து எடுத்து வர்றானோ தெரியாது. அதனால கெடக்கிற மண்ண நாமதான் தொழில் செய்யறதுக்கு ஏத்த மாதிரி கலவ செஞ்ய்ச்சிப் பதப்படுத்திக்கணும்.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

வெய்ய நல்லா காயிற எல்லா நாள்லயும் வேல செய்யலாம். மத்த நாள்ல கொஞ்சம் மந்தமாத்தான் இருக்கும்.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? அவற்றை எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

மண்வெட்டி, கலவெட்டி, சல்லடை, சுத்தி, சக்கரம், தட்டுக்கல்லு, தட்டுப்பலகை, ஊசி, கொடுவாள்.

**13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

அகல், கட்ரா (அய்யர்களுக்கானது), உழக்குப்பானை, கல்யாணச் சாமான்கள், கல்ச்சட்டி, குழம்புச்சட்டி, தண்ணிப்பானை இதெல்லாம் சக்கரத்துல செய்யற வேலை. கையால செய்யற வேலன்னா பிள்ளையார் செய்யறது. தண்ணித்தொட்டி, அடுப்பு, ரஞ்சகம் செய்யறது. எது தேவைன்னு மக்கள் கேட்கறாங்களோ அத நான் செய்ஞ்சி தர்றேன்.

**14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

உண்டு. அத பொம்பளங்கதான் செய்வாங்க. பொருளு ஈரமா இருக்கும்போதே கொந்து கோலால வரைவாங்க. அப்புறம் அதுக்கு மேல செம்மண் பூசுவாங்க.

**15. பொருள் உற்பத்தியில் உங்களுக்கான பாணி என்ன?**

அதுபத்தித் தெரியல.

**16. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழு நேரமும் இதே தொழில்தான். வேற தொழில் ஏதும் செய்யல.

**17. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

நானும் என்னோட சம்சாரமும்தான் செய்வோம்.

**18. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

இந்தத் தொழில்ல ஆம்பளக்கும் பொம்பளக்கும் சமமான வேலபளு. ஆம்பள செய்யறதுல மும்முரம் காட்னா, பொம்பளங்க அத பத்தரமா பதப்படுத்தி எடுத்து வக்கிறதுல மும்முரம் காட்டுவாங்க. அவங்க இல்லன்னா இந்த தொழிலே செய்ய முடியாது.

**19. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

போதுமானதாக இருக்கு.

**20. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக்கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

பேரிங் சக்கரம் உபயோகப்படுத்தறேன். மத்தபடி இன்னும் மோட்டார் சக்கரத்துக்குப் போகல.

**21. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

உலகமே சுருங்கிப் போச்சி. எல்லாம் சின்னச்சின்ன பொருளா, உடையாததா, பளிச்சுனு கேக்கறாங்க. அதான் நாகரிகம்னு சொல்றாங்க. இதுல நான் என்ன சொல்ல?

**22. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?**

என்னோட கைவேல என்னத் தனியா காட்டிக்குடுக்கும். அதான் என்னோட அடையாளம்.

**23. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

யாருன்னு குறிப்பிட்டுச் சொல்ல முடியாது.

**24. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

அதிக நடமாட்டம் இருக்குற ஜங்க்ஷனா பார்த்துக் கடை போடணும். இப்ப நாங்க மயிலாப்பூர் கச்சேரி ரோடு மார்க்கெட் பக்கத்துல கடை போட்டிருக்கோம்.

**25. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

சில்லறை விற்பனைதான்.

**26. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

நிலையானதுதான். ஆனா பெரும்பாலும் பேரம் பேசுவாங்க. தானியம் தர பழக்கமெல்லாம் சென்னையில இல்ல. அதுக்கான முகாந்திரமும் இங்க இல்ல.

**27. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இல்லை.

**28. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

நாங்க எந்தச் சாதியினருக்கும் தனியா ஏதும் வேல செய்யல.

**29. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பறையர், நாயக்கர்கள், செம்படவர்கள்தான் அதிகமா வாங்குவாங்க. இதக்கூட எப்படிச் சொல்றேன்னா, சாலுகரகம் வாங்க வருவாங்க அத வச்சி சொல்றன்.

**30. ஊர்ச்சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

தனிப்பட்ட முறையில அப்படி எதுக்கும் போனதில்ல.

**31. சடங்குப் பொருள்களை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

உண்டு. அதுல ஒரு கணக்கிருக்கு. அதாவது,

| சாதி | பானைகள் | எழுதுதல் | பாலிகை | மடக்கு | அகல் | ஹோம குண்ட சட்டி | சொப்பு | கலவோடு | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரிஜன் | " | ✓ | 5 | 5 | 11 | - | - | - | 23 |
| நாயுடு | பெரிய பானை - 1 சின்ன பானை - 1 முடா - 1 | ✓ | 5 | 5 | 9 | 1 | - | - | 23 |
| ஆச்சாரி | கலவோடு - 32 குடுவை - 32 மூடி - 32 | நாலு பக்கம் 4 கலவோடு நாலுபான வெள்ளை அடிச்க வக்கணும் 4 மூடி வைக்கணும் | 5 | 1 | 32 | 1 | - | 32 | 135 |
| குயவர் | குட பல்லா - 1 | - | 5 | 1 | - | 1 | - | - | 7 |
| பிராமின் | 52 கட்ரா | × | 5 | 2 | - | 1 | - | - | 60 |
| முதலியார் | பெரிய பானை - 1 சின்ன பானை - 1 முடா - 1 | × | 5 | 2 | 9 | 1 | - | - | 20 |

***32. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?***

*எங்க சாதிக்குள்ளயே அதாவது மண் வேல செய்யற குலால சாதிக்குள்ளேயே பொண்ணு குடுத்துப்போம். பொண்ணு எடுத்துப்போம். அதுலயும் தமிழ்க் குலாலரா இருக்கணும். சிவக்கோத்திரமா இருக்கணும்.*

***33. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?***

*கன்னியம்மாள். வாச்சனூரில் கோயில் இருக்கிறது. சமீபமா என்னோட பேரங் கல்யாணத்துக்கு அங்க போயிதான் சாமி கும்பிட்டுட்டு வந்தோம்.*

***34. உங்களுடைய குலதெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

*உண்டு. வீட்ல விசேஷமுன்னா குலதெய்வத்த கும்பிட்டு ஆரம்பிப்போம். அப்போதான் வழிபாடு செய்வோம். அதாவது ஏழு கன்னியம்மாள், விநாயகர் ஒண்ணு எட்டு, பச்சையம்மாள் ஒண்ணு ஒன்பது, மொத்த இந்த ஒன்பது சாமிக்கும் ஒன்பது குடுவையில பொங்கல் வச்சி ஒன்பது தேங்கா பழம் வச்சி தனித்தனியா ஒன்பது படையல் போடுவம்.*

***35. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

*சாதி குயவர், பட்டபேர் 'உடையார்', கதை, பழமொழி எல்லாம் எனக்குத் தெரியாது. கிராமத்துல சொல்லிக் குடுப்பாங்க. ஆனா இங்கெல்லாம் யாரும் சொல்லிக் குடுக்கிறதில்ல.*

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | ஜெயராமன் உடையார் **16** |
| | வயது & பாலினம் | : | 65, ஆண் |
| | கல்வித்தகுதி | : | ஆறாம் வகுப்பு |
| | ஊர் | : | சாலியர் பேட்டை, பொன்னேரி, திருவள்ளூர் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தெலுங்கு & தமிழ் |
| | சாதி & கிளைச்சாதி | : | உடையார், விஷ்ணுகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டத் தொழில் |
| | களஆய்வு நாள் | : | 02.06.2010 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

நான் பொறந்து வளர்ந்ததெல்லாம் இதே ஊர்தான். ஆனா எங்க அப்பா இருந்தது காஞ்சிபுரம் பக்கத்துல 'எதட்டிமோடு' என்கிற கிராமம். எங்கம்மா இந்த உரு. எங்கம்மாவக் கல்யாணம் பண்ணிகின்னு இதே ஊர்ல வந்து நிரந்தரமா தங்கிட்டாரு. எதட்டிமோட்ல அப்ப 60வது தலக்கட்டு இருந்ததாகவும் எல்லாரும் பிரிஞ்சி அவங்கவங்க பொழைப்பு பார்க்க சென்னைப் பக்கம் வந்துட்டாங்க அப்டின்னும் எங்கப்பா சொல்வாரு.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

1967-ல் எனக்குக் கல்யாணமாச்சி. அதுக்கப்புறம் இரண்டு வருஷம் கழிச்சி இந்த வேலைய முழுமூச்சா செய்ய ஆரம்பிச்சேன். அதுக்கு முன்னாடி லேசா அகல் மாதிரி சின்னச்சின்ன பொருள் செய்வேன். பெரிய வேலையெல்லாம் செய்யத் தெரியாது. அப்புறம் ஒண்ணு ஒண்ணா கத்துக்குன்னு இப்பவெல்லாம் எல்லா பொருளும் செய்வேன். இன்னும் தொழில் செஞ்சிட்டுதான் இருக்கேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

பூர்வீகமான தொழில் இதுதான். வேற தொழில் தெரியாது.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

எங்கப்பாகிட்ட கத்துக்கினேன். அப்பா பேரு ஆறுமுக உடையார். நான் நல்லா வெவரந்தெரிஞ்சி பெரிய பையனா ஆனப்புறந்தான் எனக்குத் தொழில் கத்துக்குடுத்தாங்க.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

நான் யாருக்கும் கத்துத் தரல. என்ன யாரும் கேக்கவுமில்ல. அதலயும் சொல்லணும்னா யாரும் கத்துக்க முன்வரல. அதுதான் உண்மை.

**7. தொழிலுக்கான மூலதனம் என்ன?**

கட்ட, வரட்டி, வைக்கோல் இந்த மூணும் காசு குடுத்து வாங்கணும். அதே மாதிரி மண்ணு அடிச்சிகிட்டு வர்றதுக்கு வண்டிக்கு காசு குடுக்கணும். இதான் இந்தத் தொழில்ல வக்கற மொதலு. வேறொன்னுமில்ல.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, சவுடல் (மணல்), செம்மண்ணு, சாம்பல், கல்சட்டிக்கு சலிச்சி எடுத்த பெரிய கல்லு, கட்ட, வரட்டி, வைக்கோல்.

**9. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

களிமண்ணக் காயவச்சி ஊறவச்சி பொருள் செய்யறதுக்குத் தகுந்தா மாதிரி சவுடல் மணல் சேர்த்து ஒண்ணுக்கு மூணு முறயா மெறிச்சி எடுத்து பொருள் செய்ய வேண்டியதுதான். சக்கரத்துல செய்யற எல்லா பொருளுக்கும் இப்படி. ஆனா கையால செய்யற சாடி, கோழி கூண்டு, அடுப்பு, மாட்டுத் தொட்டி, குதிர மாதிரியான பொருள் செய்யணும்னா களிமண்ணக் காயவச்சி அத ஊறவச்சி அதுங்கூட கூளம் சேர்த்து மெறிச்சி ரெண்டு மூணு நாள் ஊறவச்சி அதுக்கப்புறம் எடுத்துப் பொருள் செய்வோம்.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

அதெல்லாம் ஏதும் இல்ல. நாங்க கலெக்டர்கிட்ட பர்மிஷன் வாங்கி எடுக்கறோம். சங்கடமேதும் இல்ல.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

தை மாசத்துல இருந்து ஆவணி மாசம் வரைக்கும் அதிகமா செய்வேன். மத்த நாள்ல கொஞ்சமா செய்வேன். ஏன்னா பொருள் சீக்கிரமா காயாது. சூள வக்க முடியாது அதனால.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

சட்டி, பானை செய்யற சக்கரம், அத தட்டறதுக்குப் பலகை, கல்லு, பொருள அறுத்தெடுக்குற ஊசி, டிசைன் போடறதுக்குக் கொந்துகோல்,

செம்மண் பூச துணி, அதத் தேய்க்க மீன்வல பஞ்சி, சூள வக்கிறப்ப கட்ட நறுக்கி வக்கக் கத்தி அவ்ளோதான்.

***13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?***

பானை, சட்டி, பருப்புச்சட்டி இந்த மூனுரகம்தான் அதிகமா செய்யறது. பானையில் சின்னது பெருசா 6 ரகம். 1/2 படி, 3 ஆழக்கு, ஒழக்கு, 1/2 ஆழக்கு, 1 படி, 2 படி அப்படின்னு செய்வேன். சட்டியில 4 ரகம். பருப்பு சட்டியில 3 ரகம் செய்வேன். இது இல்லாம யாராவது விரும்பிக் கேட்டா பூச்சாடி, உண்டி, சொப்பு இதெல்லாம் செய்வேன்.

***14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?***

செய்வோம். பளபளன்னு இருக்கறதுக்கு செம்மண்ணு பூசுவோம். அப்புறம் வீட்ல பொம்பளங்க கொந்துகோல் வச்சி பான கழுத்துல கோடு போடுவாங்க. அப்பறம் அதலேயே மூக்குபொடி டப்பியோட மூடிய வச்சி வட்ட வட்டமா அலங்காரம் பண்ணுவாங்க. இதுக்கெல்லாம் மேல சக்கரத்துல இருக்குற அப்பவே பானையோட கழுத்துல ஒதட்டுல கையால நாலஞ்சு கோடு நான் போடுவேன். அது பார்க்க அழகா இருக்கும்.

***15. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?***

நான் வருஷம் பூரா இதே வேலயத்தான் செய்துட்டிருக்கேன்.

***16. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?***

நான், என் சம்சாரம் இரண்டு பேருதான் செய்வோம். வேற யாரும் இல்ல. எங்கப் பசங்கயெல்லாம் கிட்ட வரமாட்டாங்க. நாங்களும் செய்ய விட்றதில்ல.

***17. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?***

நான் மண்ண ஊறவச்சி மெறிப்பேன். அத சக்கரத்துல வச்சி பொருளு அறுப்பேன். அதத் தட்டுவேன். சூள அடுக்குவேன். அவ்ளோதான். எங்க வூட்டம்மா மண்ணு காயவைக்கும். அறுத்து வக்கிற பானை, சட்டிய காய வச்சி எடுத்து வைக்கும். செம்மண்ணு பூசும். சூள அடுக்கறதுக்குப் பொருள கையில எடுத்துக் கொடுக்கும்.

***18. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?***

ம். போதுமானதாயிருக்கு. இல்லன்னாலும் ஒண்ணும் பண்றதுக்கில்ல.

**19. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக்கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

இல்ல. பேரிங் சக்கரத்துலதான் செய்யிறேன். கரண்டு சக்கரமெல்லாம் இன்னும் வாங்கல. ஆனா நான் தொழில் செய்த தொடக்கத்துல இடும்பம் போட்ட சக்கரத்துலதான் வேல செஞ்சேன்.

**20. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

அலுமினியம், பிளாஸ்டிக், சில்வர் இதெல்லாம் எல்லாரும் பயன்படுத்த ஆரம்பிச்சாட்டாங்க. நம்மூட்ல கூட அதிகமா மண்பாண்டம் உபயோகப்படுத்தறது இல்ல. காலம் அப்டி மாறிப்போச்சி. ஆனாலும் மண் பொருளுக்கு மவுசு கொறயாது. இனிமேல் கூடிட்டுதான் போவும்.

**21. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?**

ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு பொருள நல்லா அழகாச் செய்வாங்க. நான் பருப்புச்சட்டி நல்லா செய்வேன். மத்தவங்க பருப்புச்சட்டியவிட என்னது டாப்பா (Top) இருக்கும்.

**22. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

மெட்ராசுல இருந்து கேட்டு வர்றவங்கதான். மொத்தமா கேட்டு வருவாங்க. முன் பணம் கொடுப்பாங்க. நாம செஞ்சி சூள போட்டுட்டுப் போன் பண்ணா வந்து வண்டியில எடுத்துட்டுப் போயிடுவாங்க.

**23. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

நான் தனியா விக்கிறதில்ல. மொ.த்தமா ஏத்தறதோட சரி.

**24. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

நான் கொடுக்கறதெல்லாம் மொத்த விற்பனைதான். அயனாவரத்துல இருந்து வந்து எடுத்துட்டுப் போவாங்க.

**25. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

நிலையானதுதான்.

**26. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

ஏழெட்டு வருஷத்துக்கு முன்னாடி செஞ்சிருக்கேன். இப்ப சுத்தமா செய்யல. பெரிய காலனி, தோப்பு காலனி, சிட்லபாக்கம் ஊர்ல இருக்கற நாயக்கர், முதலியார், பறையர்க்கெல்லாம் செய்வோம். வருஷா வருஷம்

தானியம் கொடுப்பாங்க. பொங்கலாச்சின்னா வந்து பொருளு எடுத்தும் போவாங்க. மத்த நாள்ல யாரும் பெரும்பாலும் எடுக்கறதில்ல.

**27. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

இப்ப யாருக்கும் செய்யல. இதுக்கு முன்னாடி, நாயக்கர், முதலியார், பறையர், கணக்கர் இப்படினு எல்லோருக்கும் செய்திட்டிருந்தோம்.

**28. எந்தச் சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

பறையர். குழம்பு சட்டி, பருப்பு சட்டி முதலிய வகைகள்.

**29. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

எல்லாரயும் மாதிரி நாங்களும் போவோம். வருவோம். அவ்ளோதான். மத்தபடி எதுவுமில்ல. இது இல்லாம எதாவது சாமி உருவஞ்செஞ்சி கொடுக்கச் சொன்னா செய்து தருவேன். அதுக்கான காசு குடுத்துருவாங்க. மத்தபடி எதுவும் செய்யறதில்ல. கேட்கறதில்ல.

**30. சடங்குப் பொருளை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

| சாதி | பானைகள் | எழுதுதல் | மடக்கு | அகல் | பாலிகை | ஹோம குண்ட சட்டி | கை கரகம் | தூப கால் | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பறையர் | பெரிக 2+2 சிறிக 2+2 | ✓ | 4+4 | 5 | 5 | 1 | 1 | 1 | 32 |
| நாயக்கர் | பெரிக 2 சிறிக 2 | ✓ | 4+4 | 5 | 5 | 1 | 1 | 1 | 25 |
| நாயுடு | பெ 2+2 சி 2+2 | ✓ | 4+4 | 5 | 5 | 1 | 1 | 1 | 32 |
| முதலியார் | பெரிக 1 சிறிக 11 | × | 2 | 5 | 5 | 1 | 1 | 1 | 18 |
| கணக்கர் | பெரிக 2 சிறிக 2 | × | 4 | 5 | 5 | 1 | 1 | 1 | 22 |
| பேரி செட்டியார் | கலசம் 9 பானை 1 சாலு 3 | கண்ணாம்பு மட்டும் | 2 | 9 | 5 | 1 | மூக்கு மொந்தை - 1 | - | 31 |

**31. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

மண்வேல செய்யற உடையாரு யாராயிருந்தாலும் அவங்ககூட பொண்ணு குடுத்து பொண்ணு எடுக்கற சம்பந்தம் வச்சிப்போம். அதுக்கு முன்னாடி தெலுங்கு பேசற உடையாருங்களுக்குப் பொண்ணு குடுத்துப் பொண்ணு எடுக்கறதில்ல. இப்ப எல்லாம் கலந்துருச்சி.

**32. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

மீஞ்சூர் முனீஸ்வரன். பெரிய்ய கோயில் இருக்கு.

***33. உங்களுடைய குலதெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

*வருஷத்திற்கு ஒருமுறை வழக்கமான திருவிழா. அது இல்லாம காதுகுத்தல், கல்யாணம்னா சாமி கும்பிடுவம்.*

*சாமிக்குக் கடாவெட்டி, சக்கரப் பொங்கல், வடை, அவல், பொறி, கடலை, சாராயம், கஞ்சா, சுருட்டு இல்லண்ணா பீடி, அப்புறம் பழ வகைங்க.*

***34. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

*உடையார்தான். கதை, பழமொழியெல்லாம் யாரும் எனக்கு சொல்லிக் கொடுக்கல.*

**17**

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | சுதாகர் |
| | வயது & பாலினம் | : | 31, ஆண் |
| | கல்வித்தகுதி | : | பத்தாம் வகுப்பு |
| | ஊர் | : | அகரம், திருவள்ளூர் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் & தெலுங்கு |
| | சாதி & கிளைச்சாதி | : | குலாலர், விஷ்ணுகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| | களஆய்வு நாள் | : | 03.06.2009 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னுடைய பூர்வீகம் வடக்கநல்லூர் கிராமம். இந்த ஊரு மெயின் ரோட்டுல இருக்கிறதால இட வசதி, போக்குவரத்து வசதியப் பார்த்து இங்க வந்து குடியேறிட்டோம். வேற எதுவும் காரணமில்ல.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் என்னோட பதினஞ்சு வயசுல இருந்து இந்த வேலய செஞ்சிட்டிருக்கேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்கு நல்லாத் தெரிஞ்சத் தொழில் அப்படிங்கறதால நான் இந்தத் தொழிலையே செய்துட்டிருக்கேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட அப்பாகிட்ட இருந்து கத்துக்கிட்டேன். நான் பத்தாவது படிச்சி முடிச்சதும் இந்த வேலய கத்துக்க ஆரம்பிச்சுட்டேன். அப்ப எனக்கு வயசு 15.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்தச் சமூகம்?**

நான் இதுவரைக்கும் 8 பேர்க்கு இந்த வேலய கத்துக் குடுத்திருக்கேன். இதுல உடையார் பசங்க 5 பேர். மீனவர் பையன் ஒருத்தன். முஸ்லீம் (லெப்பை) பையன் 2 பேர்.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

பொருள் செய்வதற்கான மூலப்பொருள்கள் வாங்குவதற்குத் தொடக்கத்துல சுமார் 20 ஆயிரம் ரூபாயாவது தேவைப்படும். அதுமட்டுமில்லாம இத்தொழிலுக்கு அடிப்படை விஸ்தாரமான இடம். அது இருந்தாதான் தொழில் செய்யறது

பத்தி யோசிக்கவே முடியும். இல்லேன்னா இல்ல. சென்னையில வசிக்கிற பலபேர் இடவசதியில்லாததாலதான் தொழில் செய்ய முடியாம உட்டுட்டாங்க.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், சவுடு மணல், கட்ட, சவுக்க செத்தல், வறட்டி, வைக்கோல், தண்ணி.

**9. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

சாதா அடுப்பு, தந்தூரி அடுப்பு, சாடி, பூந்தொட்டி, யானை, குதிரை, பொம்மை முதலான பொருள்களைச் செய்ய வேண்டுமானால் மணற்பாங்கான களிமண்ணைக் காய வைத்து, ஊறவைத்து அதனுடன் வைக்கோல் கூலத்தினைச் சேர்த்துப் பிசைந்து மூன்று அல்லது நான்கு நாள் ஊறவைத்த பிறகு பொருள்களைச் செய்ய வேண்டும். இது தவிர்த்துப் பிற பொருள்கள் செய்வதற்கு மிருதுவான களிமண்ணை எடுத்து நன்றாகக் காயவைத்து மாலை நேரத்தில் நீர் தெளித்து ஊற வைத்தல் வேண்டும். பிறகு விடியற்காலையில் அதைப் பிசைந்து சக்கரத்தில் வைத்துப் பொருள்களைச் செய்யலாம்.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

சொந்த ஊர் ஏரியில மண்ணெடுக்க விடுவதில்லை. சும்மா எடுத்துட்டிருந்த களிமண் இப்போ காசு குடுத்தாலும் கிடைக்கறதில்லை. தரமான மண் வேணுமின்னா காசு கூடுதலா குடுத்துதான் வாங்க வேண்டியிருக்குது. இப்போ அதுக்கும் ஏகப்பட்ட கெராக்கியா இருக்கு. இருந்தும் காசு கூடுதலா குடுத்தா அதுவும் கிடைக்கும்.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?**

வெயில் காலந்தான் உகந்தது. மற்ற நாள்லயும் செய்யலாம். ஆனா பொருள் சீக்கிரமா காயாதுங்கறதனால தட்ட முடியாது. அதனால கொறச்சலா செய்வோம். அவ்ளோதான தவிர மத்தபடி எல்லா நாள்லயும் வேல செய்வோம். இந்தத் தொழில்ல வெயில் காஞ்சா தட்டுச் சோறு, மழ பெஞ்சா பிச்ச சோறு.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

கடப்பாரை, மண்வெட்டி, சுத்தி, தட்டுப்பலகை, தட்டுக்கல்லு, சக்கரம், கரண்டு சக்கரம், (மைசூரிலிருந்து வரவச்சது), அருத்தெடுக்க ஊசி, மண்ணை வெட்டியெடுக்க கடப்பாரை, மண்வெட்டி, கூடை, மண்ண காயவச்சி அதப்

பொடியா நறுக்குவதற்குச் சுத்தி, பொருள் செய்யறதற்கு சக்கரம், அந்த பொருள பிரிச்சி அறுத்தெடுக்க ஊசி, அத ஒழுங்குபடுத்த தட்டுப்பலகை, தட்டுக்கல்லு, செம்மண் பூச துணி, அது காய்ஞ்சதும் அதத் தேய்க்க நாரு, அப்புறம் சூளவக்க கட்ட நறுக்கி போடறதுக்கு கத்தி ஒன்னு அவ்ளோதான்.

***13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?***

அதிகமாக அகல், தண்ணிப்பானை, பொங்கல் வைக்கக் குடுவை, தயிர் சொப்பு, காசு போடற உண்டி, பூந்தொட்டி, குழாய் பொருத்திக் கொடுக்குற தண்ணி சாடி, கல்யாண பானைகள், லவ் பேர்ட்ஸ் பல்லா, வெறகு அடுப்பு, இப்படியான எல்லா வகையான உருப்படிகளும் இங்க உற்பத்திப் பண்றோம். இது எல்லாவற்றையும் நானே செய்யறதில்லை. ஆள் வச்சிதான் செய்யறேன். நாலஞ்சு பேர வச்சி செய்யிறப்ப அவங்களுக்கு இதுல எந்த பொருளு நல்லா செய்யத் தெரியுமோ அத அவங்க செய்வாங்க.

***14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?***

உண்டு. சமயலுக்குப் பயன்படுத்தும் பொருள்கள், தண்ணி பிடிச்சு வக்கப் பயன்படுத்தற பொருள்களுக்கெல்லாம் பெரிய அளவில் அலங்காரம் ஏதும் செய்வதில்லை. சக்கரத்தில் செய்யும்போதே தலப்பிலேயும் கழுத்துலேயும் கோடு போடறது, கொந்து கோலால பானையோட கழுத்துக்குங் கீழே கொந்து போடறது. அப்புறம் செம்மண் பூசி பளபளப்ப உண்டு பண்றது. இது சாதாரணமா எல்லாத்துக்கும் செய்யறது. ஆனால் அலங்காரப் பொருள், அழகுப்பொருளுன்னு செய்யிறதுக்கெல்லாம் அலங்காரந்தான் வேலயே. அதுல அதிகமான கைவேல இருக்கும்.

***15. நீங்கள் முழுநேர கலைஞரா? பகுதிநேர கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?***

முழுநேரமும் இதே வேலதான். வேற வேல ஏதும் செய்யல.

***16. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?***

நானும் செய்யிறன். என்கூட நாலு கூலி வேலயாள் வச்சி அவங்களயும் வேல வாங்கறன். அதுல ரெண்டு பேர் சக்கரத்துல வேல செய்யறவங்க. மீதி ரெண்டு பேர் உதவியாளுங்க. நான் தொழில் செய்யும்போது எடுக்க புடிக்க என் பொண்டாட்டி உதவியா இருப்பாள்.

***17. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?***

களிமண்ணு காய வக்கிறது, ஊற வக்கிறது. பொருள்களைக் காய வக்கிறது, அதுக்கு செம்மண் பூசுறது, அது காய்ஞ்சதும் அத நாறால

தேய்க்கிறது, சூள அடுக்கும்போது பொருள கைக்கு எடுத்துக் குடுக்கறது இப்படியான வேலயெல்லாம் எங்க வீட்டம்மா செய்வாங்க. மத்த வேல எல்லாம் நான்தான் செய்வேன்.

***18. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?***

போதுமானதாக இருக்கிறது.

***19. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?***

செய்திருக்கேன். மோட்டார் சக்கரம் வாங்கி உபயோகப்படுத்தறேன். அதனால கொஞ்சம் வேலபளு குறைச்சலா இருக்கு.

***20. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?***

நகரத்துல நெருக்கமான எடம். அதுக்குத் தகுந்த மாதிரி சின்னச்சின்ன பொருளா உபயோகப்படுத்தறாங்க. அத நம்மகிட்ட கேக்கறாங்க நாமளும் செய்ஞ்சி தர்றோம்.

***21. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?***

அந்த வித்தியாசத்தெல்லாம் நான் பாக்கறதில்ல. தொழில் சுத்தமா இருக்கணும். பொருள் நல்லா இருக்கணும். அவ்ளோதான்.

***22. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?***

சென்னையில சட்டி, பானை கடை வச்சியிருக்கிறவங்கதான்.

***23. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?***

பொருள் வேணுங்கறவங்க வண்டி கொண்டுவந்து நம்ம வீட்லயிருந்தே சரக்க எடுத்துட்டுப் போவாங்க. நாம எங்கயும் கடபோடத் தேவயில்ல.

***24. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?***

மொத்த விற்பனைதான்.

***25. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?***

நிலையானது. காசுக்குதான் தர்றேன். தானியம் தர்றதுங்கரதெல்லாம் நான் கேள்விப்பட்டதுகூட இல்ல.

***26. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)***

இல்லை.

**27. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

இங்கவே ஊர்ல சில்லறைய விக்கற மாதிரியா இருந்தா யார் எவ்ளோ வாங்கறாங்கனு சொல்லலாம். நான் மொத்தமா ஏற்றுமதி செஞ்சிடறதால அதுபத்தி என்னால ஏதும் சொல்ல முடியாது.

**28. ஊர்ச்சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ச்சடங்குக்கு நான் போறதுமில்ல. என்ன யாரும் கூப்பிடுறதுமில்ல. சடங்குப் பொருளா இருந்தாலும் சரி, மத்த பொருளாக இருந்தாலும் சரி, என்கிட்ட கேட்டா அத செய்ஞ்சித் தருவேன். கையில காசு வாயில தோசங்கற மாதிரி.

**29. சடங்குப் பொருளைச் சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

உண்டு. ஒரேயொரு பொருளத்தான் அப்படி செய்வோம். அதுதான் கல்யாணப்பானை. ஏன்னா ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு மாதிரி கல்யாணம் செய்வாங்க. அதனால அவங்க கேட்கறமாதிரி வகைபிரிச்சி செய்து குடுத்துடறது. பெரும்பாலும் பொருளுங்க ஒன்னுதான். அவங்கவங்க அத வாங்குற எண்ணிக்கைதான் வேற வேற. அதாவது,

| சாதி | பானைகள் | எழுதுதல் | பாலிகை | அகல் | தூப கால் | ஹோம குண்ட சட்டி | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|
| ரெட்டி | மொ.சால் - 1<br>பானை - 1 | ✓ | 5 | 9 | 1 | 1 | 18 |
| முதலியார் | மொ.சால் - 1<br>பானை - 1<br>பானக தோண்டி - 2 | × | 5 | 9 | 1 | 1 | 20 |
| ஆசாரி | கலசம் - 4<br>மூடி - 4 | × | பாலி - 32<br>சொப்பு - 32 | 32 | 1 | 1 | 108 |
| மீனவர் | மொ.சால் - 1<br>பானை - 1<br>பானக தோண்டி - 2<br>கை கரகம் - 2 | ✓ | 5 | 9 | - | - | 20 |
| பறையர் | " | ✓ | 5 | 11 | 1 | - | 23 |
| நாவிதர் | " | ✓ | 5 | 8 | 1 | 1 | 17 |
| உடையார் | " | ✓ | 5 | 1 | 1 | 1 | 9 |

**30. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

எங்கப்பா காலகட்டத்துல தமிழ் உடையாரும் தெலுங்கு உடையாரும் சம்பந்தம் கலந்துக்க மாட்டாங்க. ஆனால் இப்ப அப்படியில்ல. தெலுங்கு உடையார் தமிழ் உடையார் இரண்டு பேருமே கலந்துட்டாங்க. பொண்ணு குடுத்துக்கறாங்க. பொண்ணு எடுத்துக்கறாங்க. இதுல சடங்கு செய்யறப்ப பையன் எந்த மாதிரியான சடங்குப் பழக்கம் செய்வானோ அதையே செய்வாங்க. பொண்ணு வீட்டுச் சடங்கு எடுபடறதில்ல.

**31. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

முனீஸ்வரன்.

**32. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

உண்டு. காதுகுத்தல், கல்யாணம் முதலான விசேஷம் செய்யும்போது சாமி கும்பிடுவோம். சாமி கும்பிடும்போதுக் களிமண்ணால முனீஸ்வரன் உருவம் செய்ஞ்சி அத நடுவீட்ல வச்சி சிங்காரிச்சி அங்க பதியம் போட்டு பம்பை உடுக்க அடிச்சி உயிர்கல கொண்டு வருவோம். பிறகு வீட்டுக்கு வெளியில உள்ள வாசல்ல வீடு மாதிரி மண்ணால் இரண்டு கட்டங்கட்டி அதுக்கு உள்ள அறுபத்து நாலு புடி மண்ணு புடிச்சி வைப்போம். இதுல ஒரு வீடு பால்பூசை முனீஸ்வரன். மற்றொரு வீடு காவுமுனீஸ்வரன் பால்பூச முனீஸ்வரனுக்கு அவல், பொறி, கடலை, 9 வகையான பழம், பூக்கள் முதலானதை வைப்போம். பால்பூச முனீஸ்வரனுக்கு வக்கறது போலவே காவு முனீஸ்வரனுக்கும் இதயெல்லாம் வச்சி அதுங்கூட பீடி, சுருட்டு, ஆட்டுக்கிடா காவு முதலானதைக் கூடுதலா செய்வோம்.

**33. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

எங்களுக்கான சாதிப் பட்டபேரு 'உடையார்'. அப்படிதான் ஊர்ல எல்லாரும் கூப்பிடுவாங்க.

| | | | |
|---|---|---|---|
| 1. | பெயர் | : | சுப்பிரமணி உடையார் **18** |
| | வயது & பாலினம் | : | 70, ஆண் |
| | கல்வித்தகுதி | : | இல்லை |
| | ஊர் | : | வடக்களூர், திருவள்ளூர் மாவட்டம் |
| | தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் & தெலுங்கு |
| | சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| | தொழில் | : | மண்பாண்டம் வனைதல் |
| | களஆய்வு நாள் | : | 29.05.2010 |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னுடைய பூர்வீகம் இலத்தூர் கிராமம். அது நெமிலிக்கு பக்கத்தில் இருக்கு. 60 வருடத்துக்கு முன்னால் அந்த ஊர்ல நான் இருந்தப்ப ரொம்ப வறுமையா இருந்துச்சி. அதனால என்னோட தாய்மாமன் என்ன இங்கக் கூட்டிட்டு வந்துட்டாரு. இங்கயேதான் வளர்ந்தேன். என்னோட தாய்மாமன் பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்னு இங்கயே நிரந்தரமா தங்கிட்டேன்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

ஐம்பது வருஷமா இந்த வேலைய செஞ்சிட்டு வர்றேன். இப்ப எனக்கு வயசு எழுபது. இருபது வயசுல வேலையை புடிச்சன் இது வரைக்கும் செஞ்சுட்டு வர்றேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

எனக்குத் தெரிஞ்சத் தொழில். காலங்காலமா இந்தத் தொழிலையே எங்க தாத்தா, அப்பா செஞ்சிட்டு வந்ததால அத அப்படியே நான் புடிச்சி செஞ்சிட்டிருக்கேன்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட தாய்மாமன் மற்றும் பெரியண்ணனிடம் இருந்து கத்துக்கிட்டேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

என் பையனுக்குக் கத்துக் கொடுத்தேன். வேற யாருக்கும் இல்ல. வேற யாரும் கத்துக்க முன்வரல.

**7. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண்ணு, செம்மண்ணு, மணலு, வேலிகாத்தான் முள்ளு, விறகுக்கட்டை, வைக்கோல், எருமுட்ட, சாம்பல்.

களிமண்ணு இந்த ஊர் ஏரியில எடுப்போம். செம்மண்ணு கொல்லைக்கு போயி கொண்டு வருவோம். விறகுக்கட்ட காசு குடுத்து வாங்குவோம். வைக்கோல், எருமுட்டயும் அப்படித்தான். ஆனால் இருபது வருஷத்துக்கு முன்னாடி எல்லாமே எணாமா கிடச்சது. இப்ப ஒவ்வொண்ணுக்கும் காசு கொடுக்க வேண்டியிருக்கின்றது.

***8. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?***

பானை, சட்டி முதலான பண்ட பாத்திரம் செய்யறதுக்குக் களிமண்ண பெரிய கல்லு இல்லாமப் பொறுக்கி எடுத்துட்டு ஊற வச்சி, மெறிச்சி அதுங்கூட மூணுல ஒரு பங்கு மணலு சேர்த்து உறவு சேற பெசஞ்சி வக்கணும். ஆனா அடுப்பு, தொட்டி, உறை, செலை செய்யறதுக்கெல்லாம் களிமண்ணு கூட நெல்லு, வைக்கோல், கூளம் சேர்த்து மெறிச்சி வச்சிடுவம். காலையில அத எடுத்து அப்படியே உருபடி செய்வோம். அப்பதான் லெகுவாக இருக்கும்.

***9. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?***

இடர்ப்பாடெல்லாம் எதுவுமில்ல.

***10. இத்தொழிலுக்கு உகந்த பருவ காலங்கள் எவை?***

எல்லா காலத்திலேயும் செய்வோம். வெய்யில் காலத்துல இன்னும் அதிகமா செய்வோம். மழைக் காலத்துல கொஞ்சமா செய்வோம்.

***11. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?***

சாண (எ) சக்கரம், குண்டு கல்லு, தட்டுக்கட்ட, தட்டுக்கல்லு, மண்சட்டி, துணி, கம்பி, தென்னங்குச்சி.

***12. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?***

முப்பது வருஷத்துக்கு முன்னாடி *30* மூட்ட புடிக்கிற பெரிய உறை, *20* மூட்ட புடிக்கிற உறை, *10* மூட்ட புடிக்கிற உறை, *1* மூட்ட புடிக்கிற சாலு, கலம் புடிக்கிற பெரிய பானை, எல்லாம் செஞ்சேன். ஆனால் இப்ப யாரும் அதெல்லாம் கேட்கிறதில்ல. அதனால நானும் அதச் செய்யறதில்ல. இப்ப

கேட்கறதெல்லாம் பருப்புச்சட்டி, கொழம்புச்சட்டி, மொடா, அடுப்பு, பல்லா, தோண்டி, இப்படியானதுதான். அதனால் இதுமாதிரியான உருப்படிகளத்தான் இப்ப நான் செய்யறேன்.

**13. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

செய்யறதுண்டு. சக்கரத்துல செய்யறப்பவே கழுத்துக் கோடு, தலைப்புக் கோடு எல்லாமே போடுவேன். அப்புறம் தட்டும் போது கழுத்து பகுதிக்கும் கீழே கோடு மாதிரி தட்டு வைப்பன். காய்ந்த பிறகு அது மேல செம்மண்ணு பூசினா நல்லா பளபளனு அழகா இருக்கும்.

**14. பொருள் உற்பத்தியில் உங்களுக்கான பாணி என்ன?**

அதெல்லாம் எனக்கு ஒண்ணும் தெரியாது. ஆனா ஒண்ணு எவ்ளோ பொருளுக்கு மத்தியில வச்சாலும் எம்பொருள நான் கரெக்டா கண்டுபுடிச்சி எடுத்துடுவேன். அதுதான் என்னோட வேலைப்பாடு பத்தி எனக்குத் தெரிஞ்சது.

**15. நீங்கள் முழுநேரக் கலைஞரா? பகுதிநேரக் கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழு நேரமும் இதே வேலதான். நிலம் ஏதும் கிடையாது. அதனால விவசாய வேலயும் செய்யக் கத்துக்கல.

**16. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

நான், என் மருமக, என் பேரன், நாங்க மூணு பேர்தான். எங்க வீட்ல இந்த வேலயச் செய்யறவங்க. பேத்தி படிக்கறா. அவள இந்த வேலயில சேர்த்துக்கறதில்ல.

**17. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

நான் சக்கரத்துல உருப்படி செய்வேன். அதத் தட்டுவேன். என் மருமக அதக் காயவச்சி பதமா எடுத்து செம்மண்ணு பூசி வைப்பா. அதுக்கப்புறம் நெறய உருப்படி சேந்த பிறகு ஒரு நாளைக்கு நாங்க எல்லாம் சேர்ந்து சூள போடுவோம். சூளயில எல்லாருக்கும் வேல இருக்கும். உருப்படிய கையில எடுத்து என் மருமக கொடுப்பா. நான் சூளயில அடுக்குவேன். என் பேரன் விறகு கட்ட அடுக்குவான். கடைசியா நான்தான் சேறு பூசி சூளையப் பத்தவைப்பேன். பொருள் விக்றதுல சில சமயம் என் பேரன் தெருத்தெருவா தலைமேல எடுத்தும்போயி விப்பான்.

**18. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

இல்லதான் என்னச்செய்ய? தெரிஞ்ச தொழில செய்வோமுன்னு செய்துட்டு இருக்கேன். வாய்க்கும் கைக்கும் சரியா இருக்கு.

**19. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

அதெல்லாம் ஏதும் நான் செஞ்சிக்கல. நான் உபயோகப்படுத்தறது அதே பழைய மண் சக்கரந்தான். வேற எதுவுமில்ல. சாலுகரகத்துக்கு அடிக்கிற பெயிண்ட் வேணா மாத்தியிருக்கேன். அதுக்கு முன்னாடி பெயிண்டெல்லாம் இல்ல. பச்சை எல, செம்மண்ணுதான் உபயோகப்படுத்தறது.

**20. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

காலங்கெட்டுப் போச்சு. நல்லது சொன்னா யார் கேக்கறாங்க. ஈஸியா இருக்குதுண்ணு சில்வரு, அலுமினியம், பித்தளன்னு போறாங்க. மண் பொருளோட மகத்துவம் யாருக்குத் தெரியுது.

**21. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

ஊர்ல இருக்குற எல்லாரும்தான். நாயுடு, வண்ணாரு, அம்பட்டரு, பாளையகாரரு, பறையரு, அய்யரு, துலுக்கரு, இப்படி எல்லாரும் வந்து வாங்கிம்போவாங்க.

**22. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

பெரும்பாலும் வீட்லயே வந்து வாங்கிம்போவாங்க. சில சமயம் என் மருமகளும் பேரனும் தலமேல எடுத்தும்போயி தெருத்தெருவா விப்பாங்க. மற்றபடி எப்பவாவது மொத்தமா கேட்டாங்கன்னா செய்ஞ்சிக் கொடுக்கறதும் உண்டு.

**23. சில்லறை விற்பனையா? மொத்தவிற்பனையா?**

பெரும்பாலும் சில்லறையாதான் குடுப்போம். எப்பவாவது ஒருமுறைதான் திருத்தணியில கடபோடற துலுக்கரு வந்து மொத்தமா கேட்பாரு. நானும் செய்ஞ்சிக் குடுப்பேன். மற்றபடி யாருக்கும் மொத்தமா குடுத்ததில்ல.

**24. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

சொல்ற வெலய யாரும் குடுக்கறதில்ல. கொறச்சிதான் குடுப்பாங்க. அத மனசுல வச்சி நாங்களும் 5, 10 கூடுதலா வச்சி வெல சொல்லுவோம்.

**25. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

இருபது வருஷத்துக்கு முன்னாடி எல்லாருக்கும் மேரை செய்ஞ்சேன். அப்ப வருஷத்து ஒருமுற களத்துல போயி நெல்லு, கேழ்வரகு, கம்பு எல்லாம் வாங்கி வருவோம். இப்ப யாருக்கும் மேர செய்யறதில்ல. யாரும் கேக்கறதுமில்ல. எல்லாரையும் கைமேல காசு குடுத்து பொருளு வாங்கிட்டுப் போவ சொல்ற மாதிரியாயிடிச்சி.

**26. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?**

இப்ப யாருக்கும் செய்யறதில்ல. இருபது வருஷத்துக்கு முன்னாடி மேர செஞ்சப்ப எல்லா சாதிக்காரங்களுக்கும் செஞ்சேன். அதலயும் நிலம் பயிர் வக்கிறவங்களுக்குதான் மேர செய்வோம். பயிர்வேல செய்யாதவங்க எந்த சாதிக்காரங்களா இருந்தாலும் அவங்களுக்கு மேர செய்யறதில்ல. அவங்க அப்பவே கைவெலக்கிதான் (கை விலைக்கு) பொருள் வாங்குவாங்க.

**27. எந்த சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?**

இந்த ஊர்ல, நாயுடு, பாளையக்காரர், பறையர், வண்ணார், அம்பட்டர், இருளர், குசவர் அப்படின்னு ஏழு சாதிக்காரங்க இருக்காங்க இதுல இருளர்தான் கொஞ்சம் அதிகமா வாங்குவாங்க. மத்தவங்க எல்லாம் ஒரே சீராதான் வாங்குவாங்க.

**28. ஊர்ச் சடங்கில் உங்களின் பங்கு என்ன?**

ஊர்ல ஜாத்திரை செய்யிறப்ப செல செய்ஞ்சி குடுப்பேன். அப்பறம் கன்னிமாருக்கு யாராவது நேந்துகிட்டவங்கக் கேட்டா பானை, குதிரை அப்படின்னு பொம்மைங்க செய்ஞ்சிக் குடுப்பேன். பிள்ளையார் சதுர்த்திக்கு பிள்ளையார் செய்து குடுப்பேன். திருஷ்டி பொம்ம செய்வேன். இதுல சாமி செல செஞ்சா அதுக்குக் கண்ணு தெறக்கற வேலைய குசவர்தான் செய்யணும். அப்படி செய்தா அதுக்குத் தனியா நம்மள மரியாதை செய்வாங்க ஊர்க்காரங்க.

**29. சடங்குப் பொருளை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?**

உண்டு. ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு எண்ணிக்கை. அதாவது,

| சாதி | கலர் | பானை | பாலிகை | அகல் | கை கரகம் | ஹோம குண்ட சட்டி | மடக்கு | குட விளக்கு | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| கவுண்டர் (நாயக்கர்) இடையர் பறையர் | ✓ | சாலு - 1<br>கரகம் - 1<br>குட பல்லா - 1<br>மூடி - 2 | 5 | 12 | 1 | 1 | 1 | 1 | 26 |
| ஆசாரி | × | கலசம் - 32<br>கலவோடு - 32<br>பானை - 2<br>பல்லா - 4<br>முடா - 1<br>மூடி - 5 | 5 | 32 | 4 | 1 | 4 | 1 | 123 |
| நாயுடு வண்ணார் சக்கிலி | ✓ | பெரிய பானை - 1<br>சிறிய பானை - 2<br>சிறிய பானை - 2<br>சிறிய பானை - 2 | 5 | 5 | 4 | 1 | 4 | 1 | 27 |
| செங்குந்த முதலியார் | × | சாலு கரகம் - 2<br>குடபல்லா - 2<br>மூடி - 2 | 5 | 5 | 2 | 1 | 1 | 1 | 21 |

***30. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?***

இப்ப, மண் தொழில் செய்யிறவங்க யாராயிருந்தாலும் அவங்களோட பொண்ணு குடுத்து பொண்ணு எடுத்துக்கறோம். ஆனா இருபது வருஷத்துக்கு முன்னாடி தெலுங்கு ஒடையருக்குப் பொண்ணு கொடுக்கறதில்ல. தமிழ் ஒடையருக்கு உள்ளவேதான் பொண்ணு குடுத்துப் பொண்ணு எடுக்கறது வழக்கம்.

***31. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?***

முனீஸ்வரன்.

***32. உங்களுடைய குலதெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?***

வழக்கமா வருஷத்துக்கு ஒரு முற செய்வோம். இடையில எதாவது காது குத்தல், கல்யாணம் மாதிரி விஷேஷம்னா அதுக்கு வேண்டி அப்போதைக்கி முனீஸ்வரன் சாமிய தயார் பண்ணி பொங்க வைச்சி சாமி கும்பிடுவோம். பீடி, சாராயம், ஆடு பலி கொடுக்கறது, பொங்கல் வக்கறது இவ்வளவுதான் சாமிக்கான படையல்.

***33. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?***

உடையார். கத, பழமொழி, விடுகதையெல்லாம் எனக்கு எதுவும் தெரியாது. எந்தொழிலாச்சு நானாச்சுன்னு இருப்பேன். படிக்காததால அதெல்லாம் தெரியல.

19

| | | |
|---|---|---|
| *1.* பெயர் | : | எ. மோகன் |
| வயது & பாலினம் | : | *48,* ஆண் |
| கல்வித்தகுதி | : | எட்டாம் வகுப்பு |
| ஊர் | : | 15வது குறுக்குத் தெரு,<br>2வது மெயின் ரோடு,<br>வெங்கடேஸ்வரா நகர்,<br>இராமாபுரம், சென்னை-89,<br>திருவள்ளூர் மாவட்டம் |
| தாய்மொழி & பேச்சுமொழி | : | தமிழ் |
| சாதி & கிளைச்சாதி | : | குயவர், சிவகோத்திரம் |
| தொழில் | : | மண்பாண்டம் செய்தல் |
| களஆய்வு நாள் | : | *15.03.2009* |

**2. உங்களுடைய பூர்வீக ஊர் எது? பூர்வீகம் பற்றிய கதை உண்டா?**

என்னுடைய பூர்வீகம் செய்யாறுக்கு பக்கத்தில் உள்ள எருமைவெட்டி என்கிற கிராமம். *35* வருஷத்துக்கு முன்னாடி நான் சென்னைக்கு வந்தேன். என்னோட தாய்மாமன் பாலகிருஷ்ணன் என்னை இங்குக் கூட்டிட்டு வந்தாரு. அவர் கூடவே இருந்து தொழில் பழகி நான் இங்கயே தங்கிட்டேன்.

**3. நீங்கள் எத்தனைக் காலமாக இத்தொழிலைச் செய்து வருகிறீர்கள்?**

நான் *30* வருஷமா இந்தத் தொழில் செய்திட்டிருக்கேன். என்னோட *13*ஆவது வயசுல இந்தத் தொழில் கத்துக்க ஆரம்பிச்சி அப்பத்திலிருந்து இன்னிக்கி வரைக்கும் இந்தத் தொழில்தான் செய்துட்டு வர்றேன்.

**4. இத்தொழிலைச் செய்வதற்கான காரணம் என்ன?**

இது என்னோட பரம்பரைத் தொழில்.

**5. யாரிடமிருந்து இத்தொழிலைக் கற்றுக் கொண்டீர்கள்? எப்போது?**

என்னோட தாய் மாமனிடமிருந்து கத்துக்கிட்டேன். அவர் பேரு பாலகிருஷ்ணன். எங்கக் குடும்பத்துல எனக்கு முன்னாடி இருந்த எங்கப்பா, தாத்தா என்று ரெண்டு தலைமுறையுமே இந்தத் தொழில் செய்யல. எங்க தாத்தாவுக்கு தாத்தா இந்தத் தொழில செய்திருக்கிறாரு. அதுக்கப்புறம் நான்தான் என் தாய்மாமன் வழியா இந்தத் தொழில் கத்துக்கிட்டு இப்ப செய்து வர்றேன்.

**6. நீங்கள் இத்தொழிலை யாருக்குக் கற்றுத் தந்திருக்கிறீர்கள்? அவர் எந்த சமூகம்?**

நான் யாருக்கும் இந்தத் தொழிலைக் கற்றுத்தரல. யாரும் கத்துக்க முன்வந்து என்னைக் கேக்கல.

**7. இத்தொழிலுக்கான மூலதனம் என்ன?**

'உழைப்பு'.

**8. இந்தத் தொழிலுக்குத் தேவைப்படும் மூலப்பொருள்களின் பெயர்கள் மற்றும் வகைகள்?**

களிமண், செம்மண், சாம்பல், சவுக்கச்சுள்ளி, வறட்டி, வைக்கோல், மணல்.

**9. எந்தெந்தப் பொருளுக்கு என்னென்ன மூலப்பொருள்கள் பயன்படுத்தப்படுகிறது?**

களிமண்ணக் காயவச்சி தேவையான மணல் சேர்த்து மெறிச்சி எடுத்து சக்கரத்துல போட்டு பொருள்செய்ய வேண்டியதுதான். மத்தபடி கையால செய்யிற அடுப்புக்குக் கொஞ்சம் சலசலப்பு மண்ணா எடுத்துப் பெசிஞ்சிக்க வேண்டியதுதான். இந்த ரெண்டு வகையில விதவிதமா பொருள் செய்ஞ்சிக்கலாம்.

**10. இம்மூலப்பொருள்கள் கிடைப்பதில் ஏதேனும் இடர்பாடுகள் உள்ளதா? அதை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

மீனம்பாக்கத்துக்குப் பக்கத்துல இருக்குற கொளப்பாக்கம் பகுதியில இருந்து களிமண் எடுத்து வர்றாங்க. அங்க நாம போயி மண் எடுத்து வர்றதில்ல. வண்டிக்காரங்ககிட்ட சொல்லிட்டா அவங்களே எடுத்துட்டு வந்துருவாங்க. அப்படின்னும்போது அவங்க எடுத்துவந்து தர்ற மண்ணை வச்சிதான் நாம வேலசெய்ய வேண்டி வருது. நமக்குப் பிடிச்சமாதிரியான மண் நமக்குக் கிடைக்கிறதில்ல.

**11. இத்தொழிலுக்கு உகந்த பருவகாலங்கள் எவை?**

இந்தத் தொழிலுக்கு உகந்த பருவம்னா அது வெயில் காலந்தான்.

**12. இத்தொழிலில் பயன்படுத்தப்படும் கருவிகள் யாவை? எங்கிருந்து பெறுகிறீர்கள்? அவற்றின் பெயர்கள்?**

கடப்பாரை, மண்வெட்டி, பாண்டில், சக்கரம், வலசல், திரிசல் துணி, தட்டுக்கட்டை, தட்டுக்கல், ஊசி, கொந்துகோல், கொடுவாக்கத்தி.

**13. இத்தொழிலில் எத்தனை வகையான பொருள்களை உருவாக்குகிறீர்கள்? அவற்றிற்கான நோக்கம் என்ன?**

குடுவை, ஆழாக்கு, ஆப்பசச்சட்டி, கடாய், தண்ணிப்பானை, லவ்பேர்ட்ஸ்பானை, கல்யாணப்பானைகள், அகல், அடுப்பு, அப்புறம் கேக்கறதுக்குத் தகுந்த மாதிரியான பொருள்களைச் செய்து தருவேன்.

**14. மண்பாண்டங்களை அழகுறுத்துவது உண்டா? எவ்வகையில்? எப்படி?**

கொந்துகோல் வச்சி டிசைன் பண்றது, செம்மண் பூசி செவப்பாக்குறது, இது ரெண்டும் பெண்கள் செய்யற வேல. சக்கரத்துல இருக்கும்போதே பானையோட தலைப்புல கீத்து போடறதுதான் என் வேல.

**15. பொருள் உற்பத்தியில் உங்களுக்கான பாணி என்ன?**

பாணி ஏதுமில்ல.

**16. நீங்கள் முழுநேரக் கலைஞரா? பகுதிநேரக் கலைஞரா? பகுதிநேரமாயின் வேறு ஏதாவது தொழில் செய்கிறீர்களா? அவ்வாறு பகுதிநேரமாக இத்தொழில் செய்வதற்கான காரணம் என்ன?**

முழுநேரமும் இதே வேலதான். வேற தொழில் எனக்குத் தெரியாது.

**17. இவ்வகையான பொருள் உற்பத்தியினைத் தனிநபராகச் செய்கிறீர்களா (அ) குழுவாகச் செய்கிறீர்களா?**

எங்க குடும்பத்துல இருக்குற எல்லாரும் செய்வோம். அதாவது நான், என் பொண்டாட்டி, பொண்ணு மூணு பேரும் செய்வோம்.

**18. இத்தொழிலில் யார் யார் என்னென்ன வேலை செய்கிறீர்கள்?**

பொம்பளைங்க ரெண்டு பேரும் களிமண் காயவச்சி மெறிச்சி தருவாங்க. அதப் பொருளா செய்ஞ்சி தந்தோம்னா பொம்பளைங்க அதக் காயவச்சி செம்மண் பூசி கொசு வலையால தேய்ச்சி எடுத்து அடுக்கி வைப்பாங்க. சூளை அடுக்கறப்ப கூட இருந்து உதவி பண்ணுவாங்க.

**19. இத்தொழில்வழி வருமானம் உங்கள் குடும்பத்திற்குப் போதுமானதாக இருக்கின்றதா?**

ம்., வருமானம் போதுமானதாக இருக்கிறது.

**20. தற்காலப் போக்கிற்கேற்ப உற்பத்திக் கருவியில் மாற்றம் செய்திருக்கின்றீர்களா?**

தற்காலத்துக்குத் தகுந்த மாதிரின்னா இப்ப நான் மோட்டார் சக்கரம் வச்சிருக்கணும். ஆனா நான் பேரிங் சக்கரந்தான் வச்சிருக்கேன். அத எதுல சேக்கறது. ரொம்ப பழசுன்னும் சொல்ல முடியாது. ரொம்ப புதுசுன்னும் சொல்ல முடியாது. இதான் நெலவரம்.

**21. தற்காலப் பயன்பாட்டுப் பொருள்கள் குறித்த தங்களின் கருத்து என்ன?**

மண்பொருள்ல சின்னச் சின்னப் பொருளத்தான் இப்ப எல்லாரும் எதிர்பார்க்கறாங்க. அதுதான் அழகா கைக்கு அடக்கமா வசதியா இருக்கு, இருக்குமுன்னு நெனச்சி கேக்கறாங்க. பெரிய பொருள யாரும் இப்ப கேக்கறதில்ல.

**22. பிற பயன்பாட்டுப் பொருள்களிலிருந்து உங்களுடைய உற்பத்திப் பொருள் எவ்வகையில் மாறுபட்டது?**

பொருள் வேணும்னு சிலர் நெனப்பாங்க. அழகான பொருள் வேணும்னு சிலர் நெனப்பாங்க. சென்னைல இருக்குற பெரும்பாலானவங்க பொருள் அழகா இருக்கணும்னுதான் நெனப்பாங்க. அதனால என் தொழில் சுத்தமா இருக்கும். பலர்து அதுமாதிரி சுத்தம் இருக்காது. பேருக்குப் பொருள் செய்து தருவாங்க.

**23. உங்களுடைய உற்பத்திப் பொருள்களுக்கான வாடிக்கையாளர் யார்?**

கோடம்பாக்கத்துல மண்பாண்ட விற்பனைக் கடை வச்சிருக்கிற கோவிந்தராஜ்தான் எங்கிட்ட ரொம்பக் காலமா மொத்தத்துல பொருள் வாங்கி சில்லரையா வித்துட்டிருக்கார். அவர்தான் என்னோட வாடிக்கையாளர். வீட்டோட சிலர் வந்து சில்லரையில பொருள் வாங்கிட்டுப் போறதும் உண்டு.

**24. விற்பனைக்கான இடங்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

விற்பனைக்கான இடம் என்னோட வீடுதான். அது மொத்த விற்பனையா இருந்தாலும் சரி. சில்லரை விற்பனையா இருந்தாலும் சரி. இங்கதான்.

**25. சில்லறை விற்பனையா? மொத்த விற்பனையா?**

மொத்த விற்பனையும் உண்டு. சில்லறை விற்பனையும் உண்டு. இதுல அதிகமானது மொத்த விற்பனைதான்.

**26. பொருள்களுக்கான விலையென்பது நிலையானதா? பேரம் பேசப்படுவதா? தானியத்திற்குத் தரப்படுவதா?**

மொத்த விற்பனையில் நிலையான விலை. சில்லரை விற்பனையில பேரம் பேசித்தான் வாங்கிட்டுப் போவாங்க.

**27. நீங்கள் குடித்தொழிலாளர்களா? (அதாவது பொருள்களைக் கொடுத்து ஊதியம் பெறாமல் வருடக் கடைசியில் கூலி பெறுவீர்களா?)**

நான் கிராமத்துல இருந்தப்ப எங்கச் சித்தப்பா, பெரியப்பா ரெண்டு பேரும் மேரை செஞ்சி பார்த்திருக்கேன். நான் செஞ்சதில்ல. இங்க எனக்கு மேரை செய்யிற மாதிரியான வாய்ப்பு கெடைச்சதில்லை.

***28. நீங்கள் எந்தெந்த சாதியினருக்குக் குடி ஊழியம் (மேரை / மெராசி) செய்திருக்கிறீர்கள்?***

நான் செய்யற இந்த வேலை ஊழியந்தான். நான் எல்லாருக்கும் இந்த வேலைய செஞ்சிட்டுருக்கேன். எந்த பேதமும் பார்க்கல. ஆனா மேரக்கி செய்ஞ்சதில்ல.

***29. எந்தச் சாதியினர் மண்ணாலான பொருள்களை அதிகப்படியாக வாங்குகிறார்கள்? யார் யார்? எவ்வகையான பொருள்கள்?***

நான்தான் பேதம் பார்க்கிறதில்லன்னு சொன்னேனில்ல. அப்புறமும் அப்படியே கேட்டா என்ன அர்த்தம்?

***30. ஊர்ச்சடங்கில் உங்களின் பங்கு என்ன?***

எருமைவெட்டி பாளையத்துக்குப் போனா பிடாரி, அரவான், துரியோதனன் முதலான சிலை செய்யறதுக்கெல்லாம் என்னதான் கூப்பிடுவாங்க. திருவிழா நடக்கறதுக்கு முன்னாடியே வெத்தலை பாக்கு வெச்சி ஊர்க்காரங்க எனக்குச் சொல்லிடுவாங்க.

***31. சடங்குப் பொருளை சாதிவாரியாக வகைப்படுத்திச் செய்வதுண்டா?***

பொருளெல்லாம் நான் ஒரேமாதிரியாத்தான் செய்வேன். பொருள் வந்து கேக்கறவங்க எந்த வகையில கேக்கறாங்களே அதுமாதிரி பிரிச்சி தருவேன். அதாவது,

| சாதி | பாவைகள் | வண்ணம் | மடக்கு | பாலிகை | அகல் | குட விளக்கு | கை கரகம் | மொத்த உருப்படி |
|---|---|---|---|---|---|---|---|---|
| இடையர் | " | ✓ | 1 | 5 | 9 | 1 | 1 | 19 |
| அகமுடைய முதலியார் | சாலு - 1<br>கரகம் - 1 | × | 2 | 5 | 11 | 1 | 1 | 22 |
| நாயக்கர் | " | ✓ | 2 | 5 | 11 | 1 | 1 | 22 |
| ஆச்சாரி | சொப்பு - 32<br>குயாளி - 32 | × | 5 | 5 | 32 | 1 | 1 | 108 |
| வண்ணார் | சாலு - 1<br>கரகம் - 1 | ✓ | 5 | 5 | 8 | 1 | பெ-2<br>சி-2 | 25 |
| அம்பட்டர் | சாலு - 1<br>கரகம் - 1 | ✓ | 5 | 5 | 8 | 1 | " | 25 |
| பறையர் | சாலு - 1<br>கரகம் - 1 | ✓ | 2 | 5 | 11 | 1 | கைகரகம் - 1<br>கொழும்புச் சட்டி - 1<br>அடுப்பு - 1 | 27 |

பறையர் மேளதாளத்துடன் வீட்டுக்கே வந்து சாலு கரகம் எடுத்துச் செல்வார்கள். மற்ற சாதிக்காரங்க அப்படியில்ல. வண்ணார், அம்பட்டர், ஆச்சாரி முதலானவர்களுக்கு ஊழியம் செய்தல் என்பது பதிலுக்குப் பதில். நமக்கு அவர்கள் ஊழியம் செய்தால் நாம் அவர்களுக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்பதுதான் முறை.

**32. உங்களுடைய திருமண உறவை எந்தெந்த சாதியினருடன் வைத்துக் கொள்வீர்கள்?**

தமிழ் பேசும் குயவர்களுக்குள்ளேயே பொண்ணு குடுத்துப் பொண்ணு எடுக்குற வழக்கம் இருக்குது. தெலுங்குப் குயவர்களுடன் உறவு வைக்கிறதில்லை.

**33. உங்களுடைய குலதெய்வத்தின் பெயர் என்ன?**

எல்லையம்மாள்.

**34. உங்களுடைய குல தெய்வத்திற்கு வழிபாடு செய்வதுண்டா? எப்போது? வழிபாட்டுச் சடங்குப் பொருள் என்னென்ன?**

செய்வோம். எங்களோட குல தெய்வம் காஞ்சிபுரத்துக்குப் பக்கத்துல இருக்குற கரண்டித்திருப்பனூர்ல இருக்குது. வருஷா வருஷம் அங்கப் போயிதான் பூசை போடுவோம். பால்பூசை தான். சக்கரைப்பொங்கல், சுண்டல், பழம், பஞ்சாமிர்தம் வச்சி படைப்போம்.

**35. ஊரில் உங்களுக்கான சாதி / பட்டப்பெயர் என்ன? அது குறித்த கதை, பழமொழி, விடுகதை முதலான வழக்காறுகள் ஏதேனும் உள்ளதா?**

உடையார். கதையெல்லாம் ஏதுமில்ல.

1. மூலப்பொருள்களும் கருவிகளும்
2. பொருள் உற்பத்தி
3. இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்கள்
    3.1. நீர்க்கலன்கள்
    3.2. அடுகலன்கள்
        3.2.1. அடுப்புகள்
    3.3. தானியக் கலன்கள் / பிற
    3.4. விளக்குகள் / பிற
4. அலங்காரப் பொருள்கள்
5. விளையாட்டுப் பொருள்கள்
6. பிற தொழிலுக்கான கருவிகள்
7. சடங்குப்பொருள்கள்

## 1. மூலப்பொருள்களும் கருவிகளும்



1. களிமண் காயவைத்தல்



2. களிமண் தரப்படுத்தல் (1)



3. களிமண் தரப்படுத்தல் (2)




4. சல்லடைச் சட்டி 1cm = 8cm



5. மண் அறவை எந்திரம்



6. இடும்பம்



7. கூர் சக்கரம் 1cm = 18cm



8. சுழல்தாங்கிச் சக்கரம் (Bearing Wheel) 1cm = 18cm



9. மின்சார சக்கரம் 1cm = 15cm



10. தட்டுக்கல் 1cm = 3cm



11. தட்டுக்கட்டை 1cm = 5cm



12. அச்சக்கோல் 1cm = 2cm



13. சுழல் முத்திரை 1cm = 1.5cm



14. மூங்கில் பட்டை 1cm = 1.5cm

## 2. பொருள் உற்பத்தி



15. பச்சை (1) 1cm = 4cm



16. பச்சை (2) 1cm = 4cm



17. உருப்படி 1cm = 4cm



18. மண்பாண்டச் சூளை



19. சேறு தயாரித்தல்



20. சூளை (2)



21. மண்பாண்டக்கடை



22. செங்கல் கட்டடல் 1cm = 9cm



23. செங்கல் தயாரிப்பு



24. பொம்மை வார்ப்பு 1cm = 6cm

## 3. இன்றியமையாத பயன்பாட்டுப் பொருள்கள்

### 3.1. நீர்க்கலன்கள்



25. தண்ணீர் சாடி 1cm = 25cm



26. தண்ணீர் தொட்டி 1cm = 25cm



27. தண்ணீர் பானை 1cm = 14cm



28. மொடா (குடம்) 1cm = 10cm



29. சொப்புக் குடம் 1cm = 14cm



30. தோண்டி 1cm = 10cm

## 3.2. அடுகலன்கள்



31. கருவாட்டுக் குழம்புச்சட்டி 1cm = 4cm



32. கூழ்சட்டி 1cm = 6cm



33. கறிக் குழம்புச்சட்டி 1cm = 4cm



34. களிசட்டி 1cm = 5cm



35. குழம்புச் சட்டி 1cm = 4cm



36. கல்சட்டி 1cm = 4cm



37. கல்சட்டி (உள்புறம்) 1cm = 4cm



38. பால் சட்டி 1cm = 6cm



39. பூசணிக்காய்ச் சட்டி 1cm = 6cm



40. குழிபனியாரச் சட்டி 1cm = 4cm



41. சலாசட்டி 1cm = 5cm



42. வானல் சட்டி 1cm = 4cm



43. ஆப்பச் சட்டி 1cm = 4cm



44. தோசை கல் 1cm = 3cm



45. சோற்றுப் பானை 1cm = 6cm



46. வடிதட்டு 1cm = 4cm



47. உலைமூடி 1cm = 4cm



48. தடச்சிப்பு 1cm = 4cm



49. சாணகை 1cm = 3cm



50. மடக்கு 1cm = 3cm



51. குடுவை 1cm = 4cm



52. மொந்தை 1cm = 5cm



53. சிப்பி 1cm = 4.5cm



54. கட்ரா 1cm = 3.5cm

### 3.2.1. அடுப்புகள்




55. செய்தொழில்சார் பட்டப்பெயர்



56. அடுப்புகள் (பச்சை)



57. சாதா அடுப்பு 1cm = 7.5cm



58. தொட்டி அடுப்பு 1cm = 8cm



59. மரத்தூள் அடுப்பு 1cm = 7cm



60. மரத்தூள் அடுப்பு (உட்புறம்) 1cm = 7cm



61. கரி அடுப்பு 1cm = 7cm



62. சாம்பிராணி அடுப்பு 1cm = 2cm



63. இரட்டை அடுப்பு (1) 1cm = 10cm



64 இரட்டை அடுப்பு (2) 1cm = 10cm

## 3.3. தானியக்கலன்கள் / பிற



65. ரஞ்சிகம் 1cm = 30cm



66. உறை 1cm = 40cm



67. குதிர் 1cm = 30cm



68. கோழிக்கூண்டு 1cm = 15cm



69. நீள்வட்டத்தொட்டி 1cm = 10cm



70. வட்டத்தொட்டி 1cm = 10cm

## 3.4. விளக்குகள் / பிற



71. அகல் 1cm = 2cm



72. தேங்காய் விளக்கு 1cm = 2cm



73. காமாட்சியம்மன் விளக்கு 1cm = 2cm



74. குத்து விளக்கு 1cm = 2cm



75. பஞ்சமுக விளக்கு 1cm = 2.5cm



76. தீபகலசம் 1cm = 3cm



77. விளக்கு கூண்டு 1cm = 8cm



78. எண்ணைப் பானை 1cm = 10cm

## 4. அலங்காரப் பொருள்கள்



79. பூந்தொட்டி 1cm = 7cm



80. பூச்சாடி 1cm = 5cm



81. விதைத் தொட்டி 1cm = 12cm



82. அலங்காரமரப் பூந்தொட்டி 1cm = 10cm



83. தொங்கு தொட்டி 1cm = 5cm



84. லவ் பேர்ட்ஸ் பல்லா 1cm = 3cm

## 5. விளையாட்டுப் பொருள்கள்



85. சொப்புகள் 1cm = 2cm



86. உண்டியல் 1cm = 6cm

## 6. பிற தொழிலுக்கான கருவிகள்



87. குமுட்டி 1cm = 10cm



88. மேள வட்டம்



89. மேள சட்டி 1cm = 6cm



90. மிருதங்கச் சட்டி 1cm = 8cm

## 7. சடங்குப்பொருள்கள்



91. பட்டாசுக் குழல் 1cm = 3cm



92. அக்கினிச் சட்டி 1cm = 6cm



93. நாட்டார் கோயில்



94. மதலம்பிள்ளை 1cm = 6cm



95. குதிரை, யானை 1cm = 20cm



96. மாடு 1cm = 8cm



97. அம்மன் 1cm = 10cm



98. திருஷ்டி பொம்மை 1cm = 8cm



99. பொங்கல் பல்லா 1cm = 6cm



100. சாலுகரகம் 1cm = 20cm



101. கரகம் 1cm = 5cm



102. அஸ்தி கலசம் 1cm = 5cm

# புழங்குபொருள் மரபு

## சங்க இலக்கியம் - கல்வெட்டு - களஆய்வு

முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**அ. கார்வண்ணன்**

மேற்பார்வையாளர்
முனைவர் **கோ. பழனி**
உதவிப் பேராசிரியர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005



தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
பரிதிமாற்கலைஞர் வளாகம்
சென்னை - 600 005

மே - 2012

தனது அறிவால் தன்னைத்தானே செதுக்கிக் கொள்வதன்வழி தன்னை வளர்த்துக் கொள்ள முனைவது மனித இனம். இவ்வறிவென்பது காலங்காலமாகக் கையளிக்கப்பட்டு வருவது, காலத்திற்கேற்ப உருவாக்கப்படுவது என்ற இரண்டு வகையில் பகுத்துப் பார்க்கலாம். இதில் தேவை கருதி ஒரு காலச்சூழலில் உருவான அறிவுத்தொகுதியானது காலந்தோறும் தொடர்ச்சியாக மனிதகுல வாழ்விற்குப் பயன்படும் வகையில் தலைமுறைதோறும் கடத்தப்பட்டு வருதல்; அதாவது இயற்கைக்கேற்ப தம்மைத் தகவமைத்துக் கொள்ளுதல்; இது முதல்வகை. இரண்டாவது வகையானது பல்வேறுபட்ட நிலவாழ் மக்களுடனான தொலைத்தொடர்பின்வழி உருவான கூட்டுச் சிந்தனையை அடிப்படையாகக் கொண்டு இயற்கையைத் தமக்கேற்றவாறு தகவமைத்துக் கொள்ளும் அறிவு வளர்ச்சி. இதில் முதல்வகையானது பெரும்பாலும் இயற்கையோடு தொடர்புடைய வாழ்முறையை மையமாகக் கொண்டது. ஆனால் இரண்டாவது வகையானது அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. ஆனாலும் இரண்டாம் வகைப்பட்ட அறிவு வளர்ச்சிக்கு முதல் வகைப்பட்ட அறிவே அடிப்படை. அந்த வகையில் மனிதகுல நாகரிகத்தின் தொடக்ககால அறிவானது காலந்தோறும் எவ்விதத்தில் வளர்த்தெடுக்கப்பட்டிருக்கின்றது என்பதையும் அவை இடையிடையே எவ்வகையான மாற்றங்களை உள்வாங்கி வந்திருக்கின்றன என்பதையும் அறிந்துகொள்ள வேண்டிய அவசியமிருக்கிறது. ஏனெனில் அவையே அவரவருக்கான அடையாளம். எனவே ஒவ்வொருவரும் தமது அடையாளத்தைத் தேடி பின்னோக்கிச் செல்வதும் நனவிலியாகத் தனக்குள் புதைந்து கிடக்கும் தமது அடையாளத்தை வெளிக்கொணர வேண்டியதும் காலத்தின் கட்டாயமாயிருக்கின்றது. அந்த வகையில் காலந்தோறும் கடத்தப்பட்டு வந்த அறிவுத் தொடர்ச்சிதனை 'மரபு' என்பதாகக் கருதி அதனை, அதன் தன்மையை அடிப்படையாகக் கொண்டு இரண்டு வகையாகப் பகுக்கப்பட்டது. அவை ஒன்று பொருள்சார் மரபு மற்றொன்று பொருள்சாரா மரபு.

இதில் பொருள்சார் மரபெனப்படுவது இயற்கையைத் தன்வயப்படுத்தி அதனைத் தனக்கான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களாக மாற்றிக் கொள்ளும் மனிதனின் அறிவுத்தொடர்ச்சி. அதேபோல் பொருள் சாரா மரபெனப்படுவது மனிதனின் வாழ்வியல் சார்ந்த மொழியையும் செயலையும் மையமிட்ட அறிவுத் தொடர்ச்சி. இதை மிகவும் சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால் பொருள்சார் மரபெனப்படுவது பயன்பாட்டுப் பொருளின் உருவை மையமிட்டது. பொருள்சாரா மரபெனப்படுவது செய்யும் செயலை மையமிட்டது. இவ்விருவேறுபட்ட தன்மையில் குறிக்கப்படுகின்ற இவையிரண்டும் சமூக இயங்கு தளத்தில் ஒன்றையொன்று சார்ந்து இருப்பவை. இவையே மனித இயங்கியலுக்கான அடிப்படை.

பொருள்சார் அறிவுத் தொடர்ச்சி, பொருள் சாரா அறிவுத் தொடர்ச்சி என்ற இவையிரண்டும் ஒன்றுக்கொன்று நிகரானது. பொருள்சார் அறிவுத் தொடர்ச்சி எனப்படுவது மனித வாழ்வியலுக்கான மிக இன்றியமையாத தேவையை அடிப்படையாகக் கொண்டது. இதனை ஒப்புநோக்கும்போது பொருள்சாரா அறிவுத் தொடர்ச்சிதனை இதற்கடுத்த நிலையிலேயே வைத்துப் பார்க்க இயலும். தொடக்க காலந்தொட்டே இவ்விதப் பொருள்சார் முக்கியத்துவத்தை உணர்ந்தவர்களாக வெகுமக்கள் இருந்திருக்கின்றனர். ஆகவேதான் உடலுழைப்போடும் காலச்சூழலோடும் தொடர்புடைய இவ்விதப் பொருள் உற்பத்திக் கலைதனில் வல்லவர்களை ஊருக்குப் பொதுவானவர்களாகப் பொருள் உற்பத்தி செய்துதர வேண்டி நியமித்திருக்கின்றனர். வேண்டுகோளாகத் தோன்றிய இந்நியமனமுறை நாளடைவில் அதிகாரத்தின் கையில் சிக்கி ஊழியமுறையாகப் பணிக்கப்பட்டிருக்கின்றது. அந்தவகையில் இவ்வகையான பொருள் உற்பத்தி குறிப்பிட்ட சில குடிகளுக்குள்ளாகவே முடங்கிப் போனதால் இதற்கான அடுத்தடுத்தகட்ட வளர்ச்சி குறித்த சிந்தனை பிறருக்கல்லாது இவர்களுக்கு மட்டுமேயானதெனக் கொள்ளப்பட்டது. ஆகையால் இவ்வித அறிவுத் தொடர்ச்சி சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெறாது போயிருக்கின்றது. ஆனால் இவ்வித அறிவுத் தொடர்ச்சியால் தனக்கான அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்துகொண்ட வெகுமக்கள் அதற்கடுத்தகட்ட வளர்ச்சிக்கான பொருள்சாராத அறிவினை வளர்த்துக் கொள்வதில் முனைப்புக் காட்டியிருக்கின்றனர். அவ்வாறு உருவான இவ்வித அறிவானது உடல் உழைப்போடும் காலச்சூழலோடும் பெரிதும் தொடர்பு இல்லாதது. ஆகையால் இதனைக் குறிப்பிட்ட சிலர், சிலகாலச் சூழலில் மட்டுமே செய்யவேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டிருக்கவில்லை. எனவே இவ்வித அறிவுத்தொடர்ச்சி வெகு எளிதில் பரவலாக்கம் பெற்றதுடன் மிகுந்த வளர்ச்சியும் பெற்றிருக்கிறது. மேலும் இவ்வறிவுத் தொடர்ச்சி பலரோடு தொடர்புடையதாக இருந்திருப்பதால் சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றது.

பொருள்சார் அறிவெனப்படுவது சமூக மதிப்பீட்டில் பெருமதிப்பு பெறாது போனதாலும் அவை ஆவணப்படுத்தி வைப்பதற்கு ஏதுவானதாக இல்லாததாலும் அவற்றிற்கான மரபை அறிவதற்கான சான்றுகள் மிகவும் அரிதாகவே கிடைக்கின்றன. ஆனால் பொருள்சாரா அறிவெனப்படுவது சமூக மதிப்பீட்டில் பெருமதிப்புப் பெற்றிருந்த காரணத்தாலும் அவற்றை எளிதில் ஆவணப்படுத்தி வைக்க இயலும்; அதுவும் தனியுடைமையாகப் பாதுகாக்க இயலும் என்பதாலும் அவற்றிற்கான மரபு மட்டுமே மனிதர்களுக்கான அடையாளம் எனச் சொல்லிக்கொள்ளும் அளவிற்கு வளர்ச்சியடைந்திருக்கின்றது. இதன் உருவாக்கமானது தனிமனிதர் சார்ந்தது என்பதால் இதில் பரிமாற்றத்தின் போதான எதிர்பார்ப்புகள், நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனால் பொருள்சார் அறிவெனப்படுவது ஒட்டுமொத்த சமூகத்தோடும் தொடர்புடையது. ஆகையால் காலந்தோறும் அதன் தேவை வலியுறுத்தப்பட்டு பெரியளவில் நெருக்கடிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சமூகத் தேவையை நிவர்த்திக்கும் இவ்விதப் பொருள்

உற்பத்தி எல்லையற்றது, ஆகையால் பெரிய அளவில் இதில் வளர்ச்சி மாற்றம் ஏற்பட்டிருக்கவில்லை. அவ்வாறு மாற்றம் ஏற்பட வேண்டுமாயின் அது ஒட்டுமொத்த சமூகத்தின் ஏற்புடனே நிகழவேண்டிய சூழல் இருந்திருக்கிறது. அதிலும் சடங்குப் பொருள் உற்பத்தியில் வளர்ச்சி மாற்றம் ஏற்படுதலை ஏற்கும் மனநிலை வெகுமக்களிடம் எப்போதும் ஏற்பட்டிருக்கவில்லை. ஏனென்றால் காலந்தோறும் சடங்குமுறை கடத்தப்பட்டு வந்ததைப்போன்று அதற்கான புரிதல்கள் கடத்தப்பட்டிருக்கப்படவில்லை. அவ்வாறு கடத்தப்படாததற்கு அவை அதிகாரமயமாக்கப்பட்டிருந்ததே காரணம் எனலாம். அவ்வாறு அவை அதிகாரப் புனிதத்தோடு தொடர்புபடுத்தப்பட்டிருந்ததால் அவற்றை மாற்றியமைப்பதை மரபு மீறலாகக் கருதி அப்படியே பின்பற்றியிருக்கின்றனர். ஆனால் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் வெகுமக்களின் அன்றாட இயங்கியலை மையமிட்டிருந்தன. அவை அவ்வாறான புனிதத்துடன் தொடர்புபடுத்தப்படாததால், வாழ்வியற் தேவைக்கேற்பச் சிற்சில மாற்றங்களை அவ்வப்போது உள்வாங்கியிருக்கின்றன.

மதிப்புமிக்கதாகக் கருதி திட்டமிடலுடன் ஆவணப்படுத்தி வைக்கப்படாத இவ்விதப் பொருள்சார் மரபுக்கான மிக இன்றியமையாத சான்றுகளில் ஒன்றாக மண்சார் புழங்குபொருள்களைக் கொள்ள முடிகின்றது.

இயற்கையை நேரடி மூலப்பொருளாகக் கொண்டு அதில் தனது பொருளறிவைப் பாய்ச்சிய மனிதனுக்கு மண், அதில் விளையும் மரம், கல் முதலானவையே முதன்மையானதாக இருந்திருக்கின்றது. இம்மூன்றினை அடிப்படையாகக் கொண்டு உருவான புழங்குபொருள் உற்பத்தியில் மனிதனுக்கான தேவைகள் மண்ணைக் கொண்டே மிகுதியான அளவு நிறைவு செய்யப்பட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் அவற்றைத் தனது எண்ணம்போல் எளிதில் வடிவமைத்துக் கொள்ளலாம் என்பதாயிருக்கிறது. இதற்கானச் சான்றுகளை வரலாற்றுத் தரவுகளான இலக்கியங்கள், கல்வெட்டுகள் மற்றும் தொல்லகழ்வாய்வில் கிடைத்த தொல்பொருள்கள் முதலானவற்றிலிருந்து பெறமுடிகின்றது. பொருள்சாரா மரபினைப் பதிவாகக் கொண்ட இவையனைத்திலும் பொருள்சார் மரபுக்கான தரவுகள் இரண்டாந்தரப் பதிவுகளாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

இலக்கியம் என்பது மக்களுடைய விழுமியக் கருத்துகளைச் செவ்விய சொற்களால் விளக்கும் கருவி என்பர் ஆய்வாளர்கள். ஆகவே அவற்றைப் பல புலங்கள் சார்ந்த ஆய்வுக்கான எழுத்தாவணமாகக் கொள்வர். அவ்வாறு இலக்கியங்களை மரபுக்கான / வரலாற்றுக்கான தரவுகளாகக் கொள்ளும்போது அவற்றைக் காலச்சூழலோடு பொருத்தி ஆயவேண்டிய அவசியமிருக்கின்றது. ஆக இலக்கியத்தைத் தரவாகக் கொண்டு அக்காலச் சூழலை அறிதல் என்பது அதன் மரபு அறிவதற்கான அடிப்படை. இதுவரைக்குமான தமிழிலக்கியச் சூழலில் வெகுமக்களின் அக, புற வாழ்க்கை சார்ந்த மரபை அறிவதற்கான ஆய்வுகளே மிகுதியாகச் செய்யப்பட்டிருப்பினும் இவையனைத்தும்

பொருள்சாராத (Non - Material) கருத்துநிலைத் தேடலிலேயே பயணப்பட்டு இருக்கின்றன. இதை ஒருவிதத்தில் இலக்கியம் குறித்த ஒருமுகப்பார்வை என்று கூற முடியும். ஏனெனில் இவை பொருள்சாராத கருத்துநிலையை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டவை. ஆதலால் இவற்றில் அவை மேலோங்கி இருப்பதில் வியப்பேதுமில்லை. ஆயினும் பொருள்சார் கருத்துநிலையை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் இவ்விதப் பொருள்சாரா கருத்துநிலையின் உள்ளிருக்கும் உயிர்நாடியாகப் பொருள்சார் கருத்துகளைக் குறிப்பிட முடியும். இவை வெளிச்சமிட்டுக் காட்டப்பட வேண்டும் என்ற நோக்கத்தில் பதிவு செய்யப்பட்டிருக்காவிட்டாலும், மக்களின் சராசரியான இயக்கத்திற்கு உறுதுணையாயிருக்கும் அவ்வித பொருள்சார் அறிவென்பது அவர்களின் நனவிலி மனதிலிருந்து இயல்பாகவே வெளிப்பட்டிருக்கின்றது. அவ்வாறு வெளிப்பட்ட அவ்வித அறிவினை ஆய்விற்குட்படுத்துவதன் வழி அவற்றினை மீட்டெடுக்க இயலும். அந்தவகையில் இலக்கியங்களில் பதிவாகியிருக்கும் பொருள்சார் மரபிற்கான செய்திகளை நமக்கான அறிவு மரபினைப் பறைசாற்றும் அடையாளக் குறியீடுகளாகக் கொள்ளலாம்.

இலக்கிய வகைப்படுத்தலிலும் காலவரிசைப்படுத்தலிலும் அவற்றின் உள்ளோட்டமாய் இருக்கும் பொருள்சார் அறிவினை அடிப்படையாகக் கொண்டு நிறுவுதல் என்பது எதிர்கேள்வி அற்றதாய் இருக்கும். இதற்குச் சான்றாக சங்கஇலக்கியத் திணைப்பகுப்பினைக் கொள்ளலாம். அதில் உரிப்பொருள் முதன்மைப்படுத்தப்பட்டு முதற்பொருளும் கருப்பொருளும் அதற்குத் துணையாய் நிற்பது என்ற நிலைமாறி முதற்பொருளின் ஒரு பகுதியாகக் குறிக்கப்பெறும் நில விளைபொருளை மையமிட்டு உற்பத்தி செய்யப்பட்ட புழங்குபொருள்களையும் உரிப்பொருளுக்கு நிகராகக் கொண்டு ஆய்வோமாயின் திணை மரபுக்கான உறுதிப்பாடுகளை அதன்வழி பெறமுடியும் என்பது தக்க சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளது. இது அகத்திணைப் பாடல்களைப் பகுத்துப் பார்ப்பதற்கான உத்திமுறைகளுள் ஒன்று.

'சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார்' என்ற இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்ட அகத்திணைப் பாடல்களில் எந்த ஒன்று நேரடியாகச் சொல்லப்பட்டிருக்கவில்லை. மாறாக ஒன்றை மற்றவற்றுடன் உவமித்து, உருவகப்படுத்திச் சொல்வது வழக்கமாக இருந்திருக்கின்றது. ஆதலால் தனிமனித அக உணர்வைப் பாடவந்த புலவர்கள் அவற்றை நேரடியாகப் பாடாது நிலம், தொழில், புழங்கு (பயன்பாட்டுப்) பொருள்கள் முதலானவற்றின் தன்மையுடன் பொருத்தி உவமித்தும், உருவகப்படுத்தியும் பாடியிருக்கின்றனர். இதனை சுருக்கமாகச் சொன்னால் மக்களையும் அவர்களுக்கான உரிப்பொருளையும் பாடவந்த புலவர்கள் அதனை நேரடியாகப் பாடாமல் அதனை ஒத்த, நிகர்த்தன்மையுடைய முதற்பொருளையும் கருப்பொருளையும் இட்டுக்கட்டிப் பாடியிருக்கின்றனர். இதனைச் சங்க இலக்கிய அகப்பாடல்களின்வழி அறிய முடிகின்றது. ஆகவே இத்தன்மையுடைய அகப்பாடல்களை 'உரிப்பொருளை

மட்டும் முதன்மையாய் வைத்துப் பாகுபடுத்துதல் என்பதுடன் முதற்பொருள், கருப்பொருள்களையும் அதிலும் முக்கியமாகப் (அந்தந்த நிலத்தின் விளைபொருளிலிருந்து அந்தந்த நிலமக்களால் உருவாக்கப்பட்ட முதன்மை அடையாளம் என்பதைக் கருத்தில் கொண்டு) புழங்குபொருள்களுக்கு முக்கியத்துவம் அளித்துத் திணைப்பாகுபாடு செய்தல் என்பது மக்களின் தன்மையை அறிவதற்கு ஏதுவாயிருக்கும். ஏனெனில் புழங்குபொருள் என்பது இயற்கையும் மனிதத் தன்மையும் இரண்டறக் கலந்ததொரு கூட்டுக்கலவை. ஆகவே இரண்டையும் தனித்தனியே பிரித்துப் பார்க்க இயலாது. ஏனெனில், இவை இரண்டும் ஒன்றையொன்று உள்வாங்கியே காணப்படுகின்றன.

சங்க இலக்கியப் புறப்பாடல்களில் இவ்வித நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கவில்லை. குறிப்பிட்ட ஒரு தலைவனின் ஒழுகலாறுகளைப் பாடுவது என்பதன் அடிப்படையில் அமைந்த இவ்விதப் பாடல்களில் அவனது புறச்சூழலான நிலமும் மக்களும் மக்களின் வாழ்க்கைமுறையும் நேரடிப் புலப்பாட்டுத் தன்மை உடையதாய் இருக்கின்றது. ஆதலால், அதில் மக்களின் அன்றாட இயங்கியலைக் குறிக்கும் விதத்தில் வெகு இயல்பாக அவர்கள் பயன்படுத்திய புழங்குபொருள்களையும் அதனில் மிக்கிருக்கும் மண்சார் புழங்குபொருள்களையும் அவற்றை உற்பத்தி செய்து தந்தவர்களையும் பற்றி விரிவாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

ஆக இவ்வாறான புரிதலுடன் சங்க இலக்கியப் பாடல்களைத் தற்கால ஆய்வுச்சூழலை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்த வகையில் தாழி, குதிர், குடம், செங்கல், கலம், சாடி, குழிசி, மஞ்ஞிகை, மண்டை, பானை, தசும்பு முதலான மண்சார் புழங்குபொருள்களையும் அவற்றை உற்பத்தி செய்தளித்தவர்கள் குயவர், வேட்கோவர், மட்பகைஞர் முதலான பெயர்களால் வழங்கப்பட்டிருக்கும் நிலையையும் அறியமுடிகின்றது. இதேபோல், கல்வெட்டுத் தரவுகளிலும் மண்சார் புழங்குபொருள் உற்பத்தியாளர்களைக் குயவர், வேட்கோவர் என்ற இருவேறுபட்ட பெயர்களால் குறிக்கப்பட்ட செய்தி இடம்பெற்றுள்ளது. பெயரளவிலான இவ்வேறுபாட்டிற்குரிய அடிப்படை குறித்து ஆராய்ந்ததன்வழி இவர்கள் சமூக மதிப்பீட்டில் வெவ்வேறான நிலைப்பாட்டினைக் கொண்டிருந்திருக்கின்றனர் என்பதை அவர்களுக்கான ஊழியமுறை வேறுபாட்டினையும், அவர்களிடம் வசூலிக்கப்பட்ட வரி வகைகளையும், அடிப்படையாக வைத்து அனுமானிக்க முடிகின்றது.

கல்வெட்டு என்பது ஒரு பொதுமைப் படுத்தப்பட்ட வரலாற்று ஆவணம். ஆயினும் குறிப்பிட்ட சில அதிகார வர்க்கத்தினரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட செய்திகள் மட்டுமே அதில் வெட்டப்பட்டிருக்கின்றன. மேலும் இவ்வித கல்வெட்டுத் தரவுகளில் பொதுப்பயன்பாட்டுப் பொருள்களாகிய புழங்கு பொருள்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படடிருக்கவில்லை. இதற்குக் காரணம் அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களாகிய புழங்குபொருள்களால் மக்களுக்கு நெருக்கடி ஏற்படக்கூடாது என்பதன் அடிப்படையில் அவற்றை

உற்பத்தி செய்துதர அதற்கெனத் தனித்த குடிகள் அமர்த்தப்பட்டதே ஆகும். அவ்வாறு அமர்த்தப்பட்ட குடிகள் தொடர்ச்சியாகப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டதன் விளைவால் வெகுமக்களுக்குப் புழங்குபொருள் சம்பந்தப்பட்ட நெருக்கடிகள் ஏற்பட்டிருக்கவில்லை. ஆதலால் அவை சமூகத்தில் பெருமதிப்பீடு பெற்றிருக்கவில்லை. எனினும் இவ்விதத் தரவுகள் பொதுமைப்படுத்தப்பட்டவை என்பதால் இவற்றுள் கலன், குடுவை, குடம், மிடா, பானை, சால், சட்டுவம், சட்டி, கறிச்சட்டி, ஒட்டுட்டி, ஓலோமி, தட்டம், தாலம், மூக்கு வட்டகை, பாலிகை, தூப பாத்திரம், கடாரம் முதலான மண்சார் புழங்குபொருள்கள் குறித்த செய்திகள் மிகுதியானஅளவு பதிவாகியிருக்கின்றன. மேலும் இவ்விதப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்ட தொழிற்குடிகளாகிய குயவர்கள் மீது விதிக்கப்பட்ட வரிவகைகள், குயவர்கள் ஊர்க்குடிகளுக்கும் கோயிலுக்கும் செய்த ஊழியம், அதற்காக அதிகார வர்க்கத்தினரால் அவர்களுக்கு அளிக்கப்பட்ட கொடைகள் முதலானவை குறித்தப் பதிவுகளையும் கொண்டிருக்கின்றன. தொல்தரவுகள் என்பதன் அடிப்படையில் இவற்றையும் மேற்கூறிய இலக்கியத் தரவுகளையும் ஒருங்கே சேர்த்து ஆராயும்போது மண்சார் புழங்குபொருள் உற்பத்தியாளர்களுக்கும் அதன் பயன்பாட்டாளர்களுக்குமான உறவுநிலையில் உருவாகியிருக்கும் மேல்-கீழ் சமூக மதிப்பீட்டினை விளங்கிக் கொள்ள முடிகின்றது.

இதனைத் தொடர்ந்து இவ்வகைப்பட்ட மண்சார் புழங்குபொருள்களுக்கான மரபு குறித்தும் சமகால மதிப்பீடு குறித்தும் தொண்டை மண்டல வட்டாரத்தை ஆய்வுக்களமாகக் கொண்டு ஆராயும்போது தலைமுறை தலைமுறையாகப் பழக்கப்படுத்தலின்வழி கடத்தப்பட்டுவரும் ஆவணப்படுத்தப்படாத இவ்வித அறிவிற்கான நீட்சி பரவலாக்கம் பெற்றிருப்பதை அறிய முடிகின்றது. இவ்வட்டாரத்தில் வாழையடி வாழையாக மண்ணாலான பொருள் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகச் செய்துவருபவர்கள் குயவர், குலாலர் என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றனர். இவ்விருவேறுபட்ட பெயர்களை அடிப்படையாகக் கொண்டு தொண்டை மண்டல வட்டாரத்தில் இருக்கும் மண்பாண்ட உற்பத்தியாளர்கள் இருவேறு வகையாக அடையாளப்படுத்தப்பட்டிருக்கின்றனர். இதில் குயவர் எனப்படுபவர்கள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர். குயவர் என்ற இச்சொல் தொல்தரவுகளின் வழி அறியப்பட்ட குயவர், வேட்கோவர், மட்பகைஞர் என்ற தமிழ்ப்பெயர்களுள் ஒன்றாயிருப்பது இக்கருத்திற்கு வலுசேர்க்கிறது. மேலும் குலாலர் எனப்படுபவர்கள் 'தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கின்றனர்'. இவர்களுக்கான இப்பெயர் சாதிய / சமஸ்கிருத மயமாக்கலைப் பிரதிபலிப்பதாகிறது. சாதியச் சமூகத்திற்கு ஊழியம்செய்யும் பெரும்பாலான குயவர்கள் தங்களைக் குயவர் என்று சொல்லிக்கொள்வதைக் காட்டிலும் 'குலாலர்' என்று சொல்லிக்கொள்ளவே விரும்புகின்றனர். மேலும் இவர்கள் வெவ்வேறு வட்டாரங்களில் உடையார், வேளார், செட்டியார், பக்த்தர் முதலான வெவ்வேறு வகைப்பட்ட பட்டப் பெயர்களால் (மரியாதைப் பெயர்கள்)

அழைக்கப்படுகின்றனர். மேலும் இவர்கள் தொழில்முறையாலும் சடங்கு முறையாலும் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடுகின்றனர். அவ்வாறானவற்றில் சடங்குமுறை வேறுபாட்டிற்கு அவர்களின் கோத்திரப் பாகுபாடு அடிப்படையாயிருக்கின்றது.

சமூக அசைவியக்கத்திற்கான மறுக்க முடியாத பங்களிப்பைச் செலுத்தும் குயவர்கள் மண்ணாலான புழங்குபொருள் உற்பத்தியைத் தங்களுடைய முதன்மைத் தொழிலாகச் செய்வதுடன் சடங்கு நிகழ்த்துனர்களாகவும் விளங்குகின்றனர். ஏனெனில் சடங்கு நிகழ்த்தலில் சடங்கிற்கான அத்தனை அர்த்தப்பாடுகளும் பொதிந்திருக்கும்படியான சடங்குப் பொருள்களை உற்பத்தி செய்து தருபவர்களாதலால் அவர்களே அதை நிகழ்த்துவதற்கான தகுதி படைத்தவர்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றனர். தங்களுக்குத் தாங்களே சடங்கு செய்து கொள்பவர்ககளாகவும் தாங்கள் பிற சமூகத்தினர்க்குச் சடங்கு செய்பவர்களாகவும் இருக்கும் இவர்கள் முறையே இதனடிப்படையில் தங்களுக்குள் சிற்சில வேறுபாடுகளைக் கொண்டிருக்கின்றனர். அதேபோல் இவர்கள் தொழில்முறை வேறுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு தள்ளு குசவர்கள், திரிகோல் குசவர்கள் என்றும் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றனர். இப்பாகுபாடு செய்முறையை மையமிட்டதே தவிர செய்பொருளை மையமிட்டதல்ல. ஆதலால் இருதரப்பட்டவர்களுக்கும் ஊசி, தட்டுக்கல், தட்டுக்கட்டை, மூங்கில் பத்தை, தெரசில் துணி முதலான உற்பத்திக் கருவிகள் பொதுவானதாயிருக்கிறது. ஆனால் சக்கரம் மட்டும் செய்முறையை அடிப்படையாகக் கொண்டு துளையிடப்பட்ட சக்கரம், துளையிடப்படாத சக்கரம் என இருவேறுபட்டதாயிருக்கிறது. இவற்றுள் துளையிடப்பட்ட சக்கரத்தைப் பயன்படுத்துபவர்கள் கூடுதல் கருவியாக 'திரிகோல்' எனப்படும் 'திகிரிக்கோலைப்' பயன்படுத்துபவர்களாக இருக்கின்றனர்.

நவீனமயமாக்கப்பட்ட சமூகச் சூழலில் மரபான மண்சார்ந்த புழங்குபொருள் உற்பத்திக்குத் தேவையான மண்வளம் உள்ளிட்ட முதன்மை மூலப்பொருள்களின் தன்மை குன்றியபோதிலும் அவற்றைத் தரப்படுத்திப் பயன்படுத்தும் திறன்படைத்தவர்களாகத் தற்காலக் குயவர்கள் இருக்கின்றனர். இதை அவர்களுக்கான தொழில்முறை உத்தியின் அடுத்தகட்ட வளர்ச்சியாகக் கொள்ள வேண்டியுள்ளது. மேலும் நவீனயுக வெகுமக்களின் தேவையைக் கருத்தில் கொண்டு அதற்கேற்ப மண்ணாலான பொருள்களை உற்பத்தி செய்து தருபவர்களாகவும் இருக்கின்றனர்.

தொல்தரவுகளின் வழி அறியப்படாத மண்சார்ந்த புழங்குபொருள்கள் பலவற்றை நடைமுறைப் பயன்பாட்டில் காணமுடிகின்றது. வெகுமக்களின் தேவையை நிறைவுசெய்யும் பெரும்பாலான பயன்பாட்டுப் பொருள்கள் மண்ணால் உற்பத்தி செய்யப்பட்டவை. ஆகையால் அவற்றை அன்றாடப் பயன்பாட்டிற்கானவை, சடங்கிற்கானவை என இருவகையாகப் பாகுபடுத்திப் பார்க்க முடிகின்றது. இவற்றுள் அடுகலன்கள், நீர்க்கலன்கள், தானியக்கலன்கள்

முதலானவற்றை முதல்வகைப்பட்டதாகவும் கலசம், கல்யாணப்பானை (சாலுகரகம்), அக்னிச்சட்டி, கொலு பொம்மைகள், மதலம்பிள்ளைகள் முதலானவற்றை இரண்டாம் வகைப்பட்டதாகவும் கொள்ள இயலும். இவை முறையே அந்தந்தப் பயன்பாட்டிற்கு உரியவையாகும்.

தொடக்க காலத்தில் ஒட்டுமொத்த சமூகமும் அசைவியக்கம் பெறவேண்டி பணிக்கப்பட்ட குயவர்களை வெகுமக்கள் எல்லாவிதமான பொருள்தேவைக்கும் எதிர்பார்த்து இருந்திருக்கின்றனர். ஆனால் நவீனமயமான தற்போதைய சமூகச் சூழலில் பானை, சட்டி, குடம் முதலான குறிப்பிட்ட சில அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களுக்காகவும், சடங்குப் பொருள்களுக்காகவும் மட்டுமே வெகுமக்கள் குயவர்களை நாடுகின்றனர். இதுவே இன்றளவில், மண்ணோடும் மரபோடும் தொடர்புடைய மக்களையும் குயவர்களையும் ஒன்றிணைக்கும் இழையாய் இருக்கின்றது. இதில் மண்ணாலான அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்களின் இடத்தை நவீனப் புழங்குபொருள்கள் இட்டு நிரப்பியதால் அவற்றிற்கான தேவை வெகுவாகச் சுருங்கிப் போனது எனலாம். ஆனால் மரபான முறையில் பின்பற்றப்படும் நம்பிக்கைச் சார்ந்த சடங்குப்பொருள்களை இவ்வித நவீனப் புழங்குபொருள்களால் இட்டு நிரப்ப இயலவில்லை. ஆதலால் இன்றளவும் வாழ்வு / சாவுச் சடங்கிற்குத் தேவையான பொருள்களைக் குயவர்களிடமிருந்து மண்ணால் உற்பத்திசெய்து பெறுவதை வெகுமக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். வெகுமக்களால் நிகழ்த்தப்படும் பெரும்பாலான சடங்குகளின் இயல்புத் தன்மையினை அறிந்தவர்களாகக் குயவர்கள் இருப்பதால் இவ்விதமான சடங்குப்பொருள்களைக் குயவர்களிடமிருந்து பெறுவதை தொண்டை மண்டல வட்டாரத்தில் வசிக்கும் கிராம வெகுமக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இதுதவிர்த்து நகர்ச்சூழலில் இவ்விதமான அர்த்தப்பாடுகள் அற்றுப்போன தட்டையான தன்மையுடைய சடங்குப்பொருள்கள் விற்போரையும் நுகர்வோரையும் காணமுடிகின்றது.

மேலும், இதனைத் தொடர்ந்து சில அன்றாடப் பயன்பாட்டுப் பொருள்கள் சடங்குப் பொருள்களாக உருமாற்றம் கொள்வதையும், சில சடங்குப்பொருள்கள் பின்னாளில் அன்றாடப் பயன்பாட்டிற்கானதாக உருமாற்றமடைவதையும் தற்போதைய நடைமுறைச் சூழலில் காண முடிகின்றது. இவற்றை முறையே அவைகளுக்கான மாற்றுப் பரிமாணமாகக் குறிப்பிடலாம். இதற்கு மண்சார் புழங்குபொருள்களுக்கான தேவை குறைந்து போனதே முழுமுதற் காரணம். இவ்வாறு மண்ணாலான புழங்குபொருள்களுக்கான தேவை நீர்த்துப் போனதால் தற்போதைய நடைமுறைச் சூழலில் குயவர்களுக்கும் வெகுமக்களுக்கும் இடையேயான உறவுநிலையில் சுணக்கம் ஏற்படலாயிற்று. ஆதலால், அவ்வித பொருள் உற்பத்தியை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்த பெரும்பாலான குயவர்கள் அத்தொழிலை விடுத்துப் பிறவகை செயற்கை மூலப்பொருள்களைக் கொண்டு அலங்கார பொம்மைகள் உற்பத்தி செய்வதை முதன்மைத் தொழிலாகச் செய்யத் தொடங்கியிருக்கின்றனர். இத்தொழிலை வேற்றுச் சமூகத்தைச் சார்ந்த

சிலரும் செய்கின்றனர். எனவே, தற்போது வெகுவேகமாக உருமாறி வரும் மண்ணாலான புழங்குபொருள்களை உற்பத்தி செய்யும் சில கிராம / நகரக் குயவர்களை வெகுமக்களுடன் இணைக்கும் உறவுத்தளமாகத் திருவிழாக்களும் நகரப் பொதுச்சந்தைகளும் திகழ்கின்றன. தற்போது நமது மரபான பொருளறிவின் சுருங்கிய நிலையை இதுபோன்ற சில இடங்களிலேயே காணமுடிகின்றது.

## *மேலாய்வுக் களங்கள்*

- நவீன அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியால் ஆவணப்படுத்துதல் எளிமையாகியிருக்கிறது. ஆகையால் சமகாலத்தில் எல்லாவிதமான அறிவு வெளிப்பாடுகளும் ஆவணப்படுத்தப்படுகின்றன. இச்சூழலில் ஆவணப்படுத்தப்படாத, ஆவணப்படுத்த இயலாத, ஆவணப்படுத்தி வைக்கும் அளவிற்குச் சமூகமதிப்புப் பெறாத புழங்குபொருள்கள் வெகு வேகமாக மறைந்து வருகின்றன. அதே சமயத்தில் அவ்வித பொருள் உற்பத்தியில் ஈடுபட்டவர்களும் கலாச்சார மற்றும் பொருளாதார நெருக்கடியால் அத்தொழிலை விட்டொழிக்க முனைகின்றனர். அதுமட்டுமின்றி மற்ற புலங்களில் கோலோச்சியிருக்கும் அளவிற்கு எந்தவிதமான நவீன அறிவியல் தொழில்நுட்பங்களும் மரபான அத்தொழிலை அப்படியே கையிலெடுத்துக் கொள்ளும் அளவிற்கு முயற்சி எடுத்திருக்கவில்லை. ஆகவே வெகுவிரைவாக மறைந்து வரும் அல்லது உருமாறி வரும் நமக்கான பொருள் அறிவினை ஆராய்ந்து ஆவணப்படுத்தப்பட வேண்டிய தேவை இருக்கிறது. ஏனெனில் அவை நமக்கான அடையாளம். ஆகையால் அவை குறித்த ஆய்வுகளைத் விரைவாகச் செய்ய வேண்டிய தேவையிருக்கின்றது. இதனடிப்படையில் சமகால வாழ்வில் மதிப்பளிக்கப்படாமல் மறைந்து கொண்டிருக்கும் கல், மரம் முதலான மூலப்பொருள்களால் உற்பத்தி செய்யப்படும் புழங்குபொருள்களை ஆவணப்படுத்தி. அதன் மரபு குறித்து விரிவாக ஆராயலாம்.
- புழங்குபொருள்கள், அவற்றை உற்பத்தி செய்பவர்கள், அவர்களுக்கான சமூக மதிப்பீடு என்பதன் அடிப்படையில் அமைந்துள்ள இந்த ஆய்வினை அடியொற்றி இவற்றை வர்க்க அடிப்படையிலும் ஆராய வேண்டிய அவசியம் இருக்கின்றது.
- இதேபோல் நம்முடைய மரபான தொழில்நுட்ப அறிவின் வேரினை அடையாளங்காணும் பொருட்டுத் தொல்பொருள் அகழ்வாய்வுகளில் கிடைக்கப்பெற்ற புழங்குபொருள்களின் தன்மைகளோடு சமகாலத்தில் உற்பத்தி செய்யப்படுகின்ற புழங்குபொருள்களின் தன்மைகளை ஒப்பிட்டு ஆராயலாம்.
- புழங்குபொருள் உற்பத்தித் தொழிலைப் போன்றிருக்கும் இன்னபிற மரபான குடித்தொழில்களை இதனடிப்படையில் ஆராயலாம்.

இதுபோன்ற தொடர்ச்சியான ஆய்வுகளின் வழி மரபான நமது பொருளறிவின் அடையாளத்தை மீட்டெடுக்க இயலும்.